# ஸ்ரீமத் பகவத் கீதை

பாகம் II

அத்தியாயங்கள் X to XVIIi

சுவாமி சின்மயானந்தா





Commentary
*by*
Swami Chinmayananda

# ஸ்ரீமத்
# பகவத் கீதை

பாகம்: II

அத்தியாயங்கள் X to XVIII






சுவாமி சின்மயானந்தா

Sreemad Bhagavad Geeta
Volume II
Chapters X to XVIII
Commentary
*by*
Swami Chinmayananda

# தியான சுலோகம்

ஓம் பார்த்தாய ப்ரதிபோதிதாம் பகவதா நாராயணேன ஸ்வயம்
வ்யாஸேன க்ரதிதாம் புராணமுநிஞு மத்யே மஹாபாரதம்
அத்வைதாம்ருத வர்ஷிணீம் பகவதீம் அஷ்டாத சாத்யாயிநீம்
அம்ப த்வாம்அனுஸந்ததாமி பகவத் கீதே பவத்வே ஷிணீம்

நமோஸ்து தே வ்யாஸ விசாலபுத்தே புல்லார் விந்தாயத
பத்ரநேத்ர
யேன த்வயா பாரத தைலபூர்ண: ப்ரஜ்வாலிதோ ஞானமய:
ப்ரதீப:

ப்ரபன்ன பாரிஜாதாய தோத்ரவேத்ரைக பாணயே
ஞானமுத்ராய க்ருஷ்ணுய கீதாம்ருததுஹே நம:

ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபால நந்தன:
பார்த்தோ வத்ஸ்: ஸுதீர்போக்தா துக்தம் கீதாரும்தம் மஹத்

வஸுதேவஸுதம் தேவம் கம்ஸசாணூர மர்த்தனம்
தேவகீபரமானந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்

பீஷ்மத்ரோணதடா ஜயத்ரதஜலா காந்தார நீலோத்பலா
சல்யக்ராஹவதீ க்ருபேண வுஹனீ கர்ணேன வேலாகுலா
அஸ்வத்தாமவிகர்ணகோரமகரா துர்யோதனுவர்த்தினீ
ஸோத்தீர்ணு கலு பாண்டவை ரணநதீ கைவர்த்தக: கேசவ:

பாராசர்யவச: ஸரோஜமமலம் கீதார்த்த கந்தோத்கடம்
நாநாக்யானக கேஸரம் ஹரிகதாஸம்போதனு போதிதம்
லோகே ஸஜ்ஜன ஷட்பதை ரஹரஹ: பேபீயமானம் முதா
பூயாத் பாரத பங்கஜம் கலிமலப்ரத்வம்ஸின: ச்ரேயஸே

மூகம் கரோதி வாசாலம் பங்கும் லங்கயதே கிரிம்
யத்க்ருபா தமஹம் வந்தே பரமானந்தமாதவம்

யம் ப்ரம்மா வருணேந்த்ர ருத்ரமருத: ஸ்துன்வந்தி திவ்யை:
ஸ்தவை:
வேதை: ஸாங்கபதக்ரமோபநிஷதைர் காயந்தி யம்ஸாமகா:
த்யானுவஸ்தித தத்கதேன மனஸா பச்யந்தி யம் யோகினே
யஸ்யாந்தம் ந விது: ஸுராஸுரகணு தேவாய தஸ்மை நம:

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:

# ஸ்ரீ குருஸ்தோத்ரம்

அகண்டமண்டலாகாரம் வ்யாப்தம் யேன சராசரம் |
தத்பதம் தர்ஸிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 1 ||

அஞ்ஞானதிமிராந்தஸ்ய ஞானஞ்சனஸலாகயா |
சக்ஷுருந்மீலிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 2 ||

குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு: குருர்தேவோ மஹேஸ்வர: |
குருரேவ பரம் ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 3 ||

ஸ்தாவரம் ஜங்கமம் வ்யாப்தம் யத்கிஞ்சித் ஸசராசரம் |
தத்பதம் தர்ஸிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 4 ||

சின்மயம் வ்யாபி யத்ஸர்வம் த்ரைலோக்யம் ஸசராசரம் |
தத்பதம் தர்ஸிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 5 ||

ஸர்வஸ்ருதிசிரோரத்னவிராஜிதபதாம்புஜ: |
வேதாந்தாம்புஜஸூர்யோ யஸ்தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 6 ||

சைதன்ய: ஸாஸ்வத: ஸாந்தோ வ்யோமாதீதோ நிரஞ்சன: |
பிந்துநாதகலாதீதஸ்தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 7 ||

ஞானஸக்திஸமாரூட: தத்வமாலாவிபூஷித: |
புக்திமுக்திப்ரதாதா ச தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 8 ||

அனேகஜன்மஸம்ப்ராப்தகர்மபந்தவிதாஹினே |
ஆத்மஞானப்ரதானேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 9 ||

ஸோஷணம் பவஸிந்தோஸ்ச ஞாபனம் ஸாரசம்பத: |
குரோ: பாதோதகம் ஸம்யக் தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 10 ||

ந குரோரதிகம் வம் ந குரோரதிகம் தப: |
தத்வஞாநாத் பரம் நாஸ்தி தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 11 ||

மந்நாத: ஸ்ரீஜகந்நாத: மத்குரு: ஸ்ரீஜகத்குரு: |
மதாத்மா ஸர்வபூதாத்மா தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 12 ||

குருராதிரநாதிஸ்ச குரு: பரமதைவதம் |
குரோ: பரதரம் நாஸ்தி தஸ்மை ஸ்ரீகுரவே நம: || 13 ||

ப்ரஹ்மானந்தம் பரமசுகதம் கேவலம் ஞானமூர்த்திம்
த்வந்த்வாதீதம் ககனஸத்ருஸம் தத்வமஸ்யாதிலக்ஷ்யம் |

ஏகம் நித்யம் விமலமசலம் ஸர்வதீஸாக்ஷிபூதம்
பாவாதீதம் த்ரிகுணரஹிதம் ஸத்குரும் தம் நமாமி || 14 ||

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ பந்துஸ்ச ஸகா த்வமேவ |

த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தேவதேவ || 15 ||

# ஸ்ரீமத் பகவத் கீதை

## ஒரு வார்த்தை—பதிப்பாளர்களிடமிருந்து

நினைவுக்கெட்டாத காலம் தொட்டுப் பாரதத்தின் கலாசாரத்தைப் போற்றி வளர்த்து வந்திருக்கும் ஆன்மிக நூல்களுள் பகவத் கீதையே மிகச் சக்தி வாய்ந்தது, கீர்த்தி மிக்கது. சனாதன தர்மம் (அல்லது ஹிந்து தர்மம்) என்கிற அற்புதமான மாளிகையின் மூன்று தூண்களாக உபநிடதங்களும் பிரம்ம சூத்திரங்களும் கீதையும் விளங்குகின்றன என்றால் அவற்றுள் உள்ளத்துக்கு மிக நெருக்கமாக உள்ளது கீதைதான்.

இக்காலத்தவர் அதனுடைய போதனைகளின் சிறப்பைப் புரிந்துகொண்டு வாழ்க்கையில் கடைப்பிடிக்க வழிகாட்டி வருபவர் என்ற முறையில் சுவாமி சின்மயானந்தர் கீதையின் தலைசிறந்த விளக்க உரையாளராகத் திகழ்கிறார். சுவாமிஜியின் விரிவுரைகளும் வியாக்கியானங்களும் படித்த இளம் தலைமுறை யினரின் மனத்தில் பதியும்படியாக அமைந்திருக்கின்றன. அவற்றில்தான் எவ்வளவு தெளிவு; எவ்வளவு சரளம்; காலத் துக்குத்தான் எத்தனை பொருத்தம்! நாட்டின் குறுக்கும் நெடுக்கு மாக அவர் நடத்தியுள்ள நூற்றுக்கணக்கான ஞான யக்ஞங்கள் கணக்கற்ற மக்களின் உள்ளங்களில் கீதை என்னும் தீபத்தை ஏற்றி வைத்திருக்கின்றன. மேலும் சுவாமிஜியின் சீடர்கள் நாட்டின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் சென்று, அந்தந்த மாநிலத்தின் மொழியில் கீதை சொல்லும் செய்தியைப் பரப்பி வருகிறார்கள்.

கீதை, உபநிடதம் போன்ற நூல்களைத் தமிழில் கொணர வேண்டுமென்ற நோக்கத்துடன் மத்திய சின்மயா மிஷன் டிரஸ்ட் 1982 செப்டம்பரில் தமிழ் பதிப்புப் பிரிவை அமைக்கத் தீர்மானித்தது.

தமிழ்ப் பிரிவு மேற்கொண்ட முதல் முதல் பணி சுவாமிஜியின் கீதைப் பேருரைகளைத் தமிழில் மொழி பெயர்ப்பதாகும். அதாவது, ஞான யக்ஞங்களில் சுவாமிஜி விளக்கிச் சொன்ன கீதையின் உண்மைத் தத்துவம் வெளிப்படும் முறையில் மூலம் முழுவதையும் ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழி பெயர்ப்பது.

சுவாமிஜியின் வியாக்கியானத்தைத் தமிழில் மொழி பெயர்ப்பதும் பதிப்பிப்பதும் மாபெரும் வேலை. இருபது வருடத்துக்கு மேலாக சுவாமிஜியின் சீடராகவும் இருந்து

வருபவரும், பத்து வருட காலமாக கீதை, உபநிடதச் சொற் பொழிவாளராக இருந்து வருபவருமான சென்னை ஸி.ஜி. வாசுதேவன் அவர்களிடம் அது ஒப்படைக்கப்பட்டது. அவர் முதல் பத்து அத்தியாயங்களைத் திறம்பட மொழி பெயர்த்துக் கொடுத்துள்ளார். வேலையைத் துரிதப்படுத்தும் பொருட்டு, மற்ற அத்தியாயங்களின் மொழி பெயர்ப்பை மேற்கொள்ளும்படி மதுரை ஸ்ரீ டி. சேஷாத்திரியை சுவாமிஜி பணித்தார். முப்பதாண்டுகளுக்கு மேலாக சுவாமிஜியின் சீடராக இருந்து வரும் ஸ்ரீ சேஷாத்திரி, 11 முதல் 18 வரையிலான அத்தியாயங்களைச் சிறப்பாக மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார். இந்த அன்பர்களுக்கு எங்கள் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவர்களுடைய ஒப்பற்ற சேவை கிடைத்திராவிட்டால் இந்தப் புத்தகம் வெளிவந்திருக்காது.

கீதை போன்ற ஒரு நூலை வெளியிடுவதென்றால், அதற்குப் பெருந்தொகை செலவு செய்ய வேண்டும். 1984'ம் ஆண்டு பிப்ரவரி மாதம் சென்னையில் நடைபெற்ற 370'வது கீதை ஞான யக்ஞத்தின் மூலம் கிடைத்த தொகை மொத்தத்தையும் பிரசுரவேலை தொடங்குவதற்கு உதவியாக, சுவாமிஜி அன்புடன் ஒதுக்க முன் வந்தார். இந்தத் தொகையை பிரசுர வேலையைத் தொடங்க வழங்கியதற்காக சென்னை சின்மயா மிஷனுக்கு நாங்கள் நன்றி தெரிவித்துக் கொள்கிறோம். இந்த நிதிக்குத் துணையாக, என் தந்தை காலம் சென்ற டி. கேசவ ரெட்டி அவர்களின் நினைவாகக் கொடுக்கப்பட்ட ஒரு கணிசமான தொகையையும் சுவாமிஜி அருள் கூர்ந்து பெற்றுக் கொண்டார்.

தமிழ் மக்களுக்குப் பணி புரிய ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது எங்கள் பாக்கியமாகும்.

இந்த ஒப்புயர்வற்ற நூலை சுவாமிஜியின் பாதங்களில் சமர்ப்பிக்கிறோம். இந்தப் பெரும் பணியில் பங்கேற்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்த மகத்தான பேறு. இந்தப் பொன்னான வியாக்கியானத்தை ஆன்மிக உணர்வுள்ள தமிழ் மக்கள் போற்றிப் பெரிதும் பயனடைவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

தமிழ்ப் பிரசுரப் பிரிவுக் குழுவினரான ஸ்ரீமதி லீலா நம்பி யார், ஸ்ரீமதி பத்மா நரசிம்மன், ஸ்ரீ தீபக் ஷா, ஸ்ரீ ஸி.ஜி. வாசு தேவன் (செயலாளர்) ஆகியோர் தொடக்கம் முதல் பங்கேற்று எல்லா வகையிலும் சிறப்பாக யோசனைகள் கூறி உதவிகள் புரிந்திருக்கிறார்கள். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

டி. கோபாலகிருஷ்ண ரெட்டி,
தலைவர்,
சென்ட்ரல் சின்மயா மிஷன் டிரஸ்ட்,
சின்மயா பிரசுரம் (தமிழ்ப் பிரிவு)

# விபூதி யோகம்

ஒரு தத்துவ விளக்க நூலை எடுத்துக் கொண்டால், அதன் பிற்பகுதி, பொதுவாக முற்பகுதியின் விளக்கமாகவே அமைந்திருப்பதைக் காணலாம். இதைப் போன்ற தொடர்ச்சியினுல், இன்னும் விரிவாகவும், அழகாகவும் சிந்திக்க வேண்டிய பகுதிகள் அந்நூலில் இருப்பது நமக்கு விளங்குகிறது. கீதையில் ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் ஒவ்வொரு தலைப்புக் கொடுத்திருப்பதால், அந்நூல் பல்வேறு பிரச்னைகளைப் பற்றிப் பேசுவதாக சிலர் நினைத்து விடலாம். அப்படிக் கருதுவது தவறு. ஒரே ஆடையில் பலவகை மலர்கள் பின்னப்பட்டு இழையோடுவது போல, ஒரு முக்கியக் கருத்து வெவ்வேறு கோணங்களிலிருந்து எடுத்து ஆராயப்படுகிறது. இங்கு சொல்வது இதற்கு முன்னுலும் சொல்லப்பட்டிருக்கிறது. உதாரணமாக, அழிவிலா பிரம்மனின் மேல்நிலை இயல்பு, கீழ்நிலைமை இயல்பு ஆகிய இரண்டையும் விளக்கிய பகவான், 'இப் பிரபஞ்சத்தின் தோற்றத்திற்கும் முடிவுக்கும் நானே காரணமாக இருக்கிறேன். எனக்கு அப்பால் ஒன்றுமில்லை. முத்துக்களை எல்லாம் மாலையாக கோத்து நிற்கும்

சரடுபோல, நான் எல்லாவற்றையும் இணைத்து நிற்கிறேன்'' என்று ஏழாவது அத்தியாயத் தொடக்கத்தில் கூறினர் அல்லவா? அது இங்கு நினைவுக்கு வருகிறது. எங்கும் நிறைந்து என்றென்றும் திகழும் இறைப்பொருள் என்ற முறையில், கிருஷ்ணன் இப் பிரபஞ்சத்திலுள்ள எல்லா நாம, ரூப வேறு பாடுகளிலும் ஊடுருவி நின்ற போதிலும், பெருமைமிக்க தமது தனித்தன்மையையும், யோக சக்தியையும் அர்ஜுனனுக்கு இங்கு எடுத்துரைக்கிறர்.

தாமே பிரபஞ்சமாக விரிந்து எங்கும் நிறைந்திருப்பதையும், உயிரியக்கச் சக்தியாகத் திகழ்வதையும் பகவான் இங்கு விளக்குவதால், இந்த அத்தியாயத்திற்கு ''விபூதி யோகம்'' என்ற தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. உலகத்திலுள்ள பன்மைத் தோற்றங்களுக்கு இடையில், ஒருமை மையமாக விளங்குவது ஆன்மா, பலபலவாகத் தோன்றும் எல்லாவற்றையும் இயக்கிக் கொண்டிருப்பது அது ஒன்றேதான். எல்லாப் பொருள்களுக்கும், உயிரினங்களுக்கும் சாராம்சப் பொருளாக விளங்குவது தாமே என்றும், தாமின்றி எதுவும் குறிப்பிட்ட அந்தப் பொருளாக இருக்காது என்றும் ஸ்ரீ கிருஷ்ணன் இங்கு தெளிவுபடுத்துகிறர். செய்யுள் செய்யுளாக நாம் படித்துக் கொண்டு வரும்போது அவர் கூறுவது மேலும் தெளிவாக நமக்கு புரியவரும்.

வேதங்களின் உட்பொருளை கிருஷ்ணன் விளக்க விளக்க, அர்ஜுனனிடம் எல்லையற்ற உற்சாகம் தோன்றுகிறது. அக்கறையோடு பாடம் கேட்கும் ஒரு மாணவனைக் கண்டால், அவனுக்கு மேலும் பல நுணுக்கங்களை எடுத்துரைக்க வேண்டுமென்ற ஆர்வம் ஆசிரியருக்கு வருவது இயற்கை. எனவே ஒப்பற்ற பிரபஞ்சப் பேராசிரியராகிய கிருஷ்ணன் தமது தெய்வீக இயல்பு பற்றிய பல நுணுக்கங்களை அர்ஜுனனுக்கு தெளிவாக சொல்லுகிறர்.

இப்பன்மைத் தோற்றமாகிற உலகில் மனிதன் வாழ்கிறன். அவனுடைய கண்ணெதிரில் ஆயிரமாயிரம் நிகழ்ச்சிகள் நடக்கின்றன. எத்தனையோ சிக்கல்களை அன்றடம் சமாளிக்க வேண்டியிருக்கிறது. நிலைமை இப்படி இருக்க, ''எப்போதும் பேருண்மைப் பொருளுடன் கலந்து, ஆன்ம உணர்வில் மூழ்கி இரு,'' என்றல், அது எப்படி முடியும்? அர்ஜுனன் மனதில் தோன்றும் முக்கியமான கேள்வி இதுதான்.* இந்த அத்தியாயம் முழுவதுமே அக்கேள்விக்கு விடையாக அமைகிறது. இன்பம் அளிக்கச் சக்தியற்ற இந்த நிலையிலா உலகில், சாசுவதப் பேரின்பம் அளிக்கும் இறைப் பொருளும் கலந்து விரவி நிற்பதை

*அத். 10; செய். 17

பகவான் சுட்டிக்காட்டுகிறார். ஆனால் அத்தியாய இறுதியில், ''இவ்வளவுதான் விளக்க முடியும். இதற்கு மேல் விளக்க யாராலும் முடியாது, போ'' என்று கூறும் அயர்வு உணர்ச்சி அவருடைய வார்த்தைகளில் தென்படுவதாகத் தோன்றுகிறது.

ஒரு ஆசிரியர் தாம் சொல்லுவதை விளக்க ஒரு பொருளை உதாரணமாக எடுத்துக் கொள்வார். அதை விண்டு காட்டி, தாம் கூறும் உண்மையை நிரூபிப்பார். மேலும் அதை உறுதிப் படுத்த நினைத்தால் உதாரணங்களை எடுத்துக் காட்டி, மாணவனுடைய மனதில் பதியவைப்பார். சில சமயங்களில் நூறு உதாரணங்கள் கூடக் காட்டலாம். ஆனால் ''உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் கொண்டு வந்து, ஒவ்வொன்றாக அவற்றை விண்டு காட்டி, நீ சொல்லுவதை நிரூபி, பார்க்கலாம்'' என்று ஒருவன் கேட்டால், அது சாத்தியமில்லை. அப்படி எவரும் செய்ய முடியாதென்பது அர்ஜுனனுக்கும் தெரிகிறது.

அரும்பெரும் ஆன்ம சக்தி பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு அணுவிலும், உயிரிலும் நிறைந்திருக்கிறது. பொருள் உறையிலிருந்து அது வேறுபட்டதுதான் என்றாலும் அதை அவ்வுறையிலிருந்து தனியாகப் பிரிக்க முடியாது. அப்படி நிறைந்திருக்கும் ஆன்மாவை உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளிலும் சுட்டிக் காட்டி நிரூபிக்க வேண்டும் என்றால், அது நடக்கக்கூடிய வேலையா?

மின்சாரக் கம்பி வேறு, அதில் ஓடும் மின்சாரம் வேறு. ஆனால் அவை இரண்டும் ஒன்றையொன்று சார்ந்தே இருக்கின்றன. ஒரு மின் விசிறியைப் பொருத்திக் காட்டி, பல்பு ஒன்றை வைத்துக் காட்டி, அங்கு மின்சார ஓட்டம் இருப்பதை நாம் நிரூபிக்கலாம். ''உலகத்திலுள்ள அவ்வளவு பல்புகளையும், மின் விசிறிகளையும் கொண்டு வந்து ஒவ்வொன்றாகப் பொருத்திக் காட்டினால்தான் நம்புவேன்'' என்று ஒருவன் சொன்னால், அது யாரால் முடியும்? ''உதாரணங்களை கோடிக் கணக்கில் ஏன் சொல்லிக் கொண்டு போக வேண்டும்? பிரபஞ்சம் முழுவதையும் எனது ஒரு பகுதியினால் நான் தாங்கிக் கொண்டிருக்கிறேன்'' என்று பகவான் அறிவிப்பதுடன் அத்தியாயம் முடிவடைகிறது.

வெறும் சைதன்யமாக இருக்கும் ஆன்மா குறிப்பிட்ட ஒரு உள்ளத்தில் பிரதிபலித்து, அந்த உள்ளத்திற்கு ஏற்ற இயல்புடன் இயங்கும்போது, அதை ஜீவன் அல்லது அகந்தை என்று சொல்லுகிறோம். அது தன்னை வரையறைகளுக்கு உட்பட்டதாக நினைத்துக் கொள்கிறது. அதே ஆன்மா பிரபஞ்சத்திலுள்ள எல்லா உயிரினங்களின் மொத்த மனமாகவும் மொத்த அறிவாகவும் இயங்கும்போது அதை ஈசுவரன் அல்லது இறைத் தத்துவம் என்று சொல்லுகிறோம். இது வரையறைகளுக்கு உட்படாதது.

இவ்வாறு தனி உள்ளமாகவும், மொத்த உள்ளமாகவும் திகழும் ஆன்மா ஒன்றேதான். இதைத் தெளிவாக நினைவு வைத்துக் கொண்டால், இந்த அத்தியாயமும் அடுத்ததும் நன்றாக விளங்கும்.

ஜனநாயக ஆட்சிமுறை, சமுதாயம் என்பனவற்றின் அடிப்படை தெரிந்தவர்களுக்கு இங்கு சொல்லும் கருத்தைப் புரிந்து கொள்வது சுலபம். வயது வந்த எல்லோருக்கும் ஜனநாயகத்தில் வோட்டுரிமை உண்டு. ஒவ்வொருவரும் தமது விருப்பம் போல வோட்டுப் போடலாம். பெரும்பான்மையினரின் உள்ளத்தைப் பிரிதிபலிக்கும் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்சிக்கு வருகிறார். அவர்களுடைய மனத்துடன் அப்போது அவர் கலந்து இருப்பதாக வைத்துக் கொள்ளலாம். அப்படி அதிகாரத்திற்கு வருபவர் மக்களுடைய கோரிக்கைகளையொட்டி ஆட்சி நடத்துகிறார். ஒவ்வொருவரும் தத்தம் அதிகாரங்களையும், உரிமைகளையும் ஒரு அமைப்பினிடம் ஒப்படைக்கும்போது, அரசாங்கம் ஏற்படுகிறது. ஆனால் ஆட்சிக்கு வந்த பிறகு, அந்த அரசாங்கம், அதற்கு வோட்டுப் போட்ட மக்களைவிட அதிக வலிமை பெற்றதாக ஆகிறது.

அதே மாதிரி, ஆன்மாவாகிய ''நான்'' வரையறைகளுக்கு உட்பட்ட எனது மனதுடனும், அறிவுடனும் இணைந்து நிற்கும் போது, குறுகிய, கட்டுண்ட ''அகந்தை''யாகிறேன். ஆன்மாவாகிய நான் பிரபஞ்சத்திலுள்ள மொத்த மனத்துடனும், மொத்த அறிவுடனும் என்னை இணைத்துக் கொள்ளும் போது எல்லாம் வல்ல, எல்லாம் அறிந்த இறைத் தத்துவமாக ஆகிறேன். படைப்போனும், காப்போனும், அழிப்போனும்—பிரம்மாவும், விஷ்ணுவும், மகேசுவரனும்—நானேதான்.

ஒருவனுடைய மனநிலையைப் பொறுத்து, உலகத்தின் தோற்றமும் அவருக்கு மாறுகிறது. நாம் சந்தோஷமாக இருக்கும் போது உலகத்திலுள்ள எல்லாவற்றிலும் மகிழ்ச்சி பொங்கித் ததும்புவதாக நமக்குத் தோன்றுகிறது. நாம் துயரத்தில் ஆழ்ந்திருக்கும் போது, உலகமும் அழுது வடிவதாகத் தோன்றுகிறது. இப்படி மகிழ்ச்சியும், துயரமும் மாறி மாறிக் காட்சியளிக்கும் உலகம், நாம் ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும்போது மறைந்தே போகிறது. ஒருவருடைய மனமும், அறிவும் வேலை செய்யாமல் உறங்கும்போது, அவருக்கு இன்பமும் இல்லை, துன்பமும் இல்லை. 'உள்ளம் எப்படி, உலகம் அப்படி' என்ற உண்மை இதனால் வெளியாகிறது அல்லவா? மனம் இல்லை என்றால் உலகமும் இல்லை.

என் மனத்தினால் என் உலகை நானே படைத்துக் கொள்கிறேன். உன் மனத்தினால் உன் உலகை நீயே படைத்துக் கொள்

கிருய். அவனுடைய மனத்தினுல் அவனுடைய உலகை அவனே படைத்துக் கொள்ளுகிருன். என் உலகில், பிறருடைய உலகங் களின் சில பகுதிகள் அவ்வப்போது இடம் பெறுகின்றன. தத்துவ ரீதியாகப் பார்த்தால் மொத்த பிரபஞ்சமனம், நாம ரூப வேறு பாடுகளுடன் கூடிய இவ்வுலகத்தைப் படைக்கிறது, காக்கிறது, அழிக்கிறது. தாவரங்களுடைய வளர்ச்சி பெரு மனம், அதைவிட சற்று வளர்ச்சி பெற்ற விலங்குகளின் மனம், இவற்றைவிட நன்ருக வளர்ந்துள்ள மனித மனம்—இவை எல்லாவற்றையும் உள்ளிட்டதுதான் மொத்த மனம். இறைத் தத்துவம் என்று வேதாந்தம் கூறும் கருத்தை முழுமையாகப் புரிந்து கொள்ளு கிறவர்கள், நிச்சயமாக இதை ஒப்புக் கொள்ளுவார்கள். கடவுள் எல்லாம் வல்லவர், எல்லாம் அறிந்தவர், சர்வ லோக மகேசுவரர் என்று கூறுவதன் பொருள் இதில் அடங்கியிருக்கக் காணலாம்.

கிருஷ்ணருடைய சொற்களை மெய்மறந்து கேட்டுக் கொண்டிருக்கும் போது, தான் ஒரு தெய்வீக அனுபவத்தில் மூழ்கித் திளைக்கும் உணர்ச்சி அர்ஜுனனுக்கு ஏற்படுகிறது. பிரபஞ்சம் முழுவதும் பரவி நிற்கும் ஒருவரைப் பற்றி ஸ்ரீ கிருஷ்ணன் பேசப் போகிருர். அதைப் புரிந்து கொள்வதற்கும், அனுபவபூர்வமாக ஏற்பதற்கும் அர்ஜுனனுடைய உள்ளம்கூட பிரபஞ்சத்தைப்போல விசாலமானதாக இருக்க வேண்டும். கிருஷ்ணர் அவனை படிப்படியாக உயர்த்தி அந்த நிலைக்குக் கொண்டு வருகிருர்.

பகவான் கூறினுர்:

பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு மே பரமம் வச:
யத்தேஹம் ப்ரீயமாணுய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா

10:1

புயவலிமை மிக்கவனே, என் சிறப்பான பேருரையைக் கேள். நீ உற்சாகமாகக் கேட்டு வருவதால், உனது நலனைக் கோரி, மீண்டும் அதை நான் எடுத்துரைக்கிறேன்.

கீதையின் தொடக்கத்தில், என்ன செய்வதென்று தெரியா மல் தத்தளித்துக் கொண்டிருந்த அர்ஜுனன் இப்போது சற்று மன அமைதியுடன் காணப்படுகிருன். இந்து மதத்தின் புனித மான தத்துவங்களை கசடறக் கற்று அவற்றை மனமார ஏற்றுக் கொள்ளும்போது தானுகவே ஒரு அமைதி ஏற்படுகிறது. இது வரை சொல்லியதை எல்லாம் அர்ஜுனன் கவனமாகக் கேட்டுக் கொண்டு வந்ததால், அவனிடம் தோன்றிய மாறுதலைக் கண்டு "நீ உற்சாகமாகக் கேட்டு வருகிருய்" என்கிருர் ஸ்ரீகிருஷ்ணர். அவர் உரைத்தவை அர்ஜுனன் உள்ளத்தில் பதிந்திருக்கின்றன.

என்றும், அதனால் அவனிடம் பெருத்த மாறுதல் ஏற்பட்டிருக்கிற தென்றும் இதிலிருந்து தெரிகிறது.

மாணவர்கள் உற்சாகமாகப் பாடம் கேட்கும் போதுதான், இன்னும் புதிய கருத்துக்களைக் கற்பிக்க வேண்டுமென்ற உற்சாகம் ஆசிரியருக்கும் வரும். இல்லாவிட்டால் வராது. வேத உண்மைகளை ஒருவர் தெளிவாகத் தெரிந்து கொள்ளும்போது, அவருடைய உள்ளத்தில் அமைதியும், நிறைவும் தோன்று கின்றன. அகத்தின் அழகு முகத்தில் தெரியும் அல்லவா? அர்ஜுன னிடம் தோன்றியுள்ள மாறுதலைக் கண்டு 'நான் கூறுவது அரும் பெரும் உண்மை. அதை மறுபடியும் கேள். உன் நலனில் அக்கறை கொண்டிருப்பதால் அதை நான் மீண்டும் எடுத்துரைக்கிறேன்' என்று கருணை ததும்ப, பிரபஞ்சப் பேராசிரியர் பேசத் தொடங்கு கிறார்.

அர்ஜுனனை, 'புயவலி மிக்கவனே' என்று அழைக்கும் போது, சாதாரணமாக உலக விவகாரங்களில் வெற்றிபெறும் வலிமை அவனுக்கு இருக்கிறது என்பதை மட்டும் குறிப்பிட வில்லை. அந்தச் சூழ்நிலையில், தனது பிறப்புரிமையான தெய்வீக, ஆனந்த சாம்ராஜ்யத்தை அக வாழ்வில் உருவாக்கிக் கொள்ளும் மாவீரனாக அவன் திகழ வேண்டும் என்று கிருஷ்ணன் அவனுக்கு நினைவூட்டுகிறார். 'நான் சொல்லப் போவதைக் கேள். உனது (ஆன்மீக) நலனைக் கோரி மீண்டும் நான் அதை சொல்லுகிறேன்' என்று கிருஷ்ணன் தொடங்கியவுடன், அவர் என்ன சொல்லப் போகிறார் என்பது நமக்கு விளங்குகிறது. அதை மீண்டும் கூறத் தீர்மானித்த காரணத்தை அவர் இப்போது தெரிவிக்கிறார்.

ந மே விது: ஸுரகணா: ப்ரபவம் ந மஹர்ஷய:
அஹமாதிர்ஹி தேவானாம் மஹர்ஷீணாம் ச ஸர்வச:

*10:2*

தேவர்களுக்கும் மா முனிவர்களுக்கும்கூட எனது தோற்று வாய் தெரியாது. ஏனென்றால் எல்லா தேவர்களுக்கும், முனிவர் களுக்கும், எல்லா வகைகளிலும், மூலகாரணமாக நான் இருக்கி றேன்.

நேரடி அனுபவத்தின் மூலம் நாம் ஒரு பொருளை தெரிந்து கொள்ள முடியாதபோது, அந்த அனுபவம் பெற்றவர்களிட மிருந்து நாம் அதைத் தெரிந்து கொள்ளுகிறோம். பிரம்ம வித்தையைப் பொறுத்தவரை, அதுவும் முடியாது. ''விண்ணவர் களுக்கோ, மா முனிவர்களுக்கோ கூட எனது ஆதி என்ன வென்று தெரியாது,'' என்று கிருஷ்ணர் சொல்லுகிறார்.

அவர் எந்த மாமுனிவர்களைக் குறிப்பிடுகிறார் என்பது,

அடுத்த சில செய்யுட்களுக்குப் பிறகு வருகிறது. * 'ப்ருகு' முதல் வசிஷ்டர் வரையிலுள்ள ஏழு மாமுனிவர்களை சாசுவதமான, சப்தரிஷிகள் என்று புராணங்கள் கூறுகின்றன. ஆனால் இங்கு பேசுவது அவர்களைப் பற்றியல்ல. தத்துவ பூர்வமாக சப்த ரிஷிகளைப் பற்றிய விளக்கம் பின்வருமாறு:

மொத்த பிரபஞ்ச அறிவை 'மகத்' என்று கூறுகிறார்கள். அதனுடன் கலந்து நின்று, மெய்ப்பொருள் தனக்கென்று அகந்தைமைய ஆளுமையொன்றைப் படைத்துக் கொள்ளுகிறது. தனது சொந்த ஆனந்தக் களிப்பில் ஐந்து புலன் பொருள்களைக் கொண்ட உலகமாக அது தன்னை வெளியிட்டுக் கொள்ளுகிறது. இந்தப் புலன் பொருள்களுக்கு ''தன் மாத்திரைகள்'' என்று பெயர். ** மகத், அகங்காரம், ஐந்து தன் மாத்திரைகள் ஆகிய ஏழும், ஏழு மாமுனிவர்களாக உருவகப்படுத்தப்பட்டு, பெயர்களும் பெற்றிருக்கின்றன. மனம், புத்தி, அடிப்படையில் அமைந்துள்ள மனித வாழ்வை, சப்த ரிஷிகள் என்ற கருத்து குறிப்புணர்த்துகிறது. அவர்கள் மூலம், படைப்பின் நிமித்த, உபாதான காரணங்கள் சுட்டிக் காட்டப்படுகின்றன.

'தேவர்கள்' என்ற சொல்லுக்கு 'விண்ணவர்' என்று அர்த்தமில்லை. 'ஒளியூட்டுதல்' என்று பொருள்படும் சமஸ்கிருத மூலச் சொல்லிலிருந்து அது வருகிறது. இந்த உலகத்திற்கு ஒளியூட்டி, நாம் எண்ணற்ற அனுபவங்களைப் பெற உதவும் புலனுறுப்புக்களே தேவர்கள்.

எனவே ஆன்மாவே தூய, பேருணர்வுத் தத்துவமே, எல்லா 'தேவர்களுக்கும், முனிவர்களுக்கும்' மூலகாரணமாக இருக்கிறது என்று தெளிவாகிறது. அதாவது நம்முள் இருக்கும் மெய்ப்பொருள் உடல், மன, அறிவு மட்டங்களில் நாம் ஒவ்வொருவரும் நடத்தும் வாழ்க்கைக்கு மூலகாரணமாக இருக்கிறது. இத் 'தேவர்களும், முனிவர்களும்' இயக்கம் பெறுவது மெய்ப்பொருளினால்தான் என்றாலும், அம் மெய்ப் பொருளின் ஆதி அவர்களுக்குத் தெரியாது—எனது தோற்றுவாய் அவர்களுக்குத் தெரியாது.

பேருணர்வு நம்முள்ளிருக்கும் மெய்த் தத்துவம்தான். அது அறியும் பொருள், அறியப்படும் பொருளல்ல. ஆகையால் ஐம்புலன்களினாலோ, மனத்தினாலோ, அறிவினாலோ அதை அறிய முடியாது.

---

* அத் 10; செய். 6.

* ஐம் பெரும் மூலங்களின் அடிப்படை இயல்புக்குப் பெயர் தன்மாத்திரை. ஆகாசத்தில் ஓசையும், வாயுவில் ஸ்பரிசமும், நெருப்பில் உருவமும், நீரில் சுவையும், மண்ணில் மணமும் தன் மாத்திரைகள் எனவே தன் மாத்திரைகள் என்பது புலன் பொருள்களைத் தவிர வேறு ஒன்றுமில்லை.

அப்படியானால் உடல், மன, அறிவு மட்டங்களில் நாம் வாழும் வாழ்க்கைக்கு மூல காரணமாக உள்ள ஆன்மாவை அறிந்து அனுபவிக்கவே முடியாதா? சிலருக்கு இவ்வாறு ஒரு பயம் வந்து விடலாம். பகவான் அதைப் போக்குவதற்கு பின்வருமாறு கூறுகிறார்.

யோ மாமஜமனாதிம் ச வேத்தி லோக மஹேச்வரம்
அஸம் மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே
10:3

என்னை பிறப்பு, இறப்பு இல்லாதவனாகவும், தொடக்கம் இல்லாதவனாகவும், எல்லா உலகங்களுக்கும் அதிபதியாகவும் அறிந்து கொள்ளும் ஒருவர் மருட்சியிலிருந்து நீங்கி, எல்லா பாவங்களிலிருந்தும் விடுதலை பெறுகிறார்.

என்னை அறிந்து கொள்பவர்: வெறும் உணர்ச்சிவசப் பட்டோ அல்லது சிந்தனை மட்டத்தில் மட்டுமோ ஆன்மாவை அறிந்து கொள்வதினால் பயனில்லை. இறைப் பொருளை ஒருவர் நேரடியாக அனுபவிப்பதையே இங்கு 'அறிதல்' என்று பகவான் சொல்லுகிறார். ஆன்ம தியானத்தில் முழுமையாக மூழ்கி இருக்கும் போது, ஒருவருக்கு இந்த நேரடி அனுபவம் ஏற்படு கிறது. இறைவனை 'பிறவி இல்லாதவனாகவும், தொடக்க மில்லாதவனாகவும், சகல உலகங்களுக்கும் மகாநாயகனாகவும்' தியானித்து, அந்த உணர்வில் லயித்து விட வேண்டும். புராதன ஹிந்து மரபு பற்றி கொஞ்சமாவது தெரிந்தவர்களுக்கு இங்கு சொல்லியிருக்கும் மூன்று சொற்களின் முக்கியத்துவம் விளங்கும். அது தெரியாதவர்களுக்கு இவை அர்த்தமற்ற வெறும் வார்த்தைகளாகத் தோன்றும். நாம் காணும் உலகம் தோற்ற மறைவுகளுக்கு உட்பட்டது. இதிலுள்ள உயிரினங்கள், பொருள் கள், இங்கு ஏற்படும் அனுபவங்கள், இவை எல்லாவற்றிற்கும் ஆரம்பம் உண்டு. எனவே முடிவும் உண்டு; பிறப்பு—இறப்பு உண்டு. பரம்பொருள் எத்தனை வகைத் தோற்றங்களைக் கொண்ட போதிலும், பரம்பொருளாக அது வெளியாவதில்லை. அதற்குப் பிறவி எதுவும் கிடையாது. தூணில் ஒருவன் பேயைக் காண்கிறான் என்றால் அந்தப் பேய்த் தோற்றம் காண்பவனுடைய உள்ளத்தில் பிறந்தது. ஆகையால் அதற்கு மறைவு உண்டு. தூணில் இருந்தா பேய் பிறந்தது? அல்லது பேயிலிருந்து தூண் பிறந்ததா? இரண்டும் இல்லை. தூண் முன்பு இருந்தது, இப்போது இருக்கிறது. நாளை இருக்கும். ஆன்மாவும் அப்படித் தான். அது எல்லா வரையறைகளுக்கும் அப்பாற்பட்டது. எல்லாமே ஆன்மாவில் தோன்றி, ஆன்மாவில் இருந்து, பிரபஞ்ச முடிவில் ஆன்மாவுடன் கலந்து விடுகின்றன. கடலிலிருந்து அலைகள் பிறக்கின்றன. ஆனால் கடலுக்குப் பிறவியில்லை.

தோற்றம் எடுக்கும் எல்லாப் பொருள்களுக்கும், அலைகளுக்கு உள்ளதைப் போல, ஆரம்பம், வாழ்வு, முடிவு உண்டு. அவை தோன்றுவதற்கு காரணமான சாராம்சப் பொருளுக்கு தொடக்கம் எதுவும் இருக்க முடியாது. அது நித்தியமானது. எனவே பரம்பொருள் 'தொடக்கமில்லாதது' என்று இங்கு குறிப்பிடப் படுகிறது.

எல்லா உலகங்களுக்கும் அதிபதி (சர்வலோக மகேசுவரர் —'லோக' என்னும் சொல்லுக்குப் பல அர்த்தங்கள் உண்டு. சாதாரணமாக அதை 'உலகம்' என மொழிபெயர்க்கிறார்கள். ஆனால் 'அனுபவம்' என்று பொருள்படும் மூலச் சொல்லிலிருந்து பிறந்தது அது. அனுபவங்களின் களமாக இருக்கும் எல்லாவற்றையுமே அச் சொல் குறிக்கிறது. சிந்தனை உலகம், ஏழைகளின் உலகம், உணர்ச்சி உலகம் என்றெல்லாம் நாம் பேசும் போது, அவை ஒவ்வொன்றிலும் அந்தச் சொல்லுக்கு அர்த்தம் மாறுவதைக் காணலாம். நாம் வெளியில் பார்க்கும் உலகம் மட்டுமின்றி, கண்ணுக்குப் புலனாகாத உணர்ச்சி உலகு, கருத்து உலகு முதலியவை கூட 'லோக' என்ற வார்த்தையில் அடங்கியிருக்கின்றன.

உடல், மன, அறிவு மட்டங்களில் எனது அனுபவங்களின் களமாக இருப்பது என் உலகம். என்னுடைய உணர்வின் ஒளி அதன்மீது பட்டாலொழிய ஒரு அனுபவத்தை ''எனது'' என்று சொல்ல முடியாது. இத்தூய உணர்வியக்கத்தின் அருளால்தான் நான் எந்த அனுபவத்தையும் பெற முடிகிறது. இந்த உலகத்தைப் பொறுத்த வரையில், அது இல்லை என்றால் நானும் இல்லை. நான் வெறும் சடலமாகிவிடுகிறேன். எனவே எனது 'லோகம்' உணர்வுப் பெரும் பொருளாகிய எனது ஆன்மாவைத் தவிர வேறு ஒன்றுமில்லை.

எவ்வகை மாறுதலும் இல்லாத ஆன்மா எல்லா இடங்களிலும் பரவியிருக்கிறது. என் உலகத்தை ஆளும் அதே ஆன்மா எல்லோருடைய உலகங்களுக்கும் அதிபதியாக இருந்து ஆட்சி செலுத்தி வருகிறது. எல்லோருடைய அனுபவ உலகங்களின் தொகுப்பை 'பிரபஞ்சம்' என்று மொத்தமாகக் குறிப்பிடுகிறோம். அதை ஆளும் மாமன்னன் ஒப்பற்ற பரமாத்மாவாகத்தான் இருக்க முடியும். சர்வ லோகேசுவரர் என்பதன் கருத்து அதுதான். அவர் நமது வாழ்வை ஆட்டிப் படைக்கும் கொடுங்கோலர் அல்ல; ஆகாயத்தில் பறந்து கொண்டே நமக்கு ஆணையிடும் 'சுல்தானும்' அல்ல. உலகத்திற்கு ஒளியூட்டி, பகலின் அதிபதியாக இருக்கும் சூரியனைப்போல நமது அனுபவங்களுக்கு ஒளியூட்டி, பிரபஞ்ச அதிபதியாக விளங்கும் ஆன்மாவேதான் 'சர்வலோக மகேசுவரர்'.

என்னை பிறப்பற்றவனுகவும், தொடக்கமில்லாதவனுக வும், சகல உலகங்களின் அதிபதியாகவும் அறிந்து கொள் பவர் மருட்சியிலிருந்து நீங்கப் பெறுகிறுர். —இரவில் என்னைப் பார்த்துப் பல்லிளித்த பேயை, சற்று கூர்ந்து நோக்கிய பிறகு, அது சாலை ஓரத்தில் நிற்கும் விளக்குத் தூண்தான் என்று தெரி கிறது. அந்த நொடியிலேயே என்னுடைய மருட்சி விலகி, என்னை நடுங்க வைத்த பயம் அடியோடு மறைகிறது. அத்துடன் எல்லாப் பாவங்களும் அகலுகின்றன. இந்து மத தத்துவத்தில் 'பாவம்' என்பது நம்மை, தவிர்க்க முடியாத தண்டனைக்கு உள்ளாக்கும் ஒரு பயங்கரச் செயல் அல்ல. பாவம் செய்ததற்காக யாரும் தண்டனை விதிப்பதில்லை. பாவமே ஒரு தண்டனையாகிறது. தன்னுடைய உண்மை இயல்பை, தனக்கு இழிவைத் தேடித் தரும் செயல்களை ஒருவன் செய்தால், அதுதான் 'பாவம்.'

ஆன்மீக மயமாகத் திகழ்வதே மனிதனுடைய உண்மை யான இயல்பு, அதை மறந்து உலக நிகழ்ச்சிகளுடன் தங்களை பெரும்பாலோர் இணைத்துக் கொள்ளுகிறுர்கள். ரத்தமும், சதை யும் சேர்ந்து உருவாகியுள்ள இந்த உடல், பொங்கி எழும் உணர்ச்சிகள், அறிவில் உதிக்கும் கருத்துக்கள், இவற்றின் தொகுப்பாக ஒருவன் தன்னை நினைத்தால், அது மனிதனுடைய தெய்வீக அந்தஸ்தை அவமதிப்பதாகும்; தனது நிகரற்ற உயர்ந்த நிலையை இழிநிலைக்குத் தாழ்த்திக் கொள்வதாகும். இப்படி இழிவுபடுத்திக் கொள்ளும் சிந்தனைகளும், செயல்களும் அவனை கீழ்த்தர இன்பங்களுடன் சேர்த்துப் பிணைக்கின்றன. அவன் உயர்ந்து, முழுமையின் சிகரத்தை எட்டிப்பிடிக்க முடியாதவாறு செய்கின்றன.

தனது ஆன்மீக இயல்பை மீண்டும் கண்டுகொண்டு ஆன் மாவில் முழுமையாக லயித்து விடுபவன், மறுபடி 'பாவச் செயல்' களைச் செய்ய முடியாது. ''நான் தளைகளினுல் கட்டுண்டவன், குறுகிய வரையறைகளுக்கு உட்பட்டவன்' என்று ஒருவன் கற்பனை செய்து கொள்ளுவதால் உண்டாகும் புண்களுக்கே 'பாவம்' என்று பெயர். ஆன்மா பிறவாதது, தொடக்க மில்லாதது; நிரந்தரமானது, நலிவுற்று அழியும் பொருள் களுக்கும் அதற்கும் சம்பந்தமில்லை என்ற உண்மையை உணர்ந்து, அதற்கு ஏற்றபடி ஒருவன் வாழத் தொடங்கி விட்டால், அடைய வேண்டிய எல்லாவற்றையும் அவன் அடைந்தவனுகிறுன். மெய்யறிவு பெற்று சகல உலகங்களுக்கும் அதிபதி ஆகிறுன்.

அது சரி. ஆனுல் ஆன்மாவை எல்லா உலகங்களுக்கும் அதிபதி என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?

புத்திர் ஞானமஸம் மோஹ: க்ஷமா ஸத்யம் தம: சம:
ஸுகம் து:கம் பவோபாவோ பயம் சாபயமேவ ச

10:4

அறிவு, ஞானம், மருட்சியின்மை, மன்னிப்பு, சத்தியம், சுயகட்டுப்பாடு, அமைதி, இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு, பயம், பயமின்மையும் கூட—

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோ தானம் யசோயச:
பவந்தி பாவா பூதானும் மத்த ஏவ ப்ருதக்விதா:

10:5

அஹிம்சை, சமநிலே, திருப்தி, தவம், தான தருமங்கள், புகழ், அவதூறு முதலிய பல்வேறு வகை படைப்பியல்புகளும் என்னிடமிருந்தே எழுகின்றன.

இப் பன்மைத் தோற்ற உலகின் நிமித்த காரணமாகவும், உபாதான காரணமாகவும் இருப்பது பரம்பொருளே. மனிதனுடைய மன—அறிவு சாதனத்தின் பல இயக்கங்களைக் குறிப்பிடுவதன் மூலம், படைப்பு முழுவதற்கும் தாமே காரணமன்று கிருஷ்ணர் அறிவிக்கிறுர்.

'படைப்பு' என்ருல், உருவப் படைப்பு மட்டும் அல்ல, இன்னும் விரிவான பொருளில் அச் சொல் இங்கு கையாளப்படுகிறது. உடல், மன, அறிவு மட்டங்களில் மனிதன் வாழ்க்கையை முழுமையாக இச் செய்யுட்கள் விவரிக்கின்றன. இவற்றில் கூறியுள்ள தன்மைகளின் அடிப்படையில், மக்களை நாம் வகை பிரிக்கிறோம். ஒருவருடைய மனப்போக்கை வைத்து, அவருடைய இயல்பை நாம் நிர்ணயிக்கிறோம். மனம் எப்படி, மனிதன் அப்படி.

தெளிவான நேரடி இயல்புகளையே இச் சுலோகங்கள் பட்டியல் போட்டுக் காட்டிய போதிலும், 'ச' என்ற இணைப்புச் சொல்லும் இருப்பதால் அவற்றின் எதிர்மறைகளையும் சேர்த்துக் கொள்ளலாம் என்று மரபு வழி உரையாசிரியர்கள் நினைக்கிறுர்கள். அது ஒருபுறம் இருக்க, இங்கு கூறப்பட்டுள்ள நோக்கு பெற்றிருந்தாலே ஆன்மிக முன்னேற்றம் அடையலாம் என்ற காரணத்திற்காகவும், எதிர்மறைகளை இதனு டன் சேர்க்காமல் விட்டிருக்கலாம்

எல்லோருடைய போக்கும் ஒரு மாதிரியே இருப்பதில்லை. இங்கு கூறியுள்ளவை—அறிவு, உணர்ச்சி முதலியவை—ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு முறையில் அமைந்திருக்கின்றன. அதனுல் வாழ்க்கையிலும் ஒருவருக்கொருவர் மாறுபட்டு இருக்கிறுர்கள்.

இவ்வாறு மாறுபட்டிருக்கச் செய்யும் 'தன்மை'களும். தம்மிட மிருந்தே வருவதாகக் கிருஷ்ணன் அறிவிக்கிறுர். அவைகளுக்கு அடிப்படையாக இருப்பது பரம் பொருளே என்பது பகவான் கூறுவதன் கருத்து. வழிப்போக்கன் கண்ட பேய், புன்னகை புரிந் திருக்கலாம். விழியுருட்டி, கோபக்கனல் கக்கியிருக்கலாம். பழி வாங்கப் போவதாக சைகை காட்டியிருக்கலாம். ஆனுல் அதன் புன்னகைக்கும், கோபத்திற்கும், பயமுறுத்தலுக்கும் ஆதாரமாக இருப்பது சாலை மருங்கிலுள்ள அந்தத் தூணே அல்லவா? ஒருவரு டைய 'தன்மைக்கு' ஒளியூட்டும் சைதன்யம் அங்கு இல்லையேல், அவரைப் பொறுத்தவரை, அந்தத் 'தன்மை'யும் இல்லை. உலகி லுள்ள இயல்புகளும், அனுபவங்களும் இங்கு வகை பிரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன. ஆன்மாவை 'சர்வலோக மகேசுவரர்' என்று கூறுவதற்கு விளக்கமளிப்பதைப் போல் இவ்விரு பாடல் களும் அமைந்திருப்பதாக சங்கரர் கூறுகிறுர்.

மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மனவஸ்ததா
மத்பாவா மானஸர் ஜாதா யேஷாம் லோக இமா: ப்ரஜா:
10:6

''என்னைப் போல் ஆற்றல் படைத்த ஏழு மாமுனிவர்களும், புராதன நால்வரும், மனுக்களும் (என்) மனதிலிருந்து பிறந்தவர் கள். அவர்களிடமிருந்து இவ்வுலகிலுள்ள எல்லா உயிரினங்களும் தோன்றியிருக்கின்றன.''

ஏழு முனிவர்களும், நான்கு குமாரர்களும், பதினன்கு மனுக்களும் இறைவனுடைய சங்கல்பத்திலிருந்து உதித்ததை இரண்டாவது செய்யுளிலேயே ஸ்ரீகிருஷ்ணன் தெரிவித்தார். மொத்தமாக அவர்கள் இவ்வுலகத்தின் உபாதான, நிமித்த காரணங்கள் ஆகிறுர்கள் என்பது 'உலகத்திலுள்ள எல்லா உயிரினங்களும் தோன்றின' என்ற வாக்கியத்திலிருந்து தெரி கிறது. இது எவ்வாறு?

உருவகமாகப் பேசும் போது ஏழு முனிவர்கள் என்று புராணங்கள் யாரைக் குறிப்பிடுகின்றன? இதை தன்னேக்காகப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அறிவு, அகந்தை, ஐம்பெரும் மூலத் தனிமங்கள் (பஞ்ச பூதங்கள்) ஆகிய ஏழும் அந்த சப்தரிஷி கள். இவை ஏழும் சேர்ந்து, ஒருவருக்குப் புலனுகும் அனுபவ உலகத்தைப் படைக்கின்றன. அதுவே அவருடைய உலக மாகிறது.* நமது உள்ளத்தில் நடப்பதை உற்று நோக்கிச் சிந்தித் தால் இவ்வுருவகத்தின் உட்பொருள் நன்கு விளங்கும். நமது உள்ளத்தில் ஒரு சிந்தனை எழுகிறது என்று வைத்துக் கொள் வோம். அது உடனே உள்ளத்தைக் கலக்கி விடுவதில்லை. அதற்கு

---

* அத். 10, செய். 2. விளக்கத்தில் காண்க.

அந்த சக்தி இல்லே. சிந்தனையில் ஒரு வேட்கை எழுந்தவுடன், நாமும் அதனுடன் இணைந்து மீண்டும் மீண்டும் சிந்தனையை அதன் மீதே செலுத்தி அதைத் தீவிரமாக்குகிறோம். இவ்வாறு அவ் வேட்கையின் வேகம் அதிகரித்து நமது மன அமைதி அடியோடு சீர்குலைகிறது. உலகத்தைப் பற்றிய நமது கருத்துக் களும், அனுபவங்களும், இச் சிந்தனைக் கொந்தளிப்புக்கு ஏற்ற படி வெவ்வேறு மாதிரி அமைகின்றன. எனவே உள்ளமும், அது உருவாக்கும் தோற்றங்களும் நமது குறுகிய சுகதுக்க உலகிற்கு உபாதன நிமித்த காரணங்கள் ஆகின்றன. மொத்தமாகச் சேர்த்து உலகிலுள்ள எல்லா தூண்டுதல்களையும் மனத்தையும், அறிவையும் 'சப்தரிஷி மண்டலம்' என்று புராணங்கள் குறிப்பிடு வது அதனுல்தான்.

## புராதன நால்வரும் மனு—க்களும்:

தன்னிலே ஆய்வு அடிப்படையில் இதன் உட்பொருளை விளக் கும் சங்கரர் இந்த வரியை ''புராதனரும், நாலு மனு—க்களும்'' என்று பிரித்து விளக்கம் கூறுகிறுர்.* அடுத்த வரியிலேயே ''இவர்கள் எனது மனதில் உதித்தவர்கள்'' என்று பகவான் கூறுவது, சங்கரருடைய உரைக்கு ஏற்றதாகவும் அதற்கு உறுதி அளிப்பதாகவும் இருக்கிறது.

பிரபஞ்சப் படைப்பைத் தொடங்கு முன் சனத்குமாரர், சனகர், சனுதனர், சனந்தனர் என்ற நாலுகுமாரர்களை பிரம்மா தனது உள்ளத்திலிருந்து தோற்றுவித்ததாக புராணங்கள் கூறுகின்றன. நம் ஒவ்வொருவருள்ளும் இருக்கின்ற பிரம்மா நமது உயிர் சக்தி. ஏதோ ஒன்றைப் படைக்க வேண்டும் என்ற துடிப்பை அந்த சக்தி ஏற்படுத்துகிறது. நமது மனமும், அறிவும் அதற்கேற்றவாறு உடனே விறுவிறுப்பாக இயங்கத் தொடங்குகின்றன. நாம் விரும்பியதை படைக்கிறோம். பிரபஞ்சப் படைப்பும் அப்படித்தான். பிரம்மாவுக்கு படைப்பு ஆர்வம் வரும்போது, அவருடைய ஆழ்ந்த சங்கற்பத்தில் எழுவதை அந்தக்கரண மூலங்கள் செயல்படுத்தத் தொடங்குகின்றன. அவருடைய சிந்தனை வெள்ளமானது மனம், அறிவு, அகந்தை, சித் என்ற நான்கு கால்வாய்களின் மூலமாகப் பாய்ந்து பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிறது. படைப்பின் மூலாதாரமான இந்நான்கு உட்கருவிகளையே பிரம்மாவின் நான்கு குமாரர்களாக புராணங்கள் சித்திரிக்கின்றன.

---

* மொத்தம் 14மனுக்களில், சவர்ண மனு—க்கள் எனப்படும் நால்வரை இப்பாடல் குறிப்பிடுவதாக சங்கரர் எழுதுகிறுர். ஒவ்வொருவரும் சிறப்பான, நாகரிக வாழ்க்கை நடத்துவதற்கு குடும்பம், சமூகம், நாடு, உலகம் என்ற 4மட்டங்களிலும் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க முறைகளை வகுத்துக் கொடுத்தவர்கள் இந்த 4மனு—க்கள்.

இப்படியாக மொத்தப் பெரும் பிரபஞ்சம், தனி சிறு பிரபஞ்சம் (சமஷ்டி, வியஷ்டி, அண்டம், பிண்டம்) ஆகிய இரண்டுக்கும் காரணமான சக்திகளை ஆசிரியர் ஒரே செய்யுளில் விளக்குகிறார். உலகிலுள்ள மொத்த அறிவு (மகத்) மொத்த அகந்தை (அகங்காரம்) ஐந்து புலன் பொருள் மூலங்கள் (தன் மாத்திரைகள்) ஆகியவை பெரும் பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரணமாக இருப்பவை. தனிச்சிறு பிரபஞ்சத்தை எடுத்துக் கொண்டால், ஒருவன் தனது அறிவு, மனம், அகந்தை, சித் ஆகியவை மூலம் தனது சிறு உலகத்தைப் படைத்துக் கொள்ளுகிறான். எனவே ஏழு முனிவர்களும், புராதன நால்வரும், பெரும் பிரபஞ்சம், சிறு பிரபஞ்சம் ஆகியவற்றின் உபாதான, நிமித்த காரணங்களின் குறியீடுதான்.

தனிமனிதனின் உள்ளம், மொத்தப் பிரபஞ்ச உள்ளம் ஆகிய இருமட்டங்களிலிருந்து படைப்பின் பொருளைத் தெரிந்து கொள்ளுவதால் வரும் நன்மை என்ன? இதற்கு அடுத்த சுலோகத்தில் பகவான் பதில் அளிக்கிறார்.

ஏதாம் விபூதிம் யோகம் ச
மம யோ 'வேத்தி தத்வத:
ஸோவிகம்பேன யோகேன
யுஜ்யதே நாத்ர ஸம்சய: 10:7

என்னுடைய பல்வேறு தோற்றங்களையும் (சமஷ்டி பிரபஞ்சம்) எனது யோக சக்தியையும் (வியஷ்டிப் பிரபஞ்சம்) உண்மையில் அறிந்து கொள்ளும் ஒருவர், தாமே 'அசையா யோக'த்தில் வேரூன்றி விடுகிறார். அதில் சந்தேகமில்லை.

எனது விபூதி, எனது யோகம் ஆகிய இரண்டையும் சரியாக அறிந்து கொள்ளுபவர்கள் மெய்யுணர்வில் வேரூன்றி விடுகிறார்கள் என்று பகவான் கூறுகிறார். விபூதி என்றால் ஆயிரமாயிரம் தோற்றங்களாக வெளியாகி நிற்கும் தன்மை. 'எனது யோகம்' என்பதை எனது 'சக்தி' என்று பலர் மொழி பெயர்த்திருக்கிறார்கள். இதுதவறு என்று சொல்லிவிட முடியாது. ஆயினும் முந்திய சுலோகத்தில் கூறியதற்கும், இங்கு கூறுவதற்குமுள்ள அழகான நுணுக்கமான தொடர்பு இம்மாதிரி மொழிபெயர்ப்புகளில் வெளியாவதில்லை. ஏழு மாமுனிவர்களின் மூலம், பிரபஞ்சத்தின் இரண்ய கர்ப்பநிலை தோன்றுவது இறைவனுடைய விபூதி. நம் உள்ளத்தில் தோன்றும் நான்கு குமாரர்களினால் நமது அனுபவத்திற்குத் தென்படும் இந்தப் பூஉலகைப் படைப்பது ஆன்மாவின் யோக சக்தி. நாம ரூபங் களில் உள்ள அதே சுத்த சைதன்யம் இடம், காலம், நாம ரூபங்களை எல்லாம் கடந்து நிற்கும் இறைப் பொருளாக விளங்குகிறது. இரண்டும் ஒன்றுதான். அவை இரண்டுமே

பரமாத்ம சங்கல்பத்திஞல் நடக்கிறது. இதை அறிந்து கொள்பவர்கள் உண்மையான ஆத்ம ஞானிகள்.

இறைவனை ஒருவர் இரண்யகர்ப்பனுக அறியும்பொழுது, இவ்வுலகு பற்றிய அவருடைய நோக்கு அடியோடு மாறிவிடுகிறது. மொழியில் வேறு பொருத்தமான சொல் இல்லாததால் அதை 'அறிவது' என்று சொல்லுகிறேம். அது வெறும் புத்தக அறிவைக் குறிப்பிடுவதல்ல. சுய அனுபவத்தில் அதைக் கண்டறிய வேண்டும். 'சரியாக அறிந்து' (தத்வத:) என்று கிருஷ்ண பகவான் கூறுவதன் நோக்கம் அதுவே. இரண்ய கர்ப்ப நிலையில் உள்ள பரம்பொருளே இவ்வுலகிலுள்ள என்னிடமும் இருக்கிறது என்ற தெளிவு ஏற்பட்டவுடன் ''நானே அந்த பரம் பொருள், நானே பிரம்மன்'' என்ற ஞானம் தோன்றுகிறது.

ஏழு மாமுனிவர்களின் மூலம் இயங்கும்போது நான் பிரபஞ்சமாகிறேன்; நாலு குமாரர்களின் மூலம் இயங்கும் போது சுக துக்கங்களுடன் கூடிய வியக்தி ஆகிறேன் என்பதன் உண்மை புலப்பட்டவுடன் 'முனிவர்களும், புராதனர்களும், மனுக்களும் என் மனத்தில் உதித்தவர்கள்' என்று முந்திய பாடலில் வருவது எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது என்று நமக்குவிளங்குகிறது. பிரபஞ்ச உள்ளம், தனிமனித உள்ளம் ஆகிய இரண்டிலிருந்தும் ஆன்மா தன்னைப் பிரித்துக் கொள்ளும் போது, அது ஒப்புயர்வில்லாத பிரம்மனுகத் திகழ்கிறது. பிரபஞ்ச உள்ளமாக இயங்கும்போது அது பிரபஞ்சத்தைப் படைக்கும் ஈசுவரன். தனி மனிதனில் திகழும் போது அது குறுகிய அகந்தை (ஜீவன்) யாகி, வரையறைகளுக்கு உட்பட்ட இச் சிறு உலகத்தின் சுக துக்கங்களை அனுபவிக்கிறது. இதை உணர்ந்து, இதற்கேற்றவாறு வாழ்க்கையை உறுதியாக அமைத்துக் கொள்வதே 'அசையா யோகம்' இந்த யோகத்தின் மூலம் ஒருவர் நிரந்தரமாக, உறுதியாக, ஆன்மானுபவத்தில் நிலைத்துவிடுகிறுர். 'அசையா யோகம்' என்பது மற்றொரு புதிய பிரயோகம். இந்து மறுமலர்ச்சி இயக்கத்திற்கு கீதை இன்றியமையா புரட்சி நூலாக இருக்கிறதென்றுல், அதற்குக் காரணம் இதைப் போன்ற புதிய விளக்கங்கள் அதில் அளிக்கப்படுவதுதான்.

நமது உண்மை இயல்பாகிய ஆன்மிகத் தன்மையை அனுபவித்த வண்ணம், அதிலேயே தொடர்ந்து, உறுதியாக நிலைப்பது எப்படி? அதற்குக் கையாள வேண்டிய முறைகள் என்ன? இந்தப் பிரச்னைக்கு பின்வருமாறு பதிலளிக்கிறுர் பகவான்.

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த:
ஸர்வம் ப்ரவர்ததே
இதி மத்வா பஜந்தே மாம்
புதா பாவஸமன் விதா:

10:8

நான் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாக இருக்கிறேன். எல்லாப் பொருள்களும் என்னிடமிருந்து பரிணமம் பெறுகின்றன. இதை அறிந்து கொள்ளும் 'விவேகி'கள் அன்பு ததும்பும் உணர்வுடன் என்னை வழிபடுகிறார்கள்.

பெரு உலகமாகிய பிரபஞ்சத்திற்கும், சிறு உலகமாகிய தனிமனிதனுக்கும் இயக்கம் அளிக்கும் மெய்ப்பொருள் ஒன்றேதான். அது தன்னை வெளியிட்டுக் கொள்ளும் கருவிகள் வேறுபடுகின்றன. அவ்வளவுதான். உயிர் அருவி மொத்த உள்ளத்தின் மூலம் பாயும்போது, அது (ஈசுவரன்) பன்மை மிக்க பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிறது. அதே இறைப் பொருள் ஒரு தனிமனிதனின் உள்ளத்தின் மூலம் வெளியாகும்போது, அது(ஜீவன்) அவனுடைய தனி உலகத்தைத் தோற்றுவிக்கிறது. வெந்நீர்க்கருவியில் உள்ள வெப்பத்திற்கும், பல்பு மூலமாக வெளியாகும் வெளிச்சத்திற்கும் காரணமாக இருக்கும் சக்தி என்ற முறையில், மின்சாரத்திற்கு ஒளியும் இல்லை, சூடும் இல்லை. அதே மாதிரி ஆன்மிகப் பொருளுக்கு கடவுளும் இல்லை, அகந்தையும் இல்லை. இதை 'உண்மையில்' உணர்ந்தவர்கள் 'அசையா யோக'த்தின் * மூலமாக ஒப்பற்ற பேருணர்வில் உறுதியாக நிலைத்து விடுகிறார்கள்.

ஒரு குயவர் முதலில் களிமண்ணைத் தோண்டி எடுத்து, தேவையான அளவுக்கு நீர் வார்த்து, பிசைந்து உருண்டையாக்குகிறார். பிறகு அதைத் தமது சக்கரத்தில் வைத்துச் சுழற்றி ஒரு வடிவுக்குக் கொண்டுவருகிறார். அப்புறம் அழுத்தம் கொடுத்து அதை ஒரு பானையாக ஆக்கியவுடன், சக்கரத்திலிருந்து வெளியில் எடுத்துக் காய வைத்து, மேற்பரப்பை வழவழப்பாகச் செய்கிறார். கடைசியில் அதை சூளையில் வைத்து எடுத்து வண்ணம் பூசுகிறார். மண் பேசுமானால், 'இப்பானையின் சாராம்சமும், மூலகாரணமும் நான்தான். நாலுமட்டங்களில் படிப்படியாக வளர்ந்து இந்த உருவத்தில் தோன்றுகிறேன். எந்த நிலையிலும் நான் மண்ணிலிருந்து வேறுபட்டு நிற்கவில்லை' என்று சொல்லும். இது எக்காலத்திலும், எல்லாப் பானைகளுக்கும் பொருந்தும். மண் இல்லாமல் பானையில்லை. அதைப்போல, ஒரே இறைத் தத்துவம்

* நமது சாத்திர நூல்களில் இதை 'சமாதி யோகம்' என்றும் குறிப்பிடுகிறார்கள்.

தான் ஈசுவரனுகவும், ஜீவனுகவும் வெவ்வேறு நிலைகளில் வெளியாகிக் கொள்ளுகிறது.

தோற்ற மறைவுகளுக்கு உட்பட்ட பொருள் (பூத) உலகத்திலிருந்து தம் உள்ளத்தைத் திருப்பி, ஈசுவரனுக்கும் தமக்குமுள்ள பொதுவான அழியா மெய்ப் பொருளில் அதை உறுதியாக நிலைநிறுத்தும் சக்தி, சமஷ்டி—வியஷ்டி வேறுபாட்டை நுணுக்கமாக அறிந்த ஞானி ஒருவரால் தான் முடியும். பேருண்மை நாட்டத்தில் இவ்வாறு உள் நோக்காக ஈடுபடும் மனநிலையை, 'அன்பு ததும்பும் உணர்வு' என்று செய்யுள் குறிப்பிடுகிறது. (பாலசமன்விதா:)

ஒருவருடைய அன்பு அல்லது பக்தி எந்த அளவுக்கு இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமானுல், அன்பு கொண்டவருடன் உணர்ச்சி பூர்வமாக அவர் ஒன்றுபட்டு நிற்கும் அளவை வைத்துக் கண்டு பிடித்து விடலாம். அவ்விருவரும் இரண்டறக் கலந்து விடும்போது தான் அன்பு முழுமை பெறுகிறது. ''எங்கும் பரந்துள்ள ஆன்மாவும் நானும் ஒன்றுதான்'' என்று அனுபவ பூர்வமாக உணரும் அளவுக்குக் கலந்து நிற்பதே உண்மையான பக்தி. அந்த எல்லையிலாப் பரம்பொருள் பிரபஞ்ச உள்ளத்தில் பிரதிபலிக்கும்போது ஈசுவரனுகிறது. தனிப்பட்ட இவருடைய மன—அறிவுக் கருவியில் பிரதிபலிக்கும்போது குறுகிய அகந்தையாகி விட்டதுபோல—ஒரு ஜீவனுக—தோற்றம் கொள்கிறது. இதை அறிந்து, அன்பு ததும்பும் உள்ளத்துடன், தன்மயமாகி, பிரம்ம தியானத்தில் நிலைத்து விடுவது அசையா யோகம்.

முந்திய செய்யுளில் அசையா யோகம் பற்றிக் கூறியபகவான், அதில் வெற்றி பெறும் முறையை இங்கு வகுத்துக் கொடுக்கிருர். அதைச் சுலபமாகப் புரியவைப்பது மட்டுமின்றி, ஒவ்வொருவருடைய அனுபவத்திற்கு எட்டும் வகையிலும் செய்திருக்கிருர்.

மச்சித்தா மத்கதப்ராணு போதயந்த: பரஸ்பரம்
கதயந்தஸ்ச மாம் நித்யம் துஷ்யந்தி சரமந்திச

10:9

மனம் முற்றிலும் என்னிடம் லயித்திருக்க, பிராணன் எல்லாம் என்னிடம் நிலைக்க, என்னைப் பற்றி பேசியவண்ணம் ஒருவருக்கொருவர் அறிவொளி ஊட்டியவராக இருப்பவர்கள் திருப்தியும், மகிழ்ச்சியும் பெறுகிருர்கள்.

என்னிடம் லயித்த மனமுள்ளவனுக (மத்சித்த: ) —ஒரு சாதகருடைய மனம் ஒரே இலக்கில் நிலைத்து நிற்கும் இயல்பு

பெற்றால் தான், அவர் தியானத்தில் வெற்றிபெற முடியும். மனத்தில் பல நினைவுகள் அலைபாய்ந்து கொண்டிருந்தால், எதிலும் அது நிலைக்காது. ஒரு முகமான சிந்தனை இருக்காது. எல்லாபல்புகளிலும், விசிறிகளிலும், கருவிகளிலும் ஒரே மின்சாரம் தான் ஓடுகிறது என்பதை மனதில் கொள்வதற்கு பெரிய முயற்சி எதுவும் தேவையில்லை. நமது அறிவே அதை உணர்த்துகிறது. எல்லா சட்டி, பானைகளிலும் இருப்பது களிமண்தான் என்பதை மிகக் கஷ்டப்பட்டா நினைவு வைத்துக் கொள்கிறோம்? அதே மாதிரி, இறை (ஈசுவர)தத்துவத்திற்கும், தனி அகந்தைக்கும் (ஜீவனுக்கும்) பின்னாலிருக்கும் மெய்ப்பொருள் ஒன்றே என்ற உண்மை நமது அறிவில் ஊறி நிற்கிறது. உள்ளத்தில் எழும் எல்லா உணர்ச்சிகளுக்கும், அறிவில் எழும் எல்லாக் கருத்துக்களுக்கும் அடிப்படை சத்துப் பொருளாக இருப்பது ஆன்மிகப் பொருளே என்ற உணர்வு இறை நாட்டம் கொண்ட எல்லா சாதகர்களுக்கும் இயற்கையாகவே வருகிறது. 'மத் சித்த' என்று இங்கு குறிப்பிட்டிருப்பது இந்த ஆன்ம உணர்வைத்தான்.

புலன்கள் எல்லாம் என்னிடம் நிலைத்து நிற்க (மத்கதப்பிராண)

'பிராண' என்றால் 'மூச்சுக் காற்று' என்று பொருள் கூறுவது போதாது. உயிரின் ஐவகை இயக்கத்தை வெளியிடுவது பிராணன்* இச்சுலோகத்தில் அதற்கு 'ஐந்து புலன் பொறிகள்' என்று பொருள் கொள்ளலாம். ஐம்பொறிகளும் உடலில் இருக்கும் ஐந்து ஜன்னல்கள். நமது மனம் அவற்றின் வழியாக வெளியேறி பொருள்களிடையில் நடமாடித் திரும்பும் போது, வெளி உலகத்தை நம்முள் கொண்டு வருகிறது. அதற்காக ஊரை விட்டு காட்டுக்கு ஓடி விடும்படி வேதாந்தம் சொல்லவில்லை. அடைத்துக் கொண்டு அறையில் கிடக்குமாறும் சொல்லவில்லை. அறிவுப் பாதை என்பது விவேகப் பாதை . வெளியுலகப் பொருள் ஒவ்வொன்றும் பரம்பொருளின் பேரொளியை நினைவூட்ட வேண்டும். இறைவன் ஒளியூட்டாவிட்டால் எந்தப் பொருளும் மனத்தின் அனுபவ எல்லைக்குள் வரமுடியாது. பொருளுலகத்தைப் பார்த்தவுடன் இறைவனின் நினைவு வரும் முறையில் சிந்தனைக்குப் பயிற்சி அளித்தால், எல்லா வெளியுலகப் பொருள்களிலும், நிகழ்ச்சிகளிலும் ஒருவர் பரம்பொருள் அருளையே காண்பார். இதனால்தான் ''புலன்கள் என்னிடமே நிலைக்க'' என்று இங்கு சொல்லப் படுகிறது.

---

* நமது உடலில் நடக்கும் ஐந்து வகை வேலைகளுக்கும் காரணமாக இருந்து நடத்தி வைக்கும் சக்தி.

ஒருவருக்கொருவர் என்னைப் பற்றிப் பேசிய வண்ணமாக—

குறிப்பிட்ட ஒரு விஷயத்தில் ஆர்வம் கொண்ட நண்பர்கள் சந்திக்கும்போது, தங்கள் ஆர்வத்திற்குரிய பொருளைப் பற்றியே பேசிக் கொள்வார்கள், விவாதிப்பார்கள். ஏதோ அங்கும், இங்கும் புத்தகங்களில் சேகரித்த செய்திகள், இவ்வகை கருத்துப் பரிமாற்றங்களுக்குப் பிறகு அவர்களுடைய சொந்தமான அறிவாக மாறுகிறது. அவர்களுடைய சந்தேகங்கள் தீர்ந்து, திட்டவட்டமான நம்பிக்கை உறுதியாகிறது. வேதாந்தம் இதைப் போன்ற விவாதங்களுக்கு முக்கிய இடம் அளிக்கிறது. பிரம்ம வித்தைப் பற்றிக் கூறுகையில், சாதன முறைகளில் இதையும் ஒன்ருக அறிவித்திருப்பதைக் காணலாம்.

தம்மிடமுள்ள பேருணர்வுத் தத்துவத்தை இடையருது நினைவு கொண்டு வாழ்ந்து வருபவரே உண்மையான சாதகர். அவருடைய புலன்கள் எங்கு சென்ற போதிலும், மனத்தில் எவ்வகை உணர்ச்சிகள் தோன்றியபோதிலும், அவர் தமது ஆன்மிக இயல்பை மறப்பதில்லை. விவாதங்களின் போதுகூட ஆன்ம நாட்டத்தில் லயித்தே அதே சிந்தனைப் போக்கு அவருடைய உள்ளத்தில் வேரூன்றி நிற்கும். அவ்வாறு இருப்பவர்கள், உலக வாழ்வின் கரடுமுரடான அனுபவங்களுக்கு இடையில் கூட சந்தோஷமாகக் காணப்படுகிருர்கள். இக்கருத்தைப் பற்றி கூறுகையில் உபநிடதங்களும் கூட 'ரமந்தி' (மகிழ்ச்சியில் திளைத்திருக்கிருர்கள்) 'க்ரீடந்தி' (விளையாடுகிருர்கள்) என்ற சொற்களையே பயன் படுத்தியிருக்கின்றன. இப்பாடலில் 'க்ரீடந்தி' என்ற சொல்லுக்கு பதிலாக அதே அழுத்தமுள்ள 'துஷ்யந்தி' (மன நிறைவு பெறுகிருர்கள்) என்ற சொல்லை வியாசர் உபயோகிக்கிருர்.

ஆன்ம உணர்வு பெறும் முயற்சியில் விவேகப் பாதையை பின்பற்றுபவர்கள் மகிழ்ச்சியும், மன நிறைவும் பெற்று முன்னேறுகிருர்கள் என்று பகவான் இங்கு குறிப்பிடுகிருர். மகிழ்ச்சியும், மன நிறைவும் ஒருவர் ஆன்மிகத்துறையில் முன்னேறுவதற்கு நிச்சயமாக வழி வகுத்துத் தருகின்றன. அதிருப்தியுடனும், அழுதுவடிந்த முகத்துடனும் முணு முணுத்துக் கொண்டே இருப்பவர்களைக் கண்டவுடனேயே, அவர்கள் அகத் துறையில் முன்னேற்றம் பெருதவர்கள் என்று சொல்லி விடலாம். ஆனந்தக் கடலில் மிதந்து, மோனச் சிரிப்புடன் முன்னேறி, எல்லையில்லா மெய்ப் பொருளை அடைவது அவர்களைப் பொறுத்தவரை மிகவும் கஷ்டமான வேலை.

தங்களுடைய முயற்சியில் முன்னேற்ற நிலையை

அடைந்தபிறகு, அவர்களுடைய இலட்சிய நிறைவுக்கு வழிகாட்டுவது எது? அதற்கு வேண்டிய வலிமை அவர்களுக்கு எப்படி கிடைக்கிறது? அதற்குக் கிருஷ்ணன் பின்கண்ட உத்தரவாதம் அளிக்கிறார்.

தேஷாம் ஸததயுக்தானும் பஜதாம்
ப்ரீதி பூர்வகம்
ததாமி புத்தியோகம் தம்
யேன மாமுபயாந்திதே

*10:10*

அன்புடன் என்னை வழிபட்டு தொடர்ந்து உறுதியாக ஆராதித்து வருபவர்களுக்கு நான் 'புத்தியோகம்' அளிக்கிறேன். அதன் மூலமாக அவர்கள் என்னை வந்தடைகிறார்கள்.

புலன்களுக்குத் தென்படும் பொருள் உலகத்துடனும் சிந்தனை, கருத்து உலகுகளுடனும் ஒன்றுபடாமல் நம்மை உள்ளிழுத்துக்கொள்வதில் ஒரு வெற்றி பெறுவதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. தமது கவனத்தை எல்லாம் கவரக் கூடிய மற்றொன்று தம்மிடம் இருப்பதை அவர் கண்டுபிடித்து விட்டால், முற்கூறிய மற்ற உலகங்களின் இடத்தை அது பிடித்துக் கொள்ளும். இணையிலா இன்பத்தையும் அளிக்கும். மனிதனுடைய உள்ளத்தை முற்றிலும் கவரும் சக்தி இந்த ஆனந்த—பரிபூரண—ஆன்மாவுக்கு இருக்கிறது. ஆகையால் எந்த அளவுக்கு ஒருவர் பேருண்மைப் பொருளுடன் இணைந்து விடுகிறாரோ அந்த அளவுக்கு பொய்மையின் துன்பப் பிடிப்பிலிருந்து அவர் விடுதலை பெறுகிறார். "என்னை அன்புடன் வழிபட்டு பக்தியுடன் ஆராதிப்பவர்களுக்கு" என்று கிருஷ்ணர் ஒரே மூச்சில் கூறுவதன் நோக்கம் இந்த வேதாந்த உண்மையை வலியுறுத்துவதற்காகத்தான்.

இரண்டறக் கலந்து நிற்கும் உள்ளப்பாங்கு தான் அன்பு என்று முன்னரே விளக்கப்பட்டிருக்கிறது. அகந்தையை ஆன்மாவுடன் இணைத்துக் கொள்ளும் அளவுக்கு ஒருவர் மெய்யன்பராகிறார். அதில் உறுதியும் பெற்றுவிட்டால், அதுவரை அவரையும் அறியாது உள்ளத்திலிருந்த இறைவனை பிறகு ஏத்தி ஆராதிக்கும் (பஜ) பக்தராகி விடுகிறார்.

அன்பும், மகிழ்ச்சியும் மனநிறைவும் நிலவும் சூழ்நிலையில், ஆன்மத் தியானத்தில் மூழ்கியிருப்பவர்களுக்கு அதாவது எங்கும் பரந்துள்ள பரம்பொருளுடன் தன்னை உறுதியாக இணைத்துக் கொண்டவர்களுக்கு "என்னை வந்து அடைவதற்கு உகந்த புத்தியோகத்தை அளிக்கிறேன்" என்று பகவான் வாக்களிக்கிறார்.

புத்தியோகம் என்ற சொற்கோவை ஏற்கனவே பயன் படுத்தப்பட்டிருக்கிறது.* ஆன்மாவின் எல்லையிலா இயல்பு பற்றிய தியானத்தின் மூலம் பெறும் சரியான அறிவே 'புத்தியோகம்.' .மேலே கூறியுள்ள முறையில் தீவிர முயற்சி செய்யும் சாதகர், பேருண்மையுடன் அறிவு பூர்வமாகத் தொடர்பு கொள்ளுகிறார். அதை அவர் ஓரளவு புரிந்து கொள்ளுகிறார் என்று இந்த இடத்தில் அர்த்தம் செய்து கொள்ளலாம். எல்லையற்ற மெய்ப்பொருள் ஒருவருடைய அறிவு வலைக்குள் சிக்கிவிடும் என்பது இதன் பொருளல்ல. சாதாரணப் பேச்சு வழக்கில் நாம் உபயோகிக்கும் ஒரு சொல்லைக் கொண்டு விளக்க வேண்டுமானால், வேறுவிதமாக விளக்குவதற்கில்லை. நாம் அறிந்துள்ள மற்றவைகளுக்கு முரண்பட்டு இருக்காத வரையில் நம் அறிவில் பதிவதை நாம் அனுபவிக்க முடியும். அதைப் போலவே உறுதியான ஆன்மத்தியான முதிர்ச்சி பெற்ற சாதகர்கள் மட்டுமே தம்மை மெய்ப்பொருளாக உணர்ந்து அனுபவிக்க முடியும்.

மேலே எடுத்துரைக்கப்பட்ட முறையில் உள்ளத்தை ஒரு முகப் படுத்தி நிலைநாட்டினால், மனச் சலசலப்புக்கள் (விக்ஷேபங்களை) அடங்கி, நல்லறிவை மூடியுள்ள பொய்த்திரை (ஆவரணம்) நீங்கி ஒருவர் சமாதி நிலையை அடைகிறார். புத்தியோகத்தின் நோக்கம் அப்போது நிறைவேறுகிறது.

புத்தியோகத்தினால் வரும் பயன்பற்றி கிருஷ்ணர் கூறுவது பின்வருமாறு

தேஷாமே வானுகம்பார்த்த
மஹமக்ஞானஜம் தம:
நாசாயாம் யாத்மபாவஸ்தோ
ஞானதீபேன பாஸ்வதா

10:11

இதயத்தில் குடி கொண்டுள்ள நான், கருணைகூர்ந்து அவர்களுடைய அறியாமையினால் எழுந்த காரிருளை ஞான ஒளி கொண்டு அகற்றுகிறேன்.

உலகத்திலுள்ள பொருள்கள் சில சமயங்களில் நமது புலன்களுக்குத் தென்படாமல் தப்பி விடுகின்றன. அவை நமக்குத் தெரிவதற்கு ஒரு சாதகமான சூழ்நிலை வேண்டும். சத் அலைகள் குறிப்பிட்ட அளவில் இருந்தால் தான் அவை நம் காதில் விழும். அதே மாதிரி ஒரு பொருள் நம்முடைய கண் எதிரில் இருந்தால் மட்டும் போதாது. ஒளிக்கதிர்கள் அதன் மீது விழவேண்டும். அப்போதுதான் நமது கண்களுக்கு அப்பொருள் இருப்பது தெரியும்.

---

அத்.2செய்யுள் 39. விளக்கம் காண்க.

என் மேஜை மீது இருக்கும் சாவிக்காக இருட்டில் தடவிக் கொண்டே இருக்கிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். ஒருவர் வந்து அப்போது மின்சார சுவிச்சைப் போடுகிறார். இந்த அன்பான செயலினால் அவர் எனக்கு சாவி கிடைக்கும்படி செய்கிறார். ஆனால் ஒளியே சாவியை உண்டாக்கிற்று என்று சொல்வதைப் போன்ற முட்டாள்தனம் வேறில்லை.

இந்த உதாரணத்தைக் கொண்டு நம்மை நாமே பரிசீலனை செய்து கொள்ளுவோம். நிலை சரியாக இல்லாத காரணத்தினால் நம்மிடமுள்ள ஆன்மா திரைக்குப் பின்னால், நாம் அறிந்து கொள்ள முடியாதவாறு, மறைந்து நிற்கிறது. அந்தச் சூழ்நிலையின் இடைஞ்சலை அகற்றிவிட்டால் தானாக அது வெளியாகிறது. ஆன்மாவை அறிய வொட்டாமல் நம் உள்ளத்திலிருந்து இடைஞ்சல் செய்து கொண்டிருக்கும் இச்சூழ்நிலையைத்தான் ‘அறியாமையிலிருந்து எழும் இருள்’ என்ற சொல் குறிப்பிடுகிறது. அறியாமை இருள் கவிந்து கொண்டிருக்கும் அந்த நேரத்திலும் கூட ஆன்மா நம்முள்தான் இருக்கிறது. அதை உணர்ந்து அனுபவிக்க நம்மால் தான் முடியவில்லை. ‘பரம் பொருள் உணர்விலேயே முற்கூறிய வாறு இடைவிடாது லயித்து’விடும் சாதகர்கள் புத்தியோகத்தில் வல்லவராகிறார்கள். தாமும் ஆன்மாவும் ஒன்றுதான் என்ற இறுதி அனுபவத்திற்குத் தகுந்தவர்கள் ஆகிறார்கள்.

அகந்தைமைய ஆனந்தானுபவம் இந்த நிலையில் மிகமிக லேசாக இருந்து கொண்டிருந்த போதிலும் புத்தியோகம் என்பது ஏறக் குறைய சமாதி நிலைதான் என்று சற்றுமுன் குறிப்பிடப்பட்டது. சவிகல்ப சமாதியிலிருந்து, இறைவனே அருள்கூர்ந்து நம்மை எவ்வாறு முழுமையான நிர்விகல்ப சமாதிக்கு உயர்த்துகிறார் என்பதை இச் செய்யுள் விவரிக்கிறது. உண்மையான சுயமுயற்சி செய்து சவிகல்ப சமாதிநிலை அடைவது வரைதான் நம் கையிலிருக்கிறது. புத்தியோகம்கூட மேல் நிலையிலிருந்து தான் வரவேண்டும். அதாவது நாம் மேற்கொள்ளும் முயற்சியினால் மட்டுமே அது வந்துவிடுமென்று சொல்வதற்கில்லை. அகந்தையையும், ஆன்மாவையும் பிரித்து நிற்கும் பனிப்படலம் மறைய, மறைய தானாகவே உண்மை ஓரளவு புலப்படத் தொடங்குவதுதான் புத்தியோகம். அறியாமை என்னும் பனிப்படலம் முற்றிலும் விலகிய பிறகு, இறுதி நிலையில் சுத்த சுயம்பிரகாசமுள்ள ஆன்மாதானே வெளியாகிறது.

என் மேஜை மீது ரேடியம் முகப்புள்ள கடியாரம் ஒன்று இருக்கிறது. இருள் மண்டிக் கிடக்கும் அந்த அறையில் கடியாரத்திற்காக நான் மேஜை மீது தடவிக் கொண்டிருக்கிறேன். அதன் மீது கிடக்கும் காகிதங்கள், பத்திரிக்கைகள் முதலியவற்றை ஒவ்வொன்றாக எடுத்துக் கீழே

விட்டெறிந்து வரும்போது, திடிரென்று இவ்வளவு நேரம் தேடிய கடிகாரத்திலுள்ள எண்கள் மினுமினுக்கின்றன. அவற்றிலுள்ள ரேடியம் ஒளியைக் கொண்டு 'இதோ மேஜை மீது இருக்கிறதே கடியாரம்' என்று கண்டுபிடித்துவிடுகிறேன். சுயம் பிரகாச பேருண்மையும் அப்படித்தான் அறியாமைப் படலங்களுக்குகீழ் மறைந்திருக்கும் போது, பேருண்மைப் பொருள் என்ற ஒன்று இருப்பதாகக் கூட நமக்குத் தெரிவதில்லை. அறியாமை விலகியவுடன் சுயவொளியினுல் தாஞகவே அப்பேருண்மை நம் உணர்வில் தோன்றுகிறது.

ஒளிமிகுந்த ஞான தீபத்தினுல் அறியாமை இருள் அறவே ஒழிந்த பிறகு, ஆன்மா சுயம்பிரகாசமாக ஒளிபரப்பி நிற்பதைக் காண்கிருேம். தனக்கு அடுத்ததுஒன்றுமிலா தனிப்பெரும் பொருளாக எங்கும் விரவியிருக்கும் பேருணர்வாக, பரிபூரணப் பொருளாக, அது திகழ்வது நமக்குத் தெரிகிறது. இவ்வாறு வெளியிட்டுக் கொள்ளும் பொறுப்பை தாமே மேற்கொள்வதாக சாதகர் உள்ளத்தில் குடி கொண்டிருக்கும் ப்ரமாத்மா இங்கு வாக்களிக்கிருர். ஆன்ம உணர்வு அளிக்கும் அன்பு மிக்க இச்செயலே 'கருணைகாரணமாக' செய்வதாகப் பகவான் கூறினுலும், அவர் கருணை காட்டிக் கொள்வது தன்மீதேதான். நடந்து நடந்து நம் கால்கள் தள்ளாடும் போது, சாலை ஓரத்திலுள்ள ஒரு கல் மீது உட்காருகிருேமே, அதுஏன்? நமது கால்கள் மீது 'கருணை கூர்ந்து' அப்படி உட்காருகிருேம். பகவான் கருணை காட்டுவதும் அப்படித்தான்.

தீவர முயற்சியின் மூலமாக சாதகர் அக் கருணையைப் பெருவதற்குத் தேவையான தகுதியைத் தேடிக் கொள்ள வேண்டும். காலையில் எனது அறையின் ஜன்னல் கதவைத் திறக்கும் போது சூரிய வெளிச்சம் தனது 'கருணை காரணமாக' அறையினுள் வந்து ஒளி பரப்புகிறது. ஜன்னலைத் திறந்து விட்டபிறகு ''கருணை காட்ட முடியாது'' என்று சொல்வதற்கு சூரிய ஒளிக்கு உரிமையுமில்லை, சக்தியும் இல்லை. கருணை வெள்ளத்தைத் தடுத்து நிற்கும் ஜன்னற் கதவுகளைத் திறந்து விட்டவுடனேயே அந்த அறை ஒளியினுல் பயன்பெறும் தகுதியைப் பெறுகிறது.

புத்தியோகம் பெறும் தகுதியை ஒரு சாதகர் முற்கூறிய முறையில் தேடிக் கொண்டு தனது முயற்சியையும் விடாப்பிடியாகச் செய்து வந்தால், அஞ்ஞானத் திரையை அகற்றுவதால் அவர் வெற்றி பெறுகிருர். அறிவின் மீது கவிந்துள்ள மேக மூட்டங்களினுல் அவருடைய மனதில் எழும் சலசலப்புக்களே அறியாமைத்திரை. அது விலகியவுடன் சுயப்பிரகாச ஆன்மா தன்னைத் தானே வெளியிட்டுக்

கொள்கிறது. மின்னலை விளக்கொளியின் மூலமாக அறிந்து கொள்ளுகிறோம்?

வாழ்க்கையின் இலட்சியப் பணியில் அதாவது சுய வளர்ச்சி பெற்று, தன் இயல்பை அறிந்து கொள்ளும் பணியில் வெற்றிபெறும் வகையை விளக்கும் பகுதி இத்துடன் முடிவடைகிறது. ஆனால் இவ் விவரங்களை அறிந்து கொள்வதுடன் அர்ஜுனன் திருப்தி அடையவில்லை. அனுபவ பூர்வமாக அதைப்பற்றிய உறுதி தனக்கு ஏற்படுமாறுசெய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறான்.

பகவானுடைய விபூதியையும் யோகத்தையும் அறிந்து கொண்ட அர்ஜுனன் பின்வருமாறு பகவானைக் கேட்டான்.

அர்ஜுன உவாச:

பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான்
புருஷம் சாச்வதம் திவ்ய மாதிதேவமஜம் விபும்
10:12

அர்ஜுனன் சொன்னான்:

"நீ ஒப்பற்ற பிரம்மன், நிகரிலா இருப்பிடம், தூய்மை அளிப்பதில் இணையற்றவன், சாசுவதமானவன், தெய்வீக 'புருஷன்', தேவதேவன், பிறப்பில்லாதவன், எங்கும் நிறைந்தவன்.

ஆஹுஸ்த்வாம்ருஷய: ஸர்வே தேவர்ஷிர் நாரதஸ்ததா
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே
10:13

எல்லா மா முனிவர்களும் உன்னைப்பற்றி இவ்வாறு கூறியிருக்கிறார்கள். தேவரிஷி நாரதர் கூறுகிறார். அசிதர், தேவலர், வியாசர் முதலியவர்களும் அப்படிக் கூறியிருக்கிறார்கள். அதையே இப்போது நீகூட என்னிடம் சொல்லுகிறாய்.

எல்லையற்று எங்கும் பரந்துள்ள பரம்பொருளைப் பற்றிப் பேசுகையில் 'ஒப்பற்ற பிரம்மன், நிகரிலா வீடு, தூய்மை அளிப்பதில் இணையில்லாதவன், நிரந்தர பிரம்மன் சுயம்பிரகாச புருஷன், தேவதேவன், பிறப்பு இல்லாதவன், எங்கும் நிறைந்தவன்' என்று புராதன முனிவர்கள் கூறும் வேதப் பகுதிகள் தனக்குத் தெரியும் என்று அர்ஜுனன் ஒப்புக் கொள்ளுகிறான். அவை பேருண்மைப் பொருளைக் குறிக்கும் பல்வேறு சொற்கள் என்ற அளவுக்கு மட்டுமே கேள்வியின் மூலம் அவன் அறிந்திருந்தான். தம்மைப் பற்றி சொல்லிக் கொள்ளும்போது ஸ்ரீகிருஷ்ணன் அதே சொற்களைப்

பயன்படுத்திக் கொள்ளுவதை பார்த்தவுடன் குந்தியின் மைந்தனுக்கு திகைப்பாக இருக்கிறது. தனது ரதமோட்டும் கிருஷ்ணனே பிரபஞ்ச முழுவதற்கும் மூல காரணம் என்று சொன்னால், அதை எப்படிப் புரிந்து கொள்ளுவது என்று அர்ஜுனனுக்கு விளங்கவில்லை.

உலக வாழ்க்கையை நன்கு அறிந்த அவனுக்கு, மேலும் மேலும் சில விவரங்கள் தேவையாக இருக்கின்றன. அவனைத் திருப்திப்படுத்துவதற்கு போதிய விவரங்களை ஸ்ரீ கிருஷ்ணன் இந்த அத்தியாயத்திலேயே தருகிறார் என்பதைக் காணப் போகிறோம். ஆனால் அது அர்ஜுனனை திருப்திப்படுத்துவதற்கு பதிலாக, அவனுடைய ஆவலை மேலும் தூண்டி செயல்பாட்டுக்கு உரித்தாக அதைக் காட்டும்படி கேட்கும் துடிப்பு ஏற்படும்படி செய்து விடுகிறது. அடுத்த அத்தியாயத்தில் (அதாவது 11—வது அத்தியாயத்தில்) கிருஷ்ணர் அதையும் செய்து காட்டுகிறார்.

நாரதர், அசிதர், தேவலர், வியாசர் முதலிய புராதன முனிவர்களைப் பற்றி உபநிடத கால மாணவர்களுக்கு அவ்வளவு தெரிந்திருக்க இடமில்லை. நமது புராணங்களில் வரும் முனிவர்களின் பெயர்களை வேண்டுமென்றே வியாசர் இங்கு புகுத்துவதாகத் தோன்றுகிறது.

பகவானுடைய இயல்புகளைக் குறிப்பிடும் முற்கூறிய சொற்களை அர்ஜுனன் தெரிந்துகொள்வதுடன் ஏற்கவும் செய்கிறான். மாபெரும் ஆசிரியர்களிடம் அவற்றைக் கற்றிருந்த போதிலும், அவனுக்கு அவை வெறும் வார்த்தைகளாகவே தோன்றுகின்றன. 'அதையே நீ கூட என்னிடம் சொல்லுகிறாயே' என்பதில் அவனுடைய ஆச்சரியம் தெளிவாகத் தெரிகிறது. தனது சமகால நண்பர், தன் முன் நின்று பேசிக் கொண்டிருக்கும் ஒருவர், இவ்வளவு நாட்களாக நகமும், சதையும், போல தன்னுடன் தோழமை கொண்ட ஸ்ரீகிருஷ்ணன்—இன்னும் சொல்லப் போனால் தனது உறவினரும் கூட—எப்படி இவர் எல்லையற்றவராக, ஒப்புயர்வற்றவராக, பிறவி எடுக்காதவராக, எங்கும் நிறைந்தவ்ராக இருக்க முடியும்? குழப்ப மிகுதியினால் அர்ஜுனனுக்குத் தலைசுற்றக் காரணம் இதுதான்.

அவன் தனது ஸ்தூல கண்களைக் கொண்டு கிருஷ்ணரைப் பார்க்கிறான். கிருஷ்ணருடைய ஸ்தூல உருவம் தெரிகிறது. சமூகத்தில் வாழும் ஒரு மனிதன் என்ற முறையில் அவர் கீதையில் பேசவில்லை. தூய ஆன்மிகப் பொருளாகவே தம்மை வெளியிட்டுக் கொள்ளுகிறார். கீதையை போதிக்கும் ஆசான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா—வசுதேவருடைய மகனோ, கோபியரின் காதலனோ அல்லன். ஸ்ரீகிருஷ்ணனைத் தனது நண்பனாக, கோபிகைகளின் காதலனாக, அறிவிலும், ராஜதந்திரத்திலும்

சூரனுக, காண்பதிலேயே கவனம் திரும்பிவிட்டதால், பரமாத்மாவாக அவரை அறிந்து கொள்ள அர்ஜுனனுல் முடிய வில்லை. ஆகையால்தான் ஆச்சரியத்திலும், குழப்பத்திலும் ஆழ்ந்து இவ்வாறு பேசுகிருன்.

ஆனுல் ஒரு சாதகனுக்கு இருக்க வேண்டிய மனப்பாங்கு அர்ஜுனனிடம் இருக்கிறது என்பதைத் தெளிவாக்குவதற்காக பின்கண்ட செய்யுள் வருகிறது.

ஸர்வ மேதத்ருதம் மன்யே யன்மாம் வதஸி கேசவ
ந ஹி தே பகவன் வ்யக்திம் விதுர்தேவா ந தானவா:

*10:14*

கேசவா, இப்போது நீ கூறும் அனைத்தையும் நான் மெய் யென்று நம்புகிறேன். உண்மையில் தேவர்களுக்கோ, தானவர் களுக்கோ உனது உருவாக்கத்தைப் பற்றிய நிலவரம் விளங்க வில்லை.

'நீ சொல்லுகிற எல்லாவற்றையும் உண்மை என்று நான் நம்புகிறேன்' என்று அழுத்திக் கூறுவதன் மூலமாக ஆசானிடத் தில் தனக்கு உள்ள உறுதியான நம்பிக்கையை அர்ஜுனன் வெளி யிடுகிருன். 'கேசவன்' என்ற சொல்லுக்கு 'தன்னிடம் தஞ்ச மடைந்தவர்களுடைய துயர்களைப் போக்குபவன்' என்று பொருள். கிருஷ்ணன் கூறியவற்றை எல்லாம் ஒப்புக்கொண்ட போதிலும், அவற்றின் கருப்பொருளை முழுமையாகப் புரிந்து கொள்ள அர்ஜுனனுல் முடியவில்லை. தன் இதயத்தில் நம்பிக்கை நிரம்பத் ததும்புகிறது. என்ருலும், அறிவில் மட்டும் சலசலப்புத் தோன்றிக் கொண்டே இருக்கிறது என்று அவன் ஒப்புக் கொள்ளுகிருன்.

அறிவுத்தாகம் அர்ஜுனனுடைய வரண்ட ஆளுமையை வாட்டுகிறதென்பது, ''உனது தன்மையை தேவர்களோ, தானவர்களோ முழுமையாகத் தெரிந்து கொள்ளவில்லை'' என்ற சொற்கள் மூலம் தெரிகிறது. தனுவின் புதல்வர்களாகிய தானவர்கள் விண்ணவர்களுக்குப் பகைவர்கள். இங்கு வேள்வி களுக்கு இடையூறுகள் விளைவித்து பொதுவாக மறவாழ்வு நடத்தி வருபவர்கள். தேவர்களை நுணுக்க அறிவும், உணர்ச்சி வேகமும் மிக்கவர்களாக புராணங்கள் சித்திரிக்கின்றன. எதை யும் அவர்கள் மிக சுலபமாகப் புரிந்து கொள்ளும் சக்தி பெற்றவர் கள்.

அகநோக்காகப் பார்க்கும் போது, நம்மிலுள்ள நேர்மையான உன்னத இயல்புகளை தேவர்கள் என்றும், எதிர் மறைப் போக்குகளை தானவர்கள் என்றும கொள்ள இடமிருக்கி

றது. இவை இரண்டுமே ஆன்மாவை அறுதியிட்டுக் காட்ட முடியாது. நமது இயல்புச் சிறப்புகளுக்குள் பேருண்மைப் பொருளை அடைத்து விட முடியாது. நமது தீய சக்திகளை எதிர்த்து முறியடிக்கும் ஒன்றுகவாவது அது நம் எதிரில் வந்து நிற்குமோ என்றுல், அதுவும் முடியாது. ஒருவரை சந்திப்பதற்கு இரண்டு வழிகள்தான் இருக்கின்றன. ஒரு நண்பன் என்ற முறையில் அவரை சந்திக்கலாம் அல்லது எதிரி என்ற முறையில் சந்திக்கலாம். நமக்குப் பிடித்தது அல்லது நாம் வெறுப்பது என்ற இரண்டில் ஏதோ ஒரு முறையைத்தான் கையாளமுடியும். ஆனுல் ஆன்மாவின் மொத்த பரிமாணத்தை (வியக்தியை) இந்த இரண்டு முறைகளிலும் தெரிந்து கொள்ள முடியாது. தனி மனிதனுகப் பார்த்தாலும் (யோகம்) அல்லது பிரபஞ்ச மட்டத்தில் பார்த்தாலும் (விபூதி), அது அறிவுக்கு அகப்படாதது. ஆன்மா அறியும் பொருள்; அறியப்படுவது அல்ல.

பேருண்மைப் பொருளை அறிந்து கொள்ளவே முடியாது என்றுல் அதை விளக்கும்படி அர்ஜுனன் ஏன் கேட்கிறுன்? மற்றவர்களுடைய அறிவுக்கு எட்டாத ஒன்றைக்கூட விளக்கி வைக்கும் சிறப்பு கிருஷ்ணனுக்கு மட்டும் எப்படி இருக்கிறது?

ஸ்வயமேவாத் மனுத்மானம் வேத்த த்வம் புருஷோத்தம
பூதபாவன பூதேச தேவதேவ ஜகத்பதே

10:15

உன்னை நீயே உன்னுல் அறிகிறுய், புருஷோத்தமா— உயிரினங்களின் ஊற்றுக் காலாகவும் அவற்றை ஆளும் மாமன்னனுகவும், தேவ தேவனுகவும், உலகாதிபதியாகவும் திகழ்பவனே!

தேவலோகத்திலும், மற்ற உலகங்களில் உள்ளபவர்களுக்கும் கூடத் தெரியாத பரம்பொருளை கிருஷ்ணன் எப்படி விளக்க முடியும் என்பதை இச் சுலோகம் எடுத்துக் காட்டுகிறது. ஆன்மாவை நமது ஞானேந்திரியங்களினுல், ஒரு வெளிப் பொருளாக, அறிய முடியாது. நமது மிக உயர்ந்த அல்லது மிகத் தாழ்ந்த இயல்புகளைக் கொண்டு ஒரு அகப் பொருளாகவும் அதை அறிவதற்கில்லை. ஆன்மாவே பேருணர்வு. அறிவாகத் திகழ்வதும் அதுதான். அறிவை 'அறிந்து' கொள்வதற்கு அறிவு பயன்படாது. எனவே அர்ஜுனன் உன்னை நீயே உன்னுல் அறிகிறுய் என்று சொல்லுகிறுன்.

ஒவ்வொருவரிலும் உள்ள உயிர்ப் பொறியை 'புருஷன்' என்று சாங்கிய தத்துவம் கூறுகிறது. அப்பொறியின் முன்னிலையில்தான் 'பிரகிருதி'யினுலான (பூத) பொருளுறைகள் அசைவு பெறுகின்றன. ஸ்ரீகிருஷ்ணனை 'புருஷ உத்தமா' என்று அழைக்கும்போது அவர் ஆத்மாக்களுக்கெல்லாம் ஆத்மா—

பரமாத்மா —ஒப்பும் உயர்வுமில்லாத தனிப்பெரும் ஒருமை என்பதைக் கருத்தில் கொண்டு அவ்வாறு பேசுகிறுன். 'புருஷோத்தமன்' என்ற சொல்லை சில இடங்களில் 'மாந்தரில் உத்தமமானவன்' என்ற பொருளிலும் வேறு சில இடங்களில் 'பரமாத்மா' என்ற பொருளிலும் கீதை உபயோகிக்கிறது.

கிருஷ்ணனை சுத்த சுயம்பிரகாச பிரம்மமாக உணர்ந்து கொண்டு 'உயிரினங்களின் ஊற்றுக்கால்; அவற்றை ஆளும் தலைவர், தேவ தேவன், உலகை ஆளும் அதிபதி' என்று அர்ஜுனன் அவரைத் துதிக்கிறுன். ஒரு பண்டத்தின் சாராம்சப் பொருள் அதன் இயல்பை ஆள்கிறது; இயல்புக்கு ஆதாரமாக இருக்கிறது. எல்லா பொன் ஆபரணங்களின் மதிப்பையும் அவற்றின் சாராம்சப் பொருளாகிய தங்கமே நிர்ணயிக்கிறது அல்லவா? நமது வாழ்க்கையின் மெய்யுணர்வாகத் திகழும் ஆன்மாவின் ஆளும் சக்தி அதைவிட உயர்ந்தது. அம் மெய்யுணர்வு இல்லையேல் நம்மால் எதையும் அறிந்து கொள்ள முடியாது. எதுவும் செய்ய முடியாது. ஒரு பொருளைப் பற்றி நம் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளுக்கும், எண்ணங்களுக்கும் அவ்வுணர்வு 'ஒளியூட்டுவதால்தான்' நாம் அப்பொருளை அறிகிறேம்.

இவ்வாறு தனது உள்ளத்தில் எழுந்த வியப்பு, மரியாதை, பக்தி ஆகியவற்றைக் காட்டும் முன்னுரையுடன் அர்ஜுனன் தன் அறிவுத் தாகத்தை பகவானிடம் நேரடியாகத் தெரிவிக்கிறுன்.

வக்து மர்ஹஸ்யசேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய:
யாபிர் விபூதி பிர்லோகானிமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி
10:16

இவ்வுலகங்களை எல்லாம் உனது தெய்வமாட்சியினுல் நிரப்பித் திகழ்கிறுயே, அந்த மகிமையை முழுமையாக எனக்கு எடுத்துரைக்க வேண்டும்.

பகவான் இப் பிரபஞ்சத்தின் சாராம்சப் பொருள் என்றும் அவரின்றி இப்பன்மைத் தோற்ற உலகமும் இல்லை என்றும் அரசகுமாரனுக்கு நிச்சயமாகத் தெரிகிறது. அதே சமயம் அறிவு, மனம், உடல் ஆகியவற்றின் மூலம் பார்க்கும்போது இவ்வுலகம் அவனுக்கு வெறும் கருத்துக்கள், உணர்ச்சிகள், பொருள்களினுலான உலகமாகத் தோன்றுகிறதே தவிர, தெய்வீக சைதன்யம் தெரியவில்லை.

திருவிழாக் காலங்களில் திரும்பிய இடமெல்லாம் தீப அலங்காரங்கள் தோன்றுகின்றன. பல்வேறு வண்ணங்களில் மின்சார விளக்குகள் கொத்துக்கொத்தாய் தொங்குகின்றன. வகைவகை

யாக அவற்றை அலங்கரித்திருப்பது நமக்குள் அளவற்ற வியப்பைத் தோற்றுவிக்கிறது. இவ்வளவு ஒளி ஜாலங்களுக்கும் காரணமாக இருப்பது மாற்றமில்லா மின்சாரந்தான் என்று சொன்னால், மின்சாரத்தைப் பற்றி எதுவும் அறியாதவன் அதை நம்புவது கஷ்டம். 'அதெப்படி ஒரே மின்சாரமாக இருக்க முடியும்? ஒவ்வொரு விளக்காகக் கழற்றிக்காட்டு; பார்த்துவிட்டு ஒப்புக் கொள்ளுகிறேன்' என்று கேட்டால்கூட ஆச்சரியப்படுவ தற்கில்லை. ''பிரபஞ்ச மனிதன்'' (ஈசுவரன்) என்ற முறையிலே, பகவான், படைப்புப் பொருள்களுக்கு அப்பாற்பட்டு உயர்ந்து நிற்பதுடன் (விபூதி) அவற்றில் எல்லாம் ஊடுருவியும் விளங்கு கிறார். (யோகம்). இதை நம்பிக்கை மிக்க இதயத்தினால் உணர முடியுமே தவிர, கூரிய அறிவினால்கூட தெரிந்து கொள்ள முடி யாது. எனவே 'இவ்வுலகங்களை எல்லாம் உனது பிரபஞ்ச மாட்சி யினால் விபூதியினால் நிரப்பித் திகழ்கிறாயே, அந்த மகிமையை விவரமாக எனக்குச் சொல்லு என்று அர்ஜுனன் கேட்கிறான்.

அர்ஜுனன் ஒரு செயல் வீரன். உலக நிலவரத்திற்கு ஏற்ற வாறு நடந்து கொள்ளும் திறமையுள்ளவன். தன் அறிவுக்கு வேண்டிய அளவு புள்ளி விவரங்களைத் திரட்டிக் கொள்ளவும் அவற்றைப் பற்றி சிந்தித்து, வகைபிரித்து, அப் பரம்பொருளை அறிந்து கொள்ளவும் விரும்புகிறான்.

அப்படியானால் இக் கோரிக்கை வெறும் அறிவிலிருந்து எழுவதுதானா? அவன் மேலும் கூறுவதைக் கேட்கலாம்.

கதம் வித்யாமஹம் யோகிம்ஸ்த்வாம் ஸதா பரிசிந்தயன்
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோஸி பகவன்மயா.

10:17

ஒப்பற்ற யோகியாய் திகழ்பவனே! இடையறாது எவ்வகை யில் தியானித்தால் நான் உன்னை அறிய முடியும்? நீ எந்தப் பொருள்களில் எந்த முறையில் தியானிக்கப்பட வேண்டும், பரமனே?

எவ்வாறு தியானம் செய்தால் நான் உன்னை அறியமுடியும்? இறைவனுடன் இரண்டறக் கலந்து தியானத்தில் ஆழ்ந்திருக்கும் போது, அப் பரம்பொருளை தனது சொந்த அனுபவத்தில் உணர்ந்து தெரிந்து கொள்ளுவதே ஒரு சாதகருடைய இலட்சி யம். ஆழ்ந்த தியானத்திற்கு எங்கோ தொலைவிலுள்ள குகை களையோ, நதி தீரங்களையோ தேடிப்பிடித்து தன்னந்தனியாக உட்கார்ந்து விடவேண்டும் என்று கீதை எந்த இடத்திலும் சொல்லவில்லை. கடமையை செய்யத் தவறக் கூடாது என்றும், உழைத்துப் பாடுபட்டு உயர் வாழ்வு நடத்த வேண்டுமென்றும், இவ்வுலக வாழ்வின் மூலமாகவே இறை அனுபவம் பெற வேண்டு

மென்றும் தான் கிருஷ்ணன் குரல் கொடுத்து வந்திருக்கிறார். அக்கால உலகம் மிகப் பெரிய நெருக்கடியில் இருந்தபோது, மகாபாரதப் போர்க் களத்தில் தான் புனித கீதா சாஸ்திரத்தை அவர் அர்ஜுனனுக்கு உபதேசித்தார் என்பதை மறந்துவிடக் கூடாது.

நல்ல செயலே கீதையின் மதம். அதை முற்றிலும் ஏற்கும் அளவுக்கு அர்ஜுனன் மனம் மாறியிருக்கிறான். 'ஒப்பற்ற யோகியாய் திகழ்பவனே!' என்று கிருஷ்ணனை விளித்துப் பேசுகிறான். சுழித்துச் செல்லும் வாழ்க்கை வெள்ளத்தில் அனுயாசமாக மூழ்கி எழுந்து வாழ்ந்து வந்த போதிலும், ஆன்மீகப் பேருணர்விலிருந்து ஒரு நொடி நேரம்கூட விலகாத மாபெரும் கர்மயோகியை 'மகா யோகியே' என்று அழைக்காமல் வேறு என்ன பெயர் சொல்லி அழைக்க முடியும்?

பிரபஞ்சமெல்லாம் நிறைந்திருக்கும் தமது இயல்பை 'முழுமையாக' விளக்கும்படி—மிச்சம் மீதி வைக்காமல் எல்லாவற்றையும் சொல்லும்படி—தான் கேட்பதன் காரணத்தையும் அர்ஜுனன் இங்கு தெளிவாகக் கூறுகிறான். 'என்னென்ன உருவங்களில் நான் உன்னை தியானிக்க வேண்டும்?' என்ற கேள்வியின் நோக்கம் அதைத் தெளிவாக்குவதுதான். வாழ்க்கையை நடத்திக் கொண்டும், வாழ்க்கைப் பிரச்னைகளை சமாளித்துக் கொண்டும் இருக்கும் ஒருவன், எல்லா இடங்களிலும் தெய்வ சாந்நித்யம் இருப்பதைக் காண வேண்டுமானால், அதை எப்பொருள்களில் நாடுவது? என்று தெரிந்து கொள்ள விரும்புகிறான் அர்ஜுனன்.

தனது கேள்வியை மேலும் திட்டவட்டமாகக் கேட்க விரும்பிய அர்ஜுனன், அதையே வேறுவிதமாகக் கேட்கிறான். கிருஷ்ணனுடைய பதில் சற்று நீளமாக இருந்தாலும் அதனால் தான் அலுப்பு அடையப் போவதில்லை என்றும், விளக்கத்தை முழுமையாகப் புரிந்து கொள்ள விரும்புவதாகவும் அவன் கூறுகிறான்.

விஸ்தரேணாத்மனோ யோகம் விபூதிம் ச ஜனார்தன
பூய: கதய த்ருப்திர்ஹி ச்ருண்வதோ நாஸ்தி மேம்ருதம்
*10:18*

ஜனார்த்தனா உனது யோக சக்தியைப் பற்றியும், உலகெலாம் விரவி நிற்கும் தன்மை பற்றியும் எனக்கு மீண்டும் விவரமாகச் சொல்லு. உனது விளக்கம் (உயிரூட்டம் அளிக்கின்ற) அமுதம் போல் கேட்கத் தெவிட்டாததாக இருக்கிறது.

பொதுவாக எந்தத் துறையிலும் ஒரு ஆழ்ந்த ஈடுபாடு இருந்

,தால்தான் முழுமையான அறிவு பெற்று பயன்பெற முடியும். குறிப்பாக தத்துவத் துறையில் இந்த ஆர்வம் மிக அவசியம். ஆழ்ந்த அறிவு பெற வேண்டுமென்ற வேட்கை இல்லை என்றால் எவ்வகை அறிவுமே பயனளிக்காது. அதிலும் சுய வளர்ச்சிக்கு வழிகாட்டும் அகத்துறை விஞ்ஞானத்தில், அது மிக மிக முக்கிய மானது. ஆன்மீக நூல்களை கரைத்துக் குடித்திருந்தால் மட்டும் போதாது. வாழ்க்கையில் அதை உறுதியாகக் கடைப்பிடிக்கவும் வேண்டும். எனவே மேலும் கேட்டு விவரங்களை முழுமையாகப் பதித்துக் கொள்ளும் உறுதியான ஆவலும் (ஜிக்ஞாஸா) வேதாந்தப் பயிற்சிக்கு அத்தியாவசியத் தேவை. அவ்வாறு இருந் தால்தான் ஆன்மீகத் துறையில் முன்னேற முடியும்.

இந்த ஆவல் அர்ஜுனனிடம் பெரும் அளவுக்கு இருக்கிறது. வெள்ளமாகப் பெருகிவரும் பகவானுடைய அமுத மொழியை 'எவ்வளவு கேட்டாலும் எனக்கு திருப்தி ஏற்படாது போலிருக்கி றது' என்று அவன் ஒப்புக் கொள்ளுகிறான். சத்சங்கத்தினால் அதில் கலந்து பேசும் எல்லோருக்குமே மன நிறைவு உண்டா கிறது என்பது உண்மைதான். அறிவும் அனுபவமும் பெற்ற குரு பேருண்மைப் பொருளை விளக்கும் போது, அதைக் கேட்கும் மாணவர்களுக்கு ஆனந்தமாக இருக்கிறது. ஒருவகை தாற்காலிக அமைதியும் தோன்றுகிறது. அவருடைய பேச்சைக் கேட்டுவிட்டு வீடு திரும்பியவுடன் மாணவர்கள் உள்ளத்தில் தோன்றிய அமைதியும் ஆனந்தமும் மறைந்து போகின்றன. மன அறிவுக் கருவிகளினால் பற்றிக் கொள்ள முடியாத பேருண்மை பிரதி பலிப்பு அவர்களுடைய உள்ளத்தில் கற்பூரத்தைப்போல் கரைந்து விடுவதில் வியப்பில்லை.

அதிலிருந்து சத்சங்கத்தினால் பயனே இல்லை என்று முடிவு கட்டிவிடக் கூடாது. அதன் இன்பத்தைப் பருகத் தொடங்கியவர்கள், அதனால் மயங்கி, மேலும் மேலும் அதை நாடுகிறார்கள் அர்ஜுனன் அந்த வகையைச் சேர்ந்தவன். விளக்கங்கள் கேட்பதும், கருத்துப் பரிமாறிக் கொள்வதுமே ஒரு முடிவாகிவிடாது. அது ஆரம்பந்தான். ஆனால் அது ஒரு நல்ல ஆரம்பம் என்பதில் சந்தேகமில்லை. கடவுள், ஆன்மா என்ற பேச்சைக் கேட்டாலே காதைப் பொத்திக் கொண்டு ஓட்டம் பிடிக்கும் பெரும்பாலானவர்களைவிட, அதைக் கேட்பதிலாவது அக்கறை காட்டும் சிலர் எவ்வளவா மேலானவர்கள் அல்லவா? ஆன்ம விளக்கத்தை மேலும் கேட்க வேண்டுமென்ற அர்ஜுன னுடைய ஆவல் இந்தச் செய்யுளிலிருந்து தெளிவாகத் தெரி கிறது.

ஆயிரம் தடவை திருப்பித் திருப்பிக் கேட்டாலும் அலுத்துக் கொள்ளாமல் பதிலளிக்கும் கிருஷ்ணன், தாயைப் போன்ற பொறுமையுடன் அர்ஜுனனுக்கு பதிலளிக்கிறார்.

ஸ்ரீ பகவானுவாச—

ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்மவிபூதய:
ப்ராதான்யத: குருச்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்யமே
10:19

பகவான் கூறினர்:

ஐயோ பாவம்! எங்கும் விரவியுள்ள எனது தெய்வீக மகிமைகளுள் முக்கியமானவற்றை உனக்கு அறிவிக்கிறேன். குருவம்சத்தில் சிறந்தவனே, நான் விரிந்து பரந்துள்ளது பற்றிய எல்லா விவரங்களையும் கூற வேண்டுமானல், அதற்கு முடிவே இருக்காது.

அர்ஜுனனுடைய கோரிக்கைக்கு கிருஷ்ணன் அளிக்கும் விரிவான பதில்தான் இந்த அத்தியாயத்தின் பெரும்பகுதியாக அமைந்திருக்கிறது. தனிப்பட்ட மனிதர்களிலும், பொருள்களிலும் அவ்விரண்டின் சேர்க்கைகளிலும் தமது தெய்வீக அம்சம் திட்டவட்டமாக இருப்பதை அவர் விளக்குகிறார். எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கும் தமது (யோக) தன்மையையும், அவைகளுக்கு அப்பாற்பட்டு நிற்கும் தமது (விபூதி) நிலையையும் விளக்கும்போது, இரண்டு விஷயங்களை ஒரே சமயத்தில் நுணுக்கமாக இணைத்துக் கூறி வருகிறார். 1. தனிப்பட்ட பொருள்களில் தாம் இருப்பது. 2. தாம் இல்லாவிட்டால் சமூகமாக உள்ள எந்த இணைப்பும் ஒருங்கிணைந்து திகழ முடியாது என்பது—இந்த இரு உண்மைகளையும் அவர் சேர்த்தே பேசிக் கொண்டு வருகிறார் என்பதை நினைவு வைத்துக் கொண்டு, அடுத்து வரும் செய்யுட்களைப் படிக்க வேண்டும்.

இச் செய்யுள் 'ஐயோ, பாவம்' (ஹந்த) என்று (இரக்கத்தைக் குறிக்கும் விளியுடன்) தொடங்குவது பகவானுடைய அன்பையும், அனுதாபத்தையும் தெளிவாக்குகிறது. தனக்கு மிக நெருங்கியிருக்கும் மெய்ப்பொருளை தன்னிடத்தே உணரச் சக்தியற்றவனுக இருப்பதுபோல் தோன்றுகிறதே என்ற கவலை கிருஷ்ணருக்கு இருப்பதை அது வெளியாக்குகிறது. 'ஹந்த குரு சிரேஷ்ட' என்பதை 'ஓ குரு வம்சத்தில் உயர்ந்தவனே' என்று மொழி பெயர்க்கும்போது, அது மூலத்திலுள்ள முழு உணர்ச்சியையும் கொண்டு வருவதாகத் தோன்றவில்லை. 'ஹந்த' என்பது 'அந்தோ!' 'ஐயோ பாவம்' என்பதைப் போன்று இரக்கத்தைக் காட்டும் உணர்ச்சிச் சொல்.

பரம்பொருள் இப் பன்மைமிக்க உலகில் ஏற்கும் உருவாக்கங்கள் எண்ணில் அடங்காதவை. மொத்த மனமாகவோ (ஈசுவரன்) அல்லது ஒவ்வொருவரிடமும் இயங்கும் தனிமனமாகவோ (ஜீவன்) உலகெங்கும் அது நிறைந்திருக்கிறது.

கிருஷ்ண பகவான் தமது எல்லையற்ற கருணை காரணமாக, எவரும் செய்ய முடியாத ஒன்றை செய்து காட்ட முன்வருகிறார். முழுமையாகத் தம்மை சரணடைந்த அர்ஜுனனிடம் ''எனது பரப்புக்கு எல்லையே இல்லை'' என்று கூறியபோதிலும் அதை விளக்க முன்வருகிறார். சொல்லச் சொல்ல அது பெருகிக் கொண்டே போகுமாதலால் ''முக்கியமானதை மட்டும் குறிப் பிட்டுக் காட்ட''த் தொடங்குகிறார்.

சூரிய ஒளி எல்லாப் பொருள்கள் மீதும் விழுந்து அவற்றிற்கு ஒளியூட்டுகிறது. அதற்கு கல்லும் ஒன்றுதான் கண்ணாடியும் ஒன்றுதான். ஆனால் பளபளவென்று இருக்கும் கண்ணாடியில் அது நன்றாகத் தெரிகிறது. மெய்ப்பொருளின் பிரதிபலிப்பு அப்படி தெளிவாகவும், சுலபமாகவும் தெரியும் உதாரணங்களை தேர்ந் தெடுத்துத் தருவதாக கிருஷ்ணன் வாக்களிக்கிறார்.

ஆனால் அர்ஜுனன் கேட்ட பிரச்னையை விவாதிப்பதற்கு முன், அடிப்படை உண்மையை அவன் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக, முதலில் அதை எடுத்துரைக்கிறார்.

அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசயஸ்தித:
அஹமாதிஸ்ச மத்யம் ச பூதானமந்த ஏவ ச

10:20

குடாகேசா, எல்லோர் இதயத்திலும் குடி கொண்டிருக்கும் ஆன்மா நானே. எல்லாவற்றினுடைய ஆரம்பமும், மத்தியும், இறுதியும் நான்தான்.

எல்லோருடைய இதயத்திலும் குடி கொண்டிருக்கும் ஆன்மிகப் பொருள் நானே—கிருஷ்ணன் தமது பேருரைக்கு முன் ஒரு பொதுக் கருத்தாக இதைத் தெரிவிக்கிறார். விஞ்ஞான ரீதி யாக சிந்திக்கத் தெரிந்த ஒரு ஆராய்ச்சியாளர் பேசத் தொடங்கும்போது, மொத்தக் கருத்தின் சுருக்கத்தை முதன் முதலில் நம்முன் வைத்து விடுவார். பிறகு அதை பகுதி பகுதியாக விண்டு காட்டி தர்க்க ரீதியாக அவற்றை நிரூபித்துக் கொண்டு போவார். முடிவுரையில் தாம் கூறிய பொது அறிவிப்பு இவ்வகையில் சரியானதுதான் என்று உறுதிப்படுத்தி பிரசங்கத்தை முடிப் பார். கிருஷ்ணரும் அவ்வாறு ஒரு பொது அறிவிப்புடன் தொடங்கி, இறுதியில் 'இப் பிரபஞ்சம் முழுவதையும் எனது சக்தி யின் ஒரு பகுதியினால் தாங்கிக் காத்து வருகிறேன்' என்று முடிக்கிறார்.

செய்யுளின் முதற் பகுதியில் 'எல்லாவற்றிலும் உள்ள ஆன்மா நானே என்பதை (அவைகளின்) ஆரம்பம்'. நடு, முடிவு

ஆகியவை நான்தான்' என்ற சொற்களின் மூலம் மேலும் விளக்கி இருக்கிறார். இந்த பன்மைக் காட்சி உலகத்தை நமது மனம் படைக்கிறது. பல்வேறு பொருள்களையும், உயிரினங்களையும் படைப்பது அதுதான். எல்லையில்லா வெளிப் பிரபஞ்சத்தை எல்லைக்கு உட்பட்டதாகக் காட்டுகிறது. கிருஷ்ணன் கூறுவது புற உலகுக்கு மட்டுமின்றி அக உலகிற்கும் பொருந்தும். ஒவ்வொரு கருத்தும் பிரபஞ்சப் பேருணர்விலிருந்து எழுகிறது. பிறகு அது மறையும் போது தனது பிறப்பிடமான பேருணர்வுடன் கலந்து விடுகிறது. கடைசியில் மிஞ்சி நிற்பது பேருணர்வு ஒன்றுதான். அது இல்லாத இடத்தில் கருத்துக்களோ, சிந்தனைகளோ தோன்ற இடமில்லை. இதை இன்னும் அழுத்தமாக இதே அத்தியாயத்தின் வேறு ஒரு செய்யுளிலும் (செய்யுள் 32) பகவான் எடுத்துரைக்கிறார். இவ்வுண்மையை அவர் அலுப்பு சலிப்பின்றி மீண்டும் மீண்டும் வற்புறுத்துவது குறிப்பிடத்தக்கது.

உலக வாழ்க்கையில் நமது புலனறிவிற்குத் தென்படும் ஆயிரமாயிரம் பொருள்களுக்கு இடையில் இருந்து கொண்டு எந்த உருவில் நாம் தியானம் செய்ய வேண்டும் என்பதை பின் கண்ட செய்யுட்களில் கிருஷ்ணர் விரிவாகக் கூறுகிறார்.

ஆதித்யானாமஹம் விஷ்ணுர்ஜ்யோதிஷாம் ரவிரம்சுமான்
மரீசிர் மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம் சசீ

10:21

(பன்னிரண்டு) ஆதித்தர்களிலே நான் விஷ்ணு; ஒளி அளிப்பவற்றில் பிரகாசமிக்க சூரியன் நான். மருத்துக்களிலே நான் மரீசி, நட்சத்திரங்களிலே நான் சந்திரன். ஆதித்தர்களிலே நான் விஷ்ணு—அதிதியின் புதல்வர்கள் ஆதித்தர்கள். அவர்கள் பன்னிரண்டு பேர் என்று மரபு கூறுகிறது. வேத நூல்களில் சில இடங்களில் ஆதித்தர்கள் ஐந்து பேர் என்றும், வேறு சில இடங்களில் ஆறு பேர் என்றும் குறிப்பிடப்பட்டிருந்த போதிலும், ஒரு ஆண்டிலுள்ள பன்னிரண்டு மாதங்களுக்கும் பன்னிரண்டு ஆதித்தர்கள் இருக்கிறார்கள் என்று பழைய மரபு கூறுகிறது. பன்னிரண்டு ஆதித்தர்களில் விஷ்ணு ஒருவர் என்றும் அவர் ஆதித்தர்களில் தலையாயவர் என்றும் விஷ்ணு புராணத்தில் காணப்படுகிறது.

ஒளி அளிப்பவைகளிலே நான் சூரியன்—எல்லா சக்தியும் சூரியனிடமிருந்தே வருகிறது என்று இன்றைய பௌதிக இயல் கூறுகிறது. எனவே பகவான் கூறுவதன் பொருள் மிகத் தெளிவாக இருக்கிறது. சக்தி எந்தெந்த இடத்தில் உருவில் வெளியாகிறதோ, அதற்கு எல்லாம் மூலகாரணமாக இருப்பது ஆன்மிகப் பொருள்தான்.

மருத்துகளிலே நான் மரீசி—ருத்ரருடைய புதல்வர்கள் மருத்துக்கள் என்றும் அவர்களுடைய தலைவன் மரீசி என்றும் ரிக் வேதம் கூறுகிறது. புயல், காற்று, மாருதம் முதலியவைகளுக்கு மருத்துக்களே அதிபதிகள்.

நட்சத்திரங்களிலே நான் சந்திரன்—இந்திய வான சாத்திரத்தில், சந்திரன் செல்லும் வழியிலுள்ள விண்மீன்களை மட்டுமே நட்சத்திரங்கள் என்று குறிப்பிடுகிறார்கள். இந்த அர்த்தத்தில் பார்த்தால், தனது பாதையிலுள்ள எல்லா நட்சத்திரங்களையும் விட நிலா ஒளி மிகுந்து திகழ்வது போல, பிரபஞ்ச இயக்கம் முழுவதையும் விட இறைவனுடைய மாண்பு மேலோங்கி நிற்கிறது என்ற கருத்துத் தோன்றுகிறது. நிலவின் பாதை பகவானுடைய மகிமையை எடுத்துக்காட்டும் ஒளிவட்டம் என்ற கருத்தும் எழுகிறது.

நட்சத்திரம் என்ற சொல்லை சாதாரண அன்றாட வழக்கில் உபயோகித்தால்கூட நட்சத்திரங்களில் நான் சந்திரன்'' என்பது பொருட் செறிவுடன் விளங்குகிறது. சிலர் மேலும் ஒருபடி சென்று, இரவில் தோன்றும் எல்லா வகை ஒளிகளையும் 'நட்சத்திரம்' என்ற சொல் குறிப்பிடுவதாக எழுதுகிறார்கள். அப்படியும் வைத்துக் கொள்ளலாம். சிந்திப்பதற்கு மேலும் பல கருத்துக்களை அது நம் உள்ளத்தில் தூண்டுகிறது. இரவு கால ஒளி உலகத்தில் சந்திரன் மாண்புமிக்கதாகவும், மனத்திற்கு இன்பமும் இதமும் அளிப்பதாகவும் இருப்பதுபோல ஆன்ம தத்துவத்தில் மகிமையும், இனிமையும் நிறைந்திருக்கிறது.

ஞான மார்க்கத்தில் ஈடுபட்டவர்களுடைய தியானத்திற்கும், ஆழ்ந்த சிந்தனைக்கும் எழுபத்தைந்து இனங்களை இந்த 22 செய்யுட்களில் கிருஷ்ணர் தேர்ந்தெடுத்துக் கொடுக்கிறார். உள்ள ஒருமைப்பாட்டுக்கும், உறுதியான ஒருமுகத் தியானத்திற்கும் இவற்றை சாதகர்கள் 75 தனித்தனி பயிற்சி பாடங்களாக வைத்துக் கொள்ளலாம்.

வேதானாம் ஸாம வேதோஸ்மி தேவானாமஸ்மி வாஸவ:
இந்த்ரியாணாம் மனஸ்சாஸ்மி பூதானாமஸ்மி சேதனா

*10:22*

வேதங்களிலே நான் சாம வேதம். தேவர்களில் நான் வாசவன். புலன்களில் நான் மனம். ஜீவராசிகளில் நான் அறிவு.

வேதங்களில் நான் சாமவேதம்—நான்கு வேதங்களில் மிக முக்கியமானதாகக் கருதப்படும் ரிக் வேதத்தின் சாராம்

சம் சாம வேதத்தில் இருக்கிறது. சாம வேதத்தின் பெருமையை சாந்தோக்கிய உபநிடதம் மிக அழகாக எடுத்துரைக்கிறது. மேலும், சாம வேதத்திலும் இசை இன்பமும் கலந்திருக்கிறது. ஸாமன்களை பல்வேறு மெட்டுகளில் பாட வேண்டும். நமது முன்னோர்கள் இசைக் கலையை எவ்வளவு உயர்ந்த மட்டத்திற்கு வளர்த்திருந்தார்கள் என்பதற்கு சாம வேதத்திலுள்ள சிக்கலான ஸ்வரப் பிரயோகங்கள் நல்ல சான்று. ''ரிக்வேத மந்திரங்கள் ஸாமன்களில் இசை இன்பம் தோன்ற ஒலிப்பது போல கீதத்துடன் கலந்து வரும் எல்லையற்ற மெய்ப்பொருளாக நான் விளங்குகிறேன்'' என்று கிருஷ்ணர் கூறுவதைப் போல இருக்கிறது.

தேவர்களில் நான் வாசவன்—இந்திரனுக்கு மற்றொரு பெயர் வாசவன். விண்ணுலகத்தில் உள்ள தேவர்களுக்கு அரசன். இந்து தத்துவத்தின்படி விண்ணுலகில் எல்லோருக்கும் மிக உயர்ந்த, இன்ப வாழ்வு கிட்டுகிறது. ஆனால் அங்குள்ளவர்களிடையில் கூட வசதி மிக்கவர்கள், வசதி குறைந்தவர்கள் என்ற பாகுபாடுகள் இருக்கலாமென்று நினைத்துப் பார்க்கும் போது புண்ணியச் செயல்கள் புரிந்தவர்கள் அவற்றின் விளைவாக விண்ணுலகில் உயர்தர இன்பங்களைப் பெற்று பரிபூரண மனநிறைவு பெறுகிறார்கள். அவர்களுடைய அரசனுக்கு அவர்களைக் காட்டிலும் அதிக அந்தஸ்தும், சுகபோக வாழ்க்கையும் உண்டு என்பதில் சந்தேகமில்லை. தேவர்களிடையில் இந்திரன் எப்படியோ, அப்படித்தான் ஆன்மா பிரபஞ்சத்தை எல்லாம் ஆட்சி புரிகிறது. எல்லோருடைய வாழ்வுத்தரமும் உயர்ந்து விளங்கும் வகையில் வாழ்க்கையை அமைத்துக் கொடுக்கிறது.

புலன்களில் நான் மனம்—இந்திரியங்களில் மனமாக இருப்பது பரம்பொருள் என்று உபநிடதங்களில் அடிக்கடி வருகிறது. இதைப் படித்தவர்களுக்கு மேற்கண்ட 'தேவர்களில் இந்திரனாக இருப்பவன் இறைவன்' என்ற கருத்து மிக சுலபமாக விளங்கியிருக்கும். ஏனெனில் இந்திரியங்களுக்கு அரசன் இந்திரன் * 'தேவ' என்ற சொல்லுக்கு 'ஒளியூட்டும் தத்துவம்' என்று பொருள். இது முன்னரே தெளிவாக்கப்பட்டிருக்கிறது. பொருள்களுக்கு 'ஒளியூட்டுபவர்கள்' (தேவர்கள்) நமது புலன் உறுப்புக்களே. புலனுறுப்புக்களுக்குத் தலைமை வகிப்பது மனம். மனத்தின் நிர்வாகம் இல்லாவிட்டால், புலனுறுப்புக்கள் நிர்வாகம் இல்லாவிட்டால், புலனுறுப்புக்கள் எந்த வேலையையும் சரிவரச் செய்வதில்லை அல்லவா?

உலகில் படைக்கப்பட்டுள்ள பொருள்களில் அறிவைப் போல் அற்புதமானது வேறு எதுவுமில்லை. இன்னதென்று விளங்கா அதிசய சக்தி அது. நவீன விஞ்ஞானிகள்கூட அதை அலசி ஆராய்ந்து திட்டவட்டமாக எதுவும் சொல்ல முடியவில்லை—ஏதோ சில ஊகங்களைத் தவிர.

---

* ''இந்திரியாணும் ராஜா—இந்திர.''

உலகில் படைக்கப்பட்டுள்ள பொருள்களில் அறிவைப் போல் அற்புதமானது வேறு எதுவுமில்லை. இன்னதென்று விளங்கா அதிசய சக்தி அது. நவீன விஞ்ஞானிகள்கூட அதை அலசி ஆராய்ந்து திட்டவட்டமாக எதுவும் சொல்ல முடிய வில்லை—ஏதோ சில ஊகங்களைத் தவிர.

ருத்ராணும் சங்கரஸ்சாஸ்மி வித்தேசோ யக்ஷரக்ஷஸாம்
வஸூனும் பாவகஸ்சாஸ்மி மேரு: சிகரிணுமஹம் 10:23

மேலும் ருத்ரர்களில் நான் சங்கரன்; யக்ஷ ரக்ஷசர்களில் நான் குபேரன்; வசுக்களில் நான் பாவகன் (அக்கினி); மலைகளில் நான் மேரு.

ருத்ரர்களில் நான் சங்கரன்—வாழ்க்கையைப் பற்றி நன்கு அறிந்தவர்கள் ருத்திர தத்துவத்தை ஏற்றுக் கொள்ளுவார்கள். ஆக்கப்பணி தொடங்குவதற்கு முன் அழிக்கும் வேலையை செய்து முடிக்கவேண்டியது தவிர்க்க முடியாததாகிறது. மலர்கள் மடிந்து கனிகள் தோன்றுகின்றன. கனிகள் சிதைந்து விதைகள் வெளியாகின்றன. விதைகள் அழிந்து அவற்றிலிருந்து பழையபடி செடிகள் முளைக்கின்றன. முன்னேற்றத்தின் ஒவ்வொரு படியி லும் இவ்வாறு ஆக்கபூர்வமான அழிவு அவசியமாகிறது. ஆழ்ந்து சிந்திப்பதில் மிக உயர்ந்த நிலையை அடைந்திருந்த நமது பண்டை மாமுனிவர்கள் ஆக்கபூர்வமான அழிவைக் கண்டு பயந்துவிடா மல் அதன் தெய்வமான சங்கரனை போற்றித் துதித்து வந்தனர். *

யக்ஷர்களிலும் ரக்ஷசர்களிலும் நான் குபேரன்—விண்ணுலக பொக்கிஷதாரருடைய புராணப் பெயர் குபேரன். கட்டை, குட்டையாக, மூன்று கால்களுடன், பெரும் தொந்தியும், மாங் காய் தலையுமாக அவனுடைய உருவத்தை நினைத்துப் பார்க்கக் கூட சகிக்காது. அவ்வளவு அவலட்சணம். அவனுடைய உதவி யாளர்கள் யக்ஷர்களும், ரக்ஷசர்களும். தோற்றத்தில் இவர்களும் தமது தலைவனுக்குக் குறைந்தவர்கள் இல்லை. குவிந்து கிடக்கும் செல்வத்தைப் பாதுகாப்பது இவர்கள் வேலை. முதலாளித்துவத்தை நமது முனிவர்கள் அடியோடு வெறுத்தனர் என்று காட்டுவதற்கு குபேரன், அவனுடைய உதவியாளர்ஆகியோரின் கேலிச் சித்திரங்களே போதிய சான்று.

வசுக்களிலே நான் பாவகன்—பாவகன் என்றால் அக்னி. பருவங்களின் நிர்வாக தேவதைகள் வசுக்கள். அவற்றின் வாய் அக்னி என்று சாந்தோக்கிய உபநிடதம் கூறுகிறது. பண்டங்களை ருசி பார்த்து அனுபவிப்பதற்கு வாய் ஒரு கருவி. ருசி பார்ப்பதற்கு மட்டுமின்றி, எல்லா அனுபவங்களைப் பெறுவதற்கும் அது ஒரு

* ஸ்ம்கரோதி இதி சங்கர: சுப வேலைகளை (ஸம்) செய்பவன் சங்கரன்.

சாதனம் என்று பொதுப்படையாகப் பொருள் கொண்டால், பருவங்களின் அனுபவங்களைப் பெறுவதற்கு ஆதிகாரணம் பரம்பொருளாகிய தாமே என்று கிருஷ்ணர் தெளிவாக்குவது விளங்குகிறது.

கோடை, இளவேனில் போன்று உலகம் நமக்கு அளிக்கும் புறப் பருவங்கள் ஆறு. அவற்றுடன் மகிழ்ச்சியும், துக்கமும் ஏற் படுத்தும் இரு அக பருவங்களையும் சேர்த்துக் கொண்டால் பருவங்கள் எட்டு ஆகிறது. நமது மனம் துயரத்தில் மூழ்கி இருக்கும் போது, பூத்துக் குலுங்கும் இளவேனிற்காலம் நமக்கு அழுது வடியும் காலமாகத் தோன்றும். மனத்தில் மகிழ்ச்சி நிறைந்திருந்தால் இலையுதிர் காலத்து மொட்டை மரங்கள் கூட நமக்கு மிக அழகாகத் தோன்றும். நம்முள் இருக்கும் இறைத் தத்துவத்தின் அருளால்தான் இந்த் எட்டுப் பருவங்களையும் நாம் உணர்ந்து அனுபவிக்க முடிகிறது என்கிறார் பகவான்.

மலைகளில் நான் மேரு—பிரபஞ்சத்தின் நடு மையத்தில் மேரு மலை இருப்பதாக இந்துக்களின் பூகோள இயல் கூறுகிறது. அதன் உயரம் ஏழாயிரம் அல்லது எட்டாயிரம் மைல் என்றும், கடவுள் அதன் உச்சியில் இருந்து வருகிறார் என்றும், அதன் அடிவாரத்தில் இவ்வுலகமாகிய ஏழு தீவுகள் இருக்கின்றன என்றும் புராணங் களில் காணப்படுகிறது. நாம் இருக்கும் நிலப் பகுதிக்கு ஜம்பூத்வீபம் என்று பெயர். கங்கை மேரு மலைச் சிகரத்தில் தோன்றி நாலு பக்கங்களிலும் பாய்கிறது என்று புராணங்கள் சொல்லுவதால் சிலர் இமயமலையும் மேரு மலையும் ஒன்றுதான் என்று நினைக்கிறார்கள். அது அவ்வளவு சரியாகத் தோன்ற வில்லை. ஏதோ ஒரு தெய்வீக சக்தி வட்டத்தைப் புராணங்கள் குறியீட்டு மொழியில் நமக்கு குறிப்புணர்த்த முயற்சிப்பதாக நினைக்க இடமிருக்கிறது. நாற்புறங்களிலும் பாயும் கங்கை என்று அவை கூறுவது ஆன்ம ஞானமாக இருக்கலாம். *

உலகில் நமக்குத் தெரிந்த பொருள்களைக் கொண்டு தெரியாத ஆத்மாவை விளக்கி வைப்பதற்கு கிருஷ்ணன் மேலும் பல உதாரணங்கள் கூறுகிறார்.

புரோதஸாம் ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம்
ஸேனானீனாமஹம் ஸ்கந்த: ஸரஸாமஸ்மி ஸாகர:

*10:24*

பார்த்தா, புரோகிதர்களில் நான் பிரஹஸ்பதி. தெய்வ தளபதிகளில் கந்தன் நான். (ஏரிகளில்), நீர்நிலைகளில் நான் மகா

---

* சாத்திரங்களில் இது ஞான கங்கை என்றும், ஆகாச கங்கை என்றும், கங்கைத்தாய் என்றும் குறிப்பிடப்பட்டிருப்பது காண்க.

சமுத்திரம். புரோகிதர்களில் நான் பிரஹஸ்பதி—வியாழன் கிருகத்திற்கு அதிபதியான பிரஹஸ்பதியை ருக்வேதம் 'பிரம்மணஸ்பதி' என்று குறிப்பிடுகிறது. இதிலிருந்தே தேவர்களிடையில் அவருடைய உயர்ந்த அந்தஸ்து வெளியாகிறது. தேவர்களுடைய ஆன்மீக குருவாக அவர் கருதப்பட்டுகிறுர். அவ்வாறே வீரமிக்க தெய்வ தளபதிகளுள் தாம் சிவபெருமானின் புதல்வன், சுப்ரமணியம், மயில்வாகனன், வேலன் என்று கிருஷ்ணர் கூறுகிறுர்.

நீர் நிலைகளில் நான் மகா சமுத்திரம்—இதுவரை கூறிய உதாரணங்களிலிருந்து இறைவன் எல்லாவற்றையும் கடந்து நிற்கும் அதீதப் பொருளாக இருப்பது காட்டப்படுகிறது. அது மட்டுமின்றி,, எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கும் சைதன்யமாகவும் இருக்கிறுர் என்பது கடைசி உதாரணத்திலிருந்து தெரியவரும். கங்கையின் நீர் கடலின் உப்பு நீரிலிருந்து வேறுபட்டதாகத் தோன்றலாம். யமுனை, கோதாவரி, சரஸ்வதி, நர்மதை, சிந்து, காவேரி, டைக்ரிஸ், நைல், தேம்ஸ், அமெஜான் உலகத்திலுள்ள ஏரிகள், குளம், குட்டைகள்—இவற்றில் எல்லாம் உள்ள நீர் வெவ்வேருக இருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனுல் கடல் நீர் இல்லை என்ருல், இந்த ஆறுகளும், ஏரிகளும், குளம் குட்டைகளும் வரண்டு போயிருக்கும். அதைப்போல, உயிரினங்களுக்கும், உயிரில்லாப் பொருள்களுக்கும் சம்பந்தமில்லாதது போல் தோன்றினுலும் இறைப் பெருங்கடல் எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கவில்லையானுல், உலகம் மறைந்து நெடுங்காலமாகி இருக்கும்.

இந்தக் கருத்தை பகவான் மேலும் அடுத்த செய்யுளில் தெளிவாக்குகிறுர்.

மஹர்ஷீணும் ப்ருகுரஹம் கிராமஸ்ம் யேகமக்ஷரம்
யக்ஞாணும் ஜபயக்ஞோஸ்மி ஸ்தாவராணும் ஹிமாலய:
*10:25*

மாமுனிவர்களுள் நான் ப்ருகு, சொற்களில் தனிச் சொல்லாகிய ஓம் நான்தான். வேள்விகளில் நான் ஜப வேள்வி. அசைவில்லா இனங்களில் இமயம் நான்.

முனிவர்களில் நர்ன் ப்ருகு—சற்று முன் * நாம் குறிப்பிட்ட சப்தரிஷிகளில் முதன்மையானவர் ப்ருகு. 'மானவ தர்ம சாத்திரத்தை அவர் தொடர்ந்து ஓதி வருவதால் அவரை மனுவின் மைந்தராகக் கருதுகிறுர்கள்.

சொற்களில் நான் தனிச் சொல் ஓம்— சிந்தனையை வெளி

---

* இதே அத்தியாயத்தில் செய்யுள் 2, 6 பார்க்க.

யிடும் ஒலிக்குறிகளே சொற்கள். ஒருவர் தமது உள்ளத்தில் தோன்றும் சிந்தனைகளையும், அனுபவங்களையும் மற்றொருவருடைய உள்ளத்தில் அப்படியே சொற்கள் மூலம் பதிப்பிக்க முயற்சிக்கிறார். 'தக்காளி' என்ற ஒலியைக் கேட்டவுடன், அதைப் பற்றி தெரிந்தவர்களுடைய உள்ளத்தில், தக்காளிப்பழத்தின் உருவம், நிறம், சுவை ஆகியவை எல்லாம் ஒரு சித்திரமாக எழுகிறது. அதை முன்பின் பார்த்திராதவர்களுக்கு அந்த ஒலிக்குறி புரியாது. அதைப் புரிய வைக்க வேண்டுமானால் பல சொற்களைச் சேர்த்து, வாக்கியமாக்கி தக்காளியைப்பற்றிய விவரங்களை தெளிவாக எடுத்துரைக்க வேண்டும். இதில் ஒருவர் எந்த அளவுக்கு வெற்றி பெறுகிறாரோ, அந்த அளவுக்கு 'தக்காளி'ச் சித்திரம் மற்றவருடைய மனத்தில் படிகிறது.

சொற்கள் மூலம் நமது சிந்தனைகளை வெளியிடலாம், அனுபவங்களை எடுத்துச் சொல்லலாம். பொருள்களை விவரிக்கலாம். ஏனெனில் அவை ஒரு வரையறைக்கு உட்பட்டவை. பிரபஞ்சமெல்லாம் நிறைந்து அழியா மெய்ப் பொருளாக இருக்கும் ஒன்றை விளக்குவதற்கு இந்த சொற்குறிகள் போதாது. எனவே அதை சுட்டிக் காட்டுவதற்கு நமது புராதன முனிவர்கள் முயற்சித்து ''ஓம்'' என்ற ஒலிக்குறியைக் கண்டுபிடித்தனர்.* எல்லாவேதங்களிலும் உள்ள மகாமந்திரம் அது. தொன்றுதொட்டு, சமீபகாலம் வரையில், இதுவே ஆன்மிக உலகில் எல்லா சாதகர்களுக்கும் ஒரு தூண்போல (ஆலம்பனம்) ஆதரவு அளித்து வந்திருக்கிறது.

வேள்விகளில் நான் ஜபவேள்வி—ஜபம் செய்வது உலகத்தில் எல்லோரும் பின்பற்றுகிற ஆன்மிகப் பயிற்சிமுறைவற்றாத நீரோடை போல தெய்வ சிந்தனை நமது உள்ளத்தில் இடைவிடாது பாய்ந்து கொண்டிருக்கச் செய்வதற்கு அது மிகச் சிறந்த வழி. பக்தி மார்க்கம், கரும மார்க்கம், ஞானமார்க்கம் இவை ஒவ்வொன்றுக்கும் தனித்தனி நடைமுறைகள் இருந்த போதிலும், ஜபத்தின் தன்மையும் அவற்றில் கலந்திருக்கிறது. ஜபமே ஒருவகை மார்க்கம்தான் என்பதில் சந்தேகமில்லை. குறிப்பிட்ட லட்சியம் ஒன்றை திருப்பித்திருப்பிச் சொல்லுவதன் மூலம் அது மனதில் வேரூன்றி நிற்கிறது என்ற கருத்தை எல்லாசாதக முறைகளும் ஏற்றுக் கொள்ளுவதால், ஜப முறை எல்லாமார்க்கங்களிலும் ஊடுருவி நிற்கிறது.

---

* இதைப் பற்றி மேலும் விவரமாகத் தெரிந்து கொள்ள விரும்புவோர் சுவாமி சின்மயானந்தரின் 'மாண்டுக்ய காரிகை' விரிவுரை நூலில் முதலாவது அத்தியாயத்தைப் படிக்கவும். அ—உ—ம் என்ற மூன்று ஒலிகள் இதில் அடங்கி யிருக்கின்றன. அவை முறையே விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கநிலை ஆகிய மூன்றையும் குறிக்கின்றன. கடைசி ஒலியாகிய 'ம்' என்பதன் தொடர்ச்சி நாலாவது நிலையான துரியத்தைக் காட்டுகிறது. அடுத்தடுத்து வரும் இரு 'ஓம்'களுக்கு இடையில் நிலவும் நிசப்தப் பேரமைதியில் நாம் இறைவனை உணருகிறோம்.

எல்லா வேள்விகளிலும் இக்கருத்து ஊடாடுகிறது என்பதால் மட்டுமல்ல, மற்ற முறைகளையும் கடந்து ஒரு தனி மார்க்கமாகவும் அது விளங்குகிறது என்ற காரணத்தினால் ஜபவேள்வியின் மகிமை பற்றி கிருஷ்ணர் இங்கு மிக உயர்வாகப் பேசுகிறார். இடையறாத ஆன்ம நினைவு தான் முழுமை பெற்றதற்கு அறிகுறி.** உள்ளம் பரிபூரண அமைதி பெற்று, சமாதி நிலையில் அப்போதுதான் நிற்கிறது.

அசைவிலாப் பொருள்களில் நான் இமயம்—உணர்ச்சியற்ற ஜடப்பொருள்களை இங்கு அசைவிலாப்பொருள்கள் என்று——

கவிதை குறிப்பிடுகிறது. ஆனால் மண், கல், மரங்கள், செடி கொடிகள், பறவைகள், விலங்குகள் போன்றவற்றுடன், இயற்கையின் பெருவலிவும், பேரழகும் தோன்ற வீசியடிக்கும் கடும்புயல், பயங்கர இடிமுழக்கம், நிசப்தமான பள்ளத் தாக்குகளில் விழுந்து ஓடும் காட்டாறுகள், நீல வானத்தையும் மலைச்சிகரங்களையும் பிரிதிபலிக்கும் அமைதியான ஏரிகள்—இவற்றையும் சேர்த்தே ''அசைவிலாப் பொருள்கள்'' என்ற சொற்கள் குறிப்பிடுவதாக வைத்துக் கொள்வதில் தவறில்லை. மலை என்றவுடன் இவைகளும் நமது நினைவுக்கு வருகின்றன. ''இவைகளில் நான் இமயமலை'' என்கிறார் பகவான். இமயமலைத் தொடரின் முக்கியத்துவம் கருதி அவர் அதற்குத் தனியாக ஒரு பெருமையும் அந்தஸ்தும் தருகிறார். அதன் உச்சியில் பல ரகசிய இடங்கள் இருக்கின்றன. அங்கு அமர்ந்து பல மகான்கள் நமது அறிவின் எல்லைகளைத் தாண்டிய பரம்பொருள் மீது சிந்தனையைச் செலுத்தி, தமது முயற்சிகளில் வெற்றியும் பெற்றிருக்கின்றனர். உலகத்தில் வேறு எங்கும் அப்படி நடந்ததில்லை, உலக வரலாற்றில் இதைப் போன்ற சாதனைகள் எவரும் புரிந்ததில்லை.

உலக அறிவும், புள்ளி விவர நாட்டமும் மேலோங்கி நிற்கும் அர்ஜுனனுடைய உள்ளத்தைப் பண்படுத்துவதற்கு, மேலும் பல நுணுக்கமான உதாரணங்களைக் கிருஷ்ணன் சொல்லுகிறார்.

*அச்வத்த: ஸர்வவ்ருக்ஷாணாம் தேவர்ஷீணாம் ச*
*நாரத:கந்தர்வாணாம் சித்ரரத: ஸித்தானாம் கபிலோ முனி:*
*10:26*

மரங்களில் (நான்) அசுவத்தமரம்; தேவரிஷிகளில் நாரதர்;

---

*[2] நித்ய நிரந்தர அவைச்சின்ன பிரம்மாத்மேதி ஸ்மரணம், ததேவ ஆத்ம சாக்ஷாத்கார:

கந்தர்வர்களில் சித்ரரதன்; முழுமை பெற்ற சித்தர்களில் நான் கபில முனி.

மரங்களில் நான் அசுவத்த (அரச) மரம்—கொம்புகளும், கிளைகளுமாய் தழைத்தோங்கி நிற்பதுடன், அரசமரம் நெடுங்காலம் பசுமையுடன் இருக்கிறது. அது பரந்து விரிந்திருப்பதால் அதை 'எங்கும் பரவியது' என்றும், சில நூற்றுண்டுகளுக்கு அப்படியே இருப்பதால் 'அழிவில்லாதது' என்றும் சொல்லலாம். மெய்ப்பொருளைப் பற்றி நாம் கூறுவதும் அதுவே அல்லவா? இந்துக்கள் அதை புனித மரமாகக் கருதி வழிபடுகிறுர்கள். உபநிடதம் அதை சம்சாரத்திற்கு ஒப்பிடுகிறது* கீதையில், அடுத்த சிலஅத்தியாயங்களுக்குப் பிறகு** அரசமரம் இப்பன்மைத் தோற்ற உலகத்திற்கு ஒப்பிடப் படுகிறது. கானல் நீர் போன்று ஒன்றுமில்லாததை எல்லாம் மிகப் பெரிய துயரங்களாக பொய்த் தோற்றம் காட்டும் உலகத் திற்கு அந்த உரிமை பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

தேவரிஷிகளில் நான் நாரதர்—நாரதரைப் பற்றி கேள்விப் படாதவர்களே இல்லை. அவர் வரும் கதைகள் எல்லோருக்கும் மகிழ்ச்சியூட்டக் கூடியவை. ஹரியிடம் அவருக்கு அளவு கடந்த பக்தி. தேவர்களில் அவர் முக்காலும் உணர்ந்த மாமுனிவர் என்பது மட்டுமல்ல. அவ்வப்போது உலகத்திற்கு வந்து, மனிதர்கள் இடையில் கலகமூட்டி விளையாட்டுக் காட்டிவிட்டு, அவர்களுடைய மருட்சியைப் போக்கி சுவர்க்கத்திற்கு வழிகாட்டுபவர் அவர். எனவே கிருஷ்ணன் தம்மை நாரதர் என்று சொல்லிக் கொள்ளுவது பொருட் செறிவு மிக்கதாக இருக்கிறது. மாந்தரை உய்விக்கும் மாபெரும் லட்சியப் பணியை இவ்விருவரும் செய்து வருகிறுர்கள். வாழ்க்கையில் தடுமாறுகிறவர்களுக்கு நல்வழி காட்டி, முக்தி அடையச் செய்யும் பெருமை இந்த இருவருக்கும் உண்டு. இதை நமது புராணங்கள் விரிவாக விளக்கிக் காட்டுகின்றன. நாரதரும், கிருஷ்ணரும் ஒரே லட்சியப் பிணைப்பை விட இருவரை உறுதியாகப் பிணைக்கும் உறவு வேறு என்ன இருக்க முடியும்?

வெகு நுணுக்கமான சில தேவ இனங்களை கந்தர்வர் கள் என்கிறுர்கள். தங்களுடைய கலை, இசை முதலியவற்றினுல் எல்லாதேவர்களுக்கும் அவர்கள் இன்ப மூட்டுகிறுர்கள் என்று புராணங்கள் கூறுகின்றன. அவர்களை தேவர்களின் உலகத்தின் சினிமா நட்சத்திரங்களாகக் கருதலாம். சித்தரரதன் அவர்களில் பெயர் பெற்ற 'நட்சத்திரம்' அவனுடைய பாட்டு அல்லது நாடக

---

*[1] (கதோபநிஷத்—2—6—1)

*[2] அத்தியாயம் 15. செய்—1

நிகழ்ச்சிகளுக்கு டிக்கட் கிடைப்பது கூட கடினம் என்று நாம் கற்பனை செய்து கொள்ளுவதில் தவறில்லை.

சித்தர்களில் நான் கபில முனி—சித்தர்கள் என்று இங்கு கூறுவது ஜாலவித்தை காட்டுபவர்களை அல்ல. லட்சிய சித்தி பெற்றவன் சித்தன். ''ஆன்ம சிந்தனையில் மூழ்கி, நாடிய பொருளை அடைந்து, முழுமை பெற்ற மகான்களில் நான் கபில முனி'' என்பது இச்சொற்களின் பொருள். நரைத்த தலையும் ஏறக்குறைய நிர்வாணத்தோற்றமும், கிடைத்ததைத் தின்று கொண்டு சாதாரணமாக மற்றவர் போகத்துணியாத இடங்களில் சுற்றிக் கொண்டிருக்கும் கிழட்டுக் கிறுக்குகளே முனிகள் என்று நினைத்து சில அசட்டு ஓவியர்கள் சித்திரங்கள் வரைந்திருக்கிறார்கள். முனிகளை வெறும் காட்டுமிராண்டிகளாக அவர்கள் சித்தரித்திருக்கிறார்கள். இது அறியாமையின் விளைவு. மனன(சிந்தித்தல்) என்ற சமஸ்கிருதச் சொல்லிலிருந்து வருவது ''முனி'' * அதற்கு 'ஆழ்ந்த சிந்தனையாளன்' என்று பொதுவாகப் பொருள் கொள்ளலாம். 'சிறந்த சிந்தனையாளரில் நான் கபிலர்' என்று கிருஷ்ணர் கூறுகிறார். சாங்கியதத்துவத்தை தோற்று வித்தவர் கபிலர். பெரும்பாலும் சாங்கியக் கருத்துக்களையே கீதை பின்பற்றி வருகிறது. எனவே தாம் கபிலரென்றும், அவர் சிந்தனையாளரில் முதல் இடம் பெறுபவர் என்றும் கபில முனிக்கு கிருஷ்ணர் புகழ்மாலை சூட்டுகிறார். சாங்கியத்தின் தத்துவ வட்டத்தை எடுத்துக் கொண்டு, அதில் தமது கருத்துக்களையும் பதிய வைக்கிறார் கிருஷ்ணன். ஆகையால் சாங்கிய தத்துவத்தைத் தோற்றுவித்தவருக்கு இங்கு உயர்ந்த அந்தஸ்து அளிக்கப்படுகிறது.

தாம் கூறுவதை முழுமையாக அர்ஜுனன் புரிந்து கொள்ள வில்லை என்ற எண்ணம் அவனுடைய தோற்றத்திலிருந்து கிருஷ்ணனுக்கு உண்டாகிறது. எனவே மேலும் பல உதாரணங்களைத் தருகிறார் பகவான்.

உச்சை: ச்ரவஸமச்வானும் வித்தி மாமம்ருதோத்பவம்
ஐராவதம் கஜேந்த்ராணும் நாராணும் ச நராதிபம்

10:27

குதிரைகளில் நான் உச்சைச்ரவம் என்று அறிந்து கொள் வாயாக; கம்பீரமான யானைகளில் நான் ஐராவதம்; மாந்தருள் நான் மன்னன்.

தேவர்களும் அசுரர்களும் அறிதத்திற்காக பாற்கடலைக் கடைந்த கதை எல்லோருக்கும் தெரிந்திருக்கும். அவர்கள்

---

* மனன சீலவான் முனி' வேத சாஸ்திர நூல்களின் கருத்து நுணுக்கங்களைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்து ஒருமுடிவுக்கு வரும் திறமை படைத்தவன் முனி.

கடைந்து கொண்டிருந்தபோது உச்சைச்ரவம் என்ற வலுமிக்க இறக்கைகளுடன்கூடிய குதிரையும், ஐராவதம் என்ற வெள்ளை யானையும் கடலிலிருந்து வெளியாயின. மொத்தம் 13 இனங்கள் அவ்வாறு தோன்றி போட்டியில் ஈடுபட்டிருந்தவர்களை மயக்கப் பார்த்தன என்று புராணங்கள் சொல்லுகின்றன.

ஆயுதாநாமஹம் வஜ்ரம் தேனூநாமஸ்மி காமதுக்
ப்ரஜனஸ்சாஸ்மி கந்தர்ப: ஸர்ப்பாணாமஸ்மி வாஸுகி:
10:28

ஆயுதங்களில் நான் வஜ்ராயுதம், பசுக்களில் காமதேனு. பிரஜோற்பத்திக்குக் காரணமான கந்தர்ப்பன் (மன்மதன்) நான். பாம்புகளில் நான் வாசுகி.

ஆயுதங்களில் வஜ்ராயுதம்—தேவர்களின் போர்ப் படைகளுள் வஜ்ராயுதம் அதிசக்தி வாய்ந்தது. மின்னலின் பயங்கர முன்னறிவிப்புடன், பேரிடியாய் முழங்கிவரும் ஆயுதம். எதிரிகள் அதை தடுக்கவோ, முறிக்கவோ முடியாது. முன்னொரு காலத்தில் விண்ணுலகைத் தாக்க ஒரு அசுரன் முற்பட்ட போது, அவனைக் கொல்லுவதற்கு ததீசி முனிவர் தமது விலாவிலிருந்து ஒரு எலும்பை எடுத்து இந்த ரகசிய ஆயுதத்தைச் செய்ய உதவினார் என்று வேதக் கதை ஒன்று இருக்கிறது.

பசுக்களில் நான் காமதேனு—நாம் கோரியவற்றை எல்லாம் அளிக்கவல்ல பசு காமதுக் (காமதேனு). தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த போது வெளியானவைகளில் இதுவும் ஒன்று. *

பிரஜோற்பத்திக்குக் காரணமான கந்தர்ப்பன் நான்—காதல் தெய்வத்திற்கு கந்தர்ப்பன் (மன்மதன்) என்று பெயர். இந்தியப் புனைமெய் கதைகளில் அவன் எழில் கொழிக்கும் புன்னகையுடன், வில்லும் ஐந்து மலர்க்கணைகளும் தாங்கி இங்குமங்கும் திரிந்து கொண்டிருக்கும் குறும்புக்கார சிறுவனாகச் சித்திரிக்கப்பட்டு இருக்கிறான். ஐந்து புலனுறுப்புக்களையும் மயக்கி செயலிழக்கச் செய்வதற்காக அவனிடம் ஐந்து கணைகள் இருக்கின்றன. உயிரியல் பூர்வமான ஒரு உண்மை இக் கதையில் அடங்கியிருக்கிறது. பிரஜா உற்பத்தி என்பது ஆணும் பெண்ணும் கூடும் மிருகச் செயல் மட்டுமல்ல. ஐம் புலன்களுக்கும் இன்ப நிறைவு அளிக்கும் நிகழ்ச்சி அது என்று காம

---

* அகநோக்காகப் பார்க்குமிடத்து, இது ஒரு சாதகரின் சங்கல்ப சக்தியைத் தவிர வேறொன்றுமில்லை என்று தோன்றுகிறது. ஒருமுகத் தியானத்தில் அசையா உறுதி பெற்று அவருடைய மன அறிவு ஒருமைப்பாடு அதிகரிக்க அதிகரிக்க அவருடைய சங்கல்ப சக்தியும் உயர்நிலை அடைகிறது.

சாத்திரம் கூறுகிறது. தத்துவ அறிஞர்களும் விஞ்ஞானிகளும் பிரச்னைகளை அணுகும் முறையில் ஒன்றுபட்டவர்கள். பாலுறவு பற்றிப் பேசுகையில் வேதாந்திகள் மருத்துவக் கல்லூரி பேராசிரியர்களைப் போல எல்லா விவரங்களையும் ஒளி மறை வின்றி விளக்கிக் கூறுவார்கள். உடல், மனம், அறிவு மட்டங் களில் எழும் எல்லா வேட்கைகளையும் தீர்த்து வைப்பது இறை வனே என்றால், காதல் வேட்கையையும் தீர்த்து வைப்பது இறை வனே என்றால் காதல் வேட்கைகளையும் தீர்த்து மனிதனுடைய பிறப்புக்கு தாம் காரணமென்று பகவான் கூறுவதில் வியப்பு என்ன இருக்கிறது?

பாம்புகளில் நான் வாசுகி—நமது புராணங்களின்படி சிவபெருமானுடைய மோதிர விரலைச் சுற்றிக் கொண்டு ஆபரண மாக அலங்கரித்துக் கொண்டிருக்கும் அழிவிலா சர்ப்பம் வாசுகி. அவருக்கு மோதிரமாகும் அளவுக்கு சிறியதாக இருந்த போதி லும் பாற்கடலைக் கடைவதற்கு கயிறாகவும் ஆயிற்று. இந்த 'இரண்டையும் சேர்த்துப் பார்க்கும் போது, மெய்ப்பொருள் 'அணுவின் சிறியது, அண்டத்திலும் பெரியது' என்று கூறும் உபநிடத வாக்கியம்* நினைவு வருகிறது. பகவான் தம்மை வாசுகி யுடன் ஒப்பிட்டுக் கொள்வது மிகப் பொருத்தமாக இருக்கிறது. இங்கு 'சர்ப்பம்' என்ற சொல் வருகிறது. சர்ப்பம் வேறு, அடுத்த செய்யுளில் வரும் நாகம் வேறு. ஒரு தலை உள்ள பாம்புக்கு சர்ப்பம் என்று பெயர். பல தலைகளைக் கொண்ட பாம்புக்கு நாகம் என்று பெயர்.

கிருஷ்ணன் மேலும் பல உதாரணங்கள் மூலம் தமது மகிமையை விளக்குகிறார்.

அனந்தஸ்சாஸ்மி நாகானும் வருணோ யாதஸாமஹம்
பித்ருணு மர்யமா சாஸ்மி யம: ஸ்ம்யமதாமஹம்

*10:29*

நாகங்களில் நான் அனந்தன்; ஜல தேவதைகளில் நான் வருணன். பித்ருக்களில் அர்யமா; ஆணையாளரில் நான் யமன்.

ஆயிரம் தலை நாகமாகிய ஆதிசேஷன் மீது படுத்துக் கொண்டு மகாவிஷ்ணு யோக நித்திரை செய்வதாகச் சொல்லு கிறார்கள். அந்த சேஷ நாகத்தையே கிருஷ்ணர் குறிப்பிடுகிறார். அந்தப் பாம்புக்கு அனந்தன் என்று மற்றொரு பெயர் உண்டு. சேஷசயனத்தை அனந்த சயனம் என்றும் கூறுகிறார்கள் அல்லவா? அதன் மீது சாய்ந்த வண்ணம் விஷ்ணு உலக நலனைக் காத்துவரு கிறார், பிரம்மா படைப்புத் தொழிலை நடத்தி வருகிறார் என்றால்

---

* சுவாமிகளின் கடோபநிஷத்து விரிவுரை 1—2—20ல் காண்க.

அவர்களுக்கு ஆதாரமான பரம்பொருளே சேஷன் என்பதில் சந்தேகமில்லை.

நீரின் அதிபர்களான தேவர்களில் நான் வருணன்—வருணன் நீருக்கு அதிபதி என்று வேதம் கூறுகிறது. பஞ்சபூதங்களில் அது மூன்றாவது. உலகத்தின் மூல சக்திகளை வழிபடுவது வேதகாலத் தொடக்கத்தில் வழக்கமாக இருந்தது. பிறகு புராண காலத்தில், அத் தெய்வங்களுக்கு மனித உருவம் கொடுத்து வணங்கத் தலைப்பட்டனர். நாளடைவில் ஏற்பட்ட சிந்தனைக் குழப்பத்தினால் வழிபாட்டு முறையில் மாறுபாடுகளும், மத வேறுபாடுகளும், உண்டாகி, 'ஜெருசலத்து மகான்', 'பிருந்தாவனத்துப் பூவண்ணன்', 'மெக்கா தேவதூதன்' என்று ஏதேதோ பிரிவினைகள் செய்து கொண்டு அனாவசியப் பூசல்களிலும், போர்களிலும் மக்கள் ஈடுபடத் தொடங்கினர். வருணனுடைய உருவத்தை பாதி மனிதனாகவும், கீழ்ப் பகுதி மீனாகவும் சித்திரிக்கிறார்கள். கடல், நதிகள் மற்ற நீர் நிலைகள் ஆகியவற்றிற்கு வருணன் அதிபதி.

பித்ருக்களில் நான் அர்யமா—இந்து தத்துவத்தின்படி வாழ்க்கையில் நிகழும் எத்தனையோ அனுபவங்களில் மரணமும் ஒன்று. சூக்கும சரீரம் குறிப்பிட்ட ஒரு பூத உடலை நிரந்தரமாகக் கைவிட்டு வெளியேறுவதை மரணம் என்று சொல்லுகிறோம்* மன—அறிவுக் கருவி தனக்கென்று ஒரு அகந்தை மைய ஆளுமையை உருவாக்கிக் கொள்வதால், ஒரு உடலிலிருந்து பிரிந்த பிறகு கூட அது தொடர்ந்து, தனியாகவே இருந்து வருகிறது. அதை, ''பிரிந்த ஆவி'', ''முன்னோர்'' என்று பேச்சு வழக்கில் குறிப்பிட்டு வருகிறார்கள்.

மரணம் அடைந்தவர்களுடைய சூக்கும சரீரங்கள் பித்ருலோகம் என்ற உலகத்தை அடைகின்றன. நாம் ஏற்கனவே கூறிய 12 ஆதித்தர்களில் ஒருவரான அர்யமாதான் பித்ருலோகத்தை ஆளும் மன்னன்.

ஆணையாளருள் நான் யமன்—மரணத்தின் அதிபதி யமன். பயங்கரமானவற்றையும், சோகம் அளிப்பவற்றையும் கூட வணங்குவது இந்தியப் பண்பாடு. உலகத்தில் உள்ள நன்மை, தீமை, நாம் விரும்புபவை, விரும்பாதவை—இவை எல்லாவற்றிற்கும் கடவுளே அடிப்படையாக இருக்கிறார் என்ற சித்தாந்தத்தில் நாம் ஊறி வந்திருக்கிறோம். நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், சாவுத் தத்துவம் இவ்வுலக வாழ்வுக்கு ஒரு முறை வகுத்து அமுல் நடத்தி வருகிறது. ஆக்கபூர்வமான எல்லா நட

---

* நம் ஒவ்வொருவரிலும் உள்ள மன—அறிவுக் கருவியை வேதாந்தம் 'சூக்கும சரீரம்' என்று குறிப்பிடுகிறது.

வடிக்கைகளிலும், முன்னேற்றத்திலும் சாவுத் தத்துவத்தின் இயக்கத்தைக் காணலாம்.

எனது குழந்தைப் பருவம் 'இறந்து' வாலிபப் பருவத்தில் பிறக்கிறேன். பள்ளிப் படிப்பினிடம் விடை பெற்றுக் கொண்ட பிறகுதான் கல்லூரியில் காலடி எடுத்து வைக்கிறேன். ஒரு படியில் 'இறந்து' தான் நான் மேலே உள்ள அடுத்தபடியில் பிறக்க முடியும். முன்னேற்றம் பற்றிப் பேசும் பொழுது வாழ்க்கையின் ஒரு பகுதி பற்றி மட்டுமே பேசுகிறோம். வாழ்க்கையை முழுமையாகவே பார்க்க விரும்பாமல், ஒருபுறத்தை மட்டுமே பார்க்கிறோம். ஒவ்வொரு மாறுதலிலும், குறிப்பிட்ட ஒரு நிலை அழிந்து, அடுத்த உயர்நிலை வருகிறது. மரணத்தின் 'ஆக்கபூர்வமான அழிப்பு'க் கலையினாலன்றி வேறு வகையில் வளர்ச்சிக்கோ, முன்னேற்றத்திற்கோ இடமில்லை.

ஒரே சமயத்தில் இரண்டு பொருள்கள் ஒரே இடத்தில் இருக்க முடியாது என்று விஞ்ஞானம் அறிவுறுத்துகிறது. இவ்வுண்மையை தெளிவாகப் புரிந்து கொண்டாலொழிய சாவுத் தத்துவம் நமக்கு விளங்காது. ஒரு ஓவியன் சித்திரம் எழுதுகிறான். வண்ணங்களை அவன் மேன்மேலும் பூசி சித்திரம் வரைந்து கொண்டு வரும்போது, அத்துணியின் மேல் இயற்கையாக உள்ள மேற்பூச்சு மறைந்து கொண்டே வருகிறது. படைப்புத் தத்துவம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியமானது அழிப்புத் தத்துவமும். வாழ்க்கையை முழுமையாக நோக்கினால் அது நன்றாகத் தெரியவரும். சாவில்லாமல் வாழ்வில்லை.

அழிவு விகிதம் குறைந்து, உற்பத்தி மட்டும் சுறுசுறுப்பாக நடந்து கொண்டிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அதன் விளைவு என்ன ஆகும்? உற்பத்திப் பண்டங்கள் மலைமலையாகக் குவிந்து கிடக்கும். சமநிலை தடுமாறி வாழ்க்கை ஒரு பெரும் சுமையாகிவிடும். ஜனத்தொகை கொஞ்சம் அதிகரித்தாலே உலகில் அரசியல் தகராறுகளும், பொருளாதார நெருக்கடிகளும் ஏற்பட்டு விடுவதைப் பார்க்கிறோம் அல்லவா? இந்த நிலையில் நமது முப்பாட்டனுக்கு முப்பாட்டன் முதல் நமது தலை முறைவரை எல்லோரும் இன்னும் உயிருடன் இருக்கிறார்கள் என்றால், பொருளாதார, சமூக பிரச்னைகள் உலகத்தில் சமாளிக்க முடியாத அளவுக்குப் போய்விடும். உற்பத்திக்கும் அழிவுக்கும் உள்ள சமநிலையை மரணதேவன் ஒழுங்காக கவனித்து வந்திராவிட்டால், உலக வாழ்வு நரகமாக இருக்கும். எனவே இச்சமநிலையை கண்ணும் கருத்துமாக நிர்வகுத்து வரும் ஆணையாளரில் யமன் முதன்மையானவர் என்று கிருஷ்ணர் சொல்லுவது நூற்றுக்கு நூறு உண்மை. பிரபஞ்ச இயக்கம் சமநிலை தவறாது இருந்து வருவதற்கு மெய்ப்பொருளே அடிப் படைக் காரணமாகையால், பகவான் தம்மை யமனுடன்

ஒப்பிட்டுப் பேசுகிறார்.

உற்சாகம் மேலிட அவர் தொடர்ந்து கூறுவதாவது:

ப்ரஹ்லாதஸ்சாஸ்மி தைத்யாநும் கால: கலயதாமஹம்
ம்ருகாணும் ச ம்ருகேந்த்ரோஹம் வைனதேயஸ்ச பக்ஷிணும்
10:30

தைத்யர்களில் நான் பிரகலாதன். கணக்கர்களில் நான் காலம், விலங்குகளில் மிருகராஜன் (சிங்கம்) நான்; பறவைகளில் வைனதேயன் (கருடன்).

தைத்யர்கள் என்றால் அசுரர்கள், தேவர்களின் கடுமையான எதிரிகள். அவர்களுடைய குலத்தில் உதித்த பிரகலாதனின் வரலாறு எல்லோருக்கும் தெரிந்திருக்கும். ஹரியிடம் அளவற்ற நம்பிக்கையும், பக்தியும் கொண்டு தன் தந்தை இரண்யகசிபுவின் பயங்கர எதிர்ப்பையும், கொடுமைகளை யும் சமாளித்து, ஹரி தூணிலும் உள்ளார், துரும்பிலும் உள்ளார் என்று நிரூபித்துக் காட்டிய சிறுவன் பிரகலாதன்.

கணக்கர்களிலே நான் காலம்—இந்து மத தத்துவத்தைக் கற்றறிந்த அறிஞர்களில் (தார்க்கிகர்கள்) தர்க்கவாதிகள் என்று ஒரு பகுதியினர் இருக்கிறார்கள். அழிவிலா இறைவன் ஒருவன் இருக்கிறான் என்பதை மறுக்கும் அவர்கள், அழிவில்லாதது காலம் ஒன்றுதான் என்று வலியுறுத்திப் பேசுகிறார்கள். பிரிக்க முடியாத காலத்தை, மனிதனுடைய மன—அறிவுக் கருவியே கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று பிரித்து காட்டு கிறது என்று அவர்கள் கூறுகிறார்கள். உலகம் பன்மையானது தான் என்று அவர்கள் உறுதியாக கருதுகிறார்கள். அறிவை அடிப் படையாகக்கொண்ட தர்க்கவாதத்தினால் அந்த அளவுக்குத் தான் போக முடியும். அவர்களை மனத்திற் கொண்டு வியாசர் இச் செய்யுளை எழுதியிருக்கிறாரோ என்ற எண்ணம் அதைப் படிப்பவர்களின் உள்ளத்தில் எழுகிறது. உலகம் பன்மையாகக் காணப்படுவது வெறும் தோற்றம்தான். இப்பன்மைத் தோற்ற உலகின் மாறா அடிப்படையாக அழிவிலா இறைவன் ஒருவன் இருக்கிறான் என்று வியாசர் உறுதியாகச் சொல்லுகிறார்.

பெரும்பாலோர் இச் செய்யுளை இவ்வளவு துருவி ஆராய வேண்டியதில்லை என்றும் வெளிப்படையாகத் தோன்றும் அர்த் தத்தை எடுத்துக் கொண்டாலே போதும் என்றும் நினைக்கிறார் கள். தோற்றமோ முடிவோ இல்லாத காலமென்ற அளவுகோலை வைத்துத்தான் உலக இயல்பை கணக்கிட வேண்டியிருக்கிறது. எனவே 'கணக்கர்களிலே நான் காலம்' என்று பகவான் கூறுவ தாக இவர்கள் பொருள் கொள்ளுகிறார்கள்.

மிருகங்களில் நான் மிருகராஜன்; பறவைகளில் நான் வினதை புத்திரன்—சிங்கத்தின் கம்பீரத் தோற்றமும், வலிமையும் அதை 'மிருக மன்னனுக' ஆக்குகின்றன. மிக உயர்ந்து ஆகாயத்தில் பறக்கும் கருடனுடைய சக்தியும், அதன் வீச்சும், கூர்ந்த பார்வையும் சேர்ந்து, கருடனை * பறவை ராஜனுக ஆக்குகின்றன.

பவன: பவதாமஸ்மி ராம: சஸ்த்ரப்ருதாமஹம்
ஜஷாணும் மகரஸ்சாஸ்மி ஸ்ரோதஸாமஸ்மி ஜாஹ்னவி

*10:31*

தூய்மை அளிப்பவற்றுள் நான் காற்று. வீரர்களில் நான் ராமன். மீன்களில் சுறு. நதிகளில் நான் கங்கை.

பரிசுத்தமாக்குபவைகளில் நான் காற்று—ஒரு இடத்தை சுத்தமாக்குவதில் காற்றுக்கும், கதிரவனுக்கும் ஈடான சுத்திகரிப்பு மருந்து வேறு ஏதுமில்லை. செய்யுளில் காற்று மட்டுமே குறிப்பிடப்பட்டிருக்கிறது, சூரிய வெப்பம் பற்றி எதுவும் இல்லையே என்று கவலைப்பட வேண்டியதில்லை. சூரிய வெப்பம் தாக்குமிடத்தில் காற்றின் அசைவு தானுக ஏற்படும். காற்று வீசிக்கொண்டிருக்குமிடத்தில் சூரிய ஒளியும் வெப்பமும் நிச்சயமாக இருக்கும். வெளிச்சமில்லாத ஒரு குகையில் காற்றும் வீசாது. வியாச முனிவருக்கு இது நன்ருகத் தெரியும். ஒன்றைச் சொன்னல் மற்ருென்றைத் தனியாகக் குறிப்பிட வேண்டியதில்லை என்பதால் தான் காற்றை மட்டும் குறிப்பிட்டுக் கூறியிருக்கிருர் கவிஞர்.

ஆயுதம் தாங்கிய வீரர்களில் நான் ராமன்—இந்நாட்டு முதல் காவியமான 'ராமாயணத்தை' எழுதிய வால்மீகி முனிவர், ராமனை ஒரு முழுமை பெற்ற மனிதராக படைத்திருக்கிருர். ஒரு புதல்வன் என்ற முறையில் ராமன் தன் தந்தையிடம் நடந்து கொள்வதையும், ஒரு கணவன், சகோதரன், நண்பன், போர்வீரன், ஆசான், அரசன், லவகுசர்களின் தந்தை என்ற எந்த முறையில் எடுத்துக்கொண்டாலும் ராமன் ஒருலட்சிய மகா புருஷனுக சித்தரிக்கப்பட்டிருக்கிருர். அவரிடமுள்ள குறைகளும் அவர் உள்ளாகும் குழப்பங்களும் கூட ராமனின் நிறைவுபெற்ற தன்மையை மேலும் சிறப்பாக எடுத்துக்காட்டுகின்றன. போர்க்களத்தில் லட்சிய வீரர்களாக திகழ்ந்தவர்களுக்கு ராமனை ஒரு எடுத்துக் காட்டாக வியாசர் குறிப்பிடுவதில் வியப்பு இல்லை.

---

* வெள்ளைக் கழுத்துடன் உள்ள கழுகு அது. காத்தல் தொழில் புரியும் மஹா விஷ்ணுவின் வாகனம்.

மீன்களில் நான் சுறு; நதிகளில் நான் கங்கை—முன்னொரு காலத்தில் ஜானு முனிவர் கங்கை நீர் அவ்வளவையும் குடித்துத் தீர்த்துவிட்டு, பிறகு மக்கள் நலனைக் கருதி, குடித்தநீர் அவ்வளவையும் காது வழியாக வெளியில் பாயச் செய்தார் என்பது சரித்திரக் கதை. கங்கையை ஒரு குறியீட்டுப் பொருளாக ஹிந்துக்கள் எப்போதும் பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். அது இந்திய ஆன்மிகப் பண்பாட்டின் அறிகுறி. பண்டை முனிவர்கள் அருளிய ஆன்ம ஞானப் பிரவாகத்தை சீடர்கள் அள்ளிப் பருகினர். அறிவை ஊற்றுக்கும், வெள்ளத்திற்கும் ஒப்பிடுவது மொழிவழக்கு. 'அறிவூற்று நீரைப் பருகி தாகம் தீர்த்துக் கொண்டான்' என்று சொல்லுவது பல மொழிகளில் இருக்கிறது. உலக மொழிகளுக்குத் தாய் போன்ற சமஸ்கிருதத் திலிருந்து எல்லோரும் தாராளமாக எடுத்து உபயோகிக்கும் வாக்கியம் இது. பருகிய நீரை காதுகள் வழியாக முனிவர் வெளியிட்டார் என்பது கவிதை நயம் செறிந்த அழகான கற்பனை. சுருதி (காதினல் கேட்கப் படுவது)யின் நினைவை நம் உள்ளத்தில் எழுப்புவதற்காக ஜானுவின் காதுகள் வழியாக ஞான கங்கை வெளியானதாகக் கதை கூறுகிறது. பேருண்மைகளை அனுபவ—பூர்வமாக அறிந்த மாமுனிவர்கள், அவற்றை சுருதிகளாக சீடர்களுக்கு உபதேசித்தனர் என்பதை இக்கதை குறிப்புணர்த்துகிறது. இவ்வாறு சீடர் பரம்பரையில் வந்தவர்கள், தாங்கள் பெற்ற பேருண்மையை சொந்த அனுபவத்தில் கண்டு எதிர்கால சந்ததியினருக்கு காலத் திற்கேற்ற புது விளக்கங்களுடன் அளித்தனர். அந்த அனுபவ முத்திரை இல்லாமல் யாரும் புதுவிளக்கம் கொடுக்க முன்வரமாட்டார்கள்.

கங்கைக்கு உள்ள பல பெயர்களில் ஜான்னவி என்பதும் ஒன்று. குறிப்பாக அந்தப் பெயரை இங்கு உபயோகித்திருப்பதன் காரணம் மேலே குறிப்பிடப்பட்டு இருக்கிறது, கடல்வாழ் இனங்களில் கருமீன் மிக வலுவுள்ளது. பயங்கரமானது.

அதுமட்டுமல்ல—

ஸர்காணுமாதிரந்தஸ்ச மத்யம் சைவாஹ மர்ஜுன
அத்யாத்ம வித்யா வித்யானும் வாத: ப்ரவததாமஹம்

*10:32*

படைப்பு இனங்களின் தோற்றமும், மையமும், முடிவும் நான்தான் அர்ஜுனா. விஞ்ஞானங்களில் நான் ஆன்ம விஞ்ஞானம். விவாதங்களில் நான் தர்க்கம்.

படைப்பிலுள்ள எல்லா இனங்களின் தொடக்கமும், மையமும், இறுதியும் நான்--இந்த அத்தியாயத்தில் 20வது

செய்யுளில் பகவான் தமது மகிமைகளை எடுத்துரைக்கத் தொடங்கினார். இப்போது நாம் படிக்கும் சுலோகம் 20-வது செய்யுளின் எதிரொலியாக அமைந்திருக்கிறது. தனித்தனியாக ஒவ்வொன்றையும் எடுத்துக் கொண்டு அவை ஒவ்வொன்றிலும் தாமே சாராம்சப் பொருளாக இருப்பதை இந்த செய்யுளில் பகவான் சுட்டிக் காட்டினார். ஆனால் இந்தக் கவிதையில் தாம் பொதுவாக எல்லாவற்றிலும் சாராம்சப் பொருளாக இருப்பதை விவரிக்கிறார்.

ஒருபொருளை அதன் சாரமான அமிசத்திலிருந்து பிரிக்க முடியாது. ஒரு தங்க நகையிலிருந்து தங்கத்தை அகற்றி விட்டால், பிறகு அந்த நகையே இல்லை. கடலிலிருந்து அலையைப் பிரித்து எடுத்து இமயத்திற்குக் கொண்டு செல்ல முடியாது. அதைப் பிரித்தவுடனேயே அந்த அலை, அலையாக இருக்காது. மண்குடத்திற்கு சாராம்சமாக இருக்கும் மண்ணை அதிலிருந்து அகற்றிவிட்டால், அப்புறம்குடம் ஏது? நாம ரூபங்களில் உள்ளவைகளுக்கு உபாதான காரணமாக இருக்கும் பொருளைத்தான் அதனதன் சாராம்சம் என்று சொல்லுகிறோம். உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் சாரம்சமாக இருப்பது ஆன்மிகப்பொருள். ஆகையால் படைப்பிலுள்ள பொருள்களுக்கும் தொடக்கம், மையம், இறுதி இவை எல்லாம் தாமே என்று கிருஷ்ணர் கூறுகிறார். ஆன்மிகப் பொருளிலிருந்து தான் நாம, ரூப இனங்கள் தோன்றுகின்றன. அதன் ஆதரவில் வாழ்கின்றன. இறுதியில் நாம ரூபங்கள் அழிந்த பிறகு அவை முழு முதற் பொருளுடன் கலந்து விடுகின்றன. இதுதான் இங்கு வலியுறுத்தப்பட்டிருக்கிறது.

விஞ்ஞானங்களில் நான் ஆன்ம விஞ்ஞானம்—நம்மிடமுள்ள அறிவுத் தத்துவம் உலகத்திலுள்ள மற்ற பொருள்களை அறிகிறது. அது இல்லை என்றால் எப்பொருளையும் நாம் அறிய முடியாது. பொருள்கள் மீது நமது அறிவு படியும்போது அவற்றை நாம் அறிகிறோம். இது விஞ்ஞானம். ஆனால் அறிவுத்தத்துவத்தை அறிவதற்கு இந்த விஞ்ஞானம் பயன்படுவதில்லை. ஆன்ம விஞ்ஞானம் மட்டுமே அதை அறிய உதவுகிறது. விஞ்ஞானத்தையே விளக்கும் ஆன்ம விஞ்ஞானம், மற்ற எல்லா விஞ்ஞானங்களுக்கும் மேற்பட்டதாகத்தான் இருக்கவேண்டும். சூரிய ஒளி உலகப் பொருள்களின் மீது படும்போது, அவற்றை நம் கண்கள் பார்க்கின்றன. நம் கண்களுக்கு பார்க்கும் சக்தியை அளிப்பது சூரியன் எனவே சூரியனை 'கண்களின்கண்' என்று சொல்லுகிறார்கள். அவ்வாறே ஆன்ம விஞ்ஞானத்தை 'விஞ்ஞானங்களின் விஞ்ஞானம்' என்று கூறுவது முற்றிலும் பொருத்தமாக இருக்கிறது.

விவாதங்களில் நான் வாதம்—இச்செய்யுளில் வரும்

'ப்ரவததாம்' என்ற சொல்லுக்கு 'பலவகை வாத முறைகள்' என்று பொருள் கொள்ள வேண்டும் என்று சங்கரர் கூறுகிறார். விவாதிப்பதில் மூன்றுவகைகள் உண்டு. எதிராளியின் பேச்சை இகழ்ந்து, வீண் மறுப்புகளால் அதை அடக்கி, தான் பிடித்த முயலுக்கு மூன்றுகால் என்று கர்வத்துடன் அடித்துப் பேசும் விவாத முறைக்கு 'ஜல்பம்' என்று பெயர். இரண்டாவது முறைக்கு 'விதண்டம்' என்று பெயர். இல்லாத முறைகளை எல்லாம் இருப்பதாகக் கூறி குறுக்குக் கட்சி பேசுவதும், சம்பந்தமில்லாதவற்றைப் புகுத்தி குழப்புவதும், முறையாகவோ அல்லது முறை தவறியோ மற்றவர் பேசுவதை மறுப்பதும் விதண்டாவாதம். மூன்றாவது வகையின் பெயர் 'வாதம்'. விவாதிக்கும் பொருள் பற்றிய விவரங்களை ஆழ்ந்து கற்று, எதையும் மாற்றியோ திரித்தோ கூறாமல், எதிராளியின் போக்கு எவ்வகையில் தவறானது என்று சுட்டிக்காட்டி உண்மையை நாடும் வாதமுறை இது. எதிராளியை முறியடிப்பதே ஜல்பம், விதண்டம் ஆகிய இரு முறைகளின் நோக்கம். உண்மையை எட்டிப் பிடிப்பது 'வாத'த்தின் நோக்கம். வாதம் தர்க்கரீதியானது அதனால்தான் கிருஷ்ணர் ''விவாதங்களில் நான் தர்க்கம்'' என்று கூறுகிறார்.

மேலும்—

அக்ஷராணுமகாரோஸ்மி த்வந்த்வ: ஸாமாஸிகஸ்யச
அஹமே வாக்ஷய: கால: தாதாஹம் விச்வதோமுக:

*10:33*

எழுத்துக்களில் நான் 'அ'காரம்; சொல் சமாஸ (சொற்புணர்ச்சி) வகைகளில் நான் துவந்தம். உண்மையில் நான் முடிவிலாக் காலம். (பிரபஞ்சத்தை) தாங்கிக் காத்து எல்லாத் திசைகளிலும் முகங்களுடன் (செயல்களுக்கு உரிய) பயன் அளித்தருள்பவன் நான்.

எழுத்துக்களில் நான் 'அ' என்ற எழுத்து—உயிரெழுத்துக்களின் உதவியின்றி சொற்களை உச்சரிக்க முடியாது என்று எல்லோருக்கும் தெரியும். மற்ற மொழிகளைவிட சமஸ்கிருதம் இனிமையாக இருப்பதற்குக் காரணம் அதில் அ ஒலி மிகுந்திருப்பதுதான். சொல்லிலுள்ள ஒவ்வொரு எழுத்துக்கும் அகர ஒலி சேர்த்து நீட்டிச் சொன்னால், அதன் இனிமையை முழுமையாக அனுபவிக்கலாம். சொற்களுக்கு இடையில் மட்டுமின்றி இரு வாக்கியங்களுக்கு இடையிலும் அகார ஒலியின் இன்ப நாதம் கார்வை கொடுத்து நிற்கிறது. ஒருமண்டபத்தில் நெடுநேரம் உபநிடத அல்லது வேதபாராயணம் செய்து நிறுத்திய பிறகும்—கூட அதன் நாத அலைகள், சுற்றியுள்ள காற்றில், தொடர்ந்து மிதந்து வருவதை இசை அனுபவமுள்ள எல்லோரும்

உணர்ந்திருப்பார்கள். உள்ளக் கலக்கங்கள் எவ்வளவு இருந்த போதிலும், இந்த இன்ப ராகம் அவற்றைப் போக்கி மனத்திற்கு அமைதி தருகிறது.

எழுத்து, சொல், வாக்கியம் ஆகியவற்றைக் கடந்து நம்மைச் சுற்றியுள்ள காற்றிலும் கலந்து நிற்பது மட்டுமல்ல— அகர ஒலி எல்லாமொழிகளிலும் முதல் ஒலியாக இருக்கிறது. இவற்றை எல்லாம் உணர்ந்துதான், ''எல்லாமொழிகளுக்கும் உயிர் நாடியாக இருப்பது அகர ஒலி'' என்று உபநிடதங்கள் கூறுகின்றன. *

சமாஸ(சொற்புணர்ச்சி) வகைகளில் நான் துவந்தம்— சமஸ்கிருத இலக்கணத்தில் பலவகை சொற்புணர்ச்சிகள் கூறப்படுகின்றன. அவற்றில் துவந்தப் புணர்ச்சி என்பது ஒன்று. இணையும் இரு வார்த்தைகளின் முக்கியப் பகுதிகள் கூட்டுச் சொல்லில் அப்படியே உருச்சிதையாமல் இருக்கும். ** இந்த இலக்கண உதாரணம் பற்றி முழுவதும் உரையாசிரியர் ஸ்ரீதர், (வேறு எவரும் இதைப் பற்றி விரிவுரை எழுதியிருப்பதாக தெரியவில்லை) பின்வரும் விவரங்களை சுட்டிக் காட்டுகிறார். மற்ற
தெரியவில்லை) பின்வரும் விவரங்களை சுட்டிக் காட்டுகிறார். மற்ற
வகை சொற்புணர்ச்சிகளை விட துவர்தப் புணர்ச்சி சமஸ்கிருத நேரடியாகவும் இணைகின்றன. ஆத்மாவும், அனாத்மாவும் கூடி புலன் பொருள் உலகத்தைப் படைத்திருப்பது போல நமக்குத் தோன்றினாலும், துவர்தப் புணர்ச்சியை கற்றறிந்தவர்கள் சுலபமாகப் பிரித்துக் காட்டுவதுபோல், விவேகிகள் ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரித்துப் பார்த்து உண்மையை அறிகிறார்கள். அதனால்தான் இவ்வுதாரணம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

எல்லாவற்றையும் தாங்கிக் காப்பவன் நான்—மகான் சங்கரர் இதை மிக நன்றாக விளக்கி இருக்கிறார். மனத்தடங்களை அழியாமல் காத்து நிற்பது ஆன்மா. * குறிப்பிட்ட ஒருவர் வெளியுலகில் எவ்வாறு நடந்து கொள்ளுவார் என்பதை நிர்ணயிக்கும் இயல்பையும் ஆன்மிகப் பொருளே காத்து வருகிறது என்று சங்கரர் விளக்குகிறார்.

ஒரே சமயத்தில் எல்லாப் பக்கங்களையும் நோக்கி—இது ஏற்கனவே மிக விரிவாக விவாதிக்கப்பட்டிருக்கிறது. ** முந்திய அத்தியாயத்தில் ''எல்லோரிடத்திலுமுள்ள ஆத்மா ஒன்றே. அது மட்டுமல்லாது அது அவர்களிலிருந்து மாறுபட்டும் இருக்கிறது.

---

* 'அகாரோவை சர்வ வாக்'

** ராம லக்ஷ்மணஎன்ற இரண்டு சொற்களும் இணைந்து ஒரு சொல்லாகும் போது ''ராம லக்ஷ்மணௌ'' என்று வரும். இதை ஸமாஸம் என்று சொல்கிறோம். சொற்புணர்ச்சி என்று சொல்லலாம்.

தவிர ஒவ்வொன்றிலிருந்துகொண்டு அது எல்லாதிசைகளிலும் பார்க்கும் முகம் கொண்டதாக இருக்கிறது'' என்று சொல்லப் பட்டது. அச்செய்யுளின் முழுப் பொருளையும் ''எல்லாப் பக்கங்களையும் நோக்கி'' (விச்வதோ முகா:) என்ற பதக் கோவையிலிருந்து புரிந்து கொள்ள வேண்டும். பேருணர்வாகிய ஆன்மாவின் அருளினால் தான் நாம் எவ்வித அறிவையும் பெறமுடியும். ஊன்றிப் பார்த்தால் இந்தச் சொற்றொடர் மாற்றமுடியாத வகையில் சுயமாக சிறந்த பொருளைப் புரிய வைக்கும் வகையில் அமைந்திருக்கிறதைக் காணலாம்.

பகவான் இத்துடன் நிறுத்த விரும்பவில்லை. மேலும் தொடருகிறார்.

*ம்ருத்யு: ஸர்வஹரஸ்சாஹ முத்பவஸ்ச பவிஷ்யதாம்*
*கீர்த்தி: ஸ்ரீர்வாக்ச நாரீணாம் ஸ்ம்ருதிர்மேதா த்ருதி:க்ஷமா*
*10:34*

எல்லாவற்றையும் விழுங்கும் மரணம் நான்; வளமாக இருக்க வேண்டியவர்களுக்கு வளமாக வருவது நானே. புகழ், செல்வம், வாக்கு, நினைவு, மேதை, உறுதி, மன்னிக்கும் இயல்பு ஆகிய பெண்மைகள் நான்.

நான் எல்லா வற்றையும் அழிக்கும் சாவு—உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பாகுபாடுகளை ஒழித்து, எல்லோரையும் சம மட்ட மாக்குவது சாவு. ஒவ்வொன்றும் அதனதன் வாழ்நாளில் தனித்தன்மை காட்டுகிறதென்றால் அதற்குக் காரணம் அது மற்றவைகளுடன் கொள்ளும் உறவுகள் தனித்தனி உறவுகள் தான். இறந்த பிறகு அசடும் அறிவாளியும், நல்லவனும், கெட்டவனும்—எல்லோருமே பிடி சாம்பலாகி மண்ணுடன் கலந்து சமநிலை பெறுகிறார்கள். அப்புறம் உயர்வுமில்லை, தாழ்வுமில்லை.

எதிர்காலத்தில் நடைபெற வேண்டியவற்றிற்கு மூலகாரணம் நான்—இறைவன் அழிவு வேலையை மட்டும் செய்து கொண்டு உட்கார்ந்திருக்கவில்லை. எதிர்காலத்தில் வரப்போகும் எல்லாப் புதுப் படைப்புக்களுக்கும் அவரே மூல காரணம். உடனுக்குடன் தொடர்ந்து நடந்துவரும் ஆக்க வேலையை கவனிக்காமல், அழிவே மட்டும் பார்த்து ஒரு முடிவுக்கு வருவது சரியான நோக்கு ஆகாது. வாழ்க்கையை முழுமையாகப் பார்த்தால், அழிவு என்று கூறப்படுவது உருமாற்றத்தைத் தவிர வேறொன்றும் இல்லை. இப்பொழுது இருக்கும் பொருளின்

*[1] கர்ம பலஸ்ய விதாதா
** கீதை, அத்தியாயம் 9. செய்–15

உருவத்தையோ அல்லது நிலவரத்தின் போக்கையோ அது மாற்றி அமைக்கிறது. அழிவு நடந்த இடம் காலியாக இருப்பதில்லை. கடலில் ஒரு அலையை மட்டும் தனித்து எடுத்துத் தனியாகப் பார்த்தால் ''அது எழுந்து கடற்பரப்பின் மீது சற்று நேரம் ஓடியாடிவிளையாடிவிட்டுத் தன்னை அழித்துக் கொண்டுவிட்டது என்று நாம் சொல்வோம். ஆனால் கடலின் நிலையிலிருந்து பார்த்தால் விழுந்துவிட்ட ஒவ்வொரு அலைக்குப்பதிலாக பல புது அலைகள் எழுவதை வரம்புக்குட்பட்ட நோக்குள்ள நீங்கள் கவனிக்காமல் விட்டிருக்கிறீர்கள் என்று தெரியவரும். தோன்றி மறையும் பிரபஞ்சமென்று நாம் கூறுவது, படைத்தும், அழித்தும் இடையறு விளையாட்டில் ஈடுபட்டிருக்கும் இறைவனுடைய லீலையைத்தான் என்பதை செய்யுளில் இந்த வரி கோடிட்டுக் காட்டுகிறது.

பெண்மையிலுள்ள புகழ், செல்வம், வாக்கு, நினைவு, மேதை, உறுதி, மன்னிக்கும் இயல்பு ஆகியவை நான்—சமஸ்கிருத இலக்கணத்தில் இங்கு கூறியுள்ள பெயர்ச் சொற்கள் பெண்பால். இந்த குணங்கள் மகளிரிடம் இருந்தால் தெய்விகத் தன்மைபற்றி இன்னும் சற்று தெளிவாக நாம் அவர்களிடம் தெரிந்து கொள்ளலாம் என்று கிருஷ்ணர் கூறுகிறாரோ, என்னவோ. இந்த குணங்களை உடையவன் தெய்விகமானவன் என்று இங்கு சொல்லப்படவில்லை. அவன் யாராக இருந்தாலும், கடந்த காலத்தில் அவன் எப்படி இருந்தாலும், இங்கு கூறப்பட்டவை அவனிடம் காணப்படும் சிற்சில நேரங்களில் அவன் மூலமாக வாழ்வின் பெருமையை மேலும் சற்று தெளிவாக நாம் தெரிந்து கொள்ளலாம், என்பது இவ்வரியின் கருத்து. சுருக்கமாகச் சொன்னால், இந்த இயல்புகளை ஒருவரிடம் காண நேரிடும் பொழுது மனித உணர்ச்சிகளும், சிந்தனைகளும் உயர்நிலை எய்துகின்றன. வாழ்வின் மகத்தான ஊற்றுக்காலை அப்போது நாம் அவரிடம் காண்கிறோம். ''நானே அந்த குணங்கள்'' என்று கிருஷ்ணர் கூறுவது அடைமொழி மாற்ற அலங்காரம்.

தம்மை அர்ஜுனன் இனங்கண்டு கொள்ளுவதற்கு உதவும் முறையில், மேலும் நான்கு உதாரணங்களை கிருஷ்ணர் தருகிறார்.

ப்ருஹத்ஸாம ததா ஸாம்னாம் காயத்ரீ சந்தஸாமஹம்
மாஸானாம் மார்கசீர்ஷோஹம் ருதூனாம் குஸுமாகர:

10:35

ஸாம கீதங்களில் நான் பிருஹத் சாமன், யாப்புவகைகளில் நான் காயத்ரீ. மாதங்களில் நான் மார்கழி, பருவங்களில் நான் மலர் குலுங்கும் வசந்தகாலம்.

ஸாம கீதங்களில் நான் பிருஹத் சாமன்—சாமவேத கீதங்களுக்கு சாமன்கள் என்று பெயர். அவை வெவ்வேறு யாப்பு வகைகளில் அமைந்திருக்கின்றன. அவற்றை வெவ்வேறு மெட்டுகளில் பாடவேண்டும். அது அவ்வளவு சுலபமல்ல. சாமன்களை சுத்தமாகப் பாட விரும்புவோர் ஒரு குருவை அடைந்து அவரிடம் பல ஆண்டுகள் பயிற்சி பெறவேண்டும். சாமவேதத்தில் உபயோகித்துள்ள யாப்பு வகைகளில் பிருஹதி என்ற சிர்தளை அமைப்பு வகை மிகச்சிக்கலானது. அதில் இயற்றப்பட்டுள்ள சாமன்களுக்கு 'பிருஹத் சாமன்' என்று பெயர்.

யாப்பு வகைகளில் நான் காயத்ரி—கீதம், பாடல் முதலியவற்றைப் பற்றி பேசும்போது பல்வேறு சீர்—தளை அமைப்புகளின் நினைவு கிருஷ்ணருக்கு வருகிறது. காயத்ரி என்ற அமைப்பில் எட்டெட்டு சீர்களைக் கொண்ட மூன்றுவரிகள் வரும். எல்லா பிராம்மணர்களும் காலையிலும், மாலையிலும் சொல்லும் சூரிய(சவித்ரு) வணக்க மந்திரம் அந்த யாப்பு முறையில் அமைந்திருப்பதால், அது புனிதமானதாகவும், மிக சக்தி வாய்ந்ததாகவும் போற்றப்படுகிறது. காயத்ரி மந்திரத்தைப் போல உலகிலுள்ள எந்த மதத்திலும் கோடானுகோடி மக்கள், தொடர்ந்து, ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகச் சொல்லி வரும் மந்திரம் வேறு எதுவுமில்லை.

மாதங்களில் நான் மார்கழி—இது டிசம்பர்—ஜனவரிமாதங்களில் வரும். அடுத்து வரப் போகும் கோடை வெய்யிலின் கொடுமையையும், சில நாட்களுக்கு முன்புபொழிந்து முடிந்த மழைத் தொல்லைகளையும் மறந்துவிட்டு சற்று நிம்மதியாக இருக்கும் காலம் இது.

பருவங்களில் நான் வசந்தம்—பூத்துக் குலுங்கும் மரங்களும், பறவை இனங்களின் பாட்டுக்களும் திரும்பிய இடமெல்லாம் வெள்ளமாகப் பரவி உள்ளத்திற்கு மகிழ்ச்சியூட்டும் இளவேனிற்காலம் இது. வண்ண வண்ண மலர் ஆடைகள் அணிந்து மலைகளும், குன்றுகளும் தங்களுடைய பெருமையை பறை சாற்றிக் கொள்ளும். வயல் வெளிகளில் பயிர்கள் அறுவடைக்குத் தயாராகிக் கொண்டு வரும். தாமரையும், அல்லியும் நீர்நிலைகளில் மலர்ந்து சிரிக்கும். கண்ணுக்கு எட்டியவரை பச்சைப் பசேலென்ற புல்வெளிகள் நிலத்தின் மீது கம்பளம் விரித்து வைத்திருக்கும். எல்லோருடைய உள்ளத்திலும் கொண்டாட்டமும், குதூகலமும் எதிரொலிக்கும். எங்கும் நிறைந்த இந்த மகிழ்ச்சி வெள்ளத்தில் தானும் பங்கு கொள்ள வேண்டுமென்ற ஆவலுடன் நிலாவும் வழக்கத்தை விடஅதிக பிரகாசத்துடன் ஒளிவீசி ஆகாயத்தில் மிதக்கும்.

கம்பீரக் காட்சிகளிலும், அழகின் நிறைவிலும் மட்டுமின்றி, ''மிக இழிந்தவற்றிலும் கூட நான் இருக்கிறேன்'' என்று கூறி அதன் காரணத்தையும் பகவான் அறிவிக்கிறுர்.

த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ் தேஜஸ்விஞமஹம்
ஜயோஸ்மி வ்யவஸாயோஸ்மி ஸத்வம் ஸத்வவதாமஹம்
*10:36*

சூதாட்டத்தில் நான் பகடைக்காய். அற்புத பொருள்களில் உள்ள அற்புதம் நான். வெற்றி நானே. (உறுதியுடன் உழைப்போரின்) கடும் உழைப்பு நான். நல்லவர்க்ளிடம் உள்ள நற்பண்பு நான்.

வஞ்சகர் கையிலுள்ள பகடைக்காய் நான்—ஒப்பற்ற போர் வீரனும், இளவரசனுமான அர்ஜுனன் தனது இந்துமதத்தின் உயிர்த் துடிப்பை மீண்டும் உணர்ந்து செயல்பட வேண்டும் என்று கருதி, ஒரு பிரசாரகனைப் போன்ற ஆவேசத்துடன் கிருஷ்ணன் பேசுகிறுர். இந்துக்கள் இந்து தர்மத்தை தெளிவாகஅறிந்து கொள்ளவேண்டும் என்பதே கீதையின் நோக்கம். சாதாரண மக்களுக்கு அவர்கள் பேசும் முறையில் எதையும் எடுத்துச் சொன்ஞல்தான் நன்ருக விளங்கும் இப்பொழுது சொல்லும் உதாரணம் அர்ஜுனன் உள்ளத்தில் நன்ருகத் தைக்கும். அவன் கெட்டதே அண்ணன் தரும புத்திரனின் சூதாட்ட ஆவலினுல் தான் என்பதை அவன் எப்படி மறக்க முடியும்? அவர் சகுனியுடன் ஆடின ஆட்டம் இப்போது அவ்வளவு பிரபலமாக இல்லே. எனவே இந்தக் காலத்தில் இவ்வுதாரணம் அவ்வளவு எடுபடாமல் போகலாம். ஆனுல் பகடைக் காய்க்கு பதிலாக இக்காலத்தில் பிரபலமாக உள்ள எந்த சூதாட்டத்தை எடுத்துக் கொண்டாலும் இக் கருத்தின் சிறப்பு நமக்குத் தெரிய வரும்.*

அற்புதப் பொருள்களில் உள்ள அற்புதம் நான்—இதுவரை கூறிய உதாரணங்களில் ஏதோ ஒன்றை தியானத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் அவை கொடுக்கப் படுகின்றன. இங்குள்ள உதாரணத்தை உபாசனேக்கு எடுத்துக் கொள்ள விரும்பும் சாதகருக்கு சாஸ்திரம் இதில் கூறுவது ஒன்றுமில்லே. இதை அவர்களே சுலபமாகத் தெரிந்து கொள்ளுவார்கள். அற்புதம் என்று நம்மை உணரச் செய்யும் இயல்பு அந்தப் பொருளில் இல்லே. உண்மையில் அது இயல்பே அல்ல. அது ஒரு அனுபவம். அதை அனுபவிக்க நமது உள்ளம்

---

* சீட்டாட்டத்தில் நான் வெட்டுச்சீட்டு. ஆயுதங்களில் நான் அணுகுண்டு. மோசடியில் நான் பொய்க் கையெழுத்து—இப்படியாக சுலோகத்தில் கூறப்பட்டுள்ளதற்கு பதில் எந்த உதாரணம் வேண்டுமானுலும் வைத்துக் கொள்ளலாம்.

ஒளியை இரவலாக பெறுகிறது. பொருளின் மீது அந்த ஒளி படியும் போது, அப்பொருள் நமக்கு ''அற்புத''மாகத் தோன்றுகிறது. எனவே ஒருபொருளே அற்புதமாகச் செய்யும் குணங்கள் பொருளில் இல்லை. ராமகிருஷ்ண பரமஹம்சர் கூறியது போல, மெய்ப்பொருள் என்பது பேரொளி தான். அதில் சந்தேகமில்லை. ஆனால் அது குண விசேஷங்கள் இல்லாத ஒளி.

நான் வெற்றி, நான் முயற்சி, நல்லவர்களில் காணப்படும் நல்ல தன்மை நான்—முந்திய வரியில் கூறியுள்ள வற்றைப் போல் இவைகளும் இயல்புகளே. இயல்புகள் என்று சொல்வது கூட அவ்வளவு சரியில்லை. இந்த இயல்புகளின் முன்னிலையில் நாம் பெறும் 'அனுபவங்கள்' ஆன்மானுபவம் பெறும் வாய்ப்பை நமக்கு அளிக்கின்றன. குறிப்பிட்ட 'சிந்தனை அலை'களின் விளைவாக ஏற்படும் மனநிலையை இந்த இயல்புகள் குறிப்பிடுகின்றன. அவற்றை உள்ளத்தில் நீடிக்கச் செய்தால், நமது மனம் பரிபூர்ண அமைதி பெறுகிறது. பேருணர்விலிருந்து தோன்றிப் பிரதிபலிக்கும் உள்ளொளி, அவ்வாறுள்ள அமைதியான மனநிலையில் மெய்ப் பொருளின் மாண்பை நமக்கு ஓரளவு விளக்கிக் காட்டுகிறது. நாம் ஏற்கனவே குறிப்பிட்டது போலஇதுவும் அடைமொழி மாற்ற அணி. ''முயற்சியின் பயனாக நான் காணப்படுகிறேன்'' என்பதை ''நானே முயற்சி''என்றுகூறுகிறார் பகவான். அடைமொழி மாற்றம் என்பது இதுதான்.

கிருஷ்ணன் தம்மை இந்த அத்தியாயத்தில் 54வகைகளில் ஒப்பிடு மூலம் உணர வைக்க முயற்சிக்கிறார். பேருண்மைப் பொருள் ஒன்றுதான். தோற்ற அளவுக்குத்தான் அது பன்மை. உண்மையான சாதகர்கள் இந்த உதாரணங்களில் எதை வேண்டுமானாலும் தியான மையமாகக் கொள்ளலாம். அதை தெளிவாக்குவதற்காகவே இந்த 54 உதாரணங்களும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இவை புறப் பொருள் பற்றிய விவரங்கள் அல்ல. இச் செய்யுட்களின் பொருளை அகத்துறை அனுபவமாக உணர்ந்து கொண்டாலொழிய கீதையை உண்மையில் புரிந்து கொண்டதாகாது.

''மேலும் விவரம் வேண்டுமானால் அர்ஜுனா இன்னும் சில உதாரணங்கள் தருகிறேன், கேள்''—

வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோஸ்மி பாண்டவானாம் தனஞ்ஜய:
முனீனமப்யஹம் வ்யாஸ: கவீனா முசனா கவி: *10:37*

விருஷ்ணி வம்சத்தவர்களில் நான் வாசுதேவன். பாண்டவர்களில் தனஞ்சயன். மேலும் முனிவர்களில் நான் வியாசர். கவிகளில் நான் உசனாகவி.

விருஷ்ணிகளில் நான் வாசுதேவன்—யாதவர்களின் முன்னேர்களில் ஒருவரான யதுவுடைய புதல்வர் விருஷ்ணி. விருஷ்ணியின் வம்சத்தினர் விருஷ்ணிகள். அவருடைய பேரனுக்குப் பேரன் பெயர் வசுதேவர். வடமதுரையை ஆண்ட கொடுங்கோலன் கம்சனுடைய சகோதரி தேவகியை அவர் மணம் புரிந்து கொண்டார். தேவகி—வசுதேவருக்குப் பிறந்த புதல்வனே கிருஷ்ணன். வசுதேவருடைய புதல்வராகையால் கிருஷ்ணனுக்கு வாசுதேவன் என்று பெயர் வந்தது.

பாண்டவர்களில் நான் தனஞ்சயன்—யாதவ குலமும், விருஷ்ணி வம்சமும் கிருஷ்ணனல் மங்காப் புகழ்பெற்று இன்னும் விளங்கி வருவதுபோல பாண்டவர்களுடைய பெருமைக்கும் அவரே காரணம். அவர் இல்லாதிருந்தால் ஐந்து பாண்டவர் எதையும் சாதிக்க முடியாமல் போயிருக்கக் கூடும். 'தனஞ்சயன்' என்ற வார்த்தைக்கு 'செல்வத்தை வெற்றி கொண்டவன்' என்று பொருள். அர்ஜுனனுக்கு இது அடைமொழியாகும். எனவே இந்த வரியை மொழி பெயர்ப்பவர்களில் பலர் பாண்டவர்களில் நான் 'அர்ஜுனன்' என்று மொழிபெயர்க்கிறார்கள்.

முனிவர்களில் நான் வியாசர்—கீதையின் ஆசிரியர் தற்பெருமைக்காகச் செய்து கொள்ளும் சுய விளம்பரம் அல்ல இது. வியாசர் என்பது இலக்கிய, தத்துவ மதத்துறைகளில் நூல்களை புதிய புரட்சிகரமான முறையில் இயற்றப்பட்ட இலக்கிய நடையைக் குறிக்க ஆசிரியர்கள் ஏற்றுக்கொண்ட புனைபெயராகும். அதுவரையில் எல்லாமுக்கியக் கருத்துக்களும் மந்திர உருவில்தான் வெளியிடப்பட்டு வந்தன—கடுகை துளைத்து ஏழுகடலைப் புகுத்து என்று சொல்லுவார்களே, அதைப்போல.

புராணங்கள் வெளிவரத் தொடங்கியதும் அவற்றை எழுதும் முறையிலும் ஒரு புரட்சி தோன்றியது. பண்டைய மாபெரும் உண்மைகளை விரித்துச் சொல்லும் நோக்கத்துடன் தோன்றிய புராணங்கள், சொல்லுவதை அழுத்தமாகச் சொல்லுவதற்காக மிகைப் படுத்தவும் செய்தன. இந்த முறையைக் கண்டுபிடித்தவர் கிருஷ்ண

த்வை பாயனர். அவர் 'வியாசர்' என்ற புனைபெயருடன் புதிய விரிவாக்கக் கலையை சிறப்பாக வளர்த்தார். இது அவருடைய புனைபெயரிலேயே பொதிந்திருக்கிறது.

* சிந்தனையாளரில் தாமே விரிவாக எல்லாவற்றையும் விளக்கி வைக்கும் சிந்தனையாளர் என்ற பொருளில் ''முனிகளில் நான் வியாசர்'' என்கிறார் கிருஷ்ணர். புராணம் என்ற பெயருடன் விளங்கும் இந்த மாபெரும் நூலுக்கு தாமே காரணம் என்று அவர் கூறுவதாகக் கொள்ளுவது மிகப் பொருத்தமாக இருக்கும்.

தீர்க்கதரிசிகளில் நான் உசனா—உசனா என்ற கவியைப் பற்றி எந்த நூலிலும் நமக்கு விவரங்கள் கிடைக்கவில்லை. அவர் சுக்கிரர்தான் என்று ஆனந்தகிரி மட்டும் கூறுகிறார். உசனா, சுக்கிரர் என்ற இரு பெயர்களும் ஒருவரைத்தான் குறிக்கின்றன என்பதற்கு காரணமோ, ஆதாரமோ அவர் காட்டவில்லை. வெள்ளி என்ற கிருகம் இருக்கிறதல்லவா, அதைச் சுக்கிரன் என்று சாதாரணமாக எல்லோருமே கூறக் கேட்டிருக்கலாம். ப்ருகு முனிவருடைய புதல்வர் சுக்கிரன்; அவர் அசுரர்களுடைய (தைத்தியர்களுடைய) குரு. சுக்கிரனை ரிக் வேதம் ''கவி'' என்று சொல்லுகிறது.

உபநிடதங்கள் கவி என்ற சொல்லை ''வேத மந்திரங்களில் பொதிந்துள்ள உண்மையை ஞானக் கண்ணால் கண்டறிந்த தீர்க்கதரிசி'' என்ற பொருளில் உபயோகித்திருக்கின்றன. நாளடைவில் கவிதை எழுதும் எல்லோருக்கும் அந்தப் பெயர் வந்தது. கவிஞர்கள் ஒரு கற்பனை உலகத்தில் வாழ்ந்து, உள்ளுணர்வு மூலம் தாம் கண்ட உண்மைகளை இனிய கவிதைகளாக்கி உலகிற்குக் கொடுத்ததால், அவர்களையும் 'கவி' என்று மக்கள் குறிப்பிட்டனர். இப்போது நாம் படிக்கும் செய்யுளில் கவி என்ற வார்த்தை அதனுடைய உபநிடதப் பொருளில் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.

மேலும் பல உதாரணங்கள் தொடருகின்றன.

---

* வ்யஸனாத் வ்யாஸ: ஒரு பொருளை விரிவாக்கிச் சொல்வதால் வியாஸர் என்று பெயர். மிதமிஞ்சிய வார்த்தைகளைக் கொட்டி, கூறியதையே மீண்டும் மீண்டும் கூறி, உண்மையை நம் உள்ளத்தில் அழியாது பதியவைப்பவர் அவர்.

தண்டோ தமயதாமஸ்மி
நீதிரஸ்மி ஜிகீஷதாம்
மௌனம் சைவாஸ்மி குஹ்யானும்
ஞானம் ஞானவதாமஹம் 10:38

தண்டிப்பவர்களில் நான் செங்கோல். வெற்றி நாடுவோரில் நான் ராஜதந்திரம். ரகசியங்களில் நான் மௌனம். விவேகிகளின் விவேகம் நான்.

சமூகத்தில் எல்லோருடைய வாழ்வும் உயர்ந்து சுபிட்சம் பெற வேண்டுமானுல், அரசனுக்கும் மக்களுக்கும் இடையில் கருத்தொருமித்த ஒத்துழைப்பு இருக்க வேண்டும். சட்டங்கள் சரியாக அமுல் நடத்தப்பட வேண்டும். சுயநலம் காரணமாக சட்டங்களைப் புறக்கணித்து சமூக விரோதச் செயல்களில் ஈடுபடும் சிலர் எப்போதும் இருந்துகொண்டுதான் இருப்பார்கள். அவர்களை தண்டிப்பது அரசின் கடமை. அவ்வாறு தண்டிப்பதற்கு அரசனுக்கு அதிகாரத்தை அளிப்பது அவருடைய கையிலுள்ள செங்கோல். தேர்ந்தெடுத்த ஜனுதிபதிக்கு அந்த அதிகாரத்தை அளிப்பது மக்களின் ஒருமித்த சம்மதம். குற்றவாளிகளை கைதுசெய்யும் அதிகாரத்தை ஒரு போலீஸ்காரருக்குக் கொடுப்பது அவருடைய உடை, செங்கோல் இழந்த மன்னன், பதவியிழந்த தலைவர், வேலை நீக்கம் செய்யப்பட்ட போலீஸ்காரர் இவர்களுக்கெல்லாம் மற்றவர்களை தண்டிக்கும் அதிகாரம் இல்லை. எனவே ''தவறு செய்பவர்களைத் தண்டிக்கும் அதிகார சின்னமாகிய செங்கோல் நான்'' என்று கிருஷ்ணர் கூறுகிருர்.

வெற்றிநாடுவோரில் நான் ராஜதந்திரம்—ஒரு நாட்டை படைபலத்தினுல் கைப்பற்றி விட்டால் மட்டும் போதாது. அதை முழு வெற்றி என்று சொல்ல முடியாது. என்று வரலாற்று நூல்களே தெளிவாக்குகின்றன. கைப்பற்றிய மன்னனின் பண்பாடு, சிந்தனை முறை, பழக்க வழக்கங்கள் முதலியவற்றை அந்நாட்டு மக்கள் ஏற்கும்படியாகச் செய்யவேண்டும். அதுதான் உண்மையான வெற்றி. அவ்வாறு மக்களை மாற்றுவதற்கு எல்லோராலும் முடிவதில்லை. ராணுவ பலத்தினுல் ஒரு நாட்டைக் கைப்பற்றிய பிறகு, ராஜதந்திரத்தினுலும், நீதிக்கு ஒத்த நிர்வாகத்தினுலுமே உண்மையான வெற்றியை அங்கு நிலைநாட்ட முடியும். அரசனுடைய விருப்பத்திற்கு இணங்க அந்நாட்டு மக்கள் நடந்து கொள்ளுவார்கள். நாட்டைக் கைப்பற்றிய மன்னர்களை உண்மையான மன்னர்களாக ஆக்கும் 'ராஜதந்திரம் நான் தான்.'

ரகசியமானவற்றில் நான் மௌனம்—ரகசியத்தை உள்ளடக்கிக் காப்பது மௌனம். வெளிப்படையாகப் பேசுகிற

எந்தப் பேச்சும், பிறகு ரகசியமாக இருக்காது. ரகசியத்தின் சாராம்சம் மௌனமே. ஆன்ம ஞானம் பெற்றவர்கள் வெகு சிலரேயாதலால், அதை ரகசியத்திலும் ரகசியமானது என்று நமது புனித நூல்கள் கூறுகின்றன. உள்ளத்தில் ஆழ்ந்த மௌனம் நிலவும் போதுதான் அந்த ரகசிய ஞானத்தைப் பெற்று, வளர்த்து அனுபவிக்கலாம். ரகசியங்கள் எல்லாவற்றிலும் பகவான் தான் மிக ஆழ்ந்த மௌன ரகசியம். விவேகிகளின் விவேகம் நான்— விவேகிகளும் விவேகமும் ஒன்றல்ல. ஆனால் அவர்களிடமிருந்து அது வேறுபட்டது என்றும் சொல்ல முடியாது. ஆன்மாவும் உடலும் ஒன்றல்ல. ஆனால் இவ்வுடல் எங்கும் நிறைந்த ஆன்மா விலிருந்து வேறுபட்டது என்றும் சொல்லுவதற்கில்லை. விவேகி களின் விவேகமும் அப்படிப்பட்டதுதான். இறைவனுடைய பெருமையின் அறிகுறி அது. ஒருவருடைய உள் ஆளுமைகள் ஒருங்கிணைந்த நிலையை விவேகம் எடுத்துக் காட்டுகிறது. எனவே தாம் விவேகம் என்று கிருஷ்ணர் கூறுகிறார்.

இறுதியில், இதுவரையில் தாம் கூறியதை எல்லாம் திரட்டிக் கூறி, ஒரு அழகான முடிவுரையுடன் இப் இகுதியை அவர் முடிக்கிறார்.

யச்சாபி ஸர்வபூதானும் பீஜம் ததஹமர்ஜுன
ந ததஸ்தி வினு யத்ஸ்யான் மயா பூதம் சராசரம்
*10:39*

எல்லா படைப்பு இனங்களுக்கும் விதை போன்றது எதுவோ அது நான்தான் அர்ஜுன! என்னைப் பிரிந்து சராசரங் களில் எதுவும் இருக்க முடியாது.

எல்லாவற்றிற்கும் விதை போன்றிருப்பது நான்தான்— கோடானு கோடி உருவ வேறுபாடுகளும், சிந்தனைகளும், கருத்துக்களும் நிலவும் இவ்வுலகத்திற்கு அடிப்படையாக இருப்பது ஆன்மீக மெய்ப் பொருள்தான் என்பதைக் கிருஷ்ணர் பலப்பல உதாரணங்களின்மூலம் சுட்டிக்காட்டினார். இம் மகத் தான உண்மையை மண்டுக்கள் கூட புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக அவர் வெவ்வேறு விதமாக அதைச் சொல்லி வந் தார். இப்போது மற்றொரு உதாரணம் தருகிறார். விதையிலிருந்து மரம் வருகிற அதிசய நிகழ்ச்சியை சாதகர்கள் சிந்தித்துக் கொண்டே இருக்கலாம். விதையினுள் உயிர்க் கரு உறங்கிக் கொண்டிருக்கிறது. தக்க காலம் வந்ததும் அது துயில் எழுந்து முளை விடுகிறது. பிறகு நாளடைவில் அது பிரம்மாண்டமான மரமாக தழைத்தோங்கி நிற்கிறது. அப்போது அதைப் பார்த் தால் 'இந்தச் சின்னஞ் சிறு விதையிலிருந்தா இவ்வளவு பெரிய மரம் வந்தது?' என்ற வியப்புத் தோன்றும். விதைக்கும் மரத்திற்

கும் சம்பந்தமே இல்லாதது போன்ற உணர்ச்சி ஏற்படும். அதே மாதிரி இப் பன்மைத் தோற்ற உலகத்தைப் பார்க்கும்போது மாற்றம், முதிர்ச்சி, சாவு ஆகிய சம்சாரத்தின் சம்மட்டி அடிகளை அனுபவிக்கும்போது—எல்லையற்ற, ஆனந்தமயமான மெய்ப்பொருள் இத்துயரமிக்க சம்சாரத்திற்கு மூலகாரணம் என்று நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. ஆனால் அதுதான் உண்மை.

பிரபஞ்சத்தின் விதைநிலை, பிரம்மாண்டமாக வளர்ந்து தழைக்கப் போகும் மரத்தின் விதை நிலை போன்றது. முளைப்பதற்கு தகுந்த காலம் வந்தவுடன் விதைக் கருவின் ஒரு பகுதி வேர்களாக முளைவிட்டு வெளியில் வருகிறது. மற்றொரு பகுதி வேர்களாக, கீழே பூமிக்குள் ஊடுருவிச் செல்கிறது. நாமரூபங்கள் நிறைந்த பிரபஞ்சத்தின் விதை நிலையை "பிரளய நிலை' என்று உபநிடதங்கள் கூறுகின்றன. நம்மை நாமே சோதித்துப் பார்த்துக் கொண்டால் இது தெளிவாக விளங்கும். நாம் ஆழ்ந்து தூங்கும்போது நமது சுபாவம், திறமை, கல்வி, பண்பாடு முதலிய எல்லாமே உறங்குகின்றன. நமது ஆளுமைக்கு அடிப்படையான எல்லா குணங்களும் விதை நிலையில் இருக்கின்றன. சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்ட பிறகு, வெளிவரவேண்டுமென்ற துறுதுறுப்பு அந்த 'வாசனை'களுக்கு ஏற்படுகிறது. தூக்கம் கலைந்த சாதக நிலையில் அவை வெளியாகி, தத்தம் இயல்புக்கேற்ப இயங்கத் தொடங்குகின்றன.

பிரபஞ்சத்திலுள்ள எல்லா மன—அறிவு சாதனங்களையும் கொண்ட மொத்த உண்மை உள்ளம் உறங்கும் நிலை ஒன்று இருக்கிறது. உயிரினங்களின் 'வாசனை'கள் அப்போது, முற்றிலும் அடக்கம் பெற்றுக் கிடக்கின்றன. அதை பிரளய நிலை என்று நமது புனித நூல்கள் கூறுகின்றன. பிரபஞ்சம் முழுவதும் அப்போது விதை நிலையில் இருக்கிறது. இப்படி உலகப் பொருள்களையும், உயிரினங்களையும் உள்ளடக்கியிருப்பதை இரண்ய கர்ப்பம் என்றும் உபநிடதங்கள் குறிப்பிடுகின்றன. இந்தச் சிறப்பான சொல்லை மேலைநாட்டு மொழி பெயர்ப்பாளர்களில் சிலர் 'பொன் முட்டை' என்று மொழி பெயர்த்திருக்கிறார்கள். அறியாமையினால்தான் அவர்கள் இவ்வாறு செய்திருக்கிறார்கள் என்றாலும், நமது புனித நூல்களின் அழகு அதனால் கெட்டு விடுகிறது. ஏறக்குறைய மத விரோதமான கருத்துத் தோன்றவும் இடமேற்படுகிறது. 'இரண்ய கர்ப்ப' என்றால் எல்லாப் பொருள்களையும், உயிரினங்களையும் கர்ப்பத்தில் வைத்துத் தாங்குகின்ற இறைவன் என்று அர்த்தம்.

உலகிலுள்ள எல்லா காரண சரீரங்களுடனும் தம்மை ஒன்று படுத்திக் கொண்டு பகவான் பேசுகிறார்—அதாவது ஈசுவரன் என்ற முறையில் படைப்பினங்களின் மொத்த

'வாசனை'களுடன் ஒன்றுபட்டு கூறுகிறார்.—அழியா ஆன்மிகப் பொருளிலிருந்து தான் சம்சாரமென்ற மரம் வளர்ந்தோங்கி நிற்கிறதென்றும், அது மீண்டும் மீண்டும் அவ்வாறு தோன்றிக் கொண்டே இருக்குமென்றும் அறிவிக்கிறார்.

'பிரபஞ்சத்தின் வித்தாக நான் இருக்கிறேன்' என்று அவர் கூறுவதை தவறாகப் புரிந்து கொண்டு யாரும் குழம்பி விடக் கூடாது. விதை மடிந்துதானே மரம் முளைக்கிறது. அவ்வாறு இறைவன் மடிந்துதான் இவ்வுலகம் தோன்றுகிறது போலும் என்று நினைத்துவிடக் கூடாது. இதைப் போன்ற ஆபத்தான முடிவுகளுக்கு வராமல் தடுக்கவேண்டும் என்பதற்காகத்தான் நான் இல்லாமல் எவ்வகை சராசரங்களும் 'இருக்க முடியாது' என்று பகவான் அழுத்தம் திருத்தமாகச் சொல்லுகிறார்.

இறைவன் இப் பிரபஞ்சத்தின் விதை என்பது உண்மை தான். ஆனால் அவருடைய வேலை அத்துடன் நின்றுவிடவில்லை. விதை மரமான பிறகும் கூட அந்த மரத்திற்கு ஊட்டமளித்துக் காத்து நிற்பது தாமே என்று இங்கு அவர் அறிவிக்கிறார். அலைகள் எழுவதற்கு 'விதை'யாக இருப்பது கடல். ஆனால் கடலின் தொடர்பை அறுத்துக் கொண்டு அவை மேலெழும்பி அந்தரத்தில் நிற்பதில்லை. நிற்க முடியாது—கடற் பரப்பைத் தொட்டுக் கொண்டிருக்கும் வரையில்தான் அவை அலைகள். பேருண்மையை, தோற்ற அளவில் திரை போட்டு மூடியிருக்கும் அவித்தை (அறியாமை)யிலிருந்து இப்பன்மை காட்டும் உலகம் எழுகிறது. பிரபஞ்சப் படைப்புக்குக் காரணமாக உள்ள பரம் பொருளே இந்த அவித்தையையும் தாங்கிக் கொண்டிருக்கிறது. தாமே ஆன்மா என்று தெரிந்து கொள்ளா அறியாமையிலிருந்து பல அனுபவங்கள், பல உலகங்கள் ஏற்படுகின்றன. ஆயினும் இந்த உலகங்களுக்கும் இறைவன் மூலகாரணமாக இருக்கிறார். அவர் இந்த அறியாமைக்கு ஒளியூட்டவில்லை என்றால், நமக்கு ஏற்படும் சுக துக்கங்களும் கூட நமக்குத் தெரியாமற் போய் விடும். விதை முளை கட்டுவதற்கும், மரமாக வளருவதற்கும் தண்ணீர் காரணமாக இருப்பது போல, சம்சாரம் என்ற விதை முளை கட்டுவதற்கும், அதன் விளைவுகளுக்கும் இறைவன் காரண சக்தியாக இருக்கிறார்.

பத்து வகை நகைகளைக் காட்டி அவை தங்கத்தால் செய்யப் பட்டவை என்று ஒருவர் கூறினால் அது முழுமையான கருத்து ஆகாது. தங்கம் இல்லாமல் அவற்றில் எந்த நகையுமே ஒரு நகை யாக இருக்காது என்றும் அவர் சொல்லும்போதுதான் நம்மிடம் அவர் கூறிய கருத்து முழுமையாக விளங்குகிறது. அவ்வாறே கிருஷ்ணன் இப்பன்மைப் பிரபஞ்சத்திற்குத் தாமே விதையாக இருப்பதாய் கூறுகிறார். அந்தவரைக்கும் அது உண்மை என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவர் விதையாக மட்டுமா இருக்கிறார்?

'என்னை பிரிந்து எதுவுமே இருக்க முடியாது' என்று அவர் சொல்லும்போதுதான் முழு விவரங்களும் நமக்குக் கிடைத்த உணர்ச்சி ஏற்படுகிறது. எல்லாத் துணியும் என்னால்தான் உற்பத்தியாகிறது என்று திருவாளர் பருத்தி கூறுகிறார் என்றால் அதில் முழுச் செய்தி நமக்குக் கிடைக்கவில்லை. 'பருத்தியின் சாராம்சமான என்னைப் பிரிந்து எந்தத் துணியும் இருக்க முடியாது என்று கூறினால், கருத்து நமக்கு முழுமையாக விளங்கு கிறது.

தெய்வீக மகிமைகள் இத்துடன் முடிந்துவிடவில்லை என்றும் பகவான் எச்சரிக்கை செய்கிறார்.

நாந்தோஸ்தி மம திவ்யானும் விதீனும பரந்தப
ஏஷ தூத்தேசத: ப்ரோக்தோ விபூதேர்விஸ்தரோ மயா

*10:40*

எனது திவ்ய விபூதிக்கு முடிவே இல்லை, பரந்தபா. இங்கு கொடுத்திருப்பது அதன் விவரங்களைப் பற்றிய சுருக்கம்தான்.

எனது தெய்விக மகிமைகளுக்கு முடிவே இல்லை—மெய்ப்பொருளின் பெருமைகளைப் பற்றி இந்த அத்தியாயத் தொடக்கத்தில் பகவான் விளக்க ஆரம்பிக்கும்போதே, அவற்றை முழுமையாக எடுத்துரைக்க எவ்வளவு காலம் முயற்சித்தாலும், அது போதாது என்றும், சொற்களால் கட்டிப் பிடிக்க முடியாத உண்மை அது என்றும் தெரிவித்தார். ஆனால் தமது சீடனை அர்ஜுனனிடமுள்ள அளவற்ற அன்பு காரணமாக அந்தக் கஷ்டமான வேலையையும் அவர் மேற்கொண்டார்—இயன்ற அளவு முயன்று பார்க்கலாம் என்ற நோக்கத்துடன். பானையின் சாராம்ச பொருளான களிமண்ணை ஒவ்வொரு பானை யிலும் காட்டு என்று ஒருவர் கேட்பதாக வைத்துக் கொள்ள லாம். எந்தக் குயவனும் அதைக் காட்ட முடியாது. ஏதோ நாலைந்தைக் காட்டலாம். இப்போதுள்ள பானைகள், இதற்கு முந்தியிருந்த பானைகள், இனி செய்யப் போகும் பானைகள்—இவ்வளவிலும் உள்ள சாராம்சப் பொருளைக் காட்டி முடித்துவிட் டேன் என்று எந்தக் குயவனும் மார்தட்டிக் கொள்ள முடியாது. அவ்வாறு காட்ட முடியுமென்று நினைப்பது முட்டாள்தனம். உண்மையில் அதற்குத் தேவையும் இல்லை. பத்து அல்லது இருபது உதாரணங்கள் எடுத்துக் கொண்டு அவற்றிலுள்ள சாராம்சப் பொருளை நாம ரூபங்களிலிருந்து பிரித்து சீடருக்குக் காட்டினால் அடுத்து வேறு ஒரு பொருள் வரும்போது சீடரே அதன் சாராம் சத்தைத் தெரிந்து கொள்ளுவார்.

பொருள் திரையினால் தோற்ற மாறுபாடுகள் இருந்தாலும் அவற்றைப் புறக்கணித்துவிட்டு, எல்லையற்ற பரம்பொருள்

எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்பதை நாம் இனம் கண்டு கொள்ள வேண்டும் என்பதற்காக ஐம்பத்து நான்கு உதாரணங்களை பகவான் கொடுத்தார். அது அர்ஜுனனுக்குச் செய்த போதனை கள்தான் என்றாலும், அவனுக்குப் பிறகு தலைமுறை தலைமுறை யாக வரும் கீதை மாணவர்களும் தெரிந்து கொள்வதற்காகவே அவர் இப் பேருண்மையை அவ்வளவு தெளிவாக விளக்கியிருக்கி றார். ஆழ்ந்த தியானத்தில் ஆழ்ந்து, இதுவரை கூறப்பட்ட உதாரணங்களைப் பற்றி யாரேனும் சிந்தித்திருந்தால், பல்லா யிரக்கணக்கான தோற்ற மாறுபாடுகளுக்குப் பின்னால் இருக்கும் பேருண்மை ஒன்றே என்பது அவருக்கு விளங்கியிருக்கும்.

ஐம்பத்து நான்கு சொல்லியாகிவிட்டது. இன்னும் எவ்வளவுதான் சொல்ல முடியும். உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளையும் எடுத்துக் கொண்டு 'அதிலும் நான் இருக்கிறேன்' என்று சொல்லிக் கொண்டே போக முடியுமா? எனவே கிருஷ்ணர் முற்றிலுமாக அலுத்துப் போய் ''எனது மகிமைகளுக்கு முடிவே இல்லை. அவை கதிரவனிடமிருந்து வரும் கிரணங்களைப்போல. நான் முழுமை பெற்று, சூரியனைப் போன்று ஒளிவீசி நிற்கிறேன்'' என்று கூறுகிறார். ''இது அவருக்கே தெரிந்திருக்கும்போது வரையறைக்கு உட்பட்ட உருவங்களில் தம்மை வெளிக்காட்டிக் கொள்ளும் முயற்சியில் அவர் ஏன் இறங்க வேண்டும்? இது என்ன ஏமாற்று வேலை? நீண்ட நேரம் மாணவர்களை கஷ்டத்திற்கு உள்ளாக்கி, கடைசி யில் இப்படி ஏமாற்றுவது என்ன நியாயம்? பொதுவாக எல்லா மத குருமார்களும், ஞானிகளும், மகான்களுமே இப்படித் தானே?''—இப்படி சிலர் நினைக்கலாம்.

இந்த முறையைக் கடைப்பிடிப்பதைத் தவிர வேறு வழி யில்லை என்பதுதான் அவர்களுக்கு சொல்லக்கூடிய பதில். மருத்துவக் கல்லூரி மாணவர் அறுவை சிகிச்சை கற்று கொள்ளும்போது, முதலில் உயிரில்லாத உடலைக் காட்டி, அதை ஆபரேஷன் செய்து பார்க்கச் சொல்லுகிறார்கள். அவருடைய அறுவையினால் அவ்வுடல் மீண்டும் உயிர் பெற்றுவிடுமா? இதென்ன ஏமாற்று வேலை என்று யாரும் கேட்க மாட்டார்கள். கவனமாகவும், திறமையுடன் அம் மாணவர் வேலை கற்றுக் கொள்வதற்கு இதைத் தவிர வேறு வழியில்லை. இந்த முறையில் அவர் அறுவைப் பயிற்சி பெற்ற பிறகு உயிருள்ள மனிதர்கள் மீது அவர் கை வைக்கலாம். அவ்வாறே கண்களுக்குப் புலப்படு கின்றவை மூலமாக புலப்படாதவைகளைக் காணும் கலையை குறிப்பிட்ட சில உதாரணங்கள் மூலம் பகவான் கற்பிக்கிறார்.

அவருடைய நோக்கம் அதுதான் என்பதை அவரே செய்யு ளின் இரண்டாவது வரியில் ஒப்புக் கொள்கிறார். ''எனது தெய்வீக மகிமைகள் பற்றிய விவரங்களை நான் சுருக்கமாகத்

தான் அறிவித்திருக்கிறேன் என்று கூறுகிறார். அவர் எல்லாவற்றையும் சொல்லவில்லை. சில நல்ல உதாரணங்களை மட்டும் தேர்ந்தெடுத்துக் கொடுத்து, கேட்போரின் உள்ளங்களை விரிவாக்குகிறார். இந்த அத்தியாயத்தில் கொடுத்துள்ள உதாரணங்களை எடுத்துக் கொண்டு தியானத்தில் ஆழ்பவர்கள், எல்லையில்லா மெய்ப்பொருள் வரையறைகளுக்கு உட்பட்ட நாம ரூபங்களின் இதயத்திலும் வீற்றிருப்பதைக் காண்பார்கள்.

சுருங்கக் கூறுமிடத்து—

யத்யத்விபூதிமத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவ வா
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம் ச ஸம்பவம்

*10:41*

எவ்வகைப் பெருமையோ, செழுமையோ, வலிமையோ எந்த படைப்பினத்தில் காணப்பட்டாலும், அது என் மகிமையின் ஒரு பகுதியே என்று தெரிந்து கொள்.

இதுவரை கூறிய உதாரணங்கள் இறைவனின் எல்லையற்ற மகிமையை விளக்குவதற்குச் செய்த எளிய முயற்சிதான்... முழுமையாக அவற்றை எடுத்துரைத்து விட்டதாக நினைத்து விடக் கூடாது. விவேகத்துடன் நோக்கினால் இறைவனின் அழியா இயல்பு பற்றி உலகத்திலுள்ள அழியும் பொருட்களிடையில் கூட நாம் தேடி கண்டு கொள்ளலாம் என்று இவ்வுதாரணங்களின் மூலம் தெரியவருகிறது.

இப்பன்மைத் தோற்ற உலகில் எதை வைத்து தெய்வ சாந்நித்யம் இருக்கிறதா இல்லையா என்று தெரிந்து கொள்வது? இப்பிரச்னைக்கு கிருஷ்ணர் நேரடியான பதில் அளிக்கிறார். மாட்சிமையோ, பெருமையோ, வலிமையோ உள்ள எதுவாக இருந்தாலும் அதில் தெய்வீகப் பொறி இருக்கிறது. ஐம்பத்து நான்கு உதாரணங்கள் மூலம் கூறிய உண்மையை இந்த ஒரு வாக்கியத்தில் கிருஷ்ணரை அடக்கியிருப்பது சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலுக்கு ஒரு அற்புத எடுத்துக்காட்டு. அதி உயர்ந்த இயல்புகளையும், நிகழ்ச்சிகளையும் எடுத்துக் கொண்டு அவற்றில் தாம் இருப்பதை அவர் குறிப்பிட்டு வந்தார். சிறப்புமிக்க எல்லாவற்றிலும் தாம் இருப்பதை இங்கு பகவான் சுருக்கமாக காட்டுகிறார்—நமக்கும் அர்ஜுனனுக்கும் சுலபமாக விளங்க வேண்டும் என்பதற்காக.

இவ்வளவு உதாரணங்களுடன் விளக்கிய பிறகு சற்று உற்சாகமிழந்த குரலில் முடிவுரையாக பகவான் பின்வருமாறு கூறுகிறார்.

அதவா பஹுனைதேன கிம்
ஞாதேன தவார்ஜுன
விஷ்ட்டப்யாஹமிதம் க்ருத்ஸ்ன மேகம்
சேனஸ்திதோ ஜகத்
10:42

ஆனல் இவ்வளவு வேறுபாடுகளையும் பரிசீலனை செய்வதால் என்ன பயன், அர்ஜுன? இவ்வுலகம் முழுவதையும் எனது ஒரு பகுதியினல் தாங்கிக் கொண்டு நிற்கிறேன்.

நட்பும், அன்பும் பொங்கித் ததும்ப, தமது யோகத்தையும் (ஒவ்வொரு வரியிலும் தாம் இருப்பது) விபூதியையும் (தாம் பிரபஞ்சமெங்கும் விரவி இருப்பது) அர்ஜுனனுக்கு விளக்கி வைக்க பகவான் முன்வந்தார். உலகத்திலுள்ள பொருள்களும், உயிரினங்களும் எண்ணில் அடங்காதவை.

ஒவ்வொரு பொருளாக எடுத்துக் கொண்டு பிரபஞ்சத்தி லுள்ள எல்லா பொருள்களிலும் தாம் இருப்பதை நிரூபித்துக் காட்ட முடியாது. இது விரைவிலேயே கிருஷ்ணருக்கு தெரிந்து விட்டது. அர்ஜுனனிடம் அளவற்ற அன்பு இருந்த போதிலும் நம்பிக்கை இழந்த குரலில் அவர் கூறிவந்ததை ஒரே வாக்கியத் தில் சுருக்கிக் கொடுத்து இந்த அத்தியாயத்தை முடிக்கிருர்.

இவ்வளவு வேறுபாடுகளையும் பரிசீலனை செய்வதால் என்ன பயன்—எல்லையற்ற பொருளை எல்லைகளுக்குட்பட்ட பொருள் களின் மூலம் விளக்க முற்படுவதால் எவ்வித பயனும் இல்லை. உலகத்திலுள்ள எல்லா பானைகளையும் கொண்டு வந்து, இதன் சாராம்சப் பொருள் களிமண்தான் என்று ஒவ்வொரு பானையை யும் உடைத்து குயவன் நிரூபித்துக் கொண்டிருக்க முடியுமா? கடலில் விழும் ஒவ்வொரு அலையிலும் கடல் அம்சம் இருக்கிற தென்று நிரூபிக்க ஆரம்பித்தால் ஒருவனுடைய வாழ்நாள் போதாது. பல ஜென்மங்கள் எடுத்தாலும் அவனல் முடியாது. நாலைந்து பானைகளை எடுத்துக் கொண்டு அவற்றில் உள்ள மண் அம்சத்தைக் கண்டு கொள்ளும் முறையை மாணவர்களுக்கு விளக்கலாம். அவ்வளவுதான் முடியும். அதற்குப் பிறகு அவர்கள் எந்தப் பானையைக் கண்டாலும் அதன் மண் அம்சத்தைக் கண்டு கொள்ளுவார்கள். ஒரு கணக்கு உபாத்தியாயர் எல்லா கணக்குப் புத்தகங்களிலும் உள்ள எல்லாக் கணக்குகளையும் வகுப்பில் போட்டுக் காட்டிவிட முடியுமா? ஒவ்வொரு வகையிலும் நாலைந்து கணக்குகளைப் போட்டுக் காட்டி, மாணவர்களுக்கு வழி காட்டி விட்டால், பிறகு அந்த வகையில் எந்தக் கணக்கு வந் தாலும் அவர்கள் போட்டுவிடுவார்கள். அதனல்தான் எல்லா வேறுபாடுகளையும் ஒவ்வொன்ருகத் தெரிந்து கொள்ளுவதால் பயனில்லை.

இப் பிரபஞ்சம் முழுவதையும் நான், எனது ஒரு பகுதியினுல் தாங்கிக் கொண்டிருக்கிறேன்—மனிதனுடைய உடல், மன, அறிவுக் கூறுகளின் அனுபவக் களங்களாக விளங்கும் மொத்த உலகை 'ஜகத்' என்று தத்துவ இயல் குறிப்பிடுகிறது. உடல், மன, அறிவு இயக்கங்கள் மட்டுமின்றி, அவற்றிலிருந்து தோன்றும் உணர்ச்சிகளும், சிந்தனைகளும்கூட இச் சொல்லில் அடங்குகின்றன. * நமக்குப் புலனுகும் உலகமும், அதன் இயக்க விளைவுகளும் சேர்ந்து மொத்தமாக 'ஜகத்' ஆகிறது.

அதைத் தாங்கி காத்து, அதற்கு ஊட்டமளித்து வருவது பரம்பொருளின் ஒரு பகுதி. எனவே பரமாத்ம உணர்வுடன் பேசும் கிருஷ்ணன், தமது மகிமையின் ஒரு பகுதியினுல் இப் பிரபஞ்சத்தைத் தாங்கி வருவதாகக் கூறுகிருர். முக்கியமான மற்றெரு தத்துவ உண்மையும் இவ்வாக்கியத்திலிருந்து வெளியாகிறது. ஜகத்தின் சலசலப்புக்கள் பேருண்மையின் பெரும் பகுதியை பாதிப்பதில்லை என்றுதான் அத்தத்துவ உண்மை. பேருண்மை பகுதிகளற்றது என்பதில் சந்தேகமில்லை. அதில் ஒரு பகுதி அல்லது கால் பகுதி என்றெல்லாம் பிரிக்க முடியாது என்பது உண்மைதான். ஆனுல் உலகத்தினுல் எட்டிப் பிடிக்க முடியாத ஒரு கருத்தை, உல்க மக்கள் வழங்கும் மொழியின் மூலம் விளக்குவதற்காக பகவான் அவ்வாறு பேச வேண்டியிருக்கிறது.

## சங்கல்ப வாக்கியம்:

இறை மாட்சி யோகம்:

விபூதி என்ற சொல் மிக விரிவாக இந்த அத்தி யாயத்தில் விளக்கப்பட்டு இருக்கிறது. ஆனுல் அதை யோகம் என்று சொல்லக் காரணம் என்ன? இங்கு கூறப்படும் வழியைப் பின் பற்றும் சாதகர்கள், தாங்கள் காண நேரிடும் படைப்பினங்களில் உள்ள மகிமையையோ, பெருமையையோ, வலிமையையோ இறைவனின் ஒளிக் கதிர்களில் ஒன்ருக பார்க்கப் பழகிக் கொள்ள வேண்டுமென்பதற்காகத்தான் இது ஒரு யோகம் என்று குறிப்பிடப்படுகிறது.

---

* ஜகதி இதி ஜகத்—மாறிக் கொண்டே இருக்கும் ஒன்றுக்குப் பெயர் ஜகத். இடம், காலம் ஆகியவற்றினுல் வரையறைக்கு உட்படுத்தப்பட்ட பொருள்களும், உயிரினங்களும் நிறைந்த இப் பிரபஞ்சம் முழுவதுமே இந்த இனத்தில் வரும்.

# விசுவரூப தரிசன யோகம்

## பகவானின் பிரபஞ்சத் திரு உருவக் காட்சி

பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும் தாம் ஊடுருவி நிற்கும் (விபூதி) மகிமையையும், அதை ஒவ்வொன்றிலும் கண்டுகொள்ளும் முறையையும் பகவான் 'விபூதி யோகத்தில் விரித்துரைத்தார். நவீன விஞ்ஞான முறையில் இங்கு அவர் தமது கருத்தை நிரூபிக்கிறார். குறிப்பிட்ட ஒரு கொள்கைக்கு ஆதரவாக உள்ள புள்ளிவிவரங்கள் முதலில் சேகரிக்கப்படுகின்றன. பிறகு அதை செயல் முறை விளக்கமாகச் செய்து காட்டி, தாம் கூறிய உண்மையை நிரூபிக்கிறார்கள். சோதனையை உள்ளடக்கிய செயல்முறை விளக்கமில்லாமல் ஒருவரும் ஒரு கருத்தை விஞ்ஞான உண்மையாக ஏற்கமாட்டார்கள். இப் பன்மைத் தோற்ற உலகிற்கு அடிப்படையாக இருப்பது ஆன்மாவே என்ற உண்மையை நிரூபிப்பதற்கு போதிய புள்ளி விவரங்களை, முந்திய அத்தியாயத்தில் கீதை அளித்தது. அதைச் செயல் முறையில் காட்டி அவ்வுண்மையை நிரூபிக்க இப்போது முன்வருகிறார் பகவான்.

எல்லாப் பானைகளுக்கும் சாராம்ச (காரண) பொருளாக இருப்பது களிமண்தான் என்பதை நிரூபிக்க, அவற்றிலுள்ள களி மண்ணை சுட்டிக் காட்டினுல் மட்டும் போதாது. எல்லா அளவு களிலும், உருவங்களிலும் உள்ள எல்லாப் பானைகளும் களி மண்ணில் எப்போதும் மறைந்திருக்கின்றன என்றும் நிரூபிக்க வேண்டும். பானைகளை அவற்றின் உருவத்திலிருந்து பிரித்து, அவற்றை மண்ணுக மட்டும் பார்ப்பதற்கு நமது கண்களுக்கு கொஞ்சம் பயிற்சி கொடுத்தால் போதும். ஆனுல் மண்ணில் எல்லாப் பானைகளையும் கண்டு கொள்ளுவதற்கு ஒரு தனிவகை 'கண்' வேண்டும். எதையும் பற்றற்று விருப்பு வெறுப்பின்றி ஆராயும் இயல்பும், கற்றறிந்த மேதையின் கற்பனையும் ஒருவருக்கு இருக்கவேண்டும். அவை இல்லை என்ருல், பானை உலகம் ஒரு கூடை மண்ணில் மறைந்திருப்பதை அவர் கண்டு கொள்ள முடியாது.

அவ்வாறே கடந்த அத்தியாயத்தில் கூறியபடி தோற்ற மறைவுள்ள உலகப் பொருள்களிலிருந்து அழிவிலா ஆன்மா தலை நீட்டிப் பார்த்துக்கொண்டிருக்கிறது என்பதைக் கண்டுகொள் வது அவ்வளவு கஷ்டமான வேலையல்ல. ஆனுல் பிரபஞ்சப் பொருள்கள் அவ்வளவுமே ஆன்மிகப் பேருண்மையில் அடங்கி உண்மையையும், உண்மை அல்லாததையும் பிரித்துப் பார்க்கத் தெரிந்த அறிவுக் 'கண்' கொண்டவர்கள் மட்டுமே அதைக் கண்டு கொள்ள முடியும். அவர்கள் பற்றற்று, விருப்பு வெறுப் பின்றி சிந்திக்கத் தெரிந்தவர்களாக இருக்கவேண்டும். அப்போது தான் அவர் தமது சொந்த விருப்பு வெறுப்புக்களிலிருந்து சற்று விலகி நின்று, அமைதியுடனும், ஆவலோடும் புதிய உண்மையை எதிர் பார்த்துக் காத்திருப்பார்.

உலகத்தில் பொருள்களைப் பிரிந்து நிற்கச் செய்வது எது? என் உடல் வேறு, என் முன்னுள்ள புத்தகம் வேறு, நான் உட் கார்ந்திருக்கும் நாற்காலி வேறு, மேஜை வேறு. ஒவ்வொன்றும் மற்ற பொருள்களிலிருந்து வேறுபட்டிருக்கிறது. விஞ்ஞான பூர்வ மாகப் பார்த்தால் எல்லாப் பொருள்களும் ஒன்றுதான். ஆயினும் அவற்றை ஒன்று என்று நாம் உணர முடிவதில்லையே, ஏன்? ஒன்றையும் மற்றொன்றையும் பிரிப்பது என்ன?

ஆழ்ந்து சிந்தித்தால், உருவ அமைப்புக்களை தனித் தனித் தீவுகளாக்குவது இடைவெளித் தத்துவம்தான் என்பது தெளி வாகத் தெரியவரும். என்னையும், உங்களையும், என்னையும் எனது புத்தகத்தையும் பிரிப்பது இடையிலுள்ள இடப்பரப்பு—நடுவி லுள்ள இடைவெளி. முழங்கையிலிருந்து மணிகட்டு வரை ஒன்ருக இருக்கும் உணர்ச்சி நமக்கு ஏற்படுகிறது. ஏனெனில் அப் பகுதியில் இடைவெளி எதுவும் இல்லை. ஒரு விரலுக்கும் மற்றொரு விரலுக்கும் நடுவில் கொஞ்சம் இடப்பரப்பு இருக்கிறது. ஆகை

யால் ஒவ்வொன்றையும் தனித்தனி விரலாகக் கருதுகிறோம். இந்த 'இடைவெளி'த் தத்துவத்தை அறவே போக்கிவிட்டால், எல்லாப் பொருள்களும் உடனே ஒன்றாகிவிடும். நம் மனத்திற்கிசைந்த, உள் வேறுபாடுகள் இல்லாத முழுமையாகி விடும். ஒன்றாக உருண்டு திரண்ட இடம் முழுமையில் எல்லாப் பொருள்களின் உருவங்களும், ஒரே இடத்தில், ஒரே காலத்தில் இருப்பதாகக் கொள்ளலாம். பிரபஞ்ச மனிதன் என்று கூறுகி றோமே, அந்தக் கருத்து இதுதான். இடம்—காலம் என்ற உணர்வுகள் நீங்கிய உள்ளத்தின் நோக்கு இப்படித்தான் இருக்கும். இடம்—கால உணர்வை முற்றிலும் நீக்கிவிட முடியுமா என்பது வேறு பிரச்னை.

மெழுகு பொம்மைகள் செய்யும் ஒருவன் விலங்குகள், பறவைகள், குழந்தைகள் முதலிய விதவிதமான பொம்மைகள் செய்து கண்ணாடி பீரோவில் வைத்திருக்கிறான். கண்ணாடி வழியாகப் பார்க்கும்போது பீரோவிலுள்ள பசுவும், குழந் தையும், குரங்கும், நடுவில் இடம் விட்டு விட்டு தனித் தனியாக வைக்கப்பட்டிருப்பதால், வெவ்வேறாகத் தெரிகின்றன. ஒருநாள் அவன் இத்தனை பொம்மைகளையும் ஒன்றாகச் சேர்த்துப் பிசைந்து, மெழுகு உருண்டையாக்கி விடுகிறான் என்று வைத்துக் கொள்வோம். பொம்மைகளுக்கு நடுவிலிருந்த இடைவெளி இப் போது இல்லை, தனித் தனியாக இருந்த பொம்மைகளின் பகுதி கள்கூட—பசுவின் தலை, குரங்கின் வால், குழந்தையின் சிரித்த முகம்—இவை எல்லாம்கூட இப்போது தோன்றியுள்ள மெழுகு உருண்டையில் காணப்படலாம். அவற்றைப் பிரித்து வைத்திருந்த 'இடப்பரப்பு' மட்டும் மறைந்து போகிறது.

அவ்வாறே அர்ஜுனன் உள்ளத்தில் இடப்பரப்புக் கருத்தை அடியோடு நீக்கிவிட்டால், பிரபஞ்சமே அவன் உள்ளங்கை நெல்லிக்கனியாகத் திகழும். கிருஷ்ணன் இங்கு அதைத்தான் செய்கிறார். அவருடைய உடல் அமைப்பு என்ற இடப்பரப்பு எல்லைகளுக்குள் அர்ஜுனனுடைய உள்ளம் சுதந்திரமாக இயங்க அனுமதிக்கப்படுகிறது. எனவே கிருஷ்ணருடைய உருவத்தில் அவனுக்கு இப் பிரபஞ்சம் முழுவதும் தெரிகிறது.

பிரபஞ்ச மனிதன் என்ற கருத்தும், கீதையில் அது நேரடி யாக காட்டப்பட்டிருப்பதும் செயல்முறை விளக்கமாக அக் கருத்தைக் காட்ட வேண்டுமென்ற ஆவலைப் பூர்த்தி செய்கிறது. யுக யுகாந்தரமாக இவ் வேட்கை மனித அறிவுக்கு உண்டு. அர்ஜுனன் பகவானுடைய விசுவ ரூபத்தைப் பார்த்தவுடன், உறுதியும், முழு நம்பிக்கையும் பெற்று புது மனிதன் ஆகிறான்.

மொழியின் அழகை எல்லாம் பிழிந்தெடுத்து வியாசர் இச் சித்திரத்தைத் தீட்டியிருக்கிறார். வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து

தித்திக்கும் கவிதையாக்கியிருப்பது மட்டுமல்ல. அதிசயம், அச்சம், ஆச்சரியம், போற்றற்குரிய பக்தியும், மரியாதையும் ஆகியவை அர்ஜுனனிடம் தோன்றுவதை எடுத்துக்காட்டி ஒரு நாடகச் சூழ்நிலையையே அவர் படைத்திருக்கிறார். உலகத்தி லுள்ள புனித நூல்களில் இவ்வளவு கருத்தாழமும், மொழி அழகும், நாடக இயல்பும் கொண்ட பகுதிகள் மிக மிகக் குறைவு. அந்த அத்தியாயம் அவ்வளவு சிறப்பாக அமைந்திருக்கிறது.

அர்ஜுன உவாச:

மதனுக்ரஹாய பரமம் குஹ்ய மத்யாத்மஸம்ஞிதம்
யத்வ யோக்தம் வசஸ்தேன மோஹோயம் விகதோமம

11:1

அர்ஜுனன் கூறினன்:

என்மீதுள்ள கருணை காரணமாக, 'அத்யாத்மம்' என்ற பெயருள்ள மாபெரும் ரகசியத்தை எனக்கு விளக்கியதால் என் மருட்சி விலகியது.

இறைவனுடைய மகிமையை கிருஷ்ணன் கடந்த அத்தி யாயத்தில் விவரித்ததினல் தனக்கு ஏற்பட்ட முழு திருப்தியை அர்ஜுனன் வெளியிடுகிறன். சீடனுக்கு அருள் புரியவும், அவனு டைய மருட்சியைப் போக்கவும் கிருஷ்ணர், மேற்கொண்ட கடுமையான பணியை அவன் மனப்பூர்வமாகப் பாராட்டுகிறன். வேறுபாடுகளுக்கு இடையில் ஒருமைப்பாட்டை காண்பவர்கள், பன்மையிலிருந்து எழும் துயரங்களை போக்கிக்கொண்டவர்கள் ஆகிருர்கள். கடந்த அத்தியாயத்தில் கூறியது அர்ஜுனனுடைய உள்ளத்தில் ஆழப்பதிந்திருக்கிறது என்பதை 'என் மருட்சி விலகி விட்டது' என்ற ஆணித்தரமான சொற்களின் மூலம் வியாசர் உறுதிப்படுத்துகிருர்.

மருட்சி அகலுவதும், பேருண்மை பற்றி அறிவு பெறுவதும் ஒன்றல்ல. மருட்சி (மயக்கம், பிரமை) அகன்றுல்தான் பேருண் மையை உணரலாம் என்பது உண்மையே. உலகப் பன்மையில் அர்ஜுனன் கொண்டிருந்த உறுதியான நம்பிக்கை இனி நிலைக்க வழியில்லை. இவ்வுலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளிலும் இறைவன் இருப்பதை கண்டுகொள்ளவேண்டும் என்று அவனுக்குத் .தெரிந்துவிட்டது. பன்மையில் ஒருமையை அவன் கண்கூடாகப் பார்க்கவில்லை. கருத்தளவில் அவனுடைய அறிவு அவ்வொருமையை ஏற்றுக்கொண்டபோதிலும்,. அதை நேரடி யாக அனுபவிக்கும் வாய்ப்பு அவனுக்கு ஏற்படவில்லை.

தன்மீதுள்ள கருணையினல் (மத் அனுக்ரஹாய) முந்திய அத்தியாயத்தில் கூறியவற்றை விரிவாகவும் விளக்கமாகவும் கிருஷ்ணர் எடுத்துரைத்திருக்கிருர் என்ற உணர்ச்சி

அர்ஜுனனுக்கு வருகிறது. கருணையினால்தான் இப் பணியை தாம் செய்து வருவதாக, இதே பொருள்படும் சொல்லை, முந்திய அத்தியாயத்தில் கிருஷ்ணனே பயன்படுத்தி இருப்பது* நினைவு வருகிறது. ''எனது பக்தர்களின் இதயத்தில் குடிகொண்டு, அறியாமையினால் அவர்கள் உள்ளத்தில் நிலவும் இருளை கருணை காரணமாக நான் அகற்றுகிறேன்'' என்று அவர் அங்கு கூறுகிறார்.

அர்ஜுனன் மீது கருணைகூர்ந்து பகவான் கூறிய வார்த்தைகள் என்ன?

பவாப்யயௌ ஹி பூதானாம் ச்ருதௌ விஸ்தரசோ மயா
த் வத்த: கமல பத்ராக்ஷ மாஹாத்ம்ய மபி சாவ்யயம்

11:2

கமலக்கண்ணா, படைப்பினங்களின் தோற்றமும் அழிவும் பற்றி உன்னிடமிருந்து விவரமாகக் கேட்டறிந்தேன். உனது எல்லையில்லா மகிமையையும் கேட்டறிந்தேன்.

ஆசிரியரிடம் சந்தேகம் கேட்கும்போது நடத்தி முடித்த பாடத்தை நன்கு படித்துவிட்டுத்தான் மாணவன் வந்திருக்கிறான் என்ற எண்ணம் ஆசிரியருக்கு ஏற்பட வேண்டும். நன்கு படித்ததற்கு அடையாளம் காட்டினால்தான், அவன் எழுப்பும் சந்தேகங்களுக்கு ஆசிரியர் உற்சாகமாக பதிலளிப்பார். இது இயற்கை. எனவே முந்திய அத்தியாயத்தில் கிருஷ்ணர் சொல்லியவற்றை முற்றிலும் அறிந்துகொண்டதற்கு அடையாளமாக ''படைப் பினங்களின் தோற்றமும், அழிவும் பற்றி உன்னிடமிருந்து கேட்டறிந்தேன். அத்துடன் உனது எல்லையற்ற மகிமையைப் பற்றியும் கேட்டறிந்தேன்'' என்று அர்ஜுனன் கூறுகிறான்.

எதையும் செயல்முறை விளக்கமாக, நேரில் பார்த்தால் தான் அறிவுக்கு ஒரு உறுதி ஏற்படும். உண்மையாகத் தெரிந்து கொண்ட மனநிறைவு உண்டாகும். அர்ஜுனனுடைய உள்ளத்தில் சந்தேகம் ஏற்படுவதற்குக் காரணம், தான் கற்ற உண்மையை நேரடியாகப் பார்க்கும் அனுபவம் ஏற்படவில்லை என்பதுதான். அந்த நிலையைப் போக்குவதற்கு இச் செய்யுள் தொடக்கப்படியாக அமைகிறது. விவாதிக்கும் ஒன்றை காரண—காரிய ரீதியாக அறிந்த ஒரு மாணவனுக்கு ஒரு ஐயப்பாடு தோன்றுகிறது என்றால், அதைப் போக்கி ஒரு நல்ல ஆசிரியர் எல்லா வழிகளிலும் மகா யோகீசுவரராகிய கிருஷ்ணர், தயைகூர்ந்து, தமது விசுவ ரூபத்தையே காட்டுகிறார் என்பதை இந்த

* அத்தியாயம் 10, செய்யுள் 11

அத்தியாயத்தில் பார்க்கப் போகிறோம்.

அர்ஜுனனுடைய கோரிக்கை என்ன? இதை அடுத்த செய்யுள் நமக்கு அறிவிக்கிறது.

ஏவ மேதத்யதாத்த த்வமாத்மானம் பரமேச்வர
த்ரஷ்டு மிச்சாமி தே ரூபமைச்வரம் புருஷோத்தம 11:3

பரமேசுவரா, உன்னைப் பற்றி நீயே விவரித்தவாறு உனது தெய்விகத் திரு உருவை (நேரடியாக) நான் பார்க்க விரும்பு கிறேன் புருஷோத்தமா.

சமஸ்கிருதத்தில் 'அப்படியே ஆகுக' (ஏவமேதத்) என்பது ஒரு மொழி வழக்கு. ''நீ கூறியதை அப்படியே ஏற்றுக்கொள்ளுகி றேன்'' என்று அர்ஜுனன் உடன்பாடு தெரிவிப்பதைக் கூறும் சொற்கள் இவை. இறைவன் எல்லா நாம ரூபங்களிலும் நிறைந்திருப்பது திருப்திகரமாக நிரூபிக்கப்பட்டு விட்ட போதிலும், அதை நிதர்சனமாகக் கண்டு உறுதி செய்துகொள்ள வேண்டுமென்று அறிவு தத்தளிக்கிறது. ஆகையால், ''உனது ஈசுவரத்திருஉருவை நான் காண விரும்புகிறேன்'' என்று அர்ஜுனன் கூறுகிறான். சர்வ வல்லமை, எல்லையில்லா அறிவு, நற் பண்பு, பலம், பேரொளி...... ஆகிய ஆறும் இறைத் தத்து வத்தின் இயல்புகள் என்று நமது சாத்திரங்கள் கூறுகின்றன. பக வான் படைப்பினங்கள் எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கிறார். அத்துடன் எல்லாவற்றிற்கும் மேம்பட்டவராகவும் இருக்கிறார். எல்லா நாம ரூபங்களும் தோன்றி, இயங்கி, இறுதியில் அவரிடமே வந்து அடக்கம் பெறுகின்றன. இவற்றை அர்ஜுனனுக்குக் காட்ட இது நல்ல தருணம் என்று கிருஷ்ணர் தீர்மானிக்கிறார்.

'உன் ஈசுவர உருவத்தைக் காட்டு; அதை நான் கண்கூடாகப் பார்க்கவேண்டும்' என்று எப்படியோ குருட்டு தைரியத்தில் கேட்டுவிட்டானே தவிர, மனத்தில் மட்டும் 'ஐயா இப்படிக் கேட்டு விட்டேனே' என்று அர்ஜுனனுக்குத் தோன்று கிறது. அறிவின் விடாப்பிடியான தூண்டுதலால் அவன் அவ் வாறு கேட்டுவிட்டான். மட்டு மரியாதையின்றி அப்படி கேட்க லாமா, அது அதிகப்பிரசங்கித்தனம் அல்லவா—என்றெல்லாம் அவனுடைய உள்ளம் குழம்புகிறது.

எனவே நயமாகவும், மரியாதையுடனும் அக் கோரிக் கையை வேறு விதமாகக் கேட்கிறான் அர்ஜுனன்.

மன்யஸே யதி தச் சக்யம் மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ
யோகேச்வர ததோ மே த்வம் தர்சயாத்மான மவ்யயம்
11:4

பிரபுவே, அதை என்னால் பார்க்க முடியுமென்று நீ நினைத்தால், தயது செய்து உனது ஆன்ம வடிவத்தை எனக்கு காட்டு யோகேசுவரா.

முந்திய செய்யுளில் உள்ள அதே கோரிக்கையை பணிவும், மரியாதையும் தோன்ற, கௌரவமான சொற்கள் மூலம் விண்ணப்பித்துக் கொள்ளுகிறான். பெரிய அதிகாரிகளுக்கு நாம் மனுச் செய்து கொள்ளும்பொழுது ''எனது தாழ்ந்த கோரிக்கை ஏற்க வேண்டுமென்று வணக்கத்துடன் வேண்டிக்கொள்ளுகிறேன்'' என்றெல்லாம் எழுதுவது போன்ற மரியாதை இங்கு தென்படுகிறது. ராணுவ அதிகாரிகள் இடும் கட்டளைகளைப் போல் அல்லாமல், அர்ஜுனனுடைய தொனியும், சொற்களும் இப்போது மிக மிருதுவாகவும், சுண்யமாகவும் இருக்கின்றன. ''அழிவிலா பிரபஞ்ச வடிவத்தை என்னால் பார்க்க முடியுமென்று உனக்குத் தோன்றினால், அதை நீ காட்டு'' என்று மிக அடக்கமாகக் கேட்கிறான்.

மிக மரியாதையாக இருப்பதைப் போல் நடித்து, தனது நோக்கத்தை சாதித்துக்கொள்ள வேண்டும் என்பதற்காக அர்ஜுனன் இவ்வாறு அடக்கத்துடன் பேசவில்லை. முதலில் பிரபுவே' என்றும் அடுத்த வரியில் 'யோகேசுவரா' என்றும் மனம் உருகி அழைப்பதிலிருந்தே அது தெரிகிறது. கிருஷ்ணர் சாதாரணமாக நாம் காணும் ஆசான்களைப் போன்றவர் அல்லர் என்றும், ஆன்மிகத்துறையில் சில பிரசங்கங்கள் செய்துவிட்டுப் போகிறவர் அல்லர் என்றும் அர்ஜுனன் உணருகிறான். அவர் இறைவனே என்றும், யோகத்தில் ஈசுவரன் என்றும், விசுவரூபத்தைக் காட்டுவதால் ''மாணவன்'' பயன் பெறுவான் என்று தோன்றினால், அதைக்காட்டும் தகுதியுள்ள 'ஆசிரியர்' என்றும் அர்ஜுனனுக்கு நிச்சியமான நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது.

ஆர்வத்துடன் அணுகும் ஒரு மாணவன், பணிவுடன் விடுக்கும் வேண்டுகோளை உண்மையான எந்த ஆசிரியரும் மறுப்பதில்லை.

ஸ்ரீ பகவான் உவாச:

பச்ய மே பார்த்த ரூபாணி சத சோத ஸஹஸ் ரச:
நானாவிதானி திவ்யானி நானா வர்ணாக்ரு தீனி ச

11:5

பகவான் கூறினார்:

நூற்றுக்கணக்கிலும் ஆயிரக்கணக்கிலும், பல்வேறு தெய்வீக வகைகளிலும், பற்பல வண்ணங்களிலும் தோற்றங்களிலும், எனது உருவங்களைப்பார் பார்த்தா.

எல்லா நகைகளிலும் சாராம்சப் பொருளாக இருப்பது தங்கம் என்றால், மொத்தத் தங்கத்தில் உலகத்திலுள்ள நகைகள் எல்லாம் நமக்குத் தெரிய வேண்டும். நகைகளில் தங்கம் இருப் பதைப் பார்ப்பது சற்று சுலபம். அது வெறும் கண்ணால் பார்த்துத் தெரிந்துகொள்ளும் ஒரு வேலை. ஆனால் மொத்தத் தங்கத்தில் பல் வேறு உருவங்களையும் நிறங்களையும்கொண்ட நகைகளைக் கண்டு கொள்வது அவ்வளவு சுலபம் அல்ல. ஏனெனில் இது 'அறிவுக் கண்'ணால் பார்த்துணரும் வேலை.

இதை நினைவு வைத்துக்கொண்டு படித்தால், ''நூற்றுக் கணக்கிலும், ஆயிரக் கணக்கிலும் எனது பல தெய்வீக உரு வங்களை, பல வண்ணங்களிலும் அமைப்புத் தோற்றங்களிலும் பார்'' என்பதிலுள்ள கருத்துச் செறிவு தெளிவாகும். கிருஷ்ணர் தமது உருவத்தை பிரபஞ்ச மனிதனுடைய உருவமாக மாற்றிக் கொள்ள வேண்டியதில்லை. அர்ஜுனன் செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான்—தன் முன்னுள்ள உருவத்தை அவன் சரி யாகப் பார்க்கவேண்டும். துரு திருஷ்டவசமாக அர்ஜுனனு டைய பார்வை சரியாக இல்லை. கிருஷ்ணரில் ஏற்கனவே இருப்பதைக்கண்டு அறிவதற்கு ஏற்ற முறையில் அவனுடைய பார்வைக் கருவி' பொருத்தி வைக்கப்படவில்லை.

தொலை நோக்கிக் கருவி இருக்கிறது. ஒளியின் கதிர் மையத் திற்கு அப்பாலுள்ளவற்றை அதன் மூலமாகப் பார்க்க முடியாது. மையத்தைக் கணக்கிட்டு அதற்கு ஏற்றவாறு கருவியைப் பொருத்தி வைத்தால் தூரத்திலுள்ள எந்தப் பொருளும் தெரியும். அவ்வாறே கிருஷ்ணர் பிரபஞ்ச உருவமாகத் தம்மை மாற்றிக்கொள்ளவில்லை. அர்ஜுனன் சில அவசியமான அக மாற்றங்களைச் செய்து கொள்வதற்கு அவர் உதவினார். அவ்வளவு தான். அம்மாற்றங்களின் விளைவாக தன் எதிரில், கிருஷ்ணரிடம், ஏற்கனவே உள்ள மகிமைகளை அவன் பார்க்க முடியும். 'பார்' என்ற சொல்லில் சற்று அழுத்தம் விழுகிற தென்றால், அது இயற்கையே, புலனறிவுக்கு எட்டும் எல்லா உரு வங்களும், வண்ணங்களும்கொண்ட மொத்த உலகம் பகவான் கொடுக்கும் பட்டியலில் வருகிறது.

அவை என்ன?

பச்யாதித்யான் வஸூன் ருத்ரானச்வினௌ மருதஸ்ததா
பஹூன்யத்ருஷ்ட பூர்வாணி பச்யாஸ்சர் யாணி பாரத

*11:6*

கிருஷ்ணனுடைய விசுவரூபத்தில் அடங்கிய இனங்களை சொல்லும்போது, அற்புதமானவற்றையும், மிக முக்கியமாகக் குறிப்பிடத் தகுந்தவைகளையுமே குறிப்பிடுகிறார். நாம் ஒரு

பெரும் கூட்டத்தையோ, பொருள் குவியலையோ விவரிக்கும் போது, குறிப்பாக உள்ள சிலவற்றை மட்டும் சொல்லிவிட்டு ''ராமன் முதலியவர்கள் வந்திருக்கிறார்கள்'' என்றோ ''அரிசி முதலியவைகள் வாங்க வேண்டும்'' என்றோ பொதுப் படையாகக் கூறிவிடுகிறோம். அப்படிச் செய்வதைத் தவிர, சில சமயங்களில், வேறு வழியில்லாமல் போகிறது.

அர்ஜுனன் காணப்போகும் விசுவ ரூபத்தில் ஒவ்வொரு இனத்தையும் சுட்டிக்காட்டி விவரிக்க முடியாது என்ற உணர்ச்சி கிருஷ்ணருடைய சொற்களிலேயே தெரிகிறது. சிலவற்றைச் சொல்லிவிட்டு 'இதற்கு முன் பார்த்திராத இன்னும் பல அதிசயங்களைப் பார்' என்று சொல்லிவிடுகிறார்.

இச் செய்யுளில் வரும் பெயர்கள் ஏற்கனவே நமக்குத் தெரிந்தவை. *அசுவினி குமாரர்கள் என்ற பெயர்தான் இதில் புதிது. குதிரைத் தலையுடன் கூடியவர்களாகச் சித்திரிக்கப்படும் இந்த இரட்டையர்களைப் பற்றிய விவரங்களோ, அக் குறியீடு பற்றிய உட்பொருளோ சரியாகத் தெரியவில்லை. இருள் கவிந்து வரும் நேரத்தையும் இவர்கள் குறிப்பிடுவதாக சிலர் எழுதியிருக்கிறார்கள். விடி வெள்ளி, மாலை வெள்ளி ஆகிய இரண்டையும் குறிப்பிடுவதாக நினைப்பதற்குப் போதிய காரணங்களும் இருக்கின்றன. அது எப்படியாயினும், பக்தர்கள் இன்னல்களுக்கு உள்ளாகும்போது அவர்களுக்கு உதவி செய்யும் தேவதைகள் இவை என்று மட்டும் தெளிவாகத் தெரிகிறது.

கிருஷ்ணன் கொடுத்த சுருக்கப் பட்டியல் அர்ஜுனனுடைய ஆவலை மேலும் அதிகரிக்கிறது. அதைப் பார், இதைப் பார் என்றால், எங்கே பார்ப்பது என்று அவனுக்குத் தெரியவில்லை. கிருஷ்ணர் அதற்கு பதிலளிக்கிறார்.

இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்னம் பச்யாத்ய ஸசராசரம்
மம தேஹே குடாகேச யச்சான்யத் த்ரஷ்டு மிச்சஸி

*11:7*

குடாகேசா, சராசரங்களை, நீ காண விரும்பும் மற்றவைகளையும் உள்ளிட்டே பிரபஞ்ச முழுவதையும் இந்த 'சரீரத்தில்' சேர்ந்து இருப்பதைப் பார்(ப்பாய்).

பிரபஞ்ச உண்மையைத் தெரிந்துகொள்ளும் ஆவல் ஏற்கனவே அர்ஜுனன் உள்ளத்தில் கொழுந்துவிட்டு எரிகிறது. வரப் போகும் தெய்வீகத் தோற்றத்தில் அவன் என்ன எதிர் பார்க்கலாம் என்பதை கிருஷ்ணன் விவரிக்கிறார். இதனால் அர்ஜுனனு

---

* ஆதித்தியர், மனுக்கள், வசுக்கள், ருத்திரர்கள் விவரங்களுக்கு, கீதை அத். 10, செய்யுட்கள் 21, 23—பார்க்க.

டைய துடிப்பு மேலும் அதிகரிக்கிறது. தான் காணப்போகும் காட்சியில் அர்ஜுனனுடைய கவனம் எல்லாம் குவிந்து ஒரே குறியில் அவன் சிந்தனை நிலைத்து நிற்க வேண்டுமென்பதற்காக, கிருஷ்ணர் இந்த முறையைக் கையாளுகிறார். அவருடைய நோக்கம் இச் செய்யுளில் நிறைவேறுகிறது. பக்தி மார்க்கம் கூறும் அன்புக் கருத்தை வியாசர் இதில் முழுமையாக வடித்துக் கொடுத்திருப்பதாகத் தோன்றுகிறது. கிருஷ்ணர் கையாளும் முறையும், அதற்கு ஏற்றவாறு செய்யுளின் சொல்லாட்சியும் அதை வலியுறுத்துகின்றன.

உணர்வுள்ளவை, உணர்வற்றவை (சேதனம், சடம்) முதலிய எல்லாவற்றையும் கொண்ட பிரபஞ்சத்தை கிருஷ்ணர் தமது உருவ அமைப்பில் காட்டுகிறார். 'இங்கே ஒருங்கிணைந்து' (இஹ கேஸ்தம்) என்ற சொற்களில் அர்ஜுனனுடன் அவர் கொண்டுள்ள மிக நெருங்கிய உறவு வெளியாகிறது. இதிலுள்ள 'இங்கே' என்று சொல்லுக்கு 'இந்த எனது உடலில்' (மம தேஹே) என விளக்க உரையையும் அளித்து பகவான் மிக மிகத் தெளிவாக எல்லாவற்றையும் சொல்லுகிறார். நாம ரூபங்களுடன் கூடிய எல்லா சராசரங்களும் தனது மானிட உருவத்தில் அடங்கி யிருக்கிறது என்பது பொருள். ஏற்கனவே * விவரித்துள்ளபடி, இடப்பரப்புக் கருத்து முழுவதும் அர்ஜுனன் உள்ளத்தில் நீக்கப் படவில்லை. கிருஷ்ணருடைய மானிட உருவ அளவுக்கு அக் கருத்து தொடர்ந்து இருந்துவர பகவான் அனுமதி அளித்திருக் கிறார். இவ்வுள்ளத்துடன் அர்ஜுனன் பார்க்கும்போது, பிர பஞ்சம் முழுவதும் ஒரு சட்டம் போட்ட படம் போல கிருஷ்ணனுக்குள் அடங்கியிருப்பது அவனுக்குத் தெரியவரும்.

சராசரங்களைக் கொண்ட பிரபஞ்சம் முழுவதையும் பார்க்க லாம் என்று அர்ஜுனனிடம் கூறிய பிறகு, ''நீ விரும்பும் மற்றவை களையும் பார்க்கலாம்'' என்று கிருஷ்ணன் கூறுவதற்கு என்ன பொருள்? பிரபஞ்சம் முழுவதையும் தவிர 'மற்றவை' என்று தனி யாக ஏதாவது உண்டா என்ன? அர்ஜுனனுடைய உற்சாகத்தை மேலும் தூண்டுவதற்காக அவர் இப்படிக் கூறுகிறார். அர்ஜுனன் நம்மைப் போல் ஒரு சாதாரண மனிதன். அவனுடைய உள்ளத்தில், நமக்கு இருப்பதைப் போல் இல் வாழ்க்கை பற்றிய பிரச்னைகளே மேலோங்கி நிற்கின்றன. எதிர் காலத்தில் வரப் போவதை அறிந்து அதை சமாளிக்கும் முறைகளையும் தெரிந்து கொள்ளவேண்டும் என்று எண்ணுகிறான். கோடானு கோடி பொருள்களையும் உயிரினங்களையும் கொண்ட இவ்வுலகிற்கு அடிப்படையாக இருக்கும் சாராம்சப் பொருள் ஒன்றுதான் என் பதை முக்கியமாக அவனுக்கு உணர்த்த வேண்டுமென்று

* அத். 11 முன்னுரையில் காண்க.

கிருஷ்ணன் அவனுடைய உள்ளத்திற்கு அதிக உற்சாகம் அளிக்கிறார்.

பன்மையிலுள்ள ஒருமையை அவர் கடந்த அத்தியாயத்தில் விளக்கினார். ஒருமையிலுள்ள பன்மையை இப்போது நாம் பார்க்கப் போகிறோம்.

நது மாம் சக்யஸே த்ரஷ்டுமனேனைவ ஸ்வசக்ஷுஷா
திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம் 11:8

ஆனால் உன்னுடைய இந்தக் கண்களால் நீ என்னைப் பார்க்க முடியாது. உனக்கு தெய்வீகக் கண் அளிக்கிறேன். எனது ஒப்பற்ற யோகத்தைப் பார்.

பொருள்களை தனித் தனியாக எடுத்துக்கொண்டால் அவற்றின் சாராம்சப் பொருளைக் கண்டுகொள்வது ஓரளவு சுலபம் என்றும், ஆனால் சாராம்ச மொத்தத்தில் தனிப் பொருள்களைக் கண்டுகொள்வதற்கு தத்துவப் பயிற்சி பெற்ற நுண்ணறிவு வேண்டும் என்றும் முன்பே விளக்கப்பட்டிருக்கிறது. ஒரு கவிதையைப் படிப்பதற்கு எழுத்தறிவு இருந்தால் போதும். அதிலுள்ள அழகைப் புரிந்துகொள்வதற்கும், மற்ற கவிதைகளுடன் ஒப்பிட்டு அதை அனுபவிப்பதற்கும் எழுத்தறிவு மட்டும் போதாது. கவிதையில் ஊறிய, சிறப்பு மிக்க உள்ளமே அதை அனுபவிக்க முடியும். அவ்வாறே, நம்பிக்கை செறிந்த 'இதயம்' பன்மையில் ஒருமையைக் கண்டு கொள்ள முடியும். ஒருமையில் பன்மையைக் காண்பதற்கு 'இதயம்' மட்டுமின்றி, பயிற்சி பெற்ற 'அறிவும்' தேவை. ஆழ்ந்த தத்துவங்களின் தர்க்க அடிப்படையை அது தானாகவே புரிந்துகொள்ளுகிறது. இதய பூர்வமான அறிவு இயக்கத்தினால்தான், சாதாரணக் கருத்துக்களில்கூட அசாதாரணப் பொருளைக் காணலாம்.

பொதுவாக எல்லோருக்கும் விளங்கக்கூடிய, இதைத்தான் இந்தச் செய்யுள் கூறுகிறது. 'இந்தக் கண்களால் என்னைப் பார்க்க முடியாது. உனக்கு தெய்வீகக் கண் தருகிறேன்' என்று இச் செய்யுளில் பகவான் அறிவிக்கிறார். 'தெய்விகக் கண்' என்பதற்கு சிலர் கூறும் பொருள் சுத்தக் கேலிக் கூத்தாக இருக்கிறது. இவ்வாறு தப்பும் தவறுமாக உரை எழுதுபவர்களுக்கு நமது சாத்திரங்களின் உபநிடதங்களின் நடை பற்றி அதிகமாகத் தெரியாது. புற உலகப் பொருள்களைப் புரிந்துகொள்வதற்கு நமது புலன்கள் எவ்வளவுதான் உபயோகமாக இருந்தாலும் சூக்குமப் பொருள்களை அவற்றின் மூலம் அறிய முடியாது என்று உபநிடதங்கள் வெளிப்படையாகவோ, உட்பொருளாகவோ கூறுகின்றன. நாமே 'பத்திரிகை பார்த்தேன்,' என்று சொல்லுகிறோம் அல்லவா. நமது கண்கள் செய்த வேலையையா அப்படிக்

குறிப்பிடுகிறோம்?' படித்து அறிந்துகொண்டேன்' என்ற பொருளில், அறிவு செய்த வேலையை கண்களுக்கு மாற்றிச் சொல்லுகிறோம். இப்போது நாம் ஆராயும் செய்யுளிலும் பார்த்தல்' என்ற சொல் இந்த முறையில்தான் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. ஒரு விஷயத்தை பரிபூரணமாக அறிந்து கொள்ளும் சக்திதான் 'தெய்விகக் கண்.'

இப்பன்மைப் பிரபஞ்சத்திற்கு பகவானே ஆதரவு கொடுத்து நிற்கிறார் என்பதை தெரிந்த கொள்ள உதவுவதற்காக, தம்முடைய ஒப்பற்ற யோக சக்தியின் மூலம் அர்ஜுனனுக்கு 'சிறப்புப் பார்வையை' அவர் அளிக்கிறார். பகவானுடைய இந்த யோகசக்தி பற்றி முன்னரே இரண்டு இடங்களில் குறிப்பிடப் பட்டிருக்கிறது.*

காட்சி இப்போது ஹஸ்தினபுரத்திற்கு, திருதராஷ்டிரருடைய அரண்மனைக்கு, மாறுகிறது.

சஞ்சய உவாச:

ஏவ முக்த்வா ததோ ராஜன் மஹாயோகேச்வரோ ஹரி:
தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம்

11:9

சஞ்சயன் கூறினான்:

இவ்வாறு சொன்னபிறகு, மன்னரே! மகாயோகே சுவரராகிய ஹரி, பார்த்தனுக்குத் தமது ஒப்பற்ற ஈசுவரனுடைய விசுவரூபத்தில் காட்சி அளித்தார்.

தொட்டதெல்லாம் பொன்னுக்கும் மாமேதை வியாசர், கவிதை எழுதுவதில் மட்டுமல்ல—உரை நடை, வர்ணனைத்திறன், புதுவகை இலக்கியப் படைப்பு உலக அறிவு, தத்துவஞானம், அரண்மனையையும், போர்க்களத்தையும், இமயமலைச் சிகரத்தையும் ஒன்றாக நினைக்கும் சமநோக்கு போன்ற எல்லாத் திறமைகளுமே அவரிடம் குவிந்திருந்தன. இந்து மரபில் மிகச் சிறந்ததென்று நாம் கருதும் பண்புகள் முழுமையாக அவரிடமிருந்தன. உலகில் இவரைப் போன்ற ஒருமகான் எங்குமே வாழ்ந்ததாக வரலாறு இல்லை.

ஒரு புறம் தமது பிரபஞ்ச உருவத்தைக் காட்டுவதாக அர்ஜுனனிடம் கிருஷ்ணர் சொல்லிக்கொண்டிருக்கும் போதே, வஞ்சகர்களாகிய கௌரவர்களின் தந்தையும், குருட்டு மன்னனுமான திருதராஷ்டிரனுக்கு சஞ்சயன் போர்க்களச் செய்திகளை அறிவிக்கும் காட்சியை வியாசர் நம்முன் கொண்டு வருகிறார்.

---

* அத். 7, செய்யுள்12; அத்.9, செய்யுள் 4.

வாக்களித்தபடி கிருஷ்ணன் தமது விசுவரூபத்தை அர்ஜுனனுக்குக் காட்டுவதை எடுத்துரைப்பதே இச் செய்யுளின் நோக்கம். அத்துடன் சஞ்சயனின் உள்ளத்தையும் அவனுடைய ஆதரவு யார் பக்கம் இருக்கிறது என்பதையும் மகாபாரத ஆசிரியர் நன்ருக படம் பிடித்துக் காட்டுகிருர்.

சஞ்சயனை 'நமது சிறப்பு நிருபர்' என்று முன்னரே கூறியிருக்கிரேம். அவனுடைய அனுதாபம் கிருஷ்ணனுடைய நண்பர்களான பாண்டவர் பக்கம் இருக்கிறது. சஞ்சயனுடைய சொற்களிலிருந்தே இது தெரிகிறது. திருதராஷ்டிரரை 'மன்னரே' என்று மட்டும் அழைக்கும் சஞ்சயன், கிருஷ்ணனைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'யோகேசுவரன்' (யோகங்களின் பிரபு) ஹரி (தீய சக்திகளை ஒழித்து உண்மையை நிலை நாட்டுவோன்) என்று புகழ்மாலைகளைக் குவித்துக் கொண்டு போகிருன். குருட்டு மன்னனை இவ்வார்த்தைகள் ரத்தம் சிந்தாமல் கொலை செய்கின்றன.

சஞ்சயன் பேசத் தொடங்குவதுடன் கீதை மாணவர்களும் போர்க்களத்திலிருந்து திருதராஷ்டிரர் அரண்மனைக்கு செல்லுகிருர்கள். கீதைத் தத்துவம் வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டது என்று நினைவூட்டுவதற்கு இந்த மாற்றம் அவசியமாக இருந்திருக்கலாம். யோகேசுவரர் தமது பிரபஞ்ச ரூபத்தை அர்ஜுனனுக்கு காட்டினுர் என சஞ்சயன் திருதராஷ்டிர மன்னனுக்குத் தெரிவிக்கிருன். பகவான் பாண்டவருடைய பக்கம் இருக்கிருர் என்று தெரிந்து கொண்டபிறகாவது, தனது மைந்தர்களின் அழிவைத் தடுப்பதற்காக மன்னன் கடைசி நொடியிலாவது போரை நிறுத்தச் சொல்ல மாட்டானு என்று சஞ்சயன் மனம் நொந்து ஏங்கி எதிர்பார்க்கிருன்.

கிருஷ்ணனின் விசுவரூபத்தில் தன் கண்ணுக்குப் புலப் பட்டதை எல்லாம் சொல்லமாட்டாமல், அங்கொன்றும் இங்கொன்றுமாக சஞ்சயன் திருதராஷ்டிரனுக்குச் சொல்லுகிருன்.

அநேக வக்த்ர நயனமநேகாத்புத தர்சனம்
அநேக திவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம்

*11:10*

திவ்ய மால்யாம்பரதரம் திவ்ய கந்தானு லேபனம்
ஸர்வாஸ்சர்யமயம் தேவம் அனந்தம் விச்வதோ முகம்

*11:11*

*10* எண்ணிக்கையில் அடங்கா வாய்களுடனும், கண்களுடனும்,

எண்ணற்ற அற்புதக் காட்சிகளுடனும், எண்ணில் அடங்கா திவ்ய ஆபரணங்களுடனும், எண்ணற்ற தெய்விக ஆயுதங்கள் ஏந்தியும்—

*11* தெய்விக மாலைகளையும், ஆடைகளையும் அணிந்து, தெய்விக மணம் வீசும் வாசனைப் பொருள்களை பூசிக் கொண்டு, அதி ஆச்சரிய கரமாகவும், ஒப்பற்ற பிரகாசத்துடனும், முடிவில்லாமலும், எல்லாப்பக்கங்களிலும் முகங்களை உடையதாகவும் (நான் காணும் உருவம் இருக்கிறது)

ஒரு ஓவியர் தமது கருத்துக்களை வண்ணச் சித்திரங்களாக வரைந்து காட்ட முற்படும்போது, சித்திரத்தின் வெளிக் கோடுகளை முதலில் வரைந்து கொள்ளுகிறார். பிறகு வண்ணக் கலவை கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக ஓவியத்தைத் தீட்டி முடிக்கிறார். அவ்வாறே சொல்லோவியம் தீட்டும் வியாசர், சஞ்சயனுடைய வார்த்தைகளில் பகவானின் விசுவரூபத்தை பகுதி பகுதியாகக் கோடிட்டுக் காட்டுகிறார்.

இங்கு கூறப்பட்டதைப் போன்ற ஒரு உருவத்தைக் கற்பனை செய்து கொண்ட ஒரு உள்ளம் நிம்மதியாக இருக்க முடியாது. அதை நினைக்க நினைக்க ஆச்சரியமாகவும், பயமாகவும் இருக்கும். மொத்தப் பிரபஞ்சம் என்ற கருத்து மனத்திற்குப் பிடிபடாத ஒன்று. அறிவுக்கு அது திகைப்பூட்டுகிறது. அது கீதையில் உண்மையாகவே தோன்றும்போது, சஞ்சயனுடைய சொற்கள் தடுமாறுகின்றன. முதலில் கூறிய காட்சியுடன் திவ்ய மாலைகள், ஆடைகள், வாசனைப் பொருள்கள், எல்லாப்புறமும் முகங்கள் முதலியவற்றுடன் சேர்த்துப் பார்க்கும்போது உருவத்தோற்றம் மேலும் சற்று விளக்கம் பெறுகிறது.

சஞ்சயனுடைய பரபரப்புத்தீரவில்லை. வாய்குளறுகிறது. ஆயினும் சில விவரங்களைத் திட்டவட்டமாகக் கொடுக்க முன் வருகிறார்.

*திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத்யுக பதுத்திதா*
*யதிபா: ஸத்ருசீ ஸா ஸ்யாத்பாஸஸ்தஸ்ய மஹாத்மன:*
***11:12***

ஆயிரம் சூரியர்கள் (ஒரே சமயத்தில்) ஆகாயத்தில் பிரகாசித்தால் எப்படி இருக்குமோ, அப்படி இருக்கிறது அங்கு தோன்றும் மாபெரும் மானிட உருவம்.

குருட்டு மன்னனுக்கு தான் கண்ட உருவத்தைப்பற்றி அரைகுறையாகச் சொல்லியபிறகு, அதன் பிரகாசத்தை சஞ்சயன் விவரிக்கிறான். சுயம் பிரகாசப் பேரொளியில் அவ்வுருவம் கண்களால் பார்க்க முடியாததாக இருக்கிறது.

அதனால்தானே என்னவோ, முந்திய செய்யுட்களில் சஞ்சயன் அதிக விவரங்கள் கொடுக்க முடியவில்லை.

ஈசுவர உருவத்தின் ஒளி, ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியர்கள் ஒளிபரப்பி நிற்பதைப் போல் இருப்பதாகக் கூறப்படுகிறது. ஆன்மாவைப் பற்றிக் கூறுகையில் உபநிடதங்களிலும் இந்த உவமை வருகிறது. ஆனால் சஞ்சயன் சொல்லும் போது, அதுவும் கிருஷ்ணனுடைய தெய்விகத் தோற்றத்தை இதன்மூலம் வருணிக்கும்போது, எப்படியோ இந்த உவமை புது மெருகும், அழகும் பெற்று வருவதுபோல் தோன்றுகிறது.

மேலும் சில விவரங்களை சஞ்சயன் சிறப்பாக அறிவிக்கிறான்—

தத்ரைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம் ப்ரவிபக்த மனேகதா
அபச்யத்தேவதேவஸ்ய சரீரே பாண்டவஸ்ததா

***11:13***

அங்கு, தேவ தேவருடைய உடலில், பிரபஞ்சம் முழுவதும் அதனுடைய பல்வேறு கணக்கிலாப் பகுதிகளுடன் ஒன்றுபட்டு அடங்கியிருப்பதைப் பாண்டவன் கண்டான்.

பகவானுடைய திருஉருவத்தில் பன்மைத்தோற்ற உலகம் முழுவதும் ஒன்று சேர்த்து, வைக்கப் பட்டிருப்பதை அர்ஜுனன் கண்டான். பிரபஞ்ச மனிதன் என்று கூறுவதன் பொருளை நாம் முன்னரே பார்த்தோம். இடம்—காலம் என்ற வரையறைகளுக்குள் இயங்க மறுக்கும் ஒருஉள்ளத்தின் பிரபஞ்ச நோக்கு அது. 'ஒன்றில் பன்மையைக்' காணுதல் என்றால், அது உடலைப்பற்றிய விஷயமல்ல. அறிவு மட்டத்தில் நாம் காணும் கருத்து. கிருஷ்ணனுடைய உடல் அளவுக்கு பிரபஞ்சம் சுருங்கிவிட்டது என்று அதற்குப் பொருள் கொண்டு விடக்கூடாது. உலகத்திலுள்ள ஒருமைப் பாட்டை அர்ஜுனன் அறிந்து கொண்டால் போதும். அறிவு பூர்வ மாக அதைப்புரிந்து கொண்டால் அவ் ஒருமைப்பாடு பற்றி அவன் சரியான மதிப்பீடு செய்யமுடியும்.

எல்லாப் பொருள்களையும் வகை பிரிப்பதற்கு இன்றைய வேதியல் முயற்சிக்கிறது. கிடைக்கும் பொருள்களை எல்லாம் சோதனை செய்து பார்த்ததில் அவை சுமார் 103அடிப்படைப் பொருள்களே பல்வேறு விதங்களில் கலந்து உருவாகியிருக்கின்றன என்று தீர்மானித்தனர். அடிப்படைப் பொருள்களை மேலும். சோதனை செய்து, அவற்றிலுள்ள ஒவ்வொரு அணுவும் புரோட்டான், எலக்ட்ரான், நியூட்ரான்களின் சேர்க்கையைத்தவிர வேறில்லை என்று

கண்டுபிடித்தனர். பழைய 103 மூலங்கள் பற்றிய கருத்தை இப்போது கைவிட்டு விட்டார்கள்.

பல்வேறு வகைத் தோற்றங்களைக் கொண்ட பொருள்களை ஒரு விஞ்ஞானி அறிவு பூர்வமாகப் பார்க்கும் போது, அவை எல்லாமே இம்மூன்றின் கூட்டுத்தான் என்ற உறுதி அவரிடம் தோன்றுகிறது. இன்றைக்கு இம்மூன்று அடிப்படை மூலகங்களைத்தான் விஞ்ஞானிகள் ஏற்றுக் கொள்ளுகிறார்கள். அதைப் போல, கிருஷ்ணருடைய அருளால், அர்ஜுனன் சிறப்பு அறிவு பெற்றபோது, பிரபஞ்சம் முழுவதுமே மொத்த அறிவில்— இறைத்தத்துவத்தில்— இருப்பதைக் காண்கிறான்.

இப்பிரபஞ்ச உருவத்தைப் பார்த்து அர்ஜுனன் என்ன செய்தான்? இதை சஞ்சயன் உன்னிப்பாக கவனித்து திருதராஷ்டிரனுக்குக் கூறுகிறான்.

*தத: ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தனஞ்ஜய:*
*ப்ரணம்ய சிரஸா தேவம் க்ருதாஞ்சலிரபாஷத*

*11:14*

பிறகு தனஞ்சயன் வியப்பில் மூழ்கி மெய்சிலிர்த்து இறைவனை நோக்கித் தலை வணங்கி, கூப்பிய கைகளுடன் பேசலானான்.

தன்முன் தோன்றிய காட்சியைக் கண்டவுடன் ஆச்சரியம் மேலிட்டதால் அர்ஜுனனுக்கு உடல் புல்லரிக்கிறது. மெய் சிலிர்க்கிறது. சஞ்சயன் வெகு தூரத்தில் இருந்த போதிலும், போர்க்களத்திலுள்ள ஒவ்வொரு வீரனுடைய உடல் அசைவுகள் மட்டுமின்றி, உள்ளிருக்கும் மன—அறிவு இயக்கம் கூடத்தெரிகிறது. அர்ஜுனனுடைய உரோமம் குத்திட்டு நின்றதைக் கண்டதுபோல, வியப்புத் தாங்காமல் அவனுடைய உள்ளம் தத்தளித்ததையும் சஞ்சயன் கண்டான். அர்ஜுனன் கூப்பிய கரங்களுடன் கிருஷ்ணர் முன் தலைவணங்கி முதன் முதலாகப் பேசத் தொடங்கினான். அவனுடைய உணர்ச்சிகள் நெஞ்சை அடைத்ததால் இவ்வளவு நேரம் அவன் பேசவில்லை என்பது தெரிந்தது. இப்பேரரிய காட்சியைக் கண்டு அவனுக்கு சப்தநாடியும் ஒடுங்கிவிட்டது.

அவ்வளவு ஆச்சரியத்தில் மூழ்கியிருந்த அர்ஜுனன் என்ன கூறினான்?

*அர்ஜுன உவாச:*
*பச்யாமி தேவான்ஸ்தவ தேவ தேஹே*
*ஸர்வான்ஸ்ததா பூதவிசேஷ ஸங்கான்*
*ப்ரஹ்மாண மீசம் கமலாஸனஸ்தம்*
*ருஷீன்ஸ்ச ஸர்வானுரகான்ஸ்ச திவ்யான்* *11:15*

அர்ஜுனன் பேசினன்—

உன் உடலில் நான் எல்லா தேவர்களையும் பார்க்கிறேன், நிகரிலா ஒளிபடைத்தவனே! பலவகை உயிரினங்களைப் பார்க்கிறேன். தாமரை மலர்மீது அமர்ந்திருக்கும் பிரம்மாவைப் பார்க்கிறேன். எல்லா முனிவர்களும் இருக்கிறார்கள். பாம்புகளும் இருக்கின்றன.

'பேரொளி மிக்கவனே' என்று கிருஷ்ணனைப் பார்த்து அர்ஜுனன் கூறும் போது, சற்றுமுன் சஞ்சயன் அவரை ஆயிரம் சூரியர்களுக்கு ஒப்பிட்டது நினைவு வருகிறது. எல்லாதேவர்களையும், பலவகை உயிரினங்களையும் கண்டதாகத் தெரிவித்தான். பலவகை ஆடைகள், ஆபரணங்கள், அற்புத மாலைகள், ஆயிரக்கணக்கானவர்களுடைய கைகளில் ஆயுதங்கள்' முதலியவற்றைப் பார்த்ததாக சஞ்சயன் குறிப்பிட்டது இந்த தேவர்களுடைய ஆடை, ஆபரணங்களையும், அவர் கையிலிருந்த போர்க்கருவிகளையும் தான்.

கிருஷ்ணனுடைய விராட் சொரூபத்தில் உலகப் பொருள்கள் மட்டுமின்றி, தேவர்களும் இருப்பது அர்ஜுனனுடைய சொற்களிலிருந்து தெரிகிறது. அதிதைவக் கருத்தை அவன் இச்செய்யுளில் வலியுறுத்திக் கூறுகிறான். விசுவரூபத்தினுள் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியவர்களும் மற்றும் பல முனிவர்களும் தென்படுகிறார்கள்.

பாம்புகளும் கூட அங்கு தெரிகின்றன—மிக உயர்ந்த பொருளைப்பற்றிச் சொல்லிக் கொண்டு வரும்போது, முற்றிலும் எதிர்பாராத சிறு விவரமொன்றையும் திடீரென்று புகுத்துவது கவிதை முறைகளில் ஒன்று. கவனத்தை வேறுபுறம் திரும்ப விடாமல், பேசப்பட்டு வரும் பொருளிலேயே நிலைக்கச் செய்வதற்காக கவிஞர்கள் இந்த உத்தியைக் கையாளுகிறார்கள். விண்ணுலக பிரம்மாமுதல், புற்றுக்குள் இருக்கும் பாம்புவரை எல்லா இனங்களும் இறைவனின் பேருருவத்தில் காணப்படுகின்றன. வியஷ்டியும், சமஷ்டியும் ஒன்றுதான். மெய்ப்பொருள் எங்குமே விரவி இருப்பதால் அணுவே அண்டமாகிறது. நமது மாபெரும் சிந்தனையாளர்கள் இதை முன்னரே தெரிவிக்கிறார்கள். ஆனால் இந்த தத்துவக் கருத்தை, இவ்வாறு படம் பிடித்ததுபோல் யாரும் சொன்னதில்லை. அதை முதன் முதலில் செய்தவர் வியாச மாமுனிவர். அவரை பின்பற்றும் தைரியம் கூட பிறகு வந்தவர்களுக்கு ஏற்படவில்லை.

மகா தைரியசாலியைக் கூட நடுங்க வைக்கும் விசுவரூபத்தைப் பார்த்துவிட்டு அர்ஜுனன் பதறுகிறான்—

அனேக பாஹூதர வக்த்ர நேத்ரம்
பச்யாமி த்வாம் ஸர்வதோனந்த ரூபம்
நாந்தம் ந மத்யம் ந புனஸ்தவாதிம்
பச்யாமி விச்வேச்வர விச்வரூப

**11:16**

எத்தனையோ கைகள், வயிறுகள், வாய்கள், கண்களுடன், எந்தப் பக்கத்திலும் எல்லை கட்டமுடியாத உனது உருவத்தைப் பார்க்கிறேன். (இவ்வுருவின்) முடிவோ, மையமோ, தொடக்கமோகூட எனக்குத் தெரியவில்லை, ஓ பிரபஞ்ச நாயகனே, விசுவரூபனே.

வரையறைகளுக்கு உட்பட்ட மனித அறிவைக் கொண்டு வரையறையற்ற விசுவரூபத்தை ஒரே நோக்கில் பார்த்துத் தெரிந்து கொள்ள முடியாது. அவ்வுருவத்தின் பரப்பும் அதைப் பற்றிய கருத்தாழமும், நினைத்தாலே கதிகலங்குகிறது. எல்லா செயல் உறுப்புக்களுக்கும் இயக்க சக்தி அளிப்பது மெய்ப்பொருளே என்பதை ‘எத்தனையோ கைகள், வயிறுகள், வாய்கள், கண்கள், ஆதியந்தமில்லாத உடல்—இவற்றை எல்லாம் அவ்வுருவில் பார்க்கிறேன்’ என்று கூறுகிறான் அர்ஜுனன். அது இறைவனுடைய கேலிச்சித்திரம் போல் இருப்பதாகக் கருதுவது முட்டாள்தனம். இவ்வாறு எச்சரிக்கை செய்ய வேண்டியதன் அவசியம் என்ன என்றால், இப்பகுதியை படித்த உற்சாகத்தில் சில ஓவியர்கள் இங்கு கூறியிருப்பது போல் சித்திரங்கள் வரையத் தொடங்கி விடுகிறார்கள். பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த கதையாகி விடுகிறது அவர்களுடைய முயற்சி.

பிரபஞ்சத்தை உள்ளடக்கிய ஒன்று என்றால் அது நமக்குப் புலனாகும் பொருள் அல்ல; உணர்ந்து கொள்ளும் ஒரு நிலை. அடுத்து அர்ஜுனன் கூறும் சொற்கள் அதை உறுதிப் படுத்துகின்றன. ‘உனது இவ்வுருவத்தின் முடிவு, நடு, இறுதி இவை எதுவுமே தெரியவில்லை’ என்று அவன் கூறுகிறான். மெய்ப்பொருளை இதைவிட சிறப்பாக வர்ணிக்க முடியாது. எல்லா நாம ரூபங்களும் அம்மெய்மையிலிருந்தே தோன்றி, வாழ்ந்து, கடைசியில் ஆதியந்தமில்லா அப்பரமனிலேயே கலந்து விடுகின்றன. இச்செய்யுட்களை ஊன்றிப் படித்து சிந்தித்தால் இதைப்போல பல ஆழ்ந்த உண்மைகள் நமக்குத் தெரியவரும். மலர்களை ஒருமாலையாகக் கோர்த்து நிற்கும் சரடுபோல, இச்செய்யுட்கள் உலகப் பன்மையை ஒருங்கிணைத்து நிற்கும் ஒருமைப் பொருளை விளக்குகின்றன.

இந்தப் பிரபஞ்சத் தோற்றத்தில் தேவர்களுக்கும்கூட

இடமிருக்கிறதா என்ற சந்தேகம் சிலருடைய உள்ளத்தில் எழலாம். அதற்கு பதில் பின்வருமாறு—

கிரீடினம் கதினம் சக்ரிணம் ச
தேஜோ ராசிம் ஸர்வதோ தீப்திமந்தம்
பச்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்
தீப்தானலார்கத்யுதி மப்ரமேயம்

11:17

மகுடம், கதாயுதம், சக்கரம் ஆகியவற்றுடன் நிற்கும் உன்னை நான் பார்க்கிறேன். எங்கு பார்த்தாலும் ஒரே ஒளிமயமாக இருக்கிறது. சுற்றிலும் பெரும் நெருப்பு எரிவது போலவும், சூரியனைப் போலவும் ஒளி பிரகாசமாக வீசுகிறது. பார்க்கக் கண் கூசுகிறது. எதுவுமே விளங்கவில்லை.

விளங்கா விசுவரூபக் களேபரத்தில், ஏதோ விளங்கிய வரை அர்ஜுனன் விவரிக்க முயற்சிக்கிறான். கிரீடம், தண்டு, சக்கரம் ஆகியவை அவனுக்குத் தெரிகின்றன. அவை மஹாவிஷ்ணுவின் சின்னங்கள் என்று புராணங்கள் கூறுகின்றன.

இந்த நூல்களில் ஒவ்வொரு கடவுளுக்கும் சின்னங்கள் உண்டு. அது பகவானுடைய ஒரு இயல்பைக் காட்டுவதாக இருக்கும். பொருள்களுக்கும், நிகழ்ச்சிகளுக்கும், களமான இவ்வுலகத்தில், மன்னர்கள் மணிமுடி தரித்திருப்பார்கள். அவர்களுடைய கையில் கதாயுதம் இருக்கும். சூழ்நிலையையும், உணர்ச்சிக் கொந்தளிப்புக்களையும் அடக்கி ஆள்பவனே உண்மையான நாயகன். வாழ்க்கைக்கும், அதன் கவர்ச்சிகளுக்கும் அடிமையாகி இருப்பவன் பலவீனமானவன். அவன் கிரீடம் தரித்துக் கொள்வது, நாடக மேடையில் ராஜா வேடக்காரன் மகுடம் தரித்திருப்பது மாதிரிதான்—தாற்காலிகமானது. ஒருவன் தன்னைத்தானே அடக்கியாளும் வலிமை பெற்றிருந்தாலொழிய, எவ்வளவு உயர்ந்த பதவியில் இருந்தாலும் அவனால் எவ்வித நன்மையும் செய்யமுடியாது. வேட்கைகளை அடக்கி, தமது உள்ளத்தைக் கட்டுப்படுத்தியவர் உண்மையில் விஷ்ணுவைப் போன்றவர். மணிமகுடம் அவருக்கே தகும் என்று சுட்டிக் காட்டுகிறது கிரீடம்.

மகாவிஷ்ணுவுக்கு நான்கு கைகள். அவற்றில் முறையே சங்கு, சக்கரம், கதாயுதம், தாமரை ஆகிய நான்கும் வைத்திருப்பதாக புராணங்கள் கூறுகின்றன. அது ஒரு சிறப்பான குறியீடு. தாமரைப்பூவை அமைதி, சந்தோஷம், சுபம் முதலியவற்றின் சின்னமாக நமது மக்கள் கருதுகிறார்கள். தமது கடமைகளை சரிவர செய்யும்படி சங்கொலி ஒவ்வொருவரையும் அழைக்கிறது. தங்களுடைய உள்ளுணர்விலிருந்து எழும் உயர்ந்த

பண்புக் குரலுக்கு செவி சாய்க்காமல், வீண் சண்டைகள், குழப்பம், சமூகச் சீர் குலைவு, வகுப்பு வெறியைத் தூண்டி விடுதல் போன்ற இழி செயல்களில் ஈடுபடுகிறவர்களுக்குப் பிரசாதம்வழங்க கதாயுதம் காத்திருக்கிறது. அப்படி தண்டனை பெற்றும் வழிக்கு வராதவர்களை—இனி அவர்களை திருத்தி நல் வழிக்குக் கொண்டு வரவே முடியாது என்ற நிலைக்கு வந்துவிட்ட கயவர்களை—சுழலும் சக்கரம் பார்த்துக் கொள்ளுகிறது. அது கால சக்கரம்—திருந்தி முன்னேற முடியாத அளவுக்கு படுகுழியில் விழுந்துவிட்ட ஒரு தலைமுறையை அழித்து நிர்மூலமாக்கும் சக்தியின் அறிகுறி.

இவை எல்லாம் விசுவரூபத்தின் பகுதிகள் என்று கூறியவுடன், சின்னஞ்சிறு பூச்சி, புழுக்களிலிருந்து தெய்விகமும் மூர்த்திகள் வரை, எல்லாவற்றிற்கும் அடிப்படையாக இருப்பது அதே பேருண்மை தான் என்று வெட்ட வெளிச்சமாகிறது. எல்லா இடங்களிலும், எல்லாக் காலங்களிலும் அது மாறாமல், தொடர்ந்து இருந்து வருகிறது என்றாலும், அது ஒவ்வொன்றிலும் வெவ்வேறு வகையில் தன்னை வெளியிட்டுக் கொள்கிறது. மிக நுணுக்கமான பொருள்களில் அதன் தெய்விக ஒளி வெளியாகும் அளவுக்கு நுணுக்க மில்லாதவற்றில் ஆவதில்லை.

எங்கு பார்த்தாலும் ஒளி மயமாக இருக்கிறது. தீயையும் சூரியனையும் விட அதிகப் பிரகாசமாக இருக்கிறது, பார்க்கக் கண் கூசுகிறது—செய்யுளில் இது மிக அழகான இடம். தூய உணர்வு மயமாக இருக்கும் இறைவனின் மகிமை அற்புதமாக உணர்த்தப் பட்டிருக்கிறது. சாதாரணமாக விளக்கு ஏற்றும் போது வரும் வெளிச்சத்தை ஒளி என்று சொல்லுகிறோம். பேருணர்வு நிலையை சுட்டிக் காட்டுவதற்கும் நாம் இந்த சாதாரணச் சொல்லைத்தான் பயன்படுத்த வேண்டியிருக்கிறது. நமது கருத்துக்களுக்கும், உணர்ச்சிகளுக்கும்கூட இது ஒளியூட்டுகிறது. இந்த உள்ஒளி கண்கள் மூலம் பாய்ந்து, வெளியுலகப் பொருள்கள் மீது படிந்து, நாம ரூபங்களுக்கு 'ஒளி' யூட்டுகிறது. அதே உள் 'ஒளி' காதுகள் வழியாகப் பாய்ந்து ஓசைகளுக்கு 'ஒளி' யூட்டுகிறது. இவ்வாறு எல்லா புலனியக்கத்திற்கும் இவ்வுணர்வுப் பேரொளியே காரணமாக இருக்கிறது. எனவே எல்லையில்லாப் பேருணர்வின் உருவகமான கிருஷ்ணரின் விசுவரூபத்தை, அர்ஜுனன் சொல்வதைப் போல,

''ஒரே ஒளி வெள்ளமாக இருக்கிறது. அதை எப்படிச் சொல்வது?''

என்று தட்டுத் தடுமாறி விவரிப்பதைத்தவிர வேறு வழியே இல்லை.

ஒன்றுமே புரியவில்லை—தான் பார்க்கும் உருவத்தையும், அது தன் உள்ளத்தில் எழுப்பும் உணர்ச்சிகளையும், முடிந்த அளவுக்கு

அர்ஜுனன் விவரிக்க முயற்சிக்கிறான். ஆனால் அதில் வெற்றி பெற முடியாதென்ற உணர்ச்சியே மேலோங்கி நிற்கிறது. அவன் சொல்ல விரும்புவது மொழி வலையில் சிக்கவில்லை. அனுபவத்தை வெளியிடும் கருவிதான் மொழி. இங்கு அர்ஜுனன் விசுவரூபத்தைப் பார்க்கிறான், உணருகிறான், அது தன்னில் இருப்பதையும் புரிந்து கொள்ளுகிறான். ஆனால் இவ்வளவு அனுபவத்தையும் சொற்களின் மூலம் வெளியிட முடியவில்லை. வெளியில் இப்படி இருக்கிறது, அப்படி இருக்கிறது என்று தோற்றத்தை, சும்மா அரை குறையாக, சொல்லிவிட்டுப் போதில் அர்ஜுனனுக்குத் திருப்தி இல்லை. அவனுடைய கருத்துக்களையோ உணர்ச்சிப் பெருக்கையோ எடுத்துச் சொல்லுவதற்கு வேண்டிய வலிமை மொழிக்கு இல்லை. அவன் சொல்ல நினைத்த கருத்தை எட்டிப் பிடிக்காமலே வார்த்தைகள் திரும்பி விடுவதாக அவனுக்குத் தோன்றியது. எனவே ''இறைவனே, உன்னைப்பற்றி எப்படிச் சொல்வதென்று ஒன்றுமே புரியவில்லையே'' என்று கதறுவதைத் தவிர வேறு வழியில்லை. புற அனுபவத்தை எடுத்துரைக்கும் மொழியில் விசுவரூப அனுபவத்தையும் வியாசர் சித்தரித்திருக்கிறார் என்றாலும், பேருண்மை என்பது அறியும் பொருள், அறியப்படும் பொருள் அல்ல என்பதை நமக்குத் தெளிவாக்கி விடுகிறார். ஆன்மாதான் அறிகிறது, உணருகிறது, புரிந்து கொள்ளுகிறது. அது அறியப்படுவதோ, உணரப்படுவதோ, புரிந்து கொள்ளப்படும் பொருளோ அல்ல.

''உனது யோக சக்தியை இவ்வுருவத்தில் நோக்கிய பிறகு, எனக்குப் பின்வருமாறு தோன்றுகிறது''

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம்
த்வமவ்யய: சாச்வததர்மகோப்தா
ஸனாதனஸ்த்வம் புருஷோ ம்தோமே

*11:18*

நீ அழிவற்றவன், அறியத் தகுந்தவற்றில் தலை சிறந்தவன். பிரபஞ்சத்தை உள்ளடக்கிய ஒப்பிலாக் கருவூலம். அழியா தருமத்தைக் கட்டிக் காப்போன் நீ. புராதன மகா புருஷன் நீயே என்று நான் நம்புகிறேன்.

தத்தம் அனுபவங்களை வைத்து ஒரு முடிவுக்கு வருவது புத்திசாலிகளின் இயல்பு. அதுதான் உண்மையான அறிவு. அர்ஜுனனுக்கு ஒருமகத்தான அனுபவம் ஏற்பட்ட புத்தியினால் அதை முற்றிலும் அறிந்து கொள்ளவோ, வார்த்தைகளினால் விவரிக்க முடியாத அளவுக்கு அவ்வளவு சூக்குமமான அனுபவம்

அது. ஆனுலும் தான் பார்த்ததிலிருந்து அவன் சில முடிவுகளுக்கு வருகிருன். இவ்விசுவரூபத்தைத் தோற்றுவிக்கும் சக்திதான் அழியாப் பேருண்மை என்று அவனுக்கு விளங்குகிறது.

கடற்பரப்பில் கோடானு கோடி அலைகள் எழுந்து, சற்று நேரம் ஓடியாடி விளையாடிவிட்டு பிறகு அக்கடலிலேயே கலந்து விடுகின்றன. அதைப் பார்க்கும் போது எல்லாஅலைகளுக்கும் அடிப்படையாக இருப்பது கடல்தான் என்று முடிவுக்கு வருகிருேம். அலைகளையும் அதன் சலசலப்புகளையும் உள்ளடக்கிய கருவூலமாகக் கடல் நமக்குக் காட்சி அளிக்கிறது. அதைப் போல, எங்கும் பரவி நிற்கும் கிருஷ்ணன், இப்பன்மைத் தோற்ற கலக்கம் உண்டாவதற்கும், இருப்பதற்கும், பிறகு பிறந்த பொருளுடன் சென்று கலந்து விடுவதற்கும் அடிப்படைக் காரணமாக இருக்கிருர் என்ற சரியான முடிவுக்கு அர்ஜுனன் வருகிருன். பிரபஞ்சம் (விச்வ) என்று இங்கு குறிப்பிடுவது விஞ்ஞானிகள் கூறும் விண்கோள் உலகங்களை மட்டுமே அல்ல. உடல், மனம், அறிவுக் கருவிகளினுல் உலகிலுள்ள எல்லோரும் பெறும் அனுபவத் தொகுப்பையும் சேர்த்தே 'பிரபஞ்சம்' என்று வேதாந்தம் கூறுகிறது. உடல், மன, அறிவு மட்டங்களில் தோன்றும் அசைவுகளாகிய பிரபஞ்சத்திற்கும் இறைவனே அஸ்திவாரம். (நிதானம்)

மாருத அளவுகோல் ஒன்று இருந்தால் தான் மற்றவை மாறுகின்றனவா, இல்லையா என்று அளந்து தெரிந்து கொள்ளமுடியும். மாற்றத்திற்கு உள்ளாகும் எல்லாப் பொருள்களும் மாரு அடிப்படை ஒன்றை வைத்தே மாறுகின்றன. இடம்—காலம் ஆகிய இரண்டுக்கும் ஏற்றவாறு உலகம் மாறிவருகிறது. உலக நிகழ்ச்சி தொடரை நாம் அறிந்து கொண்டு, மொத்தமாக அதைப் புரிந்து கொள்வதற்கு நிலைத்த, மாருத''அறிவுத் தத்துவம்'' ஒன்று இருக்க வேண்டும். தானே மாருமல், மாறிவரும் நிகழ்ச்சிகளை அது எடுத்துக் காட்டுவதாக இருக்க வேண்டும் என்று சொல்ல வேண்டியதில்லை. அவ்வாறு உள்ளது ஆன்மா. அது ஒன்றே இவ்வளவு பிரம்மாண்டமான விசுவரூபத்தை மேற்கொள்ள முடியும். இவற்றை எல்லாம் நினைத்துப் பார்த்து, ''இந்த அதிசய உருவாகத் தன்னை மாற்றிக் கொண்டுள்ள ஒருவன், திருத்தங்களுக்கும் மாற்றங்களுக்கும் இடையில் மாருமல் விரவி நிற்கும் தனிப் பெரும் மெய்ப்பொருளாகத்தான் இருக்க வேண்டும்'' என்று அர்ஜுனன் தீர்மானிக்கிருன்.

தருமத்தைக் காப்பது அரசனுமல்ல, மதகுருவும் அல்ல. அதை இறைவனே பாதுகாத்து வருகிருர் என்பது இந்துக்களின் நம்பிக்கை. வரலாற்றில் எத்தனையோ மகான்கள் தோன்றி யிருக்கிருர்கள். அந்தந்தத் தலைமுறையினரின் பிரச்னைகளைத்

தீர்ப்பதற்குத் தங்களால் இயன்ற அளவு பாடுபட்டு பணிபுரிந்திருக்கிறார்கள். ஆனால் அது வரையறைக்கு உட்பட்ட, தாற்காலிகமான பணி. இந்துக்கள் அப்படிப்பட்டவர்களைப் பின் பற்றவில்லை. அழியா மெய்ப்பொருளே அவர்களுடைய லட்சியம், அவர்களுடைய வழிகாட்டி, அவர்களுடைய மார்க்கம். நச்சுப் புகையையும், அணுகுண்டையும் வைத்துக் கொண்டு தருமத்தை பாதுகாக்க முன்வரும் 'மகான்கள்' நமக்குத் தேவையில்லை.

நீதான் சனாதன புருஷன் என்பது என் கருத்து—வேதாந்தத்தில் ஒருவருடைய உடலை ஒன்பது வாயில்கள் கொண்ட தலைநகருக்கு ஒப்பிடுவது வழக்கம். ஒவ்வொரு வாயிலையும் பாதுகாக்கும் காவல்தேவதை ஒன்று உண்டு. அந்நகரின் (உடலில்) அதிபதியாக உள்ளிருப்பவரை சமஸ்கிருத மொழியில் 'புருஷன்' என்று சொல்லுவார்கள். உலக வாழ்க்கையின் ரகசியத்தைத் தெரிந்து கொள்ளுவதற்கு அதன் மூல காரணத்தை—பிரபஞ்ச அடிப்படையை—தெரிந்து கொள்ள வேண்டும். அதை வெளியுலகத்தில் தேடிப் பயனில்லை. ஒவ்வொருவரும் தமது ஆளுமை உறைகளை அகற்றிக் கொண்டே சென்று, இறுதியாக நடுவில் வீற்றிருக்கும் அழிவற்ற மகாபுருஷனைக் கண்டு கொள்ள வேண்டும். நம் ஒவ்வொருவரிலும் உள்ள உயிர்ப் பொறியாகிய பேருணர்வுத் தத்துவமே இறைவன், அழியா மகாபுருஷன், என்று இச்செய்யுள் குறிப்பிடுகிறது. இப்போது அர்ஜுனன் முன் நிற்பதைப் போன்ற, திகைப்புக் குரிய பிரபஞ்ச ரூபமாக அப்பேருண்மைப் பொருளே பரந்து விரிந்து நிற்க முடியும்.

மேலும்—

அனாதி மத்யாந்த மனந்த வீர்ய
மனந்த பாஹும் சசி ஸூர்ய நேத்ரம்
பச்யாமி த்வாம் தீப்த ஹுதாச வக்த்ரம்
ஸ்வதேஜஸா விச்வமிதம் தபந்தம்

*11:19*

ஆரம்பம், மையம், முடிவு இல்லாதவனாகவும், எல்லயற்ற வீரியமும், கணக்கிலாகா கைகளும் உடையவனாகவும், சூரியசந்திரர்களைக் கண்களாய் கொண்டவனாகவும், எறியும் தீயை வாயாகக் கொண்டவனாகவும், பேரொளியினால் பிரபஞ்ச முழுவதற்கும் வெப்பம் அளிப்பவனாகவும் நான் உன்னைக் காண்கிறேன்.

அர்ஜுனன், தான் சூக்கும உணர்வு மூலம் கண்டதை அறிவின் உதவியுடன், உலகமொழியில் விவரிக்கிறான். 'ஆரம்பமும், நடுவும், முடிவும் இல்லாதவனாக, எல்லையற்ற சக்தி

உள்ளவனாக, எண்ணிலாக் கரங்கள் பெற்றவனாக உன்னைக் காண்கிறேன்' என்று உரைக்கிறான். வியாசர் ஏதோ திட்டவட்டமான ஒரு உருவத்தை வருணிப்பதாக நினைத்துக் கொண்டு சிலர் அது மாதிரியே சித்திரங்கள் வரையத் தொடங்கி விடுகிறார்கள். இது அசட்டு முயற்சி என்பது வேதாந்தம் கற்றவர்களுக்குத் தெரியவரும். ஓவியத்திரை எவ்வளவு பெரியதாக இருந்தாலும், ஆரம்பமும் முடிவும், இறுதியும் இல்லாத ஒன்றை அதற்குள் கொண்டுவர முடியாது. 'எண்ணிலாக் கைகள்' என்பதும் அப்படித்தான். உண்மையில் வியாசரின் கற்பனைச் சித்திரத்தை நல்ல ஞானமும், ஆழ்ந்த உள்ளுணர்வும் கொண்டு புரிந்து கொள்ள வேண்டும். வேலையில் ஈடுபட்டு வெற்றி காணும் ஒவ்வொரு கையிலும் அதன் திறனாக, வலிமையாக, இறைவன் இருப்பதால் அவருக்கு 'எண்ணிலாக் கைகள்' இருக்கின்றன என்று கவிதை மொழியில் சொல்லப் பட்டிருக்கிறது. ஒளியில்லாவிட்டால், கண்ணைப் பயன்படுத்த முடியாது. கண் இல்லாவிட்டால் ஒளியிருந்தும் பயனில்லை. அந்த இரண்டும் இருக்கும் நிலையையே செய்யுள் இங்கு குறிப்பிடுகிறது. பார்வைத் தத்துவம்—அதாவது உலகிலுள்ள எல்லாக் கண்களின் இயக்கமும் சேர்ந்து—விசுவரூபத்தின் இரு கண்களாகச் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. அதை வேதாந்தச் சிறப்பு வழக்கில் 'சூரியனும் சந்திரனும் உனது கண்கள்' என்று கவிஞர் கூறுகிறார்.

எரியும் தீயை வாயாகக் கொண்டவன்—உணவுக்கும், பேச்சுக்கும் சுவையூட்டும் சக்தியாக தீ இங்கு உருவகப் படுத்தப் பட்டிருக்கிறது. உணவு சூடாக இருக்கும் போது ருசியாக இருக்கிறது. ஆறி அவலாய் போன சோற்றைத் தின்ன முடிவதில்லை. வாக்கின் அதிபதி நெருப்பைக் கக்கும் பிரசங் கங்களின் மூலம் மக்களைக் கொதித்து எழச் செய்கிறான். வாதப் பிரதிவாதங்கள் கடுமையாகும் போது பேச்சில் தீப்பொறி பறக்கிறது. அப்படி இல்லாத விவாதங்கள் ருசிகரமாக இருப்பதில்லை. கேட்பவர்களுக்குத் தூக்கம் வருகிறது. பேச்சுக்கும், ருசிப்பதற்கும் வாய் இன்றியமையாதது. எனவே 'தீயை வாயாகக் கொண்டவனாக' என்று அர்ஜுனன் கூறுவது பொருட்செறிவுள்ளதாக இருக்கிறது.

உலகத்தைஒளியினால் வெப்பமூட்டுபவன்—ஆத்மதத்துவம் ஒளிமிக்கதாகத்தான் இருக்க வேண்டும். வேறு விதமாக இருக்கமுடியாது. ஏனெனில் எல்லா அனுபவங்களுக்கும், எல்லாக் காலங்களிலும், எல்லா உயிரினங்களிலும் ஒளியூட்டிவருவது ஆன்மிகப் பொருள். ஒளியூட்டுவது மட்டுமின்றி, உயிர் வாழ்வதற்கு அவசியமான வெப்பத்தையும் அது உலகிற்குத் தருகிறது. நமது புராதன இந்து சிந்தனையாளர்கள் வெளியுலக விவரங்களை அலசி ஆராய்ந்த

பிறகே, உள் நோக்கி ஆராயும் பணியை மேற்கொண்டார்கள் என்று செய்யுளின் இப்பகுதியிலிருந்து நமக்குத் தெரிகிறது. உயிர் வாழ்வதற்கு குறிப்பிட்ட ஒரு வெப்பநிலை அவசியம் என்றும், அது மிகக் குறைந்து விட்டால் உயிரினங்கள் மடிந்து விடுமென்றும் அவர்கள் அறிந்திருந்தது இங்கு தெளிவாகிறது.

பேருண்மைப் பொருளிலிருந்து வருவது சுயம் பிரகாசம். அது மற்றவைகளிடமிருந்து பெற்ற ஒளி அல்ல. 'உனது சொந்த பிரகாசத்தினால் (ஸ்வ—தேஜஸா) இவ்வுலகில் உயிரினங்கள் வாழுகின்றன.

த்யாவா ப்ருதிவ்யோரித மந்தரம் ஹி
வ்யாப்தம் த்வயைகேன திசஸ்ச ஸர்வா:
த்ருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மன் 11:20

பூமிக்கும் வானத்திற்கும் நடுவிலுள்ள இடைவெளியும், எல்லா திசைகளும்கூட உன்னால் நிரப்பப் பெற்றிருக்கிறது. இந்த உனது அற்புதமான, பயங்கர உருவத்தைப் பார்த்த பிறகு மூன்று உலகங்களும் பயத்தால் நடுங்கிக்கொண்டிருக்கின்றன, ஹே மகாத்மா!

உண்மைத் தத்துவம் இவ்வுலகெலாம் வியாபித்திருப்பதை அர்ஜுனன் உணர்ந்து கொள்கிறான். இடமும், காலமும்கூட அதிலிருந்து விலகி தனித்திருக்க முடியாது. எல்லையற்ற, அழிவிலாத பரம் பொருளைப்பற்றி அர்ஜுனன் பேசுகிறான் என்பதை மறந்து விடக் கூடாது. எனவே, ஆகாயத்திற்கும் பூமிக்கும் நடுவிலுள்ள இடைவெளியிலும், வானத்தின் எல்லாப் பகுதிகளிலும் நீயே விரவி நிற்கிறாய்'' என்று கூறுகிறான்.

பிரபஞ்ச ஒருமை என்ற கருத்தை சுலபத்தில் புரிந்து கொள்ள முடியாது. அதைப்பற்றி சிந்திக்க சிந்திக்க திகைப்பு மேலிடுகிறது. வரையறைகளுக்கு உட்பட்ட அறிவு, விசுவரூபப் பரப்பையும் கம்பீரத்தையும் கண்டு பயந்து போவதில் வியப்பில்லை.

ஆனால் மூவுலகங்களுமே நடுங்கிக் கொண்டிருப்பதாக அர்ஜுனன் கூறுகிறான். இது உளவியலுக்கு ஒத்ததாக இருக்கிறது. தான் செய்வதைத்தான் உலகமும் செய்கிறது என்று நினைப்பது மனித சுபாவம். நமது மனம் என்ற ஜன்னல் மூலம் உலகத்தை நாம் பார்க்கிறோம். நமது மனம் இருப்பது போலவே உலகமும் இருப்பதாகத் தோன்றுகிறது. திகைப்புடனும், நடுக்கத்துடனும் இருந்த நிலையில் அர்ஜுனன் உலகத்தைப் பார்க்கிறான். உலகமும் பயத்தினால் நடுங்குவதாக அவனுக்குத் தோன்றுகிறது.

வியாசர் மாபெரும் பொருள்பற்றி எழுதிக் கொண்டு வந்த போதிலும், அடிப்படை மனித சுபாவத்தை அவர் மறப்பதில்லை. விசுவரூப தரிசனம் போன்ற தேவ ரகசியங்களை இவ்வாறு உலக இயல்புடன் கலந்து வியாசர் எழுதும்போது, கவிதைக்கு புத் தழகும், புது மெருகும் வருகின்றன.

போரில் வெற்றி கிடைக்குமோ, கிடைக்காதோ என்ற ஐயப்பாடு அர்ஜுனனுக்கு இருந்தது.* அதை அகற்றுவதற்காக, கிருஷ்ணர் உலகத்தின் எதிர்காலம் பற்றிய காட்சியையும் விசுவ ரூபத்தில் காட்டுகிறார்.

''அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா விசந்தி
கே சித் பீதா: ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி
ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷிஸித்தஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி:'' *11:21*

(உண்மையில்) இத் தேவர்கள் கூட்டங்களே, ஆம், உனக்குள்ளே போகின்றன. பயத்தினால் சிலர் கைகூப்பி உன்னைப் புகழ் கிறார்கள். மாமுனிவர்களும், சித்தர்களும் 'நலமே ஆகுக' என்று வாழ்த்துரை கூறி, அற்புத கீதங்கள் மூலம் உன்னைத் துதிக்கிறார்கள்.

இதுவரை அர்ஜுனன் நிலையான ஒரு விசுவரூபத்தை வருணித்துக் கொண்டே வந்தான். இப்போது அர்ஜுனன் அதன் இயக்கத்தைச் சித்தரிப்பதைக் காண்கிறோம். ''தேவதைகளின் கூட்டங்கள் விசுவரூபத்தினுள்ளே புகுந்து மறைகின்றன.'' இது துரியோதனாதியர் கூட்டத்தைக் குறிப்பிடுவதாக சங்கரர், தமது விளக்க உரையில் எழுதுகிறார். பின்னால் வரப் போவதற்கு இந்த விளக்கம் முரண்பட்டதாக இல்லை என்றாலும் நூலில் பயன் படுத்தப்பட்டுள்ள சொற்களுக்கு அதைப் போன்ற பொருள் விளக்கம் இயற்கையாக இல்லை.

சிலர் தங்களையும் மீறி இறைவனுடைய பேருருவை நோக்கிச் சென்று அதில் மறைந்து விடுகிறார்கள் என்றால் அதைப் பார்த்துக்கொண்டு தங்களுடைய நேரத்திற்காகக் காத்திருக்கும் வேறு சிலருக்கு இந்தக் காட்சி வயிற்றைக் கலக்குகிறது. ஆபத்து வந்து கொண்டிருக்கிறதென்று தெரிந்தும், அதைத் தடுக்க வழி கண்டுபிடிக்க முடியாத நிலையில் ஒருவன் என்ன செய்கிறான்? 'கடவுளே கதி' என்று இரு கைகளையும் உயரத் தூக்கி இறைவனைத் தொழுது நிற்கிறான். உளவியல் பூர்வமான இவ் வுண்மையை ''சிலர் பயத்தினால் கைகூப்பி, உன்னைப் புகழ்ந்த

* 'யத்வா ஜயேம யதிவா நோ ஜயேயுஹு' (கீதை அத். 2, செய்யுள் 6.

வண்ணம் நிற்கிறார்கள்'' என்ற சொற்கள் நன்றாக படம் பிடித்துக் காட்டுகின்றன.

காட்சி அத்துடன் முடிந்துவிடவில்லை. மகரிஷிகளும் சித்தர்களும்*[1] கூட்டம் கூட்டமாக அங்கு நிற்கிறார்கள். விசுவரூபக் காட்சியினால் அவர்கள் கலங்கி விடவில்லை. பழுத்த ஞானிகளாகையால் அவர்களுடைய உள்ளம் பரிபூரண அமைதி பெற்றிருக்கிறது. உலகெலாம் பரவி நிற்கும் உத்தமனுக்கு உன்னத*[2] துதிபாடி கொண்டு, எல்லோருக்கும் எப்போதும் 'நலமே ஆகுக' என்று வாழ்த்தியவாறு நிற்கிறார்கள். பிரபஞ்ச முகம் இவ்வளவு பயங்கரமானதாகவும், கோபாவேசத்துடனும் காணப்படுகிறது என்றால், ஒட்டு மொத்தமான புனர் நிர்மாணத் திட்டம் ஒன்று தொடங்கப் போகிறது என்று அர்த்தம். இப்படி 'ஆக்கபூர்வமான அழிவு'த் திட்டம் அமுலுக்கு வருவதால் நஷ்டம் ஒன்றுமில்லை. இது ஞானிகளுக்கும், சித்தர்களுக்கும் தெரியும். மொத்த அழிவுக்குப் பிறகு ஆக்கப் பணி உடனே தொடங்கிவிடும். எனவே இப்போது நடக்கும் வேலைகளைப் புகழ்ந்து, இனி வருவது ஒளிமயமான பொற்காலமாக இருக்கட்டும் என்று அவர்கள் வாழ்த்துகிறார்கள்.

சாதாரண நிலைக்குக் கீழ்பட்டவை, சாதாரண நிலையில் உள்ளவை, சாதாரண நிலைக்கு மேற்பட்டவை என்பதாக இவ்வுலகத்திலுள்ள இனங்களின் நிலையை வகை பிரித்துக் கூறுவது போல இந்தச் செய்யுளின் கருத்து அமைந்திருக்கிறது. கீழ்நிலையில் உள்ளவை தங்களுக்குத் தெரியாமலே செத்து மடிகின்றன. சாவின் இயக்க முறைக்கு அவை இரையாகின்றன என்று சொல்லலாம். அந்த இயக்க முறை என்ன என்பது கூடத் தெரியாததால், அப்படிச் சாவதை எதிர்த்து அவை முறையிடுவதில்லை; தடுக்க வழி தேடுவதும் இல்லை.

சாதாரண நிலையில் உள்ளவர்கள் புத்திசாலித்தனமாக உலகில் நடப்பவற்றைக் கூர்ந்து கவனிக்கிறார்கள். சிதைவு, சாவு முதலியவை படிப்படியாக வருவதை அறிந்து தங்களுடைய கதி எப்படி இருக்குமோ என்று நடுங்கிய வண்ணம் காலந் தள்ளுகிறார்கள். சாவினால் முழுகிப் போவது ஒன்றுமில்லை என்று அவர்களுக்குத் தெரியவில்லை.

---

*[1] சித்தர்கள் என்றால் நிறைவு பெற்றவர்கள் என்று பொருள். அவர்கள் மெய்ப் பொருளை உணர்ந்து ஞான சித்தி பெற்றவர்கள். இறைவனுடைய திருப்பணியிலேயே வாழ்நாளைக் கழித்துக்கொண்டும், தம்மை அணுகும் உண்மையான சீடர்களுக்கு சூக்கும முறையில் வழிகாட்டிக் கொண்டும் இருப்பவர்கள். இப்படிப்பட்ட சித்தர்கள் 18000 பேர் இருப்பதாக நம்பப்படுகிறது.

*[2] செய்யுளில் வரும் 'புஷ்களாபிஹி' என்ற சொல்லுக்கு 'முழுமையான,என்று பொருள் கூறுகிறார். இங்கு 'உன்னத' என்று உரை எழுதப்பட்டிருக்கிறது. இந்த இரண்டும் பொருத்தமான சொற்களே.

மூன்ருவது வகையினர் சாதாரண நிலைக்கு மேற்பட்டவர்கள். மொத்த நிலவரம் அவர்களுக்குத் தெரியும். ''பிரபஞ்சத்தில் எல்லோருக்கும் வரும் சாவு எனக்கும் ஒரு நாள் வரத்தான் போகிறது. இதைப் பற்றி பயம் என்ன?'' என்று கவலையின்றி இருப்பார்கள். நீர்க் குமிழியின் இயல்பு தெரிந்தவர்கள் அது உணர்ந்தவுடன், "ஐயோ, நீர்க் குமிழி இப்படி உடைந்து விட்டதே' என்று ஓலமிட மாட்டார்கள். அதே மாதிரி சித்தர்களும் எதிரில் நடப்பதைப் பார்த்து, மறைந்து வரும் ஒரு கலாச்சாரத்தை புதுப்பிப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருவதை அறிந்து கொள்கிருர்கள். பழமையின் உதவாக்கரை அம்சங்கள் சிதைக்கப்பட்டு வருகின்றன. இதைச் செய்து வரும் மெய்ப் பொருளின் மாபெரும் சக்தியைக் கண்டு, இறைவன் இப்போது செய்துவரும் 'ஆக்கபூர்வமான அழி'விஞல் அமைதிமிக்க நல்லுலகம் தோன்றுக, இனிதே ஆகுக என்று வாழ்த்துகிருர்கள்.

இவ்வாறும் இச்செய்யுளை நோக்கலாம். எந்த வகையில் பார்த்தாலும், வியாசரின் உளவியல் அறிவு எவ்வளவு ஆழ்ந்தது!'' என்ற வியப்புத் தோன்றுகிறது. மனிதனுடைய பரிணும வளர்ச்சியை ஊக்குவிப்பதற்கும் அவனுடைய நெடு முயற்சிகள் நிறைவு பெற உதவவும் வியாசருடைய அறிவு இங்கு பயன்படுத்தப்படுகிறது.

விசுவ ரூபத்தையும், அதன் செயல்களையும் கண்டு வானுலக தேவர்கள் என்ன கருதினர்?

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா
விச்வேச்விநௌ மருதஸ்சோஷ்ம பாஸ்ச
கந்தர்வாயக்ஷா ஸுரஸித்தஸங்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஸ்சைவ ஸர்வே

11:22

ருத்திரர்கள், ஆதித்தியர்கள், வசுக்கள், சாத்தியர்கள், விசுவ தேவர்கள், இரு அசுவனி குமாரர்கள், மருத்துக்கள், உஷ்மபர்கள், கந்தர்வ கூட்டங்கள், அசுரர்கள், சித்தர்கள்—இவர்கள் எல்லோரும் உன்னை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிருர்கள்.

விசுவ ரூபத்தை அர்ஜுனன் தொடர்ந்து விவரிக்கிருன். நிகழ்ச்சிகளின் அதிபதிகளான தேவர்கள், எவருக்கும் விளங்கா அவ்வுருவத்தைப் பார்த்துக்கொண்டு இருக்கிருர்கள். வேத காலத்திய தலைமுறைகள் வணங்கி வழிபட்டு வந்த தேவர்கள் அவர்கள். அவர்களையே பிரபஞ்சமெல்லாம் நிரப்பி நிற்கும் இவ்வுருவம் திகைப்பிலும், ஆச்சரியத்திலும் ஆழ்த்தி விட்டது.

அழிக்கும் தொழிலில் ஈடுபட்ட தேவதைகள் (ருத்திரர்கள்)

சூரியன் (ஆதித்யர்), பருவங்களின் அதிபதிகள் (வசுக்கள்) ஆகாயத்தில் சஞ்சரிக்கும் தேவதைகள் (சாத்தியர்கள்)*[1], சிறு தேவதைகள் (விசுவ தேவர்கள்)*[2] குதிரைகள் மீது செல்லும் இருவர் (அசுவனி குமாரர்கள்) புயலின் அதிபதிகள் (மருத்துக்கள்) வெப்பம் பருகுவோர் (உஷ்மபர்கள்)*[3] விண்ணுலகப் பாடகர்கள் (கந்தர்வர்கள்), யக்ஷர்கள், அசுரர்கள், சித்தர்கள் இவர்களைப்பற்றி முன்னரே கூறப்பட்டிருக்கிறது. வேதகால கருத்துக்களைக் கொண்ட சொற்கள் இச் சுலோகத்தில் அதிகமாக வருவதால், இதை தற்கால மக்கள் சுவைக்க முடியாமற் போகலாம். ஆனல் அர்ஜுனன் வேதங்கள் வெகுவாகப் பரவியிருந்த காலத்தின் உண்மையான பிரதிநிதி. எனவே அவனுடைய சொற்கள் வேறு விதமாக இருந்திருக்க முடியாது. மொத்தப் பிரபஞ்சத்தின் காட்சியினல் அவனுடைய மனத்தில் தோன்றிய பலவகை சிந்தனைகளை பொதுப்படையாகக் காட்டுவதற்கு இப்பாடல் உதவியாக இருக்கிறது. அக்காட்சி ஒவ்வொருவரையும் வெவ்வேறு மாதிரியான பாதிப்புக்கு உள்ளாக்குகிறது. அவரவர்களுடைய சக்திக்கு ஏற்ப அந்த அருவமான உருவத்தை அவர்கள் புரிந்து கொள்ளுகிறார்கள்.

அர்ஜுனன் தனக்குப் புலப்படும் வேறு சில காட்சிகளையும் அறிவிக்கிறுன். தனது நிலையையும் பின்வரும் செய்யுட்களில் விவரிக்கிறுன்—

ரூபம் மஹத்தே பஹுவக்த்ர நேத்ரம்
மஹாபாஹோ பஹு பாஹூரு பாதம்
பஹூதரம் பஹு தன்ஷ்ட்ராகராலம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவயதி தாஸ்த தாஹம் 11:23

---

*[1] ரிக்வேதம் 10—90—15 பார்க்க. வேள்விச் சடங்குகளும் பிரார்த்தனைகளும் 'சாத்தியர்கள்' என்ற பெயரில் (ஆகு பெயர்களாக) உருவகப்படுத்தப்பட்டு இருக்கின்றன. வேள்வி செய்வோரின் பிரார்த்தனைகளை, சம்பந்தப்பட்ட தேவதைகளுக்குக் கொண்டுபோய் சேர்க்கும் தபால்காரர்களைப்போல இவர்கள். வேள்வியின் பலன்கள் இவர்கள் மூலமாகத்தான் வேள்வி செய்வோருக்குக் கிடைக்கின்றன.

*[2] ரிக் வேதத்தில் கூறப்பட்டுள்ள சிறு தேவதைகளை மொத்தமாக, 'விசுவ தேவதைகள்' என்று குறிப்பிடப்படுகிறது. இவர்கள் பத்துப் பேர் என்று புராணங்கள் கூறுகின்றன. இவர்கள் சத்யம், த்ருதி போன்ற தன்மைகளின் உருவகங்கள்.

*[3] இறந்தவிட்ட முன்னேர்களை, பித்ருக்களை குறிப்பிடும் சொல் இது. அவர்களுடைய நினைவில் ஏற்பாடு செய்யப்படும் சடங்குகளில் கலந்துகொண்டு, படைக்கப்படும் உணவை அவர்கள் ஏற்கிறுர்கள். ஆனல் உணவு சூடாக இருந்தால்தான் அவர்கள் சாப்பிடுவார்களாம். சூடாக படைக்கப்படும் உணவிலிருந்து எழும் மணம் அவர்களைத் திருப்திப்படுத்துகிறது என்பது இதன் கருத்து போலும். அது எப்படியாயினும் 'வெப்பம் பருகுவோர்' என்ற சொல் பித்ருக்களைக் குறிக்கிறது.

புயவலிமிக்கவனே, பலவாய்களுடனும், கண்களுடனும் பலகைகளுடனும், தொடைகளுடனும், பாதங்களுடனும் பல வயிறுகளுடனும், பயங்கரத் தோற்றமளிக்கும் தந்தங்களுடனும் உள்ள, அளவிட முடியாத உனது உருவத்தைக் கண்டு, உலகங்கள் அச்சத்தால் நிலைகுலைந்து நிற்கின்றன. நானும் அப்படித் தான்.

நப: ஸ்ப்ருசம் தீப்தமனேக வர்ணம்
வ்யாத்தானனம் தீப்த விசால நேத்ரம்
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்த ராத்மா
த்ருதிம் ந விந்தாமி சமம் ச விஷ்ணோ 11:24

பலபல வண்ணங்களில் வானளாவி நிற்கும் உனது உருவம் திறந்த வாய்களுடனும், கனல் கக்கும் கண்களுடனும் இருப்பதைப் பார்க்கும்போது, என் உள்ளம் பதறுகிறது. எனக்கு அமைதியும் இல்லை, தைரியமும் இல்லை, ஓ விஷ்ணுவே!

அர்ஜுனன் கண்ட அசாதாரணக் காட்சி, கிருஷ்ணன் என்ற ஆறடி உயரமுள்ள ஒரு மனிதனில் பார்த்தது அல்ல. அவன் அதைத் தனது உணர்வுத் திரையில் காண்கிறான். சுதந்திரம், அன்பு, தேசியம் போன்ற உருவமில்லாத தன்மைகளுக்கு நாம் பார்த்துள்ள ஒருவரை வைத்து, நாமாக ஒரு உருவம் கொடுத்து மனத்தில் பதிப்பித்துக் கொள்ளுகிறோம். அவ்வுருவம் புலன்களுக்குத் தெரியாது. அறிவுக்குத் தெரியும். அதைப் போல, தனது அனுபவத்தை அவன் ஒரு செதுக்கிய சிலை போன்று ஒரு உருவமாகப் படைத்துக் கொள்ளுகிறான். அவனைப் பொறுத்த வரை அவ்வுருவம் மிகத் தெளிவாக இருக்கிறது. அதை விவரிக்க முன்வரும்போதுதான் நிலைமை சிக்கலாகிறது. சரியான சொற்கள் கிடைக்கவில்லை. கிடைக்கும் சொற்கள் அவனுடைய நோக்கத்தையே முறியடித்துவிடும்போல் தோன்றுகிறது.

அந்த உருவத்தைக் கண்டு உலகங்கள் பயப்படுகின்றன என்று கூறும் அர்ஜுனன் 'நானும் அப்படித்தான்' என்றும் சேர்த்துச் சொல்லுகிறான். மனோதத்துவ ரீதியாக, அவன் கூறுவது உண்மைதான். பரபரப்பு அடைந்துள்ள ஒரு கூட்டத்தில் நாம் இருந்தால், நம்மையும் அந்த பரபரப்பு பற்றிக் கொள்ளுகிறது. நல்லவர்கள் ஆழ்ந்த தியானத்திலிருக்கும் இடத்தில் நாம் இருந்தால், நமது உள்ளத்திலும் அமைதி நிலவுகிறது. உலகங்களே கலவரம் அடைந்திருக்கின்றன என்று அர்ஜுனன் சொல்லிய பிறகு, 'நானும் அப்படியே' என்பதை அவன் சொல்லித்தான் நமக்குத் தெரிய வேண்டும் என்பது இல்லை. அவன் சொல்லாமலே அது நமக்குத் தெரிகிறது.

அரச குலத்தில் பிறந்துவிட்டு 'எனக்குப் பயமாக இருக்கிறது' என்று கூறுவது, குல தர்மத்திற்கே அவமானம் என்பதை

அர்ஜுனன் உணருகிறான். எனவே தன் பயத்திற்குக் காரணம் இருக்கிறது என்று நிரூபிப்பதற்காக, எதிரிலிருக்கும் பயங்கரத் தோற்றம் உண்மையில் ஒரு உருவம் மாதிரியே இல்லை என்று கூறுகிறான். அது வானளாவி இருக்கிறது. பல்வேறு வண்ணங்கள் கொண்டு திறந்த வாய்கள் எல்லாவற்றையும் விழுங்கிக் கொண்டிருக்கின்றன. மொத்தத்தில் அது தேவர்களைக் கூட மிரள வைக்கும் காட்சியாக இருக்கிறது. ஆகையால் 'எனது இதயமும் பதறுகிறது. அமைதியையும் தைரியத்தையும் இழந்து விட்டேன்' என்கிறான் அர்ஜுனன். அந்த நிலையில் ஒப்பற்ற அம் மாவீரன் தன் முன்னுள்ள பிரபஞ்ச உருவத்தை 'ஓ விஷ்ணு' என்று அழைப்பது குறிப்பிடத் தக்கது.*

அர்ஜுனனுடைய உள்ளுணர்வில் ஆழப் பதிந்துள்ள கருத்துருவம், உலகில் இறைவனின் எண்ணற்ற உருவாக்கங்களின் மொத்தத் தொகுப்புத்தான் என்பதை முன்னரே விளக்கியிருக்கிறேன். பேருண்மை நாட்டம் கொண்ட சாதகர்கள் படித்துப் பயன் பெற வேண்டுமென்றே வியாசர் பல கருத்துக்களை மறை பொருளாக வைத்திருக்கிறார். கீதையை ஆழ்ந்து படிக்கும் மாணவர்கள் அவற்றை தவறவிட்டு விடக் கூடாது.

அர்ஜுனன், சுய நிலை விளக்கமாக, தீரர்களின் உள்ளங்கள் கூட தைரியமிழந்து தத்தளிக்கும் காரணம் பற்றி மேலும் தொடருகிறான்.

தன்ஷ்ட்ராகராலானி ச தே முகானி
த்ருஷ்ட்வைவ காலானல ஸன்னிபானி
திசோ ந ஜானே ந லபே ச சர்ம
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ

11:25

பிரளய கால நெருப்பைப்போல் (ஒளி வீசுகிற) தந்தப் பற்களுடன், உனது பயங்கர வாய்களைப் பார்த்த பிறகு, எனக்கு திக்குதிசை தெரியவில்லை. அமைதி காண முடியவில்லை. ஓ தேவ தேவா, பிரபஞ்சத்தின் உறைவிடமே, கருணை காட்டு.

பிரபஞ்சமெல்லாம் வாயாக, பயங்கர (கோரப்) பற்களுடன் நிற்கும் உருவத்தைக் கண்ட பிறகு அமைதி இல்லை. திக்கு திசை தெரியவில்லை என்கிறான் அர்ஜுனன். எல்லாப்

* வேத இலக்கியத்தில் 'விஷ்ணு' என்ற சொல் 'நீண்ட காலடி எடுத்து வைப்பவன்,' என்ற பொருளில் உபயோகிக்கப்பட்டு இருக்கிறது. நடக்கும் போது ஒரு பாதத்திற்கும், மற்றொரு பாதத்திற்கு இடையில் உள்ள தூரம் ஒரு காலடி. எல்லையற்ற இறைவன் நீண்ட காலடி எடுத்து வைத்தால், அது தொடக்கமில்லாததிலிருந்து முடிவு இல்லாதது வரை இருக்கும். எனவே 'விஷ்ணு' என்ற சொல்லுக்கு எங்கும் நிறைந்திருப்பவனே' 'எல்லா இடங்களையும் தொட்டு கொண்டிருப்பவனே' என்ற பொருள் இங்கு நிழலாடுகிறது.

பொருள்களையும் தரை மட்டமாக்கி விழுங்கிவிடும். காலம் இப் போது நிலைகுலைந்து விட்டது என்பதைக் காட்டும் சொற்கள் அவை. கற்பனை கூட எட்ட முடியாதவாறு, இடமெல்லாம் பரந் துள்ள ஒன்றின் முன்னிலையில்—அதுவும், திடீரென்று, நிற்கும் போது அறிவு கலகலத்துப் போய் உட்கார்ந்து விடுகிறது. முடக்கு வாதம் வந்ததைப்போல் அசைவற்ற நிலை தோன்றுகிறது. திக்கு திசை தெரிவதுமில்லை, அமைதியும் இருப்பதில்லை.

அவ்வாறு பிரமித்துச் சிலையோடிய நிலையில், ஒருவருடைய உடல் வலிமை, மனச் சிறப்பு, அறிவு நுணுக்கம் இவைகளுக்கு அர்த்தமில்லாமல் போகிறது. ஒரு அளவுக்கு மேல் அவை சக்தி யற்றவை, முக்கியமில்லாதவை என்ற உறுதி தோன்றுகிறது. அவ ருடைய சின்னஞ்சிறு அகந்தை தனது தற்பெருமைத் திரையைக் களைந்து கீழே போட்டுவிட்டு, மொத்த இயக்க சக்தியின் உருவகத்திடம் சரணுகதி அடைகிறது. இத்தூய பிரபஞ்ச சக்தியின் முன்னிலையில் தனது வீண் பெருமைகள் எல்லாம் பய னற்றவை என்று முற்றிலும் உணர்ந்து கொண்டவர்களுக்கு பிரார்த்தனை ஒன்றே புகலிடம் ஆகிறது.

இப்பாடலை ''உலகத்தின் உறைவிடம் நீ—பிரபுவே அருள் புரி'' என்ற உருக்கமான பிரார்த்தனையுடன் வியாசர் முடிக்கி ருர். கர்வத்தால் துடித்து, தற்பெருமையினுல் நிறைந்திருக்கும் ஒரு இதயத்திலிருந்து உண்மையான பிரார்த்தனை வெளி வராது என்பதை மிக அழகாக அவர் குறிப்புணர்த்துகிருர். மொத்தப் பிரபஞ்சத்துடன் ஒப்பிடும்போது, ஒரு தனிப்பட்ட மனிதன் தூசிக்கு சமம் என்பதை உணர்ந்து கொண்டவுடன், ஒருவன் உள்ளத்தில் பிரார்த்தனை தாஞக எழுகிறது.

இந்த அத்தியாயத்தில் 21—வது செய்யுளுடன் தொடங்கும் பகுதியின் நோக்கம் நடக்கப் போகும் போரில் வெற்றி அர்ஜுன னுக்கும் அவனுடைய படைகளுக்குமே என்பதை அவனுக்கு உறுதிப்படுத்துவதற்குத்தான். எனவே படைகள் ''காலத்தின் வாயில்'' மீள முடியாதவாறு புகுந்து மறைவதை பகவான் நேரடி யாகக் காட்டுகிருர்.

அமீச த்வாம்: த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வே ஸஹைவாவனி பால ஸங்கை:
பீஷ்மோ த்ரோண: ஸூதபுத்ரஸ்ததாஸௌ
ஸஹாஸ்மதீயைரபி யோதமுக்யை: . 11:26

திருதராஷ்டிரருடைய மைந்தர்கள் எல்லோரும் பல்வேறு நாட்டு மன்னர் கூட்டங்களுடனும், பீஷ்மர், துரோணர், தேரோட்டி யின் மகன் கர்ணனுடனும் நமது சேனைத் தலைவர்களுடனும்,

வக்த்ராணி தே த்வரமாணு விசந்தி
தன்ஷ்ட் ராக ராலானி பயானகானி
கேசித் விலக்ந தசனுந்தரேஷு
ஸந்த்ருச்யந்தே சூர்ணி தைருத்த மாங்கை: 11:27

பார்க்க பயங்கரமானதாகவும், கோரமான பற்களைக் கொண்டதுமான உனது வாய்களுக்குள் அவசர அவசரமாகப் போய் விடுகிருர்கள். பற்களின் இடைவெளிகளில் சிலர் சிக்கிக் கொள்வதால் அவர்களுடைய தலைகள் நொறுங்கி பொடிப் பொடியாகப் போகின்றன.

பேருண்மை நாட்டத்தை லட்சியமாகக் கொண்டதும், விருப்பு வெறுப்பின்றி முழுமையை ஏற்கத் தயாராக இருப்பது மான எந்தத் தத்துவ வாதமும், இயற்கையிலுள்ள அழிவு அம்சத்தைப் புறக்கணித்து விட முடியாது. எந்த ஆக்கப் பணிக்கு முன்னும் அழிவு வேலை நடக்கிறது. அழித்ததை மூலப் பொரு ளாகக் கொண்டு புதிய பண்டங்களை உண்டாக்குகிருேம். உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் மீண்டும் மீண்டும் மாற்றங்களுக்கு உள்ளாகி வருபவை என்பதில் ஐயமில்லை. புதிய பண்டங்கள் உருவாகும்போது, அதைப் படைப்பு என்று கூறு கிருேம். மூலப் பொருள்களை மாற்றும்போது அவற்றை அழிவு வேலை என்று சொல்லுகிருேம்.

இந்து மதத்தில், சிந்தனை சிறப்புமிக்க ஆரிய மேதைகள், பேருண்மையின் அழகைப் புகழுவதுடன் நிறுத்திக் கொள்ள வில்லை. மெய்ப் பொருளை எல்லாமறிந்த படைப்பாளியாகவோ, சர்வ வல்லமையுள்ள காப்போனுகவோ கருதியது மட்டுமின்றி, எல்லாப் பொருள்களையும் விழுங்கும் அழிப்போனுகவும் அறிந்து போற்றினர். வாழ்வின் முழுமையைக் கூர்ந்து நோக்கி, அலசி ஆராயாத மதங்களுக்கு இது ஒரு பயங்கரக் கருத்தாகத் தோன்ற லாம்.

அர்ஜுனன் உபயோகிக்கும் சொற்கள் முக்கியமானவை. எதிரிலுள்ள பெரு உருவம் எல்லாவற்றையும் பிடித்து விழுங்குவதாக அவன் சொல்லவில்லை. எல்லோரும் அவசர அவசரமாகச் சென்று அதன் வாய்க்குள் விழுவதாகச் சொல்லு கிருன். அலைகளை விழுங்குவதற்கு கடல் மேலுயர்ந்து முயற்சிப்ப தில்லை. கடலிலிருந்து எழுந்த அலைகள் தாங்களாகவே வந்து விழுந்து கடலோடு கடலாகக் கலந்து விடுகின்றன. மொத்தத்தி லிருந்து எழுந்த பன்மை, பேருண்மைப் பரப்பில் சற்று நேரம் இருந்து விளையாடிய பிறகு, மீண்டும் மொத்தத்தில் கலந்துவிட 'அவசர அவசரமாக ஓடுவதில்,' ஆச்சரியம் என்ன இருக்கிறது?

"திருதராஷ்டிரன் மைந்தர்கள், மற்றும் பல மன்னர்கள்

பீஷ்மர், துரோணர், தேரோட்டியின் மகன் கர்ணன், நமது படைத் தலைவர்களுடன்'' சம்ஹர தத்துவத்தின் வாய்க்குள் போய் விழுவதை அர்ஜுனன் காண்கிறான். இது அர்ஜுனனை பெரும் திகைப்புக்கு உள்ளாக்குகிறது என்பது உண்மைதான். ஆயினும், கௌரவப் படைகளை விட எல்லா வகைகளிலும் குறைந்த படை பலமே தன்னிடம் இருந்த போதிலும், மேலே நடக்க வேண்டியவை பற்றி சிந்திக்கும் தைரியத்தை விசுவரூப தரிசனம் அர்ஜுனனுக்கு கொடுக்கிறது. தனது எதிர்காலத்தை அவன் அவ்வுருவத்தில் காண்கிறான். ஏனெனில் விசுவ ரூபத்தில் இடம் சுருங்கியது மட்டும் அல்ல, காலமும் சுருங்கி விடுகிறது. எல்லா உருவங்களையும் ஒரு உடலுக்குள் பார்க்க முடிகிறது என்றால், காலமும் பார்வைக்குள் அடங்கும் அளவுக்குச் சுருங்கி விடுகிறது.

அர்ஜுனன் கண்ட உருவத்தில் கடந்த காலம் நிகழ்காலத்துடனும், அவ்விரண்டும் முன்னேறி எதிர் காலத்துடனும் கலந்து விடுகிறது. கீதை இதோ என் முன்னால் இருக்கிறது. முதல் இரண்டு பக்கங்களைப் படித்துவிட்டு நான் மூன்றாவது பக்கத்தைப் படிக்கத் தொடங்கலாம். அல்லது மூன்றாவது பக்கத்தையே திருப்பித் திருப்பி படித்துக்கொண்டிருக்கலாம். எனது இஷ்டப்படி செய்யலாம். அவ்வாறே பிரபஞ்ச முழுவதுமே அர்ஜுனனுக்கு முன்னால் இருக்கும்போது, அவன் 'இங்கும், அங்கும், எல்லாப் புறங்களிலும் 'பார்க்க' முடியும். கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகியவற்றையும் பார்க்கலாம். தற்கால விஞ்ஞானிகள்கூட இடம், காலம் ஆகிய இரண்டும் ஒன்றுதான் என்று ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

சிறப்பு மிக்க சாதகர்கள் ஆழ்ந்து ஆராய்ந்து மெய்ப் பொருளில் அழிவு அம்சமும் உண்டு என்று கண்டுகொண்ட போதிலும், அதைப் பற்றி அவர்கள் கவலைப்படவும் இல்லை, அஞ்சவும் இல்லை. உலகத்தில் அழகான பொருள்கள் இருக்கும் அளவுக்கு, பார்க்க வெறுப்பளிக்கும் பொருள்களும் இருக்கிறது. நல்லது கெட்டது, இனிப்பு கசப்பு முதலிய மாறுபட்ட தன்மையுள்ள பொருள்களும் இருக்கின்றன. இறைவன் எல்லாவற்றையும் உள்ளிட்டவர் என்றால், வாழ்வு அழிவு இரண்டையும் உள்ளிட்டவராகத்தான் இருக்கவேண்டும். அவரைப் போற்றும் போது, அவருடைய அழகான, நல்ல, மிருதுவான அம்சங்களை மட்டும் நாம் ஏற்றுக்கொள்ளுவதால் அது மெய்ப்பொருளை முழுமையாகப் போற்றுவது ஆகாது. விருப்பு வெறுப்பற்ற ஒரு உள்ளம் அழகற்ற, கெட்ட, மிருதுவாக இல்லாத, கசப்பான அம்சங்களையும் சேர்த்துத்தான் அவரை ஏற்றுக்கொள்ளும். எனவே எல்லா குணங்களுக்கும் மேற்பட்டு, அவரை நிர்குணமாகக் காணும் தத்துவமே முழுமையான தத்துவம்.

ஆகையால் அர்ஜுனன் விஞ்ஞான அடிப்படையில் அவ்வுருவத்தின் பல்வேறு அம்சங்களை—அவை எவ்வளவு பயங்கரமாக இருந்த போதிலும்—நேரடியாக நோக்கி, நுணுக்கமாக விவரிப்பதைப் போல் வியாசர் எழுதியிருக்கிறார். மரணத்தின் வாய் பயங்கர தந்தங்களுடன் பார்க்கவே பயமாக இருப்பதாக கீதை கூறுவது இயற்கையாக இருக்கிறது, வெறும் கற்பனை உலகத்தைச் சித்தரிப்பது போல இல்லை.

எல்லாப் பொருள்களும், மனிதர்களும் பேருருவத்தின் வாய்க்குள் செல்லும் விதத்தை அர்ஜுனன் விவரிக்கிறான்.

யதா நதீனும் பஹவோம்பு வேகா:
ஸமுத்ரமேவா பி முகாத்ரவந்தி
ததா தவாமீ நரலோக வீரா
விசந்தி வக்த்ராண்யபி விஜ்வலந்தி 11:28

வெள்ளப் பெருக்கெடுத்து எத்தனையோ ஆறுகள் சமுத்திரத்தை நோக்கியே போவதைப் போல், இம் மனித உலக வீரர்கள் உனது தீகக்கும் வாய்களுக்குள் புகுகிறார்கள்.

வெள்ளம் நிறைந்து நுங்கும் நுரையுமாக இரண்டறக் கடலுடன் கலப்பதற்கு ஓடும் நதிகளின் உவமை இங்கு பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஆற்றுக்கும் ஒரு தனித்தன்மை உண்டு. அது கடந்து வரும் இடங்களைப் பொறுத்து அது அத்தன்மையைப் பெறுகிறது. எந்த இடத்திலும் தயங்கி நின்று, மேலே போவோமா வேண்டாமா என்று அது யோசனை செய்வதில்லை. வழியில் உள்ள ஏதோ ஒரு ஊரின் பெயரைச் சொல்லி, அந்த ஊருக்கு அல்லவா அது போகிறது என்று எதுவும் தெரியாத சிலர் சொல்லுவார்கள். அது தவறு. எல்லா ஆறுகளும் சமுத்திரத்தை நோக்கித்தான் போகின்றன. நடுவில் அவை நிற்கவும் நிற்காது, அவற்றை நிறுத்தவும் முடியாது. சமுத்திரத்தை அடைந்த பிறகு அவற்றின் தனித்தன்மை மறைந்துவிடுகிறது.

ஆற்று நீரின் ஒவ்வொரு துளியும் சமுத்திரத்திலிருந்து வந்ததுதான். கடல் நீர் ஆவியாகி, மேகமாகி, மழையாகி ஆற்று வெள்ளமாக ஓடுகிறது. செல்லும் வழி எல்லாம் வளம் பரப்பிக் கொண்டு, கடைசியில் பிறந்த இடத்திற்கே போய்ச் சேர்ந்து விடுகிறது. அவ்வாறே மொத்தத்திலிருந்து மனிதர்கள் தோன்றுகிறார்கள். தங்களுடைய இனத்திற்கும், கலாசாரத்திற்கும், சிறப்பு மிக்க உலகப் படைப்புக்கும் இயன்ற அளவு சேவை புரிந்து வருகிறார்கள். இப் புனித யாத்திரையில் எவரும் ஒரு நொடிகூட நடுவில் தயங்கி நிற்க முடியாது. எல்லோரும் தாங்கள் தோன்றிய மூலத்தலத்தை நோக்கிச் சென்றுகொண்டே இருக்கிறார்கள். சமுத்திரத்தைச் சென்றடைந்து சங்கமம் ஆவதினால்

ஆற்றுக்கு ஏற்படும் நஷ்டம் ஒன்றுமில்லை. அதன் உருவம் வழியில் உள்ள பூமியின் நிறம், மக்களால் அளிக்கப்படும் பெயர்— இவற்றைப் போன்ற சில தனித் தன்மைகளை அது பெற்ருலும், அவை தற்காலிகமானவையே. வரண்ட நிலத்தை வளமிக்க தாக்க கடல் நீர் மேற்கொள்ளும் பல்வேறு உருவங்களே இந் நதிகள்.

இந்த சுலோகத்தின் கருத்தைப் பற்றி சிந்திக்க சிந்திக்க அதன் பொருள் வளம் பெருகி, அதனுள்ளே பொதிந்துள்ள கருத்துச் செறிவு நமக்கு மேலும் மேலும் இன்பம் அளிக்கும்.

அவை வாய்க்குள் புகுவது ஏன், எப்படி என்பதைப் பற்றி அர்ஜுனன் கூறுகிருன்.

யதா ப்ரதீப்தம் ஜ்வலனம் பதங்கா
விசந்தி நாசாய ஸம்ருத்த வேகா:
ததைவ நாசாய விசந்தி லோகாஸ்
த்வாபி வக்த்ராணி ஸம்ருத்த வேகா: 11:29

விட்டில் பூச்சிகள் எரியும் நெருப்புக்குள் தங்களுடைய அழிவை நாடி, விரைந்து செல்வது போல, இந்த உருவங்களும் தங்களுடைய அழிவை நாடி உன் வாய்களுக்குள் விரைந்து செல்லுகின்றன.

வெளித் தோற்றம் கொள்ளாத பரம்பொருளும், வெளித் தோற்றம் கொண்ட படைப்பினங்களும் அடிப்படையில் ஒன்று தான் என்பதும், வெளிப் படாதிருக்கும் பேருண்மையிலிருந்தே ஒவ்வொரு பொருளும் பிறக்கிறது என்றும் நதி உவமை மூலம் மிக அழகாக எடுத்துக் காட்டப்பட்டது. ஆனுல் எல்லா உதாரணங் களும் எல்லா அம்சங்களிலும் முழுமையாகப் பொருந்தும் என்று சொல்லமுடியாது. தாமே திட்டம் போட்டு, சுயமுயற்சி எடுத்து ஆறுகள் சமுத்திரத்தில் கலப்பதில்லை. அவற்றின் பாதை நிலப் பரப்பைப் பொறுத்து அமைகின்றன. ஆனுல் உயிரினங்களுக்கோ அறிவோ, உணர்வோ இருக்கிறது. எனவே உயிரற்ற நீரைப் போல உயிரினங்கள் நடந்துகொள்ளுமா என்ற சந்தேகம் சிலருக்கு வரலாம். உணர்வுள்ள இனங்களும் அப்படித்தான் அழிவை நோக்கிச் செல்லுகின்றன என்று காட்டுவதற்கு விட்டில் பூச்சிகள் உதாரணம் இங்கு கூறப்படுகிறது. வெளியாவது, வெளி யான நிலையிலிருந்து மீண்டும் வெளியாக நிலைக்குச் செல்வது— இதை இயற்கை வியாசருக்கு வெட்டவெளிச்சமாக எல்லா நிகழ்ச்சிகளிலும், எல்லா இடங்களிலும் எடுத்துக் காட்டுவ தாகத் தோன்றுகிறது. இதைத்தான் நாம் பிறப்பு, இறப்பு என்று சொல்லுகிறோம். பயங்கரமாகத் தோன்றும் 'மரணம்' என்ற நிகழ்ச்சியை சரியான நோக்கிலும், நல்லறிவுடனும் பார்த்தால்,

அது மகிழ்ச்சிகரமான, வேடிக்கையான ஒன்ருகக்கூடத் தோன்ற லாம்.

'குரு க்ஷேத்திரப் போர்க் களத்தில் இத்தனை பேரைக் கொல்லப் போகிறேனே' என்ற பதை பதைப்புத்தான் அர்ஜுனனுடைய துயரத்திற்கு முக்கிய காரணம். நிலைமையை அவன் சரியாக மதிப்பிடாததால் இத்துயரத்திற்கு உள்ளாகிருன். இந்த நோயைத் தீர்க்க வேண்டுமென்ருல், கிருஷ்ணர் அவனை உயரத் தூக்கிப் பிடித்து, வாழ்க்கையை முழுமையாகப் பார்க்க உதவ வேண்டும். நெருங்கிப் பரிசீலனை செய்தால், பயங்கரமாகத் தோன்றும் எந்தப் பிரச்னைக்குமே ஒரு தீர்வு கண்டுவிடலாம். அதிலுள்ள சிக்கலைப் போக்கிவிடலாம். அறிவின் விவேகத்தை ''அறியாமை'' கவிந்து கொள்ளும்போதுதான் நிகழ்ச்சிகள் ஒருவனை முறியடித்து விடுகின்றன. நதிகள் சமுத்திரத்தை நோக்கி ஓடுவது போல விட்டில் பூச்சிகள் நெருப்பில் பாய்வது போல, எல்லாப் படைப் பினங்களும் தவிர்க்க முடியாதவாறு தன்னை வெளியிட்டுக்கொள்ளா (அவ்யக்தமான) பரம் பொருளிடம் பாய்ந்து சென்ற வண்ணம் இருக்கின்றன. இந்தத் தெளிவு ஏற்பட்ட பிறகு, சாவு பற்றிய பயம் எதுவுமின்றி வாழ்க் கையை எதிர் நோக்கலாம். தொடர்ந்து மாறிக்கொண்டே இருப்பதுதான் வாழ்க்கையின் இயல்பு.

காலத்தின் விளையாட்டுத்தான் மரணம். அதில் பயப் படுவதற்கு ஒன்றுமில்லை. கொடுமையாகத் தோன்றும் அதன் அழகு பின்கண்ட சுலோகங்களில் போற்றப்படுகிறது.

வேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தால்
லோகான் ஸமக்ரான் வதனைர் ஜ்வலத்பி:
தேஜோபிராபூர்ய ஜகத்ஸமக்ரம்
பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ
11:30

தழல் கனற்றும் வாய்களினுல் சுற்றிலுமுள்ள எல்லா உலகங் களையும் விழுங்கி விட்டு நாக்கினுல் (ருசியாக இருக்கிறது என்று) சப்புக்கொட்டுகிருய். உனது கொடூரமான கதிர்கள் உலகெங்கும் ஒளிகொட்டி எரிக்கின்றன, ஓ விஷ்ணு.

அற்புதக் கவிதையில் மூழ்கி எழுந்த பின் வியாசர் தமது கருத்து விளக்கத்தை மேலும் தொடருகிருர். உலகப் பொருள்களும், மனிதர்களும் கூட்டங் கூட்டங்களாக பெரு வாய்க்குள் சென்று அழிகின்றன. ஓய்ச்சல் ஒழிவின்றி அந்த வாய் மென்றுகொண்டே இருக்கிறது. சாவுத் தத்துவத்தின் பசி அடங்காப் பசி. உலகத்தை எல்லாம் தின்று தீர்த்துவிட்டு நாக்கை வேறு சப்புக்கொட்டிக் கொள்ளுகிறது.

பரம்பொருளை முத் தேவர்களாகக் கருதுவதின் பொருளை

இச் செய்யுள் தெளிவாக விளக்குகிறது. படைப்போன், காப்போன், அழிப்போன் என்பவர்கள் கருத்தளவில் தனிப்பட்டவர்கள். ஆனால் நடைமுறையில் இம் மூன்று வேலைகளும் ஒரே சமயத்தில் நடக்கின்றன. ஒருபுறம் அழிவு நடந்துகொண்டே இருக்கும்போது, மறுபுறம் படைப்பு நடந்துகொண்டே இருக்கிறது. அழித்தல் என்றால் எல்லாவற்றையும் துடைத்தெறிந்து சூனியமாக்குதல் என்று அர்த்தமில்லை. ஒரு உருவம் மாறி மற்றொரு புதிய உருவமாகப் படைக்கப்படுதல் என்று தான் பொருள். ஆக்கப் பூர்வமான அழிவு வேலையைத்தான் உலகத்தில் திரும்பிய இடமெல்லாம் காண்கிறோம்.

சினிமாப் படம் மிகப் பிரகாசமான விளக்கு முன்னால் வெகு வேகமாக வந்து மறைகிறது. அந்தப் படம் 'இறந்து' அடுத்த படம் வருகிறது என்று சொல்லலாம். படம் பார்க்கும்போது இந்த 'பிறப்பு—இறப்பு' நமக்குத் தெரிவதில்லை. 'படைப்பு—அழிவு' நடைபெறும் உணர்ச்சி ஏற்படுவதில்லை. இடம்—கால நியதிக்கு உட்பட்டு மனிதர்கள், பொருள்கள், நிகழ்ச்சிகள் முதலியவை தொடர்ச்சியாக வெள்ளித்திரை மீது வந்துபோகும் ஒன்றுதான் அனுபவ மட்டத்தில் நமக்கு ஏற்படுகிறது. வாழ்க்கை என்பதும் அப்படித்தான்.

இதே கருத்தை முத் தேவர்களாக நமது மரபு சித்தரிக்கிறது. சிவன் தொடர்ந்து அழிவு வேலையைச் செய்துகொண்டிருக்கவில்லை என்றால், பிரம்மா படைப்புத் தொழிலை செய்ய முடியாது. படைப்போனும், அழிப்போனும் இல்லை என்றால் காத்தல் என்ற பிரச்னைக்கே இடமில்லை. விஷ்ணுவுடைய பணியை இப் பன்மைத் தோற்ற உலகம் எடுத்துக் காட்டுகிறது. பிரம்மாவும், சிவனும் 'ஈடுபட்டுள்ள விளையாட்டின் ஒரு பகுதிதான் விஷ்ணுவின் 'காத்தல்' பணி. வாழ்வின் உண்மையை இவ்வாறு ஆழ்ந்து புரிந்துகொண்டு அர்ஜுனன் இப்போது மொத்தத்தின் உருவத்தை நோக்குகிறான். அதன் கொடூரமான கதிர்கள் உலகெங்கும் ஒளி கொட்டி எரிக்கின்றன.'' அவற்றின் பிரகாசத்தினால் கண்களே குருடாகிவிடும் போல் தோன்றுகிறது.

'உன்னைப் பார்க்கவே பயமாக இருக்கிறது. ஆகையால்—

ஆக்யாஹி மே கோ பவானுக்ரரூபோ
நமோஸ்து தே தேவவர ப்ரஸீத
விக்ஞாது மிச்சாமி பவந்த மாத்யம்
நஹி ப்ரஜானாமி தவ ப்ரவ்ருத்திம்

*11:31*

பார்க்க இவ்வளவு பயங்கரமாக இருக்கும் நீயார் என்று எனக்குச் சொல்லு. ஓ தேவ தேவா, உன்னை வணங்குகிறேன்,

கருணை காட்டு. உன்னை நான் அறிய விரும்புகிறேன் புராதனப் பொருளே, உண்மையில் உனது நோக்கம் என்னவோ, எனக்குத் தெரியவில்லை.

பகவானுடைய தெய்வீக சக்தியை உடனே அர்ஜுனன் அறிந்துகொள்ளுகிறான். அப்புனிதப் பொருளிடம் பக்தி பொங்கி எழ, இதுவரை பிருந்தாவனத்து ஆயர்குல இளைஞனாக எண்ணி யிருந்தவன் முன் விழுந்து வணங்குகிறான். அவன் அறிவாளியாக இருந்தபோதிலும் இப்போது பெற்ற அனுபவத்தை அவன் முற்றிலும் அறிந்துகொள்ள முடியவில்லை. அவன் செய்யக் கூடிய தெல்லாம், பகவானுடைய திருவடிகளில் சரணாகதி அடைவது தவிர வேறு வழியில்லை. அவ்வாறு பணிந்து வணங்கி, 'நீ யார் என்று சொல்லு' என்று கேட்கிறான்.

அது பதில் பெறத்தக்க பொருட் செறிவுள்ள கேள்விதான் என்பதை வலியுறுத்துவதற்காக 'புராதனப் பொருளே, உன்னை நான் அறிந்துகொள்ள விரும்புகிறேன்' என்று விளக்குகிறான். தன் அனுபவத்திற்குள் சிக்காத ஒன்றை அறிய வேண்டுமென்ற ஆவல் கொழுந்துவிட்டு எரியும்போது தான் சாதகர்களுடைய முயற்சியும் தீவிரம் அடைகிறது என்று நமது ஆன்மிக நூல்கள் கூறுகின்றன. ஆனால் இங்கு அர்ஜுனனை உடனடியாக எதிர் நோக்கி இருக்கும் பிரச்னை இப்பேருருவத்திற்குப் பின்னால் உள்ள தெய்விகப் பேருண்மையை அறிவது அல்ல. அவனுடைய உணர்ச்சியில் அச்சமும் கலந்திருக்கிறது. போரின் விளைவு எப்படி இருக்கும் என்று அறிய அவன் உள்ளம் துடித்துக்கொண்டிருக் கிறது. ''இவ்வுருவத்தில் நீ தோன்றுவதன் நோக்கம் என்ன? உண்மையில் எனக்கு உன் நோக்கம் விளங்கவில்லை'' என்று கூறுவதிலிருந்து அவனுடைய கவலை தெரிகிறது. இவ்வளவு பயங்கர உருவெடுத்து, எரியும் வாய்க்குள் கௌரவப் படைகள் புகுந்து மடிவதாகத் தனக்குக் காட்டி நிற்கும் கிருஷ்ணருடைய உண்மையான நோக்கம் என்ன? வெற்றி பெற வேண்டுமென்று ஒருவன் அளவிலா ஆவலுற்று இருக்கிறான். வெற்றிச் சின்னங் களும் காணப்படுகின்றன. மற்றவர்களுடைய வாயிலாக அதை உறுதி செய்துகொண்டால் மனதிற்கு ஒரு சமாதானம்! தான் விரும்பும் நிகழ்ச்சி எதிரில் நடந்துகொண்டிருப்பதை அர்ஜுனன் பார்க்கிறான். ஆனால் அது கிருஷ்ணன் வாயிலாக வரவேண்டு மென்பதற்காக விசுவரூபம் எடுத்து தன் நோக்கத்தைக் கேட் கிறான்.

மெய்ப் பொருளாகிய தான் இப்போது அழிவு அம்சமாக உருவெடுத்திருப்பதாய் கிருஷ்ணர் அறிமுகப்படுத்திக்கொள்ளு கிறார். அவர் கூறுவது பின்வருமாறு—

ஸ்ரீ பகவான் உவாச:

காலோஸ்மி லோககூஷயக்ருத் ப்ரவ்ருத்தோ
லோகான் ஸமாஹர்துமிஹ ப்ரவ்ருத்த:
ருதேபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
யேவஸ்திதா: ப்ரத்யனீகேஷு யோதா: 11:32

உலகத்தை அழிக்கும் வலிமை பெற்ற 'காலம்' நான். அவ் வேலையில் இப்போது ஈடுபட்டிருக்கிறேன். நீ இல்லை என்றாலும் கூட எதிர்த்தரப்பில் அணி வகுத்து நிற்கும் வீரர்களில் எவரும் எஞ்சி நிற்கப் போவதில்லை.

ஒரு பொருளின் முந்திய நிலை அழிந்தாலன்றி, அது புது உரு வாக்கம் பெறமுடியாது. பழமை ஒரு புறம் அழிந்து கொண்டுவரும்போது, மறுபுரம் புதுமை உருவாகிக்கொண்டு வருகிறது. ''நேற்று'' என்பது மடிந்து ''இன்று'' பிறந்திருக்கி றது. குழந்தைப் பருவம் மடிந்தால் தான் வாலிபம் தோன்றி யிருக்கிறது. வாலிபம் மடிந்து கிழப் பருவம் வருகிறது. ஆக்கபூர்வ மான இந்த அழிவு வேலைகளுக்கு அடிப்படையாக இருக்கும் உயிர் இயக்கம் ஆன்மாதான். உலகத்தை அழிக்கும் 'காலம்' என்ற முறையில் கிருஷ்ணர் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்ளு கிறார். வதங்கி வீணாய் போன ஒரு தலைமுறையையும் அதன் பொய் மதிப்புக்களையும், அவல வாழ்க்கையையும் ஒருங்கே துடைத்து எறிய உருவெடுத்து இருப்பதாக அவர் அறிவித்துக் கொள்ளுகிறார்.

உலகத்தை அழிப்பது இறைவனுடைய கருணை இயல்புக்கு மாறுபட்டதல்ல. கருணை காரணமாக சில சமயங்களில் கொல்லவும் நேரிடுகிறது. உடைந்த பாலத்தையும், விரிசல் விழுந்த அணைகளையும், மிக மோசமான நிலையிலுள்ள புராதன வீடுகளையும் அப்படியே விட்டு வைப்பதைவிட இடித்துவிட்டு புதி தாகக் கட்டிவிடுவதே நல்லது. அவற்றை உடைத்தெறிவது கருணைமிக்க தரும கைங்கரியம்.

நாட்டின் கலாச்சார முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போடும் தீய சக்திகளை அறவே ஒழித்துக்கட்டுவதற்காக தாம் உரு வாக்கம் கொண்டிருப்பதாய் கிருஷ்ணர் கூறுகிறார். முதலில் தனது படைகள் வெற்றி பெறும் என்ற நம்பிக்கை அர்ஜுனனுக்கு உறுதியாகிறது. புனரமைப்புப் பணி எந்த ஒரு தனி நபரையும் பொறுத்தது. அல்ல என்று கிருஷ்ணர் தெளி வாக்குகிறார். அதை 'காலம்' செய்கிறது. மாபெரும் பிரபஞ்சப்புது வாழ்வு இயக்கத்தில் தனிப்பட்டவர்கள் ஏதோ தற்செயலாகக் கலந்துகொண்டு, அதை ஊக்குவிக்கும் கருவிகள் ஆகிறார்கள். அவர்களுடைய ஒத்துழைப்புடனே, ஒத்துழைப்பு

இல்லாமலோ, சில சமயங்களில் அவர்களுடைய எதிர்ப்பையும் கூட சமாளித்து, காலத்தின் திட்டங்கள் நிறைவேறியே தீரும். மனித வாழ்வின் புனரமைப்பை உலகம் கோருகிறது. குறுகிய நோக்கங்களுக்காக இப்போரில் பங்குகொள்ளும் கூட்டங்கள், கலாச்சார வளர்ச்சிக்கு குறுக்கே நிற்க முடியாது. ''நீ கருவியாக இல்லாவிட்டால்கூட 'இப் புனிதப் பணி நடைபெறும்'' என்று கிருஷ்ணர் அழுத்தமாகக் கூறுகிறார்.

இச் சொற்களை மகாபாரதக் கதையுடன் இணைத்துப் பார்த்தால் கௌரவப் படைகள் ஏற்கனவே மடிந்துவிட்டதாகப் பொருள்படுகிறது. அர்ஜுனன் இம் மறுமலர்ச்சிப் பணியில் பங்கு கொள்ளுவதன் மூலம் நிச்சயமாக வெற்றி பெறப் போகும் பக்கத்தில் இணைந்து நிற்கிறான் என்று பொருள்.

ஆகையால் மனித குலத்தின் நிரந்தரப் பிரதிநிதி என்ற முறையில், அச்சத்தை கைவிட்டு, வாழ்க்கையில் தனது கடமையை செய்யுமாறு அர்ஜுனனுக்கு கிருஷ்ணர் கருத்துரை கூறுகிறார்.

தஸ்மாத் த்வமுத்திஷ்ட யசோ லபஸ்வ
ஜித்வா சத்ரூன் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம்
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்த மாத்ரம் பவ ஸவ்ய ஸாசின் *11:33*

ஆகையால் நீ எழுந்து நில். புகழ்பெறு. எதிரிகளை முறியடித்து வளமுடைய நாட்டை (கைப்பற்றி) அனுபவி. அவர்கள் முன்னரே என்னால் அழிக்கப்பட்டுவிட்டார்கள். நீ வெறும் கருவியாக மட்டும் இரு, இடது கைவில்லோனே.

த்ரோணம் ச பீஷ்மம் ச ஜயத்ரதம் ச
கர்ணம் ததான்யானபி யோத வீரான்
மயா ஹதான் ஸ்த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா
யுத் யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்னான் *11:34*

துரோணர், பீஷ்மர், ஜெயத்ரதன், கர்ணன், மற்றும் பல போர் வீரர்கள்—அவர்களெல்லாம் ஏற்கனவே என்னால் சிதைக்கப்பட்டு விட்டனர். நீ அவர்களைக் கொல். அச்சத்தால் கலங்காதே. போர் செய். யுத்தத்தில் நீதான் வெற்றி பெறப் போகிறாய்.

எழுந்து நின்று, காலத்தை தன் வசமாக்கிக் கொண்டு வெற்றியும் பெருமையும் அடையுமாறு, அர்ஜுனனுக்கு கிருஷ்ணர் நேரடியாகக் கூறுகிறார். தீய சக்திகளின் படைபலம் அதிகமாக இருந்த போதிலும், பெருவலிவுள்ள ''மாறுதல்''

அதை விழுங்கி விட்டது என்றும், அர்ஜுனன் முன்வந்து ஒரு மா வீரனுக நடந்து கொண்டு, வெற்றி மகுடத்தை ஏற்று தரித்துக் கொள்ள வேண்டியது தான் பாக்கி என்றும் சொல்லுகிறுர். ''வெளித்தோற்றத்திற்கு மட்டும் நீ கருவியாக இரு, இடது கையால் விற்பிரயோகம் செய்யும் திறன் பெற்ற வீரனே''.

கடவுளுடைய கையில் தன்னை ஒப்படைத்து விட்டு அவருடைய கருவியாக இயங்கும் போது தான் ஒருவன் மாபெரும் சாதனைகள் புரிய முடிகிறது. சிந்திக்கத் தெரிந்த எல்லோருக்கும் இது தெளிவாகத் தெரியும். ஆனுல் பெரும் பாலோர் இதை ஒப்புக் கொள்ளுவதில்லை. அவர்களுடைய அகந்தை இதற்கு இடம் கொடுப்பதில்லை. நமக்கு வரும் வெற்றியில் நமது முயற்சியின் பங்கு குறைவு. நம் கண்ணுக்குப் புலப்படாத ஏதோ ஒரு கையின் உதவி இயற்கையின் பங்கு, அதில் அதிகமாக இருக்கும். நாம் செய்யக் கூடியதெல்லாம், சில பொருள்களை ஒன்று சேர்த்து, அவற்றின் இயல்புகளுக்கு ஏற்ற பயனை அடைவதுதான். புதிதாக ஒன்றைப் படைத்து விட்டதாக நினைத்து நாம் பெருமை கொள்ளுவது இதைப் பற்றித்தான். அகந்தை ஒதுங்கி நின்று, நம்மிடமுள்ள தெய்விக இயல்பு தங்கு தடையின்றி வேலை செய்ய இடம் கொடுத்தால் நாம் இன்னும் பெரிய சாதனைகளைப்புரிய முடியும்.

ரேடியோ, ஆகாயவிமானம், மிக நுணுக்கமான யந்திரங்கள், அற்புத மருந்துகள், மற்றும் உலகத்திலுள்ள எல்லா முன்னேற்றச் சிறப்புகளும், கடவுள் மடியில் அமர்ந்து விளையாடும் குழந்தைகளின் வேலை. மின்சாரம், இரும்பு, காற்று முதலியவற்றை நமக்குக் கொடுத்தது மட்டுமின்றி, அப்பொருள்களின் தன்மைகளையும் அவற்றிற்குக் கொடுத்து அவற்றை அனுபவித்துக் கொள்ள அனுமதி அளித்திருக்கிறுர் இறைவன். இவை இல்லாமல் உலகில் எவ்வித சாதனையும் நடந்திருக்க முடியாது. மிஞ்சி மிஞ்சிச் செய்தால், நாம் சாதிப்பது என்ன? இயற்கையில் உள்ள பொருள்களை ஒன்று சேர்த்து, அவற்றின் தன்மைகளை வெளிவரச் செய்து, ஒரு பொருளை உண்டாக்குகிறேம். கடவுள் அளித்துள்ள பொருள்களை குறிப்பிட்ட வகைகளில் அமைப்பதும், மாற்றி அமைப்பதுமே நாம் செய்துள்ள சாதனைகள்.

இறைவன் நினைவாகவே இவ்வுலகத்திற்குப் பணிபுரிந்து வருதல், சரணுகதி போன்ற கருத்துக்கள் எல்லாம் வெறும் பகற்கனவுகள் அல்ல. உலக யதார்த்த நிலையிலிருந்து ஓடி ஒளிவதற்காக சில சோம்பேறிகள் வகுத்த திட்டங்கள் அல்ல. மனிதன் தனது சக்தியையும் உணர்ச்சிகளையும் உயர்நிலைக்குக் கொண்டு வந்து, சிறப்பாகவும் வெற்றிகரமாகவும் இவ்வுலகில் வாழ அவை வழி செய்கின்றன. குறையா உற்சாகமும்,

மகிழ்ச்சியும் எப்போதுமே மனித உள்ளத்தில் இருந்து வரச் செய்வதற்கு கண்டு பிடிக்கப் பட்டிருக்கும் வழிகள் அவை.

அகந்தையின் ஆதிக்கமே உலகில் இப்போது ஆட்டம் போட்டு வருகிறது. உயர்ந்த, மாண்பு மிக்க பண்புகளை உணர்ந்து, அவற்றினிடம் நமது அகந்தையை ஒப்படைத்து விட்டால், உலகமும், அதன் சாதனைகளும் வெறும் விளையாட்டு போல நமக்குத் தோன்றும். பிறகு நாம் மேற் கொள்ளும் ஒவ்வொன்றிலும் வெற்றி கிடைப்பது நிச்சயம். நம்மிடமுள்ள தலை சிறந்த அம்சங்கள் வெளியாவதற்கு சரணுகதி ஒப்பற்ற ஒரு வழிமுறை என்பதை கீதை ஏற்கனவே பல இடங்களில் உறுதியாக எடுத்துரைத்து இருக்கிறது. அதே கருத்து இங்கு மீண்டும் வலியுறுத்தப் பட்டிருக்கிறது. மாவீரர் போல் செயலாற்றி இறைவனுடைய கருவிகளாக நடந்து கொண்டு, அதற்கு சன் மானமாக பெருமையையும் நாட்டையும் பெற்றுக் கொள்ளும் படி அர்ஜுனனுக்கு பகவான் அழைப்பு விடுகிருர்.

கௌரவப் படைகளில் சில தலைவர்களிடம் அர்ஜுனன் அச்சங் கொள்ளுவதற்குக் காரணங்கள் இருக்கின்றன. பகவான் அத்தலைவர்களைக் குறிப்பிட்டு, எல்லாவற்றையும் விழுங்கும் கால தேவதை அவர்களையும் ஏற்கனவே கொன்று விட்டது என்று கூறுகிருர்.

அர்ஜுனனுக்கு வில்வித்தை கற்றுக் கொடுத்த ஆசான் துரோணர். அவரிடம் சில முக்கிய அஸ்திரங்கள் இருக்கின்றன. எப்போதுமே அர்ஜுனனுக்கு அவரிடம் தனி மதிப்பும் மரியாதையும் உண்டு. பீஷ்மப் பிதாமகருக்குத் தமது மரண காலத்தையே நிர்ணயித்துக் கொள்ளும் ஆற்றல் உண்டு. தேவர்களிடமிருந்து பெற்ற பல ஆயுதங்கள் அவரிடம் இன்னும் இருக்கின்றன. ஒரு காலத்தில் பரசுராமனையே முறியடித்து, மண்ணைக் கவ்வச் செய்தவர் அவர். ஜெயத்ரதனை யாரும் போரில் வெல்ல முடியாது. தவத்தில் ஈடு பட்டிருந்த அவனுடைய தந்தை ''என் மகனுடைய தலையை யார் தரையில் வீழ்த்துகிருரோ, அவருடைய தலையும் மண்ணில் விழும்'' என்று ஆணையிட்டிருந்தார். கர்ணனிடம் இந்திரன் அளித்த பாணம் ஒன்று இருந்தது. காலத்தினுல் அழிக்கப்பட்டவர்களில் இவர்களுடைய பெயர்களை கிருஷ்ணர் குறிப்பாகச் சொல்லுவதன் நோக்கம் இப்போது தெரிகிறது. அல்லவா? அழிவுத்தத்துவம் இவர்களையும் விழுங்கி விட்டது. எனவே வெற்றியின் கதவுகள் அர்ஜுனனுக்குத் திறக்கப் பட்டிருக்கின்றன. அரியணையும், மணிமகுடமும் காத்திருக் கின்றன. முன்னேறிச் சென்று அப்பெருமைகளை ஏற்கும்படி அவனுக்கு கிருஷ்ணர் ஊக்கம் அளிக்கிருர்.

ஒருவருடைய அடக்க முடியாத ஆவல் நிறைவேறி

விட்டால், எல்லயற்ற மகிழ்ச்சி பொங்க தனக்கு வழி காட்டும் ஆசானை அவன் போற்றிப் புகழ்வது இயற்கை. பின்வரும் செய்யுளில் அது விவரிக்கப் பட்டிருக்கிறது.

ஸஞ்சய உவாச:
ஏதச்ச்ருத்வா வசனம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர்வேபமான: கிரீடீ
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய 11:35

சஞ்சயன் சொன்னான்:

கேசவனுடைய அப் பேச்சைக் கேட்ட முடிதரித்தோன் (அர்ஜுனன்) கைகூப்பி அச்சத்தால் உடல் நடுங்க, நெடுஞ்சாண் கிடையாக விழுந்து எழுந்து தலை குனிந்தவாறு கம்மிய குரலில் கிருஷ்ணனிடம் மீண்டும் கூறினான்.

நாடக முறையைப் பின்பற்றி எழுதுவது வியாசருக்குக் கைவந்த கலை. போர்க்கள ஆர்ப்பாட்டங்களிலிருந்து, அமைதி நிலவும் அரண்மனைக்கு அவர் நம்மை இட்டுச் செல்லுகிறார். சஞ்சயனுடைய நேர்முக வர்ணனையைக் குருட்டு மன்னன் திருதராஷ்டிரன் கேட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிறான். குருக்ஷேத்திரத்திலிருந்து காட்சியை மீண்டும்* வேறு இடத்திற்கு மாற்றுவதன் மூலம் நிகழ்ச்சிப் போக்கில் விறுவிறுப்புத் தோன்றவும், போர்க்களப் பரபரப்புக்களினால் கலங்கியுள்ள வாசகர் உள்ளத்தில் சற்று அமைதி ஏற்படுத்தவும் இந்தக் காட்சி மாற்றம் உதவியாக இருக்கிறது.

சஞ்சயன் ''நமது சொந்த நிருபர்'' அவனுடைய அனுதாபம், பாண்டவர்களின் பக்கம்தான் என்பதை நாம் மறந்து விடக் கூடாது. கௌரவப் படைகளில் உள்ள வீராதி வீரர்கள் எல்லோரும் ஏற்கனவே சிதைக்கப்பட்டு விட்டார்கள் என்று திரும்பிக் கூறியதை அவன் தெளிவாக மன்னனுக்கு சொல்லுகிறான். வந்து கொண்டிருந்த பயங்கர அழிவை திருதராஷ்டிரனுடைய உள்ளத்தில் அழுத்தமாகப் பதிய வைப்பதே சஞ்சயன் நோக்கம். இந்த நிலையில் போரை நிறுத்தும் படி உத்தரவிட திருதராஷ்டிரன் ஒருவனால்தான் முடியும். அவ்வாறு உத்தரவிடுவானோ என்று சஞ்சயன் ஆவலுடன் எதிர் பார்க்கிறான். அவனுடைய சொற்களிலேயே இந்த ஆர்வம் பிரதிபலிக்கிறது.

---

* இதே அத்தியாயத்தில் போர்க் களத்திலிருந்து அரண்மனைக்கும், அரண்மனையிலிருந்து போர்க் களத்துக்குமாகக் காட்சி மூன்று தடவை மாறிவிட்டது.

கேசவனுடைய சொற்களைக் கேட்ட பிறகு, முடிதரித்த அர்ஜுனன் கைகூப்பி, அச்சத்தினால் உடல் நடுங்க, மீண்டும் கிருஷ்ணனுடன் பேசுகிறான் என்று போர்க்கள நிலைமையையும், தமது மனநிலையையும் ஒருங்கே படம் பிடித்துக் காட்டுகிறான் சஞ்சயன். அர்ஜுனனை ''முடித் தரித்தோன்'' என்று அவன் திடீரென்று குறிப்பிடுவதன் நோக்கம், வரப் போவதை முன் கூட்டியே அறிவிப்பதற்காகவும் இருக்கலாம். விபரீதமான இப் போரை தொடங்க அனுமதிப்பது முட்டாள்தனம். மன்னன் அதை உணருவான் என்று சஞ்சயன் எதிர்பார்க்கிறான். குருடன் எதையுமே பார்க்க முடியாது. மருட்சி காரணமாக அவனுடைய அறிவும் குருடாகி இருக்கிறது. எனவே நிலைமையை சரியானபடி அறிந்து கொள்ள மன்னனால் முடியவில்லை.

தனது புதல்வர்களிடம் கொண்ட பாசத்தினால் நீதிக்கும், அநீதிக்கும் உள்ள பாகுபாடு கூட திருதராஷ்டிரனுக்குத் தெரிய வில்லை. எனவே உளவியல் முறையைக் கையாண்டு பார்க்கலாம் என்ற நோக்கத்துடன் ''கிருஷ்ணனுடைய நெருங்கிய நண்பனும் மாவீரனுமான அர்ஜுனனே உடல் நடுங்க, பேச்சுத் திணற, பயத்துடன் பேசுகிறான்'' என்று சஞ்சயன் கூறுகிறான். சுற்றி யுள்ள எல்லோரும் அச்சத்தினால் மூழ்கியிருக்கிறார்கள் என்றால், கேட்பவர்களையும் அது கலவரத்தில் ஆழ்த்தும் என்பது சஞ்சய னுக்குத் தெரியும். தொடங்கப் போகும் போரின் கொடுமையை யும், முறியடிக்கப்பட்டவர்களுக்கு அதனால் வரும் விளைவுகளையும் அவன் இவ்வாறு உணர்த்த முயற்சிக்கிறான். திருதராஷ்டிரன் அசைந்து கொடுக்கவில்லை. அவனுடைய அசட்டுப் பாசத்தினால் எதுவுமே அவனுக்கு விளங்குவதாகத் தெரியவில்லை.

விசுவரூபத்தை நோக்கி அர்ஜுனன் இப்போது பேசுகிறான்.

*அர்ஜுன உவாச:*

ஸ்தானே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்யா
ஜகத்ப்ரஹ்ருஷ்யத்யனுரஜ்யதே ச
ரக்ஷாம்ஸி பீதானி திசோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்கா *11:36*

*அர்ஜுனன் சொன்னான்:*

ரிஷீகேசா, (கிருஷ்ணா) உலகம் உனது புகழ்பாடி ஆனந்திப்பது சரிதான். அரக்கர்கள் உன்னைக் கண்டு பயந்து எல்லா பக்கங்களிலும் சிதறி ஓடுகிறார்கள். சித்தர்கள் கூடி உனக்குத் தலை வணங்கி அஞ்சலி செலுத்துகிறார்கள்.

செல்வம் கொழிக்கும் அரண்மனையின் அலங்கார மண்டபங் களிலிருந்து, சத்தமும், சந்தடியுமாக உள்ள போர்க்களக்

காட்சியைக் காட்ட, கீதை மாணவர்களை வியாசர் தமது இனிய கவிதையின் மூலம் அழைத்துச் செல்லுகிறார். அங்கு அவர்களுக்கு விசுவரூப தரிசனம் மறுபடியும் கிடைக்கிறது. கூப்பிய கைகளுடன், பயத்தால் நடுங்கிய வண்ணம், பேசத் திணறும் அர்ஜுனனுடைய சித்திரத்தை சிறப்பாக வரைந்திருக்கிறார் வியாசர். அடுத்து வரும் பதினோரு செய்யுட்களும் இந்து மதத்திலுள்ள ஒப்பற்ற பிரார்த்தனை கீதங்களாக அமைகிறது. அதன் சொற்களும், கருத்தும் தெளிவாக பொதுவாக எல்லோரும் ஏற்றுக் கொள்ளக் கூடியவை. எல்லா மதங்களும் அதைப் பிரார்த்தனை கீதங்களாக ஏற்றுக் கொள்ளலாம். கருத்தின் அழகிலோ, இனிமையிலோ, ஆழத்திலோ இதைவிடச் சிறந்த கீதங்களை எவரும் நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. பிரபஞ்ச உருவத்தின் விவரங்கள் ஒருபுறமிருக்க, அதன் பின்னுள்ள மெய்ப்பொருளை உணரும் திறன் அர்ஜுனனுக்கு வந்து கொண்டிருப்பதை இவை காட்டுகின்றன.

ஒருவன் கண்ணாடியில் தன்னைப் பார்த்துக் கொள்ளும் போது, கண்ணாடியின் மேல் மட்டத்தைக் கவனிப்பதில்லை. அதைக் கவனிக்கத் தொடங்கியவுடன் அதில் பிரதிபலிக்கும் உருவம் அவனுக்குத் தென்படாமல் போகலாம். அப்படித் தென்பட்டாலும் அதை ஓரளவே புரிந்து கொள்வான். பிரபஞ்ச உருவத்தின் பல்வேறு பகுதிகளையும், அதில் நடப்பவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த வரை, அவ்வுருவத்தின் அடிப்படையான பரம்பொருளை, அர்ஜுனன் உணரவில்லை. பின்வரும் செய்யுட்களில் விசுவரூபக் காட்சியில் பொதிந்துள்ள ஆழ்ந்த பொருளை அவன் படிப்படியாக உணரத் தொடங்குகிறான்.

கஸ்மாச்ச தே ந நமேரன் மஹாத்மன்
கரீயஸே ப்ரஹ்மணோ ப்யாதிகர்த்ரே
அனந்த தேவேச ஜகந்நிவாஸ
த்வமக்ஷரம் ஸத ஸத்தத்பரம் யத் 11:37

ஓ மகாத்மா, (எல்லோரிலும்) உயர்ந்த உன்னை, பிரம்மாவுக்கும் மூல காரணமாக இருப்பவனை, அவர்கள் எப்படி வணங்காது இருப்பார்கள்? எல்லையற்றவனே, தேவ தேவா, பிரபஞ்சத்தின் உறைவிடமே, வெளித் தோற்றம் கொண்டவை' கொள்ளாதவை ஆகிய எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டு நிற்கும் அழியாப் பொருள் நீ.

மகோன்னதமாக உள்ள உன்னை அவர்கள் நிச்சயம் வணங்குவார்கள்—பன்மை உலகத்தைப் படைத்தவர் பிரம்மா என்றால், அவரையே படைத்த மெய்ப்பொருளை அவர்கள் ஏன் வணங்க மாட்டார்கள்? நிச்சயமாக வணங்குவார்கள். எல்லா

மண் குடங்களிலும் உள்ள மண்ணுக, எல்லாப் பொன் ஆபரணங் களிலும் உள்ள பொன்ஞக, ஆதிப் பொருள் பகவான் விளங்கு கிருர். மண் என்ற மூலப் பொருள் இல்லாமல் மண்பாண்டமே இல்லே. பொன் என்ற மூலப் பொருளின்றி எந்தத் தங்க நகையும் இருக்க முடியாது. எல்லாவற்றிலும் விரவி நின்று அவற்றிற்கு நாமரூபங்கள் அளித்து கொண்டிருப்பது ஆதிப் பொருளாகிய பகவான்தான். அவர் எல்லே இல்லாதவர். அவரே பிரபஞ்ச மாகத் திகழுகிருர். தேவர்களின் அதிபராகவும் விளங்குகிருர். காற்று, தீ முதலிய இயற்கை சக்திகளுக்கு வற்ருத ஊற்றுப் போல இன்று அவைகளுக்கு சக்தி அளித்து வருகிருர்.

இவ்வுலகத்தை இரு கூறுகளாகப் பிரிக்கலாம். தோற்றம் கொண்டது (சத்து), மறைந்து நிற்பது (அ—சத்து) என்ற இரண்டுமே அக்கூறுகள். நமது புலன்கள், மனம், அறிவு ஆகிய கருவிகளுக்கு எட்டுபவை தோற்றம் கொண்ட பொருள்கள் (சத்து). குறிப்பிட்ட முறையில் நமது புலன்களே இயங்கச் செய் வது, மனத்தை உணரச் செய்வது, அறிவை சிந்திக்கச் செய்வது போன்ற செயல்களே இயக்குவிக்கும் மூலத்தை அசத்து (வெளியாகாதது) என்று கூறுகிருேம். மாந்தர் இவ்வுலகில் வாழ் வதற்குக் காரணமாக இருப்பது இவ் வெளியாகா நுணுக்க மூலங் களே. இவையே ''வாசனேகள்'' வெளித் தோற்றம் கொண்டவை, கொள்ளாதவை ஆகிய இரண்டுக்குமே அதிபதி பகவான் என்றும், அவர் அவ்விரு கூறுகளே கடந்து நிற்கிருர் என்றும் அர்ஜுனன் கூறுவது மிக அழகாக இருக்கிறது.

அவற்றைக் கடந்து நிற்பது—நாடகக் கொட்டகையில் அமர்ந்திருக்கும் போது சிரிப்பும் விளேயாட்டுமாக இருக்கும் இன்ப நாடகத்தையோ அல்லது துயர நிகழ்ச்சிகள் நிறைந்த சோக நாடகத்தையோ நாம் பார்க்கிருேம். நாம் காணும் காட்சி களுக்கு ஏற்ப நமது மனம் இன்பத்தையோ, துயரத்தையோ அனுபவிக்கிறது. ஆனுல் நாடகக் கொட்டகையிலுள்ள விளக்கு களுக்கு இன்பமும் இல்லே, துயரமும் இல்லே. அது அவ்விரண்டை யும் கடந்து நிற்கிறது. கல்யாண மோதிரமும் தங்கம்தான், மணப் பெண்ணுக்கு போடும் காசு மாலேயும் தங்கம்தான். இதி லிருந்து, தங்கம் என்ருல் காசுமாலே என்ருே, கல்யாண மோதிரம் என்ருே பொருள் கூற முடியாது. அதே மாதிரி, எல்லா நாம ரூபங்களிலும் பகவான் சாராம்சப் பொருளாக இருப்ப தால், தோற்றம் கொண்டுள்ள பொருள்களிலும், வெளித் தோற்றம் கோண்டவை, வ்வெளித் தோற்றம் கொள்ளாதவை என்ற பாகுபாடு விளங்குகிறது. அவ்வாறு எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டு உயர்ந்து நிற்கும் பரம் பொருளேத்தான் இங்கு அர்ஜுனன் வணங்குகிருன்.

Ramesh

இந்த சுலோகங்களை* எல்லா மதங்களைச் சேர்ந்தவர்களும் பிரார்த்தனை கீதங்களாகப் பயன்படுத்தலாம். உலகத்திலுள்ள எல்லா மத இலக்கியங்களிலும் பொதுவாகக் கூறப்படும் கருத்துக்களை இவை பிரதிபலிக்கின்றன. எந்த மதமும் இவற்றை எதிர்க்க முடியாது. இறைவனைப் பற்றிய கருத்துக்கள் முழுவதுமே இதில் அடங்கி இருக்கின்றன என்று கூறலாம். இப் பகுதியை படிக்கப் படிக்க சாதகர்களின் உள்ளங்களும் எல்லை யற்று விரியத் தொடங்குகின்றன. அர்ஜுனன் பின் கண்டவாறு பகவானைப் புகழ்கிறான்.

த்வமாதிதேவ: புருஷ: புராணஸ்
த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம்
வேத்தாஸி வேத்யம் ச பரம் சதாம
த்வயா ததம் விச்வமனந்த ரூப 11:38

நீ ஆதிதேவன், புராதன புருஷன்--இப் பிரபஞ்சத்தின் 'ஒப்பற்ற புகலிடம்'. அறிவோனாகவும், அறியப் படக் கூடியவனாக வும் இருக்கிறாய். எல்லா நிலைகளையும் கடந்த 'வீடு' நீ. எண்ணற்ற உருவங்களை உடையோனே, இப் பிரபஞ்சமெல்லாம் வியாபித்து இருக்கிறாய்.

ஆதி இறைவன் நீ—பரமாத்மாவே படைப்பு முழுவதற்கும் மூலகாரணம். அவருடைய தூய உணர்வில் உதித்த ஒரே பிரம் மாவும் கூட தனது படைப்புத் தூண்டுதலால் உந்தப்பட்ட ஆன்மா அவ்விருப்பத்திற்கு இணங்க, படைப்புத் தொழிலில் ஈடு பட்டது.

பிரபஞ்சத்தின் இருப்பிடம் நீ—பிரபஞ்சம் முழுவதுமே இறைவனில் குடி கொண்டிருக்கிறது. விஞ்ஞானிகள் பயன்படுத்தும் 'பிரபஞ்சம்' (விசுவ) என்ற சொல்லையும் சேர்த்துக் குழப்பிக் கொள்ளக் கூடாது. 'விசுவ' என்ற சமஸ் கிருதச் சொல் வெளி உலகங்களையும், மொத்த உணர்ச்சி உலகம், மொத்த சிந்தனை உலகம் ஆகியவற்றையும் சேர்த்துக் குறிப்பிடு கிறது. உடல், மனம், அறிவு என்ற கருவிகளுக்கு எட்டும் எல்லா உலகங்களையும் ஒட்டு மொத்தமாகச் சேர்த்து 'விசுவம்' என்று நமது தத்துவத்தில் குறிப்பிடுகிறார்கள்.

இதைப் புரிந்து கொண்டவர்கள் 'வாழ்க்கை' என்பதன் முழுப் பொருளை உணர்ந்து கொள்ளலாம். நமக்குத்தென்படும் உலகம், உடல், மனம், அறிவுக் கருவிகளால் அறியப்படுவது. அக் கருவிகள் ஜடப் பொருளால் உருவானவை. ஆன்மாவிடமிருந்து

---

* சுலோகங்கள் 36 முதல் 44 வரை.

பெறும் உணர்வைத் தவிர அவைகளுக்குத் தனியான உணர்வு இல்லை.

இப் பொருள் உறைகள் ஆன்மாவிலிருந்து எழுந்தவை அல்ல என்பதை ஏற்கனவே விளக்கியிருக்கிறோம். ஆன்மா மாறாதது. பொருள் உலகம், வேறு எந்த இடத்திலிருந்தும் தானாகத் தோன்றியிருக்க முடியாது. ஏனெனில் ஆன்மா எல்லா இடங்களிலும் பரவி இருக்கிறது. பிரிதொன்றில்லா தனிப் பொருளாக இருப்பது ஆன்மா ஒன்றே. இல்லாத ஒன்றை மெய்ப்பொருள் மீது ஏற்றி வைத்து அதை 'பிரபஞ்சம்' என்று நாமாகக் கூறுகிறோம். (விளக்குத் தூண்) மரத்தின் மீது சிலர் பேயை ஏற்றிப் பார்ப்பது போன்ற மருட்சி அது. இந்த மருட்சி நிலையில் 'பேயின் இருப்பிடம் தூண்' என்று கூறலாம் அல்லவா? இல்லாத ஒரு பேயை அங்கு இருப்பதாக நினைத்துக் கொள்ளுவதால் வரும் உணர்ச்சிகளுக்கும், அதன் விளைவாக நாம் ஓடும் ஓட்டத்திற்கும், அந்த சாலை ஓர ''மரம்தான்'' காரணம். மரம் உண்மை. அதில் காணும் பேய்த் தோற்றம் பொய். அவ்வாறே 'பிரபஞ்சத்தின் இருப்பிடம் பகவான்தான்' என்று அர்ஜுனன் மிக அழகாக எடுத்துரைக்கிறான்.

அறிவோன், அறியப்படக் கூடியவன் நீ—நமது அனுபவங்களை எல்லாம் உண்மை நிலைக்குக் கொண்டு வந்து, அவற்றைப் பூர்த்தி செய்வது நமது பேருணர்வுதான். அது ஜடப் பொருள் உலகுக்கு ஒளியூட்டவில்லை என்றால், நாம் எவ்வித அறிவும் பெறுவதற்கில்லை. தேரோட்டிக் கொண்டிருக்கும் கிருஷ்ணர் உண்மையில் இறைத் தத்துவமே என்று அறிந்துதான் 'அறிபவன் நீயே' என்று அர்ஜுனன் கூறுகிறான்.

நமது உணர்வுகளைப் பல்வேறு திசைகளில் செல்லாமல் தடுத்து நிறுத்தி விட்டால், உடனே சிந்தனைகளே இல்லாத தூய உணர்வு நிலையில், ஆன்மாவை நாம் இனம் கண்டு கொள்ளலாம். ஆன்மானுபவம் பெறுவதற்கான எல்லா நடைமுறைகளும் இதைத்தான் சுட்டிக் காட்டுகின்றன. 'அறியப் படக் கூடியவன்' என்று அர்ஜுனன் கூறுவதன் அர்த்தம், 'சாதகத்தின் மூலமாக நாம் ஆன்மீகப் பொருளை அறியலாம்' என்பது.

உருவங்களால் நிறைந்த பிரபஞ்சம் முழுவதிலும் நீ வியாபித்து இருக்கிறாய்—எல்லா லட்டுக்களிலும் இனிமை வியாபித்து இருப்பது போல, எல்லா அலைகளிலும் கடல் ஊடுருவி நிற்பது போல, எங்கும் பகவான் விரவி இருக்கிறார். அவர் சாராம்சப் பொருளாகையால் அவர் இல்லாத பொருளே இல்லை. நமது மனம் பேய் உருவத்தை பதிப்பதற்கு வசதி அளித்தது மரம் என்ற அடிப்படை பொருள். அவ்வாறே ஆன்மா என்ற அடிப்படை பொருள் மீது எண்ணற்ற பன்மைத் தோற்ற உலகங்கள் எழு

கின்றன. ஆகையால் எண்ணற்ற உருவங்களைக் கொண்டு 'நீ பிரபஞ்சமெல்லாம் வியாபித்திருக்கிறாய்' என்று அர்ஜுனன் சொல்லுகிறான். ''எல்லாவற்றிலும் மெய்ப்பொருள் ஊடுருவி நிற்கிறது. ஆனால் அதை ஊடுருவி நிற்பது எதுவுமில்லை'' என்று உபநிடதங்கள் கூறும் உண்மையை அர்ஜுனன் இப்போது அனுபவபூர்வமாக அறிவிக்கிறான்.

வாயுர்ய மோக்னிர்வருண: சசாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹஸ்ச
நமோ நமஸ்தேஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:
புனஸ்ச பூயோ பி நமோ நமஸ்தே 11:39

நீ வாயு, யமன், அக்னி, வருணன், சந்திரன், பிரஜாபதி எல்லோருக்கும் முப்பாட்டன் நீ—உனக்கு வணக்கம். ஆயிரம் தடவை வணக்கம. மீண்டும் வணக்கம்.

உருவங்களைக் கடந்து உயர்ந்து நிற்கும் இறைவனுடைய பெருமைகளை இவ்வளவு நேரம் அர்ஜுனன் புகழ்ந்தேத்தி மகிழ்ந்து கொண்டிருந்தான். அவன் கூறும் அருவத்திற்கும், தான் இதயத்தில் போற்றித் துதிக்கும் உருவத்திற்கும் என்ன சம்பந்தம் என்று ஒரு உபாசகருக்கு சந்தேகம் வரலாம். பண்டைக்கால மக்கள் ஒரு குறிப்பிட்ட உருவில் வழிபட்டு வந்த தெய்வங்கள் எல்லாம் நமது புலனறிவுக்கு உட்பட்ட சக்திகளே. வேதகால மக்கள் வாயு (காற்று), யமன் (அழிப்போன்), அக்னி (நெருப்பு), வருணன் (கடலுக்கு அதிபதி), சசாங்கன் (சந்திரன்)*, பிரஜா பதி முதலிய தெய்வங்களை வழிபாட்டுக்கு உரியனவாகவும், சாதகர்களின் உள் ஆளுமையை உயர்த்தும் தன்மை பெற்றவன வாகவும் கருதினர். படித்தவர்கள்கூட இவற்றை தெய்வங்க ளாகக் கருதி மந்திரங்கள் ஓதுதல், குறிப்பிட்ட முறைகளில் வழி படுதல், சடங்குகளும், வேள்விகளும் செய்தல் முதலிய பலவழி களில் ஆராதித்தனர். சாதனத்தை லட்சியமாக நினைத்துக் குழப்பிக் கொள்பவர்கள் எல்லாக் காலங்களிலும் இருந்து வந்திருக்கிறார்கள். தத்துவப் பொருளை அர்ஜுனன் சரியாகப் புரிந்து கொண்டிருப்பதால், எல்லாவற்றிற்கும் தோற்றுவாயாக, எல்லையற்றுப் பரந்திருக்கும் பரம்பொருள் கிருஷ்ணனைத் தவிர வேறு எவருமில்லை என்று சுட்டிக் காட்டுகிறான்.

இறைவன் பல்வேறு பணிகளின் மூலம் தன்னை வெளியிட் டுக் கொள்ளும் போது, அவற்றின் தேவதைகளாகவே மாறிவிடுகிறார். வேதாந்தம் கூட ஒப்புக் கொள்ளக் கூடிய ஒரு கருத்து இது. தாம் உள்ளத்தில் வழிபடும் கடவுளே

---

* 'சசாங்கன்' என்றால் 'முயல்' குறியுள்ளவன் என்று பொருள். சந்திரனில் காணப்படும் முயல் போன்ற ஒரு உருவத்தினால் இந்தப் பெயர் வந்தது.

மெய்ப்பொருள் என்று இன்று கூட பலர் கூறுவதைப் பார்க்கிறோம். அவ்வாறே தான் வணங்கும் அதிதேவனை அர்ஜுனன் வணங்கித் துதிக்கிறான்.

நம: புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே
நமோஸ்துதே ஸர்வத ஏவ ஸர்வ
அனந்த வீர்யாமித விக்ரமஸ்த்வம்
ஸர்வம் ஸமாப்னோஷி ததோஸி ஸர்வ: 11:40

முன்புறமும், பின்புறமும் உனக்கு நமஸ்காரம். எல்லாப் பக்கங்களிலும் நமஸ்காரம். எல்லாமுமாக இருப்பவனே, வல்லமையில் எல்லையற்று, தீரத்தில் எல்லையற்று, எல்லா இடங்களிலும் நீ பரந்திருக்கிறாய். ஆகையால் எல்லாமே நீதான்.

மெய்ப்பொருள் எங்கும் இருக்கிறார். உள்ளே, வெளியே, மேலே, கீழே எல்லா இடங்களிலும் பரவி இருக்கிறார். அவர் இல்லாத இடமே இல்லை. இது புதிய கருத்தல்ல. எல்லா உபநிடத முனிவர்களுக்கும் இது நேரடி அனுபவமாக எப்போதுமே இருந்திருக்கிறது.

அர்ஜுனன் தனது உள்ளத்தினால், எல்லாப் பக்கங்களிலிருந்தும் பகவானுக்கு வணக்கம் செலுத்துகிறான். ஆகாசத்தைப் போல பகவான் எங்கும் பரவிய சாராம்சப் பொருள் மட்டுமல்ல. எல்லா சக்திக்கும், வீரதீரச் செயல்களுக்கும் அவரே ஊற்றுக் கண்ணாக இருக்கிறார். செயல்படுவதற்கான ஊக்கமும், சாதனைகள் புரிவதற்கான திறமையும் அவருடைய எல்லையற்ற சக்தியிலிருந்து ஓடிவரும் சிறு வாய்க்கால்தான். தூய இருக்கைத் தத்துவமாக பரம்பொருள் எல்லா இடங்களிலும், எல்லா பொருள்களிலும், எல்லா உயிரினங்களிலும் குடி கொண்டிருக்கிறார். இருப்பு தத்துவமில்லாமல் எதுவும் இருக்க முடியாது. ஆதலால் பரம்பொருள், கேவலம் இருப்புத் தத்துவமாக (சத்தாக) எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கிறார். உண்மையில் எல்லாமே அவர்தான். எல்லா அலைகளும் கடல்தான். எல்லா மண்பாண்டங்களும் களிமண்தான்.

''உன் மகிமையைப் பற்றிய சரியான அறிவு, எனக்கு இல்லாததால் நான் ஒரு பாவி. கடந்த காலத்தில் நான் எவ்வளவு முட்டாள்தனமாக வாழ்ந்திருக்கிறேன் என்பது இப்பாது தெரிகிறது. ஆகையால்—''

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி
அஜானதா மஹிமானம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேன வாபி 11:41

உனது பெருமையை அறியாமல், உன்னை வெறும் நண்பனாக மட்டும் கருதி, அன்பினாலோ கவனக்குறைவினாலோ, 'ஏ யாதவா, தோழா என்று துடுக்குத்தனமாக என்ன சொல்லி யிருந்த போதிலும்,

யச்சாவஹாஸார்த்த மஸத்க்ருதோ ஸி
விஹாரசய்யாஸன போஜனேஷு
ஏகோ தவாப்யச்யுத தத் ஸமக்ஷம்
தத்க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம் 11:42

அச்சுதா, விளையாடும் போதோ, இளைப்பாறும் போதோ அல்லது சும்மா அமர்ந்திருக்கும் நேரத்திலோ, உணவு உட்கொள்ளும் போதோ, தனிமையில் அல்லது நண்பர்களுடன் கூடி இருக்கும் போதோ எவ்வகையிலாவது நான் உன்னை மரியாதைக் குறைவாகப் பேசியிருந்தால், என்னை மன்னிக்கும் படி பணிந்து கேட்டுக் கொள்கிறேன், அளவிடற்கரியவனே.

இறைவன் மகிமையை திடீரென்று உணர்ந்து கொண்ட ஒரு சாதாரண மனிதனுடைய உள்ளத்தில் எவ்வகை உணர்ச்சிகள் தோன்றுமோ, அவற்றைக் கொஞ்சமும் பிசகாத நாடக சக்தியில் இந்த இரு செய்யுட்களும் மிகத் தெளிவாக நம்முன் வைக்கின் றன. கிருஷ்ணன் ஆயர்குலத்தில் பிறந்த ஒரு புத்திசாலிப் பையன் என்றும், தான் இளவரசனானாலும் அப் பையனை பெருந்தன்மை யுடன் தனது ஆதரவில் வைத்துக்கொள்ளுவதில் தவறில்லை என்றும் இவ்வளவு நாள் அர்ஜுனன் சிறிது கர்வத்துடன் நடந்து கொண்டு வந்திருக்கிறான், கிருஷ்ணர் உண்மையில் பரம்பொருளே என்று கண்டு கொண்டவுடன், வெறும் மானிட னாகிய அர்ஜுனன் விசுவாசத்துடன் அவரைக் கொண்டாடி, தயை கூர்ந்து தனது தவறுகளை எல்லாம் மன்னித்து விடும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறான்.

தத்துவ விவாதங்கள் ஒருபுறமிருக்க, அவர்கள் இருவருக் கும் இடையிலுள்ள ஆழ்ந்த, நெருங்கிய நட்புறவு இந்த இரண்டு பாடல்களின் மூலம் நன்கு வெளியாகிறது. வேதங்களிலும், உபநிடதங்களிலும் கூறியுள்ள இனிய உண்மைகளுக்கு, உலக நடைமுறைக்கு ஏற்ற புத்துருவம் அளிப்பதே கீதையின் நோக் கம். ஆழ்ந்த சிந்தனையைக் கிளறும் வேதாந்த உண்மைகளை நம் வீட்டுக் கூடத்தில் பேசிக் கொள்ளும் விவரங்களைப் போல, அவ்வளவு சுலபமாகப் புரியும் வண்ணம், கீதை எடுத்துச் சொல்லுகிறது. உளவியலை ஒட்டியே வியாச பகவான் எழுதிக் கொண்டு வருவதால், இவ்விவாதங்களில் நாம் கூடப் பங் கெடுத்துக் கொள்ளலாம் என்று அவ்வப்போது தோன்றுகிறது. கிருஷ்ணருடைய உண்மையான தெய்வீக இயல்பு தெரியாமல்,

ஒரு நெருங்கிய நண்பனிடம் பழகுவது போல அர்ஜுனன் துடுக்காகப் பல குறும்புப் பெயர்கள் வைத்து அவரை அழைத்திருக்கலாம். ஏனெனில்,

பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யஸ்ச குருர்கரீயான்
நத்வத்ஸமோ ஸ்த்யப்யதிக: குதோன்யோ
லோகத்ரயேப்ரதிமப்ரபாவ: 11:43

சராசரங்களைக் கொண்ட இவ்வுலகத்தின் தந்தை நீ—இவ்வுலகத்தினுல் கொண்டாடப்பட வேண்டியவன். நீ பரம குரு. உனக்கு சமமானவர்கள் எவருமில்லை. எனவே, நிகரில்லா வல்லமை உடையவனே, மூவுலகிலும் உன்னைவிட உயர்ந்தவர் எப்படி இருக்க முடியும்?

அர்ஜுனன் உள்ளத்தில் உணர்ச்சிகள் துள்ளித் ததும்புகின்றன. நெஞ்சு அடைக்கிறது. வார்த்தைகள் வெளிவர மறுக்கின்றன. மூச்சுத் திணற, ''சராசரங்களைக் கொண்ட இவ்வுலகம் முழுவதற்கும் நீ தந்தை'' என்று கூறி பகவானிடம் தனக்குள்ள அபரிமிதமான மரியாதையைக் காட்டுகிருன். விழிப்பு, கனவு, ஆழ்ந்த தூக்க நிலைகளில் நாம் அனுபவிக்கும் மூன்று உலகங்களும், தூல, சூக்கும, காரண சரீர மட்டங்களில் நாம் பெறும் அனுபவங்களுக்கு ஒளியூட்டுவது மெய்ப்பொருளே என்பது இங்குள்ள கருத்து.

பகவான் நிகரில்லா மகிமை உடையவர் என்றும், அவரைவிட உயர்ந்தவர் இம் மூவுலகிலும் இல்லை என்றும் அர்ஜுனன் கூறுகிருன். அப்படி இருப்பதால்—

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாம ஹமீசமீட்யம்
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய ப்ரியாயார்ஹஸி தேவஸோடும் 11:44

ஆகையால் என் உடல் எல்லாம் கீழே பதிய விழுந்து வணங்கி உனது மன்னிப்பைக் கோருகிறேன்; போற்றுதலுக்குரிய பிரபுவே. ஒரு தந்தை தனது மகனை மன்னிப்பது போல, நண்பனை நண்பன் மன்னிப்பது போல, காதலன் காதலியை மன்னிப்பது போல, நீ என்னை மன்னிக்க வேண்டும், ஓ தேவா!

சற்று நன்ருகப் பேசும் அளவுக்கு அர்ஜுனனுக்கு தைரியம் வந்திருக்கிறது. இறைவனுடைய சன்னிதானத்தில் நிற்கும் பாக்கியம் பெற்றவன் என்ற பெரு மகிழ்ச்சியிலே காரண—

காரியத் தொடர்பை விட்டு விடாமல் அழகாகப் பேசுகிறான். மரியாதைக்குரிய பெரியவர்களின் காலைத் தொட்டுக் கும்பிடுதலை 'வணக்கம்' என்று கூறுவது இந்து மரபு. அச் செயல் முதலில் உள்ளத்தில் நிகழ வேண்டும். இவ்வகை சரணாகதியின் மூலம், ஆன்மீக மட்டத்தில், நம்மை நாமே உயர்த்திக் கொள்ளுகிறோம். அதுதான் உண்மையான வணக்கம். பொருள் உறைகளுடன் நம்மை ஒன்று படுத்திக் கொள்ளுவதால் நமது 'அகந்தையும், அகந்தை மையப் போக்குகளும் அதிகரித்து நம்மிடமுள்ள தெய்வீக இயல்பை நாமே உணர்ந்து கொள்ள முடியாதபடி செய்து விடுகின்றன. அவற்றை நாம் எந்த அளவுக்குக் கைவிடு கிறோமோ அந்த அளவுக்கு நமது ஆன்மீக இயல்பு நமக்கு தெரிகிறது. நம் அகந்தையை இறைவன் திருவடிகளில் சேர்த்தல் என்று சொல்லும் போது, நம்முடைய பழைய மிருக 'வாசனை' கள் என்ற அழுக்கு மூட்டையை அவருடைய காலடியில் போடுதல் என்று அர்த்தம். அறிவீனத்திலும், காமத்திலும் ஊறிய அழுகிய 'வாசனை'கள் அகன்ற பிறகு, இறை ஈடுபாடு கொண்ட ஒருவருடைய உள்ளம் தானாகவே வணக்க நிலையை அடைகிறது. அன்புடனும், தஞ்சம் புகும் ஆவலுடனும் இறை வனிடம் வரும் ஒருவன், தனது அழுக்கு மூட்டைகளை அவர் மீது சுமத்துவதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டியது அவசியம்தான். இறைவனுக்கு நாம் செலுத்தும் அஞ்சலி, அது.

தந்தை தனது மகனுடைய தவறுகளை மன்னிப்பது போலவும், நண்பனை நண்பனும், காதலியைக் காதலனும் மன்னிப்பதைப் போலவும் பகவான் தன்னை மன்னிக்க வேண்டும் என்று அர்ஜுனன் வேண்டிக் கொள்ளுகிறான். அறியாமையினால் மாந்தர் இறைவனுக்கு எதிராகச் செய்யும் குற்றங்கள் எந்தெந்த மட்டங்களில் நடக்கின்றன என்று தெரிந்து கொள்ளுவதற்கு இம் மூன்று வகை உதாரணங்களும் உதவியாக இருக்கின்றன. கடவுளின் திருஉளத்திற்குப் புறம்பான எல்லா குற்றச் செயல் களும் ஏறக்குறைய இம் மூன்று வகைகளில் அடங்கிவிடுகின்றன.

இப்போது எடுத்துள்ள பயங்கர உருவத்தைக் கைவிட்டு, தனது வழக்கமான உருவத்தை மேற்கொள்ளும்படி அர்ஜுனன் கிருஷ்ணரைக் கேட்டுக் கொள்ளுகிறான்.

அத்ருஷ்ட பூர்வம் ஹ்ருஷி தோஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம் மனோ மே
ததேவ மே தர்சய தேவரூபம்
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ 11:45

இதுவரை பார்த்திராததைக் கண்டு நான் பெரு மகிழ்ச்சி அடைகிறேன். (ஆயினும்) எனது உள்ளம் அச்சத்தினால் கலங்குகிறது. இறைவனே உனது முந்திய உருவத்திலேயே

எனக்குக் காட்சி அளி. தேவ தேவா. பிரபஞ்சத்தின் உறைவிடமே (என்மீது) கருணை காட்டு.

ஒவ்வொரு பக்தனும் தான் வழிபடும் தெய்வத்திடம் அன்பும், ஈடுபாடும் கொள்ளுகிறான். அதன் உருவத்திலிருந்து நாளடைவில் உருவ மற்றதை அடையும் போது எல்லையற்ற மகிழ்ச்சி தோன்றுகிறது என்பது உண்மைதான். ஆனால் அப்படி உருவமற்ற பரமனை உணரும் போது ஒருவகை பயமும் உண்டாகிறது. ஆன்மிக அறியாமையை கேட்பதற்கு சாதகர்கள் செய்யும் ஆரம்ப முயற்சிகளின் போது இதைப் போன்று அச்சநிலை வருவதை அனுபவத்தில் கண்டிருப்பார்கள். அவர்கள் காணும் புது உலகம் ஆனந்தமயமானது என்பதில் ஐயமில்லை. ஆனால் அவர்களுக்கு ஏற்படும் பயத்தினால் உடலுணர்வு திடீரென்று தோன்றி அத்துடன் மனக் கலக்கங்களும் உண்டாகின்றன.

வரையறைகளுக்கு உட்பட்ட ஒரு அகந்தைக்கு தெய்வீக அனுபவம் ஏற்படத் தொடங்கும் போது, அது வரையறைகளைத் தாண்டி முன் எப்போதும் கண்டிராத புது உலகு ஒன்றை அடைகிறது. அங்கு தனது சொந்த இயக்கப் பரப்பை முதன் முதலாக கண்டிராததைக் கண்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன்என்று அர்ஜுனன் கூறுகிறான் ஆனால் ஆரம்ப காலத்தில் எந்த சாதகரும் தெய்வத்தின் முன்னிலையில் அதிக நேரம் இருக்க முடியாது. தியானக் கடலின் அமைதியில் தாம் மூழ்கி கரைந்து விடுவதைப் போன்ற ஒருவகை பயம் ஏற்படுகிறது. எனவே தனது அன்பு, வழிபாடு உணர்ச்சிகளுடன் ஒன்று பட்டு, இஷ்ட தெய்வத்தை அவர் பிரார்த்திக்கத் தொடங்குகிறார். ''நீ பழையபடியே புன்னகையும் பேச்சு இனிமையும் கொண்டவனாக எனக்குக் காட்சி அளிக்க வேண்டுகிறேன்'' என்று அர்ஜுனன் கூறுவது முற்கூறிய சாதகர் நிலையில் அவன் இருப்பதைக் காட்டுகிறது.

எந்த உருவத்தில் அர்ஜுனன் கிருஷ்ணனைக் காண விரும்புகிறான் என்பதை அடுத்த செய்யுள் விளக்குகிறது.

கிரீடினம் கதினம் சக்ரஹஸ்த
மிச்சாமி த்வாம் த்ரஷ்டுமஹம் ததைவ
தேனைவ ரூபேண சதுர்புஜேன
ஸஹஸ்ரபாஹோ பவ விச்வமூர்த்தே 11:46

உனது முந்திய வடிவத்தில், கிரீடத்துடனும், நான்கு கைகளுடனும், சக்கரத்தையும், கதாயுதத்துடனும், கையில் ஏந்தியவனாக முன்போலவே உன்னை நான் பார்க்க விரும்புகிறேன். ஆயிரம் கைகளுடன் திகழும் விசுவமூர்த்தியே.

'முன் போலவே உன்னைப் பார்க்க விரும்புகிறேன்' என்று அர்ஜுனன் வெளிப்படையாகவே ஒப்புக் கொள்ளுகிறான். உலகத்தின் சாராம்சமாக தாம் இருப்பதை காட்டுவதற்காக பகவான் மேற்கொண்ட விசுவரூபத்தைப் பார்க்கும் போது அர்ஜுனனுக்கு பயமாக இருக்கிறது.

பேருண்மைப் பொருள் பற்றிய வேதாந்தக் கருத்தை ஒருவர் அனுபவிக்கத் தொடங்கும் போது, அதனுடைய கம்பீரமான, அற்புத பிரபஞ்சப் பரப்பை நோக்கும் போது எல்லோரும் நடுங்கி விடுகிறார்கள். உலகங்களை எல்லாம் உள்ளடக்கிய மொத்தத்தை எதிர்நோக்கி இன்று ஆராதிப்பதற்குத் தேவையான அகவலிமை எவருக்கும் இல்லை. அறிவு அதை கவனிக்கமுயன்றாலும், மனம் அதற்கு ஈடு கொடுத்து தனிப் பெரும் பொருளை நீண்ட நேரம் அனுபவிக்க இடம் கொடுப்பதில்லை. மனத்தின் மட்டத்தில், மெய்ப் பொருளை குறியீடுகள் மூலமாகத்தான் உணர்ந்து அனுபவிக்க முடிகிறது. மொத்த அற்புத நிலையில் அதை அனுபவிக்க முடிவதில்லை.

வாசுதேவருடைய சாதாரண இனிய வடிவத்தை அர்ஜுனன் விவரிக்கும் போது, பாகவதத்தின் தலைவனாகிய விஷ்ணுவை மரபு எப்படி சித்தரிக்கிறதோ, அதே உருவம் நம் கண்முன் எழுகிறது. புராணங்களில் கடவுள் பற்றிய விவரங்கள் வரும்போது, அவருக்கு நான்கு கைகள் இருப்பதாகக் கூறப்படுகிறது. உயிரியல் மாணவர்களுக்கு இது ஏதோ அதிசயப் பிறவியைப் பற்றி படிப்பதாகத் தோன்றும். 'ஒருபசு இரண்டு தலையுள்ள கன்று குட்டியை ஈன்றது' என்று பத்திரிகைகளில் வரும் செய்தியைப் போல இருக்கும். பேருண்மை இங்கு குறியீட்டு முறையில் குறிக்கப் பட்டிருக்கிறது என்பதை பெரும்பாலோர் மறந்து விடுகிறார்கள். மனிதனில் உள்ள நான்கு அந்தக்கரணங்களை, கடவுளின் நான்கு கைகளாக புராணங்கள் சித்தரிக்கின்றனவே தவிர வேறொன்றுமில்லை.*

ஆன்ம பொருளாகிய பகவானை நான்கு கைகளுடன் மட்டுமின்றி, நீல வர்ணமுள்ளவராகவும், மஞ்சள் பட்டு அணிந்தவராகவும் கூறுவது வழக்கம். எல்லையற்ற, அளவிட முடியாத பெரும் பரப்புக்கள் நீலமாகவே கண்ணுக்குத் தோன்றுகின்றன. வானமும், சமுத்திரமும் இதற்கு உதாரணம். பூமியின் நிறம் மஞ்சள். வரையறை இல்லாத ஒன்றை வரையறைகளுக்கு உட்படுத்தி, வாழ்க்கை விளையாட்டில் ஈடுபடச் செய்யும் போது, அதை இக்கூறியீடுகளுடனும், விஷ்ணு என்ற பெயருடனும் நமக்குத் தென்படுமாறு புராணங்கள் உருவாக்கம் செய்கின்றன.

---

* மனம், அறிவு, சித்தம் (சிந்தனைப் பொருள்) அகங்காரம்—இந்த நான்கும் மனிதனுடைய உட்கருவிகள் (அந்தக்கரணங்கள்)

எல்லா மதங்களிலும் கடவுளைப் பற்றிய கருத்து ஒரே மாதிரியாக இருக்கிறது. (சர்வக்ஞனுகவும் சர்வ சக்தனுகவும்) எல்லா அறிவும், சர்வ சக்தியும் கொண்டு தலை சிறந்தவராக அவர் கருதப் படுகிறுர். தம் கைகளில் உள்ள வலிமையால் மனிதன் வேலை செய்கிறுன். எனவே எல்லாம் வல்ல இறைவன் நான்கு கைகள் உள்ளவராக காட்டப் படுகிறுர். அவர் கைகளில் இருக்கும் சங்கு, சக்கரம், கதை, தாமரை மலர் ஆகியவையும் அதைப் போன்று குறியீட்டுப் பொருள்களே. அவர் தமது சங்கை முழங்கும்போது, தெய்வீக நினைவுகள் நம் உள்ளத்தில் வந்து குவிகின்றன. உள்ளத்தில் எழும் தெய்வீக இயல்பின் குரலுக்கு மனிதன் செவி சாய்க்கவில்லையேல், ஒரு அடி கொடுத்து அதை நினைவூட்டுவதற்கு கதாயுதம் அடுத்து வருகிறது. அதற்கும் அவன் அசைந்து கொடுக்காமல் தீய வழிகளிலேயே சென்று கொண்டிருந்தால், சக்கரம் அவனை வெட்டித் தள்ளி விடுகிறது. சங்கொலிக்கு இணங்க, தனது தெய்வீக இயல்யை உணர்ந்து அவன் நடந்து கொண்டால், அவன் தாமரைப் பரிசு பெறுகிறுன். மேலை நாட்டு மரபில் வெண்புறுவும், பாப்பி மலரும் எவ்வாறு அமைதிக்கும், சுபீட்சத்திற்கும் குறியீடாக நிற்கின்றனவோ, அவ்வாறே இந்து மரபில் தாமரை அமைதியையும் சுபீட்சத்தையும் குறிப்பிடுகிறது. ஆன்மிக நிறைவுக்கும் தாமரையே குறியீடு.

சுருங்கச் சொல்லுமிடத்து, பகவான் தனது அமைதியான இனிய உருவத்தில் தோற்றம் அளிக்க வேண்டுமென்று அர்ஜுனன் கோருகிறுன். வேதாந்த முயற்சிகளில் புதிதாக ஈடுபடத் தொடங்குபவர்களுக்கும், ஆரம்பகால சாதகர்களுக்கும்லட்சிய முன்னேற்றம் சற்று மெதுவாக இருக்கலாம். அறிவு அவ்வப்போது அயர்வுற்று, மந்த நடை போடும். அப்போது லட்சிய ஆர்வம் கொண்ட இதயத்திற்கு ஓய்விடம் ஒன்று வேண்டும். அங்கு இளைப்பாறி, புதுபலம் பெற்று, மீண்டும் அது முன்னேற்றப் பாதையில் செல்ல வசதியாக இருக்கும். அப்படி இளைப்பாறும் இடந்தான் பகவானுடைய இனிய, அற்புத உருவம்.

அர்ஜுனனுடைய பயத்தைக் கண்டு பகவான் தமது விசுவரூபத்தை மாற்றிக் கொள்ளுகிறுர். இனிய சொற்களில் அவனுக்கு ஆறுதல் சொல்லுகிறுர்.

ஸ்ரீபகவான் உவாச:

மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேதம்
ரூபம் பரம் தர்சிதமாத்ம யோகாத்
தேஜோமயம் விச்வ மனந்த மாத்யம்
யன்மே த்வதன் யேன ந த்ருஷ்ட பூர்வம் 11:47

பகவான் கூறினர்:

அர்ஜுன, எனது யோகசக்தியினுல் இந்த ஒப்பற்ற உருவம் உன்மீது அருள் கூர்ந்து உனக்குக் காட்டப்பட்டது. அற்புதமானதும், மிகப் புராதனமானதும், எல்லேயற்றதுமான இவ்விசுவரூபத்தை உன்னேத் தவிர வேறு யாரும் பார்த்ததில்லே.

‘இவ்வுருவப் பெரும் பரப்பைக் காணும் பேறு எல்லா சாதகர்களுக்கும் கிட்டுவதில்லே என்றும், தமது எல்லேயற்ற அருளினுல்தான் அர்ஜுனனுக்கு இச்சிறப்பான வாய்ப்புக் கிடைத்தது என்றும் பகவானே இங்கு ஒப்புக் கொள்ளுகிறுர். அற்புத புராதன எல்லேயற்ற விசுவரூபத்தை வேறு எவறும் பார்த்ததில்லே என்றும் தெளிவு படுத்துகிறுர்.

கீதையின் ஆசிரியர் வியாசர் ஏதோ புதிய கொள்கை ஒன்றை உருவாக்கி, இறைவன் வாயிலாக அதை உறுதியாக்கப் பார்க்கிறுர் என்று யாரும் நினேத்து விடக்கூடாது. அர்ஜுனனேப் போல் போர்க்களச் சூழ்நிலேயில் இருந்த வேறு யாறும் இவ்வாறு பிரபஞ்ச ஒருமைப் பாட்டை புத்திபூர்வமாக உணர்ந்து அனுபவித்ததில்லே என்றுதான் இதற்குப் பொருள். மனம் உடைந்து, உடல் தளர்ந்து, உணர்ச்சிகள்சிதறி, மிகப் பரிதாபகரமான நிலேயில் இருந்தான் அர்ஜுனன். நம்பிக்கை இழந்த இதைப் போன்ற நிலே ஒரு முகமான லட்சிய நாட்டத்திற்கு உகந்தது அல்ல. ஒரே குறியுடன் இறைநாட்டம் கொள்ளாத ஒரு உள்ளத்திற்கு ஒருமைத் தத்துவம் விளங்க வழியில்லே. தமது மகா சக்தியினுல் அர்ஜுனனுக்கு ஞானக்கண் வழங்கி, விசுவரூபத்தைக் காணும்படி செய்தார் கிருஷ்ணர்.

இச்சுலோகத்தில் உள்ள கருத்தை வெளியிடும்போது, பகவானுடைய உள்ளத்தில் இருந்த எண்ணம் என்ன என்பது பின்வரும் சுலோகத்திலிருந்து தெரிகிறது—

ந வேத யக்ஞாத்யயனேர் ந தானேர்
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை:
ஏவம் ரூப: சக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வதன்யேன குருப்ரவீர

11:48

கௌரவ குல மாவீரனே, வேதங்கள் படிப்பதாலோ, வேள்விகளே நடத்துவதாலோ, சடங்குகளே செய்து வருவதாலோ, கடும் தவத்தை மேற்கொள்ளுவதாலோ இந்த உருவத்தில் உன்னேத் தவிர—உலகமாந்தர் யாரும் என்னேக் காண முடியாது.

மற்றவர்களுக்குக் கிடைக்காத பெரும் பேறு ஒன்றைப்

பெறுவதற்கு—இந்தச் சிறப்புப் பரிசுக்கு—அர்ஜுனன் தகுந்தவனே என்பதை பகவான் குறிப்பாக உணர்த்துகிறார். வேதங்களைப் படிப்பது, வேள்வி நடத்தி, தான தருமங்கள் வழங்குவது, கடுந்தவம் புரிவது முதலிய வழிகளில்கூட, இத்தகைய பரிசை யாரும் பெறமுடியாது. இவ்வழிகள் எல்லாம் சாதகர்களுடைய உள்ளத்தைப் பண்படுத்தவும், உலகப் பன்மைகளுக்கு இடையில் ஒருமையைக் காணும் முயற்சிக்கு உதவியாகவும் இருக்கும் என்பது மெய்தான். ஆனால் பெறுதற்கரிய உச்சநிலைஅனுபவத்தைப் பெறுவதற்கு மனச் சலசலப்புக்கள் முழுமையாக அடங்கி அமைதி நிலவ வேண்டும். ஒருங்கிணைந்து உள்நோக்கும் தெளிவான அறிவொளியில் மட்டுமே அந்த மகத்தான காட்சியைக் காணலாம்.

வேதங்களை ஓதுதல், சடங்குகள் செய்தல் முதலியவற்றை கிருஷ்ணர் குறைத்து மதிப்பிடுவதாக யாரும் நினைத்துவிடக் கூடாது. அவற்றை சாதகர்கள் செய்து வரவேண்டியதுதான். ஆனால் அவற்றையே லட்சியமாகக் கருதுவது தவறுஎன்றே கிருஷ்ணர் இங்கு எச்சரிக்கை செய்கிறார். சமையல் செய்து முடிப்பதால் மட்டும் பசி அடங்கி விடுவதில்லை என்று சொன்னால், அதற்கு சமையலே தேவையில்லை. என்று அர்த்தமா? சமையல் செய்த பிறகு சாப்பிட வேண்டும். அப்போதுதான் பசி அடங்கும். கிருஷ்ணர் கூறுவதை இந்த முறையில் தான் நாம் பொருள் கொள்ள வேண்டும்.

குறிப்பிட்ட முறைகளைப் பின்பற்றி வந்தாலே நாம் ஆன்மானுபவம் பெற்று விடலாம் என்று உறுதியாகச் சொல்லுவதற்கில்லை.

மாதே வ்யதா மாச விமூட பாவோ
த்ருஷ்ட்வா ரூபம் கோர மீத்ருங்மமேதம்
வ்யபேதபீ: ப்ரீதமனா: புனஸ்த்வம்
ததேவ மே ரூபமிதம் ப்ரபச்ய
11:49

பயப்படாதே. இவ்வாறு உள்ள எனது பயங்கர உருவத்தைக் கண்டு திகைத்து நின்றுவிட வேண்டியதில்லை. உனது பயத்தைக் கைவிட்டு, மகிழ்ச்சி நிறைந்த உள்ளத்துடன் இந்த எனது முந்திய உருவத்தை மீண்டும் பார்.

நாடக உத்தியைக் கையாளுவதில் வியாசர் ஒரு மாமேதை. வாய்ப்புக் கிடைத்தால் போதும், நிலவரத்தை ஒரு நாடகச் சூழ்நிலையில் படம்பிடித்துக் காட்டிவிடுவார். அதற்கு இச்சுலோகம் நல்ல சான்று. ''பயப்படாதே. எனது பயங்கரத் தோற்றத்தைக் கண்டு நீ திகைத்து நிற்க வேண்டாம்'' என்று

கூறும் பகவானுடைய சொற்களிலிருந்து, அர்ஜுனனுடைய கலக்கமும், உணர்ச்சித் தத்தளிப்பும் நமக்கு நன்ருகத் தெரிகிறது. சொல்லாலும், செயலாலும் நண்பனுக்கு ஆறுதல் அளித்து, அவனுக்குக் கிருஷ்ணர் மகிழ்ச்சியூட்டுகிருர். தமது முந்திய வடிவை மேற்கொண்டு எனது இந்த முந்திய உருவத்தைப் பார் என்று அன்பு கூர்ந்து அர்ஜுனனை அழைக்கிருர்.

பகவான் இப்போது இனிய மானிடத் தோற்றத்தில் காட்சி அளிக்கிருர் என்று தெரிவிப்பதே இச்செய்யுளின் நோக்கம். இச் செய்யுளைப் படிக்கும் போது வேதாந்த மாணவர்களுக்கு மகா வாக்கியங்களின் நினைவும் வருகிறது. * பயங்கர விசுவரூபமும், மிருதுவான மானிட வடிவமும் ஒன்றேதான் என்பதை இந்த எனது முந்திய வடிவத்தை ** என்ற சொற்கள் எடுத்துக் காட்டு கின்றன. சிறு உருவத்தில், புன்னகை புரிந்தவாறு கிருஷ்ண வடிவில் நிற்கும் அதே பேருண்மைப் பொருள்தான் விசுவரூப மெடுத்து, 'பிரபஞ்சம் எங்கும் பயங்கரமாகப் பரந்து நின்று' எல்லா நாம ரூபங்களுக்கும் சாராம்சமாக விளங்குவது நானே என்று காட்டிக் கொண்டது. சாராம்ச மட்டத்தில் பார்த்தால் அலையும் கடலும் ஒன்றுதான். ஆனுல் கடல் மிகப் பெரிதாகவும், பயங்கரமாகவும் இருக்கிறது. அலை சிறியதாக, கவர்ச்சி மிக்க வடிவத்துடன் காட்சி அளிக்கிறது.

மறுபடி குருக்ஷேத்திரப் போர்முனையிலிருந்து ஹஸ்தினபுரத்திலுள்ள அமைதியான அரண்மனை மண்டபத்துக்குக் காட்சி மாறுகிறது. குருட்டுக் கிழவன், திருதராஷ்டிர மன்னன் அரியணையில் அமர்ந்து, அவனுடைய மந்திரி சஞ்சயன் கூறும் நேர்முக வர்ணனையைக் கேட்டுக் கொண்டிருக்கிருன்—

ஸஞ்சய உவாச:

இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்த தோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்சயாமாஸ பூய:
ஆச்வாஸயாமாஸ ச பீதமேனம்
பூத்வா புன: ஸௌம்ய வபுர் மஹாத்மா 11.50

சஞ்சயன் சொன்னுன்:

இவ்வாறு அர்ஜுனனிடம் கூறி, வாசுதேவன் மறுபடியும் தமது சொந்தவடிவைக் காட்டினுர். அந்த மகாத்மா, தமது மென்மையான உருவத்தை மேற்கொண்டு மிகவும் பயந்து—

* தத் த்வம் அஸி (அது நீதான்), அஹம்பிரம்மா அஸ்மி (நான் பிரம்மன்), அயம் ஆத்மா பிரம்மா (இந்த ஆன்மாவே பிரம்மன்) இவை மூன்றும் மகா வாக்கியங்கள்.

** 'ததேவ மே ரூப மிதம்'

போயிருந்தவனைத் தேற்றினார்.

பயங்கர விசுவரூபம் தனது முந்திய இனிய வடிவேை மேற்கொள்ளப் போவதாக வாக்களித்தபடி, அவ்வாறே செய்தது என்ற செய்தியை சஞ்சயன் உறுதியாக்குகிறான். கிருஷ்ணர் எந்த உருவத்தை எடுத்துக் கொண்டார் என்பது கவிதையில் தெளிவாக இருக்கிறது. ''வசுதேவருடைய வீட்டில் பிறந்த போது கொண்டிருந்த அதே வடிவத்தை மேற்கொண்டார்.''* இனிய வடிவுள்ள கிருஷ்ணராக, நெருங்கிய நண்பனென்ற முறையில் அர்ஜுனனுக்கு அறிமுகமான உருவத்தில், நீல வண்ணன் என்று கோபியர் விரும்பிப் பழகிய அதே வடிவில், மறுபடியும் அவர் தோற்றமளித்தார். ஆச்சரியத்தினால் திகைத்து, பயத்தினால் நடுங்கிக் கொண்டிருந்த அர்ஜுனனை அவர் தேற்றினார்.

கிருஷ்ணன் இப் பிரபஞ்சத்திற்கே அதிபதி. அவர் பாண்டவர் பக்கம் இருக்கிறார். வெற்றி யாருக்கு என்று இன்னுமா சந்தேகம்? இதை திருதராஷ்டிர மன்னருடைய உள்ளத்தில் பதிய வைக்க விரும்புகிறான் சஞ்சயன். சரியான நோக்கில் மன்னன் நிலைமையைப் பார்த்தால் நல்லது. ஆனால் குருடனா பார்க்கப் போகிறான்!

மீண்டும் போர்முனைக் காட்சி. அங்கு அர்ஜுனன் கூறும் சொற்களை திருதராஷ்டிரனுக்கு பின்வருமாறு அறிவிக்கிறான் சஞ்சயன்.

அர்ஜுன உவாச:

த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜனார்தன
இதானீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸ சேதா: ப்ரக்ருதிம் கத:

*11:51*

அர்ஜுனன் கூறினான்:

ஜனார்த்தனா, இதை—உனது மென்மையான மனித வடிவைப் பார்த்த பிறகு, எனக்கு அமைதி தோன்றி இருக்கிறது. எனது இயல்பான நிலையை மீண்டும் அடைந்திருக்கிறேன்.

கிருஷ்ணனுடைய மென்மையான மனித வடிவைக் கண்ட பிறகு, உள்ளக் கலக்கங்களும், பரபரப்புக்களும் நீங்கிய உணர்ச்சி ஏற்படுகிறது என்று அர்ஜுனன் ஒப்புக் கொள்ளுகிறான். ஆன்மிகத் துறையில் பயிற்சி பெறாத மாணவன் அர்ஜுனன். அவனைப் போன்றவர்கள் ஆன்மிக ஏணியில் ஏறிக் கொண்டே சென்று, திடீரென்று உயர்ந்து விளங்கும்

---

* ''வசுதேவக்ரஹே ஜடம் ரூபம்''—சங்கராச்சாரியார் விரிவுரை.

உண்மைகளை நேருக்கு நேர் சந்திக்கும்போது, அவர்களுடைய அறிவு தடுமாறுகிறது. அவ்வளவு ஆனந்த உலகில் கூட சமாளிக்க முடியாத குழப்பம் ஏற்பட்டு துயரம் அனுபவிக்கிறுர்கள். கிருஷ்ணரை அருள் நிறைந்த மனித உருவத்தில் பார்த்த பிறகு அர்ஜுனனுடைய மனம் நிம்மதி அடைகிறது. தனது இயற்கை நிலைக்குத் திரும்ப வந்திருப்பதாக அவனே ஒப்புக் கொள்ளுகிறுன்.

பிரபஞ்ச உருவத்தில் இறைவனை வழிபடுதல் பற்றி அடுத்து வரும் செய்யுட்கள் விவரிக்கின்றன.

ஸ்ரீ பகவான் உவாச

ஸுதுர்தர்சமிதம் ரூபம் த்ருஷ்டவானஸி யன்மம
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சன காங்க்ஷிண:

11:52

கிருஷ்ணர் கூறிஞர்:

நீ பார்த்த எனது இவ்வுருவத்தைக் காண்பது உண்மையில் மிக அரிது. தேவர்கள்கூட இவ்வுருவத்தைக் காண ஆவல் கொண்டிருக்கிறுர்கள்.

நாஹம் வேதைர்ந தபஸா ந தானேன ந சேஜ்யயா
சக்ய ஏவம் விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவானஸி மாம் யதா

11:53

(உனது தற்போதைய மனநிலையில்) நீ பார்த்தவாறு (வேறு யாரும்) வேதங்களை ஓதுதல், தவம் தான தருமங்கள், வேள்விகள் முதலியவை செய்வதன் மூலம் கூட காண முடியாது.

விசுவரூபத்தைக் காணும் அனுபவம் சுலபத்தில் கிடைக்காது. வேதம் ஓதுதல், தவம் புரிதல் முதலிய முறைகளினுல் மட்டும் அதைப் பெற்று விடலாம் என்று கருதுவது தவறு. மனிதர்களை விட விசாலமான அறிவும், நீண்ட வாழ்நாளும், கடு முயற்சி மேற்காள்ளும் திறனும் பெற்ற தேவர்கள் கூட அவ்வுருவத்தைக் கண்டதில்லை. விண்ணவருக்குக்கூட காட்டாத இந்த அற்புதத்தை, அர்ஜுனன் மீதுள்ள கருணை காரணமாகவே அவனுக்குக் காட்டியதாக பகவான் முன்னரே சொல்லியிருக்கிறுர். *

ஒருவருக்கு பகவான் அருள் செய்வதும், மற்ருெருவருக்கு அருள் செய்யாமல் இருப்பதும் நமக்குச் சற்று அதிசயமாக இருக்கலாம். எல்லாம் வல்ல இறைவன் ஒரு ஒழுங்குமுறையின்றி, இஷ்டம்போல் நடந்து கொள்ள மாட்டார். அப்படி நடந்து

* அத். 11, செய்யுள் 47.

கொண்டால் பகவான் பட்சபாதத்துடன் நடந்து கொள்ளுவ தாக எல்லோரும் குற்றம் சாட்டுவார்கள். சிலருக்கு மட்டும் சில சமயங்களில் ஆதரவு காட்டி இறைவன் அருள் மழை பொழிவ தும், எல்லோருக்கும் எல்லாக் காலங்களிலும் அப் பெருமை கிடைக்காமல் போவதும் ஏன்? இது விஞ்ஞான பூர்வமாக, அடுத்த செய்யுளில் விளக்கப்படுகிறது.

பக்த்யா த்வனன்யயா சக்ய: அஹமேவம் விதோர்ஜுன
ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன ப்ரவேஷ்டும் ச பரந்தப
*11:54*

ஆனுல் ஒருமுகமான பக்தியினுல் என்னை அந்த உருவத்தில் அறியலாம், பார்க்கலாம், அவ்வடிவினுள் புகலாம், பரந்தபா (எதிரிகளைச் சுட்டெரிப்பவனே).

'விடுதலை (மோக்ஷம்) பெறுவதற்கு நமக்குக் கிடைத்துள்ள மிக உறுதியான சாதனம் பக்தி. ஆன்மாவுடன் முழுமையாக ஒருவர் ஒன்றுபட்டு நிற்பதை 'பக்தி' என்று சொல்லுகிறுர்கள்.'— பக்தியைப் பற்றி சங்கரர் இவ்வாறு கூறுகிறுர்.

ஆழ்ந்த பக்தியின் இயல்பு (ஆன்ம ரூபத்துடன்) மொத்த மாக ஒருங்கிணைந்து விடுவதுதான். அன்புப் பெருக்கினுல் ஒரு சாதகர் தனித்தன்மையை மறந்துவிட்டு, தமது உள்ளத்திற்கு இசைந்த தெய்வத்துடன் இரண்டறக் கலந்து விடுகிறுர். அப்போது தெய்வீகக் காதல் முழுமை பெறுகிறது. வேதாந்த வழியைப் பின்பற்றுபவர், பொருள் உறைகளுடன் தாம் ஒன்று பட்டிருப்பதை அறவே கைவிட்டு, ஆன்மாவுடன் தம்மை முற்றி லும் ஒன்றுபடுத்திக் கொள்ளுபவர் தமது உண்மையான இயல்பு ஆன்மாவே என்று கண்டு கொள்ளுகிறுர்.

பலபலவாகத் தோன்றும் இவ்வுலகப் பொருட்களை எல்லாம் தனது அன்பு வலையில் ஒன்ருக இணைத்திருப்பதே மெய்ப்பொருள். அப் பேருண்மையுடன் ஒருங்கிணைந்து நிற்கக் கூடியவர்களே விசுவரூபத்தில் இறைவனைக் கண்டு அனுபவிக்க முடியும்.

ஆன்ம உணர்வு பெறுவதற்கு அறிதல், பார்த்தல், புகுதல் என்ற மூன்று படிகள் இருப்பதாக பகவான் கூறுகிறுர். ஒரு சாதகர் தமது ஆன்மிக யாத்திரையைத் தொடங்குவதற்கு முன் தமது லட்சியம் பற்றியும், அதை அடையும் மார்க்கத்தைப் பற்றி யும் கல்வி கேள்விகளின் மூலம் மிகத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். அது முதலாவது படி. பிறகு கல்வியினுலும், கேள்வியினுலும் பெற்ற கருத்துக்களை தாமே சிந்தித்து, ஆழ்ந்து

பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். இவ்வாறு அறிதல், பார்த்தல் என்ற படிகளைக் கடந்த பிறகு அச் சாதகர் பொய்யாவனவற்றிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு மெய்ப்பொருளுடன் ஒருங்கிணைத்துக் கொள்ளும் பெருமுயற்சி தொடங்குகிறது. மெய்ப்பொருள் என்பது தம்மைத் தவிர வேறொன்றும் இல்லை என்ற அனுபவம் அந்த நிலையில் தோன்றுகிறது. பரம்பொருளில் புகுந்து விடுதல் என்று இதைத் தான் பகவான் கூறுகிறார். ஆன்மநாட்டம் கொள்பவர், தாமே நாடிய பொருளின் சாராம்சமாகப் புகுந்திருப்பதைக் கண்டு கொள்ளுகிறார் என்ற பொருளும் 'புகுதல்' என்ற சொல்லில் நிழலாடுகிறது. கனவு காண்பவர், கனவில் வரும் எல்லாத் துயரங்களையும் 'பார்த்து' அவற்றை அனுபவித்து, பலவகை துன்பங்களுக்கு உள்ளாகிறார். ஆனால் கனவு கலைந்து, விழுப்பு நிலைக்குள் அவர் 'புகுந்த'வுடன், தாம் 'விழித்திருப்பவர்' ஆகிறார்.

'எப்படி என்று கேட்கிறாயா? இரு சொல்லுகிறேன்' என்று பகவான் அதை விளக்குகிறார்.

மத்கர்மக்ருன் மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித:
நிர்வைர: ஸர்வபூதேஷுய: ஸ மாமேதி பாண்டவ 11:55

யாரொருவன் எனக்காகப் பணிபுரிகிறானோ, என்னைப் பரம் பொருளாக மதிக்கிறானோ, என்னிடம் பக்தி கொண்டிருக்கிறானோ, எவரிடமும் பகைமை பாராட்டாது இருக்கிறானோ, அவன் என்னை அடைகிறான், பார்த்தா.

முழுமையான ஒருமுக வழிபாட்டின் மூலம் யார் வேண்டு மானாலும் பகவானுடைய விசுவ வ்யாபி சக்தியைக் காணலாம் என்றும், அந்த மாட்சியை தனக்குள் அவன் அனுபவிக்கலாம் என்றும் பகவான் கூறியதைக் கேட்டவுடன், அந்த நிலையை எப்படிப் பெறுவது என்ற கவலைக்குறி அர்ஜுனன் முகத்தில் தோன்றியிருக்க வேண்டும். அந்த நிறைவு நிலை எய்தும் வழியை கிருஷ்ணர் இப்போது எடுத்துரைக்கிறார்.

வரையறைகளுக்கு உட்பட்ட மனிதன் பிரபஞ்ச அந்தஸ் தும், வலிமையும் பெற, கிருஷ்ணன் ஐந்து அம்சத்திட்டம் ஒன்று உருவாக்கியிருப்பதாகத் தோன்றுகிறது. அவர் சாதகருக்குப் போட்ட நிபந்தனைகளிலிருந்து இது தெரிகிறது. 1. சாதகரு டைய வேலைகள் எல்லாம் பகவானுடைய திருப்பணியாகவே அமைய வேண்டும். 2. அவனுடைய லட்சியம் பரம்பொருளை அடைவதாக இருக்க வேண்டும். 3. இறைவனிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருக்க வேண்டும். 4. எல்லாப் பற்றுதல்களையும் துறந்த வனாக இருக்க வேண்டும். 5. எவரிடமும் பகைமை உணர்ச்சி

கொள்ளாதவனுக இருக்கவேண்டும்—இவையே திட்டத்தின் ஐந்து அம்சங்கள்.

ஆன்மீகப் பயிற்சிக்குத் தேவையான சுயகட்டுப்பாடு முழுவதும் இந்த (ஐந்து) அம்சங்களில் அடங்கி விடுகிறது. உடல், மன, அறிவு மட்டங்களில் நடக்கும் எல்லா வேலைகளையும் பற்றற்றுச் செய்ய வேண்டும் என்றால், இடையருத ஆன்ம சிந்தனையில் அவன் வாழ்பவனுக இருக்க வேண்டும். ஒருவரிடம் நமக்குப் பகைமை உணர்ச்சி எப்போது ஏற்படுகிறது? நாம் வேறு, அவர் வேறு என்ற வேற்றுமை மேலோங்கும் போது பகைமைக்கு இடமிருக்கிறது. எனது வலது கைக்கும் என் இடது கைக்கும் பகைமை இருக்க முடியாது. ஒரே ஆன்மா எல்லா இடங்களிலும் வியாபித்திருக்கிறது என்று நோக்கில் ஒருமையைக் காண வேண்டும். அப்படிக் கண்டவர்களுக்கு, மற்ற எந்த உயிரினத்துடனும் பகைமை தோன்ருது.

மன அறிவு, மட்டங்களில் முழுமையான பற்றற்ற நிலையை எய்த இயலாது. மனமும் அறிவும் ஏதோ ஒரு பொருளைப் பற்றிக் கொண்டுதான் இருக்க முடியும். எனவே ஒரு சாதகர், முதலில் ஈசுவரார்ப்பணமான வேலைகளின் மூலம், மற்ற பொருள்களில் தமக்குள்ள பற்றுதலை கைவிடக் கற்றுக் கொள்ளுகிருர். பிறகு ஆர்வத்துடன் தமது உள்ளத்தை இறைவனிடம் செலுத்தி, அவருடன் ஒன்றுபடுகிருர். இவ்வாறு, லட்சிய சித்தி பெறுவதற்கு முன்கூறிய ஐந்து'அம்சத் திட்டம் மிக உதவியாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

உளவியல் பூர்வமாகவும், தர்க்க ரீதியாகவும் பார்த்தால் இத் திட்டத்திலுள்ள ஒவ்வொரு அம்சமும் அடுத்த அம்சத்திற்கு ஆதரவளித்து நிற்பது தெரியவரும். ஒரு சாதகரின் ஆன்மிக யாத்திரை தெய்வ ஈடுபாடு கொண்ட திருப்பணிகள் செய்வதுடன் தொடங்குகிறது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக இறைத்தத்துவமே வாழ்க்கையின் லட்சியமாகிறது; இந்த மாபெரும் லட்சியத்தில் மனம் தானுக ஈடுபடுவதால் பொருள் உலகப் பற்றுதல்கள் அகலத் தொடங்குகின்றன. இம் முயற்சிகளின் விளைவாக அவனுக்கு ஆன்ம அனுபவம் கிட்டுகிறது. தானே ஆன்மாவான பிறகு உலகம் முழுவதிலும், ஒவ்வொன்றிலும் அவன் தன்னையே காண்கிருன். பகைமை உணர்ச்சிக்கு இடமே இல்லை.

''எல்லோரிடமும் அன்பு, யாரிடமும் பகைமை இல்லை'' என்ற உரைகல்லை கீதை நமக்கு அளிக்கிறது. அதில் உரைத்துப் பார்த்தால், ஒருவருடைய ஆன்மானுபவத்தின் தன்மையையும், ஆழத்தையும் நாம் தெரிந்து கொள்ளலாம். சாதகர் எந்த அளவுக்கு தமது சாதனையில் வெற்றி பெற்றிருக்கிருர் என்பதை அந்த உரைகல் நமக்குக் காட்டிவிடும்.

## சங்கல்ப வாக்கியம்:

### விசுவரூப தரிசன யோகம்

இந்த அத்தியாயத்திற்கு விசுவரூப தரிசனம் என்று தலைப்புக் கொடுத்திருப்பது மிகப் பொருத்தமாக இருக்கிறது. விசுவரூபம் என்ற சொற்கள் 'விராடரூபம்' என்ற பொருளில் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன. ஆன்மா ஒரு தனி நபருடைய உடலுடன் இணைத்துக் கொண்டு, விழிப்பு நிலை நிகழ்ச்சிகளை எல்லாம் அனுபவிக்கிறது. வேதாந்தத்தில், இந்த நிலையிலுள்ள ஆன்மாவை 'விசுவ' என்று சொல்லுகிறார்கள். அதே ஆன்மா உலகிலுள்ளவற்றின் மொத்த உடல்களுடன் ஒன்றுபடுத்திக் கொள்ளும்போது அதை 'விராட்' என்று சொல்லுகிறார்கள். இங்கு பகவான் தமது விராட ரூபத்தைக் காட்டினார். ஆனால் இந்த அத்தியாயத்தின் தலைப்பில் அது 'விசுவரூபம்' என்று கூறப் பட்டிருக்கிறது. எந்தப் பொருளில் அவ்வாறு குறிப்பிடப்பட்டிருக் கிறது என்பதை மேலே பார்த்தோம்.

# பக்தி யோகம்

## 12

### முன்னுரை

அர்ஜுனனின் முக்கியமான இயல்பை நன்கறிந்த கிருஷ்ணன் சென்ற அத்தியாயத்தின் இறுதியில் (XI 54) அவனது உயர்ந்த பேராவலைத் தூண்டிவிட்டார். எந்த உண்மையானஅரசனும் பெரும் புகழையடையவே விரும்புவான். வளமும், பிரகாசமும் மிக்க பரந்த களம் எங்கிருப்பினும் அதற்காகப் போராடி, வென்று அதைத்தன் வசப்படுத்திக் கொள்ளவே துடிப்பான். அரச குடும்ப நண்பனும், மகா வீரனுமான அர்ஜனனும் இவ்வகையினனே என்றுணர்ந்த பகவான், அவனுக்கு தன் விசுவரூப தரிசனத்தையளித்துவிட்டு ''மாறுத பக்தியாலேயே'' என்னை ஒருவன் உள்ளபடியே அறிந்து, கண்டு, அடையக்கூடும்'' என்றும் கூறுகிறுர். இதைக் கேட்ட பாண்டவ மன்னன் அவ்விதமே அந்த ஆன்மீகப் பெருமையைத் தானடைய வேண்டும் என்று நன்னம்பிக்கையோடு தீர்மானித்துக் கொள்கிறுன்.

இந்த வலிய உந்தலை அர்ஜுனனின் மனம் அறிகிறது; இந்த பாரமார்த்திக லக்ஷியத்தையடைவதற்காக எதையும் தியாகம்

செய்விக்கவல்ல தெய்வீக உள்ளூக்கமும் அவனுக்குக் கிடைத்துள்ளது. முன்னிரண்டு அத்தியாயங்களில் பார்த்தசாரதியை தெய்வமாக ஏற்கத் தயங்கியது அர்ஜுனனின் அறிவு. ''நான் அவற்றுள் இல்லை, அவையே என்னுள் இருக்கின்றன'' என்று பகவான் முன்னர் (அத் IX, ஸ்லோகம் 4ல்) கூறியபோது, அர்ஜுனன் அந்த தத்துவத்தை விளக்கும்படி கேட்டான். பகவானது விளக்கத்தாலும் அவனது சந்தேகம் தீராததால், அதை நேரில் காட்டும்படிக் கேட்டான்—பகவான் அவனுக்கு விசுவரூப தரிசனத்தைக் காட்டினார். உரையாடலாகவும், சான்று விளக்கமாகவும் ஆக இருவிதத்தாலும் தன் சந்தேகங்கள் நீங்கி விட்டபின் ஆத்ம உணர்வை நாடி அர்ஜுனனின் புத்தி பூரண சரணாகதி அடைந்துவிடுகிறது.

ஒருவன் தான் எப்படி நினைக்கிறானோ அப்படியேயாகிறான். தான் நம்பியதை வாழ்ந்து பார்க்கத்தான் எல்லோரும் விரும்புவார்கள். காலத்தால் ஏற்பட்ட பழக்கங்களை கண்மூடித்தனமாகக் கடைபிடிப்பவனைக் காட்டிலும், சான்று மூலம் மனதில் நம்பிக்கை கொண்டவனே உயர்ந்த சாதகனாவான்.

ஸ்தூல நிலையில் திருப்தி ஏற்பட்டாலொழிய ஸூக்ஷ்ம நிலை ஓங்காது. பசியோடிருப்பவனால் சிந்திக்க இயலாது. வயிறு நிறைந்த பின்னரே பக்தியையும் அன்பையும் காணமுடியும். உடலும் உள்ளமும் நிறைந்தால் தான் அறிவின் ஊக்கத்தைக் காணமுடியும்.

அது போலவே, ஸ்தூலமான புறத்தேவைகள் யாவும் பூர்த்தியானால்தான், ஒரு சாதகனிடத்தே உள்ளுணர்வு சார்ந்த அனுபவமாகிய ஆன்மீக உந்தல் தோன்றும். அதைத்தான் ''பக்தி யோகத்தில்'' அழகாகக் காட்டுகிறார் பகவான். ஈசுவர லீலையின் தோற்றமே கோபாலன் என்பதை அர்ஜுனனின் அறிவு ஏற்றுக் கொண்டது, உள்ளம் நிறைந்தது, ஐயுறவு மனப்பான்மையும் நீங்கியது. ஆகையால் ஆத்மனின் ராஜ்யத்தைத் தேடிக் கண்டு பிடித்து, வென்று, பெற்று, அதை ஆளவேண்டும் என்ற உந்தலை உணர்கிறான் அர்ஜுனன்.

நடந்து முடிந்தது, நடப்பது, நடக்கப் போவது யாவும் கால தேவனாகிய கிருஷ்ணனுள் அடங்குவதையும் ''அங்கு'' ''இங்கு'' என்பவை யாவும் ''இங்கேயே'' அடக்கமாவதையும் விசுவரூப தரிசனத்தில் கண்டுகொண்டான் அர்ஜுனன். ஆகையால் இனி தான் மேற்கொள்ள வேண்டியது விராட் தியானமா அல்லது கிருஷ்ணனின் ரூபத்யானமா என்ற கேள்வி எழுகிறது அவனுக்குள்.

பகவானின் விசுவரூப தரிசனத்தைக் கேட்டும் (அத். X), நேரில் கண்டும் (அத். (XI) ஐயம் நீங்கிய அரசகுமாரன் அர்ஜுனன் தன்னுள்ளேயே இருக்கும் அந்த ஈசுவர சாம்ராஜ்யத்தை அடையத் துடிக்கிருன். சென்ற அத்தியாயத்தின் இறுதியில் அந்த சாம்ராஜ்யத்தை வெல்வதற்கான போர்க் கலையையும் கோடி காட்டி விட்டார் பகவான்; பக்தி, சித்த ஏகாக்ரம், வைராக்யம்— ''இவற்றின் மூலம், பாண்டவா, நீ என்னை அடைவாய்''— என்று வழி வகுத்துள்ளது கீதை.

வெறும் பயனற்ற ஏட்டுக் கல்வியாலோ அல்லது வாதத்திலுலோ திருப்தியடையும் மந்த புத்திக்காரனல்ல அர்ஜுனன், அவன் ஒரு செய்வீரன். 'பார்த்தசாரதி' தனக்குக் காட்டியதை அடையத் துடிக்கும் அர்ஜுனனின் ஒரு கேள்வியோடு தொடங்குகிறது இந்த அத்தியாயம்.

குழந்தை பருவத்திலிருந்தே வேதங்களைக் கற்றவன் அர்ஜுனன்—பிரும்மம் நாம ரூபமற்றது, ஞானேந்த்ரியங்களுக்கப் பாற்பட்டது, மனதிற்கும், புத்திக்கும் அப்பாற்பட்டது என்றே அவன் கற்றிருக்கிருன். இப்பொழுது விசுவரூப தரிசனத்தைத் தானே கண்கூடாகக் கண்டபின், தான் நாம ரூபத்தைக் கொண்டு தியானிப்பதா அல்லது விராட் தியானத்தை மேற்கொள்வதா என்ற சந்தேகம் எழுவது இயல்பே.

இது மத சம்பந்தமானதொரு சர்ச்சைக்குரிய கேள்வியை எழுப்புகிறது. உருவ வழிபாட்டை அவ்வப்போது பல மதாச் சாரியார்கள் ஒட்டியும், வெட்டியும் கூறி வந்துள்ளனர். அலைகளை அறிவதன் மூலம்சமுத்திரத்தைப் பற்றிய அறிவை பூரணமாகப் பெற முடியுமா, முடியாதா? விக்ரக ஆராதனை சரியா, தவறு? இந்த தியானத்தின் மூலம் மனம் ப்ரம்மத்தையடையுமா? அப்படியானுல் அதற்கென்ன வழி? இந்த அத்தியாயம் முழுவதும் இதற்கு பதிலளிக்கிறது.

புத்தி கூர்மை வாய்ந்த ஒரு ஐயுறவாளனும் செயல்வீரனுமான அர்ஜுனனிடம் பேசுகிறோம் என்பதை நன்குணர்ந்தவர் கிருஷ்ண பகவான். ஆதலால் அரிய விளக்கங்களையும் விஞ்ஞான ரீதியான பூர்ணத்வத்தையும் கொண்டது என்ற வகையில் கீதையானது இன்றைய விஞ்ஞான (அறிவியல்) நூல்களோடு ஒப்பிடத் தக்கதாகும்.

அர்ஜுன உவாச

ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே
யே சாப்ய க்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா:

12:1

அர்ஜுனன் கூறியது:

இவ்வாறு எப்பொழுதும் யோகத்தில் நிலைத்து உம்மை உபாசிக்கும் பக்தர்கள், மற்றும் நிர்குணப்ரம்மத்தை உபாசிப்பவர்கள் ஆகிய இவர்களுள் யோகத்தை நன் கறிந்தவர்கள் யார்?

பகவத் கீதையிலுள்ள தத்துவங்கள் சம்பாஷணை வடிவிலிருந்தாலும், அதிலுள்ள கருத்தமைப்பானது ஒவ்வொரு அத்தியாயத்திலும் சரி, அடுத்தடுத்து வரும் அத்தியாயங்களிலும் சரி தொடர்ச்சி முறையாகவே வருகிறது. சென்ற அத்தியாயத்தின் இறுதியில் ஏகாக்ர பக்தியுடைய எந்த சாதகனும் ''என்னை'' அடைய முடியும் என்றார் பகவான். அரச குடும்பத்தைச் சேர்ந்த அர்ஜுனனுக்கு 'அதை' அடைய ஆசை ஏற்படுகிறது. விராட் தியானம், ரூபத்தியானம் இவற்றுள் எது ஏற்றது என்று கேட்கிறான் யதார்த்தவாதியான அர்ஜுனன்.

சாதகர்களுள் இரு வகையினருண்டு. ஒரு வகையினர் உருவ வழிபாட்டைக் கடைபிடிப்போர். மற்றொரு வகையினர் அரூபமான (நிராகார நிர்குண) ப்ரம்மத்தையே நிதித்தியாஸனம் செய்வர். இருவருக்கும் லட்சியம் ஒன்றே, இருவருமே உண்மையான சாதகர்கள். இருவருள் யார் யோகத்தை நன்கறிந்தவர்கள்? புத்திசாலித்தனமான கேள்வி.

புலன்களுக்குப் புலப்படாததை (இந்த்ரிய அகோ சரம்) வேதாந்தத்தில் அவ்யக்தம் (தோற்றம் இல்லாதது) என்பர். புலன்களுக்குப் புலப்படுவதை வியக்தம் (தோன்றுவது) என்பர். ப்ரம்மம் அவ்யக்தமானது, எங்கும் நிறைந்தது என்று இளம் பிராயத்தில் வேதத்தில் கற்றிருக்கிறான் அர்ஜுனன். அதோடு, சென்ற அத்தியாயத்தில், விசுவரூப தரிசனத்தையும் தானே கண்டான். அதனால்தான் ஆன்மீகப் பரிணாம வளர்ச்சிக்கு, விராட் தியானம் செய்பவன் உயர்ந்தவனா அல்லது ரூபத்தியானம் செய்பவன் உயர்ந்தவனா என்று கேட்கிறான்.

ஒரு உருவம் ''அவனுக்கு'' அடையாளமாகுமா? விக்ரக வழிபாடு சரியா? ஒரு அலையே சமுத்திரத்திற்கு அடையாளமாகுமா? இத்தகைய சர்ச்சை இன்றைய உலகிலும் நிலவுகிறது.

''அவனுக்குப் பிரதிநிதி போன்ற ஒரு ரூபத்தை வைத்து தியானம் செய்யும் முறையை விளக்கத் தொடங்குகிறார் பகவான்:

ஸ்ரீ பகவானுவாச—

மய்யாவேச்ய மனே யே மாம் நித்ய யுக்தா உபாஸதே
ச்ரத்தயா பரயோபேதாஸ்தே மே யுக்ததமா மதா:

12:2

ஸ்ரீ பகவான் கூறியது:

என்பால் மனத்தை வைத்து, யோகத்தில் நிலைத்தோராய், மேலான சிரத்தையுடையோராய் யார் என்னை உபாசிக்கிறார்களோ அவர்கள் யோகத்தில் உயர்ந்தவர்கள் என்பது என் கருத்து.

ஈசுவர பக்தியால் பயனடைவதற்கு கிருஷ்ணன் கூறும் இன்றியமையாத விதிகள் மூன்று. பக்தி மார்க்கம் எளிதானது. என்பது பரவலான கருத்து. அவ்வாறே ஒவ்வொரு சாதகனுக்கும் தான் மேற்கொண்டுள்ள மார்க்கமே எளியதாகும்—சாதனத்தைப் பொறுத்துத்தான் மார்க்கத்தில் வேறுபாடு உண்டாகிறது. உதாரணமாக தோணி தரையில் போகாது, ஏரோப்ளேன் நீரில் போகாது, சைக்கிளில் அறுபது மைல் வேகத்தில் போக முடியாது! ஒவ்வொரு வாகனத்திற்கும் வரையறைகள் உண்டு. ஆனால் எந்த ஸாதனத்தைக் கொண்டாலும் ஒரு புத்திசாலி முன்னேற முடியும். அதைப் போலத்தான் ஒரு ஆன்மீக சாதகனும் தனக்குக் கிடைத்த ஸாதனத்திற்கு ஏற்ப தன் மார்க்கத்தையும் தேர்ந்தெடுக்கிறான்— பக்தி மார்க்கமா, கர்ம மார்க்கமா அல்லது ஞான மார்க்கமா என்று. அவனுக்கு அப்பாதை எளிதாகிறது.

என்பால் மனதை வைத்து: சூக்ஷ்ம சரீரத்தில் இருப்பது எண்ணங்கள். மனமும் புத்தியும் எண்ணங்களன்றி வேறல்ல. இந்த எண்ணங்கள் சாவதானமாக ஏதோ சில சமயம் பகவானைச் சுற்றி வட்டமிட்டால் பயனில்லை. அவை பகவானுள்ளேயே ஆழ்ந்து, ஒன்றி அவனுள்ளேயே கரைந்துவிட வேண்டும். அதனால்தான் ''ஆவேச்ய'' என்ற சொல் கையாளப்பட்டுள்ளது. இது வெறும் எண்ணத் தொடர்பல்ல. எண்ண ஊடுருவல் உள்ளபடியே மனித எண்ணங்கள் தாம் சிந்திக்கும் விஷயத்தின் உருவத்தையும், இயல்புகளையும் பெறுகின்றன. உண்மையான பக்தி பொங்கி எழும்போது அந்த பக்தன் தன் இதயத்தில் உறைந்துள்ள ஈசுவரனின் எழிலையும் ஒளியையும் தானே பெறுகிறான்.

யோகத்தில் நிலைத்து, என்னை உபாசித்து:

ஈஸ்வரனை உபாசிக்கும் போது பக்தன் மன அடக்கத்தைக் காக்கத்தக்க சமநிலையுடையவனாக இருக்க வேண்டும் என்பது

இரண்டாவது விதி. (அலை பாய்வதே மனிதன் இயல்பு; அதை சம நிலைப்படுத்தி ஒருமுனைப்படுத்துவதுதான் மன அடக்கம்.) உண்மையில் 'உபாசனை' என்ற சம்ஸ்கிருத சொல்லுக்கு புற வழி பாடு என்பது பொருளல்ல, ப்ரும்மத்தோடு ஒன்றுவதற்கான அக முயற்சியேயாகும்.

மேலான சிரத்தை: (சிரத்தை என்பது ''குருட்டு நம் பிக்கை''யல்ல. நான் அறியாத ஒன்றை நம்பினால்தான், நான் நம்பியது எது என்று அறிய முடியும்.'') பக்தனுக்கு இந்தத் திறன் வளரவில்லையென்றால் பல வருஷங்கள் ஸாதகம் செய்தாலும் அவன் தன்னுள்ளிருக்கும் நாயகனை அடைய முடியாது.

ஆக, (1) மேலான சிரத்தை, (2) நிலையான உபாஸனை, (3) பகவானிடம் பூரணமாக சித்தத்தை வைத்தல் இம்மூன்றும் உண்மையான ஒரு பக்தனுக்கு இன்றியமையாதவையாகும். இத் தகையவனையே பகவான் உறுதியுள்ள பக்தனைக் கருதுகிறார்.

''மற்ற யோகிகளைப் பற்றியும் கூறுகிறேன் கேள்.''

யே த்வக்ஷரமநிர்தேச்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே
ஸர்வத்ரகமசிந்த்யஞ் ச கூடஸ்த மசலந்த்ருவம் 12:3

ஸந்நியம்யேந்த்ரிய க்ராமம் ஸர்வத்ர ஸம புத்தய:
தே ராப்னுவந்தி மாமேவ ஸர்வபூத ஹிதே ரதா: 12:4

3, 4 ஆனால் யார் எங்கும் சம புத்தியுடையோராய், இந்திரியக் கூட்டத்தை நன்கு அடக்கி, எல்லா உயிர்களின் நன்மையிலேயே ஈடுபட்டு, அழிவற்ற, விளக்க முடியாத, அவ்யக்தமான எங்கும் நிறைந்த நித்தியமான அசைவில்லாத (ப்ரும்மத்தை) உபாஸிக்கிறார்களோ அவர் களும் என்னையே வந்தடைகிறார்கள்.

சென்ற ஸ்லோகத்தில் ஸகுண ப்ரம்ம தியானத்தின் (ரூபத்தி யானம்) மூலம் நிலைத்த யோகியாவதற்கான மூன்று விதிகளைக் கூறினார்; இனி இவ்விரு சுலோகங்களிலும் நிர்குண ப்ரும்ம தியானத்தை மேற்கொண்டோரை விளக்குகிறார்.

அழிவற்றது (அக்ஷரம்): ரூபமும் குணமும் உடைய பொருள்கள் அழிவுடையவை. ஆகையால் அழிவற்றது நிர்குண மானதே என்றாகிறது— அழிவற்றது புலன்களுக்கப்பாற்பட்டது என்பதும் பெறப்படுகிறது.

விளக்க முடியாதது (அநிர்தேச்யம்): புலன்களுக்குட்பட்டதையே விளக்க முடியும், புலன்களுக்கப் பாற்பட்டதை விளக்கவே முடியாது.

எங்கும் நிறைந்த (ஸர்வத்ரகம்): ப்ரும்மம் குணங்குறி யற்றது. அவ்யக்தமானது, விளக்க முடியாதது என்ருல் அது எங்கும் நிறைந்ததாகத்தான் இருக்க முடியும். 'அது' எங்கும் நிறைந்ததில்லை என்ருல் அதற்கு ஒரு குறிப்பிட்ட வடிவம் இருக்க வேண்டும். வடிவமுடைய ஒன்று அழியக்கூடியதாகி விடும்.

சிந்தைக்கெட்டாதது (அசிந்த்யம்): மானிடமனதால் எண்ணிப்பார்க்கக் கூடிய ஒன்று உணர்ச்சி மற்றும் சிந்தனைப் பொருளாகிவிடுகிறது. பொருள்கள் (விஷயங்கள்) அழிவுடையவை. ஆகையால், 'அழிவற்றது கருத்துக்கும், சிந்தனைக்கும் அறிவிற்கும் அப்பாற்பட்டதாகத் தான் இருக்கமுடியும்.

மாருத (கூடஸ்த): ஓயாமல் மாறக் கூடிய அனைத்திற்கும் ஆத்மனே அடிப்படையாயிருப்பினும், தான் மாருமலேயே இருக்கிறது. ''கூட'' என்ருல் பட்டடைக் கல். கருமான் பட்டறையிலிருப்பது; அதன் மீது வைத்து அடிக்கப்படும் இரும்புத் துண்டுகளை உருமாற்ற அது இடங்கொடுத்தாலும், தான் மட்டும் உரு மாறுவதில்லை—அவ்வாறே நாம் நல்ல வழியிலோ தீய வழியிலோ மாறுவதற்கு இடந்தரும் சைதன்யம் மாருமல் இருக்கிறது.

நகராதது (அசலம்): கால—தேச முறையில் ஏற்படும் மாற்றமே நகர்தல். ஒரு பொருள் தனக்குள்ளேயே நகர்ந்து கொள்ள முடியாது; காலம்—தேசம் இவற்றில் ஏற்கனவே தான் இல்லாத ஒரு நிலைக்குத்தான் அது நகர முடியும். இப்பொழுது, இந்த இடத்தில் நான் நாற்காலியில் அமர்ந்திருக்கிறேன், அடுத்த நிமிஷம்தான் நான் வேருெரு இடத்திற்கு நகர முடியும். இங்கேயே இப்பொழுதே என்னுடைய நாற்காலியிலேயே எனக்குள்ளேயே நகர முடியாது—ஏனெனில் என்னுள் நானே நிறைந்திருக்கிறேன். ப்ரும்மம் எங்கும் நிறைந்தது, ''அது'' இல்லாத இடமோ, நேரமோ கிடையாது. ஆகையால் ''அது'' நகர முடியாது. ''அது'' இங்கும், அங்கும், எங்கும் உள்ளது; ''அது'' இறந்த, நிகழ், எதிர்காலம் மூன்றையுமே தன்னுள் கொண்டது.

நித்யமானது (த்ருவம்): கால தேச உபாதிக்குட்பட்ட ஒன்றுதான் மாறக் கூடியது. கால—தேசங்களுக்கே ஆதாரமாயிருந்து அவற்றை இயங்க வைக்கும் ப்ரும்மன் அவற்றின் உபாதிக்குட்பட்டிருக்க முடியாது. நம்முள்ளிருக்கும் ஆத்மனுகிய சைதன்யம் எந்த தேச காலத்திலும், பால்யம், இளமை, முதுமைகளிலும், சுக—துக்கம், வெற்றி—தோல்வியிலும் ஒரே மாதிரியாகத்தான் உள்ளது. அதனின்றும் புத்தி, மன, சரீர நிலைக்கு இறங்கி வந்தால்தான் கால—தேச வேறுபாடுகளைக் கொண்ட ஐன்ஸ்டைன் உலகில் பிரவேசிக்கலாம். கால

உபாதிக்கப்பாற்பட்டது ப்ரும்மம். காலத்தையே ஆள்வது ''அது'' நித்தியமானது ''அது.''

நாம ரூபங்களையும், இயல்புகளையும் நிகழ்ச்சிகளையும், நுகர்வுகளையும், உணர்ச்சிகளையும் எண்ணங்களையும், அனுபவங்களையும் கொண்ட, மாறிக் கொண்டேயிருக்கும் இப்பிரபஞ்சத்திற்கு ஆதாரமான ப்ரும்மத்தைக் குறிக்கும் மேற்படி சொற்கள் யாவும் உபநிஷத்துகளிலிருந்து பெறப்பட்டவையாகும். ஸகுண ப்ரம்ம தியானத்திற்கு மூன்று விதிகள் பூர்த்தியாக வேண்டும்.

இந்த்ரியக் கூட்டங்களை அடக்கி: புலன் விஷயங்களின் மூலம் தன் வீரியங்களை விரயமாக்குவது அழிவுடைய மூடர்களின் ஆபாசமான பொழுதுபோக்கு. மரணமற்ற நிலையை ஆளவிரும்பும் சாதகன் புலனடக்கத்தை மேற்கொள்வது மிகவும் அவசியம்; அவ்வாறு வீரிய விரயத்தை தடுத்து, அந்த சக்தியைக் கொண்டு ப்ரமத்தை நோக்கிப் பறக்க வேண்டும். பன்மையான இவ்வுலகம் திருட்டுத்தனமாக நம்மை நாசத்தில் ஆழ்த்துவதற்கு நம்முள் நுழைய இந்த இந்த்ரியங்களே வாசலாகும். அதோடு புறத்தே பாய்ந்தோடி செய்படுவதற்குக் கர்மேந்த்ரியங்கள் தயாராயுள்ளன. இந்த இரண்டு தொழில்களும் சேர்ந்துதான் நமது சமநிலையைக் குலைக்கின்றன. தியான யோகத்தில் வெற்றி பெற விரும்புபவனுக்கு இந்த்ரிய நிக்ரஹம் அவசியம் என்று கிருஷ்ணன் கூறுவது முற்றிலும் சரியே.

சமபுத்தியுடையோனாய்:

எந்த நிலையிலும், சகல அனுபவங்களிலும் சமபுத்தியுடையோனாயிருத்தலே பகவான் கூறும் இரண்டாவது விதி. தியானத்திற்கு இடைஞ்சலில்லாததொரு சூழ்நிலை இப்புறவுலகில் ஏற்படும் என்று எதிர்பார்ப்பது மடமை. அத்தகைய சூழ்நிலை ஏற்படாது. உலகிலுள்ள விஷயங்கள் மாறிக் கொண்டேயிருக்கின்றன பல வண்ணக் காட்சிக் கருவியைப் போல. ஆகையால் இத்தகைய மாற்றம் நிறைந்த உலகில் தொடர்பு கொள்ளும் போது தனது சரீர, மன, புத்தியை தக்கவாறு கட்டுப்படுத்தி சமபுத்தியைப் பெறுவது சாதகனின் கடமை. கவர்ச்சி மிக்கதையும் அறுவருக்கத் தக்கதையும் ஒருங்கே கொண்டுள்ள இப்புறவுலகில் அடிப்படையாயுள்ள ஈஸ்வரனையே காணும் விவேக புத்தியே ஒரு சாதகனுக்கு அவசியம்—இந்தத் திறனையே சமபுத்தி என்று இங்கு கூறுகிறார்.

என் குழந்தை ஒரு சமயம் அழும், ஒரு சமயம் சிரிக்கும். மறு சமயம் விஷமம் செய்யும். சில சமயம் நச்சரிக்கும். எனினும் இந்தப் பலவிதமான தோற்றத்திலும் தகப்பனாகிய நான் அவனை

என் மகனைகவே கண்ணுற்று, அன்பையே பொழிகிறேன். அது அன்புமிக்கதொரு தந்தையின் சமபுத்தி. அவ்வாறே ஒரு சாதகனும் தனது அன்ருட வாழ்வில் ஏற்படும் மகத்தான வெற்றி, பயங்கரத் தோல்வி, பெருத்த சுகம், பெருந்துக்கம் முதலியனவற்றினூடேயும் தன் இதய நாயகனைக் காணத் தவற மாட்டான். இதுவே சமபுத்தியுடையவனுக்கு அழகு.

சகல உயிர்களின் நலத்தையே நாடி:

தியானிப்பவனுக்கு வேண்டிய மூன்ருவது தகுதி இது. சகல ஜீவராசிகளுக்கும் அவன் தன்னுலான உயர்ந்த சேவையைச் செய்வதிலேயே தன்னை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும் என்கிருர் பகவான். இந்த சரீரத்திலிருந்து கொண்டிருக்கும் வரையில், தனது மனம் புத்தி அனைத்தையும் ஈஸ்வர தியானத்தில் மட்டுமே எல்லா நேரத்தையும் செலவிட முடியாது. இப்புறவுலகோடு அவன் தொடர்பு கொண்டு அதற்கு ஏற்ப எதிர் செயலாற்றத்தான் *(React)* வேண்டும். ஆனல் இந்த செய்கைகளனைத்திலும் அவன் சகல ஜீவராசிகளுக்கும் அயராது சேவை செய்வதற்கே தன்னை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும். சகல ஜீவன்களிடத்தும் அன்பு கொள்வதே அவன் பண்பாகிவிடும்.

ஆகவே சித்தத்தை அவ்யக்தமான ப்ரும்மத்தின்பால் வைத்து புலனடக்கி, சமபுத்தியோடு, பிறர்க்குச் சேவை செய் வதையே இயல்பாகக் கொண்டுள்ள உபாஸகர்களும்கூட ''என்னையே அடைகின்றனர்'' என்று உறுதியளிக்கிருர் கிருஷ்ணன்.

சர்ச்சைக்குரிய விஷயத்தை வினவிய அர்ஜுனனுக்கு பகவான் உறுதிமொழி வடிவிலேயே ஐயமற பதிலளிக்கிருர். இரு வகையான உபாஸகர்களும் ஒரே லட்சியத்தைத்தான் அடைகிருர்கள். இருவருக்குமே விதிக்கப்பட்ட தகுதிகளும் ஒன்றே என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார் பகவான்.

ஆனல், பெருவாரியான மக்களைப் பொருத்தவரையில்...... —பகவான் தொடர்கிருர்:

க்லேசோ திகதர்ஸ்தேஷாம் அவ்யக்தா ஸக்த சேதஸாம்
அவ்யக்தா ஹி கதிர் து:க்கம் தேஹவத்பிர வாப்யதே
*12:5*

நிர்குண ப்ரும்மத்தில் சித்தம் வைப்பவர்க்கு பிரயாசை மிக அதிகம். தேகாபிமானமுடையோர்க்கு நிர்குண ப்ரும்ம நிஷ்டையடைதல் அரிது

எவ்வகையில் தியானித்தாலும் அடையும் லக்ஷ்யம் பிரும்மமே என்று முன் ஸ்லோகத்தில் விளக்கியபின் பகவான், சமமான திறமும் தகுதியும் உடைய, ஒப்பிட முடியாத அந்த இரு மார்க்கங்களையும் ஒப்பிட முயல்கிறார். ''நிர்குண ப்ரும்மத்தில் சித்தம் வைப்பவர்க்கு பிரயாசை மிக அதிகம்'' என்கிறார். இதைப் பார்த்தால் ஸகுண ப்ரும்ம உபாசனையே மேற்கொள்ளத் தக்கது என்றும் நிர்குண ப்ரும்ம தியானத்தை ஏறக்குறைய கண்டனம் செய்வது போலவும் தோன்றும். இப்படித் தவறான வழியில் அர்த்தம் செய்துகொண்டால் அது கீதையை, உபநிஷதுகள் தரும் நித்திய ஞானத்தையே மறுக்கும் சாஸ்திரமாக்கிவிடும். எனினும் பக்தி யோகத்தின் ஆதரவாளர்களோ இதில் அரை சுலோகத்தையே மேற்கோள் காட்டி உண்மையான சாதகர்களையும் ஏமாற்றுகின்றனர்!

முதல் வரியை இந்த சுலோகத்தின் இரண்டாவது வரியே விளக்குகிறது. நிர்குணப்ரம்ம தியானம் ஏன் கடினமானது என்பதை கிருஷ்ண பகவான் விளக்குகிறார்— ''தேகாபிமான முடையோர்க்கு நிர்குணப் ப்ரும்ம நிஷ்டையடைதல் அரிது.'' இதில் ''தேகாபிமான முடையோர்'' என்பது முக்கியமான சொல். இதற்கு ''ஸ்தூலசரீரம் படைத்தவர்கள்'' என்று பொருள்கொண்டால், ஸ்தூல சரீரம் படைத்தவர்கள் ரூபத்தியானம் செய்யலாம், நிர்குண ப்ரம்மத்தியானத்தைச் செய்ய வேண்டுமானால் சரீரத்தைத் துறக்கவேண்டும்—அதாவது செத்த பின்னரே முடியும்—என்று பொருள்படுகிறது. என்ன அபத்தம் இது!

சங்கராச்சாரியாரின் விளக்கப்படி ''தேகாபிமானமுடையோர்'' என்றால் ''தேகத்தினிடம் பற்று கொண்டவர்கள்'' என்று பொருள். சரீர சுகத்தையே நாடி புலன்வழி வாழ்வை நடத்துபவனால், ஸர்வ வியாபியான அரூபனான ப்ரும்மமாகிய சூட்சுமக் கருத்தில் நிலைத்து நின்று தியானிப்பது மிகவும் கடினமாகும். கை நடுக்கத்தோடு, பார்வையுமற்ற ஒரு கிழவனால் ஊசியில் நூல் கோர்க்க முடியாது. அதுபோலவே ஆசைகளால் அமைதியின்றித் தவிக்கும் ஒரு மனம்—புத்தியானது நாமரூபங்களுக்கப்பாலுள்ள எல்லையற்ற ஆத்மனின் பெருமையை அடைய முடியாது.

சுருங்கக் கூறின், பிரபஞ்சத்தில் வ்யக்தமாகியுள்ள பகவானை தியானிப்பதே நம்மில் பெரும்பாலானோர்க்குப் பயனளிக்கும். ப்ரம்மார்ப்பணமாகச் செய்யும் சேவையின் மூலம் மனிதன் ஈசுவரனை எத்தனையோ வடிவங்களில் உபாசிக்கலாம். இதன் மூலம் சரீராபிமானமும் இந்திரியப் பசியும் நம்மை விட்டு நீங்கி மனம் சூட்சம தியானமாகிய நிர்குணப்ரம்ம தியானத்திற்கு ஏற்றதாகும்.

நிர்குணப்ரம்ம உபாஸனையைப் பற்றி இவ்வத்தியாயத்தில் பின்னர் கூறியுள்ள போதிலும், முதலில் ஸகுண ப்ரம்ம உபாஸனையில் ஈடுபடும் சாதர்களுக்கான ஒழுக்கங்களைக் கூறுகிறார் பகவான்:

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸம்ன்யஸ்ய மத்பரா:
அனன்யேனைவ யோகேன மாம் த்யாயந்த உபாஸதே

12:6

தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு ஸம்ஸாரஸாகராத்
பவாமி நசிராத் பார்த்த மய்யா வேசித சேதஸாம்

12:7

ஆனால் யார் சகல செயல்களையும் எனக்கு அர்ப்பித்து என்னையே பரகதியாகக் கொண்டு வேறு எதையும் பற்றாத யோகத்தால் என்னை தியானித்து வணங்குகிறார்களோ,...

சித்தத்தை என்பால் வைத்த அவர்களை, பார்த்தா! நான் விரைவிலேயே மரண ஸம்ஸா ரத்தினின்றும் கரை யேற்றுகிறேன்.

ஸகுண ப்ரம்மத்தியானத்திற்கான சில திட்டவட்டமான வரையரைகளை விதிக்கிறார் பகவான்; அவற்றை உள்ளபடியே ஒழுகினால் அவர்களை மரண ஸம்ஸாரத்திலிருந்து விடுவிப்பேன் என்றும் கூறுகிறார். இந்த வரையறைகளைக் கூர்ந்து ஆராய்ந்தால் அவற்றை ஒழுகும் பக்தனின் மனம் வேறு எந்த உதவியுமின்றி ''அவன்'' நிலைக்கு உயர்ந்துவிடும் என்பது விளங்கும். ஆனால் ஆரம்பத்தில் அந்த சாதகனுக்கு குருவின் உதவி மிகவும் அவசியம்—குருவின் மூலமே அவன் சாதகத்தை தைரியமாகத் தொடங்க முடியும்.

யார் சகல கர்மங்களையும் எனக்கு அர்ப்பித்து என்னையே மேலான கதியாகக் கொண்டு உபாஸிக்கிறார்களோ:

ஒரு நோக்கம் அல்லது ஒரு கருத்து அல்லது ஒரு சக்தியிடம் ஒருவன் தனது சகல கர்மங்களையும் அர்ப்பணிப்பது என்றால், தனது குறுகிய வரையறைகளை நீக்கி அவன் அதோடு ஒன்றிவிடுகிறான் என்று பொருள். ஒரு சாதாரண மனிதன் ஒரு நாட்டின் தூதனாகச் சென்றால், அயல்நாட்டுச் சபைகளில் தான் சிந்திப்பதும், பேசுவதும், செயல்புரிவதும் தனது நாட்டு மக்களனைவரின் வல்லமை மிக்க பிரதிநிதி என்ற வகையில்தான் இருக்கும். அவ்வாறே ப்ரம்மத்தினிடம் தன்னையே அர்ப்பணித்த ஒரு பக்தனும் சர்வகதமான தயாநிதியின் கட்டளையை நிறை

வேற்ற வந்த தேவ தூதனுகவே செயல்படுவான்.

என்னையே பரகதியாகக் கொண்டு: ஒரு நடனக்காரி தாளத்தைப் பற்றிக்கொண்டுதான் அபிநயம் பிடிப்பாள். ஒரு பாடகனும் பின்னணி சுருதியைப் பற்றிக்கொண்டுதான் பாடுகிறுன். அவ்வாறே ஒருவன் மதத்தையும் ஒரு பகுதி நேரக் கேளிக்கையாகவோ அல்லது தற்காலிகப் போக்கிடமாகவோ கருதிவிடாமல் தனது வாழ்க்கையினூடே பரவியுள்ள அந்த ஈசுவரனையே உயர்லக்ஷியமாகக் கொள்ளவேண்டும். நமது வாழ்க்கை தொடர்புகள், தொழில் நடைமுறைகள் அனுபவங்கள் யாவுமே அந்த உயர்ந்த லக்ஷ்யத்தை நோக்கியதாகவே இருக்கவேண்டும் என்பதே நாம் பெறும் அறிவுரை.

வேறென்றையும் நினைக்காத யோகத்தால்: ப்ரும்மத்தையடைய நம் மனதை நாம் தயார்ப்படுத்தும் முயற்சிகளனைத்துமே யோகம் எனப்படும். கலக்கங்களிலிருந்தும், வீண் சிந்தனைப் போக்கினின்றும் *(Wasteful Tendencies)* சச்சிதானந்தத்தை நோக்கி மனதை உயர்த்துவதே யோகம். இந்த யோகத்திறன் நம்மனைவருள்ளும் இருக்கிறது. ஆனுல் இத்திறனை உயர்லக்ஷியத்தை நோக்கித் திருப்பினுல் அதுயோகம்; மாருக இந்திரிய சுகத்தில் திருப்பினுல் அது யோகமல்ல, போகம்.

சாதாரணமாக நமது லக்ஷியம் மாறிக்கொண்டேயிருக்கிறது, இதனுல்தான் நாம் கடுமையாக உழைத்தாலும் பயனிருப்பதில்லை. ஒருவன் தான் விரும்பிய இரண்டு இடங்களில் எந்த இடத்திற்கு உல்லாசப் பயணம் செல்வது என்று தீர்மானிக்காவிட்டால் அவன் எங்கும் போகாமல் காலத்தையும், சக்தியையும் வீணுக்கிக்கொண்டுதான் இருப்பான். ''அன்யமானது'' என்பதற்கு எதிர்ப்பதம் ''அனன்யமானது'' என்பது. அலையாமல் ஒரே லக்ஷியத்தில் நம்மனம் நிலைப்பதே ''அனன்ய யோகம்.''

அந்த லட்சியத்தினின்றும் நம் மனம் அன்யமாகக் கருதிக் கொண்டு மற்ற வழிகளில் ஈடுபாடு கொள்வதால்தான் மனம் சிதறுகிறது.

ஆகவே, 1. சகல கர்மங்களையும் ''எனக்கே'' அர்ப்பணித்து, 2. ''என்னையே'' மேலான பேர்க்கிடமாகக் கொண்டு, 3. மனம் அலைவுருது அனன்யயோகத்தில் நிலைத்திருப்பவனே எனது பக்தர்களுள் உயர்ந்தவன், அவன் செய்வதே தியானம், அதுவே உபாஸனை. உபாஸனை என்பது பரகதியை தியானிப்பது மட்டுமல்ல, அதோடு ஒன்றி விடுவதேயாகும்—இதுதான் தியானிப்பவனின் நோக்கமும் ஸித்தியுமாகும்.

இத்தகைய பக்தனை ''ஸம்ஸார பந்தத்திலிருந்து கரையேற்றுகிறேன்'' என்று பகவான் உறுதியளிக்கிறுர். சாதகர்கள் பல ஆண்டுகள் முயன்றும் பயனில்லையே என்று எண்ணி

பொறுமையிழக்காமலிருப்பதற்காகவே ''விரைவிலேயே'' (அதிக நேரமாகாமலேயே) என்றும் பகவான் உறுதியளிக்கிறார்.

''சித்தத்தை என்பால் வைத்த அவர்களை'': பொதுவாக மனமானது தான் சிந்திக்கும் விஷயத்தின் வடிவத்தையே அடைகிறது. ஒரு பக்தனின் ஒருங்கிணைந்த மன—புத்தி யாகிற கரணம் ஈசுவரன் தவிர மற்ற எண்ணங்களையும் கலக்கங்களையும் நீக்கி இடையறாத அப்பியாசத்தால் ஈசுவர சிந்தனையிலேயே ஈடுபடுமாயின், அது பரம்பொருளின் வடிவையே பெறும். மாயமான அகங்கார எல்லைக்குள் சிக்குவதும் மனமே, எல்லையற்ற தன்மைக்கு மீள்வதும் அந்த மனமே. பந்தமும், மோட்சமும் மனதிற்கே; ஆத்மன் எப்பொழுதும் சுதந்திரமாகவே இருப்பது; என்றுமே தளையுண்டதல்ல.

மய்யேவ மன ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேசய
நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் ந ஸம் சய:
12:8

என்பால் மனதை நிறுத்தி, என்னிடத்தே புத்தியைச் செலுத்து. பின்பு என்னிடமே வசிப்பாய் என்பதில் ஐயமில்லை.

தியானம் என்பது ஒரு பௌதீகமான செயலல்ல, அது மானிட அந்தக்கரணத்தின் நுண்ணியகலை. மனம் ஏற்பதை இதயம் ஏற்காது, இதயம் விரும்புவதைப் பார்த்து மனம் நகைக்கும்—இதை எல்லா சாதகர்களும் அனுபவித்துள்ளனர். இந்த இதயத்தையும் மனதையும் (*Heart and Head*) ஒருங்கே பிரம்மானு பூதியில் நிலைக்கச் செய்வதே ஆன்மீக சாதகத்தின் ரகசியமாகும்.

''என்பால் மனதை நிறுத்தி'': புலன்களுக்கப்பாற்பட்ட கருத்தை மனதால் சிந்திக்க முடியாது. ஆகையால் குழலூதும் கண்ணனின் திவ்ய ரூபத்தை தியானிக்கும் மனம் எளிதில் 'அவனது' கமல பாதங்களில் நிலைத்துவிடும். பகவான் ஸர்வகதனாகையால் சகல நாம ரூபங்களிலும் 'அவனே' ஒளிந்திருக்கிறான் என்றறியும் ஒரு பக்தனின் மனம் கிரீடதாரியான கோபாலனின் புன்முறுவலை விட்டு வேறிடம் செல்லாது.

ஜோடித்து வைத்த பளிங்குச் சிலையை பற்றி மனதில் வெறுமனே அசைபோடுவதால் மட்டும் அகநிறைவு ஏற்பட்டுவிடாது. இதனால் இதயம் நிறையலாமே தவிர புத்தி அம்சம் நிறையாது. இரண்டும் ஒருங்கே இசைந்து, சீராக வளர்ந்தால் தான் சித்தி பெறமுடியும்; இல்லையேல் ஒன்றைவிட்டு மற்றது மட்டும் அதிகம் வளர்ச்சிபெற்றால் விரும்பத்தகாத சூழ்நிலையே உருவாகும். ஆகவே சாதகனின் விவேக புத்தியானது கல்லா

லான அந்தச் சிலையைத் துளைத்து அதனுள் துடிக்கும் 'ஸத்'தைத் தொடர்பு கொள்ளவேண்டும் என்கிறது கீதை.

புத்தியை என்னிடத்தே செலுத்தி: அதாவது ஈசுவரனின் கரணமாகிய ஸமஷ்டி புத்தியைத் தொடர்பு கொள்ளுதலாகும்.

நமது சிந்தனை மற்றும் உணர்ச்சியின் மொத்த உருவமாகவே நாம் ஒவ்வொருவரும் வாழ்கிறோம். நமது மனம் ஈஸ்வரனுள் நிலைத்து, நமது புத்தியும் அந்த எல்லையற்றதினுள் ஆழ்ந்து விட்டால் நமது தனித் தன்மைகளும் நீங்கி அந்த எல்லையற்ற ஸர்வகதனுடன் கலந்து அதோடு ஒன்றாகிவிடும். ''அதன் பின்பு நீ என்னுள் வசிப்பாய்.''

ஸத்தியத்தின் கோவில் வாசலில் கலங்கி நிற்கும், மரண வரையறைக்குட்பட்ட ஒருவனுக்கு இது மிகை படக்கூறியது போல் தோன்றும். ஆயிரக்கணக்கான தளைகளிலும், அதிருப்தி களிலும், மனக்கசப்புகளிலுமே சிக்கித் தவித்தே பழக்கப் பட்டவனால் நானே ''அவன்'' என்பதை ஏற்க முடியாதுதான். அதனால்தான் கிருஷ்ண பகவான் ''ஐயமில்லை'' என்று உறுதி யளிக்கிறார்.

தியானத்திற்கான இந்த இரு நிபந்தனைகளும் எளிதாகத் தோன்றினாலும் நடைமுறையில் மிகவும் கடினமாயிற்றே என்று எண்ணியவண்ணம் பகவானைப் பார்க்கிறான் அர்ஜுனன். அதற்கும் வேறுவழி கூறுகிறார் பகவான்:

அத சித்தம் ஸமாதாதும் ந சக்னோஷி மயி ஸ்திரம்
அப்யாஸ யோகேன ததோ மாமிச்சாப்தும் தனஞ்ஜய

12:9

தனஞ்ஜயா, இனி சித்தத்தை என்பால் உறுதியாக நிறுத்த முடியாவிட்டால் பயிற்சி யோகத்தில் என்னை அடைய விரும்பு.

''சித்தத்தை என்பால் வைத்து, புத்தியை என்னிடம் செலுத்''துவதே ஆத்மானுபூதிக்கு வழி என்று முந்தைய சுலோ கத்தில் தீர்க்கமாகக் கூறினார் பகவான். இந்த இரட்டைச் செயலுக்கு அதி சூட்சமமான புத்தியும், ஏகாக்ர சித்தமும் வேண்டும். ஒரு சாதாரண லௌகீகனான அர்ஜுனனுக்கு இது முடியாது என்று தோன்றுகிறது. இதை அவனது முகபாவத்தி லேயே கண்டுகொண்ட அன்புள்ள குருவான கிருஷ்ணன் வேறு ஒரு முறையைக் கூறுகிறார்.

''சித்தத்தை என்பால் உறுதியாக நிறுத்த முடியா விட்டால்'': இதற்கு ஒரேவழி ''அப்யாஸ யோகம்.'' இது ஏற் கனவே அத். VI ஸ்லோகம் 26ல் விளக்கப்பட்டது. ''மனம் எக்

காரணத்தால் எதனெதன் கண் திரிகிறதோ, அதனதனின்றும் அதை மீட்டுவித்து ஆத்மாவின் வசத்திற்குக் கொண்டுவருக.'' தியானிப்பவன் ப்ரும்மத்தில் மனதை நிறுத்த முயலும் போதெல்லாம், அது சம்பந்தமில்லாத விஷயங்களில் அலேபாயும். அப்போதெல்லாம் சிந்தனேக் கிரணங்களேயெல்லாம் திரட்டி மீண்டும் மீண்டும் ப்ரும்மத்திலேயே குவியச் செய்யவேண்டும்.

தியானத்தின்போது மனம் தானுகவே ஓடியலேவதைவிட தியானிப்பவன் அது இழுத்த இழுப்பிற்கெல்லாம் இசைவதுதான் வருந்தத்தக்கதாகும். இத்தகைய மன மருட்சிக்கு ஆளாகாமல் பரகதியிலேயே குறியாக இரு என்கிருர் யோகேஸ்வரனுன கிருஷ்ணன்.

மனம் ஒருபுறம் அலேபாய்ந்த வண்ணமாக இருந்தாலும், சாதகன் தன்னுலேயே தன்னுள் குவிந்து நிற்கும் திறனே பயிற்சியின் மூலம் வளர்த்துக்கொள்ளவேண்டும். நாம் மனதோடு ஒன்றிஞல், அது இழுக்குமிடத்திற்கெல்லாம் நாமும் போகத்தான்வேண்டும். ஆகையால், மனதை அடக்குவதற்கு சாதகன் மனதோடு ஒன்றிவிடாமல் அதை ஆளும் சக்தியாகிய புத்தியோடு ஒன்றியவண்ணம், தான் மாட்டும் தனித்து நிற்கவேண்டும்—விவேக சக்தியைக்கொண்டுதான் ஒருவன் மனதின் தாழ்ந்த சக்திகளே வெல்ல முடியும்.

இந்த அப்யாஸ யோக முறையானது, முன் சுலோகத்தில் கூறிய நேர்வழி மூலம் ஆத்மானுபூதி அடைய முடியாதவர்களுக்குப் பயனளிக்கும் என்கிருர் பகவான். அப்யாஸ யோகத்தால் சில காலம் பழகி மனதை நன்கு கட்டுப்படுத்திய பின்னர் முந்தைய சுலோகத்தில் கூறிய நேரடி வழியைக் கடைபிடிக்க முடியும்.

இதுவும் முடியாதவர்களுக்கு:

அப்யாஸேப்ய ஸமர்த்தோஸி மத்கர்ம பரமோ பவ
மதர்த்தமபி கர்மாணி குர்வன் ஸித்திமவாப்ஸ்யஸி

12:10

பயிற்சியும் செய்ய முடியாவிட்டால் என் பொருட்டுக் கருமம் செய்வதைக் குறிக்கோளாகக் கொள். எனக்காகக் கருமம் செய்தாலும் நீ ஸித்தியடைவாய்.

ஆத்ம வளர்ச்சிக்கான பலமுறைகளேயும் பூரணமாக விளக்குகின்றன ஹிந்து சாஸ்திரங்கள். மனேதத்துவத்தின்படி பார்த்தால் நன்கு ஆராயப்பட்ட இந்த முறைகளேக் கற்கக் கற்க அவை மேன்மேலும் நம்பிக்கையளிப்பதாயுள்ளன. உயர்ந்த நமது சாஸ்திரங்களில் ''இதைச் செய் இல்லேயேல் நரகில் வீழ்

வாய்'' என்பது போன்ற அச்சுறுத்தல்கள் எதுவுமில்லை. விவேக புத்தியுடைய எந்த இளைஞனும் ஹிந்து சாஸ்திரங்களில் பூரண நம்பிக்கையே கொள்வான்.

அப்யாஸ யோகத்தையும் செய்யமுடியாத அளவிற்கு மனம் கிளர்ச்சியுற்று மூர்க்கத்தனமாயிருப்பின், அத்தகையோர் அனுவசியமாக அடக்குமுறையைக் கையாண்டு தவிக்க வேண்டாம் என்கிறார் கிருஷ்ணன். மொட்டவிழாத மலரைவிட கோடி மடங்கு நுட்பமான மனதை அவசரப்படுத்தி மலரச் செய்ய முயன்றால், அது அதனுடைய அழகையும் மணத்தையும் நாசமாக்கிவிடும். நம்முள் உயர்ந்த மனிதன் விரைவில் மலர்வதற்குத் தக்க சூழ்நிலையை ஏற்படுத்தும் முயற்சியே தியானம். ஆகையால் ஒரு முறையைக் கடைபிடிக்க முடியாதவனுக்கு வேறு முறையைத்தான் வழங்கவேண்டும்.

தன்னுடைய வாசனைகளால் இயல்பாக எழக்கூடிய சிந்தனைகளில் மனம் இடையிடையே செல்லுமாயின், அத்தகைய மனதை எளிதில் திரட்ட முடியும். ஆனால் இத்தகைய வாசனைகள் மிகவும் அதிகமாக இருந்து அதனால் மனம் மிகவும் புறமுகமாகவே திரும்பியிருக்கும் ஒருவனுக்கு (Extrovert) மனதை ஒருமுனைப்படுத்துவது மிகவும் கடினம்—இத்தகையவர்கள் தன் செயல்கள் அனைத்தையுமே ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும்; மிகவும் புறமுகமாகத் திரும்பிக் கிடக்கும் ஒருவன். கூட இதன்மூலம் தனது அன்றாட செயல்களனைத்திலும் பகவானையே நினைவுகொள்வான்.

ஒரு உதாரணத்தைக் காண்போம். ஒரு தந்தைக்குப் பிறக்கும் ஒவ்வொரு மகனும் புதுமுகமே. ஆனால் சில மாதங்களிலே அவனுக்குத் தன் மகனிடம் அன்பு ஏற்பட்டு போகப் போக மிகப் பெரிதாக வளர்ந்துவிடுகிறது. ஏனெனில் மகன் பிறந்த பின்னர் அந்தத் தந்தையின் செயல்கள், அனுபவங்கள் யாவுமே தன் மகன் இருக்கிறான் என்ற நினைவிலேயேதான் நிகழ்கின்றன—அதாவது தன்னையுமறியாமல் தன் மகனிடம் தான் அர்ப்பணமாகியிருக்கும் உணர்வே இதற்குக்குக் காரணம்.

நம்மில் மிகவும் புறமுகமாகத் திரும்பியிருப்பவனுக்கும் நம்பிக்கையூட்டும் விதத்தில் வழி காட்டுகிறார் யோகேஸ்வரனான கிருஷ்ணன். நம்மில் பலருக்கும் இது 'ராஜபாட்டை'யாகும். ஒரு கம்பெனியின் பிரதிநிதி பேசும்போது ''நாங்கள் உண்டாக்குகிறோம்,—நாங்கள் தர முயல்வோம், நாங்கள் பொறுப்பல்ல...'' என்று தன்னை அந்தக் கம்பெனியோடு சேர்த்துதான், தானே அந்தக் கம்பெனியின் டைரக்டர் அல்லது உற்பத்தியாளர் போலத்தான், எண்ணிக்கொண்டு பேசுகிறான். அதுபோலவே நாமும் ஈசுவரனின் ஏஜண்டுகள் என்று உறுதியாக நம் மனதில்

புரிந்துகொண்டால், புறவுலகில் நாம் ''அவனுடைய'' விருப்பப் படி செயலாற்றும்போது நம் மனம் இடையருத பகவான் நினைவி லேயே நிலைக்கும்; அதுமட்டுமின்றி நமது அன்ருடச் செய்கை களில் நாமே அதிசயிக்கத்தக்க அளவிற்கு சாமர்த்தியமும், திறமையும், மனே தைரியமும் ஏற்பட்டிருப்பதைக் காண்போம்.

வேத பாடங்களைக் கற்ற அர்ஜுனனுக்கு இவ்வளவு எளி தாகத் தோன்றுகிறதே இந்த முறை, இது உண்மையில் அவ் வளவு சக்திவாய்ந்ததா என்று சந்தேகம் உண்டாகிறது. மரபு வழுவாதவர்கள் மரபுக்கு ஒவ்வாத வாக்கை, அதை தெய்வமே கூறினுலும்கூட, சந்தேகக் கண்ணேடுதான் நோக்குவர். அதனுல் தான், ''எனக்காகக் கருமம் செய்தாலும் நீ ஸித்தியடைவாய்'' என்று பகவான் உறுதியளிக்கிருர்.

அப்போதுதான் தொடங்கி நாம் நீரைத்தான் கொதிக்க வைக்கிருேம் என்ருலும் ''டீ போடுகிறேன்'' என்று கூறுகிருேம். நிகழ்ச்சி பூர்வமாகப் பார்த்தால் இந்தக் கூற்று உண்மையில்லை யாயினும், அது மொத்தத்தில் உண்மையையே குறிக்கும்— ஏனெனில் நீர் கொதித்துவிட்டால் டீ தயாரிக்க அதிக நேர மாகாது. நீரைக் கொதிக்க வைக்கும் முதல் செயலே இறுதி லட்சியத்தைக் குறிக்கிறது. அவ்வாறே நமது அன்ருட வாழ்வில் நமது செயலனைத்தையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்தால் நமது பழைய வாசனைகள் யாவும் நீங்கி தெய்வீக வாசனைகளே நம்முள் வளரும். இவ்விதம் பண்பட்ட மனதால் அப்யாஸ யோகத்தின் மூலம் சமநிலை பெற்று, தியானத்தில் நிலையாக நின்று, ப்ரும்மத்தில் ஒன்றிவிடுவது எளிதாகிவிடும்.

இதுவும் முடியாவிட்டால் அவன் என்ன செய்வான்?

அதைததப்யசக்தோஸி கர்தும் மத்யோகமாச்ரித:
ஸர்வ கர்ம பலத்யாகம் தத: குரு யதாத்மவான்

12:11

இனி, அதைச் செய்யவும் முடியாதென்னில் என்னைச் சரணடைந்தவனுய், தன்னடக்கம் பயின்று, கர்மபலன் முழுவதையும் எனக்கு அர்ப்பணம் செய்.

சென்ற சுலோகத்தில் அகங்காரத்தை அறவே துறந்த வண்ணம் இவ்வுலகில் செயலாற்று என்று கூறினர். அகங்காரம் வலுத்து சுயாபிமானியாகவே இருப்பவனுக்கு இது எளிதல்ல— இத்தகையவன் ரஜோ குணத்தாலும் தமோ குணத்தாலும் பீடிக்கப்பட்டவனுவான். இவ்வளவு தாழ்ந்த நிலையிலுள்ள சாத கனுக்கும்கூட கீதை ஒரு வழி சொல்லுகிறது. சாதாரணமாக இத்தகையவர்கள் எல்லா மதங்களிலும் நம்பிக்கையிழந்தோ ராகவே இருப்பார்கள். இத்தகையோரும் உயர் நிலைய

டைவதற்கு ஏற்ற எளிய வழியை அனுதாபத்தோடு கீதை வழங்கு கிறது.

சகல கர்மங்களையும் ''எனக்கு'' அர்ப்பணிக்க முடியாதவர் களுக்கு ஒரு சக்தி வாய்ந்த மாற்று முறையை அளிக்கிறார் பக வான்: ''என்னைச் சரணடைந்தவனாய், தன்னடக்கம் பயின்று, கர்ம பலன் முழுவதையும் எனக்கு அர்ப்பணம் செய்.''

கிருஷ்ண பகவான் வெறும் கூலிக்கு வேலை செய்வோரை வெறுப்பது போல் தோன்றுகிறது. ஆனால் இது, மேட்டுக்குடி மக்களும், பூர்ஷ்வா வகையினரும் தொழிலாளர் வர்க்கத்தை வெறுப்பது போன்றதல்ல. ''குறைந்த வேலை, அதிகக் கூலி, திறமையின்மை'' இதுதான் மக்களாட்சி நிலவும் இன்றைய ஸோஷலிஸ சமுதாயத்திலுள்ள தொழிலாளர்களின் பொது வான மனோபாவமாகிவிட்டது. இவ்வாறு பலன் ஒன்றே குறிக் கோளாகக்கொண்டு செயல்புரிகிறார்களே இன்றைய மக்கள்—இந்த மனோபாவத்தைத்தான் கிருஷ்ண பகவான் வெறுக்கிறார்.

நிகழ் காலத்தில் செய்யும் கருமம் எதிர் காலத்தில் முதிர்ச்சி யடைவதே ''கர்ம பலன்''. இன்று நிலத்தைப் பண்படுத்தி விதை விதைத்தால் பலனடைய முடியும். மாறாக, கருமத்தைச் செய்யும் போதே அந்தக் குடியானவன் அறுவடையைப் பற்றியே நினைத்துக்கொண்டு காலத்தை வீணாக்கினால் அவன் தோல்வியைத்தான் தழுவிக்கொள்வான். இதை நாமனைவரும் அறிந்திருந்துங்கூட இனிவரப்போகும் நிகழ்ச்சிகளையே எண்ணி எண்ணி நிகழ் காலத்தில் கிடைத்துள்ள சந்தர்ப்பத்தையும், நேரத்தையும் வீணடிக்கிறோம். நாளை என்ன நடக்குமோ என்ற பயத்திலும், கவலையிலுமே நம் சக்தியனைத்தும் வீணாகின்றது. நாம் பயந்தது நடக்காமலேயே போகலாம்! வருங்காலத்தைப் பற்றி இத்தகைய வீணான கற்பனைகளை ஒழித்துவிட்டு நாம் நிகழ் காலத்தைத் திறம்படவும், நிறைவோடும், உண்மையாகவும் வாழவேண்டும் என்பதே கிருஷ்ணன் வலியுறுத்துவதாகும்—இந்த விதமாகச் செயல்பட்டால்கூட நமது மனம் ஒருங்கிணைந்து, ஒரு முனைப்புற்று, வல்லமை மிக்கதாகும்.

இந்த மூன்று பாடல்களிலும் மூன்று விதமான மனவைத்தியங்கள் கூறப்பட்டுள்ளன. நாமெல்லோருமே ஓரளவு புறநோக்கிய இயல்புடையோரேயாவோம். நம் அந்தக் கரணத்தில் படிந்துள்ள வாசனைகள் எவ்வளவு தடித்திருக்கிறது என்பதில்தான் நம்மில் வேறுபாடு. ஒரு பித்தளைப் பாத்திரம் லேசாக மங்கியிருந்தால் சாம்பல் போட்டுத் தேய்த்தாலே அது பளபளப்பாகிவிடும்; ஆனால் அது மிகவும் அழுக்கடைந்திருந்தால் அதை அமிலத்தில்தான் தோய்த்தெடுக்க வேண்டும். அது போலவே மனதில் படிந்துள்ள வாசனைகள் லேசாக இருந்தால்

அதனுல் ஏற்படும் கலக்கமும் குறைவாகவே இருக்கும், ''அப்யாஸ யோகத்திற்கு'' அந்த மனம் கட்டுப்படும். இந்த வாசனைப்படிவு தடித்திருப்பின் அதற்குக் ''கர்ம யோகம்'' தேவைப்படும். வாசனைகள் மிகவும் தடித்திருப்பின் அவன் உலகில் செயல்படும்போது'' கர்ம பலத்தியாக''த்தைக் கடை பிடிக்கவேண்டும். ஆன்மீக வளர்ச்சிக்கு ஏற்ற வழிகளை கீதையைப் போல் இவ்வளவு பூரணமாக உலகில் எந்த நூலுமே கூறவில்லை என்பேன்.

ஆனுல் இவையாவும் ஒருங்கே கடை பிடிப்பதற்கல்ல. ஒன்றன்பின் ஒன்ருகவே ஒழுகத்தக்கதாகும். இனி பகவான் கர்ம பலத்தியாகத்தின் பெருமையைக் கூறுகிருர்:

ச்ரேயோ ஹி ஞானமப்யாஸாத்
ஞானுத் த்யானம் விசிஷ்யதே
த்யானுத் கர்ம பலத்யா கஸ்
த்யாகாத் சாந்திரனந்தரம்

12:12

அப்யாஸத்தைவிட ஞானம் சிறந்தது. ஞானத்தினும் த்யானம் மேலானது. த்யானத்தைவிட கர்ம பலத்யாகம் உயர்ந்தது. தியாகத்திலிருந்து உயர்ந்த சாந்தி விரைவில் தொடர்கிறது.

மனமுடைந்து நிற்கும் சீடனுக்கு வேதாந்த உண்மைகளை குரு வெறுமனே பட்டியல் போட்டுக்காட்டினுல் மட்டும் போதாது; அவற்றை குருவானவர் ஒரு கோவையாகத் தொகுத்தளித்தால்தான் சீடன் செவ்வனே புரிந்துகொண்டு பயனடைய முடியும். அதற்கு உதாரணமே இந்த சுலோகம்.

இதில், கருத்துக்களை முக்கியத்துவக் கிரமப்படி மேலிருந்து கீழாக அமைத்துள்ளார் பகவான். இந்தக் கருத்து—ஏணியை நன்கு கண்டுகொண்டால் ஒரு சீடன் அதில் ஏறவோ இறங்கவோ நன்கு பழகிவிடுவான்.

''அப்யாஸத்தைவிட ஞானம் சிறந்தது'': ஆன்மீக சாதனைகள் யாவும் வெறும் பௌதீகமான செயல்களல்ல. அவை மனதையும் புத்தியையும் பண்படுத்த வேண்டிய ஒழுக்க முறைகளாகும். தான் செய்வதை நன்கு புரிந்துகொண்டாலொழிய ஒருவனுல் அச் செயலைச் செய்வித்துக்கொள்ளமுடியாது. ஆகையால் யோகக் கருமங்களையோ பக்திச் செயல்களையோ செய்வதற்கு அச் செயல்களைப் பற்றி விவேகத்தால் பெற்ற ஞானம் இன்றியமையாததாகும்.

''ஞானத்தினும் தியானம் மேலானது'': ஆன்மீக முறைகளை ஏன், எப்படி என்பதையெல்லாம் கற்பது எளிது, ஆனுல் கற்றதை கிரகித்துக்கொள்வதற்கு ஒரு மார்க்கம் வேண்டும். சிரத்தையோடு வேதாந்த சாஸ்திரத்தைச் சிரவணம் செய்யும் சீடன் அவ்வாறு கேட்டதை நன்கு மனனம் செய்யவேண்டும் இவ்வாறு கிரகித்துக்கொள்ளும் முறையே தியானம் அதனுல்தான் அந்தச் செய்முறை பற்றிய ஞானத்தை விட தியானம் மேலானது என்கிருர்.

''தியானத்தைவிட கர்ம பலத்தியாகம் உயர்ந்தது'': தியானம் என்பது சாதாரண நிலையிலிருந்து உயர் ஞான நிலையை நோக்கிப் பறப்பதற்கு புத்தி செய்யும் முயற்சியாகும். தியானத்தின் மூலம் இந்த நிலையடைய மனம் போதிய சக்தியும் சமநிலையுமுடையதாயிருக்க வேண்டும். ஆகையால் ராஜஸீக குணமுடையோருக்கு தியானம் ஏற்றதல்ல; அவர்களால் சாஸ் திரத்தின் தத்துவங்களைச் சிரவண, மனனங்கள் செய்ய முடியாது. அவர்களுக்கேற்றது கர்மபலத்தியாகமே.

வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்படாதிருப்பதால் நம் மனம் எப்படிப் பண்படுகிறது என்பதையும் ஒரு சிறுகுறிப்பாகச் சேர்த்துள்ளார் பகவான். ''தியாகத்திலிருந்து அப்புறம் உயர்ந்த சாந்தி (விரைவில் தொடர்கிறது'') என்கிருர். உள்ளபடியே ''புலன்விஷய போகங்களில் நாம்கொண்டுள்ள வலிய பற்றைத் துறப்பதே ''சந்நியாசம்'' என்கிறது ஹிந்து மதம்.

இத்தகைய தியாகத்தின் பயனுக ஏற்படும் மனச் சாந்தியில், புத்தியானது சாஸ்திர ஞானத்தை நிதித்யாசனம் செய்து ஆத்ம வளர்ச்சிக்கான வழிகளை கிரகித்துக்கொள்ளமுடியும், தியானத்தில் நிலையாக முன்னேற முடியும்.

பக்தனின் பேரியல்புகளை அடுத்த இரு சுலோகங்களும் கூறு கின்றன.

அத்வேஷ்டா ஸர்வ பூதாளும் மைத்ர: கருண ஏவச
நிர்மமோ நிரஹங்கார: ஸமது: க்க ஸுக: க்ஷமீ

12:13

ஸந்துஷ்ட ஸததம் யோகீ யதாத்மா த்ருட நிஸ்சய:
மய்யர்ப்பித மனோ புத்திர்யோ மத்பக்த: ஸ மே ப்ரிய:

12:14

எந்த ஜீவராசியையும் வெறுக்காமல் நட்பும் கருணையும் உடையவனுய், மமகாரம் அகங்காரமின்றி, (தான், தனது என்பதின்றி) இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதி, பொறுமை படைத்து,

எப்போதும் ஸந்தோஷமாயிருப்பவன், யோகியாய், தன்னடக்க முடையவனுய், திட நிச்சயமுடையவனுய், மனம்—புத்தியை எனக்கு அர்ப்பித்தவனுய் இருக்கும் பக்தன் எவனே அவன் எனக்குப் பிரியமானவன்.

13 முதல் 20வது சுலோகம் வரை, பக்தனின் பேரியல்புகளை ஆறு பகுதிகளாகக் கூறுகிருர் பகவான்; அதோடு சாதகர்களனைவர்க்கும் ஒழுக்கத்தையும் வாழ்க்கை நெறியையும் காட்டுகிருர். சித்திரம் தீட்டுபவன் படத்தைச் சற்று எட்டச் சென்று பார்த்துவிட்டு மீண்டும் மீண்டும் வந்து தன் கற்பனைகளுக்கு வடிவம் தீட்டுவது போல், கிருஷ்ணனும் ஒரு உண்மையான பக்தனின் மன அழகையும், புத்தியின் சமநிலையை யும், உலகோடு அவனுக்குள்ள உறவையும் இந்த ஏழு ஸ்லோகங் களிலும் படம் பிடித்துக் காட்டுகிருர். இத்தகைய சொல்நயம் கீதை முழுவதிலும் எங்குமே காணமுடியாது (அத். II—லுள்ள ''ஸ்திதப்ரக்ஞன்'' வர்ணனையைத் தவிர).

ஹிந்து மதம் கூறும் நன்னெறிகளும் நீதி நெறிகளும், மெஸ்ஸியா (தேவ தூதர்) தன் சீடர்கள் மீது திணித்த மனம் போனபோக்கான ஆணைகள் போன்றவையல்ல; அவை நம்மி டையே வாழ்ந்த ப்ரம்ம ஞானிகளிடமிருந்து நாமாகவே கற்றவையாகும். அதுபோலவே சாதகர்களும் தமது கடும் முயற்சியால் அந்த ஞானிகள் பெற்ற ஆத்மானு பூதியைப் பெற்றவர்களாவார்கள். அந்த ப்ரம்ம ஞானிகளைப் போலா வதற்கு நாமும் முதலில் மதம் கூறும் நன்னெறிகளையும், ஒழுக் கங்களையும் கொண்ட அவர்களது புறநடத்தைகளையும், மனப் பண்பையும் பின்பற்ற வேண்டும்.

முதல் பகுதியாக இந்த இரண்டு சுலோகங்களிலும் பதினெரு இயல்புகள் கூறப்பட்டுள்ளன. இதில் ஒவ்வொன்றும் ஞானியின் நன்னெறி இயல்பைக் காட்டுகிறது. சகல ஜீவராசி களுக்குள்ளும் இருக்கும் அதே ஆத்மாதான் தன்னுள்ளும் இருக் கிறது என்பதை யுணர்ந்தவன் யாரையுமே வெறுக்கமாட்டான். எல்லோரையுமே சமமாகப் பாவிக்கும் தன்மையுடைவனுவான் அவன். தனது வலது கையையே யாரும் வெறுக்க மாட்டார்கள். தன்னைத் தானே யாரும் வெறுக்க மாட்டார்கள்.

அவன் சகல ஜீவராசிகளிடமும் கருணையும், நட்புறவும் கொண்டவன். ''என்னுடையது'' என்று அவனுக்கு எதுவு மில்லை. ''தான்'' என்கிற முனைப்பான அகங்காரம் அறவே நீங்கப் பெற்றவன். சுகதுக்கங்களில் சமநிலை காப்போனுகிய அவனை உலகம் வைதாலும் உதைத்தாலும்கூட அவன் சிறிதும் பாதிக்கப்படாமலேயே இருப்பான். தனது சரீரத் தேவைக்கான பொருள்கள் கிடைக்காவிட்டால்கூட தன்னுள் நிறைந்து

சந்தோஷமாயிருப்பான். தன்னடக்கத்தோடும், திட நிச்சயத்தோடும் யோகியாய் ஆனந்திக்கும் அவன் தன்மனம்—புத்தியை ''எனக்கு அர்ப்பணித்து'' வாழ்பவனுவான். ''இத்தகைய பக்தன் எனக்குப் பிரியமானவன்.''

அத். VII ஸ்லோகம் 17ல் ''அந்த ஞானிக்கு நான் பிரியமானவன். அவன் எனக்குப் பிரியமானவன்'' என்ருர் பகவான். அதையே இந்த ஏழு சுலோகங்களிலும் விரிவாகக் கூறுகிருர்.

யஸ்மான்னேத் விஜதே லோகோ
லோகான்னேத் விஜதே ச ய:
ஹர்ஷாமர்ஷ பயோத்வேகைர்
முக்தோ ய: ஸ ச மே ப்ரிய:

*12:15*

யாரால் உலகிற்கு இடர் இல்லையோ, யார் உலகால் இடர்ப்படுவதில்லையோ, இன்னும் யார் களிப்பு, கோபம், அச்சம், கலக்கம் இவைகளினின்றும் விடுபட்டவனே அவன் எனக்கு உவந்தவன்.

இந்த இரண்டாவது பகுதியில் பக்தனுக்குரிய பேரியல்புகளில் மேலும் மூன்றைக் கூறுகிருர் பகவான்.

''யாரால் உலகிற்கு இடரில்லையோ'': ஒரு பக்தன் உலகிற்கு இடர் தரமாட்டான். ஆதவனிருக்குமிடம் இருள் இராது. அவ்வாறே சமநிலையும், சித்தியும் அடைந்த ஒரு ஆசாரியனும் தனது தெய்வீக இயல்பினுல் தன்னைச் சுற்றி அமைதியையும் ஆனந்தத்தையுமே பரப்புவான்; அவனை அணுகும் ராஜஸகர்களும் தமது படபடப்புகள் நீங்கி தம்முள் அமைதியையே காண்பர். உள்ளபடியே உலகம் இத்தகையவனுடைய பிரகாச ஒளியில் நீராடி ஆனந்தமடைய ஓடோடி வருவர்.

''யார் உலகால் இடர்ப்படுவதில்லையோ'': அவன் உலகிற்கு இடர்தராததோடு மட்டுமில்லை, அந்த உலகம் எவ்வளவுதான் வஞ்சனை மிகுந்து குழம்பிப் பொங்கினுலும் அதனுல் அவன் சற்றும் பாதிக்கப்படுவதில்லை. குழம்பிய நிலையிலேயே இருக்கும் இவ்வுலக விஷயங்களும் புயல் போன்ற அதனுடைய வெறியாட்டங்களும் அந்த ஞானியின் சமநிலையமைதியை சற்றும் கலைக்காது. அவனது உள்ளுரம் வலியது, அவனது வாழ்க்கை வலுவான அஸ்திவாரத்தில் கட்டப்பட்டது.

அமைதியான கடலையும், அது பொங்கி எழுவதையும், அதன் மீது நடனமாடும் நாணலையும் அசையாமல் நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறது கலங்கரை விளக்கம். அதுபோலவே

ஆத்மானு பூதியில் நிலைத்து நிற்கும் ஞானியும் மேற் புறத்தே யுள்ள ஸ்தூல வஸ்துக்களின் மாயா ஜாலங்களால் தனது அக அமைதி நிலை சிறிதும் கலையாமல் வாழ்கிறான். கொந்தளிக்கும் சூழ்நிலைகளினூடேயும் அவன் மாறாத அடிப்படையையே காண்கிறான்—வாழ்வின் அப சுவரங்களுக்கடியிலும் அவன் ஒரு இன்னிசையையே காண்கிறான்.

வழக்கமாக மனதிற்குக் கலக்கத்தைத் தரும் ''ஆனந்தம், பொறாமை, பயம், கவலை'' ஆகியவற்றினின்றும் அறவே விடுபட்டவன் அவன். [விரும்பிய பொருள் கிடைத்துவிட்டால் ஆனந்தம். கிடைக்காவிட்டால் உடையவர்களைப் பார்த்து பொறாமை. திருப்தி ஏற்பட்டால் இன்னும் வேண்டும் என்ற பேராசை. விரும்பியது கிடைத்துவிட்டபின் அது போய்விடுமோ என்ற பயம். கிடைத்தது தொலைந்துவிட்டால் அது எங்கே போயிற்று என்று கவலை. பொருள் மீது ஆசையில்லாதவனுக்கு இவை எதுவும் இருக்காது.] இத்தகைய பக்தன் உலகில் எப்பொழுதும் அமைதியாயிருந்து சூழ்நிலைக்கு பலியாகிவிடாமல் நாயகனாயிருந்து ஸம்ஸாரத்தைக் கடந்தவனாவான். இத்தகைய பக்தனே ''எனக்குப் பிரியமானவன்.''

அனபேக்ஷ: சுசிர்தக்ஷ உதாஸீனோ கதவ்யத:
ஸர்வாரம்ப பரித்யாகீ யோ மத்பக்த: ஸ மே ப்ரிய:

12:16

வேண்டுதலிலனாய், தூயவனாய், திறமையுடையவனாய், உதாஸீனனாய், துயரமற்றவனாய், காம்ய கர்மங்களைத் துறந்தவனாய் என்னிடம் பக்தி செய்பவன் எனக்கினியவனாகிறான்.

இது பக்தனின் பேரியல்புகளைக் கூறும் மூன்றாவது பகுதி. முந்தைய சுலோகம் வரையுள்ள முதலிரண்டு பகுதிகளில் பதினாறு பேரியல்புகளைக் கூறியபின் இப் பகுதியில் மேலும் ஆறு நுண்ணியல்புகளைக் கூறுகிறார் பகவான்.

அனபேக்ஷ: (தேவை பாராட்டாதவனாய்) ஒரு உண்மையான பக்தன் புறவுலக விஷயங்களையோ, அல்லது அவற்றின் பாங்கையோ, அவற்றோடு தனக்குள்ள உறவையோ சார்வதில்லை. ஒரு சாதாரண மனிதன் இந்தப் புறவுலக விஷயங்களிலிருந்து கிடைக்கும் அநித்யமான சுகத்தையே சார்ந்திருப்பான். ஆனால் ஒரு உண்மையான பக்தனுக்கு உள்ளூக்கமும், சமநிலையும், பேரானந்தமும் புறவுலகிலிருந்து வராது, தன்னுள்ளிருந்தே எழுகின்றன.

தூயவனாய் (சுசி:): ஒரு பக்தனிடம் அகத்திலோ புறத்திலோ களங்கத்திற்கு இடமே கிடையாது. ஸித்தியை

அடைய விரும்பும் ஒருவன் பிறரிடம் தான் கொள்ளும் உறவு முறையில் மட்டுமின்றி, தன்னைச் சுற்றியுள்ள பொருள்களின் ஏற்பாட்டிலும்கூட தூய்மையாக வைத்திருக்குமளவிற்கு சரீர ஒழுக்கமும் உடையவனுவான். ஒருவனது நடை, உடை, பாவனை இவற்றின் தூய்மையானது அவனுடைய அகத்தூய்மையையும், பண்பாட்டையும் குறிக்கும். இந்தியாவில், அகத்திலும் புறத்திலும் கடைபிடிக்க வேண்டிய ஆசாரம் பெரிதும் வலியுறுத்தப்படுகிறது. புறத்தூய்மையின்றி அகத்தூய்மை யில்லை.

திறமையுடையோன் (தக்ஷ:): ஒரு முழுமையான மனிதனின் அடுத்த இயல்பு இது. எந்த காரியத்திலும் உற்சாகமே வெற்றிக்கு வழி. எண்ணிய கருமத்தைத் துணிந்து ஆற்றும் மன வுரமும் புத்தி கூர்மையும் உடையவனே திறமைசாலி. செயலாற்றுவதில் இன்று நிலவும் மந்தத்தையும், அலட்சியத் தையும், அலங்கோலத்தையும் பார்த்தால் ஹிந்து மதம் தன் பெருமையை விட்டு வெகு தூரம் விலகிவிட்டது என்பது புரியும்!

உதாஸீனன் (எதனுலும் பாதிக்கப்படாதவனுய்): உலகம் தன்னை ஏமாற்றிவிட்டது, துன்புறுத்துகிறது என்ற காரணத்தால் வெறுப்படைந்து துக்கத்திலாழ்ந்த பக்தர்கள் பலரை நாம் காண்கிறோம். இத்தகைய மூட பக்தர்களுக்கு தெய்வ பக்தியே ஒரு பாரமாகும். வேதாந்தத்தைத் தவருகப் புரிந்துகொள்ளும் சமூகம் செய்வது தற்கொலைக்கு ஒப்பாகும்.

''உதாசீன'' பாவத்தால் ஒருவன் மனச் சக்தியைச் சிக்கனப் படுத்தவேண்டும். மானிட வாழ்வில் சில்லறை அசௌகரியங்கள் இருப்பது இயல்பு. அவற்றை மிகைப்படுத்தி அவற்றின்றும் தப் பிக்க முயல்வதால் ஆயுள் முழுவதும் துன்பமே மிஞ்சும். இத் தகைய அஸௌகர்யங்களை பொருட்படுத்தாமலிருப்பதே உதாசீனபாவம்.

துயரமற்றவனுய் (நடுக்க மற்றவனுய்): ஆசையின் வசப் பட்ட ஒருவனுக்கு அது நிறைவேருமல் போய்விடுமோ என்ற பயமும் நடுக்கமும் ஏற்படுகிறது. ஒரு உண்மையான சாதகனுக்கு இத்தகைய பயமும் கலக்கமும் ஏற்படாது.

காம்ய கர்மங்களைத் துறந்தவனுய் (ஸர்வா—ரம்ப பரித்யாகி): ''ஆரம்பம்'' என்ருல் கர்மத்தைத் ''தொடங் குவது''. ''கர்மங்களைத் துறப்பது'' என்ருல் ''செயலின்றி இருப்பது'' என்று பொருளல்ல. இச்சொல்லைத் தவருக மொழி பெயர்த்ததால்தான் ஹிந்துக்களில் பலர் சோம்பேறிகளாயினர், அதோடு ஹிந்து மதம் சோம்பேறித்தனத்தையே போதிக்கிறது என்று பலர் கிண்டலும் செய்தனர்—இவர்கள் அதிலுள்ள ஆழ்ந்த கருத்தைக் காணத் தவறியவர்கள். ஒரு செயலைத் தொடங்கும்

போது இன்ன லட்சியத்தையடைவதற்காக இதை நான் செய்கிறேன் என்ற வலுவான அகங்கார உணர்வே ஒருவனுள் இருக்கும். ஆனால் ப்ரம்ம ஸித்தியை நாடுபவன் உலகில் செயல்படும்போது இந்த அகங்கார உணர்வை அறவே துறக்க வேண்டும்.

வாழ்வில் நிகழும் எந்த கருமமும் மற்றதையுமே சாராமல் நடவாது. கூர்ந்து நோக்கினால் நமது கருமங்கள் யாவும் இவ்வுலகிலுள்ள விஷயங்களாலும் சூழ்நிலைகளாலுமே தொடங்கப்பட்டு, ஆளப்பட்டு, நடத்தப்படுகின்றன. இவற்றைத் தவிர்த்து யாராலும் எந்த கருமத்தையும் நிறைவேற்ற முடியாது. 'ஸத்தியத்தை' நாடும் பக்தன், தான் ஈஸ்வரனின் கையில் ஓர் ஆயுதமேயன்றி வேறல்ல என்றுணர்ந்த வண்ணமே இவ்வுலகில் செயல்படுவான்.

இத்தகைய ஆறு குணங்களையும் படைத்த பக்தன் ''எனக்குப் பிரியமானவன்.''

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி நசோசதி ந காங்க்ஷதி
சுபாசுப பரித்யாகீ பக்திமான்ய: ஸ மே ப்ரிய: 12:17

மகிழ்தலும் வெறுத்தலும், துன்புறுதலும், அவாவுறுதலுமின்றி, நன்மை தீமைகளைத் துறந்த பக்தனே எனக்குப் பிரியமானவன்.

ஒரு உண்மையான பக்தன், சுக துக்கங்களைத் தரும் மன—புத்தி—உலகினின்றும் உயர்ந்து தன் சுய இயல்பாகிய ஆத்மானுபூதியிலேயே நிலைத்திருப்பவனாவான்.

மகிழ்தலின்றி: கிடைத்தற்கரிய ஒரு பொருளை மிகவும் விரும்பிப் பெறும்போது ஏற்படும் ஒரு நிறைவுணர்ச்சியே மகிழ்தல்.

வெறுத்தலின்றி: வேண்டாத ஒரு பொருளோ சூழ்நிலையோ நம்மையடையும்போது நமக்குண்டாகும் உணர்ச்சியே வெறுப்பு. ஆனால் ஒரு உண்மையான பக்தனுக்கோ விரும்பக் கூடிய பொருளுமில்லை, வேண்டாதது வந்து விடுமோ என்றஞ்சும் சந்தர்ப்பமும் கிடையாது.

துன்புறுதலும் அவாவுறுதலுமின்றி: நாம் நேசிக்கும் பொருள் நம்மை விட்டுப் பிரியும்போதும், விரும்பிய பொருளைப் பெற முடியாமற் போகும்போதும் நமக்கு துக்கம் உண்டாகிறது. ஒரு ஞானி நேசிக்கும் வஸ்து ஆத்மன், அதனின்றும் அவன் வேறானவனல்ல; ஆகையால் வேறு எந்த பொருளிலும் அவனுக்குப் பற்றுதல் கிடையாது. தன்னுள்ளேயே இருக்கும் ஆத்மனை அடைந்த பின் அவன் அடைய வேண்டியது வேறெதுவு

மில்லை; ஆத்மனே எல்லாமானதால் அவன் சகலத்தையும் அடைந்தவனுகி விடுகிறுன்.

நன்மை தீமைகளைத் துறந்து: உலக நிகழ்ச்சிகள் இரு வகைப்படும். ஒன்று சுகத்தைத் தருவது, மற்றது துக்கந் தருவது. இந்த இரட்டைகளுக்கு வசப்படக்கூடிய மனம்—புத்திக்கப்பாலுள்ள ஆத்மனின் சக்தியைப் பெறுபவனை உலக நிகழ்ச்சிகள் ஒன்றும் செய்ய முடியாது.

''மகிழ்தலுமில்லை வெறுத்தலுமில்லை, துன்புறுவதுமில்லை, அவாவுறுதலுமில்லை, நன்மை தீமைகளைத் துறந்து'' —இச்சொற்களை வாக்கியார்த்தப்படி பார்த்தால் செத்த பிணம்தான் ஞானி என்று நினைக்கத் தோன்றும். வேதாந்த வாக்கியங்களில் லட்சியார்த்தத்தையே நாம் காண வேண்டும் என்பதற்கு இது ஒரு சிறந்த உதாரணம். ஈசுவர சைத்தன்யத்தை அடையும் ஒரு உண்மையான பக்தன், தன் வாழ்வை இந்த லட்சியார்த்தத்தின் படியே வாழ்கிறுன்—''அவன் எனக்குப் பிரியமானவன்''. என்கிறுர் பார்த்தசாரதி.

இந்த சுலோகம் உண்மையான பக்தனுக்குரிய மேலும் ஆறு குணங்களைக் கூறும் நாலாவது பகுதியாகும். இவ்வாறு இதுவரை இருபத்தாறு இயல்புகளைக் கண்டோம். மேலும்:

ஸம: சத்ரௌ ச மித்ரே ச ததா மானுபமானயோ:
ஸீதோஷ்ண ஸுகதுக்கேஷு ஸம: ஸங்க விவர்ஜித: 12:18

துல்ய நிந்தாஸ்துதிர் மௌனீ ஸந்துஷ்டோ யேன கேனசித்
அநிகேத: ஸ்திரமதிர்பக்திமான்மே ப்ரியோ நர: 12:19

18. பகையிலும், நட்பிலும், அப்படியே மான அவமானத்திலும், குளிர்—வெப்பம் சுகதுக்கத்திலும் சமமாக இருக்கும் பற்றற்றவன்.

19. புகழிலும், இகழிலும் சமமாயிருப்பவனுன மௌனி, கிடைத்ததில் திருப்தியடைபவன் இருக்க இடந் தேடாதவன், உறுதியான உள்ளமுடையவன்—பக்திமானுகிய அம்மனிதன் எனக்குப் பிரியமானவன்.

பகையிலும் நட்பிலும் சமமாக இருத்தல்: ஒருவனை நண்பனுகவோ பகைவனுகவோ கருதுவது நம் மனமே; நம் இதயத்தில் எழும் இந்த உணர்ச்சியை நமது மனம் கருதும் விதமே நட்பும் பகையும். ஒரு ஞானி தனது மனம் போடும் எடையால் உபாதியடைவதில்லையாதலால் நட்பிலும் பகையிலும் அவனது மனுேபாவம் சமமாயிருக்கிறது.

அப்படியே மான அவமானத்திலும்: ஒரு சூழ்நிலையை

மான—அவமானமாகக் கருதுவது புத்தி. புத்தி எத்தகைய சிந்தனு முறைக்குப் பழக்கப்பட்டுள்ளதோ அதைப் பொருத்ததே இந்தக் கருத்து. அவமானமானது என்று கருதும் அதே விஷயத்தை அதே நபர் வேறு இடம், சமயத்தில் மானமுள்ளதாகக் கருதவும் செய்கிருன். இவை யாவும் புத்தியின் வெவ்வேறு அலைகளே; அந்த அலைகளின் வசப்பட்டவனே அவற்ருல் பாதிக்கப்படுவான்.

குளிர்—வெப்பத்தில் சமமாயிருப்பவன்: குளிர், வெப்பத்தை உணர்வது சரீரம். நைட்ரிக் அமிலம் தயாரிக்கும் முறையை நினைவு கொள்வதால் என் ''எண்ணங்கள்'' அரிக்கப்பட்டு விடாது. தணலின் அழகை உணர்ந்து ரசிப்பதால் என் ''மனம்'' வெந்து விடாது. வட துருவத்திற்குச் செல்வதால் என் அறிவோ, நேசிக்கும் திறமையோ மரத்துப் போகாது; அல்லது ஸஹாரா பாலைவனம் சென்ருல் அது ஆவியாகி விடாது. சீதமும் உஷ்ணமும் சரீரத்தைதான் பாதிக்கும். வேதாந்தத்தில் ''சீதோஷ்ணம்'' என்ற மரபுச் சொல் (idiom) சரீரத்திற்கு ஏற்படும் சுக துக்க அனுபவங்களையே குறிக்கும்.

மேற்கூறிய மூன்று சொற்ருெடர்களில், வாழ்வில் ஏற்படும் சரீர, மன, புத்தி—அனுபவங்கள் யாவுமே அடங்கும். ஒரு பக்தன் மூன்ருலும் கலக்கமடைய மாட்டான், ஏனெனில் அவன் ''பற்றற்றவன்.'' சரீர—மன புத்தியாகிய கரணங்களோடு உபாதியடைவதால்தான் தற்செயலாய் நிகழும் நிகழ்ச்சிகளின் வெறியாட்டங்களுக்கேற்ப நாமும் ஆடுகிருேம். இந்த கோசங்களினின்றும் பிரிந்திருப்பவனே அவற்றை வென்ற ஞானி.

புகழிலும் இகழிலும் சமமானவன்: அவன் இகழ்ச்சியே கிட்ட அண்டாதவனே அல்லது அதைப் புரிந்து கொள்ளுமளவிற்கு புத்தியற்றவனே அல்ல. எல்லாம் கடந்து நிற்கும் பேரானந்த ஆத்மானுபூதியில் திளைக்கும் சிறந்த பக்தனுக்கு இகழோ, புகழோ, ஒரு பொருட்டேயல்ல. நேற்று தூற்றப்பட்டவன் இன்று புகழ்மிக்க தலைவனுகிருன், இன்று புகழப்பட்டவன் நாளை இகழப்படுவான் என்பதை அவன் நன்கறிவான். புகழும், இகழும் அதை வெளியிடுபவர்களின் விருப்பத்தையே பொறுத்தது.

மௌனி: ஞானத்தை நாடுபவன் வாயால் மட்டுமின்றி மனதாலும் மௌனமடைகிருன். அக மௌனமே உண்மையான மௌனம். வாயை மட்டும் பொத்திக்கொண்டு மனத்தை அவிழ்த்து விடுபவர்கள் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குத்தான் போக வேண்டி வரும். உண்மையான மௌனம் எவ்வளவு மௌனமானது என்பதை மௌனமாக இருந்து பார்த்தால் தெரியும்.

கிடைத்ததில் திருப்தியடைபவன்: கேளாமல், எதிர்

பார்க்காமல், தானுகவே கிடைப்பதில் திருப்தியடைவதே ஆத்ம விசாரணையில் தீவிரமாக ஈடுபட்டோரின் கொள்கையாகும். வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதென்று ஆரம்பித்தால் அதற்கு முடிவே இல்லை, ஏனெனில் மனம் தேவைகளைப் பெருக்கிக் கொண்டே போகும் தன்மையுடையதாகும். கிடைத்ததில் திருப்தியடையாவிட்டால் ஆத்ம விசாரணைக்கு நேரமே இல்லாமற் போகும். மகாபாரதத்தில் (சாந்தி பர்வம்—மோக்ஷ தர்மம்—*246—12*) ''கிடைத்ததை உடுத்தி, கிடைத்ததை உண்டு, கிடைத்த இடத்தில் படுப்பவனையே தேவர்கள் பிராம் மணன் என்பர்'' என்று கூறப்படுகிறது.

இருக்க இடந்தேடாதவன்: வீடு என்பது ஒருவனை, வெயில், மழை, குளிர் இவற்றினின்றும் காக்க உதவும் கட்டிடம். ஆனுல் அந்தக் கூரையினடியில் வாழ்வதால் மட்டும் அது இல்ல மாகி விடாது; ரயில் நிலையத்தின் தங்கும்—அறைகள் வீடாகி விடாது. அந்த கட்டிடம் தன் வசத்திலிருந்து, தனக்கு சுகத்தை யும் தந்தால்தான் அதை இல்லம் என்கிறேம். ஒரு உண்மையான பக்தனுக்குப் புகலிடமாகும் வீடு ''எங்கும் நிறைந் திருப்பதே''யாகும். அதனுல்தான் அவன் ''இருக்க இடந்தேடா தவன்'' எனப்படுகிறுன். அவன் வீடு போன்ற உபாதித் தளையுணர்விலிருந்து எப்போதும் விடுபட்டிருக்கவே முயல்பவ னுவான்.

உறுதியான உள்ளமுடைய இத்தகைய பக்திமானே ''எனக்குப் பிரியமானவன்.'' கீதாச்சாரியானைப் பொறுத்த வரை யில் இந்த நன்னெறிகளை வாழ முயல்பவனே ''நரன்.''

இந்த ஐந்தாவது பகுதியோடு கிருஷ்ண பகவான் சொல்லிய ஒரு பக்தனின் முப்பத்தாறு பேரியல்புகள் முடிவடைகின்றன—புறவுலகோடு அவனுக்குள்ள உறவுமுறை, அவனது மனேபாவம், அவனது புத்தியின் தன்மை ஆகியவை இவற்றுள் அடங்கும்.

யேது தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே
ச்ரத்ததானு மத்பரமா பக்தாஸ்தேதீவ மே ப்ரியா:

*12:20*

ச்ரத்தையுடைய எந்த பக்தர்கள் என்னையே கதியாகக் கொண்டு அமிர்தத்தைப் போன்ற இந்த தர்மத்தை இங்கு கூறியபடி கடைபிடிக்கிறுர்களோ அவர்களே எனக்கு மிகவும் பிரியமானவர்கள்.

அமிர்தத்தைப் போன்ற இந்த தர்மம்: இதுவரை கூறிய தெல்லாம் ''ஸநாதன தர்மம்'' எனப்படும். ஆத்மானு பூதியை சரீர, மன, புத்தி மட்டங்களில் வாழ்வதே ஒரு ஹிந்துவுக்கு நிறை வாழ்க்கையாகும். ஒரு ஹிந்து இதைப் புரிந்துகொண்டு, சாஸ்

திரங்களைப் படித்து, விளக்கிக் கூறினால் மட்டும் போதாது. அவற்றை அவன் வாழ்ந்து ''ஸித்தி''யடைய வேண்டும். அதனால் தான் பகவான் ''ச்ரத்தையுடைய'' என்கிறார். ''ச்ரத்தை'' என்றால் ''ஆன்மீகக் கருத்துக்களை சுய அனுபவத்தின் மூலம் வாழ்வில் கடைபிடிக்கும் திறனைக் குறிக்கும்.

அந்த பக்தர்களே ''எனக்கு மிகவும் பிரியமான வர்கள்'': இந்த முடிவுரையே ஆறாவது பகுதியாகும். இதில் மேற்கூறிய முப்பத்தாறு பேரியல்புகளோடு புதிதாக எதையும் சேர்க்கவில்லையாயினும் பகவானின் பேரன்பை அடைவதற்கு பகவானே தரும் உறுதிமொழியாகிறது இது.

இவ்விதமாக பகவத் கீதை என்ற உபநிஷத்தும்
பிரம்மவித்தையுமாகிய யோக சாஸ்திரத்தில்
கிருஷ்ண அர்ஜுன உரையாடலில்
பக்தி யோகம் என்ற பனிரண்
டாம் அத்தியாயம் முற்றும்.

இந்த அத்தியாயம் பக்தி யோகம் என்றழைக்கப்பட்டா லும், அதைப் படித்து வாழ்வதன் மூலமாகத்தான் நாம் பகவா னின் உண்மையான பக்தியைப் பெற்று, பக்தியைப் பற்றி இன்று நிலவும் தவறான கருத்துக்களையும் நீக்க முடியும். பக்தி யோகம் என்றால் வெறும் உணர்ச்சியால் வெடிப்பதல்ல, ஹிஸ்டீரியா என்ற மனப் பிராந்தி நோயால் பீடிக்கப்பட்டவனைப் போல் அலறுவதல்ல. நமது சரீரம் மனம், புத்தி அனைத்தையுமே அர்ப்பணிப்பதன் மூலமாகவும் 'அவனோடு' ஒன்றிய நிலையில் பெறும் புதிய சக்தியாலும் மனிதன் மலர்ச்சியடைவதே பக்தியோகம்.

# க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்

## 13

### முன்னுரை

பகவத் கீதையிலேயே மிகவும் பிரசித்திபெற்ற அத்தியாயங்களுள் ஒன்ருகிய இது, விஷய, கோசாதி உபாதிகளற்ற ஆத்மனைப் பற்றி, ஏறக்குறைய நேரடியான சுயானுபவமாக, சீடனுக்கு விளக்குகிறது. நித்யமான, அரூபமான புருஷனை தியானிக்கும் விதத்தை இது பூரணமாக விளக்குகிறது.

கிருஷ்ணனின் பேரன்பு, அர்ஜுனனின் பலஹீனங்கள் ஆகிய மானிடப் பண்புகளின் மணம் கமழும் அழகிய கவிதா நயம் என்ற திரையைப் போர்த்தி பகவத் கீதையின் இயல்பான எழிலை மறைக்க எவ்வளவுதான் முயன்ருலும், இந்த வேதாந்தப் பாடல் ரிஷிகள் அளித்த உயர் ஞானத்தையே இடி முழக்கம் செய்கிறது. உள்ளபடியே அதிலுள்ள கருத்து வளர்ச்சி மிகவும் நியாயமாகவும், விஞ்ஞான ரீதியாகவும் அமைந்துள்ளது. அதிலுள்ள கருத்துக் கோவையும் முறையாக வளர்ந்து வருகிறது.

இந்த அத்தியாயத்தின் மூலக் கருத்துகள் ஞான விஞ்ஞான யோகத்திலும் (அத். VII), அக்ஷரப்ரஹ்ம யோகத்திலும் (அத். VIII) உள்ளன. இடையிலுள்ள 9, 10, 11, 12–வது அத்தியாயங்கள் அர்ஜுனன் எழுப்பிய சந்தேகங்களைத் தீர்ப்பதற்காக ஏற்பட்டன. ஆனால் வேதாந்தியான கிருஷ்ணன், மறக்காமல் அக்ஷரப்ரம்ம யோகத்தை இங்கே மேலும் விளக்குகிறார். தனது சீடனின் ஐயத்தை ஓரளவு போக்கி அவனை சமாதானப்படுத்தி விட்டு மீண்டும் அமைதியாகத் தனது உரையாடலை இசைக்கத் தொடங்குகிறார்.

கீதையை, மஹாவாக்யத்திற்கேற்ப மூன்று பகுதிகளாகப் பிரிப்பதுண்டு. ''தத் த்வம் அஸி'' –முதல் ஆறு அத்தியாயங்கள் ''த்வம்'' பத விளக்கத்தையும் இரண்டாவது ஆறு அத்தியாயங்கள் ''தத்'' பத விளக்கத்தையும், கடைசி ஆறு அத்தியாயங்கள் 'அஸி' பத விளக்கத்தையும் தருகின்றன.

சரீர கோசங்களினூடே இயங்கும் புருஷனே உயிர். கோசங்களை ஆடையாக அணிந்திருக்கும் ''அவனே'' (தத்) ''நீ'' (த்வம்). ஆகையால் மனிதன் தன் கோசங்களைக் கழற்றிவிட்டால், அவனே நித்திய, எல்லையற்ற பரம புருஷன்.

அவ்வாறு கோசங்களைநீக்குவதற்கு அவற்றைப் பற்றிய அறிவு நமக்கு அவசியமாகிறது. ஜடமான அந்த உறைகளையும் (க்ஷேத்ரம்) அவற்றை அறிபவனாகிய புருஷனையும் (க்ஷேத்ரக்ஞன்) பற்றிக் கூறுவதே இந்த அத்தியாயம்.

அந்த கோசங்களைக் கழற்றும் முறைதான் தியான முறை. இதை அத். V, VI–ல் விளக்கமாகக் கண்டோம். தியானத்திலமர்ந்து ஒருங்கிணைந்த மனம் புத்தியைக் கொண்டு இனி என்ன செய்வது? நம்மை நாமே ப்ரம்மமாக எண்ணிக் கொள்வதா? இந்த அத்தியாயம் விளக்கும்.

சடக் கரணங்களும் அவை நுகரும் விஷய உலகமும் சேர்ந்து ''க்ஷேத்ரம்'' எனப்படும். இந்த க்ஷேத்ரத்தை ஒளிர்வித்து அதோடு ஒன்றியியங்குவதுபோல் தோன்றும் சைதன்யமே ''க்ஷேத்ரக்ஞன் எனப்படும். அறியக்கூடியவற்றின் களத்திலிருக்கும் வரையில்தான் அறிபவன் எனப்படுபவன் ஒருவன் இருப்பான்!

ஓட்டுகிற வரையில்தான் ஒருவன் டிரைவர், நீந்திக் கொண்டிருக்கிற வரையில் தான் நீச்சல் வீரன். மற்ற சமயங்களில் இவர்களும் சாதாரண மக்களே. ஒரு குறிப்பிட்ட களத்தில் இயங்கும் போது அந்தக் களத்தின் தன்மையைப் பொறுத்து அவனுக்கு ஒரு குறிப்பிட்ட அந்தஸ்து ஏற்படுகிறது.

தூய சைதன்யம் தனது உபாதிகளின் (conditionings)

மூலமே பன்மையான உலகை நுகரும்போது க்ஷேத்ரக்ஞனுகிறது. அறிபவனுகிவிட்டதால் அவன் சுக துக்கம், வெற்றி—தோல்வி, அமைதி—குழப்பம், பொருமை, பயம் இன்னும் இத்தியாதி கோடிக்கணக்கான நாசமிக்க புரட்சிப் புயல்களையும் அனுபவிக்கிருன். இவ்விதமாக ஸம்ஸார துக்கங்களனைத்தும் ஜீவனின் (க்ஷேத்ரக்ஞனின்) தனிப் பெருஞ்செல்வமாகி விடுகின்றது.

தியாகத்தின் மூலம் ஒருவன் உடல் முதலிய கருவிகளினின்றும் பிரிந்திருக்க முடியும். இவ்வாறு விவேகத்தால் க்ஷேத்ரத்திலிருந்து க்ஷேத்ரக்ஞன் பிரிந்திருந்தால் துக்கமயமான அனுபவங்களைத் தரும் அந்தக் களத்திலிருந்து விடுபட முடியும்; துக்கங்களை ''அனுபவிப்பவன்'' என்ற நிலை மாறி அந்த க்ஷேத்ரக்ஞன் பூரண ஞானத்தை அனுபவிப்பவனுகி விடுவான்; பூரண ஞான மயமாகி விடுவான்.

கணித முறையில் பார்த்தால், அறிவே அறிபவனுகி அறியப்பட்ட களத்தில் அல்லல்படுகிறது. அறிபவனிடமிருந்து (க்ஷேத்ரக்ஞனிடமிருந்து), அறியப்படும் களத்தை (க்ஷேத்ரத்தை) நீக்கி விட்டால் தூய அறிவாகி விடுகிறது—அதுவே பூரணமானது, ஆனந்தமயமானது. இந்த அத்தியாயத்தைக் கவனமாகப் படித்தால், நம்முள்ளேயே இருக்கும் விசாலமான ஆன்மீக அரங்கத்திற்குச் செல்லும் ரகசிய வாயில்களை அது நமக்குத் திறந்து விடும்.

அர்ஜுன உவாச—

ப்ரக்ருதிம் புருஷம் சைவ க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞமேவச
ஏதத் வேதிதுமிச்சாமி ஞானம் ஞேயம் ச கேசவ

13:1

அர்ஜுனன் கூறியது:

கேசவா! பிரக்ருதி புருஷன், க்ஷேத்ரம், க்ஷேத்.ரக்ஞன், ஞானம் ஞேயம் இவற்றை அறிய நான் விரும்புகிறேன்.

கைப் பிரதிகளில் பலவற்றில் இந்த சுலோகம் காணப்படுவதில்லை. சிலவற்றில் இது அர்ஜுனன் எழுப்பிய சந்தேகமாகக் காணப்படுகிறது.

பிரக்ருதி, புருஷன்: சாங்கிய சாஸ்திரத்தில் பிரக்ருதி என்பது ஜடமான கரணங்(கருவி)களையும், புருஷன் என்பது அவற்றை (க்ஷேத்ரத்தை) இயக்கும் சேதனமான 'ஸத்'தையும் குறிப்பிடுகிறது. சுருங்கக் கூறின் பிரக்ருதி என்பது ஜட வஸ்து புருஷன் என்பது ஜீவன். ஜீவன் ஜடவஸ்துவின் மூலம் இயங்கும்

போதுதான் தோற்றமாகும், இல்லையேல் அது தானகவே தோற்றமளிக்காது. புருஷன் பிரக்ருதியோடு இணையும்போது தான் எண்ணற்ற நல்லதும் தீயதும் அனுபவமாகின்றன. மின் சாரம் தானகவே ஒளியாகத் தோன்ருது, மின் விளக்கோடு இணையும்போதுதான் ஒளியாகத் தோன்றுகிறது.

*க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன்:* இந்த அத்தியாயத்தின் முன்னுரையிலேயே இதை விளக்கினேம். அறிவுத் தத்துவ மானது அறியப்படும் களத்தில் (க்ஷேத்ரம்) இயங்கும் போது பெறும் நிலையே களத்தை அறிபவன் *(Knower-of-the-field-க்ஷேத்ரக்ஞன்)* எனப்படுகிறது. இந்த க்ஷேத்ரக்ஞனிடமிருந்து க்ஷேத்ரத்தை நீக்கிவிட்டால் ''அறிபவனே'' அறிதலாகிய செயல் நீங்கிவிட்ட ''தூய அறிவாகி'' விடுகிருன்.

*ஞானம், ஞேயம்:* விஷயங்கள் பற்றிய அறிவு எல்லா ஜீவ ராசிகளின் வாழ்க்கையிலும் ஓயாமல் அனுபவமாகிறது. ''அறிதலின் பொறியமைப்பையும்'' ''அறிய வேண்டிய உண்மை யான வஸ்துவையும்'' ஆராய்வது சாதகர்களுக்குப் பயன்படும்.

ஸ்ரீ பகவானுவாச

இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்ய பிதீயதே
ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரக்ஞ இதி தத்வித: 13:2

*ஸ்ரீ பகவான் கூறியது—*

*குந்தி புத்திரனே! இந்த சரீரம் க்ஷேத்ரம் எனப்படு கிறது. இதை அறிகிறவனை க்ஷேத்ரக்ஞன் என்று ஞானிகள் கூறுகிருர்கள்.*

(பூர்ணத்வம் என்பது சுயானுபவமாகும். தன்னக விசாரணையே ஒருவனை ஆத்மானுபூதிக்கு இட்டுச் செல்லும் ''வழி''யாகும் என்று ஹிந்து சாஸ்திர ஞானிகள் ஏகோபித்துக் கூறுகின்றனர். மனிதனின் அக அமைப்பை வேந்தாந்த முறையில் அழகாகக் கூறுபோட்டு ஆராய்ந்து, ஆத்மனை பாதிக்கும் ஜடவுறைகளை விளக்குகிறது இந்த அத்தியாயம். பொய்யான ஜடவுறைகள் வேறு, அதற்குக் கருவாயுள்ள புருஷன் வேறு என்றுணர்வதுதான், சாதகன், ''தான் புருஷனன்றி வேறல்ல'' என்றுணர்வதற்கு ஒரே வழியாகும்.

''விச்வனே'' விழிப்பவனே ஒரு குறிப்பிட்ட மன அமைப்பையடையும்போது ''தைஜஸன்'' கனவு காண்பவன் ஆகிருன். கனவு தொடரும் நேரம் வரையில் ''தைஜஸனுக்கு'' அது நிஜமாகவே இருக்கிறது. ஆனல் அந்த ''தைஜஸன்'')

விழித்தவுடன் விழிப்பு நிலேயின் பொய்யுருவமே கனவு, அந்த உருவத்தைத் தோற்றுவித்ததும் அந்த ''தைஜஸனின்'' மனமே என்பதை உணர்ந்து விடுகிருன். அதுபோலவே ''புருஷன்'' தனது சுயநிலேயை அடையும்போது இந்தப் பன்மையான உலகமும் நிஜமற்றதாகிவிடுகிறது. 'அது' தனது முழு முதல் மெய் நிலேக்கே மீண்டுவிடுகிறது, அந்த நிலேயில் (ஜடப்) பொருள்கள் மித்தையாகிவிடுகின்றன.

ஆகவே, வேதாந்த நோக்கில், உயிருள்ள ஒரு மனிதன் இரண்டு அம்சங்களாலானவன்—ஒன்று அசேதமான, ஜடமான, பொருள் உறைகள்; மற்றது சேதனமான, உயிருள்ள சைதன்யம். இவ்விரண்டையுமே இந்த ஸ்லோகம் விளக்குகிறது.

''இந்த சரீரம் க்ஷேத்ரம் எனப்படுகிறது'': சக்தி இயங்குவதற்கு ஒரு யந்திரம் வேண்டும், அப்பொழுதுதான் அது கரும மாகவும் மனிதனுக்கு சேவையாகவும் மாற முடியும். நீராவிச் சக்தி ரயிலே இழுக்க வேண்டுமானுல் அதற்குத் தக்க எஞ்ஜின் வேண்டும். மின்சாரம் காற்றைத் தருவதற்கு மின்விறிசி தேவை. சாதி கரணங்களினூடே ஜீவன் இயங்குவதால் வ்யஷ்டித் தோற்றம் ஏற்படுகிறது—இந்த கோசாதி காரணங்களேயே கிருஷ்ணன் க்ஷேத்ரம் என்கிருர். இது உயிரற்றது.

''இதை அறிகிறவன் க்ஷேத்ரக்ஞன்'' எனப் படுகிருன்'': க்ஷேத்ரம் உயிரற்றது, ஜடமானது என்ருலும் அதனுள் ஜீவன் இருக்கும் வரையில் அது இயங்குகிறது, ''அறி கிறது''. ''க்ஷேத்திரத்தில்'' இயங்கும் இந்த ''அறியும் தத்துவமே'' ''க்ஷேத்ரபோக்தா''. அவனே ''அறிபவன்'' என்னும் அகங்காரம்.

அறியும் உள் தூண்டுதல் உயிருள்ள ஜீவராசிகளனைத் திற்கும் உண்டு. அதன் அளவு ஜீவராசிக்கு ஜீவராசி மாறு பட்டாலும், அந்த அறியும் தூண்டுதல் கரணங்களின் மூலம் தோற்றமாவதைக் கொண்டுதான் ஜீவனே நாம் அறிகிருேம். கரணத்தினூடே இயங்கி வாழ்க்கையின் வியாபாரத்தை நடத்தும் தனித்தன்மை படைத்த அந்த ''அறிபவன்'' கரணத்தை நீத்தபின் அக்கரணம் இறந்தது என்று கருதுகிருேம். இவ்வாறு அறிபவனே க்ஷேத்ரக்ஞன்.

''...என்று ஞானிகள் கூறுகிருர்கள்'': க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞனேப் பற்றிக் கூறிய இந்த விளக்கம் வெறும் மான சீக அனுமானங்களல்ல, அநாதிகாலந்தொட்டு சிறந்த ஞானிகள் கூறிவந்த அனுபவங்களே அவை, என்று கிருஷ்ண பகவான் நமக்கு உறுதியளிக்கிருர். சுருங்கக் கூறின் பிரக்ருதியின் ராஜ்ய மாகிய பௌதிக உலகமே க்ஷேத்ரம்; இதனுலான கரணங்களி

ஞூடே இயங்கி நுகர்தல், உணர்தல் சிந்தித்தல் ஆகியவற்றின் மூலம் அந்த க்ஷேத்ரத்தை அறிபவனே க்ஷேத்ரக்ஞன்.

இவற்றைப் பற்றி மேலும் காண்போம்:

க்ஷேத்ரக்ஞம் சாபிமாம் வித்தி
ஸர்வக்ஷேத்ரேஷு பாரத:
க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோர் ஞானம்
யத்தத் ஞானம் மதம் மம

13:3

எல்லா க்ஷேத்ரங்களிலுமுள்ள என்னை க்ஷேத்ரக்ஞனு கவே அறிக பார்த்தா! க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞனைப் பற்றிய அறிவே ஞானம் என்பது என் கொள்கை.

க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் எதெது என்று முந்தைய சுலோகத்தில் குறிப்பிட்டபின் இங்கு, ''எல்லா க்ஷேத்ரங்களிலு முள்ள க்ஷேத்ரக்ஞன் நானே'' என்று நம்மைத் தடுமாறச் செய்யும் வண்ணம் அறிவிக்கிருர் பகவான். க்ஷேத்ரங்கள் பலவா யினும் அறிபவன் ஒன்றே என்ருல், பன்மைகள் யாவும் ஜட கோசங்களுக்கு மட்டுமே உரியது. அவற்றுள் வீற்றிருக்கும் ஜீவன் (*Life*) அனைத்திலும் ஒன்றே என்ருகிறது. சர்வகதமான, ஏக மான, தர்க்கத்திற்கப்பாற்பட்ட (*Transcendental*) ஸத்தியம் ''நானே'' என்று தன்மையில் கூறப்படுகிறது—ஏனெனில் ஒவ் வொரு சாதகனும் அதைத் தன்னுள்ளேயே இருப்பதைத் தானே அறிந்துகொள்ளவேண்டும், ''ஸோஹம்'' (அதுவே நான்).

கிருஷ்ணபகவான் ஒரு யோகாரூட நிலையில் கீதையைக் கூறினர். (மகாபாரதத்தில், அர்ஜுனன், ஹஸ்தினபுரத்திற்குத் திரும்பியபின் ஒருநாள் கீதையை மீண்டும் கூறும்படி கிருஷ்ணனைக் கேட்டான். அதற்குக் கிருஷ்ணர், ''போர்க் களத்தில் யோகாரூட நிலையில் கூறிய வண்ணம் அதே திறமை யோடு இப்பொழுது என்னல் கூறமுடியாது'' என்ருராம்). சர்வ வியாபியான (எங்கும் நிறைந்திருக்கும்) ஆத்மாவோடு ஒன்றிய வண்ணம் கீதையைக் கூறினர் பகவான். 'உலகிலுள்ள சகல மின்விளக்குகளிலும் ஒளிரும் சக்தி நானே'' என்று மின்சாரமே கூறுவது போன்றது இது.

அநித்யமான, மாறக்கூடிய, எல்லைக்குட்பட்ட, ஜட வஸ்து வாகிய க்ஷேத்ரத்தையும், நித்தியமான, எல்லையற்ற, சேதனமான க்ஷேத்ரக்ஞனையும் பற்றி அறியும் அறிவே உயர்ஞானம் என்று கிருஷ்ணர் கருதுகிருர். ''க்ஷேத்ரம்'' என்பது நுகர்வதற்கு ஏது வான கரணங்களையும், நுகரப்படும் பொருள்களையும் கொண்ட பௌதிகப் பரப்பாகும். ''க்ஷேத்ரக்ஞன்'' என்பது அந்த க்ஷேத்

ரத்தின் செயல்களை அனுபவிப்பவனாகும். தனிப்படுத்திக் கொண்ட அகங்காரத்தால் ஏற்பட்ட ஸம்ஸார துக்கத்திலிருந்து விடுபடுவதற்கு இந்த க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞன் பற்றிய ஞானம் மிக அவசியமாகும். அதை இனி காண்போம்.

தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச யத்விகாரி யதஸ்ச யத்
ஸ ச யோ யத்ப்ரபாவஸ்ச தத்ஸமாஸேன மே ச்ருணு

13:4

அந்த க்ஷேத்ரம் எது, எத்தன்மையது, என்ன பிரிவுகளையுடையது, எதினின்று உண்டானது, அந்த க்ஷேத்ரக்ஞன் யார், அவன் மகிமை என்ன? —இவற்றைச் சுருக்கமாகக் கூறுகிறேன் கேள்.

''எத்தன்மையது?'': ஆத்மனின் குணங்களைக் கூறி அதை வலியுறுத்திவிடுவதால் மட்டும் சாதகனுக்குப் பயனில்லை. பிரச்சினைகளின் காரணத்தையறியாமல் அவற்றைத் தீர்க்க முடியாது. நம்மைச் சுற்றி நாமே புறநிலைப்படுத்தி ஏற்படுத்தியிருக்கும் ஜடவுலகைப் பற்றியும் பொருள்களுடே இயங்கி அவற்றை நாம் நுகர்ந்து, உணர்ந்து, சிந்திக்கும் வழிமுறைகளைப் பற்றியும் நாம் ஆழ்ந்து ஆராயாவிடில் நம்மை நாமே ஏமாற்றிக் கொண்டவர்களாவோம். எதிரியின் போர்த் தந்திரத்தைப் பற்றிய செயலறிவாவது இருந்தால்தான் அதை நாம் முறியடித்து வெற்றிவாகை சூடமுடியும்—இது போன்றதுதான் க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞன் பற்றிய அறிவும்.

உடற்கூறு, இயக்கம், மனோ தத்துவம் ஆகிய இயற்கை விஞ்ஞானங்கள் யாவும் நமக்குப் பெரிதும் பயனளிக்கும். இவற்றின் மூலம் நாம் ஆன்மீகப் பாதையை, குறிப்பாக 'ஞான மார்க்கத்தை'' அறியலாம். இதனால்தான் கிருஷ்ண பகவான் போர்முனையிலுங்கூட 'க்ஷேத்திரம்' பற்றிய ரகசியங்களை அர்ஜுனனுக்கு விளக்க முனைகிறார்.

க்ஷேத்ரம் பற்றிக் கற்றறியும் பொருட்டு சாதகர்களை உற்சாகமூட்டுகிறார் பகவான்; ''கூறுகிறேன் கேள்'' என்கிறார்.

ருஷிபிர் பஹுதா கீதம் சந்தோபிர் விவிதை: ப்ருதக்
ப்ரஹ்ம ஸூத்ர பதைஸ் சைவ ஹேதுமத்பிர் விநிஸ்சிதை:

13:5

(இவ்வுண்மை) ரிஷிகளால் விதவிதமான சந்தங்களில் பாங்காகப் பல வகைகளில் பாடப்பட்டுள்ளது. யுக்தியால் நிச்சய புத்தியைத் தந்து, ப்ரம்மத்தைக் குறிக்கும் பதங்களாலும் (பாடப்பட்டுள்ளது).

இவ்வத்தியாயத்திலுள்ளவை எதுவும் வீண் பேச்சல்ல,

கிருஷ்ணனின் கற்பனை உரைக் கோவையுமல்ல; ''ரிஷிகளால் விதவிதமான சந்தங்களில், பாங்காகப் பல வகைகளில் பாடப் பட்டுள்ளதேயாகும்'' என்று உறுதியளிக்கிறார் கிருஷ்ணன். இவை ''ப்ரம்மத்தைக் குறிக்கும்'' உபநிஷத் வாக்கியங்களில் பொதிந்துள்ள கருத்துக்களேயாகும்.

ரிஷிகள் கூறிய உபநிஷத் வாக்கியங்களை குருட்டு நம்பிக்கை யோடு நாம் மதிக்கிறோம் என்பதைத் தவிர அவற்றை நாம் ஏன் ஏற்க வேண்டும்? அவற்றைப் பாமரர்கள் மீது தேவதைகள் இறங்கி வந்து திணித்துவிட்டுச் சென்றனர் என்றதாலா? பொது வாக மற்ற மதங்கள் இவ்வாறுதான் கருதுகின்றன. அப்படி யல்ல. உபநிஷத் வாக்கியங்கள் யாவும் ''பகுத்தறிவிற்குப் பொருத்தமானவை, உறுதிப்பாடானவை'' என்பதால்தான்.

ஒரு உண்மையைப் பகுத்தறிவிற்கு ஏற்கும் வண்ணம் கூறினால் அதை புத்திசாலியான எந்த சீடனும் ஏற்பான். இப் பொழுது அர்ஜுனன் அத்தகையதோர் சீடனே—பகவான் தொடர்கிறார்.

மஹாபூதான் யஹங்காரோ புத்தி ரவ்யக்த மேவ ச
இந்த்ரியாணி தசைகம் ச பஞ்ச சேந்த்ரிய கோ சரா:
13:6

இச்சா த்வேஷ: ஸுகம் து: க்கம் ஸங்காதஸ் சேதனா த்ருதி:
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன ஸவிகார முதாஹ்ருதம்
13:7

மகாபூதங்கள், அகங்காரம், புத்தி, மூலப் பிரகிருதி, இந்திரியங்கள் பத்து, (மனம்)ஒன்று, இந்திரியார்த்தங்கள் ஐந்து,

விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், உடலமைப்பு, உணர்வு, உறுதி—இவ்விதம் க்ஷேத்ரமும் அதன் தோற்றங் களும் சுருக்கமாகக் கூறப்பட்டன.

இதிலிருந்து பகவான் ''இதம் சரீரம்'' என்ற ''க்ஷேத் ரத்தை'' ஒவ்வொரு பகுதியாக விளக்கத் தொடங்குகிறார்.

''மகா பூதங்கள்'': அதாவது ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பிருத்வி. இவையே தன்மாத்திரைகள் (*Rudimentary Elements*). இவற்றிலிருந்து ஸ்தூல பஞ்ச பூதங்கள் (இந்த்ரிய கோசாரா:) நுகர்விற்கு எட்டக்கூடியவை—தோன்றுகின்றன.

''அகங்காரம்'': உலக விஷயங்களில் நாம் ஒன்றிவிடும் போது ஏற்படும் 'நான்' 'எனது' என்ற உணர்வே இது. இதனால்

Chinmaya Ramesh



தான் சுகதுக்கம், விருப்பு வெறுப்புகளை அனுபவித்து ஒருவன் புறவுலகத் தொடர்பினால் நம்முள் ஏற்படும் தனித் தன்மையை அகங்காரம் எனப்படும்.

''புத்தி'': இது உலகில் நல்லது கெட்டதைச் சிந்தித்துத் ''தீர்மானிக்கும் திறன்.''

''அவ்யக்தம்'' (மறைந்திருப்பது): மனம்— புத்தியின் இயக்கத்தை ஆண்டு, புறவுலகில் அவற்றின் செயலைத் தீர்மானிப்பதே இது. இதற்கு வாசனைகள் என்று பெயர். இப் புறவுலகில் பிரக்ஞையோடு நாம் அனுபவிக்கும்போது நமது அந்தக் கரணத்தில் ஏற்படும் பதிவுகளே (வாசனைகளே), நமது நுகர்ச்சிகள் மற்றும் உணர்ச்சிகளின் அமைப்பையும், போக்கையும் தீர்மானிக்கின்றன.

அகங்காரமாகிய தனித்தன்மை படைத்த ஒவ்வொருவனுடைய இயல்பான போக்குகளும் செயல்களும் அவனுள்ளிருக்கும் வாசனைகளாலேயே தீர்மானிக்கப்படுகின்றன. ஆகையால் சமஷ்டி மட்டத்திலும், பிரபஞ்சத்திலுள்ள ஜீவராசிகள், விஷயங்கள், போக்குகள் யாவும் அவற்றின் (மொத்தமாகச் சேர்ந்து) சமஷ்டி வாசனைகளால்தான் தீர்மானிக்கப்படுகின்றன. இந்த சமஷ்டி வாசனையே சம்ஸ்கிருதத்தில் ''மூலப்ரக்ருதி'' என்று சாங்கியர்களாலும், ''மாயை'' என்று வேதாந்திகளாலும் அழைக்கப்படுகின்றன. மாயையின் மூலம் ப்ரம்மம் இயங்கும் போது ''ஈஸ்வரன்'' அல்லது பிரபஞ்ச சிருஷ்டிகர்த்தா'' என்றழைக்கப்படும். அதே ப்ரம்மம் தனிப்பட்ட வாசனை கோசங்களாகிய ''அவித்யை''யினூடே இயங்கும்போது, தனிப்பட்ட ஒருவனின் வாழ்க்கையை சிருஷ்டித்துக் காத்து அழிக்கும் ஜீவன் (அகங்காரம்) எனப்படுகிறது.

அவ்யக்தமாகிய (தோற்றமற்றிருக்கும்) சமஷ்டி வாசனைகளே விஷய உலகமாகத் தோற்றமாகிறது என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

'இந்திரியங்கள் பத்து'': ஐந்து ஞானேந்திரியங்கள் மற்றும் ஐந்து கர்மேந்திரியங்களின் மூலமே ஒருவன் புறத் தூண்டுதல்களின் தாக்கம் பெற்றும் அவற்றை நுகர்ந்தும், அதற்கேற்ப செயல்படுகிறான்.

''(மனம்) ஒன்று'' (ஏகம்): இங்கு ஏகம் என்பது மனம். இந்திரியங்கள் பலவாயினும் மனம் ஒன்றே. இந்திரியங்கள் தரும் தகவலைப் பெறுவதுடன் மனமானது புத்தியின் தீர்மானத்தையும் ஐந்து கர்மேந்திரியங்களின் மூலம் நிறைவேற்றுகிறது. மேலும் ஒருவனது தனி இயல்பை வெளிக்காட்டுவதற்கு மனமே வாசலாகும். அதனால்தான் மனம் 'ஏகம்' எனப்பட்டது.

''இந்திரியார்த்தங்கள் ஐந்து'': ஒவ்வொரு இந்திரியமும் தனக்குரிய விஷயத்தை மட்டுமே நுகர முடியும். கண் உருவத்தைப் பார்க்கும்; காது சப்தத்தைக் கேட்கும்; தோல் தொடும் உணர்ச்சியை ஏற்கும். மூக்கு வாசனையறியும்; நாக்கு சுவையறியும். எந்த இந்திரியமும் தனதல்லாத வேறு விஷயத்தை யறியமுடியாது. ஆகவே இந்திரிய விஷயங்களும் (இந்திரியார்த்தங்கள்) ஐந்து. உள்ளபடியே நுகரப்படும் இவ்வுலக மனைத்துமே இவ்வைந்து விஷயங்களாலானதன்றி வேறல்ல.

இவ்விதமாக சாங்க்ய முறைப்படி தத்துவங்கள் இருபத்திநான்கும் கூறப்பட்டது: [தன்மாத்திரைகள்—5, அகங்காரம்—1, புத்தி—1, அவ்யக்தம் (மூலப் ரக்ருதி)—1, இந்திரியங்கள் 10, மனம்—1, இந்திரிய விஷயங்கள்—5, ஆகமொத்தம் 24.]

க்ஷேத்ரத்தின் (கோசங்களின்) கூறுகளைக் கூறியதோடு நில்லாமல் கிருஷ்ண பகவான் அது மாறுபடும் நிலைகளையும் இதனுடன் சேர்த்தே கூறுகிறார். விருப்பு, வெறுப்பு, சுகம், துக்கம், உடலமைப்பு, உணர்வு, உறுதி, முதலியன. சுருங்கக் கூறின் விஷய உலகம் என்பது ஸ்தூல சரீரம், மனம், புத்தி மட்டுமின்றி இவற்றின் மூலம் நுகரப்படும் உணர்ச்சி, எண்ணங்களாலுமானது. இதைத்தான் குறிக்கிறது ''இதம் சரீரம்'' அல்லது ''க்ஷேத்ரம்'' என்ற சொல்.

''தான்'' அல்லாத எல்லாமே அறியப்படும் விஷய உலகத்தைச் சார்ந்ததேயாகும். 'தன்னைப்' பொருத்தவரையில் மனதால், உணர்ச்சியால், புத்தியால் அறியப்படுபவை யாவும் விஷயங்களே ஆகும். இந்த ''அறியப்படுபவை'' யாவும் சேர்ந்து ஒரே கொத்தாக 'க்ஷேத்ரம்' என்ற சொல்லில் அடங்கிவிடுகிறது. அதை ''அறியும் தத்துவம்'' அதாவது அறிபவனாக இயங்குபவனே 'க்ஷேத்ரக்ஞன்''. இந்த வேறுபாட்டையறிவதற்குத்தான் விஷயங்கள் பற்றிய ஞானம் அவசியம். விஷயங்களனைத்தையும் கொண்டதே இந்தப் பரந்த பிரபஞ்சம் முழுவதுமாகும்—இக் கருத்தையே இவ்விரு சுலோகங்களும் சுருங்கக் கூறியுள்ளன.

இனி அடுத்துவரும் ஐந்து சுலோகங்களும் (8—12) க்ஷேத்ரக்ஞனின் இருபது பேரியல்புகளைக் கூறும். ஆத்மானுபூதியை அடைய விரும்பும் சாதகனுக்கு வேண்டிய மன, உணர்ச்சி, நீதி நெறி இயல்புகள் யாவும் இதில் வரையறுக்கப் பட்டுள்ளன. குறிப்பாக 12—வது சுலோகம் ''க்ஷேத்ரக்ஞனை'' நேரிடையாக விளக்குகிறது.

அமானித்வ மதம் பித்வாம ஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம்
ஆசார்யோ பாஸனம் சௌசம் ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ:
13:8

கர்வமின்மை, ஆடம்பரமின்மை, அஹிம்சை, பொறுமை,

நேர்மை, குரு வழிபாடு, தூய்மை, உறுதி, தன்னடக்கம்...

இந்த சுலோகத்திலிருந்து ''ஞானத்''தின் கூறுகளை விளக்கு கிறார். ஆன்மீக உணர்விற்குத் தேவையான நன்னெறிகளும், விரதங்களுமே அவை.

கர்வமின்மை (பணிவு): தற்பெருமை கொள்ளா திருத்தல். ஆடம்பரமின்மை அதாவது தருக்கின்மை. அஹிம்சை: உணர்வாலும் கருத்தாலும் பிற ஜீவன்களுக்குத் தீங்கிழையாமை. பொறுமை: துன்பத்தில் நிலைகுலையாமல் தாக்குப்பிடித்தல். குருசேவை: இது வெறும் சரீர சேவைமட்டு மல்ல; மனதாலும், புத்தியாலும் சீடன் குருவின் தூய இதயத் துடன் ஒன்றுவதேயாகும். தூய்மை: இது சாதகனின் சரீர, மனத் தூய்மை மட்டுமல்ல, அவனது ஆடை, உடைமைகள், சுற்றுப்புறத் தூய்மையையும் குறிக்கும். அவனது நோக்கம், உணர்ச்சி, உந்தல்கள் இவற்றிலுமுள்ள தூய்மையை இது குறிக்கும். உறுதி: ப்ரம்மத்தையடைவதிலேயே குறியாக இருந்து முயல்வதில் உறுதி. தன்னடக்கம்: புறவுலகத் தொடர்பில் மொத்தத்திலும், தனித் தனியாகவும் தனது அக, புறக் கரணங் களில் அடக்கத்தை மேற்கொள்வது.

மேலும்...

இந்த்ரியார்த்தேஷு வைராக்யம் அனஹங்கார ஏவச
ஜன்ம ம்ருத்யு ஜரா வ்யாதிதுக்க தோஷானுதர்சனம் 13:9

விஷயங்களில் விருப்பமின்மை, அஹங்காரமின்மை, பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி, துயரம் ஆகியவற்றிலுள்ள கேட்டை உணர்தல்.

விஷயங்களில் பற்றின்மை: அதாவது உலகிலுள்ள விஷயங்களைவிட்டு ஓடிவிடுவதல்ல, விஷயங்களிடையே இருந்து கொண்டே மனம் அவற்றோடு ஒன்றிவிடாமல் தடுப்பதேயாகும், அவற்றில் தளைப்படாதிருப்பதாகும். உடலால் விஷயங்களைத் துறந்து மனதால் அவற்றை நாடுவது ''மித்யாசாரம்'' *(Hypocrisy)* என்கிறார் பகவான் (அத். 3—ஸ்லோ. 6). விஷயங் களில் விருப்பமின்மையே ''வைராக்யம்.''

அகங்காரமின்மை: கரணங்களோடும் அவற்றின் நுகர்வுக ளோடும் நாம் ஒட்டிய உறவை ஏற்படுத்திக்கொள்ளும் போது தான் நாம் ''தன்'' என்கிற அகங்கார உணர்வு நம்முள் ஏற்படு கிறது. மோகத்தைத் தரும் இந்த உறவை நீக்குவதே நமது உண்மையான இயல்பை அடைவதற்கு அத்தியாவசியமானதாகும். பயிரிடுவதற்கு முன் களைநீக்குவது போன்றது இது.

துயரத்திலுள்ள கேட்டை உணர்தல்: இருக்கும் சூழ்நிலையில் அதிருப்தியையுணர்வதே புதிய நிலையைக் கண்டு பிடிக்க உதவும் தூண்டுகோலாகும். ஒரு சமுதாயத்திலோ அல்லது தேசத்திலோ நிலவும் அவலநிலையின் கெடுதலை மக்கள் உணராத வரையில் அந்த மக்களுக்கு அந்தப் பரிதாப நிலை பழக்க மாகி விடுகிறது. அரசியல் மற்றும் சமூக சேவகர்களே அந்த நிலையை மக்களுக்கு உணர்த்தவேண்டும். அதை உணர்ந்த பின்னரே அம் மக்கள் ஆனந்தமான, நிறைந்த வாழ்க்கையை அடைய முற்படுவர்.

அதுபோலவேதான் ஒரு சாதகனும் தன்னகத்தே தன்னைத் தளைப்படுத்தும் விஷயங்களை உணர்ந்தாலன்றி துக்கக் குழியி லேயே கிடந்து உழன்று கொண்டுதானிருப்பான், வெளியேற முயலவே மாட்டான். மனித மனமும் சரீரமும் மகத்தான அள விற்குத் தம்மை மாற்றியமைத்துக்கொள்ள வல்லவையாகும், அதே சமயம் எதையும் சுகானுபவமாகவும் கருத வல்லவை யாகும்.

சாதகன் தனது தற்போதைய துயரத்தின் கேட்டை உணரா விட்டால் தன்னுள்ளிருக்கும் ஆன்மீக உந்தலையும், புத்தியின் செயலார்வத்தையும், உற்சாக உணர்ச்சியையும், அதையடையும் துணிவையும் காணமுடியாது.

''பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணியிலும்'': எல்லா சரீரங் களும் இந்த மாறுதல்களையடைகின்றன. இந்த ஒவ்வொரு மாறு தலும் ஒரு புதுவிதமான துக்கத்தையே உண்டாக்குகிறது. பிறப்பு, வளர்ச்சி, தேய்வு, பிணி, இறப்பு ஆகிய மாறுதல்கள் உயிருள்ள எல்லா கரணங்களுக்குமே விதிக்கப்பட்டதாகும். இந்த மாற்றங்களனைத்திலுமுள்ள துயரத்தின் கேட்டை உணர்வதுதான் ''உயர்நிலை'' நோக்கி நம்மை வேகமாக இட்டுச் செல்லத் தூண்டுகோலாகும்.

*அஸக்திரனபிஷ்வங்க: புத்ரதார க்ருஹாதிஷு*
*நித்யம் ச ஸமசித்தத்வமி ஷ்டானிஷ்டோ பபத்திஷு*
*13:10*

பற்றின்மை, மகன், மனைவி, வீட்டைத் தனதென்று அபிமானியாதிருத்தல், வேண்டுவன வேண்டாதவை விளையுமிடத்து மனம் யாண்டும் நடு நிற்பது;

பற்றின்மை: உலக விஷயங்களோடு மிக அதிகமான அள விற்கு மனம் ஒட்டிக் கொள்ளுதலே பற்றுதல் எனப்படும். புற விஷயங்களை மனம் தீண்டுவதால் மனதில் கலக்கம் ஏற்படுகிறது; உலக விஷயங்கள் யாவும் குறுகியவை; எல்லையுடையவையாத லால், அவற்றின் ஆட்டங்களைப் பற்றிக்கொண்டு நாட்டியமாடும்

மனமும் அவற்றைப் போலவே எல்லையுடையதாகி விடுகிறது. நெருப்பு தானுகவே வந்து சுடாது, குழந்தை தன் கையை சுட்டுக் கொண்டால் அதற்கு நெருப்பு காரணமல்ல, அந்த நெருப்பைத் தீண்டிப் பார்க்கவேண்டும் என்று குழந்தையை உந்தித் தள்ளும் சக்திதான் காரணம்; அந்த சக்தியே ஆசை.

மகன், மனைவி, வீட்டைத் தனதென்று அபிமானி யாதிருத்தல்: ஒரு தாய், தன் குழந்தையின் சுக, துக்கமே தன் சுகமும் துக்கமும் என்னுமளவிற்கு குழந்தையோடு ஒன்றி விடு கிருள், தன்னையே மறந்து விடுகிருள். இதுதான் பற்றுசை.

நம்முடைய ஆளுமையைச் சுற்றி ஒரு விவேகச் சுவரை எழுப்பினுல் இத்தகைய பந்த பாசங்களால் பாதிக்கப்படாத தொரு சம நிலையமைதியை நாம் பெற முடியும், முன்னேற முடியும். இதற்குச் சிறிது பயிற்சி அவசியம். பந்த பாசங் களினின்று விடுபட்ட மனதினுள் மிகப் பெரிய சக்தி தேங்கி யிருப்பதைக் கண்டுகொண்டு அச்சக்தியைச் சரியான வழியில் செலுத்த வேண்டும். இதற்கு வழியே அடுத்த சுலோகத்தி லுள்ளது.

மயி சானன்யயோகேன பக்திரவ்ய பிசாரிணீ
விவிக்ததேசஸே வித்வமரதிர் ஜனஸம்ஸதி 13:11

வேறு ஒன்றுடனும் இணையாத (ஏக) யோகத்துடன் என்னிடம் பிறழாத பக்தி செய்பவன், தனியிடம் நாடுதல், ஜனக்கூட்டத்தை நாடாமை;

அர்ஜுனனின் வேண்டுகோளினுலோ அல்லது தனது சீர் திருத்தும் இயல்பினுலோ தாண்டப்பட்ட யோகீஸ்வரனுன கீதாச் சாரியன் ஆத்மானுபூதியின் எழிலைக் கூறியதோடு நில்லாமல் அதையடைய மிகவும் யதார்த்தமான வழியையும் அளிக்கிருர்.

ஒரு சாதகன் தன்னகத்தே கொள்ள வேண்டிய நல் லியல்புகளையும், அதன் மூலம் தன் புறவுலகத் தொடர்புகள் இருக்கவேண்டிய விதத்தையும் சென்ற மூன்று ஸ்லோகங்களில் கூறினுர் பகவான். இதனுல் சாதகன் தன்னுள் சேமித்த வீரியத்தை ஆத்மானுபூதியடையும் வழியில் எப்படிப் பயன் படுத்துவது என்பதை இந்த ஸ்லோகத்தில் உரைக்கிருர்.

என்னிடம் பிறழாத பக்தி செய்பவன்: ஒரு குறிப்பிட்ட முனையில் மனதைக் குவிப்பதற்கு, மற்ற எண்ணக் கிளர்ச்சி களனைத்தையும் நீக்க வேண்டும். மனம் முனைக்கு முனை தாவிக் கொண்டேயிருக்குமானுலும், அல்லது குவிமுனை அவ்வப்போது மாறிக் கொண்டேயிருந்தாலும் தியானப் பயிற்சி நிலைக்காது. அதற்குத்தான் ஆத்மனுகிய ‘என்னிடம் பிறழாத பக்தி செய்தால் யோகத்தில் முன்னேறலாகும் என்று உணர்த்துகிருர் பகவான்.

வேறெதையும் எண்ணுத (ஏகாக்ர) யோகம்: பக்தனின் மனம் குவிந்து நிற்பதற்கு வேறெதையும் எண்ணுத கவனமும் உற்சாகமும் அவசியம். இல்லேயேல் மனம் திரிந்து மோக வலேயில் சிக்கிவிடும். ஒருங்கிணேயாத மனம் வீணுன பகற்கனவுகளில் தான் ஈடுபடும். ஆகவே மனதை நமது நோக்கத்தில் நிலேக்கச் செய்வதவசியமாகும்.

உயர்பண்புகளே இழி பயனுக்கு விலே கூறுவதை 'விபசாரத் தனம்' என்று கூறுவர். பகவான் என்ற ஒரே இலக்கில் மனதை, வேறெதிலும் அலே பாய விடாமல் நிலேக்கச் செய்யவேண்டும்.

வேறெதையும் எண்ணுத யோகம் என்பதற்கு பகவான் ''அனன்ய யோகம்'' என்ற சக்திமிக்க சொற்ருெடரைப் பயன் படுத்தியிருப்பதும் நோக்கத்தக்கதாகும்.

ஒரு உறுதியான லட்சியத்தில் மனம் நிலேத்து நிற்பதற்கு சூழ்நிலேயும் சாதகமாயிருக்க வேண்டும். அதற்குத்தான் (1) தனி யிடமும் (2) ஜனக் கூட்டத்தை நாடாமையும் அவசியம் என்கி ருர். தன் லட்சியத்தில் ஒருங்கிணேந்து நிற்கும் ஒருவன், அவன் கவியாளுலும் சரி, விஞ்ஞானியாயினும் சரி, அவனது உற்சாகம் வளர்ந்து வெறியாகவே மாறி தாளுகவே ஜன சந்தடியைவிட்டு நீங்கி தனியிடத்தையே நாடுவான். தன்னுள்ளத்திற்குப் பிடித்த லட்சியத்தை நிறைவேற்றுவதற்கு, மனம் மற்ற தொடர்பு களேவிட்டு நீங்கி தனது லட்சியத்திலேயே ஆழ்ந்துவிடும்.

அதன்பின்—கவி தன்னுலகிலேயே சஞ்சரிக்கிருன், விஞ்ஞானி சந்தை மத்தியிலும் தனியாகவே வாழ்கிருன்; அதே போல பக்தனும் தன்னுடைய அனுபவக் குகையினுள் இருந்த வண்ணமே உலகில் சஞ்சரிக்கிருன், மற்ற எண்ணங்கள் தன் மனதினுள் நுழைவதை அவன் விரும்புவதுமில்லே—எனினும் அவன் பௌதீக அளவில் தப்பியோடுபவனே அல்லது பிறரை வெறுப்பவனே அல்ல.

அத்யாத்ம ஞான நித்யத்வம் தத்வஞானுர்த்த தர்சனம்
ஏதஜ்ஞானமிதி ப்ரோக்தம் அக்ஞானம் யததோன்யதா

13:12

ஆத்ம ஞானத்தில் சதா நிலேத்திருத்தல், மெய்யான ஞானத்தின் இறுதிப் பயனேக் காணல்—இவை யாவும் ஞான மாம்; இவற்றிற்கு அன்யமானவை அக்ஞானமாம்.

இப்பகுதியின் கடைசி சுலோகம் இது. சாதகனின் பதி னெட்டு பேரியல்புகளேக் கூறிய பின், இந்த ஸ்லோகத்தில் மேலும் இரண்டு பேரியல்புகளே கூறுகிருர் பகவான்—''ஆத்ம ஞானத்தில் நிலேத்தல்'' ''மெய் ஞானத்தின்'' இறுதிப் பயனேக் கண்டு தெளிதல்.

ஆத்ம ஞானத்தில் இடையருது நிலேத்திருத்தல்: ஆத்ம ஞானம் என்பது வாழ்ந்து பார்க்கப்பட வேண்டியது, அது வெறும் ஏட்டுக் கல்வியறிவல்ல. ஆத்மனே ஸத்யம், ஸர்வவ்யாபி ஏகம் என்ருல் சாதகனும் தனது சகல வாழ்க்கை மட்டத்திலும் ஆத்மனுகவே வாழ வேண்டும்—இந்த முயற்சியே சாதகனின் இடையருத அப்பியாசமாகும்.

மெய்யான ஞானத்தில் இறுதிப் பயனேக் கண்டு தெளிதல்: நமது இயக்கங்களனைத்திலும் இடையருது நமது லட்சியத்தையே நினேத்திருந்தால் அதுவே நமக்கு உற்சாக மூட்டும். லட்சியத்தையே குறியாகக் கொண்டு உண்மை யோடும், பக்தியோடும் பாடுபட வேண்டும். நமது குறைபாடுகள் மற்றும் குறுகிய தன்மைகளினின்றும் விடுபடுவதே ''மோக்ஷம்'', அதுவே நாமனைவரும் அடைய வேண்டிய லட்சியம். இது வரை கூறிய பேரியல்புகள் யாவும் ஆத்மானுபூதியடைவதற்கான ''ஞானம்'' எனப்படும்.

ரயில்வே ஸ்டேஷன் பாஷையில் ''மதருஸ் கிளம்பப் போகிறது'' ''கல்கத்தா எதிர்பார்க்கப்படுகிறது,'' ''பம்பாய் சென்றுவிட்டது'' என்ருல் அந்தந்த வண்டியையே குறிக்கும். அது போலவே இங்கும் அந்தப் பேரியல்புகளேயே ''ஞானம்'' என்கிருர், ஏனெனில் அந்த இயல்புகள் ஒருவனிடம் வளர்ந்துவிட்டால் சச்சிதானந்த ஸ்வரூப ஆத்மனே அடைவது எளிதாகும்.

இனி இந்த ஞானத்தால் அறிய வேண்டியது என்ன?

ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி யஞ்ஞாத்வா ம்ருதமச்னுதே
அனுதி மத்பரம் ப்ரஹ்ம ந ஸத்தன்னுஸதுச்யதே 13:13

அறியத் தக்கது எது, எதை அறிந்தால் ஒருவன் சாகித் தன்மை எய்துகிருனே, அதைக் கூறுகிறேன். அது ஆதி யில்லாத பரப்ரும்மம், உளது இலது எனவொண்ணுதது.

சென்ற ஐந்து சுலோகங்களில் ''ஞானத்தை'' அடைவதற் கான பேரியல்புகளேக் கூறியபின், இனி அதன் மூலம் ''அறியத்தக்கது எது'' என்று கூறப் போகிருர் பகவான். இந்த ஞானத்தால் 'அறியத்தக்கது எது' என்று நேரடியாகக் கூருமல் பகவான், அதன் விளேவு என்ன என்பதையே விரித்துரைக் கிருரென்று கூறுவர் சில விமரிசகர்கள். இது சரியல்ல. ஞானத் தால் ஏற்படும் விளேவுகளேக் கூறிஞல்தான், அதன் மகிமையைக் கேட்பவர்கள் தாமும் அதை அடைய விருப்பங் கொள்வர்.

எதை அறிந்தால் ஒருவன் சாகாத்தன்மை எய்து கிருனே: சரீரத்தின் விதியே மரணம். மரணமற்ற ஆத்மனே சரீ ரத்தை உபாதியாக அடைவதால்தான் வரையறையாலும் மரண

முடைமையாலும் அவதிப்படுகிறது. சச்சிதானந்த இயல்பாகிய ஆத்மனின் இயல்பை மீளப் பெற்று வாழ்வதே மரண பயந் தீரும் வழியாகும். முன் சுலோகங்களில் கூறிய இயல்புகளை வளர்த்து அந்தக் கரணத்தை தியானத்திற்கு இசைந்திருக்கச் செய்தால் அந்த லட்சியத்தையடைய முடியும்.

அது ஆதியில்லாத பரப்ரும்மம்: காலத்தையும் கடந்து என்றுமே நிலைத்துள்ள ஆதாரத்தின் பேரில்தான் ஒரு தொடக் கத்தை மனதால் கருதிக் கணக்கிட முடியும். இவ்விதத்தில், ஆதாரமாயிருப்பது பரப்ரும்மமே. அதிலிருந்துதான் காலமே பிறந்தது.

பரப்ரும்மமே சகல அனுபவங்களுக்கும் ஒளியூட்டுவது, நமது நுகர்வுகளாலான சகல அனுபவங்களையும் கடந்து நிலைத் திருப்பது—கரணங்களனைத்திலும் நுகர்வோன் 'அவனே.' ''அதை''ப் பொருத்தவரை மற்றவை யாவுமே ''விஷயம்'' ''அது'' ஒன்றே அறிபவன், 'அதை' நுகரவோ, உணரவோ, சிந் திக்கவோ முடியாதாகையால் 'அது' இருக்கிறது என்று சொல்ல முடியாது.

அதே சமயம் ''அது'' இல்லாதது என்றும் சொல்ல முடி யாது—வானத்தின் புஷ்பம், மனிதனின் வால் என்பது போல — ஏனெனில் ''அது''தான் உலகமாக வியக்தமாகியிருக்கிறது. ஆகையால் மெய்ப்பொருளை ''ஸத்துமல்ல, அஸத்துமல்ல'' என்றுதான் விளக்க முடியும். பரப்ரும்மத்தை நேர்மறையிலோ அல்லது எதிர்மறையிலோ விளக்க முடியாது.*

''ப்ரம்மத்தை ஸத் என்று கூற முடியாது, ஏனெனில் அது ஏதோ ஒரு இனத்திற்கு உரியதல்ல, அது குணங்களையுடையது மல்ல; அதே சமயம் அது அஸத்துமல்ல. ஏனெனில் அது சகல ஜீவராசிகளின் மூலம் வியக்தமாகிறது'' என்கிறார் சங்கரர்.

'ஸத்' 'அஸத்' என்பதெல்லாம் மனித மனம், புத்தியில் முடி வாகும் கருத்துக்களேயாகும். இந்தக் கருத்துக்களையெல்லாம் ஒளிரச் செய்வது அந்த சைதன்யமே. ஒளிர்விப்பதும் ஒளிர்விக்கப் பட்டதும் ஒன்றேயாகிவிட முடியாது. ஆகவே விஷயங்களனைத்தி னின்றும் அறவே வேறான ஏகப்ரம்மனாகிய அறிபவன் ஸத்துமல்ல அஸத்துமல்ல. ஸத்தும் அஸத்தும் எண்ண அலைகளே, இவ்விரண்டு எண்ண அலைகளையும் ஒளிரச் செய்வது அந்த ஆத்மனேயாகும். ''அது உளது இலது என எண்ண வொண்ணாதது.''

எங்கும் சென்று நிறைந்துள்ள ஆத்ம சைதன்யத்தை இனி வரும் சுலோகங்கள் விளக்கும்:

* ப்ரஹதாரண்யக உபநிஷத் II சுலோகம் 9–25, தைத்ரியோபநிஷத் II–4–1– ஸ்வாமிஜியின் உரைகள் காண்க.

ஸர்வத: பாணி பாதம் தத்ஸர்வதோ—க்ஷி சிரோமுகம்
ஸர்வத: ச்ருதி மல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி 13:14

அது எல்லா இடங்களிலும் கை கால்களையுடையது, எங்கும் கண் தலை வாய்களையுடையது; எங்கும் காதுகளை உடையது. உலகில் அனைத்தையும் அது அணைத்து நிற்கிறது.

அது எங்கும் கை கால்களையுடையது: ஒரு சாதாரண சீடனுக்குத் தெரியாத அவ்யக்த சக்தியை அவனுக்குத் தெரிந்த ஒன்றின் மூலம் விளக்குவது எளிது. ஜீவராசிகளின் கை கால்கள் ஜடப் பொருளேயாயினும் அவை உணர்வுடையவை போலவே தோன்றுகின்றன. அவற்றுள் இயங்கும் சைதன்யமானது சர்வ வ்யஸியான ஆத்மனே, பரப்ரும்மமே என்பதைத் தான் ''அது எங்கும் கை கால்களையுடையது'' என்ற சொற்றொடர் குறிக்கிறது.

உலகிலுள்ள ஒவ்வொரு கண், தலை, வாய்களும் அவற்றினுடே துடிக்கும் ஆத்மனல்தான் இயங்குகின்றன. ஆத்மன் எங்கும் சென்று இருப்பது அதனல்தான் அது ''எங்கும் கண், தலை, வாய்களையுடையது'' என்றார். எங்கும் நிறைந்த அந்த ''உயிர்'' உடலினுள் இயங்கும் வரையில்தான் நுகர்தல், உணர்தல், சிந்தித்தல் முதலிய தொழில்கள் நடக்கும்.

உலகில் அனைத்துக்குள்ளும் வெளியும் புகுந்து நிற்கிறது: நாமறிந்த சரீராதி கரணங்களினுடே இயங்குவதே சைதன்யம் என்று கூறினல், ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களைப் போல எங்கெல்லாம் கரணங்களின் இயக்கமுண்டோ அங்கு மட்டுமே சைதன்யம் தோன்றுகிறது என்ற சந்தேகம் சீடனுக்கு ஏற்பட்டுவிடும். இந்த மயக்கத்தைப் போக்கவே சைதன்யமாகிய மெய்ப்பொருள் ''அனைத்தையும் வியாபித்துள்ளது'' எனப் படுகிறது. இது, ரிக் வேதத்தின் புருஷ ஸூக்த ஸ்லோகத்தையே நினைவூட்டுகிறது.

ஸர்வேந்த்ரிய குணுபாஸம் ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம்
அஸக்தம் ஸர்வப்ருச்சைவ நிர்குணம் குணபோக்த்ரு ச
13:15

இந்திரியங்கள் அனைத்தின் வாயிலாக ஒளிர்வது எனினும் இந்திரியங்களை விலக்கியது; பற்றற்றது எனினும் அனைத்தையும் பற்றித் தாங்குவது; குணங்களற்றது எனினும் குணங்களை அனுபவிப்பது;

சாதகனுக்குள்ளேயே 'தான்' என்ற வடிவில் அமர்ந்திருக்கும், விளக்க முடியாத ப்ரும்மத்தை முரண்பாடுகளின் மூலம் விளக்குவது ஒருவகை நடை. இவ்வகை முரண்பாட்டு

மொழியால் சாதகனின் புத்தி குழம்பாது, அதே சமயம் அது அவனை ஆத்மானுபூதியை நோக்கிச் செல்லவும் தூண்டிவிடும். இந்த பரஸ்பர முரண்பாட்டு முறையில் விளக்குதல் சாஸ்திர நூல்களின் பிரத்யேக அம்சமாகும். நாஸ்திகர்கள் இதை எடுத்துக் கூறி நாஸ்திகமே சரியானது என்பர். எனினும் இந்த ஸ்லோகத்தை உபநிஷத்துகளிலும் காணலாம்.

இந்திரியங்களனைத்தின் வாயிலாக ஒளிர்வது எனினும் இந்திரியங்களை விலக்கியது: நம்முள்ளிருக்கும் ஆத்மா புலனுறுப்புக்களினுடே இயங்கும்போது ஆத்மாவுக்கே புலனுறுப்புக்கள் இருப்பதுபோலத் தோன்றுகிறது. ஆனல் ஆராய்ந்து பார்க்கும்போது புலனுறுப்புக்கள் ஸ்தூல வஸ்து, அழிவுடையவை, ஆனல் ஆத்மாவோ அவற்றிற்கு புலனுணர் வளிப்பதோடு அழியாமலும் மாருமலும் இருக்கிறது. மின் சாரமே விளக்காகாது, அடுப்பாகாது எனினும் அது விளக்கின் வழியேயும் அடுப்பு வழியேயும் விளக்கம் பெறும்போது மின்சாரமே ஒளியாகவும் நெருப்பாகவும் இருப்பதுபோல் தோன்றுகிறது.

பற்றற்றது எனினும் அனைத்தையும் பற்றித் தாங்குவது: ''பற்றற்ற பற்றுதல்'' என்பது ஆரம்ப சாதகர் களுக்கு புரிவது எளிதல்ல. [''கேளாது கேட்பவன், காணுது காண்பவன்...'' பிரஹதாரண்யக உபநிஷத்]. அதற்குத்தான் நமது ஆச்சாரியார்கள் உதாரணங்களைக் கூறி விளக்கியுள்ளனர். ஒரு அலையோ அல்லது சகல அலைகளையும் சேர்த்தாலோ அது சமுத்ரமாகாது. சமுத்ரம் அலைகளைப் பற்றி இருப்பதில்லை. ஆனலும் அலைகளைத் தரித்து நிற்பது சமுத்ரமேயன்றி வேறல்ல. பஞ்சு எல்லாத் துணியிலும் இருக்கிறது. ஆனல் துணி பஞ்சல்ல, எனினும் துணியைத் துணியாக இருக்க வைப்பது பஞ்சேயாகும்.

அது போலவே பன்மையான உலகம் சைதன்யமல்ல. எனினும் அந்த சைதன்யமே அதைத் தாங்குகிறது. கம்பத்தைப் பேய் என்று நினைத்தால் கம்பத்திற்கும் பேய்க்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. எனினும் கம்பமே பேயைத் தாங்கு கிறது — விழிப்பு நிலையிலிருக்கும் மனமே ''கனவுகளைத்'' தாங்குவது போல.

குணங்களற்றது எனினும் குணங்களை அனுபவிப்பது: சத்வ, ரஜோ, தமோ குணங்களின் ஆதிக்கத்தால்தான் மனம் செயல்படுவதும் அனுபவிப்பதும் நிகழ்கின்றன. இந்த குணங்கள் மனதை ஆள்கின்றன என்ருலும் சைதன்யமாகிய ஆத்மனுக்கு அவையும் அறியப்படும் விஷயங்களேயாகும். மன உபாதிக்குட் பட்ட சைதன்யமே ஜீவன் (அகங்காரம்), குணத்தை அனு பவிக்கும் ''போக்தா.'' மன உபாதி நீங்கினல் ''அது''

தன்னியல்பில் தனித்தே முழுமையாயிருப்பதாகும்.

ஆக இந்த சுலோகத்தில் ஆத்மன் என்பது புலன்கள், மனம், புத்திக்கு அப்பாற்பட்டது, பற்றற்றது, நிர்குணமானது என்பது விளக்கப்பட்டது.

ஆனால் அதே ஆத்மன் புலனுறுப்புகள் வழி தானே அந்த புலன்களையுடையது போலவும், அவற்றைப் பற்றியிருப்பது போலவும், குணங்களை அனுபவிப்பது போலவும் தோன்றுகிறது.

இது மட்டுமல்ல ஒருவனுக்குள்ளிருக்கும் அதே ஆத்மா தான் அனைத்து ஜீவன்களுக்குள்ளும் இருக்கிறது.

பஹிரந்தஸ்ச பூதானுமசரம் சரமேவச
ஸுக்ஷ்மத் வாத்த தவிக்ஞேயம் தூரஸ்தம் சாந்தி கே ச தத்
13:16

அது பொருள்களின் உள்ளும் புறமும் உள்ளது; அது அசைவது அசையாதது; மிக நுண்ணியதாகையால் அறிதற்கரிது; எட்டவும் கிட்டவும் இருப்பது.

சைதன்யம் எங்கும் சென்று நிறைந்திருப்பது என்பதை உபநிஷத் பாணியில் கூறுகிறார் பகவான்.

அது பொருள்களின் உள்ளும் புறமும் உள்ளது: சைதன்யமானது ஸர்வகதமாயிருந்து பல்வேறு வியஷ்டியான கரணங்களினுடே செயல்படுகிறது. ஸர்வகதமானதாகையால் 'அது' அவ்யக்தமான நிலையிலிருக்கிறது. கரணங்கள் இல்லாவிடினும் 'அது' இருக்கும். ரேடியோவின் மூலம் தேசீய ஒலிபரப்புகளைக் கேட்கிறோம்; ரேடியோ இல்லையெனினும் அந்த ஒலி அலைகள் இருந்து கொண்டுதானிருக்கும். அவ்வாறே சரீரம், மனம், புத்தியாகிய கரணங்கள் இருந்தால் அதில் சைதன்யம் தோற்றமாகும். அந்த சைதன்யக்கரணத்தின் உள்ளும் புறமும் இருந்து கொண்டேயிருக்கிறது.

இதை, ''பொருள்களுக்கு வெளியில் இருக்கிறது என்றும் பொருள்களுக்குள்ளேயும் இருக்கிறது'' என்றும் கூறலாம்—சமுத்திரம் அலைகளுக்கு வெளியே இருக்கிறது அது அலைகளல்ல, எனினும் ''அந்த அலைகள் யாவும் சமுத்திரமன்றி வேறல்ல.

அது அசைவது, அசையாதது: தன்னிச்சையாக அசைபவையாவும் 'உயிருள்ளவை' அசைவே இல்லாதது 'ஜடம்' இதை அசைவற்றது, எனினும் அசைவது என்றும் கூறலாம்—

அதாவது மெய்ப்பொருள் தன்னிறை இயல்பில் அசைவற்றது (எங்கும் பரவி நிற்கும் ஒன்றுக்கு அசையுமிடமேது?) எனினும் பொருள்களின் உபாதியால் 'அது' அசைவது போலவும் தோன்று கிறது. பஸ்ஸில் உட்கார்ந்துகொண்டு வெகு தூரம் சென்ருலும் நாம் உட்கார்ந்து கொண்டு தானே இருக்கிறேம்? நம்மைப் பொருத்த வரையில் பஸ் நகர்ந்தாலும் நாம் (அசைவற்றிருக்கிறேம்); எனினும் பஸ்ஸினுல் உபாதியடைந்த (சுமக்கப்பட்ட) நாமும் அசைபவர்களாகிறேம்.

ஆகவே நம்முள்ளிருக்கும் நித்தியமான தன்னிறைவான ஆத்மக் கருவானது நமக்குள்ளே மட்டுமின்றி புறத்தேயும் ஸர்வகதமாயிருப்பதாகும்—அதுவன்றி ஓரணுவும் அசையாது. 'அது' எங்கும் தோற்றமாயுள்ளது. அப்படியிருக்க 'அதை' நாம் நுகரவோ, உணரவோ, சிந்திக்கவோ முடியாமலிருப்பது எப்படி?—'அது' நமது சிந்தனைக்கெட்டாத அளவிற்கு நுண்ணிய தாகையால்தான்.

ஒரு வஸ்து ஸ்தூலமாகி வரவர புலனுணர்விற்கு மேன் மேலும் விளங்கி வரும் பூமியை நுகரலாம், சுவைக்கலாம், பார்க்கலாம், கேட்கலாம். நீரை முகர முடியாது, தீயை சுவைக்க முடியாது, காற்றைக் காண முடியாது. ஆகாசத்தின் விஷயம் சப்தம் மட்டுமேயாகும்.

காரியத்தைவிட காரணம் நுண்ணியது ஆகாசமே ஒரு ஸ்தூலத் தோற்றம், அதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும்—அதுதான் நித்தியாதாரம் (Eternal Substratum). அந்த ஆகாசத்திலிருந்துதான் மற்ற மகா பூதங்களும் தோன்றின. சைதன்யமானது ஆகாசத்திலும் பரவியிருப்பதால் 'அது' ''ஸூக்ஷுமத்திலும் ஸூக்ஷுமமானது.'' ஆகையால் 'அது' ஸ்தூலமாகிய நுகர்தல், *(Perception)*, உணர்தல் (Feeling) மற்றும் சிந்தித்தலின் (Thought) கரணங்களுக்கு அப்பாற்பட்ட தாகும்.

அது எட்டவும் கிட்டவும் இருப்பது: ''இங்கு'' ''அங்கு,'' ''கிட்ட'', ''எட்ட'' என்பதெல்லாம் வெளியின் எல்லேக்குட்பட்ட பொருள்களுக்கு மட்டுமே பொருந்தும்—காண்பவனின் கற்பனையைப் பொருத்து தூரம் (இடைவெளி) குறிப்பிடப்படும். ஆனுல் ஸர்வகதமான ஒன்றிற்கு இதெல்லாம் ஏது? நாமரூபங்களின் வரையறைக்குட்பட்ட பிரபஞ்சத்தைக்

கடந்து நிற்கும் மெய்ப்பொருள் வரை கடந்தது (Transcendental) ஆகையால் 'அது' எட்ட இருப்பது; எனினும் 'அது' நாமரூபங்களனைத்திலும் இருக்கிறது, ஆகையால் அது கிட்ட இருப்பதுமாகும். அதனால்தான் 'எட்டவும் கிட்டவும்' இருப்பதாகும் 'அது.'

முரண்பாட்டு மொழியில் வேண்டுமென்றே கூறப்பட்ட இந்த ஸ்லோகத்தின் மருட்சியூட்டும் அழகு, தன் புத்தியில் அக மகிழ்ந்து நிற்கும் ஒரு வாசகனை சாட்டையடியால் உலுக்கி எழுப்பி, முழு முதல் மெய்ப் பொருளானது ஒரே சமயத்தில் அறி வெல்லை கடந்ததாயும் அனைத்திலும் உள்ளுறை இயல்பாயும் இருப்பதைச் சிந்திக்க வைக்கும்.

நம்முள்ளேயே உறையும் ஆத்மனே அனைத்திலும் உறையும் பிரும்மன் என்று மேலும் விளக்குகிறார்.

அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம்
பூதபர்த்ரு ச தஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச.

13:17

அது பிளவுபடாதது; எனினும் பொருள்களில் பிளவு பட்டதுபோல் இருக்கிறது; பொருளைத் தாங்குவதும், விழுங்குவதும், தோற்றுவிப்பதும் அது என்றறிக.

அது பிளவுபடாதது எனினும் பொருள்களில் பிளவுபட்டது போலிருக்கிறது: மின்சாரம் சர்வ கதமானது எனினும் மின் விளக்கில் ஒளியாக விளக்கம் பெறுகிறது. அவ்வாறே பரமாத்மன் ஸர்வ கதமாயிருப்பினும், (கருவிகள்) இருக்குமிடங்களில்தான் அது வியக்தமாகிறது. ஆகாசம் ஒன்றே யாயினும் நான்கு சுவர்களிடையே உபாதியடையும்போது தான் அது அறை *(Room)* எனப்படும்; அவ்வாறே பானையி னுள்ளிருக்கும் வெளியும் (கடாகாசம்).

பொருளைத் தாங்குவதும், விழுங்குவதும், தோற்று விப்பதும் அது: கம்பம் பேயைத் தாங்குகிறது. அது பேய்த் தோற்றத்தை ''சிருஷ்டித்து'' ''விழுங்குகிறது.'' பூமி எல்லாத் தாவரங்களையும் தாங்குகிறது—அதாவது எல்லாத் தாவரங் களையும் சிருஷ்டித்து விழுங்குகிறது. சமுத்ரம் எல்லா அலைகளையும் தாங்குகிறது—அதாவது அலைகள் சமுத்ரத்திலிருந்து தோன்றி சமுத்ரத்தாலேயே விழுங்கப்படுகின்றன. அது போலவே ஸர்வேஸ்வரனான மெய்ப்பொருளின் ஆதாரத்தின் மீது மன—புத்தி மோகத்தால் பன்மையான உலகம் சிருஷ்டிக்கப்படுகிறது. இந்த மன—புத்தியின் எல்லையைக் கடந்

தால் அந்த இனிய அமைதியில் ஸம்ஸாரம் விழுங்கப்படுகிறது—விழித்தவுடன் கனவு, விழிப்படைந்தவனுள்ளேயே ஒன்றிக் கலப்பது போல.

''—அது என்றறிக'': 13—வது சுலோகத்திலிருந்து கூறியவை ''அறியத் தக்கது''—அதாவது அதற்கு முன் ஸ்லோகங்களில் கூறிய ஒழுக்கங்களின் மூலம் பண்படுத்தப்பட்ட மனதால் அறியத்தக்கது.

ஸர்வகதமான மெய்ப்பொருள் நம்முள்ளும் இருந்து, அந்த ஆத்மனை நாம் அறிய முடியாவிடில் அத்ற்குக் காரணம் அறியாமையே. மேலும் கேட்போம்:

ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதிஸ் தமஸ: பரமுச்யதே
ஞானம் ஞேயம் ஞானகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம்
13:18

ஒளிக்கெல்லாம் ஒளியாகிய அது இருளுக்கப்பாற்பட்டது எனப்படுகிறது. அறிவும், அறியப்படு பொருளும், அறிவினுல் அடையப்படுவதுமாகிய் அது எல்லாருள்ளத்திலும் நிலைத்திருக்கிறது.

பிரம்மமே அனைத்திற்கும் ஒளி தருவது. புத்தியாலறிவதும், உள்ளுணர்வாய்யுணர்வதும், ஆன்மீக அனுபவமாவதும் அந்த ஒரே சைதன்யத்தால்தான். இந்த சைதன்யமே நமது பலதரப்பட்ட அனுபவங்களையும் நாம் அறியச் செய்வதால் அதை ஒளியோடு ஒப்பிடுவர். ஒரு பொருளைக் காண்பதற்கு கண்களிருந்தால் மட்டும் போதாது, அப்பொருளின் மீது ஒளியும் பரவி இருக்க வேண்டும்—அது போலவே நம்முள் எழும் பலதரப்பட்ட உணர்ச்சிகளையும், எண்ணங்களையும் நாம் காண்பதற்கும் ''ஒளி'' அவசியம். இவ்விதம் நமது மனம் புத்தியின் நிலையை நாம் அறியச் செய்யும் விளக்கே ''ஞான ஒளி,'' ''ஆத்ம ஒளி,'' ''ஆத்மா,'' அல்லது ''சைதன்யம்'' எனப்படும்.

இந்த சைதன்ய ஒளியினுல்தான் நமது வாழ்வில் நமது எண்ணங்கள் யாவும் பிரகாசமாக ஒளிர்விக்கப்படுகின்றன. அதனுல்தான் ஆன்மீகப் பாரம்பரியத்தில் சைதன்யத்தை ''ஒளி'' என்பர்.

ஆனுல் இந்த ''ஒளி'' உலகில் நாம் கண்களால் காணும் ஒளியல்ல. கண்ணுக்குப் புலப்படும் ஒளியானது ஒரு காணப்படும் வஸ்துவேயாகும். அது அந்த வஸ்துவை அறிபவனுக முடியாது. ஆகையால் ''ஆத்ம ஒளி'' ''சுயப் பிரகாசம்'' (Self Effulgence) ''சைதன்ய வெண் சுடரொளி (Incandescence of Consciousness) என்ற சொற்கள் எதைக் குறிக்கின்றன என்பதை குரு விளக்க வேண்டியது அவசியமாகும்.

''ஒளிக்கெல்லாம் ஒளி'': க்ஷேத்ரக்ஞனை காட்டுவதற்கு, க்ஷேத்ரமனைத்தையும் நாம் மறுத்தாக வேண்டும். ஆத்மாவின் பிரகாசத்திற்கெதிரே, சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், மின்னல், நெருப்பு ஆகியவற்றின் ஒளி ஒன்றுமேயில்லை. [''ந தத்ர ஸூர்யோ பாதி'' ...கடோபநிஷத்] ஆகையால்தான், ஒவ்வொருவருக்குள்ளும் இருக்கும் ஆத்மனின் ஒளி, புலனுக்கெட்டக்கூடிய ஒளி அனைத்தையும் ஒளிர்விக்கிறது என்கிறார் கிருஷ்ணன். ஜீவன்களிலுள்ள சைதன்யம் ஒளிர்விக்கவில்லையானல் சுயப் பிரகாசியான சூரியன் கூட அவற்றிற்கு ஒரு பொருட்டல்ல, முனிவரைப் போல் தோன்றும் ஒருவர், என்னிடம் வந்து உனக்கு இரண்டு கொம்புகள் உள்ளன என்று கூறினாலும் நான் பொருட்படுத்தமாட்டேன், ஏனெனில் அதை என் புலன்களால் உணரவுமில்லை, அதை நானறியாத வரையில் அதனால் என் வாழ்வில் ஒரு பயனுமில்லை. உலகை நான் அறியும் போதுதான் அது எனக்குரிய சுக துக்கங்களைத் தர முடியும். ஆகவே சகல ஒளி மூலங்களும் எனது சைதன்யத்தாலேயேதான் ஒளியூட்டப்படுகின்றன; வஸ்து வடிவிலான ஒளியுலகமனைத்தையும் அனுபவிக்கும் க்ஷேத்ரக்ஞனே (Subject) ஆத்மன்.

''இருளுக்கப்பாற்பட்டது'': உலகிலுள்ள ஒளிகளுக்கெல்லாம் ஒளி தருவதே ஆத்ம சைதன்யம் என்று காட்டிய பின்னரும் கூட, சீடனின் வரையுடை புத்தியானது ஒளியை ஒரு அனுபவப் பொருளாகத்தான் கருத முடியும்; ஒளியைப் பற்றி ''சார்புடைக் கருத்து'' தான் அவன் மனதில் நிற்கும். புறவுலகில் அனுபவ அறிவில் ஒளியை இருளினின்றும் வேறுபடுத்தி அறிகிறோம். ஒளியின்றேல் நாட்கணக்கே வந்திருக்காது; சூரியனைப் பொருத்தவரை ஒளிக்கு அர்த்தமேயில்லை, ஏனெனில் சூரியன் இருளையே அறியாது! ஆகவே எல்லையற்ற ஆத்ம ஒளியின் முழு முதல் இயல்பை (Absolute Nature) காட்டும்போது, 'அது' இருள் என்ற கருத்திற்கு அப்பாற்பட்டது; அது முழு முதல் ஒளி, சைதன்யம் என்கிறார்.

இருள் இருக்கிறது என்று சொல்வதற்குக் கூட அது பற்றிய பிரக்ஞை (உணர்வு) தேவை. உணர்வு ''ஒளி''யானது உலகிலுள்ள ஒளி மூலங்களுக்கெல்லாம் ஒளியூட்டுவதோடன்றி இருளாகிய அனுபவத்திற்கும், ஒளியூட்டுகிறது, அவ்வளவு நுண்ணியது, முழு முதலுமானது அது! எது இருள், ஒளி இரண்டையுமே ஒளிர்விக்கிறதோ அது இவ்விரு அனுபவங்களையும் கடந்ததாகத்தான் இருக்க முடியும். அதனால்தான் 'அது' இருளுக்கப்பாற்பட்டது என்கிறார்.

இந்த சுலோகத்தின் இரண்டாவது வரி கூறுவதாவது: ஆத்மாவானது (1) ஞானம் (2) ஞேயம் (ஞானத்தால் அறியப்பட

வேண்டியது) (3) ஞானகம்யம் (ஞானத்தால் அடையப்பட வேண்டியது). முன்னர் கூறிய நல்லொழுக்கப் பேரியல்புகளின் மூலம் நாம் பண்பட்டு ஞானத்தில் நிலைத்து இறுதியில் அடைய வேண்டிய நிலையே இது. தியானத்தின் இறுதி நிலையில் நமது மனமும் இதயமும் குவியும் முனை இதுவே.

நமது அனுபவங்களைக் கடந்து நின்று, நம் வாழ்வையும் ஒளிர்விக்கும் சைதன்யமே நமது ஆன்மீக முயற்சிகளனைத்திலும், எல்லாக் காலத்திலும், எல்லா இடத்திலும் நமது லட்சியமாகும்.

''எல்லாருள்ளத்திலும் நிலைத்திருக்கிறது: அறியத்தக்க தாகிய எல்லையற்ற ஞான ஒளி ஒன்று உண்டாயின் ஜீவாதார மாயுள்ள, ஸர்வதீ ஸாக்ஷியான அதை—நிச்சயமாக அடைந்தே ஆக வேண்டும். அது எங்குள்ளது? அதற்கு எங்கு யாத்திரை செல் வது? அது என்னால் இயலுமா? அது என்னிடமில்லை போலும், அது எங்கேயோ ஏதோ ஒரு காலத்தில் இருக்கிறது போலும். இதையெல்லாம் மறுக்கும் வண்ணம் உரைக்கப்பட்ட துணிச்ச லான பிரகடனமே இது: அந்த எல்லையற்றது ''எல்லா ருள்ளத்திலும் நிலைத்திருக்கிறது.''

வேதாந்தத்தில் ''இதயம்'' என்றால் மனதில் உயர்ந்த பக்திச் சிந்தனைகள் எழும் ஓர் இடமாகும். நற்குணம் நிறைந்ததோர் சூழ்நிலையில், புத்தியானது இருளுக்கப்பாற் பட்ட, இரட்டையற்ற, முழு முதலான சகலத்தையும் கடந்து நின்று, அதே சமயம் ஸர்வகதமாகவும் இருக்கும் ஆத்மனை நிலை யாக தியானம் செய்தால் 'அதை' அடையலாம். ஆகையால்தான் ''இதயம்'' ஆத்மா வசிக்குமிடமாகக் கருதப்படுகிறது.

சாதகனின் மனம்—புத்தியில் இயங்கும் சைதன்யத்தை அதாலேயே அனுபவித்து வாழ்ந்தால் ஆத்மானுபூதி ஏற்படும்— உப்பின் ஒரு சிறு பகுதியை ஆராய்ந்தாலே ஸோடியம் குளோரைடு பற்றி அறிந்ததாகும் என்பதைப் போல.

பக்தியால் அந்த ''ஒளியை'' நாடு. என்று இந்தத் தலைப் பிற்கு முடிவுரை கூறுகிறார் பகவான்:

*இதி க்ஷேத்ரம் ததா ஞானம் ஞேயம் சோக்தம் ஸமாஸத:*
*மத் பக்த ஏதத் விக்ஞாய மத்பாவாயோ பபத்யதே*

**13:19**

க்ஷேத்ரமும், ஞானமும், ஞேயமும் இவ்விதம் சுருக்க மாகக் கூறப்பட்டன. இதையறியும் என் பக்தன் என்னை யடையத் தகுந்தவனாகிறான்.

இதுவரை இந்த அத்தியாயத்தில் கூறியதெல்லாம் வேதத் தின் தத்துவங்களே. சுருக்கமாக கீதை வடிவில் உபதேசிக்கப்

பட்டதாகும் ''மஹா பூதங்கள்'' முதல் ''உறுதி'' வரை (சுலோ: 6—7) ''க்ஷேத்ரம்'' விளக்கப்பட்டது. ''கர்வமின்மை'' முதல் ''மெய் பொருளாராய்ச்சி'' வரை (சுலோ. 8—12) ''ஞானம்'' விளக்கப்பட்டது. அதன் பின் அந்த ஞானத்தால் ''அறியப் படுவது எது'' என்பதைக் கூறும் (சுலோ. 13—18) ''ஞேயம்'' விளக்கப்பட்டது.

இனி: இந்த உயர் ஞானத்தை அடையத் தகுதியுடைய சாத கன் யார்? ''இதையறியும் என் பக்தன் என்னையடையத் தகுந்த வன்'' என்கிறார் பகவான். இங்கு பக்தி என்பது பகவானிடம் உணர்ச்சிமயமான சரணாகதியடைவதல்ல; க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விவேக புத்தியால் மெய்ப்பொருளை அறிவதே பக்தி. சகல க்ஷேத் ரங்களுக்கும் உயிரூட்டும் சைதன்யமாகிய ஏக வாசுதேவனை அறியவல்ல உண்மையான பக்தனே ''என்னையடையத் தக்கவன்'' (மத் பாவ).

க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞனை ஒருங்கிணைக்கிறார் பகவான்:

ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யனாதீ உபாவபி
விகாரான்ஸ்ச குணான்ஸ்சைவ வித்தி ப்ரக்ருதி ஸம்பவான்
13:20

பிரக்ருதி, புருஷன் ஆகிய இரண்டுமே ஆதியற்றவை என்றறிவாய். வேறுபாடுகளும், குணங்களும் பிரக்ருதி யிலிருந்து பிறந்தவை என்றுணர்க.

முன்பொரு அத்தியாயத்தில் பிரக்ருதியை தாழ்ந்தது 'உயர்ந்தது' என்று பிரித்தார் பகவான். இந்த அத்தி யாயத்தில் அதையே க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்கிறார் இவ்விரண்டும் சேர்ந்ததே சிருஷ்டி மூலம் என்கிறார்.

பிரக்ருதி, புருஷன் இரண்டுமே அநாதியானவை. இரண்டுமே ஈசுவரனின் இரு அம்சங்கள். ஈசுவரன் நித்திய மானவனாகையால் அவனிடமிருந்து தோன்றிய ப்ரக்ருதியும் புருஷனும் கூட நித்தியமே, அதாவது அநாதியே. இவ் விரண்டின் சேர்க்கையால்தான் பிரபஞ்சம் சிருஷ்டிக்கப் பட்டு, காக்கப்பட்டு அழிக்கப்படுகிறது. இவ்விதமாக ப்ரக்ருதியும் புருஷனுமே ஸம்ஸாரத்திற்குக் காரணம்; அவ் விரண்டிற்குமே ஒளிக்கெல்லாம் ஒளியாகிய பகவானே அடிப்படை.

தன்னிலையில் நோக்கினால் என்னுள்ளிருக்கும் க்ஷேத்ரக்ஞனால் இயக்கப்பட்டு, எனது வாசனைகளால் (அக் ஞானத்தால்) ஏவப்பட்ட எனது சிருஷ்டி சக்தியைக் கொண்டு என்னுள்ளிருக்கும் பிரக்ருதி—புருஷனின் குண

இயல்புகளுக்கேற்ப நான் அனுபவ உலகைச் சிருஷ்டித்து, காத்து, அழிக்கிறேன்.

சகல ரூபங்களும் குணங்களும் பிரக்ருதியிலிருந்தே தோன்றுகின்றன. 5—6—வது சுலோகங்களில் கூறிய மாறு பாடுகளும் குணங்களும் அதாவது சுக—துக்கம், மோகம் முதலிய மனோ நிலைகள்—யாவும் பிரக்ருதியிலிருந்தே தோன்றுகின்றன. ப்ரக்ருதியைச் சேர்ந்த விகாரங்கள் அனைத்தும் நிர்விகார கூடஸ்தனாகிய ஆத்மனின் ஸாக்ஷியி லேயே நிகழ்கின்றன.

பிரக்ருதியிலிருந்து தோன்றும் இந்த ரூபங்களும் குணங்களும் யாவை?

கார்யகாரண கர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே
புருஷ: ஸுகது: க்கானும் போக்த்ருத்வே ஹேது ருச்யதே
13:21

காரிய காரண உற்பத்திக்குப் பிரகிருதியைக் காரண மாகக் கூறுவர். சுக துக்க அனுபவத்தில் புருஷனைக் காரண மாகக் கூறுவர்.

காரிய காரண உற்பத்திக்கு: இதில் காரியம் பதின்மூன்று—பஞ்ச மகாபூதங்கள், பஞ்ச இந்திரியங்கள், மனம் புத்தி, அகங்காரம். சமஷ்டி ஸ்தூல பூதங்களின் குணமே வியஷ்டி பஞ்சேந்திரியங்களில் உள்ளன. இதை முன்பே பக வானின் விஸ்வ ரூப தரிசனத்தில் (அத். XI) விளக்கினோம். புறவுலகத் தூண்டுதல்களை வியஷ்டி மனிதன் அறிய வேண்டு மானால் இந்திரியங்களனைத்தும் ஓர் முனையில் குவியவேண்டும்— அந்த முனையே மனம் எனப்படும்.

இந்தப் புறத்தூண்டுதல்களுக்குத் தக்கபடி செயல்படுவ தற்கு அவற்றைப் புரிந்துகொண்டு, பகுத்தறிந்து மனதை ஆளும் திறன் ஒன்றுவேண்டும்—அதுவே புத்தி; பூதங்களாலான விஷய உலகம், மனம், புத்தி இவை மட்டும் இருந்துவிட்டாலும் போதாது. இவற்றையுடையவன் 'நான்' என்று இவைகளோடு அவன் இணைந்திருக்க வேண்டும்—இந்த 'நான்' என்ற உணர்வே அகங்காரம். இந்தப் பதின்மூன்று கூறுகளும் சேர்ந்ததுதான் இந்த சுலோகத்தில் கூறிய 'காரியம்'.

பிரகிருதியைக் காரணமாகக் கூறுவர்: மேற்கூறியவை யாவும் சேர்ந்து விஷய உலகம் எனப்படும். பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் ஆன இந்த விஷய உலகத்தில் சரீரம், புலன், உணர்ச்சி, புத்தி இவையும் அடங்கும்—ஏனெனில் இவையாவும் (பஞ்ச பூதங்கள் முதல் அகங்காரம் வரையுள்ள பதின்மூன்றும்)

நுகர்விற்கு எட்டக்கூடியவை.

சுக துக்க அனுபவத்தில்: சகல விஷய உலகத்தையும், அவை அகங்காரத்தின் மீது உண்டாக்கும் எதிர் விளைவுகளையும் அறிவது ஆத்மன். சைதன்ய ஒளியானது புறவிஷய உலகத்தையும், அகத்தேயுள்ள நுகர்ச்சி, உணர்ச்சி, சிந்தனைக் கரணங்களையும் ஒளிரச் செய்கிறது.

புருஷனைக் காரணமாகக் கூறுவர்: சுகமும் துக்கமும் நமது புத்தியில் ஏற்படும் எதிர் விளைவுகள். நாம் விரும்பியது கிடைக்கும்போது ஏற்படும் அனுபவமே 'சுகம்.' விரும்பாத ஒன்றால் ஏற்படும் அனுபவமே 'துக்கம்'. எந்த அனுபவமும் ஒன்று சுகமாகவோ அல்லது துக்கமாகவோ தானிருக்க முடியும். இவற்றை ஒளிர்விப்பது சைதன்யமே. சைதன்யமின்றேல் அனுபவமும் இல்லை. ஆகையால்தான் சுக, துக்க அனுபவங்களுக்குப் புருஷனைக் காரணமாக்க் கூறுவர். சுருங்கக் கூறின் ஸம்ஸாரத்திற்குக் காரணமே புருஷன்.* க்ஷேத்ரத்தில் க்ஷேத்ரக்ஞனாக இயங்கும் புருஷனே ஸம்ஸாரதுக்கத்தால் தவிக்கிறான். வெயிலில் நிற்பவன் உஷ்ணத்தால் அவதிப்படுகிறான்; அவனே நிழலுக்கு வந்தபின் குளிர்ச்சியை அனுபவிக்கிறான்.

ஆகவே, க்ஷேத்ரக்ஞனே (புருஷனே) சுக, துக்கத்தை (ஸம்ஸாரத்தை) அனுபவிப்பவன் என்று இதில் கூறப்பட்டது. சரி ஸம்ஸாரத்திற்குக் காரணமென்ன? பகவான் கூறுகிறார்:

*புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜான் குணான்*
*காரணம் குணஸங்கோஸ்ய ஸதஸத்யோனி ஜன்மஸு*
*13:22*

புருஷன் பிரக்ருதியில் இருந்துகொண்டு பிரக்ருதியிலிருந்து தோன்றிய குணங்களைத் துய்க்கிறான். குணங்களில் உள்ள பற்றுதலால் நல்லதும் கெட்டதுமாகிய பிறப்பை எய்துகிறான்.

புருஷன் பிரக்ருதியில் நின்று: புருஷனுக்கு ஸ்ம்ஸாரம் கிடையாது. ஆனால் க்ஷேத்ரக்ஞனாகிய புருஷன் பிரக்ருதியுடன் இணையும்போது போக்தாவாகிறான். ப்ரக்ருதியின் காரியங்களாகிய சரீரம், புலன்களோடு அவன் ஒட்டிவிடுகிறான்.

பிரக்ருதியிலிருந்து தோன்றிய குணங்களைத் துயக்கிறான்: பிரக்ருதியான வஸ்து கோசங்களிலிருந்து எழும்

---

* [''புருஷன், ஜீவன், க்ஷேத்ரக்ஞன், போக்தா இவையாவும் ஒரே பொருளுடையவை''—சங்கரர் இதில் கடைசி மூன்று சொற்களும் உணர்த்தும் புருஷன் என்ற சொல் பரமாத்மனாகிய ஆத்மனைக் குறிக்காது. சேதனத்தை—அதாவது உபாதியடைந்த ஜீவனிலுள்ள அறிவியக்கம் கொண்ட தத்துவத்தையே குறிக்கும்]

சுக—துக்கம், குளிர்—சூடு வெற்றி—தோல்வி முதலியவை களே ''க்ஷேத்ரக்ஞனின்'' துன்பத் தளைகளாகும். பிரக்ருதியின் துக்கானுபவக் களத்தோடு தொடர்பு கொண்டு தன்னுடையதாக ஏற்றுக்கொள்வதால் தான் புருஷனுக்கு இந்த சோகத்தளை ஏற்படுகிறது; உண்மையில் இந்த சோகத்தளைகள் புருஷனுக்குரியவையே அல்ல.

புருஷன் வாழ்க்கையின் சுக—துக்கங்களை அனுபவிப்பதுமட்டுமின்றி அவற்றோடு பற்றும் ஏற்படுத்திக் கொள்கிறான்— இந்தப் பற்றுதலால்தான் ''நல்லதும் கெட்டதுமாகிய பிறப்பை எய்துகிறான்.'' ''விருப்பம் எப்படியோ அப்படியே வாழ்வும் அமையும்'' என்ற சாஸ்திர வாக்கியம் முற்றிலும் சரியே. 'க்ஷேத்ரக்ஞன்' பிரக்ருதியின் சுக துக்கங்களை அனுபவித்து அதில் பற்றுதல் கொண்டு விடுவதால் ''வாசனைகள்'' ஏற்படுகின்றன, பின்னர் இந்த வாசனைகளுக்கேற்ற அனுபவக்களத்தையே ஜீவன் விரும்பி அடைகிறான்.

நித்யானந்தனான, எல்லையற்ற நிறைவையுடைய புருஷன் ஒரு க்ஷேத்ரத்தை விரும்பிப்பெற்று அதோடு இணைந்துவிட்டால் ''க்ஷேத்ரக்ஞ''னாகிறான். இவ்வாறு க்ஷேத்திரத்தில் புகுந்து அதை ஏற்றுக்கொண்டு அதில் பற்றும் ஏற்படுத்திக்கொண்டு ஸம்ஸார மோகத்தில் சிக்கித் தவிக்கும் புருஷன், தனது தெய்வீக இயல்பையே மறந்து விட்டதுபோல் காணப்படுகிறது. இவ்விதமாக, அக்ஞானம், க்ஷேத்ரப் பற்றுதலுமே ''சச்சிதானந்தனான'' புருஷன் துன்பமும், கண்ணீரும் படைத்த ஸம்ஸாரியாகக் காட்சியளிப்பதற்குக் காரணமாகும். ஆகையால், 1. க்ஷேத்திரத்தில் பற்றின்மையும் 2. உண்மை ஞானத்தை அனுபவிப்பதுமே நாம் நமது ஆன்மீகச் சுய இயல்பை மீளப் பெறுவதற்கு வழிகளாகும்—வைராக்யமும், விவேகமுமே நம்முள்ளிருக்கும் ஈசுவரனை அடையும் வழிகளாகும்.

நம்மைக் காப்பாற்றும் அந்த ஞானம் எது என்பதை பகவான் நேரிடையாகவே விளக்குகிறார்:

உபத்ரஷ்டானு மந்தா ச பர்த்தா போக்தா மஹேச்வர:
பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேஸ்மின் புருஷ: பர:

*13:23*

இச் சரீரத்திலிருக்கும் புருஷனைப் பார்வையாளன் அனுமதியளிப்பவன், ஆதரவாளன், அனுபவிப்பவன், உயர்ந்த தலைவன், பரம்பொருள் என்று கூறுவார்கள்.

க்ஷேத்ர உபாதியால் மோகமுற்று துக்கமயமாயுள்ள

க்ஷேத்ரக்ஞன் என்ற புருஷனுக்கு நேர் மாறானவன் க்ஷேத்ர உபாதியடையாத தூய புருஷன். பக்கெட் நீரில் தெரியும் சந்திரன் பிரதிபிம்பம். பிரதிபலிக்கும் ஒவ்வொரு பரப்பின் உபாதிக்கும் உட்பட்டுத் தோன்றும் பிம்பங்களனைத்திற்கும் ஒரு உண்மையான வஸ்துவும் இருக்கவேண்டும். இந்த உண்மையான வஸ்து, பிரதிபலிக்கும் ''ஊடக''த்தின் மாறுதல்களால் மாசுபடாதது, சார்பற்றது; ஆனால் அந்த பிம்பமோ அந்த ''எதிரொளிச் சாதனத்தின் குறைபாடுகளை ஏற்பது.

''ஞானம்'' அல்லது சைதன்யமானது, க்ஷேத்ர ஒட்டுறவுக் குட்பட்டால் அதுவே ''க்ஷேத்ரக்ஞன்''. ஆகையால், உண்மையில் உபாதியே அடையாத, ஆனால் உபாதிக் களத்தில் இயங்கும்போது உபாதியுற்றதுபோல் காணப் படக் கூடியதாகிய ஞானம் ஒன்று இருந்தேயாக வேண்டும்.

இவ்விதமாக ஆராய்ச்சியின் பொருட்டு இரண்டு புருஷன்களை விளக்குகிறார் கிருஷ்ணபகவான்—ஒன்று கீழ் மட்டத்திலுள்ளவன், க்ஷேத்ரக்ஞன், மற்றது உயர் மட்டத்திலுள்ளவன், ப்ரக்ருதியால் உபாதியடையாத தூய சைதன்யம். இரண்டுமே ''இந்த சரீரத்தில்''தான் இயங்கு கின்றன.

பிரக்ருதியின் பல்வேறு மாற்றங்களினூடேயும் மௌன ஸாக்ஷியாகத் தோன்றுவது என்ற வகையில் இந்த பரமாத் மன் குறிக்கப்பட்டது. ஒருவன் மோகத்தால் ஆத்மனை அறவே மறந்து நிற்கும்போது அவனுள்ளேயே இருக்கும் இந்த ஆத்மன் ஒரு பார்வையாளனைப் போல் (உபத்ரஷ்டா) வீற்றிருக்கிறது; உதாரணமாக ஒருவன் ஒரு அப்பாவியைக் கொலை செய்யும்போது அந்தக் கொலை காரனின் சரீரத்திலும் தோற்றமாயுள்ள இந்த ஸர்வேசு வரன் அதை ஒருமௌன ஸாக்ஷியாகத்தான், ஒரு பார்வை யாளனைப் போலத்தான் பார்த்துக்கொண்டிருக்கிறது. சரி யான செயலைச் செய்யும்போது மனம் அமைதி நிலையிலிருக் கிறது. ஆத்மனை அறவே மறந்துவிடாமல் செயல் படுபவனுள்ளே இந்த பரமாத்மன் ''அனுமதிப்பவனாகத்'' தோன்றுகிறது.

பூரண ஆத்ம உணர்வோடும், ஈசுவர சரணாகதியோடும் சரிவரச் செயல்படுபவனிடத்தே அந்த ஸர்வேசுவரன் ''ஆதரவாளனாகத்'' தோன்றுகிறது. இத்தகைய செயல்கள் 'அவன் அருளால்' வெற்றிகரமாகவே முடிகின்றன, அச் செயல்களை 'அவன்' ஆதரிக்கிறான்.

யோக யுக்தனாக, நித்ய சைதன்யஸ்வரூபனாக இருப்ப

வனிடத்தில் அந்த ஸர்வேசுவரனே போக்தாவாக காணப் படுகிறது. இத்தகைய மகேசுவரனைத்தான் பகவான் உயர் நிலை ஆத்மன் என்கிறார்.

க்ஷேத்ர உபாதியடையாமல் உயர்நிலை ஆத்மனை அறிந் தவன் வாழ்க்கையில் எப்படிச் செயல்படுவான்?

ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச குணை ஸஹ
ஸர்வதா வர்த்தமானோபி ந ஸ பூயோபிஜாயதே 13:24

எவனொருவன் புருஷனையும் பிரக்ருதியையும் இந்தவித குணங்களுடையதாக அறிகிறானோ அவன் எந்நிலையிலிருப்பினும் மீண்டும் பிறவான்.

புருஷன் க்ஷேத்ர உபாதியடைவதால்தான் ஸ்ம்ஸாரம் உண்டாகிறது என்று முன்பாடலில் கண்டோம். இந்த உபாதி ஏற்படாத பக்ஷத்தில், புருஷன் ஸம்ஸார துக்கமின்றி விஷய உல கத்தில் ஒரு பார்வையாளனாகவே இருந்திருக்கும். ஆனால் எல்லை யற்ற 'அது' மன, புத்தி வாசனைகளால் (*Reactions*) தான் நேரடி யாக உபாதியடைந்ததாகக் கருதும் மோகத்தினால்தான் அது துக்கமும் மரணமுமுடையவனாக இயங்குகிறது.

புறவுலக அனுபவங்களால் ஏற்படும் வாசனைகளைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு புருஷன் மீண்டும் மீண்டும் சுகமான உயர் பிறவியையோ அல்லது துக்ககரமான ஈனப்பிறவியையோ எடுக் கிறது.

1. பிரக்ருதி எது, 2. புருஷன் எது, 3. புருஷன், பிரக்ருதி உபாதியால் எப்படி ''க்ஷேத்ரக்ஞனாக'' நடந்துகொள்கிறது 4. குணங்களின் ரகசியம் என்ன என்பதையெல்லாம் உணர்ந் தவன் ஞானியாகிறான்.

ஒரு விஷயத்தை அறியவேண்டுமானால், நாம் அந்த விஷயத் தோடு ஒன்றிவிடாமல் தனித்து நின்றால்தான் அறிய முடியும். அதுபோலவே விஷய உலகத்தையும், அதைத் தீண்டும் கரணங் களையும், அவற்றின் குணங்கள், போக்குகளையும் அறிவதற்கு அவற்றினின்றும் தனித்து நிற்கவேண்டும்—இந்த நிலையில்தான் புருஷனை அறியமுடியும். முழு முதலான, எல்லையற்ற, தூய சைதன்யமே நமது இயல்பு என்பதை அறிவதே நமது அக்ஞானத்தைப் போக்கும் வழியாகும். அக்ஞானம் நீங்கினால் ''க்ஷேத்ர'' உபாதியும் நீங்கிவிடும். அதனால்தான் ''அவன் எந் நிலையிலிருப்பினும் மீண்டும் பிறவான்'' என்கிறார்—அதாவது புற வுலகத் தொடர்பில் அகங்காரமையத்தை ஆதாரமாகக் கொண்ட தீண்டுதல் இல்லையாதலால் அவனது பழைய வாசனை

கள் தீர்ந்துபோவதோடு புதிய வாசனைகளும் எழாது என்று பொருள்.

ஜீவன்தான் மனதில் வாசனைகளைத் தோற்றுவித்து, அந்த வாசனைகளுக் கேற்றபடி அந்த மனதின் மூலம் சுகதுக்க அனு பவங்களையும் அதற்கான கரணங்களையும் ஏற்படுத்துகிறது. ஆத்மானு பூதியடைந்தவனிடம் வாசனைகள் தீர்ந்து விடு கின்றன; தேகம் வாழும் வரையில் அவன் அதில் தங்கியிருப் பான்; பிரம்ம ஞானியே பிரும்மமாகிவிடுகிறான்; அபரோக்ஷ ஞானம் ஏற்பட்ட மாத்திரத்திலேயே அவனது சஞ்சித, பிராப்த கர்மங்கள் யாவும் மடிந்துவிடுகின்றன—இவை யாவும் உபநிஷத்துக்களில் உரைக்கப்பட்ட உண்மைகளேயாகும்.

ஆத்ம ஞானத்திற்கான மார்க்கங்கள் யாவை? இனி காண் போம்.

த்யானேனாத்மனி பச்யந்தி கேசிதாத்மானமாத்மனா
அன்யே ஸாங்க்யேன யோகேன கர்மயோகேன சாபரே
13:25

சிலர் தியானத்தால் தன்னுள்ளிருக்கும் ஆத்மனைத் தானே கண்டுகொள்வர். சிலர் ஸாங்க்ய யோகத்தாலும், மற்றும் சிலர் கர்ம யோகத்தாலும் கண்டுகொள்வர்.

சடப் பொருளாலான உறைகள் நீங்கிய தூய ஆத்மனை உணர்வதே ஆன்மீக சாதனையின் இறுதி லட்சியம். இதற்கான வழிகள் பல. ஒரு மனிதன் எந்த நிலையிலிருக்கிறானோ அந்த நிலையி லிருந்தே தொடங்கவேண்டும் அவனது ஆன்மீக ஒருங் கிணைப்பும். படிப்படியாக ஏற்படவேண்டும் இந்த சாதனை.

முதலில் அமைதியற்ற கரணங்களையுடைய சாதகனுக்கு ஒரு 'மார்க்கம்' தேவை. இந்தப் பாடங்களை ஒருவன் தன் புத்தியால் ஏட்டுக் கல்வியைப் போல் கற்றுக்கொண்டால் மட்டும் ஆன்மீக மலர்ச்சி ஏற்பட்டுவிடாது. அதைக் கற்கும் ஒருவன் தன் வாழ்வி லேயே அதைக் கடைப்பிடிக்கவேண்டும். தீவிரமாகவும், புத்தி கூர்மையோடும், உற்சாகத்தோடும் அவன் தனது மன வாழ்வைத் திருத்தியமைத்துக் கொண்டால்தான் இதில் வெற்றி பெற முடியும்—இது எளிதல்ல.

ஒரே லட்சியத்தையடைவதற்கு பல சாலைகளை வகுத்தனர் அக்காலத்திய ஆன்மீக விஞ்ஞானிகள். ஒரு குறிப்பிட்ட பாதை யில் செல்பவனுக்கு அப்பாதையே மிகவும் ஏற்றதாகும். எந்த ஒரு

மன, புத்தியின் சம நிலையைப் பொருத்ததுதான் சாதகர் களுக்கிடையே வேறுபாடு உள்ளதும். அந்தக் கரண சுத்திக்காக சில பாதைகளுண்டு; அதன்பின் தியான மார்க்கம்.

சிலர் தியானத்தால் ஆத்மனைக் கண்டு கொள்வர்: ''விஷயங்களிலிருந்து புலன்களை இழுத்து மனதிற்குள் குவித்து, பின்னர் மனதை புத்தியில் குவித்து, பின்னர் புத்தியை பிரம் மத்தில் நிலைக்க வைப்பதே'' தியானம் என்கிறார் சங்கர பகவத் பாதர். இது தைல தாரை (எண்ணெய் ஒழுக்கு) போன்ற இடையறாத சிந்தனை. இத்தகைய தோர் பாதையில் செல்ல ஒரு வனுக்கு நல்ல செயல்திறம் வாய்ந்த இதயமும் மனமும் அவ சியம்.

ஆத்மனைக் ''கண்டு'' என்றால் கண்ணால் பார்க்கும் வஸ்து வைப் போலல்ல. ஆத்மனை இத்தகைய வஸ்துவாக்கிவிட்டால் சாஸ்திரக் கூற்று பொய்யாகிவிடும். ''நானே'' ஆத்மனாகையால் இங்கு ''கண்டு'' என்றது தன்னைத் தானே அறியும் அக அனுபவத்தையே குறிக்கும். இந்த அனுபவமானது, ஒரு பொருளை நாமே கண்கூடாகக் கண்டபின் எப்பேர்ப்பட்ட அசைக்க முடியாத அறிவு பெறுகிறோமோ அப்பேர்ப்பட்ட அனுபவமாகும்.

''தன்னுள்ளிருக்கும் ஆத்மனைத் தானே'': அபரோக்ஷானுபூதியானது தன் தூய இதயத்திலிருப்பதைத் தன் புத்தியாலேயே அறிவது. ''தியானத்தின் மூலம் யோகி தன்னுள்ளிருக்கும் தூய சைதன்யமாகிய ஆத்மனை தன்னா லேயே—அதாவது தியானத்தில் சுத்தி பெற்ற அந்தக்கரணத்தால், (புத்தியால்) —காண்கிறான்'' என்கிறார் சங்கரர். மனமும் புத்தி யும் நிலைத்துக் குவிந்து, வாசனைகளும் நீங்கினால் அதுவே ஆத்மன் பிரதிபலிக்கத்தக்க தூய கண்ணாடிப் பரப்பாகும். இந்நிலையில் ஆத்மன் உள்ளுணர்வாகக் கண்டு கொள்ளப்படுகிறது.

ஆத்மனி (அறியும் கரணம்) ஆத்மனா, ஆத்மானம்: அறியும் சாதனம், அறிபவன், அறி பொருள்). இந்த மூவிடத்தும் ஒரே சொல் வந்துள்ளது—ஏன்? இறுதியான அபரோஷானு பூதி யில் கரணம், காண்பவன், காணப்பட்டது யாவுமே அந்த ஏக ஆத்மனன்றி வேறல்ல என்றாகிவிடுகிறது, அதனால்தான் ஒரே சொல் பயன்படுத்தப்பட்டது. அலை, சிற்றலை, நுரை யாவுமே அந்த சமுத்ரமேயன்றி வேறல்ல. கனவு காண்பவன், கனவு கண்ட பொருள், கனவு யாவுமே விழித்திருப்பவனின் மனமே யன்றின்றி வேறல்ல. இந்த வகையில்தான் நமது சாஸ்திரங் களும் கோசாதி சரீரங்களையே ஆத்மன் என்று கூறுவதுண்டு.

மனதை அடக்கி புத்தியை நிலைப்படுத்தி இரண்டையும் ஒருங்கிணைத்து ஆத்ம தியானத்தில் நிறுத்துவது எல்லாருக்கும்

இயலாது. அதற்கு அந்தக்கரண சுத்தி அவசியம். கடுமையான விவேகத்தாலும் வைராக்யத்தாலும் சுத்தி பெற்ற இத்தகைய சாதகர்கள் மட்டுமே அந்த உயர்ந்த பாதையில் செல்லமுடியும்.

அப்படியின்றி விவேகம் இருந்து, வைராக்கியம் பொங்கு வதும் மங்குவதுமாக இருக்கப் பெற்றவர்கள் ஸாங்க்ய யோகத் திற்கு ஏற்றவர்களாவர். இவர்கள் சில சமயம் நன்கு தியானஞ் செய்வர், மற்ற சமயங்களில் மனம் அமைதியற்று அலைபாயும். இத்தகைய சாதகர்களுக்கு சாஸ்திர சிரவணமே சிறந்த சாதன மாகும். ''ஸாங்க்யம்'' என்ருல் ''தர்க்கரீதியான சிந்தனையின் மூலம் தீர்க்கமான ஐயந்திரிபற்ற வேதாந்தக் கருத்துக்களை அடைவது'' என்று பொருள்.

ஆழ்ந்த சிரவண மனனத்தால் வேதாந்த அறிவுபெற்ற ஒருவன் தியானத்திற்கேற்ற சமநிலையை எளிதில் அடைவான். இத்தகைய தத்துவ விசாரணை நம்மை தியான யோகத்திற்குள் செலுத்துமாதலால் சாஸ்திர சிரவணத்தையும், மனனத்தையுமே (ஸாங்க்யம்) யோகம் என்கிருர். யோகத்திற்குள் நம்மை அழைத்துச் செல்வதே யோகம் எனப்படும்—அதாவது ''டெல்லி ஒன்பதரை மணிக்குப் புறப்படும்'' என்ருல் அதில் டெல்லி என்பது ரயிலைக் குறிக்கும்; டெல்லி நகரத்தையல்ல. ஆகவே தியான யோகத்திற்குத் தகுதியற்றவர்கள் ஸாங்க்ய யோகத்தை மேற்கொள்ளலாம்.

மற்றும் சிலர் கர்ம யோகத்தால்.....;ஸாங்க்ய யோகத் திற்குத் தகுதியற்றவர்களும் உண்டு. இவர்கள் மனதில் அந்த அளவிற்கு வாசனைகளின் விஷம் ஊறியுள்ளது. கலக்கமுற்ற கரணத்தைக் (மனதை) கொண்டு தியானம் செய்யமுடியாது. ஆகையால் இத்தகையோர், தமது செயல்களையே சுயநலமின்றி யக்ஞ பாவத்திலேயே செய்ய வேண்டும். கீதையில் கூறிய வண்ணம் (அத்தியாயம் III, சுலோகம்—30) இந்தக் ''கர்ம யோகத்தைச்'' செய்துவந்தால் மனம் அமைதியுறும். பின்னர் அந்த மனம், மந்திரங்களின் தத்துவத்தில் ஆழ்ந்து மனனத்திற்கு ஏற்றதாகும்—இதன் விளைவாக அவனது தியானம் வல்லமை பெற்று பிரம்மத்திற்குத் தாவிச் செல்லும்.

சுருங்கக் கூறின் சிறந்த சத்வ குணம் படைத்த சாதகர் களுக்கு தியானயோகம் சிறந்தது. சிறிதளவு சத்வமும், பெரு மளவு ரஜோ குணமும் படைத்தோருக்கு ஸாங்க்ய யோகம் ஏற்றது. வாசனைகளின் தொல்லையில் கடும் மனவுளைச் சலில் அவதிப்படுவோர்களெல்லாம் ''கர்ம யோகம்'' செய்து சத்வ குணத்தை வளர்த்துக்கொள்ளவேண்டும், பின்னர் இந்த ஸாத்வீக வலிமையால் தியானத்தில் நிலைக்கவேண்டும்.

அப்படியானுல் தமோ குணத்தில் ஊறியிருப்போர் கதி

என்ன? ''கேள்'':

*அன்யே த்வேவமஜானந்த: ச்ருத்வான்யேப்ய உபாஸதே*
*தேபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ச்ருதி பராயணு:*
*13:26*

இவற்றைக் கேட்டறியாதோரும் பிறரிடம் கேட்டறிந்து என்னை வழிபடுகின்றனர். அவர்களும் தாம் கேட்டதற்கேற்ப நடந்தால் மரணத்தை வென்றவராவர்.

முன் சுலோகம் உத்தம, மத்யம அதிகாரிகளுக்கேற்ற பாதையைக் கூறிற்று. இனி கடைநிலை அதிகாரிகளுக்கும் ஒரு வழி காட்டுகிறுர் கீதாச்சாரியன்.

பிறரிடம் கேட்டறிந்து: சிலர் தியானஞ் செய்யவே இயலாதவர்கள். அவர்களால் ஸாங்க்ய யோகத்தையோ, கர்ம யோகத்தையோகூட செய்ய முடியாது. இவர்கள் மெய்ப் பொருள் பற்றிப் பிறரிடம் கேட்டறிந்து 'அதை' வழிபட்டாலே போதும், அவர்களும் உயரமுடியும்.

அவர்களும் மரணத்தை வென்றவராவர்: மற்ற பக்தர் களிடம் கேட்டறிந்து அதன்படி இடையருது பகவானை உபா ஸிக்க முடிந்தால் இவர்களும் வரையுடைய பன்மையுலகைக் கடந்து சென்று நிர்விகார ஸ்வரூபனை அடைய முடியும். இதில் ''மரணம்'' என்பது சரீரமரணத்தைக் குறிப்பதல்ல. மாற்றத் தின் சமஷ்டித் தத்துவமாகிய பரந்த பொருளையே குறிக்கும். ஸ்தூல, சூக்கும, காரண சரீரங்களால் சூழப்பட்டிருக்கும் வரை யில் நமது அனுபவங்களும் வரம்புக்குட்பட்டவையாகவே இருக்கும். வரை கடந்த அனுபவமானது மரணமற்றநிலை, மரணத்திற்கப்பாற்பட்ட நிலை.

பாமரத்தனமாகச் செய்தாலும் பக்தியானது பலனளிக்கும் என்று இந்த சுலோகம் கூறினுலும், அதே சமயம் எல்லா மார்க் கங்களும் ஒரே மாதிரி சக்தியுடையவை என்று கூறவில்லை. ஆனுல் பக்தியைப் புரிந்துகொண்டு செய்தால் சிறந்த பலனை அளிக்கும் என்றே அது வலியுறுத்துகிறது. தாமே அறியாமல், பிறர் கூறக் கேட்டுச் செய்யும் சாதகர்களே பலனடைகிறுர்கள் என்றுல், ''சாஸ்திர அறிவும் விவேகமும் படைத்திருந்தால் இன்னும் எவ் வளவு முன்னேற்றமடைய முடியும்,'' என்கிறுர் சங்கரர்.

இத்தியாதி மார்க்கங்களால் உள்ளபடியே அடைய வேண்டிய லக்ஷியம் எது?

*யாவத் ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்வம் ஸ்தாவர ஜங்கமம்*
*க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ ஸம்யோகாத் தத் வித்தி பரதர்ஷப*
*13:27*

*பாரதகுல ச்ரேஷ்டனே! அசைவுள்ளதும் அசைவற்றது*

மான எது தோன்றினுலும், அது க்ஷேத்ரமும், க்ஷேத்ரக்ஞனும் சேர்ந்ததால் உண்டாவது என்றறிக.

உலகிலுள்ள அசைவற்றதும் அசைவுள்ளதுமான பொருள் கள் யாவும் பிரக்ருதியிலிருந்தோ அல்லது புருஷனிலிருந்தோ தோன்றியவையல்ல; அவ்விரண்டின் சேர்க்கையால்தான் தோன்றுகின்றன. அதுவும் அப்படியே ஏற்படுவதல்ல, கற்பனை யால், ஒன்றின் மேல் ஒன்றை ஏற்றிக் காண்பதால் தான் அப்படித் தோன்றுகின்றன.

ஒவ்வோர் மேல்சுமத்தீடும் கூடஸ்தப் பொருளைத் துணை யாகக்கொண்டு காணப்படும் பிரமையே, மாயையாகும் பேயின் உருவமும் குணங்களும் கம்பத்தின் மீது கற்பிக்கப்படுவது மட்டு மின்றி, கம்பமும், இருப்பே இல்லாத அந்தப் பேய்க்கு தன்னு டைய இருப்பைத் தருகிறது. இத்தகைய பரஸ்பர பரிமாற்றத் தால், இருப்பற்ற பேய் நம் அனுபவத்தில் இருப்பு பெறுகிறது, இருப்புடைய கம்பம் இருப்பற்ற பேயாகி கையும், காலும், கோர உருவமும் படைத்த பொய்த் தோற்றத்தைத் தருகிறது. மனதின் இந்தக் குறும்புச் சேட்டைக்கு *(Trick)* பரஸ்பர மேல் சுமத்தீடு *(Mutual Superimposition)* என்று பெயர். தூய சைதன்யத்தில் க்ஷேத்ரம் கிடையாது. க்ஷேத்ரத்திற்கு இருப்புமில்லை, சேதனமு மில்லை. ஆனுல் ஆத்மன் க்ஷேத்ரத்தில் (ப்ரக்ருதியில்) இயங்கும் போது க்ஷேத்ரக்ஞனுகிறது (புருஷனுகிறது); புருஷன் பிரக்ருதி யில் வேலை செய்யும்போது இந்தச் சேர்க்கையாலேயே ஸ்தாவர, ஜங்கமத்தாலான பிரபஞ்ச தோற்றம் ஏற்படுகிறது.

தக்க விவேகத்தின் மூலம் நாம் நம்முள்ளேயே நிகழும் இந்த இயக்கத்தை கண்டுகொண்டு விட்டால், நமது பன்மையான நோக்கு நீங்கி, புருஷ—பிரக்ருதி சேர்க்கையே கூடஸ்தனுகிய மெய்ப்பொருள் மீது இயங்குகிறது என்பதைப் புரிந்து கொள் வோம்.

சாதாரணமாக நான் அமைதியானவன். சில சமயங்களில் என்னுள் வெறியுணர்ச்சி வந்து விடுகிறது. அப்போது நான் அந்த வெறியுணர்ச்சியோடு ஒன்றி, உலகில் வெறியனுகச் செயல்பட்டு, பின்னர் அதற்கு வருந்தவும் செய்கிறேன்! இதில் வருத்தம், வருந்துபவன், வெறி, வெறியன் எல்லா வகையுமே என்னுள் ளேயேதான் நிகழ்கின்றன. இவை யாவும் எனக்குரியவை, ஆனுல் நான் அவையல்லவே! எனினும் நான் அவற்றோடு இணைவுறும்போது நான் வருந்தத்தக்க செயலைச் செய்பவனுகி றேன், என்னுள்ளிருக்கும் வெறியனே அந்தச் செயலுக்கு வருந்து பவனுமாகிருன். அது போலவே ஆத்மன் பிரக்ருதிக் கூறுகளைப் பெற்றிருக்கிறது—எனினும் ‘அது’ பரிபூரணனுகவே இருக்கிறது. பிரக்ருதியை வெளிப்படுத்தி அதோடு இணைந்து காணும் ஆத்மன்

புருஷனுகிறது, பின்னர் அந்தப் புருஷன் தான் தோற்றுவித்த க்ஷேத்ரத்தில் இருந்துகொண்டு ஸம்ஸாரமனைத்திற்கும் காரண மாகிறது. கூர்ந்த விவேகத்தால், துணிந்து பற்றுதல் நீக்கி, நம்முள் நிகழ்வதனைத்தையும் ஸாக்ஷியாகத் தனித்து நின்று நோக்கிய வண்ணம், நமது கற்பனைகளுக்கு நாமே ஆளாகாம லிருப்பதே நம்முள்ளேயே இருக்கும் பூர்ணத்வத்தை அடையும் வழியாகும்.

புருஷன்—பிரக்ருதிக்குக் கூடஸ்தனுயிருக்கும் ஆத்மன் எங்கும் பரவியுள்ளது.

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேஸ்வரம்
விநச்யத்ஸ்வ விநச்யந்தம் ய: பச்யதி ஸ பச்யதி

13:28

உயிர்களனைத்திலும் சமமாயிருப்பவனும், அழிவனவற்றுள் அழியாதவனுமாகிய பரமேஸ்வரனைக் காண்பவனே காண்பவனுவான்.

பரமேசுவரனைக் காண்பவனே காண்பவனுவான்: எந்த பரமேசுவரன் மீது மாயோபாதிகளான க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞன் லீலைகள் யாவும் நிகழ்ந்து ஸம்ஸார துக்கமும் ஏற்படுகின்றனவோ அந்த பரமேஸ்வரனே தூய இருப்புடைய நித்தியத் தத்துவ மாகும். அலைகளனைத்திலும் இருந்து, அவற்றின் ஆக்க அழிவு லீலைகளனைத்தையும் தாங்கி, அந்த அலைகளையெல்லாம் இணைத்து நிற்பது ஏகமான அந்த சமுத்திரமேயாகும். அவ்வாறே சகலத்தி னுள்ளும் கூடஸ்தனுக இருந்துகொண்டு அவற்றைத் தாங்குவது அந்தப் பரமேஸ்வரனேயாகும்.

அழிவனவற்றுள் அழியாதவன்: மேலெழுந்தவாரியாக நோக்கினுல், உலகம் இடையருது மாறி அழியக்கூடியகளமே. எதுவும் ஒரு கணமும் மாருமலிருக்காது. விஷயங்கள் மாறினுல் அவ்விஷயங்களிடையேயுள்ள உறவும் மாறிக்கொண்டேதான் இருக்கும். குழம்பிப் புரளும் இந்த மாற்றத்தைத்தான் நுகர்வு, உணர்ச்சி, சிந்தனைக் களமனைத்திலும் நாம் காண்கிருேம். ஓயா மல் மாறும் இயல்புடையது இந்தப் பன்மையான உலகம் என்ற வகையில் பார்த்தால் முழு முதல் மெய்ப்பொருளானது இந்த மாற்றங்களனைத்தும் நிகழ்வதற்கான மாற்றமற்ற கூடஸ்தனுகும் என்றறியலாம்.

பிறப்பு, வளர்ச்சி, பிணி, தேய்வு, மரணம் முதலிய மாற்றங் களுக்குட்பட்டதே இத்தோற்றமான உலகிலுள்ள அனைத்தும் மாற்றமாகிய சங்கிலித் தொடர் பிறப்பில்தான் தொடங்குகிறது; பிறப்புடைய ஒன்றுதான் வளர்ச்சி முதலான மாற்றங்களைப்

பெற்று இறுதியில் மரணத்தையடையும். இங்கு பரமேசுவரனை ''அழிவற்றவன்'' என்று கூறுவதால், மற்ற மாற்றங்களும் 'அவனு'க்கில்லை என்று பொருள். அழியாத சைதன்யம், என்றும் அழிவுடைய பன்மையுலகை ஒளிர்வித்து அவ்வுலகின் மாற்றங்களைத் தாங்கி நிற்கிறது. தங்க நகைகளை அழித்து வேறு அளவிலும், உருவிலும் நகை செய்தாலும் அதில் மாறுமலிருக்கும் கூறு அந்தத் தங்கமேயாகும்.

சரீரங்கள் மாறினாலும் தான் மாறுமல், நாம ரூபங்களுடைய அனைத்திலும் தூய ஆத்மனாக இருக்கும் பரமேஸ்வரனை எவன் அறிகிறானோ அவனே உள்ளபடி காண வேண்டியதைக் காண்பவன். இந்தச் சுலோகத்தில் ''காண்பது'' என்றது கண்ணால் காண்பதல்ல, ''ஆத்மானுபூதி'' என்று பொருள்.

பௌதீக உலகை சரீரக் கரணத்தால் நுகரலாம்; உணர்ச்சிகளை மனதால் உணரலாம், கருத்துலகத்தை புத்தியாலறியலாம். உலகிலுள்ள ஸ்தாவர ஜங்கமம் அனைத்திலுமுள்ள ஆன்மீகக் கூடஸ்தனை (Spiritual Substratum) நம்முள்ளேயே இருக்கும் ஆன்மீக—மையத்தால்தான் அறிய முடியும். எப்படி கண்களால் எண்ணங்களைக் காண முடியாதோ அப்படியே நுகர்வு, உணர்ச்சி, சிந்தனைகளின் கரணங்களால் அதைவிட நுண்ணியதாய் அதை வரைகடந்து நிற்கும் புருஷனையும் காண முடியாது.

இதைக் ''காண்பவனே காண்பவனுவான்'': இது மிகவும் சக்தி வாய்ந்த நேரிடையான மெய்க் கூற்றாகும். அனைவரும் காண்பது மெய்ப்பொருளல்ல. புலனுணர்வுக் கரணங்களில் பொருத்தக்கேடு இருப்பின் தவறான நுகர்வுகளே விளையும். மனதின் மருட்சியும் மாயமும், மாயக் கற்பனைகளும், மாயப் புறத் தோற்றங்களும் காண வேண்டிய மெய்ப் பொருளை மறைக்கின்றன. ஆகையால் யோகீஸ்வரன் கூறுகிறார்—சகல அனுபவங்களையும் ஒருங்கிணைத்து இசைவுறச் செய்யும் அந்த ஏகமான மெய்ப்பொருளை, சகலத்திலும் ஒன்றேயான அந்த மெய்ப்பொருளைக் காண்பவன் எவனே அவனே உண்மையில் காண வேண்டியதைக் காண்பவனுவான். மற்றவர்கள் கண்டும் காணாதவர்களே.

மெய்ஞ்ஞானத்தை அடைவதன் பலன்களைக் கூறுவதன் மூலம் மெய்ஞ்ஞானத்தைப் புகழ்கிறார் பகவான்:

ஸமம் பச்யன்ஹி ஸர்வத்ர ஸமவஸ்திதமீச்வரம்
ந ஹினஸ்த்யாத்மனாத்மானம் ததோ யாதி பராம் கதிம்
*13:29*

எல்லாவிடத்திலும் ஈசுவரன் சமமாக நிலைத்திருப்பதை உணர்பவன் தன்னைத் தானே அழித்துக்கொள்ள மாட்

டான். ஆகவே அவன் உயர்ந்த பதத்தையடைகிறான்.

வேதாந்தம், உலகத்தை மறுதளித்துரைப்பதைவிட, பொருள்களும், ஜீவன்களும், நிகழ்ச்சிகளும் அடங்கிய இவ் வுலகத்தை மறுகணிப்பு செய்வதையே வலியுறுத்துகிறது. நமக்குப் பிடித்த கருத்துக்களைக்கூட நாம் நமது நிலையற்ற புத்தி யாலும் மனதாலும்தான் காண்கிறோம். இவ்வுலகை நமது கரணங்களாலின்றி ஞானக் கண் கொண்டு நோக்கினால், துக்கத் தாலும், இழிவாலும் மங்கிப் பாழாகித் தோன்றும் இந்த உல கத்தையே நிறைந்த பேரானந்தமும், தெய்வீகப் பவித்ரமும் உடையதாகக் காணலாம். கோணலாக கரணங்களைக்கொண்டு இவ்வுலகை நோக்குவதால்தான் மெய்ப்பொருளைப் பற்றிய நோக்கும் தவறுகிறது.

தூய சைதன்யமானது தன்னையே கரணங்களின் மூலம் காணும்போது பன்மையான உலகமாகத்தான் தெரியும்—எந்த க்ஷேத்ரத்தைச் சார்ந்து வெறித்தனமாக மாறும் கரணங்களி னூடே, அதற்குரிய க்ஷேத்ரக்ஞன், அதே க்ஷேத்ரத்தைச் சார்ந்த இப்பன்மையான உலகத்தைக் காண்கிறானோ, அந்த உலகம் நாட்டியமாடுகிறது, முறைக்கிறது, சீட்டியடிக்கிறது, குதிக்கிறது, ஊளையிடுகிறது—இழிந்து, நாறிக் கொண்டிருக்கிறது. பயங்கர மாகக் கிடந்து புரளும் இந்தத் துன்பத்தினூடேயும் பரமேசுவர னைக் கண்டுகொள்வதே பயனற்ற கலக்கங்கள் அனைத்தும் தீர வழியாகும். இத்தகையவன் ''எல்லாவிடத்திலும் ஈச்வரன் சம மாக நிலைத்திருப்பதைக் காண்கிறான்.'' அவனுக்கு பயமுமில்லை துக்கமுமில்லை. கம்பத்தையறிந்து கொண்டால் அதிலுள்ள பேய் போய் விடுகிறது.

அவன் ''தன்னைத் தானே அழித்துக் கொள்வதில்லை'': முன்னர் (அத். VI ஸ்லோ 5—6ல்), எப்பொழுது ஒருவன் தனக்குத் தானே பகைவனாகிறான் என்று பகவான் விளக்கினார். தாழ் மட்டத்திலிருக்கும் அகங்காரம், நம்முள்ளேயே இருக்கும் உயர் ஞானியானவன் காட்டும் வழியை யுணராதபோதெல் லாம், அந்தத் தாழ்ந்தவன் நமது எதிரியாகிறான். வாகனம் நம் வசமில்லையானால் பயன் தராது, அழிவையே தரும். அவ்வாறே, தாழ் மட்டத்திலிருக்கும் அகங்காரம் உயர்மட்டத்திலிருக்கும் ஆத்மனுக்கு வசமாகாவிட்டால், முன்னது பின்னதின் எதிரியாகி விடுகிறது. எங்கும் நிறைந்த பரமேச்வரனைக் கண்டுகொண்டு அனுபவிக்கும் ஒருவனை தாழ் மட்டத்திலிருக்கும் அகங்காரம் அண்ட முடியாது.

''ஆகவே அவன் உயர் பதத்தையடைகிறான்'': ஆத்மனின் உண்மையான இயல்பை ஒருவன் அறியாவிட்டால் அதற்குக் காரணம் அக்ஞானம் அல்லது மித்யாக்ஞானம் அல்லது

தவருகப் புரிந்துகொள்ளும் அறிவு அக்ஞானத்தால் மித்யாக்ஞானம் எழுகிறது. ஸர்வகதமான பரமேச்வரன் ஒன்றே என்பதை அறியாதவன், எல்லா உயிர்களிலும் உறையும் ஆத்மனை அறிய முடியாதவனுகவே உலகில் செயல்படுகிருன். அதனுல்தான் அவன் தன்னைச் சுற்றியுள்ள ஜீவராசிகளுக்குத் துன்பந் தருபவனுகிருன். அக்ஞானத் திரையினுல் நாம் ஸர்வகதமான நித்ய வஸ்துவைக் காணத் தவறியதோடன்றி சரீராபிமானம் கொண்டு சரீரம்—மனம் இவையே மெய்ப்பொருள் என்ற கருத்திலேயே வாழ்கிருேம்; அதன் விளைவாக சுய நலத்தோடு, லோகாயதமாக, சிற்றின்பங்களையே நாடி, நாமும் துன்புற்று, பிறரையும் துன்புறுத்திய வண்ணம் காலங்கழித்து வருகிருேம். அக்ஞானமும் மித்யாஞானமும் நீங்கிவிட்டால் அதுவே முழுமுதற் பொருளின் அனுபவம், அதுவே உயர்பதம்—ஆகையால் ''அவன் உயர்பதத்தையடைகிருன்'' என்கிருர் பகவான்.

மனிதர்கள் பலவிதமாக நடந்து கொள்வதால், ஒவ்வொருவருள்ளும் உறையும் பரமேஸ்வரனும் தனித்தனி ஆத்மனுகத் தானே இருக்கவேண்டும்—இந்தப் பன்மைக் கருத்தை மறுக்கிருர் பகவான்:

ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணுனி ஸர்வச:
ய: பச்யதி ததாத்மானம்கர்த்தாரம் ஸ பச்யதி

13:30

கர்மங்களெல்லாம் பிரக்ருதியாலேயே செய்யப்படுகின்றன என்றும், புருஷன் செய்கைகளைச் செய்பவனல்லன் என்றும் காண்பவனே காண்பவனுவான்.

வெவ்வேறு காலத்திலும், வெவ்வேறு கம்பெனிகளாலும் உற்பத்தி செய்யப்பட்ட வெவ்வேறு ''இழுதிற''னும் கொண்ட மோட்டார் வண்டிகளை வரிசையாகச் சாலையில் ஓடவிட்டுப் பார்த்தால் ஒவ்வொரு வண்டியின் ஓட்டமும் தனி விதமாகத் தானிருக்கும். இதனுல் பெட்ரோலின் சக்தி வெவ்வேறு விதமாகும் என்று கூற முடியுமா? விதவிதமான ''வாட்'' திறன் கொண்ட மின் விளக்குகளின் மூலம் விதவிதமான ஒளியைத் தரும் மின்சாரம் வெவ்வேருகி விடுமா? கரணங்களைப் பொருத்தே விதவிதமான தோற்றங்கள் ஏற்படுகின்றன; ஆனுல் அவற்றினூடே இயங்கும் சக்தி ஒன்றே. இந்த உதாரணங்கள் இந்த சுலோகத்தின் வியத்தகு கருத்தை விளக்கும்.

கருமங்களெல்லாம் பிரக்ருதியாலேயே செய்யப்படுகின்றன: வேண்டிய கருமத்தைச் செய்யும் கரணம் பிரகிருதியே. மனம் மோசமாயிருந்தால் அதன் மூலம் நடத்தப்படும் வாழ்க்கை

யும் மோசமாகவே இருக்கும். புத்தியின் ஆசைகள் எத்தன்மை யது என்பதைப் பொருத்தே செயல்களும். புருஷன் முன்னிலையில் பிரக்ருதி இயங்குகிறது; ''க்ஷேத்ரத்தில்'' ஆத்மன் ''க்ஷேத்ரக்ஞனுக'' இப்புறவுலகில் இயங்குகிறது. க்ஷேத்ரக்ஞன் க்ஷேத்ரத்தை விட்டு நீங்கினுல் க்ஷேத்ரத்திலும் செயல் நிகழாது, ஆத்மனும் செயலின்றியே இருக்கும்.

புருஷன் செயலற்றவன்: ஆத்மன் ஸர்வகதமானது, நிறைந்து நிற்பது, அதற்கு ஆசைகள் எதுவுமில்லை. ஆசை யில்லாத இடத்தில் செயலுமில்லை.*

தன்னுடைய கரணங்கள் எப்படி இயங்குகின்றன என் பதையும், ஆத்மன் செயலற்றது என்பதையும் எவன் அறி கிருனே, அவனே ''அழிவனவற்றின் அழியாததைக் காண்பவன்'' இவ்விதம்'' காண்பவனே காண்பவன்.[1] மனிதனுக்கு மனிதன் வேறுபாடுகள் தோன்றுவதற்குக் காரணம் உபாதி. இந்த உபாதி நீங்கிவிட்டால் சகலமும் ஸர்வேஸ்வரனே.[2]

ஆத்மனே சகல ஜீவன்களுக்கும் மூலமானது என்று விளக்கும்போது அந்த ஸ்ர்வேஸ்வரானுபூதியடைந்தவ னின் நிலை என்ன என்று விளக்குகிருர்:

*யதா பூத ப்ருதக் பாவம் ஏகஸ்தமனுபச்யதி*
*தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா*

*13:31*

தனித்தனியாக வாழும் பிராணிகள் ஒரே பொருளி லிருப்பதையும், அந்த ஒரு பொருளிலிருந்தே அவைகள் விரி வடைவதையும் ஒருவன் காணும்போது அவன் ப்ரும்மமாகிருன்.

புத்தியாலறிந்த ஒரு தத்துவத்தை நடைமுறைக்குக் கொண்டு வந்தால்தான் விக்ஞானபூர்வமான விசாரணை பூர்த்தி யாகும்.

பொருள் அணுக்களாலானது என்று ஒருவன் புரிந்து கொண் டால், அந்த அணுக்களின் பலவிதமான சேர்க்கையால்தான் உலகிலுள்ள எல்லையற்ற ரூபங்களும் குணங்களும் தோன்று கின்றன என்பதையும் அவன் புரிந்து கொண்டவனுவான். அதே போல நாம ரூபங்களுக்கெல்லாம் அடிப்படைக் காரணம் ஆத் மனே என்றுணர்ந்தவன், அந்த ஆத்மனிலிருந்துதான் எண்ணி

---

* ஆத்மன் செயலற்றது என்பதன் காரணங்களை 32—வது ஸ்லோகம் விளக்கும்.

[1] *[மாயையே பிரக்ருதி, இந்த மாயை ஸர்வேஸ்வரனுள் அடக்கம்''— ஸ்வேதாஸ்வதாரோபநிஷத்—4, 10]*

[2] ஆத்ம போதம் விரிவுரைகளில் 10வது சுலோகம் பார்க்கவும்.

றந்த நாம ரூபங்கள் யாவும் எழுகின்றன என்பதையும் உணர்ந் தால்தான் அவனது ஞானம் பூர்த்தியானதாகும்.

எல்லா அலைகளும் சமுத்ரமேயன்றி வேறல்ல என்று நாம் அறிவதைப் போலவே ''தனித்தனியாக வாழும் பிராணிகள் ஒரே பொருளிலிருப்பதையும்'' நாம் உணர வேண்டும். சமுத் திரத்தைப் புரிந்துகொண்டதுமே, அலைகளும் அதனின்றுதான் எழுகின்றன என்றும் அறிந்துகொள்கிறோம்; அவ்வாறே ''அந்த ஒரு பொருளிலிருந்தே அவைகள் விரிவடைவதையும்'' உணர் பவனே ஞானி. இவ்விதமாக அகமும் புறமும், ஊடுருவியும், தாங்கியும் அணைத்துக் கொண்டும் இப்பிரபஞ்சத்தின் பன்மை யான நாம ரூபங்களனைத்திலும் இருப்பதை உணரும் ஞானி ''பிரம்மமே''யாகிவிடுகிறான்.

ஆத்மாவால்தான் ஆத்மாவை அறிய முடியும். எவ னொருவன் ஆத்மனை ஒரே சீரான ஒரே வஸ்துவாகக் காண்கி றானோ, எவனொருவன் தன்னுள்ளிருக்கும் சைதன்யமும் எங்கும் நிறைந்த சைதன்யமும் ஒன்றே என்று உணர்கிறானோ, எவ னொருவன் தான் சரீர உணர்வு பெற்றதுமே பன்மையான இவ் வுலகம் தனது மாயத் திரையை வீசி அழகிய முகமாகிய ஆத்மனை அழிவுடைய நாம ரூபங்களினால் கோரப்படுத்திவிடும் என்றுணர் கிறானோ, அவனே உண்மையான ஞானி நிறைவடைந்தவன். அவ்வாறுணர்ந்த கணமே அவன் தன் சரீரங்களைக் கடந்து சர்வகதமான சைதன்யத்தோடு ஒன்றி விடுகிறான்.

சகல சரீரங்களிலுமுள்ள ஆத்மன் ஒன்றே என்றால், அதுவும் செயல் புரிந்து வாசனைகளைச் சேர்க்குமே—இந்தக் கருத்து சரி யல்ல என்று நிரூபிக்கிறார்.

அனாதித்வாந்நிர்குணத்வாத் பரமாத்மாயமவ்யய:
சரீரஸ்தோபி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே 13:32

குந்தி புத்ரா! ஆதியற்று, குணமற்று இருப்பதால் அழி வில்லாத இந்த பரமாத்மா சரீரத்திலிருப்பினும் அது செய லற்றது, பற்றற்றது.

ஆத்மா சரீராதி கரணங்களைச் செயல்படத் தூண்டுகிறது என்றாலும் தான் செயலற்றே இருக்கிறது—இது வேதாந்தத்தைக் கற்கத் தொடங்கிய மாணவர்களுக்கு எளிதில் விளங்காது. அதைப் புரிய வைப்பதற்காகத்தான், ஸர்வமும் நிறைந்து, எல்லை யற்று, சகலத்தையும் ஊடுருவி, அத்வைதமாக நிற்கும் ஆத்மன் தனக்கென அடைய வேண்டியது எதுவுமில்லை என்று உப நிஷத்துகள் விளக்குகின்றன. ''பிரக்ருதியே செயல் புரிகிறது''

என்று * முன்பே க்ஷேத்ரத்தால் (பிரக்ருதியால்) உபாதியடையும் போது க்ஷேத்ரக்ஞன் (புருஷன்) ஆகிறது; இந்தத் ''தனித் தன்மை படைத்த அகங்காரமே'' செயல்படுவதும் பலனடைவது மாகும்.

''சரீரத்தில் இருப்பினும் அது செயலற்றது, பற்றற்றது'' எப்படி என்று காண்போம். ஸ்ரீ கோபால் ராவ் என்ற நீதிபதி ஒரு குற்றவாளிக்கு மரண தண்டனையளித்தால், அந்த நீதிபதி கொலை புரிந்தவராகக் கருதப்பட மாட்டார்; அந்த நீதிபதியினுள்ளிருக்கும் தனித்தன்மை கேடுறுவதில்லை. நீதிபதி ஆசனத்தில் ஸ்ரீ கோபால் ராவ் அமர்ந்திருக்க, அந்த நீதி பதிதான், மரண தண்டனையை விதித்தார்.

''ஆதியற்று'': காரணமுடைய ஒன்றிற்குத்தான் ஆரம்பம் உண்டு. ''ஆதியற்று'' என்றால் ''காரணமுமில்லை'' என்று பொருள். சிருஷ்டியனைத்திற்கும் காரணமான ''அது'' காரண மற்றது, காரணங்களுக்கப்பாலது. ஒரு காரணத்தால் பிறந்த ஒன்று காரியமாகி விடுகிறது. காரியமனைத்துமே, காரணமானது மாற்றமடைந்ததேயன்றி வேறல்ல. காரியமனைத்தும் மாறக் கூடியவை, மாறக் கூடியவையனைத்தும் அழியக்கூடியவையே.

''குணமற்று'': மாறுதலில்லாத ஒன்றிற்கு குணங்கள் இருக்க முடியாது ஏனெனில் குணங்களையுடையது பொருள் (Substance), பொருள்கள் யாவும் அழிவுடையவையே. அழி வற்ற, எல்லையற்ற ''அது'' அனைத்திற்கும் ''காரண கர்த்தா,'' ஆனால் ''அதற்குக்'' காரணமாவது எதுவுமில்லை. ஆகவே ''அது'' குணமற்றது.

''அழிவில்லாத இந்த பரமாத்மா'': இப் பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரணமாயுள்ள காரணத்துக்கப்பாலான காரண கர்த்தாவாகிய'' நிர்குணமான பரமாத்மா அழிவற்ற தாகத்தானே இருக்க முடியும். மாற்றம் என்பதே சிதைவுறுத லின் இயல்பாகும். மாற்றமற்றது அழிவற்றதுமாகும். குண மற்றது மாற்றமேயடையாது!

ஆகையால் ஆதியற்ற, குணமற்ற, அழிவில்லாத பரமாத்மா சரீரத்திலிருந்து கொண்டு சகல ஜீவராசிகளையும் வாழ்வில் செயல் படச் செய்தாலுங்கூட தான் செயல் புரிவதில்லை.

இது மிகவும் சூட்சும புத்தியால் மட்டுமே அறியக்கூடிய மிக நுண்ணிய வேதாந்தத் தத்துவங்களுள் ஒன்றாகும். வேதாந்தத்தி லுள்ள இந்தக் கடினமான பகுதியை சற்றே மனனஞ் செய்தால் குழப்பம் நீங்கும்.

---

* (அத். V, ஸ்லோ. 14—ல்) விளக்கினோம்.

ஆத்மன், இசைவற்று, பேய்த்தனமாகச் செயல்படும் க்ஷேத்திரத்தின் மத்தியிலும் தான் மட்டும் செயலின்றி, குண மின்றி இருப்பதை உதாரணங்களோடு விளக்குகிறுர் பகவான்:

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாதாகாசம் நோபலிப்யதே
ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே
13:33

எங்கும் பரவியிருக்கிற ஆகாசம் நுண்ணியதாயிருப்ப தால் எப்படிக் களங்கமடைவதில்லையோ அப்படியே தேக மெங்கும் நிறைந்துள்ள ஆத்மா களங்கமடைவதில்லை.

எங்கும் பரவியுள்ள ஆகாசம் எப்படிக் களங்கமடை வதில்லையோ......: புருஷன்—பிரக்ருதி உறவைக் காட்ட ஆகாசமே உதாரணம். தூய ஆகாசத்தில் (வெளியில்) சகல பொருள்களும் அடங்கும். ஸ்தூல பூதங்களில் மிகவும் நுண்ணியது ஆகாசம். மிகவும் நுண்ணிய ஒன்று பெருமளவு பரவியதாயிருக்க வல்லது. ஆகாசம் தன்னை விட ஸ்தூலமா யுள்ள அனைத்திலும் பரவியிருக்கிறது. நுண்ணிய ஒன்று ஸ்தூல மான எதாலும் உபாதியடையாது. ஆகாசம் அனைத்தினும் சூட்சுமமானது.

சூட்சுமமாயிருப்பதால் ஆகாசம் அனைத்திற்கும் இட மளித்தாலும் தான் கறை படாது. அந்த ஆகாசத்திற்கே காரண மானது பரமாத்மன், ஆகையால் ‘அது’ ஆகாசத்தினும் சூட்சும மானது, ‘‘அது அனைத்திலும் பரவியுள்ளது, அதில் எதுவும் பரவுவதில்லை’’ பன்மையான உலகின் நிகழ்ச்சிகளும் அல்லது ‘அதில்’ இருக்கும் எதுவும் ‘அதைக்’ கறைபடுத்த முடியாது.

கனவில் கொலை புரிந்து விட்டால் விழித்தபின் அவனை அது கறைப்படுத்தாது! வேதாந்த உதாரணத்தில் வரும் பேயின் ரத்தக் கறை படிந்த ஆடைகள் கம்பத்தைக் கறைப்படுத்தா. கானல் நீர் பாலைவனத்தின் மணலை நனைக்காது. மருட்சியான, மாயச் சுமத்தீடுகளுக்கு உதாரணங்களே இவை. பன்மையான உலகம் மெய்ப்பொருள் அறியாத அக்ஞானத்திலிருந்து எழுந்த மித்யக்ஞானமேயன்றி வேறல்ல; ஆதலால் பிரக்ருதியும் அதன் செயல்களும் ‘‘நித்யமானதை,’’ ‘‘தூய்மையானதைக்’’ களங்கப்படுத்த முடியாது.

ஆகாசத்தில் இடம் பெற்ற கழிவுகளெதுவும் அதைக் களங்கப்படுத்த முடியாது என்பதைப் போல, சரீரமனைத்திலும் பரவியிருக்கும் ஆத்மன் களங்கப்படுவதில்லை. பின்னர் சரீரத்தில் ஆத்மனின் வேலைதான் என்ன? கேள்:

யதா ப்ரகாசயத்யேக: க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி:
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததாக்ருத்ஸ்னம் ப்ரகாசயதி பாரத13:34

பாரதா! சூரியன் எப்படி உலகனைத்தையும் ஒளியுறச் செய்கிறதோ அப்படியே பரமாத்மா பிரபஞ்சமனைத்தையும் பிரகாசிப்பிக்கிறான்.

சாஸ்திரத்திலேயே மிகச் சிறந்த உதாரணங்களுள் ஒன்றை இங்கு தருகிறார் பார்த்தசாரதி. இதன் மூலம் க்ஷேத்ர—க்ஷேத்ரக்ஞனிடையுள்ள உறவு நம் அறிவுக்கு எட்டும்படி கூறப் படுகிறது. வெகு தூரத்திலிருந்தே பிரபஞ்சமனைத்தையும் ஒரே சூரியன் ஒளிர்விப்பதைப் போலவே, சைதன்யமானது விஷய உலகம், சரீரம், மனம், புத்தி அனைத்தையும் ஒளிரச் செய்கிறது.

அன்றாட உரையாடலில், உலகிற்கு சூரியன் ஒளி தரும் செயலைச் செய்கிறது என்று நாம் கூறினாலும் ஆழ்ந்து ஆராயுமிடத்து சூரியன் ஒரு செயலைச் செய்வதாகக் கூற முடியாது. ஒரு செயலுக்கு ஆதியும் அந்தமும் உண்டு, ஒரு செயலைச் செய்வது ஒரு நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக. இந்த விதத்தில் சூரியன் உலகிற்கு ஒளி தரவில்லை. மாறாக, சூரியனின் இயல்பே ஒளி தருவது, அதன் முன்னிலையில் சகலமும் ஒளி பெறுகின்றன. அதே போல சைதன்யத்தின் இயல்பே உணர்வு நிலை ''அதன்'' இருப்பில் அனைத்தும் அறியப்படுகின்றன—ஒளி பெறுகின்றன.

உலகிற்கு ஒரே சூரியன். அது நல்லது கெட்டது, அழகியது—கோரமானது, நல்லோர்—தீயோர் ஆக சகலத்திற்கும் ஒளி தருகிறது. எனினும் தீயனவற்றால் அது கேடும், நல்லனவற்றால் சிறப்பும் அடைவதில்லை. அதே போல நமது அக வாழ்விலும் சச்சிதானந்தமானது கரணங்களை ஒளிர்விக்கிறது எனினும் 'அது' மனதின் பாபங்களாலோ, புத்தியின் வக்கிரங்களாலோ சரீரத்தின் குற்றங்களாலோ களங்கமடைவதில்லை. 'அது' ஒளியையே தருகிறது. இந்த ஆத்ம ஒளியேதான் நமது சிந்தனைகளிலும், உணர்ச்சிகளிலும் மோதிச் சிதறி மாற்றமுடைய பல்வேறு மனிதர்களாகவும், நடத்தைகளாகவும் உருவாகின்றன.

க்ஷேத்ர—க்ஷேத்ரக்ஞத் தத்துவத்திற்கு முடிவுரை கூறுகிறார் பகவான் அடுத்த ஸ்லோகத்தில்:

க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோரேவ மந்த்ரம் ஞான சக்ஷுஷா
பூதப்ரக்ருதி மோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம்
13:35

எவனொருவன் ஞானக் கண்ணால் க்ஷேத்ர—க்ஷேத்ரக்ஞ வேறுபாட்டையறிகிறானோ அவன் பூதப் பிரக்ருதியினின்றும் விடுதலை பெற்று ப்ரம்மத்தை அடைகிறான்.

ஆத்மா ஒளிர்விப்பது; அது ஒளிர்விக்கப்பட்ட பொருளின்

குணங்களால் களங்கமடைவதில்லை என்று கூறிய பின், கிருஷ்ண பகவான் நேரடியாகவே கூறுகிறார்: க்ஷேத்ரத்திற்கும், க்ஷேத்ரக்ஞனுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டையும், உறவையும், தன்னுள்ளிருக்கும் பரமாத்மனையும் தியானத்தின் மூலம் சூட்சும புத்தியால் அறிந்தால் தான் மனிதனின் வாழ்வு நிறைவு பெற்றதாகும். இதற்கு அந்தக் கரண சுத்தியும், ஒருங்கிணைந்த மனமும் இதயமும் அவசியமாகும்—அப்பொழுதுதான் புலனுக்கெட்டாத, அழிவற்ற ஏகமாகிய பிரும்மத்தை அடைய முடியும். அது தானே உந்தி எழும் உள்ளுணர்வாக எழுவதாகும்—இதுவே ''ஞானக் கண்.''

க்ஷேத்ர—க்ஷேத்ரக்ஞனின் தன்மைகளையும் அவற்றிடையேயுள்ள வேறுபாட்டையும், பரமாத்மனையும் அறிந்து, ''க்ஷேத்ரம்'' (ப்ரக்ருதி, அல்லது அவித்யா, அல்லது அவ்யக்தம்) ''க்ஷேத்ரக்ஞன்'' (தனிப்பட்டவன், அகங்காரம், ஸம்ஸாரி, வரையுடையவன்) இவற்றின் இருப்பின்மையை அறிபவன் எவனோ அவனுடைய ஞானமே பாதிப்பை ஏற்காத முழு முதல் ஞானமாகும். ''க்ஷேத்ரம்'' என்பது உபாதான காரணம் மனதின் கற்பனைகள் மற்றும் மயக்கங்களினின்றும் தனித்த இருப்பு அதற்குக் கிடையாது. அக்ஞானமே மித்யக்ஞானத்தைத் தோற்றுவிக்கிறது. உபாதன காரணத்தின் இருப்பின்மையை (Non Existence) உணர்வதே நம்முள்ளேயே இருக்கும் பரமாத்மனின் அழிவற்ற இயல்பில் நாம் வாழ்பவர்களாவோம்.

இவ்விதமாக பகவத் கீதை என்னும் உபநிஷத்தும்,
பிரம்மவித்தையும், யோக சாஸ்திரமுமான
கிருஷ்ணார்ஜுன உரையாடலில் க்ஷேத்ர
க்ஷேத்ரக்ஞ விபாக யோகம் என்ற
பதின்மூன்றும் அத்தியாயம்
முற்றிற்று

கீதையின் மிகச் சிறந்த அத்தியாயங்களுள் ஒன்றான இது சுய விசாரணையின் மூலம் நம்முள்ளேயே இருக்கும் ஆத்மனை தியானித்து அடையும் முறையை விளக்குகிறது. கனவிலிருந்து விழித்ததும் கனவுநிலையில் பட்ட துன்பம் யாவும் நீங்கிவிடும். விழிப்பு, கனவு, ஆழ் உறக்கம், ஆகிய உலகங்களைத் துல்லியமாக வரையறுத்துக் காட்டும் எல்லைக் கோடு எதுவுமில்லை. அதே போல க்ஷேத்ரக்ஞனும் க்ஷேத்ரத்தில் ஸம்ஸார துக்கத்தில் தவிக்கிறான்; ஆனால் விசாரணையின் மூலம் க்ஷேத்ரக்ஞன் உண்மையில் க்ஷேத்ரத்திலிருந்து வேறானவனல்ல என்பதைப் புரிந்து கொண்டானானால் அதுவே தனது தெய்வீக இயல்பை அறிந்து கொண்டதாகும்—இந்த விழிப்பு நிலையில் தான் க்ஷேத்ரக்ஞனையிருந்த கனவு நிலை அறவே நீங்கி விடுகிறது.

பன்மையும், ஸம்ஸாரமும் கனவுநிலைச் சதியின் விவரங்களேயாகும். தூய உணர்வு நிலையை அடைவதே, அதாவது ஆத்மனே க்ஷேத்ர உபாதியடைவதுதான் க்ஷேத்ரக்ஞன் என்றுணர்வதே அறிய வேண்டியதை அறிந்ததாகும். மெய்ப்பொருளை இவ்வளவு நேரடியாகவும் தெளிவாகவும் கீதை முழுவதிலுமே வேறெங்கும் காண முடியாது.

# குணத்ரய விபாக யோகம்

## (குணங்கள்—மனநிலைகள்

## 14

ஆன்மதத்துவம் பௌதிகப் பொருள்களுள் இருந்து அவற்றின் வழி செயல்பட்டு தனி ஜீவனைத் தோற்றுவிக்கிறது. அந்த ஜீவன் உலகத்தில் தன் அனுபவங்களைத் துய்க்கிருன். என்கிற இந்தக் கருத்து இது வரை நமக்குச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது. அறிவியல் (விஞ்ஞான) மாணவர்களுக்கு இந்தப் பௌதீகப் பொருள்கள் எங்கும் ஒரே தன்மைத்தானவையாகவே இருக்கின்றன என்கிற உண்மை நன்ருகவே தெரியும். தாதுப் பொருள்கள், திரவப் பொருள்கள், காற்று எல்லாம் தத்தமக்கு உரிய தன்மைகளுடன் எங்கும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். ஆன்மீகம் கற்றுத் தரும் குருமார்கள், அவர்கள் எந்தக் காலத்தவர்களாயிருந்தாலும் சரி, பௌதீகப் பொருள்களுக்கு (பிரகிருதிக்கு) உயிரும் இயக்கமும் தருவது ஆன்மதத்துவம் என்றும் 'அந்தத் தத்துவமும் எங்கும் அதே

ஒன்றுதான்' என்றும் மாறுபாடு இல்லாமல் ஒரே விதமாகச் சொல்லி வந்திருக்கிறார்கள். அந்த ஆத்மதத்துவம் எங்கும் ஊடுருவிப் பரவி நிற்பது. எப்போதும் இடையறாத இயக்கம் கொண்டது. இந்த இரண்டு கருத்தையும் சேர்த்துப் பார்த்து விட்டு உலகைக் கவனிக்கும்போது ஒரு முரண்பாடு தென் படுகிறது. ஒரே தன்மைத் தான பௌதீகப் பொருள்கள் (பிரகிருதி) மூலமாக ஒன்றேயான ஆத்ம தத்துவம் இயங்கும் போது இந்த உலகில் மாறுபாடுகள் தோன்றும் என்று நம்மை நம்பச் சொல்கிறார்கள். இதைக் கேட்கும்போது பார்த்தவுடன் புரிந்துவிடும் ஒரு முரண்பாடு தோன்றுகிறது. அதுவும் சமா தானம் கூற முடியாத முரண்பாடாக புதிராக இருக்கிறது.

இந்தக் கருத்து சென்ற அத்தியாயத்தில் விஸ்தாரமாக விளக்கப்பட்டிருக்கிறது. ஆனாலும் இந்த உலகத்தில் காணும் மாறுபாடுகளுக்கு விளக்கம் ஒன்றும் சொல்லப்படவில்லை. இயற்கையில் தாவர இனம் மிருக இனத்திலிருந்து மாறுபட்டிருக் கிறது. மிருக இனம் மனித இனத்திலிருந்து மாறுபட்டு இருக் கிறது. இது தெளிவு. மீண்டும் அந்தந்த இனத்துக்குள்ளேயே எடுத்துக் கொண்டாலும் மாறுபட்ட வகைகள் இருக்கின்றன— ஒரே இனத்தில் எந்த இரண்டு நபரை (மரங்களை அல்லது மிருகங்களை அல்லது பறவைகளைப் பார்த்தோமானால் அந்த இரண்டும் ஒரே மாதிரியாகக் காணப்படுவதில்லை. உடல், மனம் இரண்டு தளத்திலுமே ஒரே மாதிரியாகத் தோற்றமளிப்பதில்லை. ஒரே ஆன்ம தத்துவம் தான் ஒரே மாதிரியான பௌதீகப் பொரு ளால் சுற்றப்பட்டிருக்கிறது என்ற கருத்தை ஏற்றுக்கொண்டால் அந்த நிலையில் ''இந்த விதம் பரஸ்பரம் மாறுபட்ட பன்மைப் பொருள்கள் பல ஏற்படுகின்றனவே இது எவ்வாறு?'' என்பதற்கு விளக்கம் கிடைப்பதில்லை.

சென்ற அத்தியாயத்தில் போகிற அவசரத்தில் வாழ்க்கை யில் தோன்றும் அனுபவங்களின் மாறுபாட்டிற்கு ஒரு விளக்கம் தரப்பட்டது. அது வந்திருக்கிற வாக்கியம் வருமாறு: 'புருஷன் பிரகிருதியில் அமர்ந்து பிரகிருதியின் அடியாகப் பிறக்கும் குணங் களை ஏற்றுக்கொள்கிறான்' இதுதான் ஐயத்துக்கிடமின்றி பிரகிருதியின் மூலம் இயங்கும் ஆத்மா ஏன் தோற்றத்துக்குத் தோற்றம் (உயிருக்கு உயிர்) மாறுபட்டுத் தோன்றுகிறது? என்ப தற்கு விளக்கம் தருகிறது.

ஒரே கங்கை நீரை எடுத்து நூறு விதமான சீசாக்களில் ஊற்றினால் பல வகைத் தோற்றங்கள் காணப்படும். என்றால் அதற்கு ''நீர்கள் மாறி இருக்கின்றன என்று பொருள் இல்லை. ஆனால் அந்த மாற்றம் சீசாக்களின் நிறம், உருவம் இவற்றின் காரணமாக நிகழ்வது. சீசாக்களின் கண்ணாடியடிக்குள்ளதுதான் நிறத்திலும் உருவத்திலும் தெரியும் மாறுதல். அந்த மாறுதல்களை

நீரின் மேல் ஏற்றி வைத்துவிடுகிறோம். அதாவது சீசாவின் குணங்கள் (தன்மைகள்) நீருக்குடையன போல் ஆகி விடுகின்றன. நீல நீர், பச்சை நீர், பெரிய நீர், சிறிய நீர் என்ற வகையில் நீர் நமக்கு மாறித் தோற்றம் அளிக்கிறது—அல்லது நாம் அவ்விதம் பார்க்கிறோம். அதே போல்தான் அநாதி, அநந்த மான ஒரே தத்துவம் அநேக பிரகிருதியின் உருவங்களில் அமர்ந்து இயங்கும்போது மாறுபட்ட பல்வேறு தனித்தனி பொருளாக அல்லது ஜீவன்களாக தோற்றம் அளிக்கிறது. பிரகிருதிப் பொருள்களின் பொருள் ஒன்றுதான். ஆனால் தனித் தனிப் பொருள்களின் குணங்கள் வேறு வேறு. அந்தக் குணங்கள் பிரகிருதிக்கே உரியவை. எனவேதான் இந்த மாறுதல், பன்மை, தனித்தனி இருப்பு. எல்லாம்.

கீதையில் ''குணம்'' என்ற சொல், பொருள்கள் விஷயத்தில் சொல்லும் 'தன்மைகள்' என்ற கருத்தில் பயன்படுத்தப் படுவதில்லை. மனம் செயலாற்றும்போது கொண்டிருக்கும் மனப் பாங்கு அல்லது மனநிலையைக் குறிக்கவே அந்தச் சொல் ஆளப் பட்டிருக்கிறது. நம்முடைய ஒரு அம்சமான மனத் தளத்தில் இயங்கும் 'நான்' மூன்று விதமான ''பருவ நிலைகளுக்கு' உட்பட்டு இயங்கி அவற்றுக்கேற்றவாறு நடந்து கொள்கிறான். இம்மூன்றும் ''குணங்கள்'' என்று இனம் பிரிக்கப்பட்டிருக்கின் றன. அவை 'சத்துவம்' என்கிற மௌனத் துடிப்புடன் கூடிய நிஷ்கிரிய (செயல் அடங்கிய) நிலை; செயல் துடிப்பு நிலை * செயலே அற்ற தாமஸ நிலை என்பனவாகும்.

இந்த மூன்றும் பல விகிதங்களில் சேர்ந்து மனிதனுடைய மனதின் பண்பாற்றலையும் புத்தியின் சிறப்புத்தன்மையையும் பாதிக்கின்றன. இவற்றால்தான் மனிதனுக்கு அவனுக்கே உரிய தனித்தன்மை ஏற்படுகிறது. ஒவ்வொரு உள்ளத்திலும் இம் மூன்றும் எப்போதும் இருக்கும். ஆனால் மனிதனுக்கு மனிதன் அவைகளின் கூட்டு விகிதம் மாறி இருக்கும். சிலரிடம் அதிகம் இருக்கும். சிலரிடம் குறைவாக இருக்கும். எனவேதான் தனித்தனி மனிதனைப் பார்த்தால் அவனுடைய நடத்தை, சீலம், போக்கு இவற்றில் தனி மணம் வீசுகிறது.

கீதை சுய பூரணத்வம் அடைவதற்கான விஞ்ஞானம் பற்றிய உரைக் கோவையாகும். எனவே அதில் கூறப்படும் விஷயம் மிகவும் அறிவுபூர்வமாக, தர்க்கத்துக்கு ஒத்து விரிக்கப் படுகிறது. அத்தியாயத்துக்கு அத்தியாயம் கீதையின் பொருள் எவ்வளவு ஒழுங்காகத் திட்டமாக வளர்ந்து வருகிறது என்பதை நாம் கவனிக்கிறோம். முதல் அத்தியாயத்தில் சில கருத்துக்கள் காட்டப்படுகின்றன. அடுத்த அத்தியாயத்தில் அவற்றை நன்றாக

---

* *13ம் அத்தியாயம் இருபத்தொன்றும் சுலோகம் பார்க்க.*

விளக்கவும் பூராவாக ஆய்ந்து தெளிவாக்கவும் ஒவ்வொன்ருக எடுத்து விவரிக்கப்படுகிறது. சரியான உரிய நேரங்களில் அக் கருத்துக்களைப் பூர்ணமாக ஜெரித்துக் கொண்டு நம் முடையனவாக ஆக்கிக்கொள்ள வேண்டும் என்பதற்காக டஜன் கணக்காக புதிய கருத்துக்களும் கொடுக்கப்படுகின்றன. இந்த முறையில் வளர்ந்து வரும் கீதையில் மனிதன் குணங்களைப் பற்றித் தெரிந்துகொள்ள மிகவும் தக்க தருணம் இதுதான். இந்த அத்தியாயத்தில் அவை ஒவ்வொன்ருக எடுத்துக் கொள்ளப்பட்டு தெளிவாகவும் முழுமையாகவும் விஸ்தாரமாகவும் விளக்கப்படுகின்றன. ஒவ்வொன்ருக நமக்கு அறிமுகப் படுத்தப்படுகிறது.

நம் ஒவ்வொருவருக்குள்ளும் இந்த மூன்று குணங்களும் இருந்துகொண்டு தம் வேலையைச் செய்கின்றன. எனவே நம் ஒவ் வொருவருக்கும் தனக்கு உள்ளேயே இந்தக் குணங்களை நாடி அறியும் கலை தெரிந்திருக்க வேண்டும், நோயாளிகளின் புறக் குறிகளை நோக்கி அவற்றின் அடிப்படையில் நோய் உறுதி செய்யப்படுகிறது. புறக் குறிகளுக்காக மருந்து கொடுப்பது நோய் தீர்ப்பதற்கான ஒரு வழி. இந்த அத்தியாயத்தில் கீதா சாரியன் சில குறிகளை எண்ணிச் சொல்கிருர். அவை மனித னிடத்தில் எந்தக் குணம் மேலோங்கி நிற்கும்போது தோன்றும் என்று அறிவிக்கின்றன.

இவ்விதமாக, நாம் இந்த அத்தியாயத்தை ஊன்றிக் கவ னத்துடன் படித்தோமானுல் குறிப்பிட்ட நேரத்தில் எவ்வகை யான போக்குகள் அல்லது நிலைகள் நம் மன வாழ்வைப் பாதிக்க என எழுகின்றன என்பதைக் கண்டுகொள்ளும் ரகசிய ஆற்றல் கிடைக்கும். உலகில் புறத்தே பழகும்போது நம்மை எந்த வகை ஆதிக்கங்கள் ஆட்படுத்திக் கொள்கின்றன என்று நுணுகிப் புரிந்துகொள்ளும் அளவுக்கு சாதகன் தன் உணர்வை வளர்த்துக் கொண்டு விட்டால் தவருன ஆசை உணர்ச்சிகள் பாவப் போக்கு கள் நெறி தவறிய விருப்பத் தூண்டல்கள்—ஆகியவற்றை ஒதுக்கி அவனுல் நேர்மையான அற வாழ்வு, சுய அடக்கம், களங்கமற்ற புனிதத்தன்மை இவற்றுடன் சமநிலையில் வாழ முடியும்.

சுருக்கமாக, இந்த அத்தியாயம் சூட்சும சரீரத்தில் செயல் போக்கின் விவர(ண)மும் நம்முடைய உள் இயந்திரம் தடை பட்டு தாறுமாருக ஓட ஆரம்பித்தால் அதை சரி செய்வதற் காகவும் உபயோகப்படும் சில குறிப்புகளையும் கொண்ட உப யோகமான கை ஏடு! ஒரு மோட்டார் வண்டியில் ''பானெட்டு''க்குக் கீழே இருக்கும் இயந்திரத்தின் அமைப்பு, தன்மை இவற்றைப் பற்றி ஒன்றுமே அறியாத ஒருவன் மோட் டார் வண்டியை ஓட்ட ஆரம்பித்து தொலைவுப் பிரயாணம் செய்ய முற்பட்டால் என்ன ஆகும்? இஞ்ஜின் ஏதாவது தகராறு

செய்யத் தொடங்கிற்ருனல் அவனுக்கு யாத்திரை இன்பமே கிட்டாமல் போய்விடும். மாருக இஞ்சினைப் பற்றி நன்கு தெரிந்த கெட்டிக்கார மோட்டார் ஓட்டியாக இருந்தால் அவன் உடனே வண்டியை நிறுத்தி கீழே இறங்கி ''பானெட்''டைத் (இயந்திரத்தின் மேல் மூடியை) திறந்து பார்ப்பான். கோளாறைச் சரி செய்து மீண்டும் மோட்டாரை இனிமையாக ஓட வைத்து விடுவான்.

அநேக சாதகர்கள் தங்களுடைய ஒளி பொருந்திய முன்னேற்றம் கொண்ட ஆன்மீக வாழ்வை இடையிலேயே நிறுத்தி விடுகிருர்கள். காரணம்: சுய பூர்ணத்வத்துக்கான பாதையில் பாதியில் இஞ்சின் கோளாறு ஏற்பட்டு விடுகிறது. 'இந்த மனது ஏன் இந்த விதம் அலைகிறது, அலைக்கிறது?' என்று புரியாத காரணத்தால் அவனை சிற்றின்பப் பேராசை வேட்டையாடி விடுகிறது. ஆன்மீக வீழ்ச்சியின் காரணமாக அவன் தாளாத் துயரத்தில் ஆழ்ந்து விடுகிருன். நம் மனதின் ரகசிய செயல் முறைகளை விவரிக்கிற காரணத்தால் இந்த அத்தியாயத்தை நாம் நன்கு புரிந்துகொண்டோமானல் நமக்கு நம் வழியில் நல்ல, தொடர்ந்த, தடங்கல் படாத முன்னேற்றம் சாத்தியமாகிவிடும். இந்த அத்தியாயம் சாதகர்களுக்கு மிகவும் முக்கியமான அத்தியாயமாகும்
அத சதுர்த சோத்யாய: பதினன்காம் அத்தியாயம் தொடங்குகிறது.

ஸ்ரீ பகவான் உவாச

பரம் பூய: ப்ரவ க்ஷ்யாமி ஜ்ஞானனம் ஜ்ஞானமுத்தமம்
யஜ்ஜ்ஞாத்வா முனய: ஸர்வே பராம் ஸித்திம் இதோ கதா
14:1

ஸ்ரீ பகவான் சொன்னர்:

பரம்—பரம (ஞானத்தை) பூய—மறுபடியும்; ப்ரவக்ஷ்யாமி—கூறுகிறேன்; ஜ்ஞானனம்—ஞானங்களிலெல்லாம்; உத்தமம்—மிகவும் உத்தமமானது; யத்—எதை; ஜ்ஞாத்வா—அறிந்து; முனய:—முனிவர்; ஸர்வே—எல்லாம்; பராம்—மிக உயர்ந்த; ஸித்திம்—ஸித்தியை; இத:—இந்த வாழ்வுக்குப் பிறகு; கதா:—அடைந்தவர்களோ.

எதை (எந்த ஞானத்தை) அறிந்து எல்லா முனிவர்களும் இந்த வாழ்வுக்குப் பிறகு மிக உயர்ந்த சித்தியை அடைந்தார்களோ அந்த ஞானங்களுள் எல்லாம் உத்தமமான (மிக உயர்ந்த) பரம ஞானத்தை நான் உனக்கு மீண்டும் கூறுகிறேன்.

மிகக் கடுமையான உணர்ச்சிக் கொந்தளிப்பால் ஒருவன் மிகவும் கலவரம் அடைந்திருக்கும்போது அவன் எவ்வளவு புத்தி

சாலியாயிருந்த போதிலும் அவனுக்கு மீண்டும் மீண்டும் ஆறுதல் அளிப்பது தேவைப்படும். ஒருவன் புற ஆளுமையுடன்—அதாவது உடல், உடல் மூலம் வரும் வாழ்க்கை அனுபவங்கள்—இவற்றுடன்—ஒன்றி நின்று சாவுக்குட்பட்ட ஜீவனுக வாழும்போது அவன் துயர்களாலும் அவை தரும் உள்ளக் கலவரங்களாலும் வெகுவாகப் பாதிக்கப்படுகிறுன். அந்த நிலையில் அவன் தன் அடிப்படை நிலையில், 'தானே அந்த எல்லையற்ற பரம் பொருள் தெய்வம்,' என்று புரிந்துகொள்ள முடியாது. உணர முடியாது. ஆன்மீக உண்மைகளை குரு மீண்டும் மீண்டும் எடுத்துச் சொல்லி உறைக்க வைக்கவேண்டும். அப்போது தான் சாதகனுடைய எதிர்ப்புக் குணம் கொண்ட புத்தி போதுமான அளவு அவற்றை உணர்ச்சிபூர்வமாகப் புரிந்துகொள்ள முடியும். இந்தியாவில் நம் வீடுகளில் நம் தாய்மார்கள் குழந்தைகளுக்கு உணவு கொடுக்கும் விதத்தைப் பார்த்தால் நமக்கு நல்ல எடுத்துக்காட்டுக் கிடைக்கும். குழந்தைகளை மீண்டும் மீண்டும் கொஞ்சிக் கொஞ்சி சாதம் ஊட்ட வேண்டியிருக்கிறது. அப்போதுதான் குழந்தை போதுமான அளவு உணவு சாப்பிடுகிறது. அதே மாதிரித்தான் உள்ளத்தில் ஆன்மீகக் கருத்துக்கள் பலத்த நம்பிக்கைகளாக தாங்களே உணரும் அளவுக்கு மாற வேண்டும் என்றுல் குருமார்கள் அவற்றை அநேக தடவைகள் திரும்பத் திரும்பச் சொல்லவேண்டும்.

அந்தக் கருத்துக்கேற்றவாறே இந்த அத்தியாயமே பகவானுடைய இந்தக் கூற்றுடன் தொடங்குகிறது. 'மீண்டும் நான் உனக்குச் சொல்வேன்: மிகவும் சீரிய இந்த உயர்ந்த தத்துவம் முன்னுல் சொல்லப்படவில்லை' என்பதில்லை. ஆனுல் சரியாகப் புரிந்துகொள்ளவும் ஐயமில்லாமல் உறுதிப்படுத்திக் கொள்ளவும் திரும்பச் சொல்லுதல் தேவையாகிறது.

இந்த அத்தியாயத்தில் உள்ளடக்கப் பொருள் 'ஞானங்களில் எல்லாம் உயர்ந்த அந்தப் பரம ஞானம்' என்று அறையப்பட்டிருக்கிறது. இதை அப்படியே வார்த்தை அளவில் எடுத்துக்கொள்ளக் கூடாது. இந்த அத்தியாயம் மனிதன் நடந்து கொள்ளும் விதத்தையும், வாழ்க்கையில் அவன் சூக்கும சரீரத்தை வசப்படுத்தி ஆட்டி வைக்கும் போக்குகளையும் விவரிக்கிறது. வேதாந்தத்தில் இது மிகவும் உயர்ந்த பரம ஞானமாக இருக்க முடியாது. ஆனுலும் இந்தப் பொருளைப் பற்றிச் சரியான படி புரிந்துகொண்டு, மன இயந்திரத்தை சரியான முறையில் திருத்தி வைத்துக்கொள்ளாமல் சாதகன் தெய்வீக மார்க்கத்தில் பாதுகாப்பாக நடந்து முன்னேற முடியாது. அதனுல்தான் இதை மிகவும் உயர்ந்த பரம ஞானமாகக் கூறப்பட்டிருக்கிறது.

எதை அறிந்து எல்லா முனிவர்களும் உயர்ந்த சித்தியை அடைந்தார்களோ: குணங்களைப் பற்றிய தெளிவான அறிவு

சாதகர்களின் ஆன்மப் பிரயாணத்தை எளிதாக்கும் என்று இங்கே உரிமையுடன் சொல்லப்படுகிறது. எங்கே போவதானு லும் போக வேண்டிய வழியைப் பற்றிய சந்தேகமற்ற அறிவு, பாதையில் ஏற்படக்கூடிய பயங்கள், சங்கடங்கள் இவற்றைப் பற்றித் தெரிந்துகொண்டால் பிரயாணி எச்சரிக்கையாகப் பிரயா ணத்தை மேற்கொள்ள முடியும். வரக் கூடிய சங்கடங்களையும் தொல்லைகளையும் சந்தித்து அவற்றைத் தப்பியோ, தீர்த்துக் கொள்ளத் தயாராக அவன் பிரயாணத்தை ஏற்றுக்கொள்ள முடியும். அதே போல் இந்த மனம் என்னென்ன விஷமங்கள், பொல்லாத்தனங்கள் செய்ய வல்லது? என்று அறிந்துகொள்வது ஆன்ம சாதகனுக்கு ஒரு நல்ல எச்சரிக்கையாக அமையும். அப் போதுதான் அவன் தனக்குள்ளிருந்து எழும் தொல்லைகளையும் பிரச்னைகளையும் திறமையுடன் சமாளித்துக்கொள்ள முடியும்.

முனிவர் என்றால் ஏதோ தாடி வைத்துக்கொண்டு காட்டில் வசிக்கும் கிழவர்; விசித்திரமான உணவுகளைத் தின்பவர் என் றெல்லாம் கற்பனையாகப் பொருள் கொள்ளக்கூடாது. ஸம்ஸ்கிருதத்தில் ‘முனிவர்’ என்பது மனனசீலரைக் குறிக்கும். அதாவது சிந்தனையிலும் தியானத்திலும் ஈடுபட்டிருப்பவரைக் குறிக்கும் அந்தச் சொல். இவ்விதம் எல்லாம் சேர்த்துப் பார்த் தால் குணங்களைப் பற்றிய அறிவு, அவற்றின் இயல்பு, அவற்றின் கொடுங்கோன்மை, அவை நம்முடைய அமைதியான வழிப் பாதையில் முன்னேற்றத்தைத் தடுத்துக் கொண்டு எவ்விதம் எழும் என்பதைப் பற்றிய விவரம், தியானபரர்களாக இருந்து கொண்டு, வாழ்க்கையின் அனுபவங்களை உய்த்துத் துய்த்துச் செரித்துக்கொண்டு, வாழ்க்கையின் சீரிய லக்ஷியத்தை அடைய முயலும் எல்லோருக்கும் முதல் தேவையான அடிப்படைத் தகவல்களாகும்.

இந்த வாழ்க்கைக்குப் பிறகு (அப்பால்) அநேக உபநிஷதங்களில் சொல்லப்பட்டிருப்பது போலஇங்கேயும் பூர்ணத்துவ சித்தி “இந்த வாழ்க்கைக்குப் பிறகு கிடைக்கும்” என்று உறுதி கூறப்பட்டிருக்கிறது. இந்தக் கூற்றை வார்த்தை யளவில் எடுத்துக்கொண்டு அநேகர் விளக்கும்போது சித்தி இந்த வாழ்வில் கிடைக்காத ஒன்று என்று சொல்லி விடுகிறார்கள். ஆனால் ஸ்ரீ சங்கராச்சாரியாரும், மற்றவர்களும் மிகத் திறமை யுடன் இந்த வாதத்தை உடைத்து விடுகிறார்கள். மேலும் மீண்டும் மீண்டும் ‘கெட்டிக்கார சாதகன் இங்கேயே இப்போதே சித்தியை அடைந்துவிட முடியும்’ என்று உறுதியாய்க் கூறு கிறார்கள். இந்த ஆசாரியார்கள் கருத்துப்படி இந்த ‘வாழ்வுக்குப் பிறகு’ என்பதற்கு “அஞ்ஞானத்தில் அகத்தைச் சுற்றி எழும் தவறான கருத்துக்கள் கொண்டு இருக்கும் இந்த வாழ்க்கை நிலை முடிந்த பிறகு” என்று பொருள்படும்.

நம்முடைய வாழ்க்கையை எடுத்துக்கொண்டு பார்த்தால் பிரம்மசாரி இறந்த பிறகு (அவ்வாழ்க்கை முடிந்த பிறகு) தான் கிரஹஸ்தன் வாழ்வு தொடங்கும். கன்னிகை தாயாகும் முன்பு கன்னிகை(ப் பருவம்) இறக்க (முடிய) வேண்டும். இந்த உதா ரணத்தில் ஆளே சாகவில்லை. ஆனால் அந்த மனிதன் அல்லது பெண்ணுடைய பிரம்மச்சாரி அல்லது கன்னிகைப் பருவ வாழ்க்கைதான் முடிந்தது. அதற்குப் பிறகே அவர்களுக்கு கிருஹஸ்தன் வாழ்வும், தாய்மையும் கிடைத்தன. மனிதர்கள் வாழும்போதே, அவர்கள் நிலைமை அல்லது பதவிகள் மாறு கின்றன. சரியான மனனம், உண்மைகளை உள்ளபடி அறிந்து கொள்ளுதல் இவற்றின் பயனாக நம்முடைய பொய்யான அறிவுகள் மாயும். புதிதாகப் பெறப்பட்ட உண்மை ஞான நிலையில் அதிக ஒளியும் அமைதியும் பொருந்திய புது வாழ்வு பிறக்கும். குறைகள் கொண்ட வாழ்க்கை முட்டை பொரிந்து சித்தன் பிறப்பான். இது சிந்தித்திருத்தல் என்கிற கூட்டில் நிகழ முடியும். தீவிர புத்தி சக்தியுடன் கெட்டிக்காரத்தனத்துடன் வாழும் மனிதனைக் கூட இந்தக் குணங்களின் அழிக்கும் ஆதிக்கம் அடிமைப்படுத்தும்போது அவன் தியானத்தில் சமநிலையை இழந்து விடுவான். அதைத் தவிர்த்தால் நூற்றுக்கு நூறு வெற்றி உறுதி. இந்த விதமாக குணங்களையும் அவற்றின் செயல்பாட்டையும் பற்றிய அறிவு மறைமுகமாக ஊக்கம் கொண்ட சாதகனுக்கு உதவுகிறது.

இந்த அறிவு கண்டிப்பாய் சித்தியைப் பெற வைக்கும் என்று பகவான் இப்போது அடித்துக் கூறத் தொடங்கு கிறார்:

இதம் ஜ்ஞானம் உபாச்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:
ஸர்கேபிநோப ஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச 14:2

இதம்—இந்த; ஜ்ஞானம்—ஞானத்தை, உபாச்ரித்ய— ஆசிரய மாக அடைந்து; மம—என்னுடன்; ஸாதர்ம்யம்—ஒருமையை; ஆகதா:—பெற்று ஸர்கே—சிருஷ்டி காலத்தில்; அபி—கூட; ந உபஜாயந்தே—பிறக்கிறதில்லை; ப்ரலயே—பிரளய காலத்தில்; நவ்யதந்தி ச—கலக்கப்படுவதும் இல்லை.

இந்த ஞானத்தை அண்டி யார் என் நிலையை அடைகிறார் களே அவர்கள் சிருஷ்டி (படைப்பு)க் காலத்தில் பிறப்பதுமில்லை, பிரலய காலத்தில் கலக்கப்படுவதுமில்லை.

இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும் கருத்துக்குப் பெருமை அந்த அறிவைப் பயன்படுத்துகிற கெட்டிக்கார சாத கனுக்கும் கிடைக்கும் பயன் காரணமாக எவ்வளவு உண்டோ அவ்வளவு அதன் தத்துவக் குறிப்புக்களின் காரணமாக இருக்

கிறது என்று சொல்ல முடியாது. இந்த அத்தியாயத்தில் ஆழ்ந்த பொருளை உய்த்து உணர்ந்தவன் 'என் ஸ்திதியை' அதாவது பூரணத்வ சித்தியைப் பெறமுடியும்.

வேதாந்த வாதிகளின் பல மாறுபட்ட குழுக்களிடையே இந்த சுலோகத்தில் வரும் வார்த்தை வாதத்துக்கும் சர்ச்சைக்கும் உரியதாக இருக்கிறது. ஆனுல் ஸ்ரீ சங்கராச்சாரியார் கருத்துப்படி 'ஸாத்ர்ம்யம்' என்பது 'சமான தர்மம்' என்று மட்டும் பொருள் கொடுக்காது. ஆனுல் உண்மைப் பொருளின் சொரூபப் பிரஸ்தியையும் குறிக்கும். இந்தச் சொல்லுக்கு, 'என்னுடன் சேர்ந்திருக்கும் தன்மை,' 'என் சார ஸ்வரூபத்தில் அமிழ்ந்து போதல்' எனக்கு உள்ள சிறப்புடன் ஒன்ருதல்' என்றெல்லாம் பொருள்கள் கொடுக்கப்படுகின்றன. பூரணத்வம் அல்லது முழுமை பெறுதல் 'உணர்வின் தனித்த ஒரு தளத்தில்' விழிப்புப் பெறுவதாகும். நாம் விழிப்பு நிலையிலிருந்து தூக்க நிலைக்கோ கனவு நிலைக்கோ போகும்போது நாம் தூங்குகிறவன் அல்லது கனவு காண்கிறவனுடன் ஒன்றி விடுகிறோம். அப்போது விழிப்பவனிலிருந்து முற்றிலும் விடுபட்டு விடுகிறோம். அதே போல 'ஆன்ம' நிலையைப் பெறும்போது நாம் நம் உடல், மனம் புத்தி கொண்ட இந்தக் குறுகிய கட்டுப்பட்ட வாழ்வை நீத்து ஆன்ம நிலையுடன் ஒன்ருகிவிடுகிறோம்.

ஸ்ரீ கிருஷ்ணன் கீதையில் 'நான்' என்று தன்மை ஒருமையில் பேசும் போதெல்லாம் அவர் ஆன்ம பூர்ணத்துவ நிலையைக் குறிக்கிருர். நம்மை பௌதிக உலகுடன் ஒட்டி நிற்கும் வாழ்க்கையான கீழ்நிலைக்கு உட்படுத்தி அதன் மூலம் 'அகம்' என்ற உணர்வுடன் பிணைக்கும் குணங்களின் லீலைகளைப் பற்றி முற்றிலுமாக குறையற்ற வகையில் ஆய்வதுதான் இந்த அத்தியாயத்தின் அடக்கப் பொருள். இதை நாம் முன்னமே கூறியிருக்கிறோம். இந்த குணங்கள் நம் மனதை ஆட்படுத்தும் நிலையிலிருந்து நாம் விடுபட்டு அவற்றை முழுமையாகத் தடுத்து விட்டோமானுல் நாம் நம்முடைய குறுகிய தனித் தன்மையிலிருந்து விடுபட்டு அந்தக் கணமே நம்முடைய உண்மையான, பிரபஞ்சம் முழுவதும் நிறைந்து நிற்கும் ''ஸ்வபாவத்தை உணர ஆரம்பித்து விடுகிறோம்.

கனவு காண்பவனுக்கு, அவன் கனவில் அனுபவிக்கிற துயரங்கள் உண்மைதான். ஆனுல் அவனே விழிப்பவனுகி விட்டால் அந்தக் கணத்திலிருந்து அந்தத் துயர்கள் அவனைத் தீண்டக் கூடமுடியாது. உணர்வின் ஒரு நிலைக்கு உரிய இன்ப துன்பங்கள் மற்ருெரு தளத்திற்குத் தம் கைகளை நீட்டி நம் மென்னியை நசுக்க முடியாது. தியான அப்யாசத்தின் மூலம் மனதை அடக்கி அதற்கு அப்பால் சென்றுவிட்ட சாதகன் உணர்வின் சாதாரணத்தனத்திலிருந்து மீறிச் சென்று விடுகிருன்.

அதற்குப் பிறகு ஏற்கனவே, அதாவது பௌதிகப் பொருள்களுடன் ஒன்றி நின்ற நிலையில் அவனுக்கு இருந்த குறுகிய உணர்வும், அதன் காரணமாக புறப்பொருள்களும், சம்பவங்களும் அவனுக்குக் கொடுத்துவந்த துன்பங்கள் அவனைப் பாதிக்கமாட்டா. தனியாகத் தன்னை எண்ணிச் செயல்பட்டு அழியும் ஜீவன் அந்த நிலைமையை மீறி விட்டால் அப்போது அவன் எங்கும் எல்லாமாய் சர்வசக்தியுடன் விளங்கும் தன்னுடைய உண்மைத் தத்துவத்தை மீண்டும் கண்டு கொள்கிறான். அந்த நிலையில் அவனுக்குப் பிறப்பும் கிடையாது. சாவும் கிடையாது.

இந்தக் கருத்தைத் தான் (சர்கே(சு)பி நோபஜாய தே...) அவர்கள் சிருஷ்டி காலத்தில் பிறப்பதும் இல்லை... என்ற வாக்கியம் வலியுறுத்திச் சொல்கிறது. சிருஷ்டி என்பது மனதின் தந்திரம்தான். நாம் இந்த மனதின் மூலம் செயல்படுவதை நிறுத்தி அதை மீறும்போது அது நம்மை பாதிக்க முடியாது. எனவே நாம் எந்த சிருஷ்டி (அல்லது படைக்கும்) உணர்வையும் ஏற்க மாட்டோம். கோபம் நம் மனதை வெற்றிகொண்டு விட்டால் நாம் 'கோபக்காரராக' நடந்து கொள்கிறோம். கோபம் அகன்று மனம் அமர்ந்து விட்டால் பிறகு மனது கெட்ட, பொல்லாத மனிதன் போல் நடந்துகொள்ள மாட்டோம். மனதின் தந்திரங்கள் எண்ணம் எண்ணமாக வைத்துக்கட்டி ஒரு தனி உலகத்தை சிருஷ்டித்து அது தருகிற கற்பனைகளுக்குள் மனிதனைச் சிக்க வைத்துவிடுகின்றன. எனவே மனிதன் எதுவரை மனதுக்குள் அமிழ்ந்து இருப்பானோ அதுவரையில் உள்ளத்தில் எழும் சூறுவளிகள் அவனை அலைக்கழிக்கவே செய்யும். மனதை மீறி அப்பால் சென்று விட்டோமானால் நாம் நம்முடைய ஆன்மாவைப் பெற்று விடுகிறோம். அதன் எல்லையற்ற தன்மை வந்துவிடுகிறது. பிறகு சிருஷ்டி கிடையாது. நாம் 'பிறந்தவர்களாக' நம்மை எண்ண மாட்டோம், உணர மாட்டோம்.

அவர்கள் பிரளய காலத்தில் நோவதுமில்லை: அழிவின் துயர் சாவின் வேதனையாகும். கனவு காணும்போது கனவுச்சாவு தரும் வேதனைகளை ஒருவன் அனுபவிக்கலாம். என்றாலும் அதே கணம் அவன் விழித்துக் கொண்டால் தான் பட்ட வேதனையை எண்ணி அவன் சிரித்துக் கொள்வான்! கனவில் பட்ட வேதனைகள் எவ்வளவு பொய்யானவை! அதே போல எல்லையற்ற பரம வாழ்வான சுத்த ஸ்வபாவத்தை ஒருவன் அடைந்து விட்டானானால் பிறகு அவனுக்கு சாவின் வேதனையோ, சாவுக்கு உட்படும் சங்கடங்களோ ஏற்படாது. அவன் அவற்றை உணர மாட்டான்.

மனதை ஜெயிக்க வேண்டும் என்றால் மனது ஒருவனை எந்த

வாறெல்லாம் கண்ணுமூச்சி காட்டி ஏமாற்றும் என்று அதன் தந்திரப் போக்குகளை எல்லாம் அவன் அறிந்திருக்க வேண்டும். எதிரிகளைத் தாக்கி வெற்றி கொள்ள வேண்டும் என்றால் திட்டமிட வேண்டும். அதற்கு அவர்களின் யுத்த தந்திரம் எல்லாம் தெரிந்திருக்க வேண்டும். அதே போல் தான் குணங்களைப் பற்றிய தெளிவான அறிவு தன் மனதை அடக்கி மனது தரும் கலவரங்கள், நெறி முறைக் குறைபாடுகள் இவற்றிலிருந்து விடுதலை பெறவிரும்பும் சாதகனுக்கு மிகவும் உதவியாக இருக்கும் என்று இந்த சுலோகம் கூறுகிறது. அது முற்றிலும் சரியே.

மேலே வருகின்ற இரண்டு சுலோகங்களும் ''பிரம்மமாகிற புருஷனும் பிரகிருதியும் சேர்ந்து இந்த உலகம் உருவாகிறது எவ்விதம்?'' என்று விளக்குகின்றன. இந்த உலகில் பிரகிருதியால் உடுத்தப்பட்ட பிரம்மம்தான் பலவிதமான தோற்றங்கள். சடமாகக் கிடக்கிற கல்லிலிருந்து உலகம் போற்றும் ஞானவான் களான தீர்க்கதரிசிகள் வரை ஒவ்வொரு தோற்றமும் பிரகிருதியின் உரைகளிலிருந்து வெளியாகும். ஆன்மமே. க்ஷேத்ரக்ஞன் பல க்ஷேத்திரங்களில் இருந்து இயங்கி அதனுடன் இணைகிற காரணத்தால் தனித்தனி ஜீவனாகிறான் என்றும் அந்த ஜீவன் மூலம் அதன் சூழ்நிலையால் ஏற்படும் துக்கங்கள், வேதனைகள் இன்பங்கள் வெற்றிக் களிப்புக்கள்—முதலியவற்றால் மிகவும் பாதிக்கப்படுகிறான் என்றும் முன் ஒரு * அத்தியாயத்தில் தெளிவாகப் பார்த்தோம்.

இந்த புருஷப் பிரகிருதி திருமணம் (க்ஷேத்திரத்துடன் க்ஷேத்ரக்ஞன் சேர்க்கை) எவ்விதம் நிகழ்கிறது? அந்தச் சேர்க்கை எவ்விதம் நம்முடைய எல்லையற்ற துயரங்களை பெற்றெடுக்கிறது? என்பதைப் பகவான் இப்போது சொல்லத் தொடங்குகிறார்:

*மமயோனிர் மஹத் ப்ரஹ்ம தஸ்மின் கர்பம் ததாம்யஹம்*
*ஸம்பவ: ஸர்வபூதானும் ததோ பவதி பாரத* *14:3*

*மம—என்னுடைய; யோனி—யோனி (கருப்பை); மஹத்பிரஹ்ம—மகத்தான பிரஹ்மம்; தஸ்மின்—அதில்; கர்பம்—விந்துவை; ததாமி—தருகிறேன் (வைக்கிறேன்); அஹம்—நான்; ஸம்பவ:—பிறப்பு; ஸர்வ பூதானும்—எல்லா உயிர்களுடையவும்; தத:—அதற்குப் பிறகு; பவதி—உண்டாகிறது; பாரத—ஓ பாரதனே!*

---

** 13—ம் அத்தியாயம்*

''மகத்தா''ன பிரம்மம் என்னுடைய கருப்பை (யோனி) அதில் நான் விந்துவை வைக்கிறேன். பிறகு ஓ பாரதா எல்லா உயிர்களின் பிறப்பும் ஏற்படுகிறது.

''என் கருப்பை மகத்தான பிரம்மம்'' —சுத்த உணர்வுத் தத்துவமான கிருஷ்ணன் இந்த பிரபஞ்சம் எதிலிருந்து விளைந்து வந்ததோ அந்த ஒரு யோனியை விவரிக்க முயலுகிறார். அநேக தடவைகள் நாம் நம்முடைய உரைகளை அங்கங்கே நிறுத்திவிட்டு 'எப்படி ஒன்றேயான அந்தப் பரம உணர்வுத் தத்துவம் (சைதன்யம்) பிரகிருதியின் பல உரைகளுடன் ஒன்றிநின்று தனித் தனி ஆற்றல்களும் செயல்திறனும் கொண்ட பல உயிர்களாய்த் தோற்றமளிக்கிறது.' என்று விளக்கியிருக்கிறோம்; விளக்கி வருகிறோம். நாட்டின் பிரதம மந்திரியும் ஒரு வாக்காளரே. நாட்டில் அரசியல் சட்டம் அப்படித்தான் சொல்கிறது. ஆனால் அந்தப் பிரதம மந்திரியின் அதிகாரமும் ஆற்றலும் ஒரு வாக்காளரின் ஆற்றல், அதிகாரத்தைப் போல் பற்பல மடங்கு உள்ளன. சாதாரண சராசரி வாக்காளர் அவ்வளவு பெறலாம் என்று கனவு கூடக் காண முடியாது. பிரதம மந்திரிக்கு இந்த சர்வ வல்லமை அவருடைய பதவியினால் அவருக்குக் கிடைத்தது எப்படி என்றால் அந்த பிரதம மந்திரியிடம் உள்ள வாக்காளர் வாக்காளர்களில் பெரும்பாலோருடன் தன்னை இணைத்துக் கொள்ளும், அவர்களுடன் ஒன்றி ஒன்றாயிருக்கும் செய்கையில் வெற்றி பெற்றார்; அதனால்தான்.

அந்தப் பரம்பொருள் தனி ஜீவனிடம் உள்ள வாசனைகளுடன் ஒன்றி நம்மைப் போல் தனி 'நானாக' ஆகி விடுகிறது. நம்மில் யாரேனும் ஒருவர் (ஒரு வாக்காளர்) தன் தனியான குறுகிய போக்குகளை விட்டுவிட்டு பிரபஞ்சம் அனைத்தினுடையவும் எண்ண வாழ்க்கையுடன் (மக்களின் மொத்த ஆவல்களுடன்) ஒன்றிவிட முடியுமானால், மொத்த மனத்துடன் ஒன்றும் அந்த உணர்வு (பெரும்பாலான வாக்காளர் களுடன் ஒன்றி நிற்கும் அந்தத் தனி வாக்காள மனிதன்) ஈசுவரனாகி (பிரதம மந்திரியாகி) விடுகிறது. இந்த சுலோகத்தில் வேதாந்த மொழியில், 'உலகின் மொத்த வாசனைகள், அதாவது மொத்த காரண சரீரம் யோனி என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த யோனியில் பகவானால் விந்து (கர்ப்பம்) வைக்கப்படுகிறது. உயிர்த் தத்துவம் மொத்த 'காரண சரீர'த்தில் இயங்கும்போது அது துடிப்புப் பெற்று மொத்த 'மனம் புத்தி'யாக (ஹிரண்ய கர்ப்பனாக) வெளியாகிறது.

உணர்வின் ஒளிதான் மனம் புத்தி இவற்றால் அவற்றுக் கேற்றவாறு உருப்பெறும்போது அதாவது எண்ணமாகிற மனநீரில் பிரதிபலிக்கும் போது தனி 'அகம்' என்கிற ஜீவனாகிறது. அது நம்மில் ஒவ்வொருவருள்ளும் தோன்றி நிற்கிறது. எந்தத்

தத்துவத்திலிருந்து இந்த பௌதீக உலகம் வெளிப்பட்டதோ அந்தத் திறம் கொண்ட தத்துவம் 'இயற்கை' அல்லது பிரகிருதி என்று சென்ற அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. இந்தப் பிரகிருதிதான் 'பெரிய காரண' மாகும். ஏன் என்றால் அதன் விளைவான இந்தப் பிரபஞ்சத்தை அது அணைந்து நிற்கிறது. மேலும் இந்த உலகம் முற்றிலும் இயற்கையிலிருந்தே வெளிப்பட்டது. தவிரவும் அதற்குப் பிறப்புத் தந்த அந்த மூலத் தத்துவமே பெயரும் உருவமும் கொண்ட உயிர்கள் அல்லது பொருள்களின் உலகத்துக்கு உணவு ஊட்டி வளர்த்துப் பருக்க வைக்கிறது. அதனால்தான் அந்த மொத்த (இயற்கை) பிரகிருதி மகத்தான பிரமம் என்று இங்கே சொல்லப்பட்டிருக்கிறது. வேதாந்த சாஸ்திரத்தில் இவ்விதமே மற்ற இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

அதில் நான் என் விந்துவை (விதையை) வைக்கிறேன்: வாங்கி வளர்க்கும் திறம் கொண்ட மொத்த பிரகிருதி கன்னிக் கருப்பையாகும். அதற்குள் பரம உணர்வுத் தத்துவமாகிற ஒளிக்கதிர் சென்றவுடன் அங்கே அதன் பயனாக உணரும் (ஞான) ஒளி ஒளிரத் தொடங்குகிறது. அதைத்தான் 'கர்பாதானம்' (கர்பத்தை வைத்தல்) என்கிறார் கண்ணபிரான்.

இவ்விதம் உயிர்த் தத்துவத்தால் துடிப்பு ஆற்றல் பெற்று சடமான பிரகிருதி இயக்கம் கொண்டதாக ஆகிறது, வளர்கிறது; காட்சி உலகமாக மாறுகிறது. அதைக் குறிக்கத்தான் 'பிறகு எல்லா உயிர்களும் (இருப்புக் கொண்ட பொருள்கள் அனைத்தும்) பிறப்பைப் பெறுகின்றன' என்று சொல்லப் பட்டிருக்கிறது.

எந்தப் படைக்கும் (உற்பத்தி) வேலையை எடுத்துக் கொண்டாலும் அதில் தொடக்கத்துக்கும் வளர்ச்சிக்கும் மூலம் படைப்பாளியான கலைஞனின் அதற்கான போக்காக இருக்கும். இந்தப் போக்கு அவன் உயிர்த் துடிப்பின் அமிசமாக ஆகி கிளர்ந்து எழும்போது அது பிரஸவ வேதனைக்கு உட்பட்டு விடுகிறது. மேலும் எண்ணங்களாகவும் உணர்ச்சிகளாகவும் வெளிவரத் துடித்து அப்பால் அந்தக் கலைஞன் பொறுக்கி எடுத்த கலைச். சாதனத்தின் மூலம் வெளிப்படுகிறது. அவன் தன் படைப்பை ஓவியத்தில் வர்ணங்கள் வாயிலாக வெளியிடலாம். இசையில் பாடல்கள் அல்லது ராகங்களாக வெளியிடலாம். கல்லில் சிலை வடிக்கலாம். இலக்கியத்தில் வாக்கியங்களாக வெளிப்படுத்தலாம். ஆனால் இறந்துவிட்ட கலைஞன் கலைப் படைப்பு ஒன்றும் வெளியிட முடியாது. ஏன்? கருத்துக்களோ எண்ணங்களோ கூட ஒன்றும் வெளியிட முடியாது. மொத்தக் கருத்துக்கள், போக்குகளான பிரபஞ்சம் (வாசனைகள்) உயிர்த் தத்துவத்தின் அருள் பெறும்போது உயிர் பெறுகிறது இயங்கும்

உலகமாக வெளிப்படுகிறது.

வாசனைகள், எண்ணங்கள், செயல்கள் இவற்றின் உலகம் தான் பிரகிருதி. இது எப்போதும் குணங்களாலேயே ஆளப்படுகிறது. எனவே இந்த மூன்று குணங்களையுமே சேர்த்து வேதாந்தம் மாயை என்று பெயர் சூட்டி அழைக்கிறது. இதுதான் பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரணமாக அமைகிறது. தனி ஜீவனிடம் வெளிப்படும் மாயை அவித்தை (அறியாமை) என்று சொல்லப்படுகிறது. பிண்டத்தின் மாயை அவித்தை. அண்டத்தில் அதுவே மாயை என்று அழைக்கப்படுகிறது. தனியான ஜீவன் அவித்தையின் ஆளுகைக்குக் கீழ் இருக்கிறான். ஈசுவரன் மாயையை ஆளுகிறான். இந்த மீக சூட்சுமமான கருத்து 'மாண்டுக்ய உபநிஷத் அதன் காரிகை' இதில் தெளிவாக விவரிக்கப்பட்டிருக்கிறது போல் உலகத்தின் வேறு எந்தத் தத்துவ நூலிலும் விவரிக்கப்படவில்லை.

சுருக்கமாக, சென்ற அத்தியாயத்தில், 'க்ஷேத்திரம், க்ஷேத்ரக்ஞன் ('பிரகிருதி', 'புருஷன்') இரண்டுமே சுத்த நித்ய சத்தியப் பொருளான பிரபு 'கிருஷ்ண'னையே ஆதாரமாகக் கொண்டு இயங்குகின்றன என்றும் சொல்லப்பட்டது. இதை நன்கு நினைவில் இருத்திக் கொண்டால் போதும். பரம்பொருள் க்ஷேத்திரத்தில் புகுந்து செயலாற்றும் போது அந்த க்ஷேத்திரத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்ட கணமே தன்னை சுத்த பவித்ர பேருணர்வுத் தத்துவமாக மீண்டும் கண்டு கொண்டு விடுவான்.

பிரகிருதிக்கும் புருஷனுக்கும் உள்ள இந்த சூக்ஷ்ம உறவைத் தொடர்ந்து இன்னம் விளக்கவும், அந்த சுத்த பரம தத்துவம் எவ்விதம் ஒட்டாமலேயே நின்று க்ஷேத்ரத்திலும் க்ஷேத்ரக்ஞனிலும் உயிர்தரும் தத்துவமாக விளங்குகிறது என்பதைச் சொல்லவும் தொடங்கி கண்ணன் சொல்கிறார்:

*ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா:*
*தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோனிரஹம் பீஜப்ரத: பிதா*

*14:4*

*ஸர்வயோனிஷு—எல்லா யோனிகளிலும்; கௌந்தேய—ஏ குந்தி தனயா; மூர்த்தய:—உருவங்கள்; ஸம்பவந்தி—பிறக்கின்றனவோ; யாஹா—எவை; தாஸாம்—அவர்களுடைய; ப்ரஹ்ம—பிரம்மம்; மஹத்—பெரிய; யோனி(ஹி):—யோனி; அஹம்—நான்; பீஜப்ரத:—விதை கொடுக்கிற; பிதா—தந்தை.*

எந்தெந்த உருவங்கள் பிறந்தாலும், ஏ, கௌந்தேயா!

---

சுவாமிகளின் மாண்டுக்ய—காரிகையின் விரிவுரைகளைப் பார்க்கவும்.

எல்லா யோனிகளிலும் மஹத்தான பிரம்மமே அவர்கள் யோனி; நான் விதை தரும் தந்தை.

எல்லா யோனிகளிலும்—உயிர்களின் உலகத்தில் கணக்கற்ற, முடிவற்ற விதவிதமான உயிர்கள் பிறக்கின்றன, வாழ்கின்றன. அவை போனபிறகு புதுப் பிறவிகள் அவைகளின் இடத்துக்கு வந்துவிடுகின்றன. எனவே இந்த உயிர் உலகம் தொடர்ச்சியாக இருக்கிறது. ஒரே நோக்கில் இந்த உலகைப் பார்த்தோமானுல் புதுப் பிறவிகள் கொப்புளித்துக் கொண்டிருக்கக் காணலாம். எங்கும் எந்த வகையான உயிர் பிறந்தது என்றுலும் அது அந்த வகை பௌதிக உருவத்துக்குள் வெளியாகும் ஆன்மதத்துவமேயாகும். இவ்விதம் பார்த்தால் ஒவ்வொரு பௌதீக அணுவும் யோனியே. அதில் அந்த பேருணர்வுத் தத்துவம் உட்புகுந்து உயிர்ப்பை அளித்தால் அது சிருஷ்டி ஆற்றலுள்ள உயிர்ப் பொருளாக ஆகிவிடுகிறது. உயிரின் ஒவ்வொரு தோற்றமும் புருஷனுடைய ஒரு சிறிய உயிர்ப் பொறியை உள்ளுக்குள் கொண்ட பிரகிருதியின் அமிசமேயாகும்.

சுத்தப் பேருணர்வுத் தத்துவம், எல்லையற்ற பரம்பொருள் என்ற நிலையில் பகவான் கிருஷ்ணன் உருவக பொறியில் 'பிரகிருதியின் கருப்பையில் உயிர் விதையை நடுகிற உலக முழுமையின் தந்தை நான்' என்று கூறுகிறுர். க்ஷேத்ரக்ஞனின் உயிர் பெருத க்ஷேத்ரத்துக்குத் தனியாக இருப்புக் கிடையாது. நீராவி இல்லாத நீராவி இயந்திரம் வெறும் இரும்புதான்—உருவம் கொண்டது அவ்வளவுதான். ஆனுல் நீராவி அதற்குள் சேர்ந்தால் யந்திரத்துக்கு ஆற்றல், அதற்குரிய அளவு, ஓடும் திறமை எல்லாம் கிடைத்து விடுகிறது. அதே போல் உடல் மனம் புத்தி எல்லாம் உணர்வுத் தத்துவம் உள்ளிருந்து இயக்காத வரை வெறும் தாதுப் பொருள்தான்! திருமணமாகாதவனுக்கு தனக்கு என்று சொல்லிக் கொள்ள ஒரு குழந்தை இருக்காது! அவன் குழந்தை பிறப்பிக்கும் திறமை பெற்றவனுக இருக்கலாம். குழந்தை வேண்டும் என்றுல் அவன் திருமணம் செய்துகொண்டு கருப்பையில் தன் விதையை ஊன்றியாக வேண்டும். அதே போல் புருஷனை ஆன்மாவும் பிரகிருதி இல்லாமல் தோற்றம் எடுக்க முடியாது. இந்தக் கருத்துக்களைத்தான் பகவான் இந்த சுலோகத்தில் சுருக்கமாக, 'நான் அந்த நித்திய பிதா; உலக முழுமையான பிரகிருதியைக் கருவுறச் செய்கிறேன்; உலக அரங்கில் உயிர்களை ஆடச் செய்கிறேன்' என்கிறுர்.

கீதை கிறிஸ்து பிறப்பதற்கு நீண்ட காலத்துக்கு முன்பே கூறப்பட்டது. எழுதப்பட்டது. எனவே அநேகர் நம்மை நம்ப வைப்பதற்கு தாஜா பண்ணுவது போல் பைபிள் (விவிலிய நூல்) ''முதலில் கடவுள் உலகத்தின் தந்தை என்று கிறிஸ்துவ மதம்

தான் உணர்ந்து கொண்டது' என்று உரிமையுடன் கூற முடியாது. வேண்டுமானல் அந்த நம்பிக்கை அதற்கு முன் பிருந்தே இருந்து வந்த ஏதோ ஒரு சமயத்திலிருந்து கடன் வாங்கிய நம்பிக்கை என்று சொல்லலாம். ஹிந்துக்களாகிய நாம் இந்தக் கடவுளின் தந்தைக் கருத்தை மிகவும் வலியுறுத்தவில்லே. ஏன் என்ருல் இந்தக் கருத்து கவிதையளவில் மிகக் கவர்ச்சி யாகத் தோன்றிஞலும் பகுத்தறிவு வாதம் என்கிற முறையில் சரியாக இராது. ஆனல் பின்னல் வந்த சமயங்கள் 'இந்த இலக்கியக் கருத்துக்கள் எளிதில் புரிந்து கொள்ளும்படி இருக்கின்றன' என்பதனல் அவற்றைக் கடன் வாங்கிக் கொண்டன. நாமும் பெருந்தன்மையுடன் அதைக் கவனிக்காதது போல் விட்டுவிட்டோம்.

இப்போது கண்ணன் இந்த அத்தியாயத்தின் பிரதான மான பொருளே எடுத்துக்கொண்டு 'குணங்கள் என்ன? அவை எவ்விதம் பிரகிருதிக்குள் இருக்கும் ஆத்மாவைக் கட்டுப்படுத்தி தனி ஜீவ பாவனேயை ஏற்படுத்துகின்றன என்று விளக்கத் தொடங்குகிருர்:

ஸத்வம் ரஜஸ்தம இதி குண: ப்ரக்ருதிஸம்பவா:
நிபத்னந்தி மஹாபாஹோ தேஹே தேஹினமவ்யயம்

14:5

ஸத்வம்—தூய்மை; ரஜ—உணர்ச்சி வெறி; தம—சோம்பல் இதி— என்று; குண—குணங்கள்; பிரகிருதிஸம்பவா—பிரகிருதியிலிருந்து பிறந்தவை; நிபத்னந்தி—பிணேக்கின்றன; மஹாபாஹோ—பெருந் தோளாய்! தேஹே—உடலில்; தேஹினம்—உடலுக்குடையோனே; அவ்யயம்—அழியாதவனே.

ஏ பெருந்தோளாய்! தூய சத்துவம், வெறிகொண்ட ராஜஸம், செயல்விரும்பாத தாமஸம், என்ற இந்த மூன்று குணங்களும் பிரகிருதியிலிருந்து பிறந்தவை, உடலில் அழியாதவனக இருக்கும் உடலுக்குரியோனே நன்ருய்க் கட்டி விடுகின்றன.

பிரகிருதியிலிருந்து பிறந்த குணங்கள்: குணம் என்ற சொல்லுக்குச் சரியான முழு அர்த்தத்தையும் கொடுக்க வல்ல சொல்லே ஆங்கிலத்தில் கண்டுபிடிப்பது கஷ்டம். (தமிழில் குணம் என்றே சொல்லிப் பழக்கமாகி விட்டது. எல்லோருக்கும் புரியும்) ஏன் என்ருல் அந்த நாட்டில் மனே விஞ்ஞானம் இன்னும் இளம் பருவத்தில்தான் இருக்கிறது. எனவே அவர்கள் சிந்தனேப் பரம்பரையில் இப்படி ஒரு சொல் இன்னம் ஏறி வரவில்லே. மனே விஞ்ஞான சாஸ்திரம் அதன் பகுத்துப் பார்க்கும் முறை, பரிசோதனேமுறை ஆகியவற்றில் நன்கு வளர்ந்தபிறகுதான்

எண்ணங்கள், சிந்தனைகள் அல்லது நினைவுகளைப் பாதிக்கும் ஆதிக்கங்களான குணங்களைப் பற்றி எழுத, பேச முடியும்.

சத்துவம் (சாத்வீகம்) என்கிற கருத்து கண்ணாடி போன்று வெளியிலிருந்தே தெளிவாகப் பார்வையை ஊடுருவ அனுமதிக்கும் சுத்தத் தூய்மையாகும். அது தாமஸம் என்கிற ''முழு'' அழுக்குள்ள பார்வையை மறைக்கும். இருளுக்கு எதிர் மறையான சொல் அது ராஜஸம் என்கிற தூசி நிறைந்த நிறத்திலிருந்து நிச்சயம் மாறுபட்டது. நம்முடைய சாஸ்திர நூல்களில் சத்வம் (சாத்வீகம்) வெளிச்சத்தின் வெண்மை யுடனும், ராஜஸம் சிவப்பு நிறத்துடனும் தாமஸம் இருளுடனும் சம்பந்தப்படுத்திப் பேசப்பட்டிருக்கின்றன.

'குணம்' என்ற சொல்லுக்கு கயிறு என்னும் பொருள் உண்டு. அது நம்முடைய ஆன்மீகச் சிறப்பொளியை அறிவற்ற சடப் பிரகிருதியுடன் சேர்த்துக் கட்டுகிற கயிருகிறது. மொத்தத்தில் குணங்கள் மனித மனத்தை மாறும் சமயங்களுக்கும், சூழ்நிலைகளுக்கும் ஏற்றவாறு விதவிதமாக எல்லையற்ற முறைகளில் ஆட வைக்கும் ஆதிக்கங்களாகும்.

இந்தக் குணங்கள் பௌதீகப் பொருள்களின் (பிரகிருதியின்) அடிப்படையாகப் பிறந்தவை. இயற்கை அல்லது க்ஷேத்திரத்திலிருந்து பிறந்த இவை ஒரு பற்றுணர்வை ஏற்படுத்தி உள்ளேயுள்ள ஆத்மாவை மயக்கத்துக்குள்ளாக்கி விடுகின்றன. அவ்விதம் ஆட்படுத்தி மாற்றங்கள், வேதனைகள் இவற்றின் முடிவற்ற நீரோட்டத்துடன் அதாவது பிறப்பு இறப்பு வட்டத்துடன் சங்கிலி போட்டுக் கட்டியது போல் இறுகக் கட்டி விடுகின்றன. ஒரு பொருளுக்கு இயற்கைத் தன்மை போல் தனி வாழ்வு உள்ளவையல்ல குணங்கள். நாம் சொல்லக் கூடிய தெல்லாம் மனநிலைகளின் மாற்றங்களே அவை. ஒரு நிலையில் மனம் செயல்படுவது போல் அடுத்த நிலையில் அது செயல் படுவதில்லை. குறிப்பிட்ட நேரத்தில் எந்தக் குணம் மேலோங்கி நிற்கிறதோ அந்தக் குணம் நிலையை நிர்ணயிக்கிறது. அந்த நிலைக்கேற்றவாறு மனம் செயல்படுகிறது.

இந்தக் குணங்கள்தாம் கயிறுகள் போல ஆகி (பிரமை தான். ஆனாலும் இதுவே உண்மை போல் செயல்கள் நடக்கின் றன) ஆன்மாவை பிரகிருதியுடன் கட்டி அந்த எல்லையற்ற பரம் பொருளான ஆத்மாவில் குறைபாட்டுணர்வுகள் துயர உணர்வு கள் நடுக்கங்கள்—இவற்றை ஏற்படுத்திவிடுகின்றன. எங்கும் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கும் ஸர்வவியாபியும் எல்லையற்ற பரம்பொருளுமான ஆன்மா பிரமை தட்டும் பிரகிருதி உலகத் தின் களவுத் திட்டங்களால் உண்மையில் எவ்விதத்திலும் களங்கப்படுவதில்லை. சாலையில் இருக்கும் கம்பத்திலிருந்து

வெளியே வந்த பூதம் அந்தக் கம்பத்தில் எந்த அடையாளத்தையும் விட்டுச் செல்ல முடியாது. கனவில் டஜன் கணக்கானவர்களைக் கொன்று என் கைகளிலிருந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருக்கலாம். ஆனால் விழித்த பிறகு என் கைகளில் எந்த அடையாளமும் காணப்பட மாட்டாது. கனவு காண்கிற நிலையில் உள்ள 'கனவு காண்பவனா'ன எனக்கு நான் கனவில் கண்ட கற்பனைத் தோற்றம் எல்லாம் கனவு நிலையில் இருக்கும் வரை உண்மையே! ஆனால் விழித்தவுடன் 'விழித்தவ'னான என் மேல் 'கனவு கண்டவன்' அடையாளங்கள் என்றும் இருக்காது. அதே போல் அந்த நித்திய சத்திய உயிர், பொருள் (உடல்—பிரகிருதி) ஊடே புகுந்து அதில் இயங்கும் போது அது தரும் குறைபாடுகளுடனும் அதன் அழியும் தன்மையுடனும் இணைத்துப் பிணைக்கப் பட்டு விடுகிறது. இந்தப் பிரமை வாழ்வு, குணங்கள் அதை பிரிகிருதியுடன் இணைத்து நிற்கும் வரை இருக்கத்தான் இருக்கும் (—வரைதான் இருக்கும்.)

உடல் ஏற்ற ஆன்மா உள்ளபடி அழியாதது, எல்லையற்றது. என்றாலும் அது உடலுடன் ஒன்றி அதனுடன் பற்றுக் கொண்டு அதன் காரணமாக சரீரத்தின் மாற்றங்களைத் தன் மாற்றங்களாக எண்ணிக் கொள்கிறது. நம்முள் ஒவ்வொருவர் விஷயத்திலும் இந்தப் பிரமை முக்குணங்களின் லீலை காரணமாக நிலையாக்கப்படுகிறது. இம் மூன்று குணங்களின் வயப்படும் போது மனது எப்படி நடந்து கொள்கிறது என்ற விவரம் அடுத்துவரும் சுலோகங்களில் தரப்படுகிறது.

• இம் மூன்று குணங்களில் சத்துவத்துக்கு இலக்கணம் கூறப்படுகிறது:

தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாச க ம நாமயம்
ஸுக ஸங்கேன பத்நாதி ஜ்ஞான ஸங்கேன சாநக

14:6

தத்ர—இவற்றுள்; ஸத்வம்—தூய்மை; நிர்மலத்வாத்—களங்கமற்ற (அழுக்கற்ற) தன்மையால்; ப்ரகாசகம்—ஒளி பொருந்திய (தருவ)தாக; அநாமயம்—பிணியற்றதாக (ஆரோக்ய முடையதாக); ஸுக்க ஸங்கேன—இன்பத்துடன் பற்றினாலும்; பத்நாதி—கட்டுப்படுத்துகிறது; ஞான ஸங்கேன ச—ஞானத்தின் பற்றினாலும்; அநக— ஏ பாபம் அற்றவனே.

இம் மூன்றில் சத்வம் (தூய்மை) களங்கமற்றதாகவும் ஒளிரக் கூடியதாகவும் ஆரோக்கியமாகவும் இருந்து கொண்டு சுகத்துடன் பற்றினாலும் ஞானத்துடன் (அறிவுடன்) பற்றினாலும் கட்டுப்படுத்துகிறது. ஏ பாபம் அற்றவனே.

Ramesh

அறிவியலில் ஒரு உண்மை எல்லோராலும் ஒப்புக் கொள்ளப் படுகிறது. அதாவது எந்தப் பொருளேயும் அப்படியே சுத்தமாக இலக்கணம் கூறிக் காட்ட முடியாது. எந்த வியாதி தானுகட்டும் அல்லது உணர்ச்சியாகட்டும்—அதை விவரிக்க அதன் அடையாளங்களேயும் அது வெளிப்படுத்தும் உடல் மாற்றங்களே யும் சொல்லாமல் புரியவைக்க முடியாது. அதே போலத்தான்—எந்தக் குணத்தையும் நேரடியாக விவரிக்க முடியாது. வருகின்ற சுலோகங்களிலும் ஒவ்வொரு குணத்தின் வசப்படும்போதும் மனதில் எந்த வகை உணர்வுகள் எழுகின்றன, அது எப்படி நடந்து கொள்கிறது என்று பட்டியல் தந்து விளக்கப்படுகிறது. இப்படி தனிச் சிறப்புக் குறிகள் சொல்லி குணத்துக்கு இலக் கணம் தருவது நம் போன்ற சாதகர்களுக்கு மிகவும் நல்லது. ஏன் என்ருல் நாம் நம் மனம்—புத்தி உபாதியில் எழும் உணர்ச்சிகளே யும், எண்ணங்களேயும் வகைப்படுத்தி அதன் மூலம் நம்முடைய மனது குறிப்பிட்ட நேரத்தில் எந்தக் குணத்திஞல் ஆளப்பட்டு நிற்கிறது என்று புரிந்து கொள்ள முடியும்.

களங்கமில்லாத காரணத்தால் (அழுக்குப் படியாததனுல்) சத்துவம் ஒளிர்கிறது. (ஒளிருவதாக இருக்கிறது)—நம் சிந்தனே வாழ்வில் சத்துவம் பிரதானமாகி முக்கிய ஆதிக்கம் வகுக்கும் போது அதன் தூய்மை காரணமாக அது ஒளி பொருந்தியதாக இருக்கிறது. அதற்கு ராஜஸத்திற்கு உள்ள மங்கிய (ஒளியும்) நிறமும் கிடையாது. இருள்கொண்ட அழுக்குகளும் கிடையாது. சத்துவத்தின் ஆதிக்கத்திலிருக்கும்போது மனம் நிலேயாய் இருந்து கொண்டு சுத்த உணர்வான ஆன்மாவைத் தியானிக்கும்.

கெடுதல்களிலிருந்து விடுபட்டு: உலகில் வெளியே கெடுத லான செயல்கள் செய்யப்படுவதற்கு வெகு நேரம் முன்பே மனதில் கெட்ட எண்ணங்கள் தோன்றிவிடும். எனவே கெடுத லின் மூலே மன வாழ்க்கையில் இருக்கிறது. எண்ணம் போல் தான் செயல்களும் சதையின் மட்டாக ஆசைகள், மனதின் சுய நலப் பறப்புக்கள் மண்டையில் (புத்தியில்) எழும் அகத்தை மைய மாக்கிக் கொண்ட விருப்பங்கள் ஆகியவற்றை நிறைவேற்றச் செய்யப்படும் முயற்சியை கெடுதல் (மனத்தைப் பீடிக்கும் வியாதி) என்கிருேம். அகத்தை மையமாகக் கொண்டு சுயநலம் தேடுதல்தான் கெடுதல்களின் கருப்பை. மனது ராஜஸத்திலோ தாமஸத்திலோ இருக்கும் போது தான் அந்த மட்டமான ஆசை களும் கிளர்ச்சிகளும் எழும். எனவே சொல்ல வருவது: ராஜஸத்துக்குரிய பதற்ற வெறிகள் தாமஸத்துக்குரிய மந்த இருள் இவற்றிலிருந்து நீங்கியிருக்கிற காரணத்தால் சத்துவம் எல்லாக் கெடுதல்களிலிருந்தும் (பீடிப்புக்களிலிருந்தும்) விடு பட்டு இருக்கிறது என்பதாகும். இவ்விதம் பார்த்தால் சத்துவம் மிகவும் உயர்ந்த தெய்வீக நிலேயாகும். இருந்தும்கூட அதுவும்

நம்மைக் கட்டுப்படுத்தி தம் முழுத் தெய்வீகத் தன்மைக்கு வரம்பு கட்டி விடுகிறது.

சத்துவம் இன்பம், ஞானம் இவற்றில் பற்று மூலம் கட்டி விடுகிறது:

மனம் அதன் பதற்றங்களை (ராஜஸத்தை) நீக்கியும், புத்தி, மட்டமான வெறிகள் குற்ற இயல்புள்ள அடங்காத மட்டரக வேட்கைகளிலிருந்தும் விடுபட்டுத் தூய்மையுடன் இருக்கும் போது நம் ஆளுமை தூய்மையாகிறது. உள் அமைதியும் இன்ப மும் அதிகரிக்கின்றன. ஞானம் சூக்குமமடைகிறது. புத்தி நுணுகிய கருத்துக்களைச் சிந்திக்க முடிகிறது. உண்மைதான். இருப்பினும் இவைகூட அந்தத் தனிச் சுத்த பேருணர்வான ஆத்மாவின் சுதந்திரத் தன்மைக்குத் தளை போட்டு விடுகின்றன. பலமான தங்கச் சங்கிலியும் கூட இரும்புச் சங்கிலியைப் போல் நம்மைக் கட்டிவிட முடியும். நல்ல குணம் கீழ்த்தரமான அசிங்க நடவடிக்கைகளிலிருந்து நம்மைக் காப்பாற்றி விடும். என்றாலும் தன் விலங்குகளைக் கொண்டு நம்மைக் கட்டவே செய்யும். முழுமையாக சுதந்திரம் கொண்டாடும் ஒரு பூரணன் நன்மை யாலும் கட்டுப்பட்டிருக்க மாட்டான். தீமைக்கும் ஆட்பட மாட்டான்.

சுத்த உணர்வுத் தத்துவமான, சர்வவியாபகத்வம் வாய்ந்த, ஞானத் தத்துவம் ஆன்மாவாகச் செயல்படுகிறது. நம் ஒவ்வொருவருள்ளும் உள்ள அந்த ஆத்மா புற உலகில் உள்ள பொருளையோ, கருத்தையோ விளங்கிக் கொள்வதில்லை. இதை அறிந்து கொள்கிற புத்தி இருக்கிறதே, அது நம்முடைய மனம்—புத்தியாக, அந்தக்கரணத்தில் அந்த நித்தியப் பேருணர்வுத் தத்துவத்தின் பிரதிபலிப்பேயாகும். எனவே, நம்முள் எந்த இருவரை எடுத்துக் கொண்டாலும் ஒரே மாதிரியான அமைப்பு உள்ளவர்களாக இல்லாத காரணத்தால் உலகைக் கெட்டிக் காரத்தனமாக விளங்கிக் கொள்ளும் திறமை ஆளுக்கு ஆள் மாறு படுகிறது. ஜன்னல் இல்லாத வீடு எப்போதும் இருளில் போர்த்த ப்பட்டிருக்கும். ஆனால் வெளியே தாழ்வாரத்தில் ஒரு வாளியில் தண்ணீர் நிரப்பி வைத்து அந்த அறைக்குள் வெளிச்சம் வரச் செய்ய முடியும். தண்ணீரில் விழும் சூரிய பிம்பத்தின் ஒளி திறந்த கதவின் வழியாகப் புகுந்து உள்ளே பரவும். அந்த ஒளியின் கனத்த கற்றை இருளை விரட்டிவிடும். இந்தப் பேருணர்வு ஒளி எங்கும் ஒரே தன்மைத்தாய் வியாபித்திருக்கிறது. அது நம்மு டைய புத்தியில் பிரதிபலித்து ஒரு ஞான ஒளிக் கற்றையை நம்முள்ளே வீசுகிறது. அதனுடைய பலத்தால்தான் நாம் புற உலகில் பொருள்களை விளங்கிக் கொள்கிறோம். *

---

* சுவாமியின் விவேக சூடாமணி உரைகளில் இந்தக் கருத்து மிகத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது.

பிரதிபலிக்கும் சாதனத்தின் தூய்மை, அதன் அலையாது நிலையாக இருக்கும் தன்மை, இரண்டையும் பொறுத்தேதான் பிரதிபலிப்பும் இருக்கும். மனது சுத்தமாயிருந்து புத்தியும் நிலையாய் இருந்தால் அதிகத் திறமை கொண்ட புத்திசாலித்தனம் வெளியாகும். இவ்விதம் பார்த்தால் மனது சுய ஊக்கமும், படைப்பு ஆர்வமும் கொண்ட நிலையில் இருக்குமானால் அது உண்மையிலேயே அறிவு நிரம்பியதாக இருக்கும்; ஞானவெளியில் மிக அதிக உயரமும் மிக அதிக தூரமும் பறந்து செல்லும் ஆற்றல் கொண்டு விளங்கும். இப்படி மிகப் பரந்த அளவில் ஞானமும் மிக ஆழ்ந்த அறிவும் கொண்டு விளங்கும் போதெல்லாம் மனம் சத்துவத்தின் கட்டுப்பாட்டில் இருப்பதாகப் பொருள். அப்போது 'ராஜஸம்' தரும் பதற்ற ஆரவாரங்களும் 'தாமஸம்' தரும் அழுக்குக் கலங்கலும் இராது.

சத்துவம் கூட ஆத்மாவை பிரகிருதியுடன் அறிவு, இன்பம் இவைகளிடம் உள்ள பற்றின் மூலம் கட்டிப் போட்டு விடுகிறது. ஒரு முறை நமக்கு புதிதாகப் படைக்கும் எண்ணங்கள் தரும் சிலிர்ப்பு ஊட்டக்கூடிய ஆனந்தமும் நல்ல தன்மை, ஞானம் இவற்றால் கிடைக்கும் உள் ஊக்கம் கொண்ட வாழ்வின் அனுபவமும் ஏற்பட்டு விட்டால் பிறகு நாம் அதனுடன் ஒட்டிக் கொள்கிறோம். அப்போது அந்த மகிழ்ச்சிகரமான அனுபவத்தில் திளைத்துக் கொண்டே இருக்கவேண்டும் என்பதற்காக நம்மைச் சுற்றியுள்ள மற்ற எதையும் தியாகம் செய்யத் தயாராகிவிடுவோம். பரிசோதனைச் சாலையில் ஈடுபாட்டுடன் வேலைசெய்யும் விஞ்ஞானி, தன் எளிய ஓவியச் சாலையில் திரையில் வர்ணம் தீட்டும் பசியால் வெளுத்து வியாதியால் இளைத்திருக்கும் ஓவியன், சமூகத்தால் நிராகரிக்கப்பட்டு, பொது இடங்களில் தங்கியிருந்த போதிலும், தன் கனவுகளையும் தன் சொற்களையும் உருவாக்கிக் கொண்டிருக்கும் கவி; மிகக் கோரமான தண்டனைகளை எதிர்நோக்கியிருக்கும் உயிர்த் தியாகிகள்; வெகு நாட்கள் நாடு கடத்தப்பட்டு அலையும் அரசியல்வாதிகள்; சாவைத் தழுவத் தயாராய் எமலோகத்துக்குப் போகிற படிகள் போன்ற மலைகளில் ஏறும் மலையேறிகள்... இவ்வகை சத்வகுண இன்பம் துய்த்த பித்தர்களுக்கு எடுத்துக் காட்டுக்கள். உயர்மட்ட இன்பத்தின் தென்றல் போன்ற மிருதுவான கிளுகிளுப்பையும் சிலிர்ப்பையும் அறிந்தவர்கள் அவர்கள். மற்றவர்கள் உலகியல் பொருள்களுக்கும் சொத்துக்கும் எவ்வளவு பிணைப்பட்டு உழல்கிறார்களோ அவ்வளவே இவர்களும் தங்கள் இன்பங்களுடைய பற்றில் தளைப்பட்டு நிற்கிறார்கள்.

இப்போது ராஜஸம் நம் உள் மனதினை நிலைகுலைய ஆட்டி வைக்கும் போது இருக்கும் அதன் இலக்கணம் இப்போது கூறப்படுகிறது.

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணுஸங்க ஸமுத்பவம்
தந்நிபத்நாதி கௌந்தேய கர்மஸங்கேன தேஹினம்

14:7

ரஜ:—ராஜஸம்; ராகாத்மகம்—பற்று வெறித் தன்மை கொண்டது; வித்தி—அறிந்து கொள்; த்ருஷ்ணு ஸங்க ஸமுத்பவம்—தாகம் (விடாய்) பற்று இவற்றின் ஊற்று (தொடக்கம்); தத்—அது; நிபத்நாதி—கட்டுகிறது; கௌந்தேய—ஏ கௌந்தேயா; கர்மஸங்கேன—செயலின் பற்றினல் தேஹினம்—தேஹியை (உடல் எடுத்த உடலுக்குரியவனை).

ரஜோ குணத்தை பற்று (உணர்ச்சி) வெறித் தன்மை கொண்டதென்றும் தாகத்துக்கும் (வேட்கை விடாய்க்கும்) பற்றுக்கும் மூலம் என்றும் அறி. ஏ கௌந்தேயா (குந்தி புத்திரா!) அது உடலுக்குரியோனை கர்மத்தின் பற்றுக் கொண்டு தளைத்து விடுகிறது.

மனத்தின் சூக்குமமான ஆசைச் சாய்வுகளின் காரணமாக மீண்டும் ஒரு மனிதனுடைய எண்ணங்கள் தறிகெட்டு ஓடி அவன் உள் ஆளுமையை நாசப்படுத்தி விடுகின்றன. எனவே தன் மனதை வெற்றி கொள்ள விரும்பும் சாதகன் அந்த மனச் சார்புகளைப் பற்றி நன்கு தெரிந்து கொண்டிருக்க வேண்டும்.

ராஜஸம் பற்று வெறித் தன்மைத்து என்று அறி: ராஜஸ குணத்தின் ஆதிக்கம் ஒரு மனிதனுடைய உள் மனிதன் மேல் படையெடுத்து மோத வந்துவிடும் போது அவன் மனம் ஆயிரம் வகை ஆசை வெறிகளால் நிரம்பி நெரிந்து, தெரித்து விடுகிறது. மனத்தளத்தில் ரஜோ குணம் லூட்டி அடிக்கத் தொடங்கியிருக் கிறது என்பதற்கு ஆசை வெறிகள் முக்கிய அடையாளங்களா கும். அந்த வெறி பல லட்சக்கணக்கான வேட்கைத் தூண்டல் கள், விருப்பங்கள், உணர்ச்சி வேகங்கள் உணர்ச்சிகள் இவற்றின் மூலம் வெளியாகும். இருப்பினும் அவற்றை எல்லாம் மொத்த மாக விருப்பம், பற்று இந்த இரண்டு வகைக்குள் அடக்கிவிட லாம். எனவே கீதையில் கீதாசாரியன், கிருஷ்ணபரமாத்மா இந்த இரண்டையும் எல்லா ஆசை வெறிகளும் எழுகிற பிறப்பிடம் என்கிருர்.

தாகம் (வேட்கை = விருப்பம்) தீவிர பற்று இவற்றைப் பிறப்பிக்கிறது: ஸம்ஸ்கிருதத்தில் விருப்பத்துக்குத் தாகம் என்கிருர்கள். ஒருவனுக்குத் தாகம் எடுத்தது என்ருல் அந்தக் கணத்தில் நீர் தவிர வேறு எதுவும் அவனுக்கு முக்கியமாகத் தோன்ருது. ஏன் என்ருல் அதுதான் அவன் தாகத்தைத் தீர்க்கும். தாகம் கொண்டவன் வரள்வான்; அல்லன்படுவான்;

தொல்லேக்குட்படுவான். தாகம் தீர்ந்தால்தான் அவன் நிம்மதி அடைய முடியும். எனவே அவன் நீரைத் தவிர வேறு ஒன்றையும் வேண்ட மாட்டான். அதே மாதிரி மனிதனை எரிக்கிற ஒவ்வொரு விருப்பத்தையும் தணித்துக் கொள்ளவே மனிதனுடைய முயற்சி விரும்புகிறது. விருப்பம் தீர்ந்து விட்டவுடன் பற்று என்ற நச்சு வெறி அவன் மன அமைதியையும் இன்பத்தையும்நசுக்க என அவனைப் பற்றிக் கொள்கிறது. இதுவரை கிடைக்காத பொருளு டன் நம் மனது கொள்ளும் உறவே விருப்பம், அவா, வேட்கை யாகும். கிடைத்த பொருளுக்கு நம் மனது அதனுடன் கட்டுண்டு அடிமையாகி விடுகிறதே அந்த அடிமைத்தனத்தைப் பற்று என்கி ரேம்.

பொருள்களைத் தேடிப் பெறும் அவா, நமக்குக் குறிப்பிட்ட இன்ப உணர்வைத் தரும் என்று நாம் நினைக்கிற சூழ்நிலைகளை ஏற் படுத்தும் முயற்சிகள்—இது ஒன்று; அப்படித் தேடிய பொருளு டன் இறுக்கமாக நாம் கொள்ளும் பற்று—இது இரண்டு. இந்த இரண்டுமே புன்சிரிப்புடன் மகிழ்ச்சியாக இருக்கும் நம் வாழ்வை எரித்துக் கொளுத்தும் கொதிக்கும் பாறைக் குழம்பை வெளி யிடும் எரிமலைகளாம். இந்த நெருப்பு மலைகள் வெளியே வீசித் தள்ளும் பாறைக் குழம்புகள்தாம் தேடவும், வைத்துக் கொண்டு அனுபவிக்கவும், அவற்றைக் காக்கவும் என அவன் படும் அவஸ்தைகளான உணர்ச்சி வெறிகள்.

அது கரு்மத்தில் (செயலில்) பற்றுக்கொண்டு உடலுக்குரியவனைக் கட்டி விடுகிறது: ராஜஸத்தின் ஆதிக்கத் துக்குள் மனிதன் வந்துவிடும் போது அவன் எண்ணற்ற விருப்பங் களை வெளிக் கொணர்கிறுன். அப்போது பற்றுகள் அவன் கண் களை (அறிவை) மூடிவிடுகின்றன. எனவே பல்வகையான தீவிர ஆசைகளைக் காட்டுகிறுன். அப்படி உணர்ச்சி வேறியிலுள்ளவன் இதுவரை கிடைக்காத பொருள்களின் ஆசையால் விரட்டப் பட்டும், தன்னிடம் ஏற்கனவே உள்ள பொருள்களிடத்தில் உள்ள பற்றுல் அவற்றைக் காக்க வேண்டிய பொறுப்பு ஆத்திரம் இவற்றின் பளுவால் நசுக்கப்பட்டும் தவிக்கும்போது அவனுல் அமைதியாக இருக்க முடியாது. முடிவற்ற வகையில், இடை விடாமல் பறந்து பறந்து சம்பாதித்துக் கொண்டும் செலவழித்துக் கொண்டும், மிச்சப்படுத்திக் கொண்டும் சேர்த்துக் கொண்டும், உற்பத்தி செய்து கொண்டும், காத்துக் கொண்டும் மேலும் மேலும் ஆசைப்பட்டுக் கொண்டும் தான் தன் காலத்தைக் கழிக்க வேண்டியிருக்கும். இன்னும் அதிகம் வேண்டும் என்ற ஆத்திரம் கொண்ட கவலேயும், இருப்பது போய்விடக் கூடாதே என்ற அச்சமும் அவனை ஒரு செயலிலிருந்து மற்றெரு செயலுக்கு சாட்டை கொண்டு அடித்து விரட்டிக் கொண்டே இருக்கும். ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் ஓடியாடி அவன் தன்னுடைய வெற்றி

யின் மகிழ்ச்சி, தோல்வியின் வருத்தம் இவற்றின் வலைகளில் சிக்கிக் கொள்கிறான். இவ்விதம் தன்னுடைய செயல்களாகிய சங்கிலிகளாலேயே பிணைப்புண்டு தவிக்கும் ‘உடலை உடையோனாக’ ஆகிவிடுகிறான்.

தீவிர வேகம் கொண்ட வெறிகள் (ஆசைகள்) காரணமாகவே செயல்கள் பிறக்கின்றன. ஆசைகளும் பற்றுக்களுமே தீவிரம் கொள்கின்ற போது வெறிகளாக மாறுகின்றன. இவையெல்லாம் நம் மனதை ராஜஸ குணம் ஆதிக்கம் கவ்விக் கொண்டிருப்பதன் அடையாளங்கள். இவ்விதம் பார்க்கும்போது சத்வ குணம் நம்மை இன்பம் அமைதி, ஞானம், அறிவு இவற்றின் பால் கொள்கிற ஆர்வத்தின் காரணமாக சென்ற சுலோகத்தில் சொன்னது போல் நம்மைக் கட்டுகிறது என்றால் ராஜஸ குணமே அந்த முடிவற்ற பரம்பொருள் தத்துவத்தை பிரகிருதியுடன் கட்டிவிடுவது போன்ற பிரமையில் சிக்க வைத்து செய்கைகளின் தொடர்கள் மூலம் வரம்புக்குட்பட்ட உயிர் போல் செயலாற்ற வைத்துவிடுகிறது. ஆத்மா கர்த்தா இல்லைதான். ஆனாலும் ராஜஸ குணம் அவனை ‘நான் கர்த்தா’ என்று எண்ண வைத்து செயல் செய்யச் செய்து விடுகிறது.

தாமஸ குணமும் அழியாத தெய்வீக ஆத்ம தத்துவத்தை அழியும் சதைப் பிண்டத்துடன் கட்டிவிடுகிறது.

தமஸ் த்வஜ்ஞானஜம் வித்தி மோஹனம் ஸர்வதேஹினாம்
ப்ரமாதாலஸ்ய நித்ராபிஸ்தந் நிபத்நாதி பாரத

*14:8*

தம—(உருப்படியான செயலுக்கஞ்சும்) தாமஸம்; து—என்றாலோ; அஜ்ஞானஜம்—அறியாமையில் விளைந்தது; வித்தி—அறி; மோஹனம்—மயக்கக் கூடியது; ஸர்வதேஹினாம்—உடலுடன் கூடிய எல்லோரையும்; ப்ரமாத ஆலஸ்ய நித்ராபி—கவனமின்மை, சோம்பேறித்தனம், தூக்கம் இவற்றால்; தத்—அதை; நிபத்நாதி—நன்கு கட்டிவிடுகிறது; பாரத—ஏ பரத குலத் தோன்றலே.

மருளுள்ள தாமஸம் என்றாலோ அது அறியாமையில் விளைந்தது என்று அறிவாய். அது எல்லா உடல்களையும் மயக்கத்துக் குள்ளாக்கி விடுகிறது. கவனமின்மை, செயலில் சோம்பல், தூக்கம் இவற்றைக் கொண்டு, ஏ பாரதா, அது மிகவும் இறுக்கிக் கட்டிவிடுகிறது.

தாமஸகுணம் அறியாமையில் பிறந்தது; தாமஸம் மனதை ஆதிக்கம் கொள்ளும் போது ‘சரி எது? அல்லாதது தப்பு எது?’ என்று பிரித்து விளங்கிக் கொள்ளும் புத்தி ஆற்றலின் மேல்

போர்வை மூடி விழுந்து விடுகிறது. அப்போது அவன் மயக்கத்தில், மருட்சியில் அல்லது பிரமையில் சிக்கியவன் போன்று வேலை செய்கிறான். ''நம்முடைய ஆளுமையைப் பிர்மைக்குள்ளாக்கி தாமஸம் நம்மை முடிவற்ற தப்பு மதிப்பீடுகள், தவறாகப் புரிந்து கொள்ளுதல் இவற்றின் மூலம் வாழ்வின் உண்மையான கருத்தையும் குறிக்கோளையும் மறைத்து நம்மை நம்முடைய கீழ்மட்டத்தில் இருக்கிற மட்டமான இயற்கையுடன் இணைத்து விடுகிறது. அந்த நிலையில் அது நம்மை சோம்பேறிகளாகவும், உயர்ந்த கொள்கைகளை மறந்து அவற்றில் கவனம் செலுத்தாதவர்களாகவும் வாழத் தூண்டி விடுகிறது. அந்த நிலைக்குட்பட்டவன் அதற்குப் பிறகு வாழ்க்கையில் உயர்ந்த தெய்வீக இலட்சியங்களை மறந்து எப்போதும் 'தூங்கிய' நிலையிலேயே வாழ்கிறான். கொள்கையில் உறுதி கிடையாது. சிந்தனையில் சிறப்பு ஒளி கிடையாது. உணர்ச்சியில் கருணை இராது. செய்கைகளில் உதார குணம் கிடையாது. ''இவ்விதம் தான் தமோ குணத்தின் ஆதிக்கத்தில் வந்த மனிதன் வாழ்வான்'' என்று பகவான் கிருஷ்ணன் சொல்லுகிறார்.

இதுவரை பகவான் மிகவும் திட்டமிட்டு இந்தக் குணங்கள் நம்முடைய உள் சமநிலையைப் பாதிக்கும் போது என்ன அடையாளங்கள் காணப்படுகின்றன என்று வரிசையாகச் சொல்லி வந்தார். இந்த மூன்று குணங்களும்* தனி ஜீவனுடைய தெய்வீகத் தோற்றத்தில் மாறுபாடு தோன்றச் செய்வதோடு மட்டும் நில்லாமல் பூரணமேயான நித்ய பரமாத்மாவையும் கட்டி அதையும் சாதாரணமான குறைபாடுள்ள ஒன்றைப் போல், பிரகிருதியின் கட்டுப்பாட்டுக்குட்பட்டது போல் உணரவும் செயலாற்றவும் நிர்ப்பந்தப்படுத்தி விடுகிறது!

நம்முடைய உள் ஆளுமையின் இந்தக் குணங்களின் செயல்கள் சுருக்கமாய் மீண்டும் சொல்லப் படுகின்றன:

ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத
ஞானமாவ்ருத்ய து தம: ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத

*14:9*

ஸத்வம்—தூய்மை; ஸுகே—சுகத்துடன்; ஸஞ்ஜயதி—இணைக்கிறது; ரஜ:—செயல்வேகம்; கர்மணி—செயலுடன்; ஸஞ்ஜயதி—இணைக்கிறது; பாரத—ஏ பாரத; ஜ்ஞானம்—ஞானத்தை; ஆவ்ருத்ய—போர்த்தி; து—நிச்சயமாக; தம:—சோம்பேறித்தனம்; பிரமாதே—கவனமின்மையுடன்; ஸஞ்ஜயதி—இணைக்கிறது; உத—ஆனால்.

---

* குணங்கள் என்றால் ஸம்ஸ்கிருதத்தில் 'கயிறு' என்ற பொருளும் உண்டு என்று முன்னமேயே சொல்லியிருக்கிறோம்.

சத்துவம் இன்பத்துடன் சேர்க்கிறது. ராஜஸம் செயலுடன் இணைக்கிறது. ஏ பாரதா! தாமஸமோ ஞானத்தை மூடிவிட்டு கவனமற்ற தன்மையுடன் பிணைக்கிறது.

சென்ற மூன்று சுலோகங்களில் சொல்லப்பட்ட கருத்துக் களே இவை. என்ருலும் கீதை இருவரிடையே நடக்கும் பேச்சு உருவத்தில் அமைந்த நூல். ஒருவர் பரம ஞானியான தெய்வம். அவர் சராசரி அறிவுள்ள மனிதனுக்கு அறிவுதந்து உதவ முயலு கிருர். அவனே தனக்கு எதிரேயுள்ள பிரசினைகள் காரணமாகப் பதற்றமடைந்திருக்கிருன். எனவே வேகமாகவும் சுருக்கமாகவும் சொல்லப்படுகிற நுண்ணிய கருத்துக்கள் சில சமயம் திரும்பத் திரும்பச் சொல்லப்படத்தான் வேண்டியிருக்கின்றன. அதனுல் தான் பகவான் கிருஷ்ணன் இந்த சுலோகத்திலும் முன்னுல் சொல்லப்பட்ட கருத்துக்களையே திரும்பவும் சொல்கிருர். அவற்றிலிருந்து கருத்துக்களைத் தொகுத்து எடுத்து இந்த சுலோகத்தில் தொடுத்திருக்கிருர்.

சத்துவம் சுகத்துடன் ஒட்டுகிறது (ஒட்ட வைக்கிறது): புதிதாக ஏதாவது படைக்கவல்ல எண்ணங்களினூடே செலவழி யும் கணங்களின் புல்லரிக்கும் கிளர்ச்சியின்பத்தை அனுபவித்த ஒருவன்—ஒரு விஞ்ஞானி, ஒரு ஓவியர், ஒரு கலைஞன், ஒரு கவி, சுயமாகச் சிந்திக்க வல்ல ஒரு சிந்தனையாளன்—இவர்களுள் யாரா யிருந்தாலும் சரி—இந்த செயல் வெறி கொண்ட ராஜஸ உலகத் துக்கு இறங்கிவர விரும்ப மாட்டான். தாமஸத்தின் துயரம்தரும் இருளுலகத்துக்குள் வீழ்வதற்கோ—கேட்க வேண்டாம். கண்டிப் பாய் விரும்ப மாட்டான். சுருக்கமாக சத்துவ குணம் நம்மை சீரிய வாழ்க்கையின் முழுமையின் காரணமாக எழும் உள் மகிழ்ச்சியுடன் ஒட்ட வைத்துவிடுகிறது.

மேலும் ராஜஸம் செயலுடன் (பற்ற வைக்கிறது) இதற்கு மாருக ராஜஸத்தின் ஆதிக்கத்தில் ஒருவன் வந்து விட்டால் அவன் இயற்கையாகவே நூற்றுக்கணக்கான விடாக் கொண்ட ஆசைகள் காரணமாகவும் ஆழ்ந்த பற்றுக்கள் காரண மாகவும் வெறி பிடித்தவன் போல் ஆகிவிடுகிருன். அவைகளைத் திருப்தி செய்து கொள்ள அவன் முடிவற்ற செயல்கள் கொண்ட களத்தில் வியர்வை கொட்டி உழைத்துச் சிரமப்படுகிருன்.

தாமஸம் ஞானத்தை மறைத்து கவனமின்மையுடன் கட்டி விடுகிறது. தாமஸம் ஆள வரும்போது அது தன் சுபாவம் காரணமாகவே நம்மிடமுள்ள சரியாகச் சிந்தித்து முடிவு எடுக்கும் அறிவை மூடி மறைத்து விடுகிறது. அதன் பயனுக நாம் தவருகக் கணித்து தவருன முடிவுகளுக்கு வந்து விடுகிறோம். நாம் நமக்குள் இருந்து அழைக்கும் உயர்ந்த அறிவைக் கவனிக்காமல் விட்டு விடுகிறோம்.

குணங்கள் மேலே சொல்லிய விளைவுகளை எப்பொழுது ஏற்படுத்துகின்றன?

ரஜஸ் தமஸ்சாபிபூய ஸத்வம் பவதி பாரத
ரஜஸ்ஸத்வம் தமஸ் சைவ தமஸ் ஸத்வம் ரஜஸ் ததா:
14:10

ரஜ:—ராஜஸத்தை; தம:—தாமஸத்தை; ச—மேலும்; அபிபூய—அடக்கிவிட்டு; ஸத்வம்—சாத்வீகம்; பவதி—எழுகிறது; பாரத—ஏ பாரதனே; ரஜ:—ராஜஸம் ஸத்வம்—சாத்வீகத்தை; தமஸ்ச—தாமஸத்தையும்; ஏவ—கூட; தம:—தாமஸம்; ஸத்வம்—சாத்துவீகத்தையும்; ரஜ:—ராஜஸத்தையும்; ததா—கூட

ஏ பாரதனே! சாத்வீகம் ராஜஸத்தையும் தாமஸத்தையும் அமுக்கிவிட்டு எழுகிறது. இப்போது ராஜஸம் சாத்வீகத்தையும் தாமஸத்தையும் அமுக்கிவிட்டு (எழுகிறது); (இப்போது) தாமஸம் சாத்வீகத்தையும் ராஜஸத்தையும் அமுக்கிவிட்டு (எழுகிறது).

நம்முடைய சர்ச்சையின் இந்தக் கட்டத்தில் சற்று புத்திசாலியான மாணவன் உள்ளத்தில், ''இந்த குணங்கள் வேறு வேறு நேரங்களில் தங்கள் வேலையை முறை வைத்துச் செய்கின்றனவா? எல்லாம் சேர்ந்து ஒரே நேரத்தில் தங்கள் செயலை ஆற்றும்போது ஒற்றுமையாக இருக்கின்றனவா? அல்லது ஒன்றுக்கொன்று எதிரும் புதிருமாய் செயல்படுகின்றனவா? என்றெல்லாம் சந்தேகமும் ஆச்சரியமும் ஏற்படக்கூடும். பகவான் தன் தெய்வீகக் கீதத்தில் (கீதையில்) இந்தச் சந்தேகங்களை எல்லாம் எதிர்பார்த்தே அந்தக் கேள்விகளுக்கு இந்த சுலோகத்தில் விடையளிக்கிறார். 'இக் குணங்கள் எவ்விதம் வேறு வேறான நேரங்களில், ஒன்று மற்ற இரண்டையும் அமுக்கிவிட்டு இயங்குகின்றன' என்று விளக்கம் தருகிறார்.

சாத்வீகம் எழுகிறது: குறிப்பிட்ட நேரத்தில் மனிதன் நடத்தையைக் கூர்ந்து கவனித்தால் அவன் ஆளுமை எவ்விதம் மேலோங்கி நிற்கும் ஒரு குணத்தின் ஆதிக்கத்தின் கீழிருந்து செயல்படுகிறது என்று இந்த சுலோகம் தெளிவாக எடுத்துக் கூறுகிறது. அந்த நேரத்தில் மற்ற இரண்டு குணங்களும் இல்லாமலே போய்விடுவதில்லை. ஆனால் அவற்றிற்கு இரண்டாவது இடம் தான். ஒருவன் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் சத்துவ குணவானாக இருக்கிறான் என்றால் அப்போது ராஜஸ குணமும் தாமஸ குணமும் தங்கள் வலிமையை முழுமையாகக் காட்டும் நிலையில் இல்லை என்பதுதான் பொருள்.

இவ்விதமாக ஒருவனிடம் சாத்வீகம் ராஜஸத்துக்கும்

தாமஸத்துக்கும் மேல் ஓங்கி நிற்கிறது என்னும்போது அது அவன் உள்ளத்தின் தனக்கு உரித்தான சுகத்தையும் ஞானத்தையும் விளங்க வைக்கிறது.

ராஜஸம் ஓங்கும் போது அது தனக்கே உரித்தான உணர்ச்சித் தீவிரங்கள், ஆசை வெறிகள், பற்று வேகங்கள், செயல்கள் இவற்றை எழுப்பி விடுகிறது.

சாத்வீகத்தையும் ராஜஸத்தையும் கீழே தள்ளிவிட்டு தாமஸம் ஓங்கும்போது அது மனிதனின் அறிவை இருட்டடித்து அவனைச் சீரிய கடமைகள்பால் கவனமற்றவனுக ஆக்கிவிடுகிறது.

ஒரு குணம் மற்ற இரு குணங்களை எப்போது அமுக்கி விடுகிறது என்று நாம் எவ்வாறு அறியலாம்?

ஸர்வத்வாரேஷு தேஹேஸ்மின் ப்ரகாச உபஜாயதே
ஜ்ஞானம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்வ மித்யுத

*14:11*

ஸர்வத் வாரேஷு—எல்லா துவாரங்களிலும் (இந்திரிய வாயில்களிலும்); தேஹே—சரீரத்தில்; அஸ்மின்—இந்த; ப்ரகாசம்—ஞானஒளி; உபஜாயதே—உண்டாகிறது (ஒளிர்கிறது); ஜ்ஞானம்—ஞானம்; யதா—எப்போது; ததா—அப்போது; வித்யாத்—அறியப்படட்டும்; விவ்ருத்தம்—மேலோங்கி இருக்கிறது; ஸத்வம்—சாத்வீகம்; இதி—என்று; உத:—உண்மையிலேயே.

எப்போது ஒவ்வொரு இந்திரிய வாயிலிலும் ஞானஒளி வீசி ஒளிர்கிறதோ அப்போது உண்மையிலேயே சாத்வீகம் ஓங்கி மலர்கிறது என்று அறியப்படட்டும்.

பின்வரும் மூன்று சுலோகங்களில் தனித்தனியாக இக்குணங்கள் காட்டும் அடையாளங்கள் தரப்படுகின்றன. அவற்றைக் கொண்டு குறிப்பிட்ட நேரத்தில் மனிதன் எந்தக் குணத்தின் வசப்பட்டு இருக்கிறுன் என்று புரிந்து கொள்ள முடியும்.

உடலின் ஒவ்வொரு துவாரத்திலும் (வாயிலிலும்) அறிவின் ஒளி ஒளிரும்போது: நமக்கு உடல், மனம், புத்தி என்று அம்சங்கள் உண்டு. அவற்றின் ஸ்தூலமான உடலில் துவாரங்கள் இருக்கின்றன. அவற்றின் மூலம் நாம் காணும் உலகின் அறிவு உள்ளே செல்கின்றது. அவை அறிவை உள்ளே விடும் ஜன்னல்கள். இவ்வளவு அமைந்த அறிவு வாயில்கள் மூலம் உணரும் அறிவொளி (உணர்வுத் தத்துவம்) வெளியேறி உலகின் பல பொருள்களின் மீது விழுகிறது. விழுந்து அவற்றை ஒளிரச் செய்கின்றது. கண்களின் மூலம் பரவும் ஞானம் பார்வைச் சக்தி

யாக மாறி உலகின் உருவத் தோற்றங்களையும் நிறங்களையும் ஒளிரச் செய்கின்றன. (அவற்றை நாம் பார்த்து அறிந்து கொள் கிறோம்) அதேபோல் அந்த நித்தியமான பேருணர்வுத் தத்துவம் காதுகளின் மூலம் வெளிவரும்போது, அது உருவங்களை உணர்த்த முடியாது. ஆனால் அது ஒலி உலகத்தை எனக்கு அறி விக்கும். அப்படியே அது நாக்கின் வழி வெளிவந்து சுவையின் மீது வீசி எனக்குச் சுவையை உணர்ப்பிக்கும்.

இவ்விதம் நம் ஆத்ம விளக்கிலிருந்து ஏழு ஜ்வாலைகள் (தீப்பிழம்புகள்) வெளியேறுகின்றன. ஒவ்வொரு ஜன்னலின் வழியே வெளியேறும் ஒளிக்கற்றை புற உலகில் அதற்குரிய அம்சத்தை விளங்க வைக்கிறது. நாம் ஏதாவது ஒன்றைக் கவனிக்கும்போது, அதை நன்கு விளக்க முயற்சி செய்யும்போது, நாம் உண்மையிலேயே சாத்வீக நிலையிலிருப்பதை நாமே அனுபவித்திருக்கிறோம். அந்த சமயத்தில் ராஜஸமோ தாமஸமோ இடைப்பட்டால் நம் கவனம் குலைந்திருக்கும்.

நம்முடைய மனம் ராஜஸ குணத்தால் அலைக்கப் பட்டாலோ, புத்தியை தாமஸம் மூடியிருந்தாலோ சாதாரண மாகக் கவனிப்பதுகூட இயலாததொன்றாகி விடும். எவ்வளவுக் கெவ்வளவு திறமையாகவும் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக வும் நாம் ராஜஸத்தையும் தாமஸத்தையும் தாண்டிச் சென்று சாத்வீகத்தால் நிறைத்துக் கொள்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு கண்டு, ஆய்ந்து, பகுத்து, அறிந்து கொண்டு புற உலகைப் புரிந்து சரியான முடிவுக்கு வரக் கூடிய திறமை அதிகரிக்கும்.

புற உலகைப் புரிந்து கொள்ளும் இயந்திர அமைப்பு (கருவி) புத்தியே என்று ஏற்கனவே நமக்குத் தெரியும். நம்முடைய உள்ளே உள்ள பேருணர்வுத் தத்துவம் (ஆத்ம ஒளி) புத்தியில் பிரதிபலிக்கும் போது அறிவொளியாகிறது. அதைக் கொண்டு நாம் புற உலகில் பொருள்களை விளங்கச் செய்கிறோம். பொருள் கள் மட்டுமல்ல, கருத்துக்கள், உணர்ச்சிகள் இவற்றுக்கும் ஒளி தருகிறோம். சூரிய ஒளி நேராக அறையில் வந்து பொருள்களுக்கு ஒளி தருவதில்லை. ஆனால் சுவர்களில் விழுந்து பிரதிபலிக்கும் அதன் ஒளிக் கிரணங்களே நம்முடைய சொகுசான அறைக்கு வெளிச்சம் தருகின்றன. அதே போல் பேருணர்வுத் தத்துவத்தின் (ஆத்மாவின்) ஒளி புத்தியில் பிரதிபலித்து அதிலிருந்து கிளம்பும் ஒளித் திரளே பொருள்களின் உலகத்துக்கு ஒளி தருகிறது. குணங்களின் ஆதிக்கத்திலேயே மனதும் புத்தியும் உயிர் கொள் கின்றன (இயங்குகின்றன).

பிரதிபலிக்கும் சாதனம் (நீர், கண்ணாடி) போன்றவை அலையாமலும், சுத்தமாக அப்பு அழுக்கின்றியும் இருந்தால்தான்

அதில் இருந்து எழும் பிரதிபலிப்பு அழுக்கான சாதனத்தின் பிரதிபலிப்பைவிடத் தெளிவாகவும் அலைவு இல்லாமலும் இருக்கும். இது எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்த ஒன்று. ராஜஸகுணம் பதற்றத்தை ஏற்படுத்தி புத்தியை நடுக்கம் உள்ள தாக ஆக்கிவிடுகின்றது. தாமஸம் அழுக்குப் போர்வை போத்தி புத்தியை அசுத்தமாக்கிவிடுகிறது. எனவே உள்ளத்துக்குள் ராஜஸமும் தாமஸமும் அதிகமாக அதிகமாக அந்த உள்ளம் கொண்டவனுடைய அறிவும் குறைவாகவே இருக்கும். எனவே உலகைக் கண்டு அதை ஒழுங்காகப் புரிந்து கொள்ளும் நேரத்தில் மனிதன் அகம் உண்மையில் சாத்துவீக நிலையில்தான் இருக்கும் என்று சொல்வது அறிவியலுக்கு மிகவும் பொருந்தியதேயாகும்.

நம்முள் ராஜஸம் மேலோங்கி நிற்கும் போது அதை எடுத்துக் காட்டும் முக்கியமான அறிகுறிகள் பின்னால் குறிக்கப்படுகின்றன:

லோப: ப்ரவ்ருத்திராரம்ப: கர்மணாமசம: ஸ்ப்ருஹா
ரஜஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப

*14:12*

லோப:(ஹா)—பேராசை; ப்ரவ்ருத்தி—செயல்களில் இயக்கம்; ஆரம்ப—தொடக்கம்; கர்மணாம்—வேலைகளின்; அசம:—பதற்றம் (பரபரப்பு); ஸ்ப்ருஹா—தீவிர ஆசை; ரஜஸி—ராஜஸத்தில்; ஏதானி—இவை; ஜாயந்தே—உண்டாகின்றன. விவ்ருத்தே—மேலோங்கி (வீங்கி) இருக்கும் போது; பரதர்ஷப—பாரத ஏறே.

பேராசை, செயலீடுபாடு; முயற்சிகளின் தொடக்கம் பரபரப்பு—இவை ராஜஸம் வீங்கி இருக்கும் போது உண்டாகின்றன. ஏ பாரத ஏறே!

பேராசை, செயல், புது முயற்சித் தொடக்கம், அமைதியின்மை (பரபரப்பு): ராஜஸ நிலையில் மனதில் எழும் எண்ணங்களைத் தொகுத்துச் சொல்கிறார் கண்ணன் இங்கே. மிகவும் முக்கியமானவையாக இவற்றைக் குறிக்கிறார். பிறரிடம் உள்ளதைத் தன்னதாக்கிக் கொள்ளும் தீவிர ஆசையை லோபம் (பேராசை) என்கிறோம். அதன் குணம் திருப்தி செய்ய திருப்தி செய்ய இன்னம் வாயை அகற்றிக் கொண்டே போவதாகும். இங்கே ''முயற்சி'' மிகப் பெரிய அகங்காரம் காரணமாக, அகத்தை மையமாகக் கொண்ட ஆசைகளை அதாவது சுயநலன்களைப் பூர்த்தி செய்து கொள்ளச் செய்யப்படும் செயல்களைக் குறிக்க உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. பரபரப்பு மேலும் ஒருவகை ராஜஸ அனுபவம். பரபரப்பின் காரணமாக

மனிதனுக்குத் தன் உள் அமைதியை அனுபவிக்க முடியாமல் போய்விடுகிறது. இங்கே அமைதியின்மையை சங்கராச்சாரியார் ஸ்வாமி விளக்கும்போது சந்தோஷம், பற்று *...முதலியவற்றை (படபடப்புடன்) வெளியிடுதல் என்று சொல்கிறுர்கள்.

இந்த மூன்றும் பெருமளவில் பரஸ்பரம் இணைந்தவை. ஒவ்வொன்றும் முந்தியதற்குப் பிறகு வரிசையாக எழுவனவே. பேராசை மனிதனைச் செயல்களில் தூண்டும். அவன் சுறுசுறுப்பாக இருப்பான். அப்படிப் பேராசை காரணமாகச் செயலில் ஈடுபடும் ஒருவன் தன் சுயநல முயற்சிகளைத் தொடங்குவான். சுயநல முயற்சிகளைத் தொடங்கினுல் அவனுக்குப் பயன் கிட்ட வேண்டும் என்ற பதற்றம் இருக்கும். அப்போது ஏற்படும் மனதின் ஆத்திரங்கள் (பரபரப்பு) காரணமாக அவன் தன்னைச் சுற்றி ஆரோக்கியமற்ற சூழ்நிலைகளை உண்டாக்கி அவற்றின் நடுவே சுழன்று கசப்பான கொடுமைகள், மட்டமான பாபச் செயல்கள், ரத்தக் கரை படியும் குற்றங்கள்—ஆகியவற்றைச் செய்வான். பிறகு என்ன? அவன் மனச் சாந்தி தூள்பட்டுப் போகும். அவன் ஆளை ஆட்டி வைக்கும் பதற்ற நிலைக்கு உள்ளாவான். அதன் இயற்கை விளைவாக, இந்த நிலையில் உள்ள மனதைக் கொண்டு இருப்பவன் புற உலகில் வியர்வை சொட்ட சிரமப்பட்டு உழைத்து உழல்வான். ராஜஸத்தால் நச்சுத்தன்மை அடைந்த இதயம் இதுவரை செய்து முடிக்காத செயல்கள், இதுவரை சேர்க்காத பொருள்கள், இதுவரை பெருத லாபங்கள் இவற்றைப் பற்றி எழுந்தனவான எல்லையற்ற தீவிர ஆசைகளின் அலைகளுக்குள் சிக்கிவிடும்.

சுருங்கக் கூறின் ராஜஸ வியாதிக் கிருமிகளின் ஒட்டுதல் காரணமாக நம்முடைய மானஸ ஆளுமை முடிவற்ற பல திட்டங்கள், ஆளை அசத்திவிடும் செயல்கள், வேதனை தரும் விருப்பங்கள், கஷ்டம்தரும் ஆசைகள், பித்துப் பிடிக்க வைக்கும் பேராசைகள், நசுக்கும் அமைதியின்மை—இவற்றின் காரணமாக தானே ஒரு பதற்ற நிலையை ஏற்படுத்திக் கொண்டு சித்திரவதைக்குள்ளாகிவிடும். அப்படிப்பட்ட மனிதன் சமூகத்தில் வேலை செய்யும்போது அவன் துயரங்கள் அவனுடன் நிற்க மாட்டா. ஒட்டுவாரொட்டி வியாதிபோல் அவை அவனைச் சுற்றி ஆயிரக்கணக்கானவர்களுக்கும் பரவிவிடும்.

அதே மாதிரி தாமஸம் மேலோங்கும்போது அதன் அடையாளங்கள் என்ன? கவனியுங்கள்:

அப்ரகாசோ (அ) ப்ர வ்ருத்திஸ்ச ப்ரமாதோ மோஹ ஏவச
தமஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தன

14:13

---

* அனுபச்ம(ஹா): ஹர் ஷ—ராக—பிராவிதி

அப்ரகாச: (ஹா)—ஒளியின்மை (இருள்); அப்ரவ்ருத்தி:—(ஒன்றும் உருப்படியாக செய்யாதிருத்தல்) சோம்பேறித் தனம்; ச—மேலும்; ப்ரமாத:—கவனமற்ற தன்மை; மோஹ (ஹா)—மோகம்; ஏவச—கூடவும்; தமஸி—தாமஸத்தில்; ஏதானி—இவை; ஜாயந்தே—கிளம்புகின்றன; விவ்ருத்தே—மேற்கரித்து இருக்கும் போது; குருநந்தன—குரு வமிசத் தோன்றலே.

இருள், சோம்பேறித்தனம், கவனமற்ற தன்மை, மோகம்—இவை தாமஸம் ஓங்கியிருக்கும்போது எழுகின்றன. ஏ குருநந்தனு!

மந்தம், சோம்பேறித்தனம் கவனமற்ற தன்மை, மோகம் (மயக்கம்): ஒருவன் தனக்குள் இந்த அடையாளங் களைக் கண்டானுனல் அவன் தான் தாமஸத்தின் பிடியில் சிக்கி யிருக்கிறோம் என்று அறிந்து கொள்ளலாம் என்று கீதை சொல் கிறது. அப்ரகாசம் (மந்தம் அல்லது இருள்) புத்தியின் தெளிவற்ற நிலே. அப்போது அவன் அறிவாற்றலின் திறமைகளை ஒரு உறக்க முன்னிலேக் கவ்வி மூடியது போல் இருக்கும். சரி எது, தப்பு எது என்று தீர்மானித்து அவனுல் ஒரு முடிவுக்கு வர முடியாது. தூக்கம் நம்முடைய விழிப்புத் தன்மையை மூடவரும் போது நாம் ஒவ்வொருவரும் இந்த நிலேக்கு உள்ளாகிறோம். இது எல்லோருமே அன்றாடம் அனுபவிக்கும் நிலேதான்.

அப்ரவ்ருத்தி: (கை கால்களை அசக்கி வேலே செய்ய விரும் பாத) சோம்பேறித்தனம்: பொறுப்புக்களைத் தட்டிக் கழிக்கும் போக்கு, எந்த முயற்சியையும் ஏற்றுக் கொள்ள இயலாத குணம், உலகில் எதையும் செய்து சாதிக்க வேண்டும் என்ற உணர்வோ, ஊக்கமோ இன்மை—இதுதான் இங்கே கூறப்பட்டிருக்கிற 'அப்ரவ்ருத்தி.' தாமஸம் ஓங்கி நிற்கும்போது எல்லா உயரவாக் களும் உருவி உறிஞ்சி எடுக்கப்பட்டு விடுகின்றன. ஆற்றல் முடங்கிக் கிடக்கிறது. திறமை போய் விடுகிறது. அப்படிப்பட்ட வனுக்கு உண்பதும் உறங்குவதுமே வாழ்க்கையின் ஒரே வேலேயாகிவிடுகின்றன.

இப்படி வாழத் தொடங்கி விட்டால் அவன் ஆளுமை என்ன ஆகும்? ஒரு மனிதன் என்ற அளவில் அவன் தன்னுள் எழும் உயர்ந்த அழைப்புக்களை கவனிக்க மறுத்து விடுகிறுன். உண்மையில் அவன் ராவணனைப் போன்று படைப்பாக்கமுள்ள குற்றவாளியாகக் கூட ஆக முடியாது. கெட்டவன் என்று பெயர் வாங்க வேண்டும் என்றுல்கூட அதற்கும் ஓரளவு உற்சாகம் வேண்டும். செயலாற்ற எல்லேயற்ற ஊக்கம் வேண்டும்.

அந்த ஆள் தனக்குள் இருந்து எழும் நல்ல, கெட்ட அழைப்பை ஏற்றுச் செயலாற்ற முடியாதது மட்டுமில்லே. அவன்

கொஞ்சம் கொஞ்சமாக மோகத்துக்குள் (பிரமையில்) விழுந்து விடுகிறான். அவன் தன்னைச் சுற்றியுள்ள உலகைத் தப்பாகக் கணக்கிடுகிறான். தன் ஆற்றல்களைத் தவறாகக் கணித்துக் கொள்கிறான். மேலும் உலகுடன் அவன் ஏற்படுத்திக் கொள்ளும் உறவில் எப்போதும் தவறுகளையே செய்கிறான். இவ்விதம் ஒருவன் புற உலகையும், தன்னையும், தான் கொள்ள வேண்டிய சரியான உறவையும் சரியாகப் புரிந்து கொள்ளாதிருக்கும்போது அவன் வாழ்க்கையே ஒரு குறையாகி விடுகிறது. அவன் இருப்பே ஒரு துயரம் நிறைந்த தவறாகி விடுகிறது.

இவ்விதமாக சாத்வீகம், ராஜஸம் தாமஸம் என்ற மூன்று குணங்களின் ஆதிக்கத்துக்குள் மனம் புத்தி இரண்டும் எப்படி செயல்படுகின்றன என்று விவரித்த பிறகு கீதாசாரியனான கண்ண பிரான், 'இந்த குணங்கள் இந்தப் பிறவியைப் பாதிப்பதுடன் நிற்பதில்லை. ஒருவன் இந்த வாழ்நாளில் வளர்த்துப் பலப்பட வைத்து, பின்பற்றிப் பருக்க வைத்த மனதின் போக்குகள் இறந்த பிறகும்கூட அவன் வாழ்வையும் அதன் நிலையையும் நிர்ணயம் செய்து விடுகின்றன' என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறார்.

ஹிந்து மதமாகிற வாழ்க்கை விஞ்ஞானத்தில் 'சாவு' என்ன என்று முழுமையாக விசாரித்திருக்கிற அளவுக்கு வேறு எந்த சமயத்திலும் முற்றிலுமாக எண்ணப்பட்டிருக்கவில்லை என்றே தோன்றுகிறது. எல்லா சமய வேதங்களிலும் தனித்தனி விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அவைகளுள் ஒன்றுகூட சாவுக்குப் பிறகும் 'உயிர்' இருக்கிறது என்பதை நம்புவதாகத் தெரியவில்லை. மற்ற கோட்பாடுகளில் சாவுக்குப் பிறகு வாழ்க்கையைப் பற்றி 'அப்படித்தான், நம்புங்கள்' என்ற வகையில் சில கோட்பாடுகள் அழுத்திச் சொல்லிவிடுகின்றன. ஆனால் அங்கே எல்லாம் ஒரு முழுமையான தத்துவ சித்தாந்தம் என்று சொல்லும்படி தர்க்கப்பூர்வமான விளக்க வகைகள் கிடையாது.

மறுபிறவியைப் பற்றி முன்பே கீதையின் இந்த விளக்க உரையில் நாம் சர்ச்சை செய்திருக்கிறோம். அங்கே, சாவு என்பது இந்த உடல் அமைப்பு முழுமையாக சூட்சும சரீரத்திலிருந்து பிரிந்து விழுந்து விடுவதுதான் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே சாவு என்பது என் உடலுக்கேற்படும் விதிப் பாதிப்பே தவிர எனக்குரிய நித்தியமான ஆளுமையின் அதாவது ஜீவாத்மாவின் துயர முடிவில்லை. சூட்சும உடல் உருவத்தில் இருக்கும் நான் இந்த உடலினால் ஆக வேண்டிய காரியம் முடிந்தவுடன் இதைவிட்டு நகர்ந்து விடுகிறேன். சூக்கும சரீரம் என்பது மனம்—புத்தி கரணம்தான். அதாவது வாசனைகளின் கற்றை அல்லது மூட்டை இந்த உடலில் வாழும் போதும் என்னுடைய எண்ணங்

கள்தான் என்னுடைய ஸ்தூல சரீரம், சூட்சும சரீரம் இரண்டையுமே ஆட்டி வைக்கின்றன. அதற்கேற்றவாறுதான் நான் நடந்து கொள்கிறேன். எனவேதான் இந்த உண்மையைத் தொடர்ந்து நம்முடைய ஹிந்து தத்துவவாதிகள், ஒரு மனிதன் இந்த வாழ்க்கையில் இந்த உடலில் வளர்த்துச் செம்மைப்படுத்திய எண்ணங்களின் பலனுகவே, அதற்கேற்றவாறே, என்ன விளைவுகள் ஏற்படுமோ அவற்றை அடுத்துவரும் வாழ்க்கையிலும் தொடர்கிருன் என்று சொல்லியிருக்கிருர்கள்.

என்னை நான் வேலை பார்க்கும் இடத்திலிருந்து மாற்றி விடுகிருர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். நான் வங்கிக்குச் சென்று என் பணத்தைக் கேட்கிறேன். அப்போது வங்கிக்காரர்கள் நான் முன்னே போட்டிருந்த அவ்வளவு பணத்தையும் கொடுக்க மாட்டார்கள். ஆனுல் இன்று என் கணக்கில் எவ்வளவு பற்று மிச்சமிருக்கிறதோ அதைத்தான் கொடுப்பார்கள். அதே போலத் தான் நாம் இந்த உடலை விட்டுவிட்டு (உயிரை விட்டுவிட்டு அல்ல!) போகும்போது நம்முடைய நல்ல கெட்ட எண்ணங்கள், செய்த செயல்கள் இவற்றின் கணக்குப்படி உள்ள மீதி மிச்சங்கள், இவைதான் நாம் போகும்போது நம் மனதில் கடைசியாக எழும் எண்ணங்களின் தன்மையை நிர்ணயிக்கும்.

குறிப்பிட்ட நேரத்தில் எழும் நம்முடைய எண்ணங்களின் தரம், நம்முடைய அந்தக்கரண மனிதன் எந்தக்குணத்துக்கு ஆட்பட்டு இருக்கிருனே அந்தக் குணத்துக்கேற்றவாறுதான் இருக்கும் என்று நாம் ஏற்கனவே தெரிந்து கொண்டிருக்கிருேம். எனவே நம்முடைய வாழ்க்கையில் நம் செய்கைகள், நம் எண்ணங்கள் இவற்றின் மூலம் எந்தக் குணத்தைப் பயன்படுத்தி வளர்த்திருக்கிருேமோ அந்த மேலோங்கிய குணம்தான் நம் இறுதி நேரத்தின் எண்ணங்களை உறுதிப்படுத்தும். இந்தக் கருத்து தர்க்கத்துக்கு மிகவும் ஒத்தது என்று புரிந்து கொள்வதில் கஷ்டம் இராது. அந்த எண்ணங்களுடன் தான் நாம் இந்த உடலை விட்டு 'அப்பால்' பறந்து செல்வோம். அந்தச் சாத்தியங்கள் என்ன என்று கீதையின் இந்தப் பகுதி விளக்குகிறது.

நமக்கு சாவுக்குப் பின்னுல் எந்த வாழ்க்கை கிடைத்தாலும் அது நம்முடைய ஆசைகள், பற்றுக்கள் இவைகளின் அளவு, தரம் இரண்டையும் பொறுத்தே இருக்கும். அந்த ஆசைகளின் அளவையும் தன்மையையும் குணங்கள் நிர்ணயிக்கின்றன. இது இங்கே சொல்லித் தரப்படுகிறது:

யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து ப்ரளயம் யாதி தேஹப்ருத்

ததோத்தமவிதாம் லோகானமலான் ப்ரதிபத்யதே
14:14

யதா—எப்போது; ஸத்வே—சாத்வீக குணம்; ப்ரவ்ருத்தே—ஓங்கியிருக்கும் காலே; து—என்றாலோ; ப்ரலயம்—சாவு; யாதி—அடைகிறான்; தேஹப்ருத்—உடல் எடுத்தவன் (ஜீவன்); ததா—அப்போது; உத்தமவிதாம்—உத்தம விஷயங்களை அறிந்தவர்களுடைய; லோகான்—உலகங்களுக்கு; அமலான்—நிர்மலமான; ப்ரதிபத்யதே—செல்கிறான்.

உடல் எடுத்தவன் (ஜீவன்) எப்போது சாத்துவிக குணம் மேலோங்கியிருக்கும்போது சாவை அடைவானோ அப்போது அவன் உத்தம விஷயங்களை அறிந்தவர்களுடைய உலகங்களுக்குச் செல்கிறான்.

உடல் எடுத்தவன் (ஜீவன்) சாத்வீக குணம் மேலோங்கியிருக்கும் போது சாவை அடைந்தான் என்றால்: கீதையில் வளர்ந்து வருகிற கருத்துப் போக்கில் இங்கே கண்ணன் இறந்தவன் மனமாகிற கருவி எந்தத் திசையில் செல்லும் என்று சுட்டுகிறார். வாழும் போதே மனித மனம் எப்படி நடந்து கொள்கிறது என்று நெருங்கி நன்றாக கவனித்தால் இந்தக் கருத்து பெருமளவு பகுத்தறிவுக்கு ஏற்றவாறு உறுதி செய்து கொள்ளப் படமுடியும். ஒரு டாக்டர் திடீர் என்று ஒரு காலையில் எழுந்து கட்டட (சிற்ப) வேலை சம்பந்தமான மிக நுண்ணிய ஒரு பிரசினையைச் சிந்தித்து தீர்வு கூறத் தொடங்கி விடமுடியாது. அதே போல ஒரு இஞ்சினீயர் (பொறி இயல் வல்லுனர்) திடீர் என்று ஒரு இரவில் எழுந்து உட்கார்ந்து உள்ளறிவு பெற்று புற்று நோய்க்கு மருந்து எழுதிக் கொடுத்துவிட முடியாது. டாக்டர் தன் மனத்தை வியாதிகளைப் பற்றியும் மருந்துகளைப் பற்றியும் சிந்திக்கப் பழக்கியிருக்கிறார். இஞ்சினீயரோ கட்டி இடித்தல் அல்லது இடித்துக் கட்டுதல் துறையில் தன் மனத்தைச் செலுத்திப் பயிற்று வைத்திருக்கிறார். எந்த நேரம் பார்த்தாலும் டாக்டரின் மனது அவர் பெற்ற கல்விக்கு உகந்த வகையில் மருந்துகளைப் பற்றித்தான் எண்ணிக்கொண்டிருக்கும் அவ்வகை எண்ணங்களையும் நினைவுகளையுமே கொண்டிருக்க அவர் மனம் பழக்கப்பட்டு இருக்கிறது.

இவ்விதம் நாம், இந்த உடலுடன் சேர்ந்து வாழும் ஜீவனுடைய சிந்தனை வாழ்வில் ஒரு தொடர்ச்சி இருப்பதைக் காண்கிறோம். இந்த ஆண்டு நம் மனதில் எழும் கருத்துக்களுக்குச் சென்ற ஆண்டு ஏற்பட்டிருந்த நினைவுகள் அல்லது கருத்துக்களுடன் தொடர்பு உண்டு. இந்த மாதத்திய நம் எண்ணங்களைச் சென்ற மாதத்தின் எண்ணங்கள் நிர்ணயித்து அவற்றிற்கு உருக் கொடுக்கின்றன. சென்ற வார

எண்ணங்களுக்கும் இந்த வார நினைவுகளுக்கும் தொடர்பு உண்டு. இன்றைய எண்ணங்களே நாளையும் தொடர்கின்றன. அதே மாதிரி ஒவ்வொரு கணத்தின் சிந்தனைகளும் சென்ற கணத்தின் சிந்தனைகளின் தொடர்ச்சியே. இவ்விதம் எண்ண–வாழ்வில் கடந்த, நிகழ், வரும் காலத்துக்கிடையே இடையறாத தொடர்பும் தொடர்ச்சியும் இருந்து கொண்டே இருக்கிறது. அந்த ஒழுக்கு தடைப்படுவதே இல்லை. அப்படியானால் இந்த ஓட்டம் திடீர் என்று சாவின் போது எப்படி இல்லாமல் போய்விடும்? சாவு என்பது ஜீவனுக்கு ஒரு மாறுபட்ட அனுபவம், அவ்வளவுதான். எனவே சாவுக்குப் பிறகும் பழைய எண்ணங்கள் தொடரவே செய்யும். மேலும் எல்லா அனுபவங்களும் நம் சென்ற காலத்திய எண்ணங்களுக்கு உருவம் தந்தன. வருங்கால எண்ணங்களையும் நம் நிகழ்கால அனுபவங்கள் உருவாக்கும். எனவே இந்த உடலில் வாழும் போது நாம் கொண்டிருக்கும் எண்ணங்கள்தாம், நாம் இந்த உடலைவிட்டுப் போன உடனே எந்த வகையான எண்ணங்கள் ஏற்படும் என்று நிர்ணயிக்கும்.

உடல் எடுத்த ஜீவன் இந்த உடல் அமைப்பை விடும்போது, அத்துடன் இப்பொழுது இருக்கும் சூழ்நிலைகளையும் உறவுகளையும் துறந்துவிடுகிறான். அப்படியும் அவன் தன் 'எண்ண–வாழ்வைத் தொடரவே செய்வான். ஆனால் அது எந்தத் திசையை நோக்கிச் செல்லும்? என்பது இங்கே இந்த உடலுடன் சேர்ந்த வாழ்க்கையில் அதற்குக் கிடைத்த பயிற்சியைப் பொறுத்தே இருக்கும்.

சாத்துவீகம் மேலோங்கியிருந்தால் 'அவன் உத்தம ஞானிகளின் உலகங்களை அடைகிறான்: நம்முடைய ஆகமங்கள், 'ராஜஸமோ, தாமஸமோ அதிகம் பாதிக்க முடியாத உலகம் 'பிரம லோகம்' என்று சொல்கின்றன. அங்கே மிகச் சீரிய மகிழ்ச்சி நிலவும்; சிருஷ்டித் திறன் உச்ச நிலையில் இருக்கும்.

ராஜஸத்தில் இருக்கும் போது ஒருவன் சாவைச் சந்தித்தால்?

*ரஜஸி ப்ரலயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே*
*ததா ப்ரலீனஸ்தமஸி மூடயோனிஷு ஜாயதே*

*14:15*

*ரஜஸி–ராஜஸத்தில்; ப்ரலயம் கத்வா–சாவை அடைந்து; கர்மஸங்கிஷு–கர்மத்தில் பற்று உடையவர்களிடையே; ஜாயதே–பிறக்கிறான்; ததா–அவ்விதமே; ப்ரலீன–இறந்தவனாக; தமஸி–தாமஸத்தில்; மூடயோனிஷு–மூட யோனிகளில்; ஜாயதே–பிறக்கிறான்.*

*ராஜஸ(குண)த்தில் (இருக்கும் போது) இறந்தால் அவன்*

கர்மத்தில் ஒட்டுதல் உடையவர்களிடையே பிறக்கிறான். தாமஸத்தில் சாவை அடைந்தால் அவன் மூடர்கள் வயிற்றில் பிறக்கிறான்.

ராஜஸத்தில் செத்து அவன் கர்மங்களில் பற்று உடையவர்களிடையே பிறக்கிறான்: மனம் உடலை விட்டுப் பிரியும் போது ராஜஸ குணத்தின் ஆதிக்கத்திலிருந்தால் அது தன் போக்குகளுக்கேற்றவாறு விருப்பங்கள் கொண்டிருக்கும். அவற்றை நிறைவேற்ற அது அதிகப்படியாக கருமப்பற்று உடையவர்களின் நடுவே ஒரு உடல் எடுத்துப் பிறக்கும். அதாவது மனம் தேடி தன்னிடம் உள்ள போக்குகளை முழுமையாக முடிவுறச் செய்யத் தக்க சூழ்நிலையை வெற்றி கரமாகக் கண்டுபிடித்துக் கொள்ளும்.

இதற்கு மாறாக தாமஸத்தில் மனது முழுகியிருக்கும் போது உடலை விட்டால் அது அறிவற்ற உயிர்களின் தேகத்தில் அதாவது மிருக அல்லது தாவர இனங்களில் உடல் எடுக்கும்.

மனிதராகப் பிறந்தவர்கள் மீண்டும் பரிணாம வளர்ச்சியில் கீழ்ப் பிறவிகளில் பிறக்க மாட்டார்கள் என்ற சித்தாந்தம் மனதுக்கு ஆறுதல் அளிக்கக் கூடியதுதான். ஆனால் அது நாம் சுற்றிலும் பார்த்துப் புரிந்து கொள்ளும் உண்மை நிலைக்கு எதிராக இருக்கிறது. நாம் பார்க்கிறோம்: பலருக்கு மிகவும் சாதகமான உயர்ந்த சூழ்நிலைகளும் சந்தர்ப்பங்களும் கிடைக்கின்றன. ஆனால் மனித இனத்தைச் சேர்ந்தவர்களா யிருந்தும் கூட அவர்கள் அவற்றைத் தக்க முறையில் பயன்படுத்தி தங்கள் பண்பாட்டு நிலையை உயர்த்திக் கொள்ளத் தயாராகவே இருப்பதில்லை. ஒரு நல்ல பணக்காரர் மகன்—சராசரி அறிவு கிடைத்திருக்கிறது. வாழ்க்கையிலும் நல்ல தொடக்கம் கிடைக்கிறது. ஆனால் அவன் அவற்றை சரியான வளர்ச்சிக்கேற்ற முறையில் பயன்கொள்ளத் தயாராயிருப்பதில்லை. மேலும் அநேக மாக ஆரோக்யமற்ற, கவனம் குறைந்த வாழ்க்கையைக் கழித்து தன்னையே அழித்துக்கொண்டு விடுகிறான் என்று பார்க்கிறோம்.

பகுத்தறிவுள்ள குலத்தில் பிறந்திருக்கிற நம்மில் எவ்வளவுபேர் சரி, தப்பு புரிந்து கொண்டு நடக்கும் திறமையும் இஷ்டமும் வைத்திருக்கிறோம்? சமூகத்தில் ஆடு மாடுகளைப் பார்த்து அவை சீரிய வாழ்வு வாழ்கின்றன என்று சொல்கின்ற சிலரும் இருக்கத்தான் செய்கிறார்கள். அதாவது அநேக இருகால் மனிதர்கள் நாற்கால் பிராணிகளை உயர்வாக மதிக்கிறார்கள்! இப்படி ஒரு எண்ணத்தை வளர்த்துக் கொள்கிறவன் பிராணி களின் வாழ்கை பரிணாம வளர்ச்சியில் கீழ்மட்டத்தில் இருக்கின்றன என்று நினைக்கவில்லை! அவனுக்கு அந்தப் பிறவி தாகத்துடன் பெற விரும்பும் ஒரு பிறவியாகத் தென்படுகிறது.

போதைப் பொருளை ஒதுக்குபவனுக்கு குடிக் கடை துயருக்கும் அழிவுக்கும் உரிய இடம். அவன் அதை வெறுக்கிறான் ஆனால் குடிகாரனுக்கோ அந்த இடம் இன்ப சுவர்க்கம்; அமைதியின் அரண்மனை!

தாமஸ குணமுள்ளவனுக்கு மிருகமாகப் பிறப்பது தன்னுடைய ருசிகளைத் துய்த்துத் தீர்ப்பதற்கும் தன் இயற்கையை முழுமையாக வெளியிடுவதற்கும் ஆனந்தமான வாய்ப்பு! எனவே தத்துவ ரீதியாகப் பார்த்தால் தாமஸ மனம் மிருக உடலுக்குள் முழு எண்ணப் பூர்த்தியைப் பெறும் என்ற கருத்தை ஒரு தயக்கமுமில்லாமல் ஒப்புக் கொண்டுதானாக வேண்டும். எனவே அவர்கள் தாங்கள் தேடி எடுத்துக் கொண்ட வாழ்க்கையைத் துய்க்க அங்கே பிறக்கிறார்கள்.

சென்ற சுலோகங்களில் சொல்லப்பட்ட கருத்துக்களின் சுருக்கம் இதோ தொடர்கிறது:

கர்மணஸ் ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்விகம் நிர்மலம் பலம்
ரஜஸஸ்து பலம் து:க மஜ்ஞானம் தமஸ: பலம்

**14:16**

கர்மண—செயல்களுடைய; ஸுக்ருதஸ்ய—நல்ல; ஆஹு(:)ஹு: சொல்கிறார்கள்; ஸாத்விகம்—சாத்வீகம்; நிர்மலம்—களங்கமற்றது (தூய்மையானது); பலம்—பயன்; ரஜஸ: (ஹா) து ராஜஸத்தினுடையதோ என்றால்; பலம்—விளைவு; துஹ்க்கம்—துயரம்; அஜ்ஞானம்—அறியாமை; தமஸ—தாமஸத்தின்; பலம்—விளைவு.

நல்ல செயல்களின் விளைவு ஸாத்வீகம் என்றும் நிர்மலமானது என்றும் அவர்கள் சொல்கிறார்கள்; ராஜஸத்தின் பயன் துக்கம்; தாமஸத்தின் பயன் அறியாமை.

கிருஷ்ணன் மற்றவருடன் பேசுவதில் வல்லவர். அவர் இந்த சுலோகத்தில் போன சுலோகங்களில் சொல்லியிருப்பதை எல்லாம் சுருக்கிச் சொல்கிறார். மனிதனின் மாயை வாழ்வில் மூன்று குணங்களும் தனித் தனி ஆதிக்கம் வகிக்கும்போது என்னென்ன விளைவுகள் அவனுக்கு ஏற்படும் என்று இங்கே சுருக்கமாகக் குறிப்பிடுகிறார்.

நல்ல செயல்களின் விளைவு சாத்துவீகமானது நிர்மலமானது என்று அவர்கள் சொல்கிறார்கள்: நாம் நன்கு ஆய்ந்து, ஆழ்ந்து சிந்தித்தோமானால் எண்ணமே எல்லாச் செயல்களுக்கும் பிதா. (காரணகர்த்தா) என்று தெரிந்து கொள்வோம். எண்ணங்கள் விதைக்கப்படும் விதைகள்; செயல்கள் அறுவடை விளைவுகள். களைகளின் விதைகள் களைகளை (உதவாத புல்

பூண்டுகள் செடிகள் ஆகியவற்றை)யே விளைவிக்கும். கெட்ட எண்ணங்கள் கெட்ட, பைத்தியக்கார செய்கைகளையே செய்விக்கும் புற உலகில் வேண்டாத தீய செய்கைகளைச் செய்கிறவர்கள் தங்கள் மனதில் உள்ள தவறான, கெட்ட போக்குகளுக்கு இரை போட்டுக் கொழுக்க வைக்கிறார்கள். அவர்கள் இவ்விதம் செய்து தங்கள் மனக் கலவரங்களை அதிகரிக்கச் செய்து கொள்கிறார்கள்.

ஒருவன் பக்தியும் சேவையும் செய்துகொண்டு அன்பு, பிரியம், கருணை இரக்கம் —இவற்றுடன் கூடியவனாக மகிழ்ச்சிகரமாக ஒரு நல்ல வாழ்க்கையை நடத்துகிறான் என்றால் உள்ளபடி அவன் வாழ்க்கை அவன் மனது 'சாத்வீக' நிலையில் இருக்கிறது என்பதைக் காட்டும். இது நம்முடைய தத்துவ போதனைகளின் தர்க்கத்தில் உண்மை என்றால் உலக அனுபவங்களின் தர்க்கத்திலும் முழுமையாக உண்மையே. அப்படி மிகவும் சீரிய உதார வாழ்க்கை வாழ்பவன் உள்ளத் தூய்மையிலும் உயர்ந்து கொண்டே போவான் என்பது மிகவும் உறுதியாய் நடக்கக் கூடியதே.

அது சரி. ஒருவன் தற்போது கெட்டவனாக இருக்கிறான். அவன் எப்படி நல்லவனாக ஆவான்? என்று கேட்கப்படலாம் செயல்கள் எண்ணங்களின் பிரதிபலிப்பே! அவன் மனமோ தீங்கு விளைவிக்கும் நல்லவை அல்லாத போக்குகளைக் கொண்டதாக இருக்கிறது. அப்படிப்பட்டவன் தன் உள் உலகின் நிலையில் ஒரு மாறுதலை எப்படிக் கொண்டுவர முடியும்? உலகில் உள்ள எல்லா மதங்களும் இந்தக் கேள்விக்கு கொடுக்கும் ஒரு விதியை (கட்டளையை) வலியுறுத்துதல் தான். அதாவது: ''உண்மைப் பொருளை நாடுபவர்களான கடவுள் பக்தர்கள், பண்பாட்டுக்கு மதிப்புத் தருபவர்கள் நீதி நெறிகள் நிறைந்த சிறந்த ஒரு தூய்மையான தார்மீகத் தன்மை கொண்ட சீரிய வாழ்க்கையை வாழவேண்டும்'' என்பது தான்.

ஆம்! மனத்தைக் கட்டுத் திட்டத்துக்கு உட்படுத்தி எண்ணங்களின் தரத்தை மாற்றுவது என்பது எளிதான வேலை இல்லைதான். ஆனால் நம் செயல்களின் வகையை மாற்றுவதும், புறத்ததே நாம் நடந்து கொள்ளும் முறைகளை மாற்றிக் கொள்வதும் சற்றே எளிதான காரியங்களேயாம். எனவே நன்மையைப் பழகுவதும் நம் நடத்தையைக் கட்டுப்படுத்துவதும் நல்ல பிறநலத் தொண்டர்களாக நடக்க முயல்வதும் தன்னை மீட்டுக் கொள்ளும் பணியின் முதற்படிகளாம். ஒருவன் நல்ல, பிறர் நலத் தொண்டுக்கான காரியங்களை ஏற்றுக் கொண்டானானால், அவை முதலில் வெறும் போலிச் செயல்களாயிருந்தாலும் கூட—அதுவே அவனுக்கு பழக்கமாகிவிடும். இந்த

வெளிப் பழக்கம் கொஞ்சம் கொஞ்சமாக அவன் மனத்தையும் கட்டுப்படுத்திவிடும்.

இதனுல்தான் எல்லா மதங்களும், ''பெரியவர்களுக்கு மரியாதை காட்டு. அதிகாரத்துக்கு அடிபணி; பொய் சொல்லக் கூடாது, சாஸ்திரங்கள் படிக்கப்பட வேண்டும். கல்வியில் கவனம் செலுத்தப்படவேண்டும், சுத்தம் பழகப்படல் வேண்டும்—என்றெல்லாம் குழந்தைப் பருவத்திலிருந்தே வலியுறுத்துகின்றன. இப்படிப் பெரியவர்கள் வலியுறுத்தினுல் குழந்தைகள், 'சரி; வேதனைதான். ஆனுலும் இந்தக் கொடும் கோன்மைக்கு உட்படாமல் இருக்கவும் முடியாது!' என்று எண்ணி அவற்றின்படி நடக்கத் தொடங்கலாம். ஆனுலும் நாளாக நாளாக இவை பழக்கமாக ஆகி குழந்தைகள் அறியாமலேயே அவர்கள் மனது ஒரு கட்டுப்பாட்டுக்குள் வந்து விடும்.

கண்ணபிரான் 'மனது சாத்வீகத்திலும் தூய்மையிலும் உயரும்' என்று சொல்லும்போது அவர் கூற்றில்,' மன அமைதியால் கிடைக்கும் புல்லரிக்க வைக்கும் ஆனந்தம், அலைவுகள், பதற்றங்கள், கலவரங்கள் ஆகியவை மிகமிகக் குறைந்திருக்கும் நிலை செயல் வேகம் கொண்ட அந்த மனதை ஒரு குறிப்பிட்ட லக்ஷியத்தின் பக்கமாக ஒருமைப்படுத்திச் செலுத்தும் ஆற்றல்—இவை எல்லாம் குறிப்பிடப்படுகின்றன. ஆத்திரம் கொண்ட ஆவல்களும் பதற்றங்களும் மனதின் அழுக்காறுகளாம். கெட்ட செயல்கள் அவற்றை அதிகரிக்கச் செய்கின்றன. நல்ல செயல்கள், தங்கள் இயற்கை காரண மாகவே, மனதை அமைதிப்படுத்துகின்றன; அதில் எழும் ஆத்திர—ஆவல்களை நீக்கி விடுகின்றன.

ராஜஸத்தின் பயன் வேதனை: நாம் மேலே முன் வாக்கியத்துக்குச் சொன்ன விளக்க உரையை இந்தச் சொற்றொடர் உறுதி செய்கிறது. ராஜஸம் ஆத்திரம் கொண்ட ஆவல்களின் உருவகம். அது திருப்தி செய்ய இயலாத ஆசை களின் கடலையும் பற்றுகிற சூறுவளியையும் உற்பத்தி செய்து விடுகிறது. அவற்றை அடைய நாம் முயன்று பல்வகைக் கருமங்களில் முழுகிவிடுகிறோம்.* இவ்விதம் ஒருவன் மனம் ராஜஸ குணத்தில் இருக்கும்போது அவன் ஆசைகளின் சூறுவளிக்குள் சிக்கி அந்த நிலைமையைத் தணிக்க அவன் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. சம்பாதிக்க, உடைமையாக்க, சேர்க்க, செலவழிக்க, இன்பம் துய்க்க, மிச்சப்பகுதி அதைக் காப்பாற்ற—இந்தவிதமாக அவன் உழைத்துக் கொண்டேயிருக்க வேண்டியிருக்கிறது. இது பொதுவாக அவனை மூச்சு முட்ட

* 7, 12—வது சுலோகங்களைப் பார்க்கவும்.

வைக்கும் சமாதிக் கூட்டத்துக்குள் கொண்டு போய்ச் சேர்த்து விடுகிறது. முடிவு வேதனையின் துர்க்கந்தக் குழிதான் உள்ளபடி ராஜஸத்தின் விளைவு வேதனைதான்.

தாமஸத்தின் பயன் அறிவின்மை: வேலை செய்வதென்றால் அலுப்பும், கவனமின்மையும், பிரமையும் நம் சூட்சும உடம்பில் தாமஸம் குடி கொண்டிருப்பதன் வெளி அடையாளங்கள்—என்ற கருத்து முன்னமேயே சொல்லப் பட்டிருக்கிறது. அதனால்தான் 'தாமஸம் நம்முடைய பகுத்தறிவின் மேல் மூட்டத்தை ஏற்படுத்தி விடுகிறது; உலகில் உள்ள பொருள்கள், உயிர்களைச் சரியாகப் புரிந்துகொண்டு ஒழுங்கான முடிவுகளை மேற்கொள்ள நாம் செய்யும் முயற்சிகளை முறியடித்து விடுகிறது.' என்று இங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

நமக்குள் ராஜஸம் இருந்தால் மனதின் பதற்றங்களை அதிகரிக்கச் செய்துவிடுகிறது. சாத்விக நிலை, 'மனதில் மிகவும் குறைவாக சிந்தனை அலைகள் எழும் நிலை. புத்தி தன் பகுத்தறியும் ஆற்றலில் தெளிவும் ஒளியும் பெற்றுள்ள நிலை. சுருக்கமாக சாத்வீகம் என்பது மனிதன் உள் இயற்கையில் புதுப் படைப்புக்கான வேகம் ஊறிக்கொண்டிருக்கும் அலைவற்ற அமைதி நிலையாகும்.

குணங்களிலிருந்து என்ன என்ன எழுகின்றன?

ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஞானம் ரஜஸோ லோப ஏவ ச
ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோ அஞ்ஞான மேவ ச
14:17

ஸத்வாத்—சாத்வீகத்திலிருந்து; ஸஞ்ஜாயதே—எழுகிறது; ஞானம்—அறிவு; ரஜஸ:—ராஜஸத்திலிருந்து (செயல் களிலிருந்து) லோப ஏவ ச—பேராசையுமே; ப்ரமாதமோஹௌ—கவனமின்மையும் பிரமையும்; தமஸ:—தாமஸத்திலிருந்து; பவத:—எழுகின்றன; அஞ்ஞானம் ஏவ ச—அறியாமையுமே.

சாத்வீகத்திலிருந்து—ஞானம் எழுகிறது; ராஜஸத்திலிருந்து பேராசை எழுகிறது; தாமஸத்திலிருந்து கவனமின்மையும் பிரமையும் (மோஹம்) மேலும் அஞ்ஞானமும் எழுகின்றன.

மனம்—புத்தி அரங்க மேடையில் குணங்கள் தோன்றும் போது அவை செய்யும் வேலைகள் இங்கே விளக்கப்படுகின்றன. சாத்வீகத்திலிருந்து ஞானம் எழுகிறது: அந்தச் சுத்தப் பேருணர்வு சம்பந்தப்பட்ட மட்டில் அதற்குத் தானாக எதையும் ஒளிரச் செய்யவோ புரிந்து கொள்ளவோ தேவையில்லை. அது பிளவுபடாதது; பிளக்கப்பட முடியாதது; ஒரே நித்திய உண்மை வஸ்து. எனவே அதில் அறிந்துகொள்ள வேண்டியது ஒன்று

மில்லை. இந்த உணர்வுத் தத்துவம் சூட்சும சரீரத்தில் பிரதி பலிக்கும்போது அது 'அறிவு' ஆகிறது. அதைக் கொண்டு தான் நாம் புறத்தே உள்ள உலகப் பொருள்களைத் தெரிந்து கொள்கிறோம். அறிபவன் (ஞாதா) என்பவன் மனம் புத்தியால் (பிரமைக்குட்பட்டு) உருவம் பெற்ற ஆத்மாவே. எனவே மனம் சுத்தமாகவும் அசங்காமல் அமைதியாகவும் இருந்தால், அல்லது மிகவும் குறைவான அலைவு கொண்டதாக இருந்தால் அதிலிருந்து வெளியேறும் ஒளி நிலையாகவும் சரியானபடி பொருள்களைத் தெளிவிப்பதாகவும் இருக்கும். எனவே சாத்துவீகம் மேலோங்கி யிருக்கிறது என்றால் அது கடைசியில் 'நம்மை' நாமே மீண்டும் கண்டு கொண்டதாக ஆகும். அதாவது சுத்த ஞானதத்துவத்தின் சாக்ஷாத்காரம் அல்லது அனுபவம் ஏற்படும்.

ராஜஸத்திலிருந்து பேராசை: மனம் எழும் ஆசைக் குழம்பில் பொங்கிக் கொண்டிருந்தால் அது எப்போதும் இடையறாத அலைவு நிலையில், பதற்றங்களுடன் கூடியே (விக்ஷேப நிலையிலேயே) இருக்கும். அதை சாந்தப்படுத்த வேண்டும் என்ற இயற்கையான துடிப்பினால் அதற்கு உலகில் வெளியே பாய்ந்து தன் விருப்பங்களை நிறைவேற்ற வேண்டி யிருக்கும். அப்போது அது தன் ஆத்திரம் கொண்ட பேராசைகளை வெளியிடும்.

தாமஸத்திலிருந்து கவனமின்மையும் மோகமும் எழு கின்றன தாமஸம் புத்தியின் மேல் ஆவரணத்தை (மூட்டத்தை)ப் போட்டு விடுகிறது. சரி எது தப்பு எது என்று பகுத்துப் புரிந்துகொள்ளும் அறிவும், தவறை ஒதுக்கிவிட்டு சரி யானதை ஏற்றுக்கொள்ளும் ஆற்றலும் மனிதனுக்கே உரிய உரிமை. மிருகங்களுக்கு அவை கிடையா. எப்போது ஒருவன் அறிவு சுத்தமாகவும் போலியான மனச் சார்பு விலங்குகள் கெட்ட போக்குகள்—இவற்றிலிருந்து விடுபட்டும் இருக்குமோ அப்போதுதான் அவன் மனிதன் என்ற பதவிக்கு உரியவனாகிறான். தாமஸம் உலகைச் சரியாகப் புரிந்து கொள்ளும் சக்தியை மூடி அமுக்கி விடுகிறது. மேலும் சரியான தீர்வு எடுக்கும் ஆற்றலையும் அழித்து விடுகிறது.

ஒன்றை நாம் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்றால் அடுத்தபடி அதைப் பற்றித் தவறான கருத்தை ஏற்படுத்திக்கொள் வதுதான். உலகைத் தவறாகப் புரிந்துகொள்வதன் காரணமாக நமக்கு குறையுள்ள நிலையிலிருந்துகொண்டு நடக்காத விஷயங் களை எதிர் பார்க்கும் நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடுகிறது. இவ்வளவு பெரிய உப்புக் கடலில் ஒரு கோப்பைகூட நல்ல தண்ணீர் கிடைக்க இயலாது. பதற்றமும் வேதனையும் நிறைந்த உலகில் தொடர்ந்து மகிழ்ச்சி கிடைக்காது. ஏன்? ஒரு கண உண்மையான ஆனந்தம்கூட கிட்டாது.

உண்மை இப்படி இருக்கும் போதும்கூட தாமஸ குணத்தின் மோகம் தரும் ஆதிக்கத்திலிருப்பவன் உலகைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் கிடைக்கக் கூடாத அனுபவங்களை எதிர் பார்க்கிறான். அவை கிடைக்கவில்லை என்றவுடன் 'உலகு குறை களுடன் இருக்கிறது' என்று அதைச் சபிக்கிறான்*.

மேலும்

ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா: மத்யே திஷ்டந்தி ராஜஸா:
ஜகன்யகுணவ்ருத்திஸ்தா அதோ கச்சந்தி தாமஸா 14:18

ஊர்த்வம்—மேலே; கச்சந்தி—செல்கிறார்கள்; ஸத்வஸ்த்தா: சாத்வீக நிலையில் இருக்கிறவர்கள்; மத்யே—நடுவில், திஷ்ட்டந்தி—நிற்கிறார்கள்; ராஜஸா—ராஜஸர்கள்; ஜகன்ய குணவ்ருத்திஸ்த்தா—மிக மட்டமான குணத்தில் இயங்குகிறவர் கள்; அத—கீழ் நோக்கி; கச் சந்தி—செல்கிறார்கள்; தாமஸா—தாமஸர்கள்.

சாத்வீக குணத்தில் இருப்பவர்கள் மேல் நோக்கிப் போகிறார்கள். ராஜஸர்கள் நடுவில் இருக்கிறார்கள். தாமஸர்கள் மட்டான கீழ்க் குணத்தில் இருந்துகொண்டு கீழ்நோக்கிப் போகிறார்கள்.

பரிணாம வளர்ச்சிப் படிகளில் (ஏணியில்) நாம் இந்த மூன்று பருவங்களை (அல்லது நிலைகளை)ச் சந்திக்கிறோம். அடிமட்டநிலை தாவர மிருக இனங்களின் நிலையாகும். நடுநிலையை அறிவு, தேக நலம், ஒளி இவற்றுடன் கூடிய மனிதர்களிடம் பார்க்கலாம். மேல்நிலை, ஊனுடம்பற்ற தேவலோக வாசிகள் இருக்கும் நிலை யாகும். இங்கே பரிணாமம் என்றால் அனுபவங்களின் அதிக உணர்வு, விக்ஷேபக் குறைவு. தெள்ளிய கூர்மையான புத்தி இவைகள் பெற்றிருத்தல் என்று பொருள். தெளிவாகச் சொல்லப் போனால் பரிணாம வளர்ச்சியின் அளவு கோல் உயிர்கள் அனுபவிக்கிற ஆனந்தம். அமைதி, சுத்த இன்பம்—இவையே யாகும்.

இந்த அளவுகோல் கொண்டு பார்க்கும்போது கல்லின் வாழ்வின் பரிணாம அளவு சூனியமாகும். ஏன் என்றால் அது தன்னையும் அறியாது உலகையும் உணராது. அடுத்து வருவது தாவர வாழ்வு. அங்கே உணர்வு கொஞ்சம் மந்தமாக இயங்கத் தொடங்குகிறது. மிருகங்களில் பார்த்தோமானால் இது இன்னம்

---

*ஒரு சமயம் பசியால் வாடி ஏசுகிறிஸ்து அத்திப் பழம் கொள்ள அத்தி மரத்துக்குப் போனார். அது அத்தி பழுக்காத பருவம். ஆத்திரமடைந்த ஏசு கிறிஸ்து அந்த மரத்தை வாடிப் போகும்படி சபித்தார். இது பரமபிதாவின் மகன் மேல்கூட தாமஸத்தின் ஆதிக்கம் இருந்ததைக் காட்டுகிறதா என்ன?

கொஞ்சம் வளர ஆரம்பிக்கிறது. சற்றுத் தெளிவும் கூர்மையும் பெறுகிறது. பிறகு மனிதன் வருகிறுன். உணர்வு முழுமை பெறு கிறது. புத்தியும் கூர்த்து விடுகிறது. என்ருலும் மனிதனுக்கும் வரம்பு உண்டு. வரையறைக்குட்பட்ட காலம் இடத்துக்குள் தான் அவன் செயலாற்ற முடிகிறது. இந்த வரம்புகள் விழுந்து விடும்போது வரம்பு நீங்கிய உயிர் மிக உயர்ந்த நிலேயை அடைந்துவிடுகிறது. அப்படி வளர்ச்சி அடைந்தவர்கள் சொர்க்க லோக (தேவலோக) வாசிகளான வானேர்.

இரட்டை மாடியுள்ள வீடு என்ருல் படிக்கட்டும் இருக்கும். அங்கே எல்லாம் சில படிகள் ஏறியவுடன் நிற்பதற்காக ஒரு (நிலே) இடம் மேடை போன்று அமைந்து இருக்கும். அங்கே கொஞ்சம் தங்கிவிட்டு மீண்டும் படிகள் ஏறி மேலே போய்ச் சேர லாம். கீழ்ப்படிகளில் இருக்கும் உயிர்கள் பரிணும வளர்ச்சியில் அடியில் இருப்பவை. அந்த மேடையில் இருப்பவர்கள் நடு நிலேக்கு வந்தவர்கள். அதற்கு மேலேயுள்ள படிக்கட்டிலுள்ள வர்கள் வளர்ச்சியின் உச்ச நிலேயை அடைந்தவர்கள். தாரவ, மிருக உயிர்கள் கீழ்ப்படிக்கட்டில் இருக்கின்றன. மனிதன் அந்த மேடையில் இருக்கிருன். வானேர்கள் மேலே உள்ள படிக் கட்டில் இருக்கிருர்கள்.

இங்கே ஒன்று நினேவில் வைக்கப்பட வேண்டும். யாரும் கட்டடத்தின் மேற்பகுதியை அடைந்து விடவில்லே. அடைந்தால் தான் அதன் அறைகள் மண்டபங்கள் இவற்றின் சொகுசை அனு பவிக்க முடியும். நடுவில் உள்ள மேடைப் பகுதியில் இருப் பவர்கள் விரும்பினுல் மேலேயும் போகலாம். அல்லது கீழேயும் இறங்கலாம். அவர்களுக்கு அந்த சுதந்திரம் இருக்கிறது. இந்தச் சித்திரத்தை நாம் நம் மனதில் கொண்டுவந்து விட்டோமாஞல் நமக்கு ஹிந்து சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கும் பரிணுமத் தத்து வத்தை பெருமளவு புரிந்துவிடும். ஹிந்து முறையில் ஒரு குறிப்பிட்ட உயிரின் உடலுக்குள் இருக்கும் உணர்வுத் தத்து வத்தின் ஒளியின் அளவே பரிணுமத்தின் அளவுகோலாக இருக் கிறது.

சாத்வீகத்தில் இருப்பவர்கள் மேலே போகிருர்கள்: நல்ல பகுத்தறிவும் திறமை, நேர்மையான சிந்தனே, சரியான தீர்வு காணும் திறமை சுய கட்டுப்பாடு இவை கொண்ட தூய வாழ்வு வாழ்கிறவர்கள் மேலும் மேலும் சாத்வீக குணத்தை வளர்த்துக் கொள்கிருர்கள். மனம் சிருஷ்டித் திறம் கொண்ட இயக்கமுள்ள அமைதி நிலேயில் வைத்திருக்கப்படும்போது அது மேலும் மேலும் வளர்ச்சி அடைகிறது.

ராஜஸர்கள் நடுவில் இருக்கிருர்கள்: ராஜஸ குணம் கொண்டவர்கள் தங்கள் ஆசைகள், பதற்றங்கள். பெரிய குறிக்

கோள்கள் நோக்கிப் பயணங்கள், சாதனைகள்—இவற்றின் காரணமாக மீண்டும் மீண்டும் மனிதர்களாகவே இருக்கிறார்கள். இது அவர்கள் தேவையான தெளிவையும் தூய்மையையும் அடையும் வரை நடந்துகொண்டே இருக்கும்.

தாமஸர்கள் கீழே போகிறார்கள்: தப்பு மதிப்பீடுகளில் மனம் மகிழ்கிறவர்கள் உள்ளிருந்து எழும் உயர்த்தும் குரல்களுக்குச் செவி சாய்க்காதவர்கள். தங்கள் புலனின்ப ஆசை நிறைவேற்றங்களில் மயங்கி இருப்பவர்கள். தூக்கம், சோம்பேறித்தனம் இவற்றுடன் வாழ்பவர்கள். அவர்கள் கீழ்த்தரமான இயற்கை நிலைகளைத்தான் அடைவார்கள்.

ஏற்கனவே குணங்களின் பயன் வரும் பிறவிகளிலும் தொடரும் என்று ஒரு சுலோகத்தில் சொன்னபோது கொடுத்த கருத்துக்களைத்தான் இங்கு கண்ணபிரான் சுருக்கிக் கூறுகிறார். என்றால் விடுதலை எப்போது? சாத்வீகமே ஞானம், இன்பம் இவற்றைக் கொண்டு நம்மைக் கட்டி விடுகிறது என்று ஆகி விட்டது! பிறகு நான் எப்போதுதான் விடுதலை பெறுவது? இங்கு மூன்று குணங்களும் 'கயிறுகள்' என்று பொருள் கொண்ட தங்கள் குணத்துக்கேற்றவாறு நம்மை நம்முடைய சதை, அது தரும் இன்பங்கள், உலகம் அதன் குறைபாடுகள், மனது அதன் விக்ஷேபங்கள், புத்தி அதன் துடிப்புக்கள் இவற்றுடன் இறுகக் கட்டி விடுகின்றன. பிறகு மனிதன் தன் தெய்வத்தன்மையைத் துய்க்க, இந்தப் பன்மை காட்டும் உலகின் உறவிலிருந்தும் அப்பொருள்களின்பால் வைத்திருக்கும் பற்றிலிருந்தும் விடுபட எப்போது சுதந்திரம் பெறுவான்?

இதுவரை, நல்ல விஸ்தாரமாக, குணங்களின் இயற்கை, நம்மை ஆட்கொண்டிருக்கும் மேலோங்கிய குணத்தை இனம் காண வெளியே தெரியும் அடையாளங்கள், அவை நம் வாழ்வில் ஏற்படுத்தும் பாதிப்புக்கள், அவற்றால் நம் வருங்கால அமைப்பில் ஏற்படக்கூடிய நிலை—இவை எல்லாம் எடுத்துக் கூறப்பட்டன. இன்று இருக்கும் குணம் நேற்றைய நம் வாழ்வின் தொடர்ச்சி. இன்று இருப்பதே நாளைய வாழ்க்கைக்கும் உருக் கொடுக்கும். இவை எல்லாம் நம் பந்தக் கட்டுக்களுக்குக் காரணங்கள். அந்தக் கட்டு நாம் கொள்ளும் பிரமையே! ஆத்மா உடலுடன் இணைந்து கொள்வதால் ஏற்படும் பிரமையே!

முடிவுறும் என்று இருக்கும் உலகம், அது கொடுக்கும் தூக்கிவாரிப் போடல்களிலிருந்து கிடைக்கும் வலி, தோல்விகளின் துயர்க் கதை எல்லாம் ஜீவனின் சம்ஸாரம்.அதாவது பரமாத்மா தவிர வேறு இல்லாத புருஷனாகிற ஜீவாத்மா பிரகிருதியின் வழியே ஒளிர்ந்து அதனுடன் பிணைத்துக்

கொள்கிற அனர்த்தத்தின் வலேயே... எனவே இந்தக் குணங்களே மீறிஞல்தான் அமைதி கிடைக்கும்.

ஒரு நோயாளி கடுமையான ஜுரம், பிளக்கும் தலேவலி, சற்றே முதுகு வலி—இம் மூன்றிலும் அவஸ்தைப்படுகிருன். இம்மூன்றும் அவன் வியாதியின் அடையாளங்கள். ஜுரம் தணிந்து விடுகிறது. இருந்தும் அவன் அவஸ்தை தொடர்கிறது. இந்த அடையாளங்கள் இல்லாது போனவுடன் நோயாளி சரியாகி விட்டான் என்று சொல்ல முடியாது. அவன் தன் பழைய ஆரோக்கிய நிலேயை அடையும்போதுதான் அவன் வியாதியிலிருந்து முழுமையாக விடுபட்டு விட்டான் என்று சொல்ல முடியும். அதைப் போலத்தான் இந்த மூன்று குணங்களும் ஏதோ ஒரு விகிதத்தில் நம்முள் இருந்து கொண்டேயிருக்கும். உண்மையான விடுதலே இவை மூன்றும் முற்றிலுமாக இல்லாது போனல் தான் கிடைக்கும். அதற்குப் பொருள் இந்த மூன்றையும் தாண்டிஞல் மட்டும் போதாது, நாம் நம்முடைய ஆத்மானுபவத்தை அடைந்துவிட வேண்டும்.

நம்முடைய மனம், புத்தி இவற்றின் தளத்தில் நம்முடைய சுபாவத்தில் ஏற்படும் விலங்குகளுக்குத் தப்புகிற செயலுக்குத் தான் மோக்ஷம் அல்லது விடுதலே என்று பேர். தாங்களே ஏற்படுத்திக் கொண்ட துணேயின் காரணமாகவே உயர்ந்த பெரும் வாய்ப்புக்கான போக்குகள் எல்லாம் நம்முள் தூங்கிக் கிடக்கின்றன. குழப்பங்கள், பிரமைகள், துயர்கள், பதற்றங்கள், அழுகைகள், தீவிர இன்பப் பற்று, மட்டமான புலனின்ப வேட்கைகள்—இவற்றின் பிடியிலிருந்து அவற்றை விடுவிக்கும் பாடம்தான் ஆன்ம சாஸ்திரம் சொல்லித்தரும் வித்தை.

விடுதலே வழியை விவரித்துவிட்டு, புற உலகைச் சரியாகப் புரிந்துகொண்டு சரியான முடிவை நோக்கி நடந்தால் கிடைக்கக்கூடிய மோக்ஷத்தையும் விளக்கு வதற்காக பகவான் பின்வருமாறு சொல்கிருர்:

நான்யம் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ரஷ்டானு பச்யதி:
குணேப்யஸ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோதிகச்சதி

*14:19*

ந—இல்லே; அன்யம்—மற்றவை; குணேப்ய:—குணங்களேக் காட்டிலும்; கர்த்தாரம்—செய்கிறவன்; யதா—எப்பொழுது; த்ரஷ்டா—பார்க்கிறவன்; அனுபச்யதி—பார்க்கிருனே; குணேப்ய:—குணங்களேக் காட்டிலும்; ச—மேலும்; பரம்—வேருனது (அப்பாலது) வேத்தி—அறிகிருன்; மத்பாவம்—'நாஞக' இருப்பதை; ஸ:—அவன்; அதிகச்சதி—அடைகிருன்.

எப்போது பார்ப்பவன் குணங்களுக்கு வேருன கர்த்

தாவைக் (செய்கிறவனை) காணுவதில்லையோ, குணங்களுக்கு அப்பாலதாக (மேலே) இருக்கும் பொருளை அறிகிறானோ, அப் போது அவன் என் இருப்பை அடைகிறான்.

இது வரையில் தப்ப முடியாதபடி குணங்களின் வலையில் சிக்கி உழன்ற புருஷன் அல்லது ஆத்மாவின் ஒரு பரிதாபகரமான சித்திரத்தை வரைந்திருந்தது வளர்ந்து வந்த கருத்து. கீதையின் மாணவன் இந்தத் தப்ப முடியாத நிலையை அறிந்து மனம் முறிந்துபோய் விடக் கூடும். ஓடும் ரயில் வண்டியில் நின் றிருப்பவன் நகராமல் நின்றிருந்தாலும் அவன் மேலே போய்க் கொண்டுதான் இருக்கிறான். அவன் ஓடும் ரயிலில் இருக்கிற வரையில் அவனும் ஓடுகிறவன்தான். ஏன் என்றால் இரயில் வண்டியின் ஓட்டம் அவன் ஓட்டம்தான். ஆனால் அவன் இறங்கி இரயில்வே பிளாட்பாரத்தில் நின்றுவிட்டால் அந்தக் கணத்தி லிருந்து இரயில் மட்டும் ஓடும். அவன் ஓடமாட்டான். அதே போல் ஆத்மா மனம்—புத்தி இரயிலில் அமர்ந்து அதனுடனும் ஒட்டிக்கொண்டு விட்டால் பிறகு அதன் கூத்துக்கு இவனும் சேர்ந்து கூத்தாட வேண்டியதுதான். மனதின் கூத்து குணங் களின் சாட்டைக்கேற்றவாறு மனதுடன் நாம் ஒன்றியிருப்பதை பூராவாக நிறுத்திவிட்டு தனித்து நின்றுவிட்டோமானால் அதுவே நம்முடைய சிந்தனை—உலகின் வருத்தும் அடிமைத்தனத்திலிருந்து முழுமையாக சுதந்திரம் பெறுவதாகும்.

பார்க்கிற ஒருவன் பார்க்கும்போது—நம்முடைய உள் சிந்தனைச் செயல்பாட்டுச் சிக்கலிலிருந்து நம்மைப் பிரித்து எடுத்துக் கொள்வதே தியானக் கலையாகும். அவ்விதம் செய்யத் தெரிந்துகொண்டவன் பார்ப்பான்— அதாவது சுய உணர்வாக ஒரு அனுபவம் பெறுவான். அந்த அனுபவம்தான் சுத்த ஞான நிலை. எந்த எண்ணங்களின் ஆட்டத்தின் நிழலும் அதன் மேல் விழுந்து அதைக் களங்கப்படுத்தாது. அந்தப் பொருளில்தான் இங்கே 'பார்க்கிறான்' என்ற சொல் ஆளப்பட்டிருக்கிறது. இதற்கு நாற்காலியைப் பார்க்கிறேன்' 'மேஜையைப் பார்க்கி றேன். என்று' சொல்வது போல் அர்த்தம் கொள்ளக் கூடாது. கடவுளைப் பார்க்க முடியாது. நம் பார்வைக்கு, நாம் தொட்டுப் பார்ப்பதற்கு இலக்காகக்கூடிய பொருள் அல்ல அவர் (அது). அவரே நம் மூலமாகப் பார்க்கிறவர், தொட்டு உணர்கிறவர்— நம்முடன் சேர்ந்து நினைப்பவர். அவர் 'எழுவாய்'; 'செயப்படு பொருள்' அல்ல. இங்கே 'பார்க்கிறார்' என்று சொல்லி மேலே எந்த விதமான எண்ணங்கள், கற்பனைகள் ஏற்படாதவாறு ஏற் படும் முழுமையான உள் அனுபவத்தைக் குறிக்கிறார் கண்ணன். அந்த அனுபவம் நமக்கு அவ்வளவு முழு நம்பிக்கையும் தருவதாக இருக்கும். ஒரு பொருளைப் பார்த்தவனுக்குப் பிறகு அந்தப் பொருளைப் பற்றிய சந்தேகம் எழ நியாயமில்லையல்லவா?

குணங்கள் தவிர வேறு கர்த்தா இல்லை: ஆத்மானுபவம் பெறுகிறவன் தானே பரம் பொருள் என்று உணர்கிறான். அத்துடன் கூட 'ஏற்கனவே தான் தான் செய்கிறவன்' என்று எண்ணியிருந்தது தன்னுடைய ஜீவ பாவனை குணங்கள் தந்த மயக்கம் தவிர வேறில்லை என்றும் உணர்கிறான். குணங்கள் தாம் நம்முள்ளே இருந்து நம் சிந்தனை வாழ்வை எப்போதும் நடத்திச் செல்கின்றன. இங்கே குணங்கள் என்பது சூட்சும சரீரத்தை நாம் சில சமயம் 'புத்தியின் கூட்டம்' என்று சொல்வோம். அப்போது அதற்குப் பொருள் 'புத்திசாலிகளின் கூட்டம்'. அதே போல் 'குணங்கள்' என்றால் இங்கே 'மனது' என்று பொருள் படும்.

மேலும் குணங்களுக்கு அப்பாலதாய் இருக்கும் அந்தப் பொருளை அறிந்து கொள்கிறான்: மனத்தால் தனித்துத் தானே செயலாற்றவோ, தன் உணர்ச்சிகளைப் பார்த்துப் புரிந்து கொள்ளவோ ஆகாது. ஏன் என்றால் அது சடப் பொருளின் பக்க விளைவு. மனதின் உள்ளிருந்து மனதின் வழியே செயல்கள் செய்விக்கும் அந்த உணர்வுத் தத்துவம் மனதை சுறுசுறுப்பு உள்ளதாகவும் ஒளி (அறிவு) உள்ளதாகவும் ஆக்குகிறது. அது மனதினின்றும் வேறான ஒரு தத்துவமாக (பொருளாக)த்தான் இருக்க வேண்டும். வாளித் தண்ணீர் உருக்கிய வெள்ளி போல் காணப்படுகிறது என்றால் அந்த ஒளியை அது சூரிய வெளிச்சத்திடமிருந்து பெற்றிருக்க வேண்டும். அல்லது சந்திரனிடமிருந்து பெற்று பிரதிபலிக்க வேண்டும். தண்ணீருக்கு தானாக பிரகாசிக்கும் தன்மை கிடையாது. பிரதிபலிக்கப்படும் அந்த பொருள் ஆடுகிறது, உடைகிறது என்றால் அது தோற்றமே. அந்தத் தோற்றம் அலைகிற தண்ணீர் காரணமாகவே ஏற்படுகிறது. அலைவது சூரியனோ சந்திரனோ இல்லை. அதாவது தண்ணீர்தான். மனதில் பிரதிபலிக்கும் உணர்வுத் தத்துவமே ஸ்ரீவத்வ பாவனையான ஜீவன். அதுதான் கர்த்தா. அதுதான் இந்த உடைபடும் அவஸ்தைகளுக்கெல்லாம் உள்படுகிறது.

அவன் 'என்' இருப்பை அடைகிறான்: ஒருவன் தன் மனதைக் கடந்து நான் என்னுடைய மனதின் பிரதிபிம்பம் இல்லை ஆனால் அங்கே பிரதிபலிப்பாகக் காணப்படுவதற்கு மூலப் பொருள். எனவே நான் மனதுக்கு வேறானவன் என்றும் தான் தான் தன்னுடைய மனதுக்குத் தன்னையே ஏமாற்ற உதவியவன் என்றும் புரிந்துகொண்டு தன்னையே மீண்டும் உணர்ந்து கொள்ளும்போது அந்த ஞானவான் ஆத்மாவாகி விடுகிறான். பரம் பொருள் கண்ணனை நாம் பிருந்தாவன் விஹாரி, தெய்வீகக் குழலூதி, தேவகி மைந்தன் ஸ்ரீ கிருஷ்ணனைக் கொண்டு குழம்பக் கூடாது. அவர் இங்கே நம் ஒவ்வொருவருள்ளும் இருக்கிற உயிர்த் தத்துவமான பரம் பொருளாக நின்று பேசு

கிறுர். கீதையின் மாணவன் ஒவ்வொருவரும் என்னுடைய உயிர் தான் தன்னிடத்துள்ள சூக்ஷ்மமடைந்த ஜீவனுடன் பேசுகிறது என்று புரிந்துகொள்ள வேண்டும்.

''விழித்திருப்பவன்''தான் கனவில் வேதனை தரும் அனு பவங்களை சிருஷ்டி செய்துகொண்டு அஞ்சுகிறுன். அழுகிறுன், இழக்கிறுன், பெறுகிறுன், ஊளையிடுகிறுன், புன்சிரிக்கிறுன். அந்த இன்ப துன்பங்கள் எல்லாம் அதே விழிப்பாளியின் உள்ளேயே உள்ள கனவு காண்பவனுக்கே உரியவை. விழித்தவுடன் கனவுடன் கனவுத் துயர்களும் மறைந்து விடுகின்றன. அந்தக் கனவு காண்பவனே தான் விழிப்பவனுகி விடுகிறுன். கனவு காண் பவன் எதிரே விழிப்பவனே வர முடியுமானுல் (இரண்டு பேரும் ஏக காலத்தில் இருக்க முடியுமானுல் அந்த விழித்த உணர்வு (விழித்தவன்) கனவு காண்பவனுக்கு இதே சுலோகத்தைத் தான் (சுலோகத்தின் கருத்தைத்தான்) சொல்லி அறிவுறுத்தும்— ''கனவு காண்பவனுன நீ கனவு காணும் மனது தான் கர்த்தா என்றும், நீ கனவு காண்பவனைக் காட்டிலும் வேறுனவன் என்றும் உணர்ந்து கொண்டாயானுல் உடனே நீ என் இருப்பை அடைந்து விடுவாய்! அதாவது நீ விழிப்புணர்வாகி விடுவாய்,'' என்று அப்படித்தான் இங்கேயும் பரம் பொருளான, கடவுள் உணர்வுத் தத்துவமான கிருஷ்ணன் மனிதனுக்கு இந்த உண் மையை விளக்கிச் சொல்கிறுர்: 'உன்னுடைய அஹத்தை மைய மாகக் கொண்ட வாழ்வும் அதன் செயல்பாடுகளும், அதன் அழுகை, சிரிப்புகளும், சாதனைகளும் ஏமாற்ற முறிவுகளும் எல்லாமே விழித்துக் கனவு கண்டு தூங்கும் ஆளுமைக்கே சொந்தம் நீ அவற்றைத் தாண்டி 'உண்மை' நிலைக்கு விழித்து விட்டாயானுல் நீ அத்துடன் ஒன்றுகி விடுவாய். கனவு காண் பவர் விழித்த பிறகு கனவு காண்பவனுக இருக்கவே முடியாது. ஏன் என்றுல் கனவு கண்டவன் தான் மீண்டும் தன் உண்மை ஆளான விழிப்பவன் ஆகி விட்டான். அதே போல 'புருஷன்' என்கிற ஆத்ம தத்துவம் தான் (அதுவே தான் பரமாத்ம தத்துவமும் ஜீவனுக்குள் இருக்கும் நிலையில் அதற்கே தான் ஆத்மா என்ற பெயரை ஏற்றுக் கொள்கிறது) பிரகிருதியுடன் சிக்கிக் கொள்ளும் போது மனிதன் ஆகிறது. அது தன் பிரகிருதிச் சிக்கல்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளும்போது தன்னைப் புரிந்துகொள்வது மட்டுமில்லை—தானே ஆத்மவாகியும் விடுகிறது. ''என்னுடைய இருப்பை அடைந்து விடுகிறது.''

'இந்த மஹத்தான லட்சியத்தை எப்படி அடைய வேண்டும்? என்று கண்ணன் இப்போது அறிவுறுத்தத் தொடங்குகிறுர்.

குணனேதானதீத்ய த்ரீன் தேஹீ தேஹஸமுத்பவான்
ஜன்ம ம்ருத்யு ஜரா துக் கைர்விமுக்தோ (அ)ம்ருதமச்னுதே
*14:20*

குணன்—குணங்களை; ஏதான்—இந்த; அதீத்ய—தாண்டி; த்ரீன்—மூன்று; தேஹீ—உடல் எடுத்தவன்; தேஹஸமுத்பவான்—உடல் பிறக்கக் காரணமான; ஜன்மம்ருத்யு ஜரா துக்கை—பிறப்பு, இறப்பு, மூப்பு, துயரங்களிலிருந்து; விமுக்த:—விடுபட்டு; அம்ருதம்—அமரத்தன்மையை; அச்னுதே—அடைகிறுன்.

உடல் எடுத்தவன், இந்த உடலின் பிறப்புக்குக் காரண மான இந்த மூன்று குணங்களையும் தாண்டி பிறப்பு, இறப்பு, மூப்பு துன்பங்களிலிருந்து விடுபட்டு அமரத்வத்தை அடைகிறுன்.

சமையலறையில் அடுப்புக்கருகே எவ்வளவு நேரம் வரை நிற்கிறுயோ அது வரை அந்தச் சூழ்நிலையில் சூட்டையும் புகை யையும் நீ உணர்ந்தே ஆக வேண்டும். சமையலறையை விட்டு வெளியேறுவதுதான் அந்த இரண்டு தொல்லைகளான சூடு, புகை, இரண்டிலிருந்தும் தப்ப வழி. ஏன் என்றுல் சூடும் புகையும் இடத்துக்கு உரியவையல்ல. அடுப்பிலிருந்து வருபவை. நல்ல சூடான கோடைக் காலத்தில் வெளியே உட்கார்ந்திருந்தால் சூடும் இறுக்கமும் தொல்லை தரும். அந்தத் தொல்லையிலிருந்து விடுபட வேண்டும் என்றுல் எழுந்து உள்ளே போய்விட்டால் போதும். அதே போல் குணங்களுடன் ஒட்டுறவு ஏற்படுத்திக் கொண்டு மனம், புத்தி இவற்றின் நிலப்பரப்பில் ஆட்டம் போடும் காரணமாக நாம் சாதாரண வாழ்க்கைக்குரிய குறை பாடுகள், துயரங்கள் இவற்றுக்குள்ளாகிறேம்.

அவற்றை எப்போது தாண்டி விடுகிறேமோ அப்போது நாம் இந்தத் துயரங்களின் கொடுங்கோன்மைக்கு ஆளாக மாட் டோம். வரம்புக்குட்பட்ட தன்மையும் விக்ஷேபங்களான பதற்றங்களும், சாவும், வேதனையும், மாற்றங்களும் சங்கடங் களும் அந்தப் பூரணமானதும் நித்யமானதும் சாவு, மாறுபாடு இல்லாததுமான ஆத்ம ராஜ்யத்தில் கிடையாது.

உடலுக்குக் காரணங்களான இம்மூன்று குணங் களையும் தாண்டி—அவித்தை அல்லது அஞ்ஞானத்தின் தோற்றங்களே குணங்கள். அதுதான் காரண சரீரம். நாம் நம் ஆழ்ந்த தூக்கத்தில் நம்முடைய காரண சரீரத்தில் இருக்கிறேம். இது குணங்கள் தவிர வேறில்லை. அவை முதலில் காரண சரீர மாகவும், எண்ணங்கள் உணர்ச்சிகளாகவும் பிறகு செயல்கள் புரிய தூல உடலாகவும் வெளிப்படுவதற்காக வெளியேறு கின்றன.

எனக்குள் கலையுணர்வு இருக்கிறது. அது சித்திரத்தில் நிறங் களாக வெளிப்பட வேண்டும் என்றுல் எனக்கு திரையும் தூரிகைகளும் வேண்டும். நான் சங்கீதக் கலைஞன் என்றுல் கலை வெளிப்பட எனக்கு வாத்யங்களும் பின்பாட்டுக்காரர்களும் வேண்டும். அவை என் கலைக்குத் தகுந்தவையாகவும் இருக்க

வேண்டும். ஓவியன்கையில் பிடிலும், வண்ணங்கள் திரை ஆகியவை பாடகன் கையிலும் இருந்தால் அவை வீண். ஏன் என்ருல் அவை குறிப்பிட்ட கலைகள் வெளியாகத் தக்க சாத னங்கள் அல்ல. என் கருத்துக்கள் மந்தமாகவும், பிராணிகளுக்குரியவையாயும் இருந்தால் எனக்கு மனித உடல் துயரம் தருவதாகும். எனவே, தாவரமோ, மிருகமோ, மனிதனே, இந்த உடல்கள் இந்த சூட்சும உடல் வெளிப்பட்டுப் பிரகாசிக்கத்தக்க உடல்களாகவே இருக்கும். சூட்சும உடலின் தன்மையும் சிறப்புக்களும் குணங்களால் அமைந்த காரண சரீ ரத்தால் நிர்ணயிக்கப்படுகின்றன.

எனவே குணங்களை மீறியவன் சூட்சும உடல், காரண சரீ ரம் இரண்டுக்குமே உரித்தான துன்பியல் அனுபவங்களுக்கு உட்பட வேண்டியதில்லை, என்பது தெளிவாகிறது.

உடல் எடுத்தவன் பிறப்பு, இறப்பு, மூப்பு (தேய்வு) வலியிலிருந்து விடுபடுகிருன்: நாம் முன்னமே சொன்னபடி சூடும், புகையும் அடுப்பு நெருப்பின் குணங்கள். நாம் அடுப்பருகில் இருக்கிறவரை நாம் இத்தொல்லைகளால் கஷ்டப்படுகிறோம். பிரகிருதிப் பொருள்கள் மாற்றங்களுக்கு உட் படுகின்றன. அம் மாற்றங்கள் திட்டவட்டமான கட்டங்களாக வகுக்கப் பட்டிருக்கின்றன. அம்மாற்றங்கள் எல்லா உடல் களுக்குமே பொதுவானவை. அவை பிறப்பு, வளர்ச்சி, தேய்வு, வியாதி, சாவு என ஐந்தாம். ஒவ்வொன்றும் துக்கத்தின் பையே யாகும். பிறப்பு வலி, வளர்ச்சி வேதனை; அழிவு; துன்பம்; வியாதி சித்திரவதை; சாவோ கேட்க வேண்டாம்—பயங்கரம்!

ஆனுல் இவை எல்லாம் பிரகிருதிக்கே உரியவை. அதற்கு ஒளியும் உயிரும் கொடுக்கும் உணர்வுத் தத்துவமான ஆத்மா வுக்குக் கிடையாது. யார் தன்னை அந்த உணர்வுத் தத்துவமாக உணர்ந்து கொள்கிருனே அவன் இந்தத் துயரங்களை எல்லாம் கடந்தவனுகி விடுகிருன். சூரியன், வெள்ளம், பஞ்சம், சண்டை, தொத்து வியாதி, கருமாதிகள், கலியாணங்கள்—இம்மாதிரி லட்சக்கணக்கான பொருள்களையோ நிகழ்ச்சிகளையோ ஒளி பெறச் செய்யலாம். என்ருலும் அவற்றுள் ஒன்றுகூட சூரியனில் இருக்காது. இருக்க முடியாது. அதே மாதிரி நம் பிரகிருதி உடை யில் ஏற்படும் அவ்வளவு மாற்றங்களையும் அந்த அடிப்படைச் சுத்தப் பேருணர்வுத் தத்துவம் உணரச் செய்யலாம். ஆனுல் அவை புருஷனுக்குரியது அல்ல. ஆத்மாவுடையதல்ல. எனவே தன் ஆத்ம நிலையை உணர்ந்தவன் இந்தப் போராட்டங்களுக் கப்பால் போய் விடுகிருன்.

மேலும் அவன் அமரத்வத்தை (ஆதியந்தமற்ற நிலையை) அடைகிருன். அப்படி ஆத்ம நிலையை உணர்ந்த மனிதனுக்குத்

துக்கங்களின் அனுபவம் ஏற்படுவதில்லை என்பது மட்டும் இல்லை. அவனுக்கு உண்மையான ஆனந்தத்தின் பூரண அனுபவமும் கிடைக்கிறது. அவன் ஆனந்தமாகவே ஆகி விடுகிறான். இந்தச் சொற்றொடர் இதைத்தான் சொல்கிறது. வியாதிக்காரன் ஆழ்ந்து தூங்கும்போது அவனுக்கு வலி மறந்து விடுகிறது. ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும்போது ஏமாந்தவன் ஏமாற்றத்தை மறக்கிறான்; பசித்தவன் பசியை நினைக்கிறானில்லை. துயருற்றவன் துன்பப்படுவதில்லை. ஆனால் அப்போதும் வியாதி ஒழிந்தது, ஏமாற்றம் தவிர்க்கப்பட்டது. பசிக்கு உணவு கிடைத்து அமர்ந்து விட்டது, துயரம் நீங்கி விட்டது என்று சொல்ல முடியாது. தூக்கம் உள்ளே இருக்கும் துயர உலகத்துடன் செய்து கொள்ளும் தாற்காலிக சமாதான உடன்படிக்கையே. விழித்த வுடன் அவ்வளவு தொல்லைகளும் படை எடுத்து வந்துவிடும். ஆத்ம லாபம் பெற்றபோது கிடைக்கும் தெய்வீக ஆனந்தம் வெறும் பொய்யான சங்கட வாழ்க்கை நின்று போவது மட்டு மல்ல; அது புதிய பயனுள்ள நேர் வாழ்க்கை—மாற்ற மொன்றில்லாத, ஆதி அந்தமற்ற, நித்தியமான மிகத் தெளிவான ஓர் அனுபவம். ஆதலால்தான் இங்கே இதே உடம்பில் வாழ்ந்து கொண்டே அவன் அமரத்துவத்தை அடைகிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இத் தரையின் மேல் இறை—மனிதனாக இருப்பது என்பது உண்மையிலேயே ஒரு அபூர்வமான அனுபவம் தான். அவனை இனம் கண்டுகொண்டு அவனைப் போல் நாமும் வாழ விரும்பினால் அந்த ஜீவன் முக்தனுடைய லக்ஷணங்கள் என்னவாய் இருக்கும்? அவன் உலகில் எப்படி நடந்து கொள் வான்? அந்த இறை அனுபவத்தில் திளைக்கும் அந்த ஜீவன் முக்த னுக்கும் இந்த உலகுக்கும் உறவு எப்படி இருக்கும்?

கடவுள் அனுபவத்துடன் வாழும் அப்படிப்பட்ட மனிதனுடைய தன்மை நடத்தை முதலியவற்றைப் பற்றிய இக்கேள்விகளைக் கேட்க அர்ச்சுனனுக்கு ஒரு வாய்ப்புக் கிடைக்கிறது.

அர்ஜுன உவாச:

கைர்லிங்கைஸ்த்ரீன் குணானேதானதீதோ பவதி ப்ரபோ!
கிமாசார: கதம் சைதான்ஸ்த்ரீன் குணாதிவர்த்த தே

14:21

கை:—என்ன; லிங்கை:—அடையாளங்கள்; த்ரீன்—மூன்று; குணான்—குணங்களை; அதீத:—தாண்டியவனாக; பவதி—இருக்கி றான்; ப்ரபோ—பிரபுவே; கிம் ஆச்சார—என்ன நடத்தை; கதம்—எவ்விதம்; ச—மேலும்; ஏதான—இந்த; த்ரீன்—மூன்று; குணான்—குணங்களை; அதிவர்த்ததே—தாண்டி அப்பால் செல்கிறான்.

இந்த மூன்று குணங்களைத் தாண்டியவனுக்கு என்ன அடையாளங்கள்? ஏ பிரபுவே! அவன் நடத்தை எப்படி இருக்கும்? மேலும் அவன் இந்த மூன்று குணங்களுக்கும் அப்பால் எப்படிச் செல்கிறான்?

கீதை பரஸ்பர சம்பாஷணை நடையில், இருவருக்கிடையே நடக்கும் பேச்சு ரீதியில் எழுதப்பட்டிருக்கிறது. எந்த தத்துவச் சித்தாந்த சாஸ்திரமும் முதலில் படிக்கும் போது சற்று அலுப்புத் தட்டத்தான் செய்யும். அதை நிவர்த்தித்து அதை மேலும் மேலும் உற்சாகம் ஊட்டக் கூடியதாக ஆக்க வேண்டும். இதை அறிந்தவர் வியாசர். இந்த பேச்சோ பூரண ஞான இறைவனுக்கும் பூரண பிரமையிலிருக்கும் ஒரு சராசரி மனிதனுக்கும் இடையே நடக்கிறது. இந்த விஷயங்களை எல்லாம் வியாசர் மறக்கவேயில்லை. தத்துவப் பேச்சிலும் மனித இயற்கையை மறக்கவில்லை அவர். அதனால்தான் அர்ஜுனன் கேட்கும் கேள்விகள் ஞானம் நிறைந்தவர்கள் இருக்கும் கூட்டத்தில் சிறுபிள்ளையின் குதூகலத்தைப் பிரதிபலிப்பதாக இருக்கின்றன. புத்தியின் அசட்டு விளையாட்டுக்கள் போல் தோன்றுகின்றன என்ற போதும் கண்ணன் மிகவும் பொறுமையாக விடை அளிக்கிறதாக வியாசர் சொல்கிறார். கண்ணன் காட்டும் பொறுமை உண்மையான பிராமணர்களின் தன்மையையும் கடமையையும் நன்கு பிரதிபலிக்கிறது. நம்பிக்கையில்லாமல் கேள்விகள் கேட்கும் போக்குக் கொண்ட வளராத அறிவுள்ளவர்களாயினும்—ஏன் நாத்தீகர்களாயிருந்தாலும் கூட —அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு நன்கு தெளிவாகவும் முழுமையாகவும் விடை கூறுவது பிராமணர்களின் கடமையாகும்.

நமக்கு சாஸ்திரத்தில் இப்படி ஒரு பாரம்பரியத்தைப் பெற்றிருக்கும் ஒரு நல்லதிர்ஷ்டம் இருந்தது. ஆனால் எப்படியோ இடையே ஒரு கொடுமையான மறைக்கும் போக்கு புகுந்து நம்முடைய பெருமை கொண்ட பண்பாட்டுப் பொக்கிஷத்திலிருந்து இந்தப் பகுதியைத் திருடிவிட்டது. சரியானபடி காற்றாட விடாவிட்டால் தத்துவக் கருத்துக்கள் சடமாகிவிடும். ஒரு தத்துவச் சிந்தனையின் தர்க்கப்பூர்வமான உணர்ச்சியை கேட்கவும் பெறவும், அதைப் புரிந்து கொள்ளவும் ஒவ்வொரு மாணவனுக்கும் பூரணமான உரிமைச் சுதந்திரம் உண்டு. சரியாகப் புரிந்து கொண்டால்தான் ஒன்றின் பெருமையைச் சரியாகக் கணிக்க முடியும். பெருமையைப் புரிந்து கொள்ளாமல் நாம் எந்தத் தத்துவத்தையும் அன்றாட வாழ்வில் பின்பற்றி வாழ முடியாது. ஹிந்து சமயம் ஒரு வாழ்க்கை முறை. அது வெறும் கற்பனைப் பேச்சு, வாதம் அல்ல. எனவே உண்மையில் அதையொட்டி வாழ வேண்டும். அப்போதுதான் அதன் உபயோகமும் பெருமையும் தெரியும்.

விவரமாக, சந்தேகம் மிச்சமில்லாதபடி முழுமையும் அடக்கி விளக்கம் பெறுமல் மனத்தில் உள்ள சந்தேகங்கள் தீரா. களை பிடுங்காமல் பயிர் செய்வது என்பது ஒருபோதும் முடியாத ஒன்று. சீடனுடைய சந்தேகங்களைக் கேட்பதற்குரிய சுதந்திரத்தை வியாஸர் சந்தேகத்துக்கு இடமின்றி தீர்த்து வைத்திருக்கிறார். அர்ச்சுனனை மீண்டும் மீண்டும் கேள்விகள் கேட்க வைக்கிறார். பகவான் கிருஷ்ணனையும் எல்லையற்ற பொறுமையும் தெய்வீக அன்பையும் காட்டி சாதாரண மனிதன் புத்தியின் மட்டத்துக்கு இறங்கி வந்து* (உயர்ந்த அறிவாளியின்) இமய மலை அளவுக்கு உயருவதில் உதவும்படி செயவித்திருக்கிறார்.

அர்ச்சுனன் இங்கே தெளிவாக மூன்று கேள்விகள் கேட்கிறான். 1. இந்த மூன்று குணங்களையும் தாண்டிப் போன மனிதனை இனம் புரிந்து கொள்ளச் செய்யும் அடையாளங்கள் எவை? 2. அந்தச் சித்த நிலையில் அவன் புற உலகத்துடன் கொள்ளும் உறவு எப்படி இருக்கும்; இன்னம் அந்த மூன்று குணங்களின் பிடியில் சிக்கியிருக்கும் நம்முடன் எப்படி நடந்து கொள்வான்? 3. அந்த பூரணத்வம் பெற்ற மனிதன் தனக்குள் இருக்கும் குழப்பங்கள், சிக்கல்கள் ஆகியவற்றை எப்படி வெற்றி கொண்டு தன் ஆத்மீக பெருஞ் சிறப்பை அடைகிறான்?

பகவான் இந்த மூன்று கேள்விகளுக்கும் பதில் சொல்லத் தொடங்குகிறார். முதலில் முக்குணங்களையும் தாண்டியவனைப் புரிந்து கொள்ள உதவும் அடையளாங்களை விவரிக்கிறார்.

ஸ்ரீ பகவான் உவாச

ப்ரகாசம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந நிவ்ருத்தானி காங்க்ஷதி
14:22

ப்ரகாசம்—ஒளி; ச—மேலும்; ப்ரவ்ருத்திம்—செயல்கள் ஆற்றுவது; ச—உம்; மோஹ மேவ ச—மோகத்தையும்; பாண்டவ—ஏ பாண்டவா; நத்வேஷ்டி—வெறுக்கிறதில்லை; ஸம்ப்ரவ்ருத்தானி—இருந்துவிட்டனவற்றை; ந—இல்லை; நிவ்ருத்தானி—விடுபட்ட (இல்லாத)வற்றை; காங்க்ஷதி—விரும்புகிறான்.

---

* இங்கே சுவாமி ஒலிம்பஸ் என்ற கிரேக்க தெய்வங்கள் வசிக்கும் மலையைச் சொல்லியிருக்கிறார்கள்

பிரகாசம், செயல்கள், மோகம் ஆகியவை இருக்கும் போதும் ஏ பாண்டவா, அவன் வெறுப்பதில்லே. இல்லாத போது விரும்புவதும் இல்லே.

அர்ஜுனனுடைய முதல் கேள்விக்கு விடை அளிக்கும் முறையில் கண்ணபிரான் ''சரியான ஞானி. மூன்று குணங்கள் அவன் உள்ளத்தை ஆக்கிரமித்திருக்கும்போது, அது நல்ல தெளிவாகத் தெரிந்த நிலேயில்கூட அதை வெறுக்கிறதில்லே; அது மறைந்து விட்டால் தேடுவதுமில்லே. இது எப்படி?'' என்று விளக்க முயலுகிருர். சமநிலேதான் சித்திக்கு சாரம். ஒரு சிறந்த ஞானி எப்போதும் சமநிலேயில் இருக்கிருன். அவன் எதையும் வேண்டுவதில்லே, எதையும் புதிதாகச் சேர்த்துக் கொள்ளவும் விரும்புவதில்லே. வைத்திருப்பது, இல்லாதிருப்பது—இரண்டும் அவனுக்கு ஒன்றுதான். ஏன் என்ருல் அவன் இரண்டுக்கும் அப்பால் சென்று விட்டவன். சூழ்நிலே, அதில் உள்ள பொருள்கள் ஆகியவற்றுடன் சற்றும் ஒட்டாத, அவற்றைச் சற்றும் நம்பியிராத ஒரு உள் அமைதி நிலேகொண்ட வாழ்வை வாழ்கிறவன் அவன்.

பிரகாசமும், செயல் முயற்சியும் மோகமும் இருக்கும்போது அவன் வெறுக்கிறதில்லே: இம் மூன்றும் மூன்று குணங்களின் விளேவுகள். சாத்வீகம், ராஜஸம், தாமஸம் என்ற இந்த மூன்றும் முறையே அவற்றை ஏற்படுத்துகின்றன. தன் உள்ளே அந்தக் குணங்கள் இருப்பதைக் கண்டபோது அவனுக்குத் தனிப் பற்ருே, வெறுப்போ உண்டாவதில்லே. அவன் உள்ளம் ராஜஸத்தினுல் அலேக்கப்படலாம். தாமஸத்தினுல் மோஹத்துக்குள்ளாகலாம். ஆனுல் அவன் அதை லட்சியம் செய்வதில்லே. ஏன் என்ருல் அவை அவனுக்குள் ஒரு பாதிப்பையும் ஏற்படுத்துவதில்லே. எனவே அவன் அவற்றைப் பாராட்டுவதுமில்லே. வெறுப்பதுமில்லே. ஆத்மஞானம் இல்லாவிட்டால்தான் அவற்றை வெறுக்கத் தோன்றும்.

இந்த மூன்று குணங்களேயும் விட்டு விட்டு அவற்றிற்கு அப்பால் மேலே சென்றுவிட்ட ஞானி, இந்தக் குணங்கள் அவன் உணர்வில் எழுந்து தோன்றும்போது அவற்ருல் அவன் எந்த விதத்திலும் பாதிக்கப்படுவதில்லே. சாத்வீக குணத்தில் இருப்பவனே எடுத்துக் கொண்டோமானுல் அவன் அப்போது கிடைக்கும் அமைதி, கலங்காத நிலே. அதனுல் ஏற்படும் கிளர்ச்சி, சந்தோஷம் இவற்றுடன் ஒரு பற்றை ஏற்படுத்தி வளர்த்துக் கொண்டு விடுகிருன். அவன் ராஜஸம், தாமஸம் ஆகிய குணங்கள் ஏதாவது விக்ஷேபத்தையோ, மோஹத்தையோ ஏற்படுத்தினுல் அவற்றை வெறுக்கிருன்.

அவை இல்லாதபோது அவற்றை வேண்டுவதும்

இல்லே: அந்த ஞானி அவற்றுடன் தனிப்பற்று வைக்கவில்லே என்பது மட்டும் இல்லே. அவை இல்லாதபோது அதற்காகக் கவலேப்படுவதுமில்லே. ஏன் என்ருல் அவன் அவற்றையெல்லாம் மீறியவன். அவனுக்கு எல்லாம் கிடைத்து விட்டது. எனவே இந்த மூன்று குணங்களும் சேர்ந்தோ தனித்தனியாகவோ அவனுக்கு எதையும் கொடுத்துவிட முடியாது. ஒரு லட்சாதிபதிக்கு தெருவில் கிடந்து கால் ரூபாய் நாணயம் கிடைத்தால் என்ன கிடைக்காது போனுல் என்ன? அவன் குனிந்து அதைப் பொறுக்கி எடுத்துக் கொண்டாலும்கூட அதற்காக அவன் தன் அதிர்ஷ்டம் என்று தன்னைப் புகழ்ந்து பாராட்டிக் கொள்ளப் போவதுமில்லே. ஆனுல் ஒரு ஏழைக்கு அது கிடைத்தால் அவன் மகிழ்வான்.

இவ்விதம் குணங்களின் வலேச் சிக்கல்களே மீறிச் சென்றவன் மனம்—புத்தியாகிற அந்தக் கரணத்தை முழுமையாக விட்டு மேலே போய்விடுகிருன். போய் அவன் ஆத்மாவின் அளவற்ற ஆனந்த சாகரத்தில் திளேக்கிருன். அவனுக்கு மகிழ்ச்சி. துன்பம் இவற்றை மட்டுமே தரவல்ல சாதனங்கள் அவனுக்கு தனியான அனுபவங்கள் எதையும் தர முடியாது. எப்பொழுதும் அவன் கலங்காமலும், நிலேயாகவும் அமைதியாய் இருந்து கொண்டிருக்கிருன். அந்த நிலேயில் அவன் மேகங்கள், சூருவளிகளுக்கெல்லாம் அப்பால் இடையருத அமைதி, ஒளி நிறைந்த பிரகாசம் இவற்றிலேயே இருக்கிருன். அவன் சுத்த அறிவு உலகத்தை வெற்றி கொண்டு விட்டது. அவன் கடவுள் நிலேயில் இருக்கிருன்.

மேலே குணுதீதனுடைய நடத்தையைப் பற்றிய மனதில் பதியக் கூடிய விவரணமும் மிச்சமில்லாத ஆய்வும் தொடர்கிறது:

உதாஸீன வதாஸினே குணேர்யோ ந விசால்யதே
குணு வர்த்தந்த இத்யேவ யோவதிஷ்டதி நேங்கதே

*14:23*

உதாஸீனவத்—ஒன்றுமே பாதிக்கப்படாதவன் போல்; ஆஸீந:—அமர்ந்து கொண்டு; குணே:—குணங்களால்; யோ—எவன்; ந—விசால்யதே—அலேக்கப்படுவதில்லேயோ; குணு:—குணங்கள்; வர்த்தந்தே—செயல்படுகின்றன; இதி—என்று; ஏவ—மட்டுமே; ய—எவன்; அவதிஷ்டதி—தன்க்குள்ளே அமர்ந்து இருக்கிருன்; ந—இல்லே; ஈங்கதே—அசைவதில்லே.

யார் எந்த ஒன்ருலுமே பாதிக்கப்படாதவன் போல் குணங்களால் அசக்கப்படுவதில்லேயோ, யார் குணங்களே செயல்படு

கின்றன என்று புரிந்து கொண்டு விடுகிறுனே அவன் தன்னுள்ளேயே அமர்ந்து அசையாமல் இருக்கிறுன்.

மூன்று சுலோகங்கள் கொண்ட இந்தப் பகுதியில் ''பூரணத்துவம்'' பெற்ற ஒரு மனிதன் உலகிலுள்ள பொருள்களுடனும் உயிர்களுடனும் எவ்விதமான சம்பந்தம் வைத்திருக்கிறுன்''. என்ற தெளிவாகவும் பூரணமாகவும் எழுதப்பட்ட சித்திரம் கிடைக்கிறது. ஒரு மனிதன் பண்பாடு அவன் போட்டுக் கொண்ட முகமூடியாகவும் இருக்கலாம். நமக்குச் சூழ்நிலே மிகவும் ஆழமாகப் பாதித்து நம்மை ஈர்க்காதவரை நம்மில் பலர் ''கடவுள்'' போல் நடிக்கலாம். அதிகாரம் கிடைக்காத போது ஒருவன் கொடுங்கோலனுக இருக்க மாட்டான். ஏழையாக இருக்கும்வரை ஆர்ப்பாட்டமில்லாத அமைதியான வாழ்வு வாழ்வான். ஆசை காட்டி தூண்டப்படாதவரை ஒருவன் லஞ்சத்துக்கு உட்படாதவனுக இருப்பான். இவ்விதம் நம் நண்பர்களிடம் நாம் காண்கிற அனேக நல்ல குணங்கள் போலி வர்ணம் தீட்டப்பட்ட மேலெழுந்தவாரியான அழகுக் கோலங்களாக இருக்கின்றன. அவை தம் அழகுத் தோற்றத்தைக் கொண்டு அதற்குப் பின்னுல் உள்ள மனேபலக் குறைவையும் நலமற்ற ஆளுமையையும் திரை போட்டு வைத்திருக்கின்றன.

திறமையை உள்ளடக்கிய பேய்கள் போலியான அழகு உடைகளைப் போட்டுக் கொண்டு உலகில் வலம் வருகின்றன. எனவே சிந்தனைச் சோதனை பண்ணுகிற இடம் குகையோ காடோ அல்ல. ஆனுல் எங்கே உலகம் தன் விஷமங்களால் அவனைச் சீண்டுகின்றனவோ, அந்தச் சந்தைக் கடைதான் உண்மையான சோதனைக் களம். சிலுவையில் அறையப்படுமுன் ஏசு கிறிஸ்துவின் அவ்வளவு பெருமையும் யாருக்கும் தெரியாது இருந்தது. நம்மை துன்பங்கள் கசக்கி நசுக்கும் போதுதான் யாருக்கும் நம் உண்மைக் குணம் வெளியாகும். சந்தனத்தை அறைக்க அறைக்கத் தான் அதன் வாசனை புரியும். துளசி இலே விரல்களில் வைத்துக் கசக்கும் போதுதான் அந்த விரல்களுக்கே மணம் தருகிறது.

எனவே பூரண வளர்ச்சி அடைந்த ஞானி உலகில் எப்படி நடந்து கொள்வான் என்று நீ தெரிந்து கொள்ள வேண்டியது தான். அதுதான் அறிவியலுக்கு ஒத்தது. பகுத்தறிவுக்கும் ஏற்றது. இது பல அத்தியாயங்களில் அவசரமாக இழுக்கப்பட்ட கோடுகளின் மூலம் வரையப்பட்டிருக்கிறது. மேலும் அதை கிருஷ்ணன் ஸ்திதப்ரக்ஞன் லக்ஷணங்களைக் கூறும் இடத்தில்* மிகவும் முழுமையாக மிச்சம் வைக்காமல் விவரித்திருக்கிறுர்.

---

* 2வது அத்யாயம்—கீதை

யார் பாதிக்கப்படாதவன் போல் அமர்ந்து கொண்டு குணங்களால் அசக்கப்படாமல் இருக்கிருனே அவன்:

உலகில் ஞானிக்கும் பல அனுபவங்கள் கிடைக்கின்றன, நல்லது, கெட்டது இரண்டும் அற்றது என்று. ஆனுல் அவன் எதையும் பாராட்டுவதில்லே. ஏன் என்ருல் அவனுக்கு இதெல்லாம் மனம், புத்தி இவற்றின் ஆட்டங்களே என்று நன்ருகத் தெரியும். சினிமா அரங்கில் திரையில் வரும் துயர்களும் மகிழ்ச்சிகளும் நம்மைப் பாதிக்கப்படவேண்டியதில்லே. நமக்கு அவை நம்மை மகிழ்விப்பதற்காகக் காட்டப்படுகிற நாடகம் என்று நன்ருகத் தெரியும். இப்படிச் சொல்வதனுல் 'ஞானி' உலக நிகழ்ச்சிகளே முற்றிலும் அலட்சியம் செய்து விடுகிருன்; என்று கருத்துக் கொண்டு விடக் கூடாது. வியாஸர் சொல்லேப் போடுவதில் மிகவும் விழிப்புடன் இருக்கிருர். பூரணத்துவம் பெற்ற சித்தர் 'பாராட்டாதவன் போல' என்று 'போல' என்னும் சொல்லேப் போட்டிருக்கிருர். அதாவது அவன் பதற்றம் அடைவதில்லே. அவனேச் சுற்றி நடக்கும் எந்த நிகழ்ச்சியும் அவனேக் கலக்கி மனேவியாதி பிடித்தவனேப் போல் அலறி ஆர்ப்பாட்டம் செய்யச் செய்துவிட முடியாது.

யார் ''குணங்கள் தம் வேலேயைச் செய்கின்றன'' என்று அறிந்து—அவனுடைய உள் ஆளுமையில் ஏற்படுகிற மாற்றங்கள் எல்லாமே குணங்களின் கோல மாற்றமே! வேறு ஒன்றுமில்லே. புற உலகும் அவன் குணமாற்றத்துக்கு தகுந்தாற் போலவே மாறி மாறித் தோற்றமளிக்கிறது. இது அவனுக்குத் தெரியும். உண்மையான அறிவைப் பெற்ற ஞானி தனக்குள்ளும் வெளியேயும் ஏற்படும் மாற்றங்களுக்குப் பின்னுல் இருக்கிற உத்திகளே நன்கு அறிந்தேயிருக்கிருர்.

—தனக்குள்ளேயே அமர்ந்து இருக்கிருன்; அசைவதில்லே— இவ்விதம் தனக்குள்ளே குணங்கள் போடும் நாடகங்களேக் காண வேண்டும் என்ருல் அவன் ஒரு சாட்சி ரூபமாக இருக்க வேண்டும். குணங்களுக்கும் பின்னுல் தனித்திருந்து பார்ப்பவனுக இருக்க வேண்டும். அப்போது அவன் தன் ஆன்மநிலேயில் இருக்கிருன். அங்கே. நன்கு அமர்ந்து அவன் தன் உள்ளேயும் வெளி உலகிலும் குணங்கள் போடும் ஆட்டங்களேக் கண்டு களிக்கிருன். அந்த ஆற்றல் அவனிடம் இருக்கிறது. தெருவில் நடக்கும் சண்டையை மேல் மாடியிலிருந்து பார்க்கும் ஒருவன் அவன் பார்க்கிற அந்தச் செய்கையால் சற்றும் பாதிக்கப்படுவதில்லே. அதேபோல ஆன்ம உணர்வில் விழித்திருக்கும் ஞானி சாதனேயின் முழுபலத்துடன் கிடைத்த நடுநிலேயிலிருந்து அசங்குவதில்லே. அவன் தனக்குள்ளேயே குணங்கள் போடும் ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டே தன் உண்மை சொரூபத்தில்

தெய்வத் தன்மையில் (அவதிஷ்டதி) நிலைத்து அமர்ந்து இருக்கிறான். ஸ்ரீ சங்கராச்சாரியார் கீதையின் சில கையெழுத்துப் பிரதிகளில் ''அவதிஷ்டதி''க்குப் பதில் 'அனுதிஷ்டதி' என்ற பாடபேதம் காணப்படுகிறது என்று சொல்கிறார்கள். அப்போது ''தன்னுள் அமர்ந்து இருக்கிறான்'' என்னுமிடத்தில் 'இவ்விதம் எண்ணி அவன் செயலாற்றுகிறான்' என்று ஆகும். குணங்களின் சிக்கல் வலையிலிருந்து பிரிந்து தன்னை ஆளத்தெரிந்து கொண்ட ஞானி எப்போதும் பரம்பொருள் நினைவிலேயே இருந்து கொண்டு புறத்தே உலகில் செயல்கள் செய்கிறான். எல்லா தீர்க்க தரிசிகளும் அவ்வப்போது வந்து இந்த விதம் மனித குலத்துக்குக் கல்வி அளித்து சமூகத்தில் உயர்ந்த இலஷியங்களை (மதிப்பீடுகளை) நிலைநாட்ட உழைத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட பூரணத்துவம் பெற்ற ஞானிகள் கொடுத்த கொடைதான் இன்னும் உலகில் பண்பாடு நிலைத்திருக்கிறது. அதுதான் இன்று நாம் பெருமைபட்டுக் கொள்ளக் காரணமாயிருக்கும் நாகரீகத்தை வளர்த்து வந்திருக்கிறது.

இந்த நன்கொடை வாளும் எழுதுகோலும் கொடுத்தது அல்ல. சொற்களும் சட்டங்களும், விஞ்ஞானமும், பொருளியலும், புரட்சிகளும், தீர்மானங்களும், தேர்தல்களும், வசூல்களும் நம் நாகரீகக் கட்டுமானத்துக்கு எந்த உருப்படியான உதவியும் செய்ததில்லைதான். மாறாக ஒரு புத்தர் என்ன மாகவீரர் என்ன, வியாசர், வால்மீகி, ஒரு கிறிஸ்து, ஒரு முகம்மது போன்ற இவர்கள்தாம் ஒவ்வொரு கருத்தாக எடுத்துக்காட்டி அன்பையும் அருளையும் போதித்து நம்முடைய பரஸ்பர மரியாதையையும் மதிப்பையும், வளர்த்து வைத்திருக்கிறார்கள். இந்தச் செயற்கரிய செயல்களைச் செய்து கொண்டிருக்கும் போதும் கூட அந்த மகான்கள் முக்குணங்களின் இரும்புப் பிடியில் சிக்காமலேயே தான் செய்தார்கள்.

சென்ற சுலோகத்தில் குறிப்பாகச் சுட்டிய கருத்தை மேலும் விளக்கத் தொடங்கி, பகவான் சொல்கிறார்:

*ஸம து:க ஸுக: ஸ்வஸ்த: ஸமலோஷ்டாச்ம காஞ்சன:*
*துல்யப்ரியாப்ரியோ தீரஸ்துல்ய நிந்தாத்ம ஸம்ஸ் துதி:*
*14:24*

*ஸமது:கஸுக*—துக்கத்திலும் சுகத்திலும் சமமாக இருந்து கொண்டு; *ஸ்வஸ்த:*—தன்னியே நிலையாக நின்று கொண்டு; *ஸமலோஷ்டாச்மகாஞ்சன*— மண்ணுருண்டை, (ரத்னக்) கற்கள் பவுன் எல்லாவற்றையும் ஒரே மாதிரி பாவித்து; *துல்யப்ரியாப்ரிய:*—பிடித்தது. பிடிக்காதது இரண்டுக்கும் ஒரே மாதிரி

இருந்து கொண்டு; தீர:—தைரியமாய் இருப்பவன்; துல்ய நிந்தாத்மஸ்துதி—இகழ்ந்தாலும் புகழ்ந்தாலும் ஒரே மாதிரி.

துக்கம் சுகம் இரண்டிலும் சமமாய் இருந்து கொண்டு யார் 'தன்' இடத்தையே நிற்கிறுனே, எவனுக்கு ஒரு மண் உருண்டை, மதிப்புள்ள ரத்தினக் கல், தங்கம்—எல்லாம் ஒரே மாதிரியாக இருக்கின்றனவோ; யாருக்கு பிரியமானதும் பிரிய மற்றதும் ஒரே விதமாக இருக்கின்றனவோ யார் துணிச்சலாக இகழும் போதும் புகழும் போதும் ஒரே மாதிரி இருக்கிறுனே.....

வாழ்க்கையில் பல ஏற்றங்கள் இறக்கங்கள், நல்லது கெட்டதுகள் விரும்பியது விரும்பாததுகள் நிகழ்கின்றன. இவற்றிற்கிடையேயும் பூரண ஞானி எப்போதும் ஒரு அமைதியையும் சமநிலையையும் உடையவனுக இருக்கிறுன். அவை இந்த சுலோகத்தில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. மூன்று குணங்களின் கொடுங்கோன்மையை விட்டு மீறிச் சென்ற ஒருவன் தனக்கே உரித்தான ஒரு தனி விசித்திர சாம்ராஜ்யத்தில் இருக்கிறுன். அங்கே சாத்வீகத்தின் இன்பக் கிளுகிளுப்போ, ராஜஸத்தின் இரைச்சல் கொண்ட ஆர்ப்பாட்டமோ, அல்லது தாமஸத்தின் அலுப்போ நுழையவே முடிவதில்லே. சற்றும் கலக்கமற்று ஆத்ம அமைதியில் அவன் தானே தானுக இருக்கிறுன். அவனுடைய மட்டமான சுவை வேட்கைக்கே உரிய வியர்வை சொட்டும் சிரமம், அசத்தும் பதற்றங்கள் இவற்றிலிருந்து வெகு தொலேவில், மட்டமான உள் தூண்டுதல்கள், சுயநலம் கொண்ட தீவிர தாகங்கள்—இவற்றிலிருந்து வெகு தூரத்தில் இருக்கிறுன்!

ஒரு சராசரி மனிதனுக்கு ஒரு பக்கமும் சாயாத இந்த சரிசமநிலே சாவு நிலேயாகவே தோன்றலாம். ஆம், ஒருவிதத்தில் அது அப்படியேதான். கீழ்த்தளத்தில் நிற்கும் 'அஹம்' என்கிற ஜீவன் ஒன்றை ஒட்டி ஒன்ருக ஏற்படும் வரம்புக்குட்பட்ட வாழ்வுக்கு ஏற்படும் முடிவுதான். சாவுதான் இந்த நிலே. பிரகிருதி தத்துவங்களால் கட்டப்பட்டு அவற்றிற்கேற்றவாறு நடந்து கொள்ளும் புருஷன் அல்லது அத்மா எப்போதும் பேயாட்டம் ஆடிக் கொண்டிருக்கும் மனத்தின் கொந்தளிப்பான மேல் பகுதியில் விழுந்து அலேயும் புல் போல அலேக்கப்படுகிறுன். அன்பு, வெறுப்பு, விருப்பம், விருப்பமின்மை ஆகியவற்றின் இடையருத புயல்களால் எப்போதும் அலேக்கப்பட்டு நிற்கும் இந்த ஜீவன் தான் தனி என்று எண்ணி ஒதுங்கி கலக்கங்களாலும் முடிவற்ற துயர்களாலும் உடைந்து அழிகிறுன்.

ஆசைகள், பற்றுக்கள் இவைகளுடைய குழப்பமான வெய்யில் வெளியிலிருந்து ஒதுங்கி உள்ளே ஆத்மாவின் நிழலில் அமர்வது தான் நமக்குள்ளே உள்ள தெய்வீக ஆற்றல்களே

இயங்க விடுவதாகும். கனவு காண்பவன் விழிப்பவனாக ஆவதற்காக இறக்கிறான். ஆத்மாவின் பிரமாதமான பெருமைகளை வெளியிடுவதற்காக தனித்த ஜீவ பாவம் முடிகிறது.

கனவிலிருந்து விழித்த பிறகு விழித்தவனுக்கும் முதல் இரவு அவன் பார்த்த கனவு உலகத்துக்கும் உறவு எவ்விதம் இருக்கும்? இதுதான் அர்ச்சுனன் கிருஷ்ணனிடம் கேட்கும் கேள்வி. மூன்று குணங்களையும் மீறிச் சென்ற ஞானி அஹங்கார, மமகாரத்தின் காரணமாக அவனை முன்னால் பிணைத்திருந்த தவறான கருத்துக்களை விட்டு விழித்து விட்டான். 'கடவுள் விழிப்பான அந்த நிலையில் அவனுக்கு கீழ் உலகின் அனுபவங்களுடன் அவனே மனதார ஈடுபடும் உறவு இருக்கவே முடியாது. அது மகிழ்ச்சியோ, வருத்தமோ, பிரியம், அப்ரியம், இகழ்ச்சி, புகழ்ச்சி எந்த அனுபவமாயிருந்தாலும் அவன் அசங்காத சமநிலையிலுள்ள பற்றற்ற சாக்ஷியாகத்தான் இருப் பான்.

ஸ்வஸ்த்த: தன்னிலேயே தானே தானாக இருந்து கொண்டு—மனதின் போக்குகளை தங்கள் இஷ்டத்துக்கு வளைத்துக் கொள்ளும் போது மூன்று குணங்களையும் தாண்டிய குணாதீதன் ஆத்மாவாகிவிடுகிறான். கனவின் எல்லைகளைத் தாண்டி விழித்தவன் 'விழித்தவன்' ஆகி விடுகிறதைப் போல. இதுவும் நடக்கிறது. ஆத்மாவாக மாறி இருப்பவன் அவனைச் சுற்றி இருக்கும் பொருள்களுடன் எந்தவித உறவு கொள்வான்? நடக்கும் நிகழ்ச்சிகள் விஷயத்தில் எப்படி நடந்து கொள்வான்? இந்தக் கேள்விகளுக்குத் தான் இங்கே விடை தரப்படுகிறது. அவனே பரமஞானதத்துவ மாக இருக்கிறான். எனவே உடல், மனம் முதலிய தளத்தில் இயங்கும் உலக அனுபவம் அவனைத் தொட முடியாது. பிரகிருதியின் தளத்திலிருந்து மிகவும் தொலைவில் உயரே இருக்கும் தனக்கே உரிய தனி ஒரு உலகில் இருக்கிறான்.

சுகத்திலும் துக்கத்திலும் ஒரே மாதிரி: இந்திரியங்கள் மூலம் உலகைச் சந்திப்பதும், அதனால் கிடைக்கும் அனுபவங்களை, இதே மாதிரி இதற்கு முன் கிடைத்த அனுபவங்களின் ஆதாரத்தைக் கொண்டு மதிப்பிடுவதும் அதற்கேற்றவாறு மகிழ்ச்சியோ துன்பமோ அடைவதும் நம்முடைய தனித்த ஆளுமையின் சில்லரை விஷமங்கள். இந்திரியத் தூண்டுதல்கள் பொறிவாயில் வழியாக உள்ளே வருகின்றன. அவற்றுக்கேற்றவாறு நாம் செயல்பட்டு அனுபவங்களைப் பெறுகிறோம். அந்த அனுபவங்கள் இரண்டு வகையாக இருக்கின்றன. ஒரு வகை இன்பம் எனவும் மற்றொரு வகை துன்பம் எனவும் சொல்லப்படுகிறது. ஒருவனுக்கு இஷ்டம் தருவதாக இருப்பது மற்றவனுக்குத் துன்பம் தருவதாக இருக்கலாம். உலகப் பொருள்களுக்குத்

தாமாகவே இன்பமோ துன்பமோ தரக்கூடிய ஆற்றல் இருந்தால் அவை கண்டிப்பாய் ஒரே மாதிரியான அனுபவங்களை எல்லோருக்கும் கொடுத்திருக்கும்; ஒரே மாதிரி 'எதிர்கொள்ளுதல்களை' ஏற்படுத்தியிருக்கும்.

சூரியன் இயற்கையில் சூடாக இருப்பது. அதனால் அதன் சூடு நமக்கெல்லாருக்கும் ஒரே மாதிரி பொதுவாக இருக்கிறது. ஆனால் உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் ஒரே மாதிரி நம் எல்லோரையும் எதிர்கொள்ளுவதில்லை. எனவே ஒரு பொருளின் பால் நாம் கொள்ளும் விருப்பும் வெறுப்பும் நம் மனமும் புத்தியும் நமக்குச் சொல்லித் தருவதைப் பொறுத்தே இருக்கிறது. அந்த மனதும் புத்தியும் நம்முடைய பழைய அனுபவங்களால் நிறம் பெற்றவை. இந்த மனம் புத்தி என்கிற நிறம் ஏறிய கண்ணாடியின் மூலம் உலகைப் பார்க்காதவர்கள் துன்பம் இன்பம் இரண்டின் நிலையிலும் ஒரே மாதிரித்தான் இருப்பார்கள்.

மண் கட்டி, (ரத்தினக்) கல், பொன்—எல்லாவற்றையும் ஒரே மாதிரிக் கருதி—உயிர் வாழும் பிராணிகளில் அநேகமாக எல்லாவற்றிடத்திலும் பொருளை உடைமையாக்கி வைத்திருப்பதில் ஒரு ருசி இருப்பதைப் பார்க்கிறோம். மக்கள் ரத்தினக் கல்லையும் பொன்னையும் சம்பாதித்துச் சேர்த்து வைத்துக் கொள்ள விரும்புவார்கள். ஆனால் மண் கட்டியை எடுத்து எறிந்து விடவே விரும்புவார்கள். சில பொருள்கள் நமக்கு மதிப்புள்ளவைகளாகவும், சில பொருள்கள் கொஞ்சம் கூட மதிப்பற்றவையாகவும் இருக்கின்றன. ஆனால் பூரண விழிப்புப் பெற்ற ஞானிக்கு எல்லா உடைமைகளும் ஒரே மாதிரித்தான். அவன் மதிப்பீட்டில் எந்தப் பொருளுக்குமே உண்மையான மதிப்பு கிடையாது.

குழந்தைகள் மயில் இறகு, சிப்பிகள், கோலிக்குண்டுகள் உடைந்த கண்ணாடி வளையல்கள், பழைய தபால் தலைகள், கூழாங் கற்கள் இவற்றை எல்லாம் சாலையின் ஓரங்களிலிருந்தும், குப்பைக் கூடைகளிலிருந்தும் பொறுக்கி எடுத்துக் கொண்டு மிகுந்த உரிமை கொண்டாடி அவற்றை உடைமை (சொத்து)ப் போல காப்பாற்றுகிறார்கள். ஆனால் அவர்கள் வளர்ந்தவுடன், சற்றுக்கூட மனத்தாங்கல் இல்லாமல் அவற்றை எறிந்துவிடுகிறார்கள். அவர்களுக்குத் தம்பி தங்கைகள் போன்ற அவர்களை விடச் சிறிய குழந்தைகள் அவற்றை வாரிசுச் சொத்துப்போல் மிகுந்த மகிழ்ச்சியுடனும் நன்றியறிவுடனும் எடுத்துக் கொள்கிறார்கள். அதேபோல, ஆசைகளையும் உடைமைப் பற்றுக்களையும் கொண்டு அகத்தை மையமாக்கி வாழுகிறவர்கள் பொன்னையும் ரத்தினத்தையும் மதிப்புடையனவாகக் கருதலாம். ஆனால் விழிப்படைந்த ஆத்மஞானி, தன்னுடைய அண்டமளாவிய உணர்வின் காரணமாக, சற்றுத் தாழ்ந்த மனதுடையவர்களுக்கு பிரமாத

மாகத் தோன்றும் வரம்புக்குட்பட்ட இந்தப் பொருள்களிடம் ஒரு கிளர்ச்சியையும் காண்பதில்லை.

பிரியமானவை அப்பிரியமானவை இரண்டிடமும் ஒரே மாதிரி: மற்றவருடன் நாம் உறவு வைத்துக் கொள்ளும்போது அவர் நமக்கு ஒத்துவரும் சுபாவம் உள்ளவராக இருந்தால் அவரை நேசிக்கிறோம். அவர் பிரியமானவராக ஆகிவிடுகிறார். ஆனால் ஒத்துவராத சுபாவம் உள்ளவராக இருந்தாலோ, அவர் பிடித்தம் இல்லாதவராக ஆகிவிடுகிறார். அன்பு, வெறுப்பு, பிடித்தம், பிடித்தமின்மை எல்லாம் நாம் பொருள்கள், மனிதர்கள், நிகழ்ச்சிகள் இவற்றின் ஒத்துவருகிற அல்லது ஒத்துவராத தன்மைகளுக்குக் கொடுக்கிற அர்த்தம்தான். இவ்வித எதிர்கோள்கள் நம்முடைய மனத்தளத்தில் இருப்பவையே. ஆற்றங்கரையில் நல்ல அழுத்தமான கோட் போட்டுக் கொண்டு நிற்பவனுக்குக் குளிர் உணர்ச்சி ஏற்படாது. ஆனால் நீச்சல் உடையில் ஆற்றுக்குள் மூழ்குகிறானே அவனுக்குக் குளிர் உறைக்கும். ஏனென்றால் குளுமை அவன் தோலைத் தொடுகிறது. அவன் அதன் அசௌகரியத்தை உணருகிறான். கரையிலிருப்பவனோ நல்ல முறையில் உடை அணிந்திருக்கிறான். அவனுக்கும் குளிர் உறைக்காது அவன் சௌகரியமாக உணர்கிறான்.

சராசரி மனிதன் தன்னுடைய மனது—புத்தியுடன் தன்னைக் கட்டிக் கொண்டு அந்தப் பிணைப்புணர்வில் முழுகி இருக்கிறான். அதனால் அவன் உலகைப் பிடித்தது பிடிக்காதது என்று பகுத்துப் பார்க்கிறான். ஆனால் ஸ்திதப்ரக்ஞன் மனதை சமநிலையில் வைத்திருக்கிறான். எனவே பிரியமானதாயிருந்தாலும் சரி பிரியமற்றதாக இருந்தாலும் சரி எதுவும் அவன் மனதைத் தாக்கும் போது அவன் நடுநிலை தவறுவதில்லை.

இகழ்ச்சியிலும் புகழ்ச்சியிலும் ஒரே விதமாக: பூரணத்வம் பெற்ற மனிதன், என்றாலே இகழ்ச்சி, புகழ்ச்சி ஒன்றாலுமே பாதிக்கப்படாதவன்தான். அவன் இரண்டையும் லட்சியம் செய்வதில்லை. கனவு அனுபவம் 'விழித்து விட்டவனு'க்கு இன்பமோ துன்பமோ தருவதில்லை. கனவு உலகத்தில் அவன் எல்லோராலும் தூ, தூ என்று துரத்தப்பட்டு இகழப்பட்ட பிச்சைக்காரனாக இருந்திருக்கலாம். அல்லது பெரிய சாம்ராஜ்யத்தை ஆண்டு கொண்டிருக்கும் பேரரசனாகப் பாராட்டப்பட்டிருக்கலாம். ஆனால் விழித்துவிட்ட பிறகு அரசனாக இருந்து பெற்ற புகழுரைகள் ஆகட்டும் அல்லது பிச்சைக்காரனாக இருந்து பெற்ற இகழுரைகளாகட்டும் ஒன்றும் அவன் உள்ளத்தில் எந்த உணர்ச்சியையும் பதித்து வைத்திருக்கப்போவதில்லை. அதே மாதிரி பிரகிருதியுடன் பிணைப்பாகிற கனவிலிருந்து விழித்த ஆத்ம ஞானி உலகம் தரும் புகழ் இகழ் இரண்டையுமே ஆய்ந்து பார்த்து இரண்டுமே சாரமற்றவை. பரிகசிக்கத்

தக்கவை என்று கண்டு அவற்றைக் கடைசியில் அலட்சியம் செய்து விடுகிறுன்.

மேலே வந்த நான்கு மிக அழகிய சொற்றெடர்கள் வழி வியாச பகவான் சாதாரண மனிதன் வாழ்க்கையில் எந்த நிலையில் சுகம் அனுபவிக்கிறுன் என்று புரியும்படி அந்த சில நிலைகளைச் சுட்டியிருக்கிறுர். இன்பம், துன்பம், நல்ல, கெட்ட உடைமைகள், பிடித்தமான, பிடிக்காத அனுபவங்கள், புகழும் இகழும் தரும். சுக துக்க அனுபவங்கள்—இவைதான் நம்மை பதற்றங்கள், கவலைகள் ஆகியவை கொண்ட வாழ்க்கைக்குள் தூக்கிப் போகும் நிலைகளாகும்.

மேலும்,

மாநுபமானயோஸ்துல்யஸ்துல்யோ மித்ராரிபக்ஷயோ:
ஸர்வாரம்பபரித்யாகீ குணுதீத: ஸ உச்யதே 14:25

மாநுபமானயோ:—பெருமையிலும் அவமானத்திலும்; துல்ய—ஒரே மாதிரி; துல்ய:—ஒரே மாதிரி; மித்ர அரிபக்ஷயோ:—நண்பன் பக்கத்திலும் எதிரி பக்கத்திலும்; ஸர்வாரம்ப பரித்யாகி—தானுகச் செய்யும் எல்லா முயற்சிகளையும் விட்டு விட்டவன்; குணுதீத:—குணுதீதனுக (குணங்களைத் தாண்டி அப்பால் போனவனுக); ஸ:—அவன்; உச்யதே—சொல்லப்படுகிறுன்.

(யார்) பெருமை பெறும்போதும் அவமானம் பெறும் போதும் ஒரே மாதிரியாக இருக்கும்; நண்பனிடத்தும் எதிரியிடத்தும் ஒரே விதமாகப் பழகி, தானுக எந்த முயற்சிகளையும் தொடங்காமல் இருக்கும் அவன் குணுதீதன் என்று சொல்லப் படுகிறுன்.

சென்ற சுலோகத்தில் பூரணத்வம் பெற்ற ஞானியின் அழகு விவரம் அதிகம் வரையப்படாத ஒரு சித்திரம் தரப்பட்டிருந்தது. இதில் அந்தச் சித்திரத்தை நமக்கு நெருங்கிப் பார்த்துக் கவனிக்க உதவும் வகையில் அதிக ஒளியுள்ளதாக ஆக்க மேலும் சில கோடுகள் வரையப்பட்டு ஓரங்களுக்கு எல்லாம் ''நிழல்'' பூசப்பட்டிருக்கிறது.

பெருமை கிடைக்கும் போதும் அவமானம் செய்யப் படும்போதும் ஒரே நிலையில்: மானம் அவமானம் இரண்டையும் சமமாகக் கருதும் சமநிலை பூர்ணத்வம் பெற்றதற்கு ஒரு நல்ல அடையாளமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வாழ்ந்தே அனுபவிக்கிற தெய்வீக நிலையில் நன்கு ஊன்றி நின்றுகொண்டு, திர்க்கதரிசனம் கொண்ட ஞானி சாதாரண உலக வாழ்க்கைக்கோ அது தரும் தொல்லைகளுக்கோ அஞ்சுவதில்லை. ஏன்

என்ருல் அவன் அவற்றைப் பார்க்கும் கோணமே தனி. அகம் பாவம் கொண்டு உலக வாழ்க்கையை மதிக்கும் போக்கு மரி யாதையை பெரிதாக மதிக்கவும், அவமரியாதையை வெறுக்கவும் முனைகிறது. சாதாரணமாகவே உலகில் மற்றவர்கள் அவ மரியாதை என்று ஒதுக்கும் விஷயங்களை மதித்து ஏற்றுக் கொள்ளும் உயிர்த் தியாகிகளைப் பார்க்கிருேம். அறிவு வளராத தலைமுறை அவர்கள் மேல் சுமத்தும் பழியையும் அவமதிப்புச் சுமையையும் சுமந்து கொண்டே அந்தத் தன்னுடைய தலை முறையினருக்கு அவர்கள் மிகவும் திறமையுடனும் சுறுசுறுப்புட னும் சேவை செய்கிருர்கள். 'ஆர்க்கிமிடீஸ்' திரவ பதார்த்தம் பற்றிய ஒரு உண்மையைக் கண்ட அன்று 'யுரேகா, யுரேகா,' என்று கத்திக் கொண்டே ஈர உடலில் துணி இல்லாமல் நிர் வாணமாக தண்ணீர்த் தொட்டியிலிருந்து எழுந்து தெருக்களில் ஓடினுன். அந்தக் கண்டுபிடிப்பு நடந்தஅன்று இல்லாமல் மற்ற நாட்களாயிருந்தால் அதை அவன் மிகவும் அவமானகரமான செயலாகவே கருதியிருப்பான். மானம் அவமானம் என்பத தெல்லாம் நேரத்துக்கு நேரம், கணத்துக்குக் கணம் மாறும் இயல்புள்ள புத்தியின் கணிப்பே. அகம்பாவம், வீண் டம்பம், முதலியவற்றின் தளத்தைவிட்டு மேலே சென்று விட்டவனுக்கு இரண்டும் சமம்தான். அவனுக்கு முள் நிறைந்த கிரீடமும் ரத்தினங்கள் பதித்த கிரீடமும் ஒன்றே.

நண்பனுக்கும் எதிரிக்கும் ஒரே மாதிரி: குணங்களைத் தாண்டி ஞான மார்க்கத்தில் நடப்பவனுக்கு உலகில் எதிரி கிடை யாது. அவன் உலகியல் நட்புக்கு தனி மதிப்பும் கொடுப்பதில்லை. எனக்கு என் வலது கை ஒரு போதும் எதிரியாக இருப்பதில்லை. அதே மாதிரி அது ஒரு நண்பனுமல்ல. அது நானே! அதே நான். என்னை விட்டுத் தனியாக உள்ள ஒன்றுதான் எதிரி என்ருே நண்பன் என்ருே ஆக முடியும். நான் ஆத்மாவாக எல்லையற்று எங்கும் பரவி நிற்கும் என்னுடைய உண்மை சொரூபத்தை உணர்ந்துவிட்ட பிறகு புற உலகுடன் தனி உறவு என்ன இருக்கிறது? நான் ''அவைகளும் நானேதான்'' என்கிற உணர் வில் வாழ்கிறேன்!

எந்தக் கடு முயற்சியையும் தொடங்காமல்: இறை— உணர்வில் திளைத்து நிற்கும் சாந்த புருஷனுக்கு இனி தனித்த ''அஹம்'' என்பதும் கிடையாது. அதைச் சுற்றி எழும் ஆசை களும் கிடையாது. அவைதான் உலகில் துன்பங்கள். இங்கே முயற்சி என்னும்போது சம்பாதிக்கவும், உடைமையாக்கவும், சேர்க்கவும் குவிக்கவும் பிறரிடமிருந்து பிடுங்கித் தன் உரிமையை ஸ்தாபித்துக் கொள்ளவும் செய்கிற ஆசையால் தூண்டப்பட்ட செயல்கள் குறிக்கப்படுகின்றன. இந்தத் தனித்த 'அஹம்' என்ற பாவனை இருக்கும் வரைதான் இம்மாதிரி ஆசைகள் எழும். பரம்

பொருள் தரிசனத்தால் இந்தக் குறுகிய, தனித்த 'அஹம்' என்கிற பாவனை காற்றுகி விட்டால் அதனால் தூண்டப்பட்ட செயல்களும் நின்று விடுகின்றன. அதற்குப் பிறகு அவன் இறை ஊக்கம் பெற்றவனாகவே இந்த உலகில் தெய்வ மனிதன்போல் வாழ்க்கை நடத்துகிறான். அவன் முக்குணங்களுக்கும் அப்பால் சென்றவனாக (குணாதீதனாக)ச் சொல்லப்படுகிறான். முன்னால் உள்ள இந்த (23, 24 & 25) மூன்று சுலோகங்களும் குணாதீதனுடைய முழுச் சித்திரத்தையும் வரைந்து தருகின்றன. இம்மூன்றும் அர்ஜுனன் கேட்ட இரண்டாவது கேள்விக்கு விடை தருகின்றன.

ஸ்ரீ சங்கராச்சாரியார் அவர்கள் இந்த மூன்று சுலோகங்களிலும் மோக்ஷம் விரும்பும் சந்யாஸிக்கென வகுக்கப்பட்ட நடத்தை விதி கூறப்பட்டிருக்கிறது என்று கருதுகிறார்கள். சுருக்கமாக, ஹிந்து பண்பாட்டில் வாழ வேண்டும் என்கிற ஒவ்வொரு சாதகனும் இந்தக் குணங்களைப் பயில வேண்டும். அவன் உள் விடுதலையைப் பெற்றவுடன் இவை அவனுடைய சுபாவத்தின் தனிச் சிறப்புக்களாக ஆகிவிடும். அவை குணாதீதனுடைய முக்கிய அடையாளங்களைக் காட்டித் தருகின்றன.

அடுத்து, ஒருவன் குணங்களை எப்படித் தாண்ட முடியும்?' என்கிற கேள்விக்கு பகவான் விடை சொல்லத் தொடங்குகிறார்:

மாம் ச யோவ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே
ஸ குணான் ஸமதீத்யைதான் ப்ரஹ்ம பூயாய கல்பதே
14:26

மாம் ச—என்னையும்; ய:—எவன்; அவ்யபிசாரேண—மாற்று ஆசையில்லாத; பக்தியோகேன—பக்திச் சேர்க்கையுடன்; ஸேவதே—சேவிக்கிறானோ (வழிபடுகிறானோ); ஸ—அவன்; குணான்—குணங்களை; ஸமதித்ய—தாண்டி; ஏதான்—இவைகளை; ப்ரஹ்மபூயாய—பிரமமாவதற்கு; கல்பதே—தகுதி பெறுகிறான்.

என்னிடம் மாறாத பக்தியுடன் எவன் என்னை சேவிக்கிறானோ, அவன் இந்தக் குணங்களை முழுமையாகத் தாண்டி பிரம்மமாவதற்குத் தகுதியுள்ளவனாகிறான்.

கீதை சமயத்தைப் பற்றிய செயல்பாட்டிற்கு உதவக்கூடிய கருத்துக்களைக் கொண்ட நூல். அது வெறும் கற்பனைப் பேச்சுக்களுடன் (வாதங்களுடன்) ஒருபோதும் திருப்தியடைவதில்லை. அதனால்தான் ஒவ்வொரு கருத்துரைக்குப் பின்னும் குறைபாடுள்ளவன் நிறைவை அடைவதற்கு உதவும் ஒரு பயிற்சி வழியையும் அது திட்டமாகக் கூறுகிறது.

மாறாத பக்தியுடன் எனக்கு எவன் சேவை செய்கி

ருனே: கடவுளிடம் வைக்கும் அன்புக்கு 'பக்தி' என்று பெயர். அன்பு இருக்கும் இடத்தில் நம் மனது தானகவே சென்று ஆழ்ந்து மகிழ்கிறது. நம்முடைய எண்ணங்கள்தான் நம் சுபாவத்தை ஊட்டி வளர்க்கின்றன. எனவே எண்ணங்கள் போலவே தான் மனமும் அமையும். ஆத்மாவின் அகண்டத் தன்மையைப் பற்றி சதா சிந்தித்திருத்தலே இறுதியில் ஆத்மாவாகி, நம்முடைய குறைபாடும் வரம்பும் உடையதும் அழிவதுமான 'அஹம்' கருத்தை ஒழிப்பதாகும்.

பகவான் என்கிற பாவனையை முழு உண்மையுள்ளத்துடனும் தீவிரமாகவும் எப்போதும் கொண்டிருப்பது என்பது இயலாத ஒன்று. இன்று நாம் இருக்கும் நிலையில் நம்முடைய மனதை தியானத்திலேயே நிலைக்க வைப்பது நம்மால் முடியாது. ஸ்ரீ கிருஷ்ணனுக்கு நம்முடைய பலவீனம் தெரியும். அதனல் சேவைகள் செய்து பகவானை அதிக நேரம் நினைவில் கொள்ளலாம் என்று நடைமுறைக்கு உதவும் வழியைச் சொல்லிக் கொடுக்கிறர். எந்த வேலையாயிருந்தாலும் பக்தியுடன் சேவை மனப்பான்மையுடன் செய்தால் அதுவே வழிபாடாகும்* என்று ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்தே கீதை பகவானிடம் அன்பு கொண்டிருப்பதுடன் திருப்தியடையவில்லை என்பது தெளிவாகிறது. மாருக கீதாச்சாரியன் தன்னுடைய பக்தர்கள் சமயத்தை பூசை அறைகளிலிருந்தும் கோவில்களிலிருந்தும் வெளியே அன்ருட நடவடிக்கைகளிலும் சுற்றியிருக்கும் உலகத்துடன் அவர்கள் ஏற்படுத்திக்கொள்ளும் எல்லா உறவுகளிலும் பயன்படுத்த வேண்டும் என்று எதிர்பார்க்கிறர்.

இடையருத கடவுள் உணர்வும், சிரத்தையுடன் செய்யப்படும் தொண்டும் மனதின் அலைவுகளைத் தடுத்து தியானத்தின் மூலம் அந்தக் கரணங்கள் உயர எழும்பிப் பறப்பதற்கு உதவும். தாமஸமும் ராஜஸமும் குறைந்து கொண்டே வரும். சாதகனுடைய சூட்சும சரீரத்தில் சாத்வீகம் அதிகரிக்கும். அப்படிப்பட்ட சாதகன் பிரம்மமாவதற்குத் தக்கவனுகிறுன். தன் உள்ளே சாத்வீகத் தன்மையை அதிகம் அடைந்தவன் தியானத்தின்போது தன்னுள் அதிக ஆற்றல் ஊறி வருவதையும் சமநிலை உறுதிபெற்று வருவதையும் காண்பான். பிறகு ஆத்ம உணர்வில் மீண்டும் விழித்தெழுவது என்ற சித்தி வெகு தூரத்தில் இருக்காது. சீக்கிரமே கிட்டிவிடும்.

இங்கே பிரம்மம் ஆவதற்கு என்றே சொல்லியிருக்கிறது. பிரம்மத்தை அடைவது என்பது பிரம்மமாவதேதான். விழித்த

---

* கீதை 13ம் அத்தியாயம்: 8வது சுலோகம்

நிலையை அடைந்து விட்டோம் என்றால் விழித்தவனாகவே ஆகி விட்டோம் என்றுதான் பொருள்.

ஞானி எப்படி பிரம்மமாவான்? கவனியுங்கள்:

ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்ட்டாஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச
சாச்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச 14:27

ப்ரஹ்மண:—பிரம்மத்துடைய; ஹி—உண்மையிலேயே ப்ரதிஷ்ட்டா—இருப்பிடம்; அஹம்—நான்; அம்ருதஸ்யா—அழியாததனுடைய; அவ்யயஸ்ய—தேயாத (மாறாத)தனுடைய; ச—மேலும்; சாச்வதஸ்ய—சாசுவதத்துடைய; ச—மேலும்; தர்மஸ்ய—தர்மத்துடைய; ஸுகஸ்ய—தெய்வீக இன்பத்துடைய; ஏகாந்திகஸ்ய—கலவாத; ச—மேலும்.

ஏன் என்றால் நான் அழியாத, தேயாத பிரம்மத்துடையவும் சாசுவத தர்மத்துடையவும் ஒன்றும் கலவாத தூய தெய்வீக சுகத்துடையவும் இருப்பிடம்.

பக்தி யோகத்தையும் அதன் இறுதி இலக்கையும் பற்றி விவரிக்கும்போது கீதை ஏற்கனவே, ‘அதற்குப் பிறகு நீ சந்தேகமின்றி என்னிடமே வசிப்பாய்,’ என்று கண்ணன் சொல்வதாகக் குறித்திருக்கிறது* பக்தன் தன் அன்பின் உள் ஊக்கம் காரணமாக தன்னைத் தனி ஒரு ஜீவன் என்பதை மறந்து தியானப் பொருளான பகவானுடன் ஒன்றாகி விடுவான். சென்ற (26வது) சுலோகத்தில் ‘மாறாத பக்தியுடன் எனக்குச் சேவை செய்பவன் பிரகிருதி உறைகளுடன் தான் கொண்டிருக்கும் ஒன்றிப்பை மீறி விடுவான்’ என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஒன்றிப்பின் காரணமாகத்தான் அவன் பொய்யான ஒரு தனி ‘அஹம்’ பாவத்தை ஏற்படுத்திக்கொண்டு விடுகிறான். இந்த அஹம் சாகச் சாக தெய்வ அனுபவம் நிறைந்து வரும் விழிப்பு நிலையிலிருந்து ஓய்வு பெறுவது தூக்கத்தின் அரங்கத்தில் நுழைவதாகும். தூக்கத்திற்குள் ஆழ ஆழ ஒருவன் விழிப்புப் பிரதேசத்திலிருந்து மேலும் மேலும் ஒதுங்கிச் செல்கிறான். அதே அளவில் அவன் தூக்கத்தின் அமைதி இல்லத்துள் நுழைந்து விடுவான்.

உணர்வின் ஒரு நிலை அல்லது தளத்திலிருந்து பூராவாக நகர்ந்து விட்டான் ஒருவன் என்றால் அவன் மற்றொரு தளத்தைச் சேர்ந்து விட்டான். விழித்தவன் தான் முழுமையாகக் கனவு காண்பவன் ஆகிறான். கனவு காண்பவனுக்கு தன் கனவை விழிக்கிற போதோ அல்லது தூக்க உலகில் புகுந்து விட்ட போதோ முடித்துக்கொண்டு விடுகிறான். தெளிவாகப் பிரிந்திருக்கும் இந்த உலகங்களின் (நிலைகளின் அல்லது தளங்களின்) இடையே எல்லைகளின் ஊடே ஒரு அனுபவ மாற்றமும் நிகழ முடியாது.

* கீதை 3ம் அத்தியாயம்

இந்த அத்யாயத்தின் இந்தக் கடைசி சுலோகத்தில் பகவான் எந்த நிலையை எய்தினல் பக்தன் பிரம்மமாக ஆகிவிடுவானே அந்த இறை உணர்வு நிலையின் தன்மையைச் சுட்டிக் காட்டுகிருர்.

ஏன் என்ருல் நான் பிரம்மத்தின் உறைவிடம்: சாதகன் உள்ளத்தில் ஒளி தந்து ஒளிர்வது சுத்தப் பேருணர்வுத் தத்துவம் (ஆத்மா). அதுவே எங்கும் உள்ளது (பரமாத்மா). அது அறியாதது, குறையாதது, என்றும் இருப்பது. ஆனந்தம் அது. உள்ளே ஆத்ம சாக்ஷாத்காரம் செய்தல் அந்த பரமாத்மாவையே அடைவதாகும். பணியாரத்தில் கொஞ்சம் சுவைத்தலே எல்லாப் பணியாரங்களையும் எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களுக்கும் சுவைத்ததாகும். ஏன் என்ருல் சுவையின் உணர்வு அல்லது அறிவு எல்லாம் ஒன்றேயாம். அனுபூதி நிலத்தில் ஒரு சாதகன் 'ஆத்மாவை'ப் பெற்றுவிட்டானுனல் அவன் அப்போதே அதன் ஸர்வவ்யாபித் தனத்தையும் அனுபூதியாகப் பெற்றுவிடுகிருன். பானை என்று இருக்கும் அதனுள் இருக்கும் வெளி பானை வெளி; அது சுற்றியுள்ள வெளிக்குத் தனித்துக் காணப்படுகிறது. அதேபோல உயிர்மையமான ஆத்மா உடல், மனம், புத்தி இவற்றுடன் ஒன்றியிருப்பதை உடைத்தெறிந்துவிட்டால், அதாவது சுருக்கமாகச் சொன்னல் ஆத்மாவை மறைக்கும் 'அஹம்' (நான்) என்கிற தனி பாவனை செத்து விட்டால்—எல்லையற்ற பரம்பொருளுணர்வு நித்தியதர்மம் தவருத சுத்த ஆனந்தம் இவற்றின் வெள்ளத்தால் உள்ளத்தை நிரப்ப எழுந்துவிடுகிறது.

ஸ்ரீ சங்கரர் பகுத்தறிவுக்கு மிகவும் உகந்த முறையில் நல்லபடியாக ஆய்ந்து இந்த சுலோகத்துக்கு மூன்று விளக்கங்கள் கொடுத்திருக்கிருர்கள். ஒன்றை மற்ரென்று கண்டிக்கவில்லை. ஆனல் அவை பொருள் பொதிந்த இந்த சுலோகத்தின் தத்துவப் பொருளை மேலும் மேலும் விளக்குகின்றன. ஸ்ரீ சங்கராச்சாரியார் இவ்விதம் சொல்கிருர்: பிரம்மம் அழிவுக்கு உட்படாத குறைவு தேய்வுகள் இல்லாத பரமாத்மன். அவர் பிரத்யகாத்மாவாக என்னுள் இருக்கிருர். அதுவே ஆத்மாவான படியால் ஒருவன் சரியான ஞானம் பெறும்போது தன்னுள் இருக்கும் ஆத்மாவை எங்கும் இருக்கிற பரமாத்மாவாக உணர்கிருன்:

ஸ்ரீ சங்கரர் இந்த சுலோகத்துக்கு இந்த மாற்று அர்த்தத்தைச் சொல்கிருர்—பிரம்மத்தில் இருக்கும் மாயையின் சக்தி மூலம் ஈசுவரனுக இருந்து பரமன் (பிரம்மம்) தன் பக்தர்களுக்கு அருள்பாலிக்கிருன். நான்தான் அவதாரம் எடுத்த அந்த சக்தி. எனவே நான் பிரம்மம்.

மீண்டும் வேறு ஒரு விதமாக விளக்கம் தரும்போது ஸ்ரீ

சங்கரர் பின்வருமாறு சொல்கிறார். அந்த விளக்கம், நாம் முன்னமே சொன்னது போல, முதல் இரண்டு அர்த்தங்களுக்கு எதிர்மாறானது அல்ல. ஆனால் உண்மையில் அது இந்த சுலோகத்துக்கும் அதில் உள்ள பொருளுக்கும் மேலும் விவரங்கள் தந்து அதை அதிக நிறம் பூசி அழகுறச் செய்கிறது. இங்கே பிரம்மம் என்பது கட்டுப்பட்ட பிரம்மமாகும். அவனைத் தான் பிரம்மம் என்ற சொல்லால் குறிக்க முடியும்... இப்படி கட்டுப்பட்டு குணம் குறிகள் பெற்ற பிரம்மத்தைத்தான் இந்த வரம்புகளின் ஆற்றல் கொண்ட புத்தி உணர முடியும். பிரகிருதி யின் பௌதீகப் பொருளிலிருந்து வேறுபட்டதாக மொழிகளால் பேச முடியும். எனவே இங்கே பிரம்மம் என்பது சடப்பொருள் களிலிருந்து தனியாக அறியக்கூடிய புருஷன்தான். இவ்விதம் வரம்புக்குட்பட்ட புத்தியால் அறிந்து கொள்ளக்கூடிய சடப் பொருளும் புருஷனும் நம் அறிவுக்குள் வரக் கூடிய அழிவுக்கு உள்ளாகும் பொருள்களே. அந்த இரண்டையும் பேருணர்வுத் தத்துவமான பரம் பொருள் அறிய முடியும். எனவே ''வரம்புக்குட்படாத குணம் குறிகள் இல்லாத, மொழிகளால் விவரிக்க முடியாத நான் வரம்புக்குட்பட்ட பிரம்மத்தின் உறைவிடமாகிறேன். அதுவும் அழிவுக்கு உட்படாதது தேய்வு, குறைவு இல்லாதது.

ஒளிபெறும் பொருள் ஒளிரும் பொருளிலிருந்து எப்போதும் தனியானதுதான். அறிபவன் 'எழுவாய்'. அறியப்படுவது (''செயப்படு பொருள்'') அறியப்படும் பொருள். எல்லையற்ற பரம்பொருளான கிருஷ்ணர் அந்த நித்திய அறிவாக நிற்கிறார். எனவே அவர் எல்லா அறியப்படு பொருள்களுக்கும் உறைவிட மாகிறார். அவற்றுக்குள் எல்லாச் சடப்பிரகிருதியாலான உறைகளுக்கும் உயிர்தந்து அவற்றை அறிவு பெற்றது போலாக்கி வேலை செய்வது போன்ற பிரமையையும் ஏற்படுத்துகிற ஆத் மாவைப் பற்றிய பாவனையும் அடங்கும். இந்த 'ஸ உபாதிக' (குணம் குறி ஏற்ற) பிரம்மம் அதை அறிகிற நிருபாதிக பிரம்ம மாகிற பேருணர்வுத் தத்துவத்தின் ஆதாரத்தில் தான் நிலைபெறு கிறது. வருகின்ற அத்தியாயத்தில் (16, 17, 18வது சுலோகங் களில்) அதுவே அநாத்மன், ஜீவாத்மன் பரமாத்மன் என்று மூன்று ஆத்மன்களாக விளக்கப்படும்.

ஓம் தத்ஸதிதி ஸ்ரீ மத் பகவத் கீ தாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன
ஸம்வாதே குணத்ரய விபாக யோகோ நாம
சதுர்த சோத்யாய:

இவ்விதம் ஸ்ரீமத் பகவத் கீதையாகிற உப நிஷதங்களில் பிரம வித்தையில், யோக சாஸ்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ணன்—

அர்ஜுனன் இருவருக்கும் இடையே நடந்த பேச்சு வார்த்தையில் குணத்ரய விபாக யோகம் என்று பெயர் கொண்ட பதினுன் காவது அத்யாயம் முடிவுறுகிறது.

இந்த சங்கல்ப வாக்கியத்தில் விஸ்தாரமான விளக்கம் தெரிந்துகொள்ள முதல் இரண்டாம் அத்தியாயத்தின் முடிவில் தரப்பட்டுள்ள விளக்கங்களைப் பார்த்துக் கொள்ளவும்.

# புருஷோத்தம யோகம்

**15**

## முன்னுரை

கடைசி ஆறு அத்தியாயங்களைக் கொண்ட கீதையின் இந்தப் பகுதியில், கீதை முழுவதிலும் இருப்பது போலவே ஒரு வார்த்தை, முறையாக கருத்துக்களை அடுத்தடுத்து தர்க்க ரீதியாக வளர்த்துச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது பலவாகத் தோன்றும் குணத்தையுடைய இந்த அழியும் உலகம் அழியாப் பொருளான எல்லையற்ற பரம்பொருளின் மேல் ஏற்றிப் பார்க்கப் படும் ஒரு கற்பனையின் உருவ விளைவே; மேலும் முடிவேயில் லாமல் நமக்கு ஏற்படும் துயரம் தரும் அனுபவங்கள் நாம் உண்மையைக் காண்பதில் கொள்ளும் தவறான பிரமைகள் ஏற் படுத்துபவையே என்பதுதான் அந்த வாதம் (கருத்து).

பதின்மூன்றும் அத்தியாயத்தில் பிரகிருதியாலான உலகமும் ஆன்ம நிலமும் மிக அழகாக வருணிக்கப்பட்டு நம்முடைய புத்திக்குத் தெளிவாக்கப்பட்டன. க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் (நிலம், நிலத்தை அறிபவன், பிரகிருதி, புருஷன்) என்ற இரண்டு அம்சங்களும் தெளிவாக சித்தரிக்கப்பட்டிருந்தன. மேலும் அதில் க்ஷேத்ரக்ஞனிலிருந்து க்ஷேத்திரத்தைக் கழித்து விட்டால்

மிஞ்சுவது சுத்த தன்மயமான பேருணர்வுத் தத்துவம், அதுவே எல்லையற்றதும் சாசுவதமானதுமான பரம்பொருள் என்றும் எடுத்துரைக்கப்பட்டது.

பதின்மூன்றும் அத்தியாயம் முடிவு வரை நாம் பெற்ற முழுக் கருத்து இதுவாகும். பிரகிருதியின் உலகம்; அதாவது பிரபஞ்சம் முழுவதும் ஒரே சீரான அதாவது ஒரே தன்மை கொண்ட பொருள்; மேலும் பரமாத்மா எப்போதும் அத்வயப் பொருள் (இரண்டற்றது), என்றும் இருக்கும் அனந்த வஸ்து. பிரகிருதிப் பொருளின் கூட்டு உருவை ஆத்மா சிலிர வைக்கும் போது, உலகத்தை அமைத்துத் தரும் இருப்புக் கொண்ட பொருள்களும் உயிர்களும் உரு எடுக்கின்றன. இதைத் தெரிந்து கொண்டவுடன் சிந்திக்கும் ஆற்றல் படைத்த எந்த சீடன் உள்ளத்திலும் ஒரு வியப்புத் தோன்றுவது இயற்கை. அதாவது—அதே ஆத்மா ஒரே தரத்ததான பிரகிருதிப் பொருள் வழியே செயல்படும்போது எப்படி இவ்வகையில் எண்ணற்ற மாற்றங்கள் கொண்டு தோன்றுகிறது?

ஒவ்வொரு பொருளிலும் இருக்கும் க்ஷேத்திரப் பகுதியின் அமைப்பு, தரம், உள்ளடங்கிய பொருள், நடத்தை ஆகிய வற்றின் காரணமாக ஒவ்வொரு பொருளுக்கும் தனிச் சிறப்பு இருக்கிறது. அந்த விதத்தில் ஒரு பொருள் மற்ற பொருளிட மிருந்து மாறுபடுகிறது. இந்த மாறுபாடுகள் அதாவது க்ஷேத்திரத் தின் தனிக் குணங்கள் காரணமாகவே பொருள்களும் உயிர் களும் மாறுபாடு கொண்டு விளங்குகின்றன. இந்தக் கருத்தை நன்ருக விளக்கவே பதிஞன்காம் அத்தியாயம் மூன்று குணங்களேயும் அவற்றின் செயல்பாடுகளேயும் விஸ்தாரமாக விசாரித்தது. நேர்மையான புத்தியில் நியாயமாகத் தோன்றும் இந்தச் சந்தேகத்துக்கு விடை அருளிவிட்டு பெரும் சிறப்புக் கொண்ட அந்தத் தத்துவ போதகன் கண்ணன் அடுத்தபடியாக இயற்கையாக வரவேண்டிய விஷயத்தை எடுத்துப் பேசுகிருர், இந்த அத்தியாயத்தில்.

அதாவது இந்த அத்தியாயத்தில் கண்ணன் ஆத்மாவைப் பற்றி, அதன் தன்மையை, அதனுடன் இணேயும் எல்லா அம்சங் களேயும் எடுத்துக் கொண்டு சர்ச்சை செய்துவிட்டு விளக்குகிருர். தெரிந்த பொருளேக் கொண்டுதான் தெரியாத பொருளே விளக்க வேண்டும். நமக்குத் தெரிந்த உலகம் ‘பார்வை’, (எல்லா இந்திரிய அறிவுகளேயும் இந்தச் சொல்லில் அடக்கி உபயோகப் படுத்தப்பட்டிருக்கிறது) உணர்ச்சி, சிந்தனே. இந்த மூன்றுக்கும் வசப்படும்படி தோற்றம் கொண்ட பொருள்களின் உலகம்தான். காரணம் இல்லாமல் காரியம் (விளேபொருள்) ஏற்படாது.

விளைவுகளை எடுத்துக் கொண்டால் அவற்றின் * உபாதான காரணத்தில்தான் அவை நிலைக்கின்றன. இந்தத் தர்க்க சம்மத மான கருத்தை ஆதாரமாகக் கொண்டு அந்த தெய்வ சாரதி நம்முடைய மனத்தை தெரிந்த உலகத்திலிருந்து தெரியாத தத்து வத்துக்கு உயர்ந்து செல்வதற்கு உதவுகிறார்.

இந்த அத்தியாயத்தில் அழியக் கூடிய வரம்புக்கும் இடையறாத மாற்றத்துக்கும் உட்படும் உலகத்தை எண்ணி ஆத்மாவைப் பேசும்போது, ஆத்மா (புருஷன்) அழிவுக்கு உட்ப டாத, வரம்புகள் அற்ற, மாற்றம் இல்லாத தத்துவமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதுதான் இந்தக் குறைவுகளின் கூடிய, பன்மைத் தன்மை கொண்ட உலகின் ஆதாரம். அதுவே உயிர் கொடுத்து வளர்க்கும் ஊட்டமுமாகும். பிரகிருதி என்னும் பௌதிகப் பொருள்களாகிற உறை க்ஷரப் பொருள். இதை யிட்டுப் பார்க்கும்போது அந்த எல்லையற்ற பரம்பொருள் அக்ஷரம் அதாவது மாறும் பொருளுக்கு எதிர்மறையான துர்மாற்றத்தை ஏற்காத பொருள். இதைச் சொல்லிவிட்டு மேலே சென்று இந்த மாற்றங்களை அனுபவிக்கிற தத்துவம் நாம் மாறாதது என்று எதைச் சொல்கிறோமோ அதற்கும் அப்பாற்பட்டது என்று இந்த அத்தியாயத்தில் விளக்கப்படுகிறது. இந்த மாற்றம் மாற்ற மின்மை இரண்டுக்குமே உட்படாத நிலையான அந்த சுத்த சுயம் தத்துவம் கீதையில் 'புருஷோத்தமன்' என்று அழைக்கப்படு கிறது.

இந்த அத்தியாயத்தின் இறுதியில், 'என்னை யார் சற்றும் குழப்பமில்லாமல் புருஷோத்தமன் என்று அறிகிறானோ அவன் (சர்வக்ஞன்) எல்லாம் அறிந்தவன் (ஆகிறான்); தன் முழு 'உயிரு' டன் (அமைப்புடன்) என்னையே வழிபடுகிறான்' என்று சொல்லி விட்டு பிரபு கண்ணன் அர்ச்சுனனிடம், 'நான் மிகப் பெரிய ரகசியத்தை உனக்குச் சொல்லி விட்டேன்' என்று உறுதி அளிக்கி றார். உலகில் பரமாத்மாவைப் பற்றிப் பேசும் எல்லா மறை நூல் களுக்குள்ளும் இந்த அத்தியாயம் மிக அபூர்வமான இலக்கிய மாகும். உண்மையில் கீதையிலேயே கூட இவ்வளவு சுருக்க மாகவும் அழகாகவும் விஷயங்களைச் சொல்லும் சுலோகங்களு டன் ஒப்பிடத்தக்க சுலோகங்கள் கொண்ட வேறு அத்தியாயம் கிடையாது. இந்தியாவில் வெகு காலமாகவே பிராமணர்கள் சாப்பிடுவதற்கு முன் இந்த அத்தியாயத்தை ஓதி வருகிறார்கள்.

ஸ்ரீ பகவானுவாச—

ஊர்த்வ மூலமத: சாக மச்வத்தம் ப்ராஹுரவ்யயம்
சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி யஸ்தம் வேத ஸ வேதவித் 15:1

---

* பருத்தி (காரணம்) இல்லாமல் துணி (விளைவு) இருக்க முடியாது. அந்த விளைவான துணி உபாதான காரணமான பருத்தியினால்தான் நிலை பெறுகிறது.

ஊர்த்வ மூலம்— வேர் மேலே கொண்ட; அத: சாகம்— கிளைகளைக் கீழே கொண்ட; அச்வத்தம்—அசுவத்த மரம்; ப்ராஹு:—சொல்கிறார்கள்; அவ்யயம்—அழியாதது; சந்தாம்ஸி— வேதங்கள்; யஸ்ய—எதனுடைய; பர்ணானி—இலைகளோ; ய:— யார்; தம்—அதை; வேத—அறிகிறானோ; ஸ—அவன்; வேதவித்— வேதமறிந்தவன்.

ஸ்ரீமானான பகவான் சொல்கிறார்:

அவர்கள் (பண்டிதர்கள்) மேலே வேர்களும் கீழே இலைகளும் கொண்ட அரச மரத்தைப் பற்றிச் சொல்கிறார்கள். வேதங்களே அதன் இலைகள். எவன் இதை அறிகிறானோ அவன் (வேதக்ஞன்) வேதம் அறிந்தவன்.

கடோபநிஷத்தில் போகிற போக்கில் வரும் அசுவத்த மரத்தை நினைவில் கொண்டு வியாச பகவான் இங்கே வாழ்க்கை—மரத்தை நன்றாகவே சித்தரித்து அதற்கும் எல்லை யற்ற பரம்பொருளுக்கும் உள்ள உறவையும் காட்டுகிறார். ஆத்மா, அத்வயப் பொருள் (இரண்டாவது அற்ற ஒன்று) என்றால், உடல், அதன் இந்திரியங்கள் மூலம் பெறும் இந்திரிய அறிவுகள், மனம், அதன் உணர்ச்சிகள், புத்தி, அதன் சிந்தனை கள்—ஆகியவற்றால் ஆன பிரகிருதியின் தத்துவங்கள் அந்த ஏகப் பேருணர்விலிருந்து எப்படி வெளியே வந்தன? அப்படி அந்த பிரகிருதி தோன்றினாலும் யார் (அல்லது எது?) அதற்கு ஊட்டம் தந்து காக்கிறார்கள்? படைக்கும் கடவுளுக்கும் படைப்புப் பொரு ளான உலகத்திற்கும் அதாவது அழிவு தேய்வு இல்லாத கடவு ளுக்கும் இவற்றிற்கு உட்பட்ட பிரகிருதிக்கும் என்ன உறவு? வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கும் எந்த மனித— புத்தியும் வினவக் கூடிய கேள்விகளுள் சில இவை.

முதல் மூன்று சுலோகங்களில் திறந்து காட்டப்படுகிற அசுவத்த மரத்தின் சித்திரம் இந்த அத்தியாயத்தில் விளக்கப் படும் ஆன்மீகம் பற்றிய கருத்தை விளக்கக் கூடிய அழகான உருவக விளக்கமாம்.

இந்த அசுவத்த மரம் ஆலமரம் அல்ல. (அரசமரமும் அல்ல.) இந்த மரத்துக்கு இந்தப் பெயர் வரக் காரணம், 'குதிரைகள் இதன் கீழ் நின்றன. அதனால் இந்தப் பெயர் வந்தது!' என்று சிலர் சொல்லுகிறார்கள். ஸ்ரீசங்கரர் விளக்கம் தரும்போது 'ச்வ' சேர்ந்து அசுவத்த என்றால் நாளை நில்லாதது, அதாவது 'நாளை இதே மாதிரி இருக்காது' என்று பொருள் கூறி அதனால் வாழ்க் கைக்கு இதுவே சரியான உருவகம் என்று வியாஸர் இந்த மரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்,' என்று விளக்கியிருக்கிறார்

கள். அதாவது இந்த சொல், எப்போதும் மாறி வரும், நிலையாக இராத பொருளைச் சுட்டுகிறது.

இந்த மரத்தின் வேர்கள் 'மேலே' இருக்கின்றன என்று இங்கே கூறப்பட்டிருக்கிறது. இதன் பொருளை மேலெழுந்தவாறு பார்த்தால் சம்சார—மரத்தை யாரோ எழுத்தறிவில்லாத ஓவியர் கள் ஆன்மிக சாஸ்திரப்படி தவருகவும்; சமய சாஸ்திரப்படி விஷமத்தனம் கொண்டதாகவும் கலையுணர்வுக்கு அருவறுப்பு ஊட்டத்தக்கதாகவும் தீட்டி, இந்தியக் கடைகளில் எளிதில் கிடைக்கும்படி வியாபாரத்துக்கு வைத்துவிட்டார்கள்' என்று தோன்றும். இப்படிப்பட்ட படங்கள் வேறு யாருக்கும் பயன் அளிக்காது. மனத்தில் வஞ்சகத்துடன் மதம் மாற்ற அலைகிறுர் களே அந்தப் பாதிரிகளுக்கு வேண்டுமானுல் நம் மதத்தைக் குறைகூற எடுத்துக்காட்டாக உதவப் பயன்படலாம்.

ஸ்ரீசங்கர பாஷ்யத்துக்கு உரைக் குறிப்புகள் எழுதிய ஆனந்தகிரி அவர்கள் 'விருக்ஷ' என்ருல் வெட்டப்படக் கூடியது என்று பொருள் கூறுகிறுர்கள். பன்மைத் தன்மை கொண்ட இந்த உலகம் நமக்குத் தரும் வேதனைகளையும் துயர்களையும் உலகி டம் நாம் கொள்ளும் பற்றை அறவே நீக்கி விட்டால் முடிவுக்கும் கொண்டு வந்துவிட முடியும். அதே போல எல்லையில்லாப் பேருணர்வுத் தத்துவத்திலிருந்து தோற்றம் எடுத்தது போல் தோன்றுகிற இந்தப் பல—அனுபவ—மரமும் ''மரத்தை''விட்டு நீக்கி கவனத்தை பரத்தின் பால் செலுத்தினேமானுல் வெட்டி வீழ்த்தி விட முடியும்.

நல்ல வேளையாக நவீனக் கல்வி பயின்ற நமக்கு இந்த 'மரம்' என்ற சொல் சரித்திரப் புத்தகங்களில் உபயோகப்பட்டி ருப்பது தெரியும். ராஜாக்கள், ராஜவமிசங்கள் இவற்றின் பரம் பரையைக் காட்ட 'மரம்' என்ற சொல்லின் கீழ் பெயர்கள் தரப் படுகின்றன. முதலில் வமிசத் தலைவன் பேரைக் காட்டி அதற்குக் கீழே கிளைகள் இடத்தில் பின்னுல் வந்தவர்கள் பெயர்கள் குறிக்கப்பட்டிருக்கும். அதே மாதிரி 'சம்சார—மரத்துக்கும் காரணமான (வேர்) பேருணர்வுத் தத்துவம் மேலே இருக்கிறது. மரத்தை வேர்கள் நிலையில் நிறுத்துகின்றன. தாங்குகின்றன, உணவு எடுத்துத் தருகின்றன. அதே போல மாற்றங்களின் அனுபவங்கள், அனுபவங்களைப் பெறுகிறவர்கள் எல்லாமே அந்த எல்லையற்ற பரம்பொருளில் நிலைபெறுகின்றன. அதனுல் வளர்க்கப் பெறுகின்றன.

'அது சரி—மேலே என்று எதற்குச் சொல்லப்பட்டிருக்கிறது? என்று சில நண்பர்கள் சந்தேகத்தை எழுப்புகிறுர்கள். 'உயர்' அல்லது 'மேல்' என்ற சொல்லை நாம் அன்ருட வாழ்க்கையில் எதைக் குறிக்கப் பயன்படுத்துகிறேமோ அதே குறிப்பில்தான்

இங்கும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. உயர்ந்த இடம், உயர்ந்த பதவி, மேல் அதிகாரி, உயர்நிலைக் குழு, உயர்ந்த தரமான நகைகள்—போன்று. இங்கெல்லாம் உயர்ந்த, மேல் என்ற சொற்கள் இடத்தில் ஆகாயத்தில் உயரே இருப்பவர் அல்லது இருப்பவை குறிக்கப்படவில்லை. அந்தச் சொற்கள் மதிப்பில் அல்லது சிறப்பில் உயர்ந்திருப்பதைக் குறிக்கின்றன. அதிக சூட்சுமமாகவோ, அதிக தெய்வீகத் தன்மை வாய்ந்ததாகவோ இருக்கும் பொருளுக்கு மதிப்பில் உயர்ந்த இடத்தையும், மிகவும் தூலமாகவும் பேய்த் தன்மை கொண்டதாகவும் இருக்கும். பொருளுக்கு கீழ் இடமும் கொடுப்பது நம் மனக் கணிப்பில் மிகவும் இயற்கையான ஒன்று. இந்த உடல்—மனம்—புத்தியாகிற கருவிகள் தங்களுக்கு உரிய இந்திரியங்கள் மூலம் உலகைக் காணுதல் (துய்த்தல்), உணர்ச்சிகள் பெறுதல், சிந்தித்தல், முதலிய அனுபவங்களைப் பெறுவதற்கு அவற்றை உயிரூட்டி ஒளிதரும் தனி ஆற்றலான அந்த உணர்வுத் தத்துவம் (பரம்பொருள்) பூர்ணத்துவம் உடையது. அதை நாம் மிகவும் உயர்ந்த இடத்தில், அதற்கு மேல் உயர்வு கிடையாது என்ற இடத்தில் வைக்கிறோம். எனவேதான் பன்மைப் பாங்கு கொண்ட இந்த உலகத்தை அந்த உண்மைத் தத்துவமான பேருணர்விலிருந்து எழுந்து அதனால் போஷிக்கப்படும் அசுவத்த மரமாக இங்கே சித்தரிக்கப்பட்டிருக்கிறது.

இந்த மாறும் இயல்பு கொண்ட உலகமான அசுவத்தம் அவ்யயமாகச் சொல்லப்படுகிறது. அது தனித்த நிலையில் அல்ல. வேறொன்றுடன் ஒப்பிட்டுப் பேசும்போது அதைவிட இது அழிவில் குறைந்ததானபடியால் இதை 'அவ்யயம்' என்று பேசுகிறோம். ஒரு அசுவத்த மரம் மனிதர்களின் எவ்வளவோ தலைமுறையைப் பார்த்திருக்கும். அவர்கள் அதன் கீழே விளையாடி அதன் நிழலில் வளர்ந்திருப்பார்கள். அவர்களை இட்டுப் பார்க்கும்போது அசுவத்தம் அழிவற்றது! அதே போல் வளர்வதும், கற்பனை செய்வதும், திட்டம் போடுவதும் முயற்சி செய்வதும், சாதிப்பதும் இறுதியில் மடிவதுமாயுள்ள தலைமுறைகளுடன் ஒட்டிப் பேசும்போது உலகத்தை அழியாதது என்று சொல்ல முடியும்.

இந்த வாழ்க்கை மரத்துக்கு 'வேதங்களே இலைகள்': இந்தக் கூற்றுக்குப் பல ஆசாரியர்கள் அனேக விளக்கங்கள் கொடுத்திருக்கிறார்கள். உதாரணமாக ஸ்ரீசங்கரர், 'இலைகள் மரத்தைக் காப்பது போல் வேதங்கள் உலகுக்கு எது சரி எது சரியில்லை என்று சொல்லித் தந்து உலகத்தைக் காப்பாற்றுகின்றன' என்று சொல்கிறார்கள். ஸ்ரீ ராமானுஜர் போன்றோர்கள் 'வேதங்கள் சொல்கிற அனுஷ்டானங்கள் அனுஷ்டிக்கப்பட்டால் சொர்க்கத்துக்கு அழைத்துச் செல்கின்றன. எனவே வேதங்கள் அந்த

இலைகள்' என்று சொல்கிறார்கள். இதெல்லாம் அனுஷ்டானத்தை நம்பி, அதிலேயே ஊறியிருந்த தலைமுறை யினர்களுக்கு மிகவும் பிடிக்கலாம். ஆனால் நவீனமான இந்தப் படித்தவர்கள் விழுங்குவதற்கு இந்தக் கட்டி பெரியதாக இருக்கும். அவர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

அந்தச் சொல்லுக்கு நவீன காலத்துக்கு உகந்தவாறு 'அறிவு' என்று பொருள் சொல்லலாம். அறிவு, செயல் வேகத்தை அதிகரிக்கச் செய்கிறது. கடந்த காலத்தை எடுத்துக் கொண்டு 'பீம' முயற்சிகள் அலௌகீக சாதனைகள், ஹிமாலய வெற்றிகள் காரணமாக இன்றைய உலகத்துடன் ஒப்பிட்டால் கடந்த காலம் உயிருடன் இல்லை என்று கூடச் சொல்லிவிட முடியும். அறிவு அதிகமாக அதிகமாக அந்தத் தலைமுறை அதிக ஆற்றல் வாய்ந்த வருங்காலத்தையும் அதன் தெய்வீகச் சாதனைகளையும் நன்கு தெளிவாகக் கற்பனைக் கண்களால் பார்க்க முடிகிறது. அவற்றை அடைய அது அதிக வேகமாகவும் ஆற்றலுடனும் செயல்படுகிறது. இப்போது வேதத்தை அதாவது அறிவை இலைக ளாக உருவகப்படுத்துவது சரி என்று புரியும். மரத்தின் இலைகள் நீரை ஆவியாக மாற்றி விடுகின்றன. அப்போதுதான் வேரில் ஒருவகை அழுத்தம் ஏற்பட்டு பூமியிலிருந்து அதிக ஊட்டச் சத்தை கிரகித்துக் கொள்ளுதல் சாத்யமாகிறது. இலைகளைக் கழித்துவிட்டால் மரம் வளர்வது தடைப்படும். கிளைகளும், இலைகளும் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமிருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு மரத்தின் பருமனும் உயரமும் வளர்ச்சியும் அதிகமாகும். அதே போல் அறிவு அதிகமானால் உயிரின் வெளிப்பாடும் (செயல்களும்) அதிகமாகும்.

இதை அறிந்தவன் வேதத்தை அறிகிறான்: அசுவத்த மரத்தை மட்டுமல்லாது அதற்கு இருப்புத் தரும் உயர்ந்த தத்து வத்தையும் எவன் அனுபூதி வாயிலாகப் பெறுகிறானோ அவன் தான் வேத ஞானத்தைப் பெற்றவனாகிறான். வேதங்கள் எந்த ஒரு தத்துவத்திலிருந்து எல்லாத் தளத்து (அல்லது நிலை) அனுபவங்களும் வெளிப்படுகின்றனவோ அந்த சாசுவதமான பரமதத்துவத்தைச் சுட்டிக் காட்டுகின்றன. கேவலம் சாஸ்திர ஞானமோ அல்லது பக்தியோ மட்டும் பூரண ஞானத்தில் உண்மையைப் பெறுவதற்கு உதவாது. இதுதான் கீதையின் முடிவு. நமக்கு இங்கேயுள்ளது, அப்பால் உள்ளது, அழிவது, அழிவுக்குள்ளாகாதது, சிருஷ்டிக்கப்பட்டது, சிருஷ்டிப்பது இவற்றைப் பற்றி உண்மையை அறியும் அறிவே பூரண அறிவு, முழு நிறைவு பெற்ற அறிவு. மற்ற அறிவுத் துறைகள் மேலே எவ்வளவு ஒளியில் ஆளை அசத்துவதாயிருந்தாலும் முழு உண்மை யின் ஒரு பக்கத்தை மட்டும் காட்டுபவையே! வேதங்கள் சொல்லும் 'பூரண ஞானி', அழியக் கூடியது அழியக் கூடாதது

இரண்டையும் அறிபவன். அவனைத்தான் கிருஷ்ணர் (வேத வித்து) வேதம் அறிந்தவன் என்று ஒப்புக் கொள்ளுகிறார்.

இந்த சம்சார மரத்தில் மற்ற அங்கத்தினர்களுடைய மற்றொரு உருவகச் சித்திரம் தொடர்கிறது.

அதஸ் சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய சாகா
குணப்ரவ்ருத்தா: விஷயப்ரவாலா:
அதஸ்ச மூலான்யனு சந்ததானி
கர்மானுபந்தீனி மனுஷ்ய லோகே. 15:2

அத்—கீழே; ச—உம் (மேலும்); ஊர்த்வம்—மேலேயும்; ப்ரஸ்ருதா:—பரவியிருக்கும்; தஸ்ய—அதனுடைய; சாகா:—கிளைகள்; குணப்ரவ்ருத்தா:—குணங்களால் ஊட்டம் பெற்று; விஷய: ப்ரவாலா:—இந்திரிய விஷயங்கள் (புலன் நாடும் பொருள்கள்) கிளைக் கணுக்கள்; அத: ச—கீழேயும்; மூலானி—வேர்கள்; அனுசந்ததானி—பரப்பப் பட்டிருக்கின்ற; கர்மானுபந்தீனி—கருமங்களில் தொடங்குகிற; மனுஷ்யலோகே—மனிதர்கள் உலகத்தில்.

மேலும் கீழும் குணங்களால் ஊட்டம் பெற்ற அதன் கிளைகள் பரவியிருக்கின்றன. இந்திரிய விஷயங்கள் அதன் கிளைக் கணுக்கள், கீழே மனிதர்கள் உலகத்தில் கர்மங்களில் தொடங்குகிற வேர்கள் பரவியிருக்கின்றன.

சம்சார விருக்ஷத்தின் படத்துக்கு மேலும் வர்ணம் தீட்டுகிறார் கண்ணன். இன்னும் அதிக விவரங்கள் தரப்படுகின்றன. இவ்வித ரகசியப் பொருள்களை விவரிக்கும் சொற்களுக்கு வெறும் சொற்பொருளை மட்டும் கொண்டு பார்க்கக் கூடாது. அது கலையாய் இருந்தாலும் சரி; இலக்கியமாய் இருந்தாலும் சரி. வியாசர் நடையே ''ரகசிய வாத''த்தின் நடைதான். (உலகில் ஏதாவது ஒரு பொருளை எடுத்துக் கொண்டு அதை உருவகமாக்கி அதன் மூலம் நுண்ணிய வேதாந்தத் தத்துவங்களைக் குறிப்பிட்டு அதன் வழி ஆழ்ந்த சமய போதனையைத் தருவதற்கு, அதைக் கவிதை நடையில் விவரிப்பதற்கே, ரகசிய வாதம் என்று பெயர்.) இந்தக் கடினமான நடையில் பழக்கம் பெறாது போனால் எந்த மாணவனுக்கும் கலையைக் கண்டு அதன் அழகைச் சரியாகப் புரிந்து கொள்வது கடினமாயிருக்கும். அதுவும் அந்த உருவகப் படம் தூரிகையும் வர்ணங்களும் கொண்டு தீட்டப்படாமல் சொற்களால் தீட்டப் பட்டிருந்தால் புரிந்து கொள்வது இன்னும் அதிகக் கடினமாகிவிடும்.

வாழ்க்கை மரத்தை வருணித்து மேலும் சில விவரங்கள் சேர்க்கத் தொடங்கிய வியாசர், 'மேலும் கீழும் அதன் கிளைகள்

பரவியிருக்கின்றன' என்கிறுர். தனி மனிதன் வாழ்விலும் சரி, உலகின் வாழ்விலும் சரி, உயிரின் ஓட்டம் சில சமயம் வளர்ச்சியின் உயர்ந்த போக்குகளே நோக்கிப் போகிறது. அதே போல், ஆனுல் சற்று அதிகமாகவே, அதிக தடவைகளில் அது மட்டமான மிருக உணர்வுகளுக்கு உணவு போட முனேகிறது. இந்த இரண்டு போக்குகளேயும் தெளிவாகக் குறிக்கவே வியாஸர், 'இந்த மரத்தின் கிளேகள் மேலேயும் கீழேயும் வளர்கின்றன' என்கிறுர்.

குணங்களால் ஊட்டம் கொண்டு பருமனுக்கப்பட்டு: மனிதன் கொண்டிருக்கிற மனநிலேகளாலும் போக்குகளாலும் (குணங்களாலும்) உயர்ந்தோ, தாழ்ந்தோ, வாழ்கிற உள்ளுந்துதல்கள் உருப்பெற்று வளர்க்கப்படுகின்றன. முன்னே வந்துள்ள அத்யாயத்தில் மனதின் நிலேகள் (குணங்கள்) விஸ்தாரமாக விசாரிக்கப்பட்டிருக்கின்றன.

எந்த மரத்திலும் கிளேகள் வரும் இடத்தில் மொட்டுக்கள் (போன்ற) கணுக்கள் இருக்கும். அவைதான் பின்னுல் கிளேகளாக வளரும். இந்த அசுவத்த மரத்திலும் இந்திரிய விஷயங்கள் (புலன்கள் தேடும் பொருள்கள்) அவ்விதம் கிளேகளாக வளரக் கூடிய கணுக்களாக இருக்கின்றன. எதிரே நாம் ஒரு பொருளேக் கண்டுவிட்டால் அதைப் பெறும் ஆசையில் நம்முடைய உயர்ந்த நோக்குகளேக் காற்றில் பறக்கவிட்டு அந்தப் பொருளேப் பெற தறிகெட்டு ஓடுகிறோம் என்பது உண்மையே.

கீழேயும் வேர்கள் வளர்ந்து செல்கின்றன: சம்சார விருட்சத்தில் ஆணிவேர் சுத்த உண்மைத் தத்துவத்தில் மறைந்துவிட்டிருக்கிறது. அதிலிருந்து கிளம்பும் சிறிய வேர்கள் சல்லி வேர்கள் நாலா பக்கமும் பரவுகின்றன. கீழேயும் பரவுகின்றன. இங்கே சல்லி வேர்கள் நம்முடைய எண்ணக் கால்களான வாசனேகள். அவைகள்தாம் நம்மை உலகில் அவற்றுக்கேற்ற செயல்களில் தூண்டி வேலே செய்யச் செய்கின்றன. அவைதாம் மனிதன் நல்ல அல்லது கெட்ட போக்குகளில் போகக் காரணமாக ஆணி வேர். இந்த வேர்களில் பலத்தால்தான் பூமியில் நன்கு பரவி, நன்ருக ஊன்றி மரம் நிலேபெற்று நிற்க உதவுகிறது. அதே மாதிரி இருந்த சம்ஸ்காரங்களும்—அதாவது தாமே செய்யும் செயல்களும் எதிர்கொள்ளும் செயல்களுக்கு எதிராகச் செய்யும் செயல்களும்—மனிதனே விருப்பம் வெறுப்பு, லாபம், நஷ்டம், சம்பாதித்தல் செலவழித்தல் போன்றவற்றின் நிலத்தில் வேரூன்றி நிற்கச் செய்கின்றன. சம்ஸ்காரங்கள் நல்லனவாக இருக்கலாம் அல்லது கெட்டவையாகவும் இருக்கலாம்.

இந்த மரத்தை எப்படி வெட்டி விட்டு இந்த உயிர் வெளிப்பாடுகளின் வேராக இருக்கிற என்றும் உள்ள முடி

வற்ற உயிரை' அனுபூதியாகப் பெற முடியும்? என்று அடுத்த இரண்டு சுலோகங்கள் காட்டுகின்றன:

ந ரூபமஸ் யேஹ ததோபலப்யதே
நாந்தோ ந சாதிர்ன ச ஸம்ப்ரதிஷ்ட்டா
அச்வத்தமேனம் ஸுவிரூடமூலம்
அஸங்க சஸ்த்ரேண த்ருடேன சித்வா 15:3

ந—இல்லை; ரூபம்—உருவம்; அஸ்ய—இதற்கு; இஹ—இங்கு; ததா—அப்படியே; உபலப்யதே—அடையப்படுகிறது; ந—இல்லை; அந்த:—முடிவு; ந—இல்லை; ச—உம்; ஆதி—தொடக்கம்; ந—இல்லை; ச—உம்; ஸம்ப்ரதிஷ்ட்டா—அஸ்திவாரம்; அச்வத்தம்—அசுவத்த மரத்தை; ஏனம்—இதை; ஸுவிரூடமூலம்—உறுதியான வேர் படைத்தது; அஸங்க சஸ்த்ரேண—அசங்கம் (பற்றறுத்தல்) என்கிற கோடரியால்; த்ருடேன—வலுவான; சித்வா—வெட்டி.

அதன் உருவம் இங்கே காணப்படுவதில்லை. அதே போல அதன் முடிவும், அதன் தொடக்கமும்; அதன் அஸ்திவாரமும் (காணப்படுவதில்லை) இந்த நன்கு வேரூன்றிய அச்வத்த மரத்தை அஸங்கம் (பற்றறுத்தல்) என்கிற கோடரியால் வெட்டி வீழ்த்தி...

தத: பதம் தத்பரிமார்கிதவ்யம்
யஸ்மின் கதா ந நிவர்த்தந்தி பூய:
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே
யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ 15:4

தத:—அதற்குப் பிறகு; பதம்—எல்லை இடம்; தத்—அந்த; பரிமார்கிதவ்யம்—தேடப்பட வேண்டும்; யஸ்மின்—எங்கே; கதா:—சென்றவர்கள்; ந—இல்லை; நிவர்த்தந்தி—திரும்புவது; பூய:—மீண்டும்; ஏவ:—அதிலேயே; ச—உம்; ஆத்யம்—ஆதியான; புருஷம்—புருஷனை;-ப்ரபத்யே—நான் ஆசிரயமாக அடைகிறேன்; யத:—எதிலிருந்து; ப்ரவ்ருத்தி—செயல்கள் அல்லது செயலாற்றல்; ப்ரஸ்ருதா:—வெளியேறினவோ; புராணி—பழைய.

அதற்குப் பிறகு எங்கு சென்றால் சென்றவர் மீண்டும் திரும்பி வருவது இல்லையோ அந்த இடத்தைத் தேடவேண்டும். எதிலிருந்து நினைவுக்குள் வராத பழைய காலத்திலிருந்து செயல்கள் (அல்லது செயலாற்றல்) வெளியேறி வருகின்றனவோ அந்த ஆதி புருஷனை நான் அடைக்கலமாக அடைகிறேன்.

மாணவர்கள் இந்த ரகசிய குறியீட்டைப் புரிந்து கொள் வதில் ஏமாந்து தவறாகப் பொருள் கொள்ளக் கூடாது. ஏதோ

நிஜமாகவே அப்படி ஒரு மரம் இருக்கிறது என்று எண்ணிக் கொண்டு விடக் கூடாது என்பதற்காக கீதாச்சாரியன் 'அதன் உருவம் இங்கே காணப்படாது' என்று ஒப்புக் கொள்கிறார். சென்ற சுலோகங்களில் வர்ணிக்கப்பட்ட 'வாழ்க்கை மரம்' தோற்றம் கொண்ட உயிரின் உலகம் முழுவதையும் குறிக்கிறது. உயிராகிய நுண்ணிய தத்துவம் நம் மூலம் பல நிலைகளில் மாறு பட்ட பல உருவங்களில்—அதாவது உடலின் இந்திரியப் பார்வைகள் (அறிவுகள்); மனதின் உணர்ச்சிகள் பாவங்கள்; புத்தியின் குறிக்கோள்கள் கருத்துக்கள்—இப்படி—வெளியா கிறது. மேலும் சூட்சும சரீரத்தின் விளக்கமின்மையாகவும் வெளியாகிறது. அதாவது ஆழ்ந்த தூக்கத்தில் அறிவு முழுமை யாக மறைக்கப்பட்டு விடுகிறது. எந்த விதமான அறிவும் ஏற்படுவதில்லை. அந்த அறியாமை அல்லது அவித்தை இங்கே குறிக்கப்படுகிறது. அதையும் அந்த சைதன்யம்தான் ஒளிரச் செய்கிறது. இந்தக் காரணங்கள், அவைகளின் அனுபவங்கள் எல்லாம் அந்த எல்லையற்ற உயிர்த் தத்துவத்தின் மேல் எழும்பித் தோற்றம் பெறுகின்றன. அவை முழுமையுமே எங்கும் பரவியிருக் கும் அசுவத்த மரமாம்! அதனால்தான் பகவான் கிருஷ்ணன் அவ்வளவையும் ஒரே பார்வையில் பார்த்தவுடன் தெரிந்து கொள்ளும் ஆற்றல் மிகச் சிலருக்கே இருக்கும் என்கிறார்.

வேறு வேறான உபாதிகள் (கரணங்கள்) அவற்றின் வெளிப் பாடுகள்—இவைதாம் எல்லோராலும் பூராவாகப் பார்க்கப்பட முடிவதில்லை என்பதில்லை. உலகிலுள்ள மிகச் சிலரே அதன் தொடக்கம், முடிவு, இருப்பு ஆகியவற்றையும் பார்க்க முடியும். இந்த விருக்ஷம் அந்த நித்திய சத்தியப் பொருளின் அறியாமை காரணமாக எழுகிறது. அதுவே அவித்தையாகும். ஆத்மஞானம் (வித்தை) ஏற்பட்டவுடன் அந்த மரம் அழிந்து விடும். அது நம் மனத்தில் ஆசைகளும் வேட்கைகளும் (அதாவது வாசனைகள்) இருக்கும் வரைதான் இருக்கும். அநேக ஜனங் களுக்கு உள்ளேயுள்ள இச் சிக்கல்கள் தெரிவதுமில்லை அவர்கள் அதைப் புரிந்து கொள்ளுவதுமில்லை.

தோற்றம் கொண்டு வெளிப்பட்ட இந்த உலகமாகிற அசுவத்த மரத்தைப் பற்றற்ற தன்மை (வைராக்கியம்) என்கிற வலுவான கோடாரியால் வெட்ட முடியும். இந்தப் பௌதீகப் பொருள்களின் உலகம் அசேதனமானது. சடமானது (புலனறி வற்றது). இவற்றின் மூலம் பெற்று அனுபவிக்கப்படும் உயிரின் அனுபவங்கள் இவற்றில் ஊடுருவி அவற்றுக்கு உயிரளிக்கும் பரம சைதன்யத்தின் லீலையேயாகும். மோட்டார் வண்டியின் சக்கரங் கள் இயந்திரங்களுடன் சேர்ந்து இருக்கும்வரை சக்கரங்களும் ஓடும்; வண்டியும் ஓடும். சக்கரங்களிலிருந்து இயந்திரத்தின் ஓட்டும் சக்தியைப் பிரித்து விட்டால் சக்கரங்களும் ஓட்டத்தை

இழந்துவிடும். வண்டியும் தன்னுடைய அசையா நிலையை அடைந்து விடும். அதே போல் அந்தப் பேருணர்வுத் தத்துவம் (பரமாத்மா) இந்த உடல்—மனம்—புத்தி சாதனத்திலிருந்து நகர்ந்து விட்டால் பார்ப்பது—உணர்ச்சி கொள்வது—சிந்திப்பது என்ற அதனுடைய வெளிப்பாடுகளும் தாமாக நின்று விடும். இப்படி உணர்வுத் தத்துவமான பரம சைதன்யத்தைப் பிரித்து எடுப்பதுதான். ''அஸங்கம்,'' பற்றற்ற தன்மை என்று சொல்ல படுகிறது. இதைத்தான் கண்ணன் பலதரப்பட்ட பலநிலைகளில் பெறப்படுகிற அனுபவங்களாகிற அசுவத்த மரத்தை வெட்ட உபயோகப்படுத்த வேண்டிய கோடரியாக உருவகப்படுத்திக் காட்டுகிறார்.

இன்று நாம் இயங்கும் உணர்வுத் தளத்தில், 'காட்சி—உணர்ச்சி—சிந்தனை இவற்றின் உலகத்திலிருந்து முழுமையாக விலகுவதே இந்தப் போதனையின் பொருள்'' என்பதால் நாம் இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்ள மறுப்போம். உள்ளபடி நமக்கு நாம் இயங்க வேறு எந்த உலகமும் தெரியாது. எனவே நாம் ஒரு சூனிய நிலையை அடைந்து விடுவோம். இதைக் கற்பனை செய்தாலே மனதுக்கு நம்பிக்கையற்ற நிலை ஏற்பட்டு விடும். கிருஷ்ணன் அதே மூச்சில் அடுத்த சுலோகத்தையும் சொல்கிறார். ''அதற்குப் பிறகு எதற்குச் சென்ற மனிதர்கள் திரும்புவதில்லையோ அந்த இலக்கிடத்தைத் தேட வேண்டும்,'' என்று அதில் சொல்லப்படுகிறது.

மொத்தமாக இந்த இரண்டு சுலோகங்களில் உள்ள குறிப்பின் தொனி, பேச்சின் முறை இவற்றைப் பார்த்தால் தங்களுக்குள்ளேயே தெய்வீக நிலையைப் பெற விரும்பும் சாதகர்கள் மேலும் மேலும் தங்கள் ஆற்றலழிவுகளிலிருந்தும் காட்சி, (இந்திரியங்களின் துய்ப்பு) உணர்ச்சி, எண்ணங்கள் — இவற்றின் உலகத்திலிருந்து தங்களைப் பிரித்துக் கொண்டு அசுவத்த மரத்துக்கு உயிரும் ஊட்டமும் நல்கும் அந்த உயர்ந்த சைதன்யத் தத்துவத்தில் தியானம் செலுத்த வேண்டும் என்று தெளிவாகப் புரிகிறது.

இந்த அறிவுரையைச் சொல்லிவிட்டு அங்கேயே நிறுத்தி விட்டிருந்தால் மிக அதிகமாகப்போனால் இது ஒரு கவியின் கற்பனை, நடக்கக் கூடாத ஒரு யோசனை என்ற அளவில்தான் ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கும். கீதையோ மனிதன் தனக்குள்ள குறைபாடுகளை நீக்கி உயர்ந்த வாழ்வு வாழ்வதற்கான நேரடி அமுல் முறைகளை அவனுக்குச் சொல்ல வந்த ஒரு கையேட்டு நூல். என்வே அதற்கு ஒவ்வொரு படியிலும் சுய வளர்ச்சிக்கான அமல் செய்யக்கூடிய செயல் முறைகளைச் சொல்லிக் கொடுக்க வேண்டிய கடமை இருக்கிறது. 'நான் எங்கிருந்து இந்தப் பழைய உயிரோட்டம் கிளம்பிற்றோ அந்த

ஆதிபுருஷனிடம் சரணடைகிறேன்' என்ற பிரார்த்தனையுடன் இந்த சுலோகம் முடிந்து அந்தக் கடமை நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

''நம்முடைய உள் இயக்கப்பகுதி எப்போதுமே வெளியே நோக்கி ஓட நாம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம். எவ்வளவு அதிகம் முடியுமோ அவ்வளவு அதிகமாகவே நாம் அவற்றிலிருந்து வெளியேறி விட வேண்டும். புத்தியை முயற்சி செய்து குறிக்கோள் பக்கமாக அன்புடனும் சரணகதி மனப்பாங்குடனும் திருப்பி விட வேண்டும். அந்த குறிக்கோளிடமிருந்துதான் உணர்வுத்தத்துவம் இந்த சட உபாதிகளுக்குப் பாயந்து அவற்றைத் தங்கள் தங்கள் வேலைகளைச் செய்வதற்கு உதவுகிறது.'' என்கிற இந்தக் கருத்தை இந்தச் சுலோகம் தெளிவாக்குகிறது. சுருக்கமாக: உயிரின் வெளிப்பாடுகளை அடக்கி நிறுத்து. அந்த நித்திய பரம உயிர்தத்துவத்தைத் தேடு. அது தான் இந்த ஓட்டங்களுக்கெல்லாம் உயிர். இதுவே ஆதி புருஷன். அது எது? அதை எப்படி மனதில் கொள்ள முடியும்? இதுதான் இந்த அத்தியாயம் முழுவதற்கும் அடக்கப் பொருளாம்.

எப்படிப்பட்ட சாதகர்கள் இந்தக் குறிக்கோளை (எல்லை இலக்கிடத்தை) அடைகிறார்கள்? கவனியுங்கள்.

நிர்மானமோஹா ஜிதஸங்கதோஷா:
அத்யாத்ம நித்யா விநிவ்ருத்தகாமா:
த்வந்த்வைர் விமுக்தா: ஸுகது:க ஸம்ஞ்ஞைர்
கச்சந்த்யமூடா: பதமவ்யயம் தத் 15:5

நிர்மானமோஹா: கர்வம் மோஹம் இரண்டும் அற்றவர்களாக; ஜிதஸங்க தோஷா: பற்று என்கிற குற்றத்தை வெற்றி கொண்டவர்களாக; அத்யாத்மநித்யா: ஆத்மாவிலேயே என்றும் உள்ளவர்களாய்; விநிவ்ருத்த காமா: வேட்கைகள் அமரப்பட்டவர்களாக; த்வந்த்வை: பரஸ்பாம் விரோதமான 'இரட்டை' அனுபவங்களிலிருந்து, விமுக்தா: விடுதலை பெற்றவர்களாக; ஸுகது: க: ஸம்ஜ்ஞை; சுகம், துக்கம் என்று பெயர் பெற்ற; கச்சந்தி—செல்கிறார்கள்; அமூடா: மூடத்தனம் அற்றவர்கள்; பதம்—இடத்தை; அவ்யயம்—என்றுமுள்ள; தத்—அந்த.

கர்வம் மோஹம் இரண்டும் இல்லாதவர்களாகவும், பற்று என்கிற குற்றத்தை பெற்றவர்களாகவும், எப்போதும் ஆத்மாவிலேயே வசிப்பவர்களாகவும் வேட்கைகள் அனைத்தையும் அமர்த்தியவர்களாகவும், சுகம் துக்கம் போன்ற பரஸ்பர விரோதிகளான இரட்டைகளிலிருந்து விடுபட்டவர்களாகவும் உள்ள மூடத்தனம் அற்றவர்கள் (அறிவாளிகள்) அந்த என்றும் உள்ள இலக்கிடத்தை அடைகிறார்கள்.

நம் நாட்டில் தத்துவப் பேச்சு பழகவும் வாழவுமே! அது காட்டுகிற இலக்கை அடையும்போது அதற்கு 'செய்ய வேண்டியதைச் செய்தோம்' என்ற நிறைவு ஏற்படும். அதனுல் தான் நம்முடைய தர்மசாஸ்திரங்களிலும் ஆத்மவித்தையின் பாட நூல்களிலும் பூரணத்துவம் பெறுவதற்கான வாதங்களைச் சொல்லி அவற்றை அடைய விதிமுறைகள், சர்ச்சைகள் இவற்றில் பொக்கிஷமே நிரப்பிவைக்கப்பட்டிருக்கிறது அந்த வழியில் செல்ல விரும்பும் சாகஸம் கொண்ட சாதகர்களுக்கு உதவ விஸ்தாரமான விதிமுறைகளைச் சொல்லும் பழக்கத்துக்கு இந்த சுலோகம் ஒரு நல்ல பிரதிநிதித்வம் வாய்ந்த எடுத்துக் காட்டு. ஐந்து நிபந்தனைகள் இங்கே கூறப்படுகின்றன. அவை கட்டுப்பாடுகள், தேவையான மாறுதல்கள், வாழ்க்கைக்குரிய கரணங்கள் அல்லது உபாதிகளைச் சரியானபடி பயிற்றுவித்தல்— இவை தவிர வேறில்லை. இவற்றைச் சொல்லி ஸ்ரீ கிருஷ்ணன், 'இவற்றைச் செய்வதில் வெற்றிகண்டவர்கள் அந்தத் தெய்வீக அனுபூதியைப் பெறுவார்கள்; பெற்று உச்ச நிலையிலுள்ள, க்ருதகிருத்ய (செய்ய வேண்டியதைச் செய்து முடித்தோம் என்கிற) ஆனந்தம் நிறைந்த வாழ்வை வாழ்வார்கள்,' என்கிறுர்.

கர்வம் மோஹத்திலிருந்து விடுபட்டு: கர்வம் மோஹம் இரண்டும் தன்னைப் பற்றியும் மற்றவரைப் பற்றியும் கொள்ளும் தவருன மதிப்பீட்டிலிருந்தே கிளைக்கின்றன. தன்னைப் பற்றி தவருக உயர்த்தி எண்ணிக் கொள்வது கர்வம். அதைக் காப் பாற்றிக் கொள்ள பெரும் பொறுப்புகளைச் சுமக்க வேண்டியிருக்கும் அந்த எண்ணம் வந்து விட்டால் அதற்கு மேல் நல்ல குணங்களைப் பயிலவோ, அறிவை வளர்த்துக் கொள்ளவோ, உண்மையான கல்வியைப் பெறவோ, நேரம் இருக்காது அதே போல் மற்ற வஸ்துக்கள் செயல்கள், நிகழ்ச்சிகள் அல்லது மனிதர்களைப் பற்றி தவருன கணிப்பை ஏற்படுத்திக் கொள்வது மோஹம் அல்லது பிரமையாம். அதனுல் நமக்கு நேரே எதிரில் உள்ள பிரசினைகள் தெரிவதில்லை. நாம் தனியான, பிரத்யக்ஷம் இல்லாத தனி உலகில் வாழத் தொடங்கிவிடுகிறோம்.

ஸங்க தோஷத்தை வெற்றிகொண்டு (அடக்கி)— உலகில் பெறப்படும் இந்திரிய சுகம் தரும் பொருள்களால் கிடைக்கும் இன்பத்தை நுகர்ந்தவர்களாக இந்தச் 'சதை மட்டத்திலேயே' வாழ்வது வாழ்க்கையின் ஆழத்தில் கிடைக்கும் அதிக சாசுவதமான உண்மை ஆனந்தத்திலிருந்து நம்மை நாமே வஞ்சித்துக் கொள்வதாகும். அப்படியிருப்பவன் அறிவில்லாத அசடு. அவன் உலகப் பொருள்களில் பற்றுக் கொள்கிறுன். அந்தப் பற்று வளர வளர அவன் இந்தப் பொருள்களின் வழியில் சிக்கி எப்போதும் அந்தப் பொருள்களிடமே கவனம் செலுத்திக்

கொண்டிருப்பான். அவனால் அதை நிறுத்த முடியாது. அவைகளோடு பிணைப்புண்டு அவற்றின் மாற்றங்களுக்கேற்ற வாறும், அழிவுக் கேற்றவாறும் அவனும் ஆடவேண்டியிருக்கும். இறுதியில் தெய்வீக வாழ்க்கை என்கிற சிறந்த பிரயோசனத்தை அடையாமலேயே தன் ஆற்றல்களை வீணடித்து விடுவான்.

எப்போதும் ஆத்மாவில் வசிக்கிறவர்கள்: பொருள்களின் உலகத்திலிருந்து பற்றை அறுத்துக் கொள்வது என்பது மனதை அதை விட உயர்ந்ததும் தெய்வீகச் சிறப்புக் கொண்டதுமான வேறு ஒன்றுடன் ஒட்டி வைத்துக் கொண்டால் ஒழிய இயலாத ஒன்று. மனிதனுக்குக் கிடைத்திருக்கிற மனது—புத்தியாகிற கருவி ஏதாவது பொருள்களின் போக்கு உள்ள நினைவில்தான் இருக்க முடியும். ஒன்றையும் எண்ணாமல் சூனியத்தில் இரு என்றால் அதனால் முடியாது. உதாரணமாக நாம் இன்று, ''நாம் பார்த்த அந்த வழுக்கைத் தலையை விழித்தவுடன் நினைப்பதில்லை'' என்று முடிவு செய்து கொள்வோம். நிச்சயமாக மறுநாள் விழித்தவுடன் அதுபற்றித்தான் நினைப்போம் ஆனால் ''நாராயண—நாராயண என்று நினைப்போம்'' என்று உருப்படியாக ஒரு கருத்தைக் கொடுப்போம். அப்போது மனது வேண்டாத நினைவை முழுமையாக விட்டு விடும். அதே போல் மனது கெடுதலுடன் தன் ஒட்டுதலை விட்டுவிடவேண்டும் என்றால் ஆத்மாவின் நினைவாகிற போக்கிலே நிறுத்தப்பட வேண்டும்.

வேட்கைகள் எல்லாம் அமர்ந்த நிலையில் உள்ளவர்கள். விரும்புவது (கோருவது, வேட்கை கொள்வது) புத்தியின் வேலை. புத்தி விரும்பும், மனது அந்தப் பொருளைப்பற்றி நினைக்கத் தொடங்கும். விருப்பங்கள் எப்படியோ அப்படியே எண்ணங்களும் அமையும். எனவே அழியக் கூடிய, மாறக்கூடிய பொருள்களை விரும்பாதிருக்கும்படி புத்தியைப் பழக்க வேண்டும். விருப்பங்கள் அமர்ந்து விட்டால் மனமும் அமைதி பெற்றுவிடும்.

இன்பம் துன்பம் போன்ற பரஸ்பா விரோத இரட்டைகளி லிருந்து விடுபட்டு:— இந்த உடல் இந்திரிய— விஷயங்களுடன் சம்பந்தப்படும்போது இந்த சம்பந்தத்தின் பயனாக இன்பம் என்றோ துன்பம் என்றோ அனுபவமாக ஏற்றுக் கொள்வது மனம் தான். மனது இந்த (த்வந்த்வங்களை) இன்பம், துன்பம் போன்ற பரஸ்பர விரோத அனுபவங்களை உணரத்தொடங்கும்போது அது 'துன்பத்துக்கு' எதிர்ப்புத் தெரிவிப்பதும், 'இன்பத்தைத் தேடி' விழைவதும் இயற்கையே. இவ்விதம் ஒன்றை ஒதுக்கவும், மற்றொன்றைத் தேடவும் பித்துப் பிடித்து ஓடத் தொடங்கினால் பிறகு ஒரு அமைதி நிலை ஏற்படுவது என்பது கடினம். ஏன் என்றால் இன்று எந்தப் பொருள் இன்பத்துக்குக் காரணமாக இருந்ததோ அதுவே— நாளைக்கும் இன்பம் தரும் என்று சொல்ல

முடியாது. நேற்று இன்பம் தந்தது இன்று துன்பம் தரும் பொருளாகத் தோன்றுகிறது. இவ்விதம் நிலேயில்லாத ஒரு சுகத்தைத் தேடி அதாவது நமக்குள் ஒரு பண்பாட்டு வளர்ச்சியை ஏற்படுத்திக் கொள்ளும் வாய்ப்பை விட்டுக் கொடுத்து விடுவதாகும்.

இறுதியில் இந்த சுலோகம் ஒரு கட்டளேயின் வேகமும் நடையும் கொண்டு நேரடியாக காரிய ரூபமாகச் செய்யத் தகுந்ததும் நல்ல நம்பிக்கையை ஊட்டக் கூடியதுமான ஒரு கூற்றுடன் முடிகிறது. அதாவது: ''மோகம் நீங்கியவர்கள் அந்த நித்தியமாயுள்ள பரமபதத்தை அடைகிறார்கள்'' என்பதாகும். உபாதிகளின் மூலம் இயக்கம் பெற்ற பரமசைதன்யமே பரிதாபத்துக்குரிய மனிதன். பாவம், அவன் தானே ஏற்படுத்திக் கொண்ட பளுவின் இழுப்பு நெருக்கடியாலும் அதன் அமுக்கத் தொல்லேயாலும் பிரிக்கப்பட்டு அவதியுறுகிறான். அதே சைதன்யம் இந்த உபாதிகளிலிருந்தும் அவற்றின் மூலம் போலியாகப் பெறப்படுகிற துன்பங்களிலிருந்தும் ஒதுங்கி விடும்போது எல்லேயற்ற பரம் பொருளே அனுபவிக்கும் தெய்வீக நேரம் கிடைத்துவிடும்.

அந்த அழியாத பரமபதம் அடுத்த சுலோகத்திலும் இன்னம் தெளிவாக்கப்படுகிறது:

*ந தத் பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக:*
*யத்கத்வா ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம* **15:6**

ந— இல்லே; தத்— அதை; பாஸயதே— ஒளிரச் செய்கிறது, ஸூர்ய:— சூரியன்; ந—இல்லே; சசாங்க: இததிரன்; பாவக:— அக்னி; யத்— எதை; கத்வா— அடைந்து; ந— இல்லே; நிவர்த்தந்தே— திரும்புவது; தத்— அந்த; தாம— இடம்; பிரமம்— எல்லாவற்றிலும் உயர்ந்தது; மம— என்னுடைய.

அதை சூரியன் ஒளிரச் செய்கிறதில்லே; சந்திரனும் அக்னியும் கூட ஒளிரச் செய்கிறதில்லே; எங்கே சென்றால் (சென்ற) அவர்கள் திரும்பி வருவதில்லேயோ அதுவே என்னுடைய பரமபதமாம்.

''பூர்ணத்வத்தை அடைந்து விட்டால் மீண்டும் அகந்தை மையமாகக் கொண்ட இந்த உலக அபத்தங்களுக்குத் திரும்பி வந்து அல்லல்படுகிற நிலே வராது, அடைந்து விட்டபிறகு அந்த நிலே எக்காரணத்தைக் கொண்டும் இல்லாமல் செய்து விட முடியாது'' என்ற அதே கருத்து இந்த சுலோகத்திலும் வலி யுறுத்தப்படுகிறது. அத்யாத்ம சாஸ்திரங்களில் புனருக்தி (அதாவது திரும்பத் திரும்பச் சொல்லுதல்) ஒரு கருத்தை வலி யுறுத்திச் சொல்வதற்காகப் பயன் படுத்தப்படும் ஒரு (உத்தி) வழி. இந்த வழியை எல்லா இடங்களிலும் பயன் படுத்துவதில்லே

என்பது உண்மைதான். தர்க்கவாதத்துக்கு இடம் இருந்தால் வாதம் செய்தே ஒரு கருத்தை நிலைநாட்டிவிட முடியும். ஆனால் சில பிரதேசங்களில் முதலில் குருவுக்கே பிரவேசம் இருக்கும். அங்கே அப்போது சீடர்கள் நுழைய முடியாது. எனவே ரிஷிகள் நாம் முன்பின் அறியாத அந்த எல்லையற்ற பரம்பொருளின் அனுபவத்தை ஒப்புக் கொள்வதற்காக மீண்டும் மீண்டும் அழுத்திச் சொல்லி நம்பவைத்தார்கள். அவர்களுக்கு அதைத் தவிர வேறு வழியில்லை.

மஹிமை வாய்ந்த பூரணத்துவ நிலையைத்தான் அநேகமாக கீதையின் எல்லா சுலோகங்களுமே ''இலக்கு இடம்'' என்று சுட்டுகின்றன. இது சுத்த சுயம்பு நிலை. வர்ணனைக்கோ, இந்திரிய அனுபவங்களுக்கோ உட்படுவது அல்ல. இருந்தாலும் இங்கே நலம் அறிந்த நாசத்துக்குள்ளாகும் பிரபஞ்சத்தை ஒட்டி அந்த நிலையைச் சுட்டிக்காட்ட ஒரு நேர்மையான முயற்சி செய்யப் பட்டிருக்கிறது.

அதை சூரியனோ, சந்திரனோ, அக்னியோ ஒளிரச் செய்வதில்லை:—

நம்முடைய ஊனக்கண்களுக்கு பொருள்களைக் காண உதவி அருளும் ஒளியின் சாதனங்கள் அனைத்தும் இங்கே கூறப்பட்டிருக் கின்றன. ஒரு பொருளைக் காண்பது என்பது அதைப்பற்றிய அறிவைப் பெறுவதாகும். நம்முடைய கண்ணாகிய பொறி தன் ஆற்றலைப் பயன் படுத்திப் பொருளைக் காண வேண்டும் என்றால் அந்தப் பொருள் கண் எதிரே இருந்தால் மட்டும் போதாது. அதன் மேல் ஒளியும் பரவி இருக்க வேண்டும். ஒளியின் இடை யில்தான் கண்கள் உருவத்தையும் நிறத்தையும் காணமுடியும். மேலும் கண்கள் மட்டும் தான் பொருளின் உருவத்தைக் காண்கின்றன என்பதில்லை. காதுகள் சத்தத்தைக் கேட்கின்றன. மூக்கு வாசனையையும், நாக்கு சுவையையும் தோல் தொடும் உணர்ச்சியையும் அறிகிறது. ஒவ்வொரு பொறியும் அதற்குரிய பொருள்களை அறிகிறது. இதுமட்டும் இல்லை. நாம் நம் உணர்ச்சி களையும் கருத்துக்களையும் கூடப் 'பார்க்கிறோம்'. நாம் இந்திரிய விஷயங்கள், உணர்ச்சிகள், எண்ணங்கள் இவை அனைத்தையும் எந்த ஒளியில் பார்க்கிறோமோ அது சைதன்யத்தின் ஒளியாகும். அதைக் கொண்டுதான் நாம் நம் அனுபவங்களை உணர்கிறோம்.

இந்த சைதன்யப் பிரகாசத்தை புற உலகில் இருக்கிற சூரியன் சந்திரன் தீ ஆகிய ஒளி மூலங்கள் ஒளிரச் செய்ய முடியாது* உண்மையில் அவையும் நம்முடைய சைதன்யத்தின்

* இதைப்பற்றி அதிகம் தெரிந்து கொள்ள சுவாமிஜியின் கடோபநிஷத் விரிவுரையைப் பார்க்கவும் II 5.5.

காட்சிப் பொருள்களே. நாம் அதை எப்போதும் உணர்கிறோம். ஒரு காணப்படும், காட்சிப் பொருள் காணும் பொருளை ஒளிரச் செய்ய முடியாது. காணும் பொருளும் காணப்படும் பொருளும் ஒரு போதும் ஒன்றாயிருக்க முடியாது எந்தப் பேருணர்வின் உதவி கொண்டு நாம் நம்முடைய வாழ்வின் சுகதுக்கங்களை உணர்கிறோமோ அது சுத்த நித்ய பரம சைதன்யமாம். அந்த சைதன்யத்தை அடைவதுதான் இறுதிக்குறிக்கோள் என்று கீதை சுட்டிக் காட்டுகிறது.

அது என்னுடைய பரமபதம் (மேலான இருப்பிடம்:— மனம் புத்தி இவைதரும் கலக்கங்கள், பதற்றங்களிலிருந்து* மீறிச் சென்றோமானால் நாம் எந்த பேருணர்வு (பரம சைதன்ய) நிலையை அடைகிறோமோ அதைத்தான் இங்கே பரமனின் பரமபதமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. அதுவே பரமனின் இருப்பிடம். அங்கே சென்றால் நாம் உறுதியாக 'உண்மை'த் தத்துவமான அந்த எல்லையற்ற பரம் பொருளை ''வசதி கேட்டு'' ''அனுமதி பெற்று'' சந்திக்கலாம்.

நாம் எல்லோருமே உபயோகவாதிகள்! எனவே அந்த 'உண்மை'யை அனுபூதியாக உணர இவ்வளவு சிரமப்படுவது சரிதானா, புத்திசாலித்தனமா? என்று சந்தேகப்படலாம். மீண்டும் பழைய குழப்பங்களுக்கே திரும்பி வந்து, பன்மைக்குணமும் அழியும் தன்மையும் கொண்ட, வேதனை நிரம்பிய இந்த உலகில் அவஸ்தைப்படும் நிலையில் சேர்ந்து விடும் அபாய நேர்வுக்கு இடம் இல்லையா? கண்ணன் 'என் பரமபதம்' என்று சொல்லி அதற்கு அடைமொழியாக 'எங்கே சென்றவர்கள் திரும்பி வருவதில்லையோ' என்று அழுத்தம் தந்து மூன்றாம் முறையாக மேற்சொன்ன பயத்தை நீக்கி சாதகர்களுக்கு உறுதி அளிக்கிறார்.

ஒருவன் ஒரு ஞானத்தைப் பெற்று விட்டான் என்றால் பிறகு அதில் தவறுகள் செய்வது கிட்டத்தட்ட முடியாத ஒன்று. இது அனுபவரீதியாகப் பெற்ற உண்மையாகும். பெரிய சங்கீத வித்வானுக்கு தப்பும் தவறுமாக அபஸ்வரத்தில் பாடுவது என்பது கற்றுக்குட்டிக்குத் தேர்ந்த வகையில் பாடுவது எவ்வளவு கடினமோ அவ்வளவு கடினமே. ஒரு மொழியை நன்கு கற்றுக் கொண்ட பிறகு அதை இலக்கணபிழை, சொற்பிழையுடன் பேசுவது, படிக்காதவன் சரியாகப் பேசுவதளவுக்குக் கடினமே. இந்த உலகம் குறைபாடுகள் கொண்ட அபூர்வ உலகம். இந்த உலக வாழ்விலேயே பண்பட்ட ஒருவன் பழைய பண்படாத நிலைக்குத்திரும்புவது கடினமானது என்றால் பூரண நிலையை அடைந்த ஒருவனுக்கு மீண்டும் குழப்பங்களும் அறியாமையும்

---

* இந்த அத்தியாயம் 5வது சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கும் நிபந்தனைகளைப் பூர்த்தி செய்து...

கொண்ட நிலைக்குத்திரும்புவது என்பது எவ்வளவு அதிகம் முடியாத செயலாக இருக்க வேண்டும்? *

இந்த சுலோகத்தில் நிருபாதிகமான (காரணங்களற்ற) சுத்த ஆத்மனை அனந்த உண்மைத்தத்துவம் எளிய நடையில் பூரணமாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. உலகிலேயே உள்ள சமய நூல்களில் கிடைக்கும் மிகமிக அபூர்வ சுலோகங்களுள் இது ஒன்றாகும். ஹிந்து சமயத்தில், சாவுக்குப் பிறகும் ஜீவன் வேறு ஒரு உடலில் வேறு சூழ்நிலையில் தன் வாழ்க்கையைத் தொடருகிறான். எனவே வாழ்வுத்தொடர்ச்சி உண்டு'' என்று வலியுறுத்தப்பட்டிருக்கிறது. இப்படிப் பிறவியையும் சாவையும் மீண்டும் மீண்டும் அனுபவிப்பவன் ஜீவன், அதாவது உடல் எடுத்த ஆத்மா. இந்த ஜீவன் தான் மனம் புத்தியாலான சூக்கும சரீரத்தை உபாதியாகப் பெற்று அதன் மூலம் லீலைகள் புரியும் நித்திய உணர்வு (பரமசைதன்ய) ஒளியாகும். எனவே சாவு என்பது ஒரு சூக்கும சரீரம். புது விளைநிலங்களையும் மேய்ச்சல் மைதானங்களையும் தேடி தூய உடலை மாற்றிக் கொள்ளும் நிகழ்ச்சிதான். இவற்றிலதான் அது வெளிப்பட்டு வளரமுடியும். இந்தப் போக்கு 'அந்த எல்லையற்ற பரமபதத்தை அடைவதாகாது. ஏன் என்றால்,' என் பரமபதம் சென்றடைந்தால் மீண்டும் திரும்பி வரும் இடமல்ல' என்று கண்ணன் சொல்லியிருக்கிறார்.

அப்படி சந்தேகம் இருந்தாலும் அதைத் தீர்க்க, ஜீவனுடைய அமைப்பும் இயற்கையும் வரும் சுலோகங்களில் விளக்கப்படுகின்றன.

மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதன:
மன: ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தானி கர்ஷதி 15:7

மம ஏவ— என்னுடையவே; அம்ச:— அமிசம்; ஜீவலோகே— ஜீவர்களுடைய உலகத்தில்; ஜீவபூத:— ஜீவனாக ஆகி; ஸநாதன:— பழைய காலம் முதல் என்றும் உள்ள: மன: ஷஷ்டாணி— மனதுடன் சேர்த்து ஆறான; இந்திரியாணி— ஞானேந்திரியங்கள்; ப்ரக்ருதிஸ்த்தானி— பிரகிருதியில் நின்று; கர்ஷதி— இழுக்கிறது.

என்னுடைய ஒரு சநாதன அமிசம உயிர்கள் வாழும் உலகத்தில் ஜீவாத்மாவாக ஆகி, பிரகிருதியில் இருந்து கொண்டு ஐந்து இந்திரியங்களையும் மனதை ஆறாவதாகக் கொண்டு தன்னிடம் இழுக்கிறது.

என்னுடையதேயான ஒரு அமிசம் (கீற்று):எல்லையற்ற பூரணத்துக்குரியஅமிசங்கள் (கீற்றுக்கள், பகுதிகள்) கிடையாது.

* எனக்கு என்னுடைய இந்த தர்க்க வாதம் எவ்வளவு பலஹீனமானதாகி விடும் என்று நன்கு புரிகிறது. ஏன் என்றால் எவனும் புத்தியை மாத்திரம் பயன்படுத்தி இந்த உண்மையை அறியமுயலுகிறவன் இந்த வாதத்தைக்கண்டு எள்ளி நகையாடுவான். அதனால் தான் நம்முடைய சாஸ்திரங்களில் உண்மையை இதயத்தில் நிலை நாட்ட திரும்பத் திரும்பச் சொல்லும் உத்தி கையாளப்படுகிறது.

அது தனக்குள் பிரிவுகளை ஏற்றுக் கொள்ளாத ஒரு பூரண தத்துவம். என்னுடைய அறை நான்கு சுவர்களால் சூழ்ப்பட்டிருக்கிறது. இச்சுவர்களை ஓட்டி என் அறைவெளி புறத்தேயுள்ள அகண்டவெளியினின்றும் வேருகக் கருதப்படுகிறது. அதே போல குறிப்பிட்ட ஒரு ''மனம்—புத்தி''யாகிற கருவியை வைத்து எல்லையற்ற அந்தப் பேருணர்வுத் தத்துவம் (பரம சைதன்யம்) அந்தக் கருவிகளை இயக்கும்போது அறியாமை காரணமாக அந்த உபாதிகளால் வரம்புக்குட்படுத்தப்படுவதாகக் கருதி விடுகிறோம். வாளியில் காணப்படுகிற சந்திரன் (பிம்பம்), வாளியிலுள்ள தண்ணீரை சிறிய காற்று அசக்கினுல்கூட, ஆடியும், துண்டுகளாக உடைந்தும் காணப்படும். இவ்விதம் லக்ஷக் கணக்கான சந்திரர்கள் உடைந்தாலும் மடிந்தாலும் அந்த அழியாத உண்மைச் சந்திரனுக்கு ஒன்றும் நேரம் போவதில்லை. அதே போல பரமசைதன்யம் ஒரு சூட்சும சரீரத்தை அண்டும்போது ஜீவனுகிறது. அந்த ஜீவனுக்குள்ள குறைபாடுகளையும் வேலைகளையும் அந்தப் பேருணர்வுத் தத்துவம் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. ஜீவன், சந்தோஷம், வருத்தம், அறிவு, அறியாமை, அமைதி, கலக்கம் இவைகளின் காரணமாக மாறலாம். ஆனுல் நம் உள்ளத்தில் ஒளிர்கிற எல்லையற்ற அந்தப் பரம சைதன்யம் நித்தியமானது. அதனுல் தான் ஜீவனுக்கு உள்ள ஆத்மாவை ஜீவலோகத்தில் 'அமர ஆத்மா' என்று அடைமொழி கொடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்திரியங்களைத் தன்வசம் இழுக்கின்றன— இந்த பரம சைதன்யமாகிற ஒளியின் கீற்று உடலை உயிருடன் செயலாற்றச் செய்கிறது. உயிருள்ளதை வாழவைக்கிறது. மேலும் இந்திரியங்களின் ஆற்றல்களையும் மனதின் திறமைகளையும் நிலை நாட்டுகிறது. இவ்வளவையும் அதன் இருப்பே (முயற்சியோ, இயக்கமோ தேவையில்லை) செய்விக்கிறது. மேலும் இவ்வளவும் அதைச் சுற்றியே நிகழ்கின்றன. உண்மைதான், இந்த ஆற்றல்கள் எல்லாம் சந்தேகமின்றி பிரகிருதியின் பௌதிகப் பொருளுக்கு உள்ளவைதான் என்ருலும் அதே சமயம் பார்ப்பது கேட்பது போன்ற செயல்கள் எல்லாம் இந்திரியங்களாலும் மனதாலும் ஆகக் கூடிய காரியங்களுமில்லை. இவை உபாதிகள் மூலம் வெளிப்படும் ஆத்மாவின் வெளிப்பாடுகளே. அதனுல்தான் *இந்திரியங்களுடன் மனதையும் சேர்த்து அது தன்னிடம் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி உபாதிகளுக்குட்பட்ட ஆத்மா தான் அழியும் ஜீவனுகக் கருதப்படுகிறது. அதற்குக் காரணம் புரிந்து கொள்வதில் உள்ள அறியாமை. அது அந்தப் பூரணத்துவத்தின் கற்பனை செய்யப்பட்ட ஒரு பகுதியே—

---

* கீதை 13ம் அத்தியாயம்

** இந்த ஆற்றல்களுக்கு உரிய வெளிப்பாட்டு இடங்கள் உடலில் அமைந்திருக்கின்றன.

இக்கருத்துக்கள் எல்லாம் முன்பே கீதையில் விளக்கப் பட்டிருக்கின்றன. **

எல்லையற்ற பரமாத்மன் இந்த 'ஆற்றல்களை' எல்லாம் தன்பக்கம் எப்போது இழுத்துக் கொள்கிறது?''

சரீரம் யதவாப்னோதி யச்சாப்யுத்க்ராமதீச்வர:
க்ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர் கந்தானிவாசயாத்
15:8

சரீரம்— உடல்; யத்— எப்போது; அவாப்னோதி— அடைகிறதோ; யத்— எப்போதும்; ச— உம்; அபி— கூட; உத்க்ராமதி— விடுகிறதோ; ஈச்வர— ஈசுவரன்; க்ருஹீத்வா— எடுத்துக் கொண்டு; ஏதானி— இவற்றை; ஸம்யாதி— போகிறான்; வாயு— காற்று; கந்தான்— வாசனைகளை; இவ—போல; ஆசயாத்— (அவற்றின்) தங்குமிடத்திலிருந்து (பூக்களிடமிருந்து).

ஈசுவரன் உடலை அடையும் போதும் (மேலும்) அவர் அதை விட்டுப் போகும்போதும் அவர் இவைகளை எடுத்துக் கொண்டு காற்று வாசனைகளை அவற்றின் தங்குமிடங்களிலிருந்து (பூக்களிடமிருந்து) எடுத்துச் செல்வது போல செல்கிறார்.

ஈசுவரன் உடல் எடுக்கும்போது: எல்லையற்ற பரம்பொருள் மனம்— புத்திக்கு உட்படும் போது ஜீவனாகிறான். இந்த ஜீவன் பல உடம்புகளை எடுத்துக் கொண்டு தன்னுடைய பொங்கி வரும் ஆசைகளுக்கேற்றவாறு, அவை நிறைவேறுவதற்கும் தீர்வதற்கும் தகுதியான சூழ்நிலைகளில் 'அவதரிக்கிறான்.' ஜீவன் உடல் எடுத்து பிறகு அதை விடும் வரையில் இந்த இந்திரியங்களையும் மனதின் பதிவுகளையும் தன்னுடனே வைத்துக் கொள்கிறான். சரியானபடி சொன்னால் சூக்கும சரீரம் இந்த ஆற்றல்களை எல்லாம் அடக்கியதே.*

சாவின் போது சூட்சும சரீரம் ஸ்தூல சரீரத்தை விட்டுப் போய்விடுகிறது. இந்தச் சடலம் கட்டையாகி விடுகிறது. உயிரற்ற உடல் பார்க்கிறதற்குப் பழையபடியே தோன்றினாலும் இந்திரிய சக்திகளோ, மனம், புத்தியின் செயல்பாடோ அதில் இருக்காது. இவைகள் எல்லாம் அந்த உடலுக்கு இந்த செயல் திறன்களை உதவிய சூக்கும சரீரத்தின் வெளிப்பாடுகள். அது போனபிறகு இந்த உடலுக்கு அந்த சூக்ஷ்ம ஆற்றல்கள் இருக்காது. அப்போது அது இறந்த பிணம் ஆகிவிடுகிறது.

சாவின்போது அந்த சூட்சும சரீரம், காற்று வாசனைகளை

---

* சுவாமியின் ஆத்மபோத உரைகளைப் பார்க்கலாம். பதின்மூன்றும் சுலோகத்தில் சூட்சும சரீரத்தின் 13 அம்சங்களும் விவரிக்கப்படுகின்றன.

அவை தங்கும் இடங்களிலிருந்து எடுத்துச் செல்வது போல் இந்த நுண்ணிய ஆற்றல்களேயும் எடுத்துச் சென்று விடுகின்றது. வீசுகிற காற்று வெளியெங்கும் பரவியுள்ள வளியி(காற்று)லிருந்து வேருனதல்ல என்ருலும் அந்தக் காற்று வாசனேகள் உள்ள பூக்கள். சந்தனம், செண்டு பாட்டில் போன்றவற்றின் மேலே வீசும்போது அவற்றின் வாசனேயை அடித்துச் செல்கிறது.

அதே போல சூக்ஷ்ம சரீரம் விட்டுப் போகும்போது இந்திரி யங்கள் மனது புத்தி ஆகியவற்றை ஸ்தூலமாக எடுத்துச் செல் லாமல் வாழ்ந்தது, உணர்ந்தது, நிறைந்தது ஆகியவற்றின் வாசனேயாக எடுத்துச் செல்கிறது. இப்படிப் பார்த்தால் மனது என்பது வாசனேகளின் மூட்டையே தவிர வேறு இல்லே. இந்த வாசனேகளும் அந்த எல்லேயற்ற பரம சைதன்யத்தில்தான் இருப்புக் கொள்ள முடியும். இந்த வாசனேகளுக்கு ஒளி (உயிர்) ஊட்டும் உணர்வு ஒளிக்குத்தான் 'ஜீவன்' என்று பெயர்.

இந்த சுலோகத்தில் ஜீவனே ஈசுவரன் என்று சொல்லபட்டி ருக்கிறது. ஏன் என்ருல் அதுவே இந்த உடலுக்கு ஈசுவரனுக இருக்கிறது; உடலின் செயல்கள்; உணர்ச்சிகள், சிந்தனேகளே நடத்துகிறது. ஒரு அதிகாரிக்கு மாற்றம் உத்தரவு வந்தவுடன் அவர் தன் சாமான்களேக் கட்டி எடுத்துக் கொண்டு தன் இருப் பிடத்தை விட்டு நகர்கிருர். பிறகு மாற்றலான இடத்துக்குச் சென்றவுடன் தன் வசதிக்காக அவற்றை எல்லாம் பரப்பி விடு கிருர். அதேபோல ஒரு உடலே விடும்போது இந்த சூட்சும சரீரம் ஸ்தூலமான * வாசஸ்தானத்திலிருந்து கிளம்பி புது இடத்தை அடைகிறது. அங்கே மீண்டும் அது பரவி விடுகிறது. அந்தப் புது 'வாழ்க்கை அனுபவங்களுக்கான வீட்டின் மூலம் தன்னே வெளிப் படுத்திக் கொள்கிறது. இந்த சுலோகங்கள் உபநிஷதக் கூற்று களின் சுருக்கமே. **

சென்ற சுலோகங்களில் சூட்சும சரீரம் 'ஐந்து இந்திரியங்களும் ஆருவதாக மனமும்' என்று மொத்தமாகச் சொல்லப்பட்டது. வருகின்ற சுலோகங்களில் அது இன்னம் விவரத்துடன் விளக்கப்படுகிறது.

ச்ரோத்ரம் சக்ஷு: ஸபர்சனம் ச
ரஸனம் க்ராண மேவ ச
அதிஷ்டாய மனச் சாயம்
விஷயானுப ஸே வதே. 15:9

ச்ரோத்ரம்—காது; சக்ஷு:—கண்; ஸபர்சனம்—

* லோகாயதனம்—ஆத்ம போதம்—சுவாமிகள் உரை: 15'ம் சுலோகம் பார்க்க வும். அது ஸ்தூல சரீரத்தை லோகாயதனம் (போக வீடு) என்று வர்ணிக்கிறது.
** சுவாமிஜியின் ஐத்ரேய உபநிஷத விரிவுரைகளேப் பார்க்கவும்.

தொட்டுணர்வுக்கான கருவி (தோல்); ச—மேலும்; ரஸனம்—சுவை(க்குரிய இந்திரியம்); க்ராணம்—நுகர்தல் (அதற்கான இந்திரியம் மூக்கு); ஏவ ச—ஐயும்கூட; அதிஷ்ட்டாய—ஆதிக்கம் செலுத்தி; மன—மனம்; ச—மேலும்; அயம்—அவன்; விஷயான்—புலன் நாடும் விஷயங்களை; உபஸேவதே—துய்க்கிறான்.

காது, கண், தோல், சுவை, நுகர்தல், அப்படியே மனம் இவற்றின் மேல் ஆதிக்கம் செலுத்தி அவன் புலன்நாடு விஷயங்களைத் துய்க்கிறான்.

ஜீவன் மனம் என்கிற கருவியின் மூலம், புதிய சூழ்நிலையில் கிடைக்கும் பொருள்களைத் துய்க்கிறான். அது கண், காது, மூக்கு, நாக்கு, தோல் இவற்றின் மூலம் பார்த்தும், கேட்டும், நுகர்ந்தும், சுவைத்தும், தொட்டும் நடைபெறுகிறது.

பரம சைதன்ய ஒளி எந்தப் பொருளையும் ஒளிரச் செய்வதில்லை. ஏன் என்றால் அந்த ஒளியில் அதைத் தவிர வேறு எந்த அன்னியப் பொருளும் கிடையாது. மனம்—புத்தியாகிற உபாதிகளில் பிரதிபலிக்கிற சைதன்ய ஒளியே தனித்த ஒளிக் கற்றையான புத்தியாகிறது. அதில்தான் இந்த புலனுக்குரிய விஷயங்கள் ஒளி பெறுகின்றன. அதனால்தான் நாம் ஏதாவது ஒரு பிரசினையில் தீவிரமாகக் கவனம் செலுத்தி நினைத்துக் கொண்டிருக்கும் போது நம் நெருங்கிய நண்பர்களே வந்து பேசினாலும் நாம் அவர்களைப் பார்ப்பதுமில்லை. அவர்கள் சொல்வதைக் கேட்பதுமில்லை. எதிரேயுள்ள பொருளின் பிரதிபிம்பம் கண்களில் ஏற்பட்டு விட்டது. காதின் பறையில் பேசுகிறவன் ஒலி பட்டுவிட்டது. ஆனாலும் நாம் ஒன்றையும் பார்க்கவில்லை. கேட்கவும் இல்லை. ஏன் என்றால் உணரும் நம் மனது வேறு எங்கோ திரும்பியிருக்கிறது. எனவே இந்த ஜீவன் (உடலில் வசிப்பவன்) மனதை ஒவ்வொரு இந்திரியத்திலும் தனித் தனியாகப் பிரவேசிக்க வைத்து விஷயங்களைத் துய்க்கிறான்.

பூரண, நித்ய சைதன்யம் நம்முடைய ஒவ்வொரு அனுபவத்திலும் மிகவும் நெருங்கியே இருக்கிறது. நாமும் ஒவ்வொரு கணமும் உண்மையான தெளிவான அனுபவங்களைத் துய்த்துக் கொண்டே இருக்கிறோம். அப்படி இருந்தும், அதாவது அந்தப் பரம சைதன்ய தத்துவம் எப்போதும் எல்லா இடங்களிலும் நம்முடன் மிக நெருங்கி உயிருக்கு உயிராய் இருந்தும், அந்த திவ்ய பூரணத்வத்தை நம்மால் ஏன் உணர முடிவதில்லை? ஆத்மாவை ஞானக் கண்தான் பார்க்க முடியும்:

உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஜானம் வா குணான்விதம்
விமூடா நானு பச்யந்தி பச்யந்தி ஞான சக்ஷுஷ: 15:10

உத்க்ராமந்தம்—விட்டுப் போகிறவனை; ஸ்திதம்—இருக்கிறவனை; வாஅபி— அல்லது கூட; புஞ்ஞானம்—துய்க்கிறவனை; வா—அல்லது; குணன்விதம்—குணங்களுடன் இணங்கியவனை; விமூடா—மோகத்தில் இருப்பவர்கள்; ந—இல்லை; அனுபச்யந்தி—பார்க்கிறார்கள்; பச்யந்தி—பார்க்கிறார்கள்; ஞானசக்ஷுஷ: —ஞானக் கண் பெற்றவர்கள்.

யார் போகிறான், இருக்கிறான், துய்க்கிறானோ (அவனை) யார் குணங்களுடன் கூடி இருக்கிறானோ அவனை மோகத்திற்குட்பட்டவர்கள் காண்கிறதில்லை. ஆனால் ஞானக் கண் உடையவர்கள் காண்கிறார்கள்.

சாதாரணமான ஒரு மனிதன் தான் பார்க்கும் பொருளைப் பற்றி முழுமையாகவும் சரியாகவும் புரிந்து கொள்வதில்லை என்பது எங்கும் உண்மைதான். பொருள்களைப் பற்றிய அதிக அறிவை அறிவுள்ளவன்தான் பெற முடிகிறது. எல்லோரும் ஒரு இலக்கியப் பகுதியைப் படித்துவிடலாம். ஆனால் மேதாவிதான் அந்தக் கலைக்குள் பொதிந்திருக்கும் அழகு முழுமையையும் புரிந்து கொண்டு அனுபவிக்க முடியும். நகை வியாபாரிகள்தான் ஒரு நகையின் உண்மையான மதிப்பைச் சொல்ல முடியும். மற்றவர் பார்க்கலாம், அவ்வளவுதான். எல்லோரும் பாட்டைக் கேட்கலாம். ஆனால் சிறந்த சங்கீதத்தின் சூட்சும அழகை ஒரு சங்கீத வித்வானே துய்த்து மகிழ முடியும். அதேபோல் உயிர்த் தத்துவம் உள்ளே ஒளிர்கிற படியால் நாம் எல்லோரும் காணவும், உணரவும், எண்ணவும் முடியும். ஆனால் ஞானிதான் அந்த உயிரின் சாரமான 'உயிரை' உணர்ந்து உயிராகவே வாழ முடியும்.

அந்த வரம்பற்ற பரமாத்மா எப்போதும் இருக்கிறான். அது 'இல்லை' என்ற நேரமே கிடையாது. உடலை விடும்போது சூட்சும சரீரம் அந்த ஆத்மாவில் இருப்பினாலேயே இயக்கம் பெறுகிறது. ஸ்தூல உடல் இருக்கும் போதும் அந்த ஆத்மாதான் அனுபவங்களுக்கு ஒளி தருகிறது. வாழ்க்கையில் இன்பங்களைத் துய்க்கும் போதும் நம்முடைய மனத்தின் அனுபவங்களையும் புத்தியின் முடிவுகளையும் அந்த ஒளித் தத்துவம்தான் ஒளிர வைக்கிறது. சில சமயம் நம்முடைய மனத்தின் நிலை பூராவும் சாத்வீகமான அமைதியிலிருந்து தறிகெட்ட ராஜஸப் பதற்றங்களாக மாறுகிறது; அல்லது மந்தமான சோம்பேறித்தனத்தில் முழுகி விடுகிறது. அப்பேதெல்லாம் உள்ளே நிலை எப்படி இருந்தாலும் இந்த பேருணர்வாகிற ஒளிதான் அவ்வளவு அனுபவங்களையும் நாம் பெறத் தகுதியாக அவற்றை ஒளி பெற வைக்கிறது. இவ்விதம் ஒவ்வொரு கணம் ஏற்படும் அனுபவங்களையும் அது சுவைக்கச் சாத்தியமாக்கிக் கொண்டிருந்த போதிலும் அந்த உணர்வாகிற அறிவுத் தத்துவத்தை அறிவிலி தெரிந்து கொள்வதில்லை.

சாதாரண மனிதன் புறத்தே நிகழும் அனுபவங்களின் அமிசங்களையே எண்ணிக் கொண்டும் மேலே மேலே புறத்தையே அனுபவங்களையே தேடிக் கொண்டும் திரிகிருனே தவிர தொடர்ந்து உள்ளே எரிந்து கொண்டும் வேறு எந்த வழியிலும் ஒளி பெற முடியாத அனுபவங்களுக்கு ஒளி தந்து கொண்டும் இருக்கிற அந்த உள் ஒளியை அசட்டை செய்து விடுகிருன். புற உலகில் அனுபவங்களின் கலத்தில் * சிறிய சிறிய விவரங்களிலிருந்து ஒதுங்கும் வைராக்கியம் உடையவர்களே இந்த சுத்த ஆத்மாவான (செயல் காரணத் தத்துவமான) கர்த்தாவை உணர்ந்து அதன் ஆனந்தங்களில் திளைக்க முடியும்.

பூரண நிலையை அடைந்தவனுக்கு இந்தச் சிறப்பான காட்சி (ஆத்ம தரிசனம், ஆத்மசாக்ஷாத்காரம்) கிடைக்கிறது. அதைத்தான் இந்த சுலோகத்தில் 'ஞானக் கண்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது ஏதோ தனியான இந்திரியம் உள்ளே இருக்கிறது என்று எண்ணி விடக் கூடாது. சாதகன் பயிற்சியினுல் பெறுகிற தனித்திறமை இது. இதன் மூலம் அவன் வெளியில் மேலே காணப்படும் குழப்பங்கள் பன்மைகள் இவற்றுக்கு அடியே ஆழ்ந்து சென்று சூட்சுமமான குறிப்புக்களையும் மறைந்திருக்கும் பொருள்களையும் பார்க்கத் தெரிந்து கொள்கிருன். இந்த உள் விழியைப் பெருதவர்கள் அவசியம் அன்ருடம் நடக்கும் செயல்கள், நிகழ்ச்சிகள் இவற்றின் ஊடே நடக்கும் தெய்வத்தின் அமாலீலையைக் காணவே தவறி விடுவார்கள். இந்தக் கருத்தை ஸ்ரீசங்கரர் வேறு இடங்களிலும் கலையழகுடன் சொல்லியிருக்கிருர்.*

சுய பூரணத்வம் அடைவதற்கான கட்டுப்பாடுகளை ஒழுங்காகப் பயிலாமல் இந்த ஞானக் கண்ணைப் பெற முடியாது. யோகத்தின் வெற்றி வெளி வாழ்க்கையிலும் ஒருமைப்பாடு வராமல் கிட்டாது.

**இந்த ஆத்மானுபவம் மிகச் சிலருக்கே கிடைக்கிறது. ஆனுல் அனேகர் முயற்சி செய்தாலும் இதை அடைவதில் தோல்வி அடைகிருர்கள். அது ஏன்?**

**யதந்தோ யோகினஸ்சைனம் பச்யந்த்யாத்ம ந்யவஸ்த்திதம்**
**யதந்தோ(அ)ப்யக்ருதாத்மானே நைநம் பச்யந்த்ய சேதஸ:**
***15:11***

யதந்த:—(சித்தியடைய) முயன்று; யோகின—யோகிகள் (சாதகர்கள்); ச—மேலும்; ஏனம்—இதை; பச்யந்தி—காண்கிருர்கள்; ஆத்மனி—ஆத்மாவில்; அவஸ்த்திதம்—இருக்கிற;

---

* கீதை 13'ம் அத்தியாயத்தில் 5, 6'ம் சுலோகங்களில் க்ஷேத்திர விவரம் பார்க்கவும்.

யதந்த—முயன்றும்; அபி—கூட; அக்ருதாத்மன:—உள்ளம் தெரியாதவர் (பண்படாதவர்); ந—இல்லை; ஏனம்—இதை; பச்யந்தி—பார்க்கிறார்கள்; அசேதஸ—அறிவற்றவர்கள்.

யோகிகள் (சித்திக்கு முயலும் சாதகர்கள்) முயன்று ஆத்மாவில் இருக்கும் அவனை (பரமனைப்) பார்க்கிறார்கள். ஆனால் உள்ளம் தெளியாத அறிவிலிகள் முயன்றும் அவனைப் பார்ப்பதில்லை.

மனதைச் சும்மா இருக்க வைத்து புத்தியையும் அதனுடைய தொல்லை தரும் பற்றுக்களிலிருந்தும் ஆசைகளிலிருந்தும் விலக்கி தூசி தட்டி சுத்தமாக ஆக்கும் முயற்சியில் யார் வெற்றி பெறுகிறார்களோ அவர்களே ஆத்மாவின் பெருமையை உணர்ந்து அதன் எல்லையற்ற பேரின்பத்தைப் பெற முடியும். ஆனால் இயந்திரம் போல் முயலுகிறவர்கள் எல்லோரும் அதை நிச்சயம் அடைந்து தானாக வேண்டும் என்பதுமில்லை. இதுவும் நிகழக்கூடிய உண்மைதான். 'நாங்கள் வருஷக் கணக்காக ஒழுங்காக சாதனை புரிந்து வருகிறோமே, ஆனால் சொல்லிக் கொள்ளும்படி ஒரு முன்னேற்றமும் ஏற்படவில்லை' என்று முணுமுணுக்கிறவர்கள் நூற்றுக் கணக்கில் இருக்கிறார்கள். இது ஏன் அப்படி?' என்று வியப்பு ஏற்படலாம்! அதுவும் உண்மையாக முயலுகிறவர்கள், திருப்தியளிக்கும் முன்னேற்றம் ஏற்படவில்லை என்றோ முற்றிலுமாகத் தோல்வி என்றோ சொல்ல நேரிடுகிறது என்றால் கண்டிப்பாக அது வியப்புக்கு உரிய ஒன்றுதான். இதைப் பார்த்தால் ஜனநாயக யுகத்தில் நாம் இன்று 'யோக முயற்சிக்கே எதிராக ஓட்டு அளித்து 'இது சுய வளர்ச்சிக்கான முறையே அல்ல; யாரோ பலனற்ற கனவு' காண்கிறவர்கள் காவியக் கற்பனை நிலையில் இருந்த போது உளறி வைத்த தவறான ''மருந்துச் சீட்டு'' என்று கூறிவிடலாம்!

சர்ச்சைக்குரிய இந்தக் கேள்விக்கு இங்கே வாதத்துக்கு மிகவும் ஒத்துக்கொள்ளும் வகையில் விடை அளிக்கப்படுகிறது முயன்றாலும் தெளிவடையாத (பண்படுத்தப்படாத) அறிவு அற்றவர்கள் அவனைப் பார்ப்பதில்லை.'' தியானத்தின் பயனை யோகிகள் (சாதகர்கள்) அடைய வேண்டும் என்றால் இரண்டு நிபந்தனைகள் மீற முடியாதனவாக இருக்கின்றன. ஒன்று: மனதைத் தூய்மைப்படுத்துவது: அதாவது இந்திரிய விஷயங்களுடன், அகத்தை மையமாகக் கொண்டு எழும் ஆசைகள் காரணமாக ஏற்படும் பற்றுக்கள் தரும் கலக்கங்களை (விக்ஷேபங்களை) நீக்குவது. இரண்டாவது: ஆத்மாவைப் பற்றித் தெளிவான கருத்துக்களைக் கைக்கொண்டு புத்தியை ஆத்மா பக்கம் திருப்பி வைத்துக் கொள்ளுதலும் அதன் பயனாக புத்தியின் மேல் படிந்

* ஆத்ம போதம்—சுவாமியின் உரை—பார்க்கவும். 47, 65'ம் சுலோகங்கள்.

திருக்கும் பனித் திரையை (ஆவரணத்தை) படித்தல், கேட்டல் (சிரவணம்) சிந்தித்தல் (மனனம்), தியானித்தல் (நிதித்யாஸனம்) இவற்றைப் பயின்று நீக்கிக் கொள்ளுதலும், அதாவது பக்தி, கர்ம யோகம் இவற்றின் மூலம் இந்த இரண்டு நிபந்தனைகளும் நிறைவேற்றப் படாவிட்டால், அவை முறையாகச் செய்து முடிக்கப்படாவிட்டால் ஞான சாதனதுக்காகச் செய்யப்படும் தியான யோகத்தின் முயற்சிகளுக்குப் பரிசாக தோல்விதான் கிடைக்கும்!

சுருக்கமாகக் கூறினல் புலனடக்கத்தைக் கைக்கொண்டு யார் மனது சரியான முறையில் சீர்திருத்தப்பட்டுச் சிறக்க வில்லையோ, அத்துடன் யாருடைய புத்தி குறுகிய அகந்தை மைய மாகக் கொண்டு பொருள்களைக் கோணலான வழியில், கெட்ட முறையில் காணும் போக்குகளைத் துறக்கவில்லையோ, அதாவது யாருடைய அகங்காரம் (கர்வம்) அமர்த்தப்படவில்லையோ, அந்த சாதகர்கள் எவ்வளவு உண்மையாகவும் தீவிரமாகவும் தியானம் செய்தாலும் தங்களுடைய தெய்வீக நிலையில் உயரும் வாய்ப்புக் கள் மிகவும் குறைவு. வாய்ப்பே வராமல் போனலும் போய்விட லாம். அவர்கள் அவனைக் காண மாட்டார்கள். உள்ளபடி ஆத்மாதான் நம்முடன் மிகமிக நெருங்கியிருக்கும் உண்மை. அதைக் காண்பதும் எளிது. என்ருலும் எல்லோரும் அவனைக் காண்பதில்லை. காரணம்: அவர்கள் வேறு புறம் திரும்பி இந்திரிய விஷயங்களுக்குப் பூரண அடிமைகளாக இருப்பதுதான்!

இனி பின்னல் வரும் நான்கு சுலோகங்களிலும் அந்த ஸர்வ வியாபியான (எங்கும் நிறைந்துள்ள) பகவான் நான்கு தெய்வீகத் தன்மைகள் கொண்டவராக வர்ணிக்கப்படுகிருர்: 1. ஸர்வ பிரகாசமான (எல்லாவற்றையும் ஒளிரச் செய்கிற) பேருணர் வொளி; 2. எல்லாவற்றிற்கும் உயிர் அருளுகிற உயிர் மையம் 3. வாழும் பொருள்களனைத்திலும் இருக்கிற உயிரின் வெம்மை; மேலும் 4. எல்லா இதயங்களிலும் இருக்கிற ஆத்மா.

இதுவரை ஆத்மா 1. நாம் அறிந்த பிரகாசமான ஒளிக ளான சூரியன், சந்திரன் அக்னி இவற்ருல் ஒளிரச் செய்ய முடி யாதது என்றும்; 2. அதை அடைந்த பிறகு யாரும் திரும்பி வருவதில்லை என்றும் மேலும் 3. ஜீவன்கள் அதன் அமிசங்களே என்றும் சொல்லப்பட்டது.

இந்த குறிக்கோளான பரமபதமே எல்லாவற்றின் சாரம்; எல்லா அனுபவங்களுக்கும் பின்னல் அடியில் இருக்கும் 'உள்ளம்' என்று காட்டுவதற்காகக் கண்ணன் பின்வரும் நான்கு சுலோகங்களில் தன்னுடைய தோற்றங் களின் சுருக்கத்தைக் கூறி அருளுகிருர்:

யதாதித்யகதம் தேஜோ ஜகத் பாஸயதே (அ) கிலம்
யச்சந்த்ரமஸியச்சாக்னௌ தத்தேஜோ வித்தி மாமகம்:
**15:12**

யத்—எது; ஆதித்யகதம்—சூரியனிடம் சென்று, இருக்கிறதோ; தேஜ:—ஒளி; ஜகத்—உலகை; பாஸய தே—ஒளிரச் செய்கிறதோ; அகிலம்—எல்லா; யத்—எது; சந்திரமஸி—சந்திரனில்; யத்—எது; ச—மேலும்; அக்னௌ—அக்னியில்; தத்—அது; தேஜ:—ஒளி; வித்தி—அறி; மாமகம்—என்னுடையது.

எந்த ஒளி சூரியனில் இருக்கிறதோ, எது உலகம் எல்லா வற்றையும் ஒளிரச் செய்கிறதோ; எந்த ஒளி மதியிலும், தீயிலும் இருக்கிறதோ அது என்னுடையதே என்று அறிவாயாக.

இந்தச் சுலோகத்தைப் படித்துப் பொருளைப் புரிந்து கொள்ள முயலும்போது நவீன அறிவியல் வளர்ச்சி அறிந்த நமக்கு ஒரு 'உலுக்கல்' ஏற்படும். அது நிச்சயம். உடனே ஆடி விடாமல் அமைதியாக நாம் அதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். நாம் நமக்கு ஏற்படும் குழப்பம் நம்முடைய புத்திக் குறைவின் பயனே என்று புரிந்து கொள்வோம். அறிவில் மிகவும் குறை பாடுள்ள அறிவியலைப் படித்துப் படித்து நாமும் நம் மூளைக்கு வேலி போடப் பழகிக் கொண்டு விட்டோம். சிறு வயதில் ஆரம்ப வகுப்புக்களில் பூமி சூரியனின் ஒரு பகுதி; அது அதை விட்டுப் பிரிந்து கிரஹங்களின் பரஸ்பர ஆகர்ஷண சக்தி வலையில் சிக்கி நிற்கிறது. அது இப்போது குளிர்ந்து விட்டது என்று சொல்லிக் கொடுக்கப்பட்டது. ஆனால் சூரியன் எங்கிருந்து வந்தது? என்ற கேள்வியைக் கேட்டு விட்டோமானால், பாவம் அறிவியல் கற் பிக்கும் ஆசிரியருக்குக் கொஞ்சம் சங்கடமாகப் போய்விடும்.

அந்தக் கேள்வி அவரை நியாயமாகவே கோபித்துக் கொள்ளவும் தூண்டிவிடலாம்! அறிவியல் எங்கே சோதனைகள் செய்து முடிவுகள் சொல்ல வசதியாயிருக்குமோ அந்த இடங் களில் மட்டுமேதான் தன் திறமையைக் காட்ட முடியும்.

ஆனால் வேதாந்த சாஸ்திரம் காரணங்களுக்கெல்லாம் காரணமாக இருக்கும் அந்த மூல ஊற்றைப் பற்றிய கேள்வி களுக்கு விடையளிக்க முற்படுகின்றது. அதற்குச் சோதனைச் சாலைகளில் வைத்து நிரூபிக்கத் தக்க ஆதாரங்கள் கிடைக்க வேண்டும் என்பதில்லை. அறிவு அதன் முடிவு கட்டும் திறமை, தர்க்கங்கள், தீர்வுகள், காரண காரியப் பேச்சுக்கள், உறுதியான கூற்றுக்கள் எல்லாம் ஒரு எல்லைவரைதான் போக முடியும். அந்த எல்லைக்கு இப்பால் அவை 'இனி மேலே போக முடியாது' என்று ஒத்துக் கொண்டு நின்றுவிட வேண்டியே இருக்கும்.

அங்கே கேள்விக்கு முழுமையான விடையும் பிரசினைக்கு சமாதானமும் கிடைக்கிறதில்லை. நேர்மையான அறிவு ஏன், எப்படி, என்ன என்று கேட்டுத் தன் வியப்பதை தீர்த்துக் கொள்ள முயன்று கொண்டேதான் இருக்கும். அங்கே அறிவியல் மௌனம் சாதித்து விடுகிறது. அங்கே அது தன்னுல் முடிந்ததைச் செய்து திருப்தியடைந்து விடுகிறது. அதற்கு மேல் அதன் ஒளியிடம் வழியைக் காட்டும் ஆற்றல் கிடையாது. அங்கேயிருந்து வேதாந்தத்தைப் பிடித்துக் கொள்ள வேண்டியதுதான். அதுதான் முழுத் திருப்தியை நோக்கி அங்கிருந்து தன் பயணத்தைத் தொடர்கிறது.

இந்த சுலோகம், 'சூரியனிடத்திலிருந்து எந்த ஒளி கிளம்பி உலகத்தை எல்லாம் ஒளிரச் செய்கிறதோ அந்த ஒளி என்னிடமிருந்து அதாவது பரம சைதன்யமாகிற பேருணர்வுத் தத்துவத்திலிருந்து வெளிவரும் ஒளி, சூரியன் மட்டுமல்ல, சந்திரன் அக்னி தேவன் இவர்களிடமிருந்து வெளிவரும் ஒளியும், அந்த எல்லையற்ற சத்தியப் பொருள் சந்திரன் அக்னி இவற்றின் வழியே வெளிப்படும் போது ஏற்படுகிற ஒளிதான்.

உபாதிகள் (கருவிகள்) அல்லது சாதனங்கள் வேறு வேருக இருப்பதனுல் வெளிப்பாட்டில் தோற்றங்களும் மாற்றம் பெற்று இருக்கின்றன. பல்பின் வெளிச்சம், உலையில் சூடு, விசிறியில் வீச்சு—எல்லாம் ஒரே வஸ்துவின் வேறு வேறு தோற்றங்கள்தாம். அந்த மாற்றத்துக்குக் காரணம் பல்ப், உலை, விசிறி. இவை ஒன்றுக்கொன்று மாறுபட்ட சாதனங்கள். ஆனுல் மின்சாரம் ஒன்றேதான். பரம சைதன்யமான பரமதத்துவம் சூரியன் மூலம் வெளிப்படும்போது வெய்யிலாகத் தோற்றம் எடுக்கிறது. சந்திரனில் நிலவாக வெளியாகிறது. எரியும் கட்டையில் அக்னியாக வெளியாகிறது. ஆனுலும் அவை எல்லாம் அந்த ஒரே வஸ்துவின் வெளிப்பாடுகளே! அதன் மகிமை பொருந்திய உருவங்களே! அந்த எல்லையற்ற பரம்பொருள்தான் உலகத்தை இருந்து இயங்க தகுந்த சூழ்நிலையை ஏற்படுத்தி பல வகைகளிலும் தானும் தன் லீலையை நடத்துவதற்காக இந்த விதம் பல தோற்றங்கள் எடுக்கிறது.

மேலும்,

காமாவிச்ய ச பூதானி தாரயாம் யஹ மோஜஸா
புஷ்ணுமி சௌஷதீ: ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக:
15:13

காம்—பூமிக்குள்; ஆவிச்ய—புகுந்து; ச—மேலும்; பூதானி—எல்லா உயிர்களே; தாரயாமி—தாங்குகிறேன்; அஹம்—நான்; ஓஜஸா—சக்தியால்; புஷ்ணுமி—போஷிக்கிறேன் (வளர்க்கிறேன்); ச—மேலும்; . ஔஷதீ:—செடிகள்; ஸர்வா:—எல்லாவற்றையு[illegible];

ஸோம:—சந்திரனாக; பூத்வா—ஆகி; ரஸாத்மக:—சாறு நிறைந்த

பூமிக்குள் புகுந்து நான் என் சக்தியால் எல்லா உயிர்களையும் தாங்குகிறேன். ரஸம் நிறைந்த சந்திரனாக ஆகி நான் எல்லாச் செடிகளையும் (வளர்க்கிறேன்) போஷிக்கிறேன்.

பூமிக்குள் புகுந்து நான் என் சக்தியால் எல்லா உயிர்களையும் தாங்குகிறேன்: செயற்கை உரங்கள் தயாராவதற்கு வெகு காலம் முன்னால் இருந்தே நிலத்துக்கு சரித்திரம் உண்டு. பழைய காலங்களில் சில இடங்களில் இன்று இருப்பதை விட மிக அதிகமான மக்கள் தொகை இருந்தது. அந்த நிலையிலும் இந்த பூமி உயிர்களைத் தாங்கி வளர்த்து வந்தது. 'நிலத்துக்குள்ள, உயிரைத் தாங்கி வளர்க்கும் இந்த ஆற்றல், தாதுப் பொருள்களுக்குள்ள வெம்மை எல்லாம் 'என்னுடைய சக்தியே' என்கிறார் ஸ்ரீ பகவான். அதன் பொருள்: சூரியன் மூலம் வெளியேறி சூழ்நிலைக்கு வெம்மை தருகிற அதே சைதன்யம்தான் நிலத்தில் வளம் தரும் ஆற்றலாகவும் உயிர் வளர்க்கும் ரகசிய சக்தியாகவும் வெளியாகிறது.

நிலவாக ஆகி நான் தாவரங்களை போஷிக்கிறேன்:

அதே நித்யமாகவுள்ள பரம சைதன்யம் சந்திரனில் நிலவாக வெளியாகி ஒவ்வொரு செடி, கொடி, மரத்திற்குள்ளும் அதன் ரஸமாக வெளிப்படுகிறது. முன்னால் சில தலைமுறையினர் இதை மறுத்திருக்கலாம். ஆனால் நவீன அறிவியல் பயிலும் மக்கள் இதைச் சந்தேகிக்க மாட்டார்கள். இன்றைய கிருஷி விஞ்ஞானம் (பயிர் வளர்ச்சி அறிவியல்) நம்முடைய கிரஹங்களுக்கும் முக்கியமாக சந்திரனுக்கும் பயிர் வளர்ச்சிக்கும் ஒரு விசித்திரமான சம்பந்தம் இருப்பதை ஒப்புக் கொள்கிறது. சமீபத்தில் செய்யப்பட்ட சோதனைகளில், பௌர்ணமி அன்று நட்டு பௌர்ணமி அன்று அறுவடை செய்யப்பட்ட தக்காளிச் செடிகள் அதிக மகசூல் தருகின்றன என்று தெரிய வந்திருக்கிறது. இந்த வழிகளில் சோதனைகள் செய்து மேற்கே ஒரு விஞ்ஞானி பயிர் வளர்ப்பில் பெரிய புரட்சியே செய்து கொண்டிருக்கிறார்.

மேற்கே இருந்து நாம் பார்வையைச் சற்று நம்முடைய இந்திய கிராமங்களில் செலுத்தலாம். நம் கிராமத் தலைவர்களுக்குத் தங்கள் செய்கைகளை விளக்கிப் பேசி அவற்றின் பெருமைகளை விவரிக்கத் தெரியாது.

என்றாலும் அவர்களுக்கு எப்போது விதைக்க வேண்டும், எப்போது அறுவடை செய்ய வேண்டும் என்ற பரம்பரை பரம்பரையாக வரும் அறிவு உண்டு. அவர்கள் பஞ்சாங்கங்களைப் பார்த்து அதைத் தெரிந்து கொள்கிறார்கள். மேற்கத்திய அறிவு

பெற்றவர்கள் இந்த நாட்டில் பழகிவரும் அறிவைப் புரிந்து பாராட்டத் தவறிவிடுகிறார்கள்.

விதைக்காகத் தயார் செய்யப்படும் நெல்லை சூரிய வெளியில் உலர்த்துவதுடன் நிலவில் திறந்து பரத்தி வைக்க வேண்டும் என்று எல்லோரும் ஒத்துக் கொள்கிறார்கள். இயற்கை வைத்தியர்கள் ஆயுர் வேத வைத்தியர்கள் ஆகியோர் தங்கள் மருந்துத் தயாரிப்புகளை குறிப்பிட்ட நாட்களுக்கு நிலவில் வைத்திருக்கிறார்கள். அதனால் அந்த மருந்துகளின் குணம் சிறக்கிறது; வீரியம் அதிகமாகிறது.

இவற்றை எல்லாம் 'இந்த சுலோகத்தின் கருத்து முற்றிலும் அறிவியலுக்கு ஒவ்வாதது அல்ல' என்று சுட்டுவதற்காகவே, கொஞ்சம் தொட்டுக் காட்டினோம்.

சூரியன், சந்திரன், நெருப்பு—ஆகியவை உலகில் கிடைக்கும் இயற்கைச் சக்தியின் பிறப்பிடங்கள். இவைகளின் வழி வெளியாகும் சக்திக்கு மூலம் அந்த எல்லையற்ற பேருணர்வுத் தத்துவம் சைதன்யம் (உணர்வுத் தத்துவம்) நிலத்தின் மூலம் வெளிப்பட்டு வயல்களுக்கு தாவரத்தை உயிர்ப்பித்து வளர்க்கும் சக்தியைக் கொடுக்கிறது. பிறகு செடிகள் வளரும் போது அதே சைதன்யம்தான் சந்திரனில் இருந்து நிலவாக வெளியாகி ஒவ்வொரு செடியுள்ளும், அதன் காய்கள் பழங்களுள்ளும் சாரசக்தியை நிரப்பி வைக்கிறது.

மேலும்,

அஹம் வைச்வானரோ பூத்வா ப்ராணினாம் தேஹமாச்ரித:
ப்ராணாபான ஸமாயுக்த: பசாம்யன்னம் சதுர்விதம்
**15:14**

அஹம்—நான்; வைச்வானரோ—வைசுவாநரன்; பூத்வா—ஆகி; ப்ராணினாம்—உயிர்களுடைய; தேஹம்—உடம்பில்; ஆச்ரித:—தங்கி; ப்ராணாபான ஸமாயுக்த:—பிராணன் அபானனுடன் சேர்ந்து; பசாமி—ஜீரணிக்கிறேன்; அன்னம்—உணவை; சதுர்விதம்—நான்கு வகை.

நான் வைச்வாநரன் (அக்னியாக) ஆகி உயிர்களின் உடலில் இருந்து கொண்டு, பிராணன் அபானனுடன் இணைந்து நான்கு வகை உணவுகளை செரிக்க வைக்கிறேன்.

உயிர்களின் உடலில் வைசுவானரனாக இருந்து கொண்டு: அதே பரம சைதன்யம்தான் உயிருள்ள ஜீவன்களில் எல்லாம் உயிர் வெம்மையாக வெளியாகிறது. இந்த வெம்மை நீங்கிய உடல் கட்டுமானம் பிணம். நம் உள்ளே நிகழும் உடல்

அமைப்புப் பொருள்களில் ஏற்படும் மாறுபாடுகள் உடலில் சூட்டை உண்டு பண்ணுகின்றன. நாம் முயலாமலேயே இந்த மாறுபாடுகள் தாமாகவே நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. உள்ளே உள்ள அவயவங்கள் உயிர் இருக்கும்வரை தம் வேலேகளை தாமாகவே தம்முடைய முயற்சி தேவையில்லாமலே செய்து கொண்டிருக்கும்.

தற்கால விஞ்ஞானம். அதுவும் உயிர்நூல் தனக்குப் புரியாத இடங்களில் படாடோபமாகச் சில சொற்றொடர்களைப் பயன் படுத்தித் தப்பித்துக் கொள்கின்றது. உதாரணமாக, உடலில் ரத்த ஓட்ட ஏற்பாட்டை விவரித்து விட்டு விஞ்ஞானிகள் ''இதயத்திலிருந்துதான் ரத்தம் வெளியேற்றப்படுகிறது. இதயத்தின் பீச்சும் ஆற்றல் இல்லை என்றால் நல்ல ரத்தக் குழாய்கள் அழுக்கு ரத்தக் குழாய்கள் இரண்டிலுமே குருதி உறைந்து விடும்' என்று சொல்கிறார்கள். ''அது சரி அந்த இதயத்தை விரிந்து சுருங்க வைப்பது யார் அல்லது எது?'' என்று கெட்டால் அவர்கள்'' இதயத்தின் சுவர்களாக இருக்கும் தசை களுடைய 'தம்மியக்கமே' அதற்குக் காரணம்'' என்று மிகவும் புரிய வைத்தது போல் சொல்லித் தப்பித்துக் கொள்வார்கள். உண்மையாகச் சிந்திப்பவனுக்கு இது நிறைவு தரும் விடை யாகாது. ''அந்த தம்மியக்கச் செயல்களைச் செய்விப்பவன் யார்? அல்லது செய்விப்பது எது?'' என்று அவன் கேட்டுக் கொண்டு தான் இருப்பான்.

இங்கே 'அந்த நித்யசத்யப் பொருளான பரமாத்ம தத்துவமே உடலில் வெளிப்படும் போது 'வைசுவாநரன்' என்கிற செரிப்புத் தீயாக (ஜாடராக்கினியாக) வெளியாகி உணவைச் செரிக்க வைக்கிறது' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

நான் நால் வகை உணவைச் செரிக்க வைக்கிறேன்: உடல் நலத்துடன் இருக்கும் மனிதனுடைய செரிமான சக்தி எல்லாவித உணவுகளையும் செரித்து விடுகிறது. மனிதன் சாப் பிடும் உணவுப் பொருள்கள் அவ்வளவையும் நான்கு வகைக்குள் அடக்கி விடலாம். 1. கடித்துச் சாப்பிடும் பொருள்கள் 2. விழுங்கும் உணவு வகை 3. உறிஞ்சும் வகை 4. நக்கும் வகை. சாப்பாடு சமைத்தது, சமைக்கப்படாதது, மாமிச ஆகாரம், மரக்கறி ஆகாரம், காய்கள், பழங்கள் எந்த உணவாக இருந் தாலும் இந்த நான்கில் ஒரு வகையாகத்தான் இருக்கும். வாயால் உட்கொள்ளும் உணவு அனைத்தும் செரிமான உறுப்புக் கள் மூலம் செரிக்கப்பட்டு உடம்புடன் சேருகிறது. அவ்வுறுப்புக் கள் மூலம் வெளியாகும் ஆற்றல் எங்கும் நிறைந்த அந்த உயிர் தத்துவமான ஆத்மப் பொருளேதான்.

பிராணன் அபானனுடன் சேர்ந்து: பிராணன்,

அபானன் இந்த இரண்டும் உடற்கூற்றின் இரண்டு செயல் பாடுகள். ஒன்று துய்ப்பது. அல்லது கொள்வதாகும். மற்றொன்று வெளியேற்றுவது. இங்கே நாம் இந்த இரண்டையும் அவற்றின் பரந்த பொருளில் எடுத்துக் கொள்ளலாம். பரமசைதன்யம் செரிக்கும் அக்னியாக மட்டும் வெளிப்படவில்லை. வயிற்றில் சாப் பாடு மேலே நகர்ந்து செல்கிறதே அதற்கான பிராண ஆற்றலும் அதுவே. செரிமான வேலை நடந்த பிறகு குடலிலிருந்து கழிவை வெளியேற்றுகிறதே அந்த (அபான) ஆற்றலும் அந்த 'உயிர்த் தத்துவம்'தான். சுருக்கமாகச் சொன்னால் பரமாத்மாவான பிரபு தான் உணவை விழுங்கும் ஆற்றல். மீண்டும் செரிக்கும் தீ. மேலும் வேண்டாததை வெளியே தள்ளிவிடும் ஆற்றலான அபானன்.

இதுவரை விவரிக்கப்பட்ட ஈசுவரனுடைய தோற்றங்களை மீண்டும் நினைத்துப் பார்க்கலாம். அவர் சூரியனில் சூரிய ஒளி யாக இருந்து உலகுக்குச் சூட்டையும் நிலத்துக்கு உயிரையும் தந்து காப்பாற்றுகிறார். அவர் தன் ஆற்றலைக் கொண்டு தாவரங் களை வளர்க்கும் சக்தியை நிலத்துக்கு அளிக்கிறார். சந்திரன் ஒளி யாகி அவரேதான் செடி, காய்கறிகள், பழங்களுக்கு உணவுப் பொருள்களின் நிலையைத் தருகிறார். அவரே தன் உயிர் பிராண னாகி உணவை வாயிலிருந்து வயிற்றுக்கும் செல்லச் செய்து செரிக்க வைக்கிறார். அப்பாலும் செரித்தது போக மிச்சத்தை வெளியேற்றும் அபான சக்தியும் அவரேதான். அவரேதான் சாப் பிட்டு, செரித்து, வெளியேற்றும் வேலையில் உயிர் பிராணனாகிற தாக்கல்களைப் பெற்று அபானமாகிற எதிரியக்கத்தைச் செய்கிறார். மொத்தமாக பிரபஞ்சத்தில் வெளிப்படும் ஆற்றல்கள் அனைத்தும் அவை எந்த மட்டத்தில் வெளிப்பட்டாலும் சரி, நித்தியப் பொருளான தெய்வீகத்தின் பற்பல வகையான பல தோற்றங் களே.

மேலும்,

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ
மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞானமபோஹனம் ச
வேதைஸ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம் **15:15**

ஸர்வஸ்ய—ச—எல்லாவற்றினுடையவும்; அஹம்—நான்; ஹ்ருதி—இதயத்தில்; ஸந்நிவிஷ்ட:—உட்கார்ந்து; மத்த:— என்னிடமிருந்து; ஸ்ம்ருதி:—நினைவாற்றல்; ஜ்ஞானம்—அறிவு; அபோஹனம்—அவை அற்ற நிலை; வேதை—வேதங்களால்; ச— உம்; ஸர்வை:—எல்லா; அஹம்—நான்; ஏவ—மட்டுமே; வேத்ய:—

அறியப்படுபவன்; வேதாந்தக்ருத்—வேதாந்தம் செய்தவன்; வேதவித்; ஏவச—வேதம் அறிந்தவனே.

நான் எல்லோருடைய இதயங்களிலும் உட்கார்ந்திருக்கிறேன். என்னிடமிருந்தே நினைவாற்றம் ஞானம், அவையற்ற நிலை எல்லாம் (வெளிப்படுகின்றன.) வேதங்களால் அறியப்பட வேண்டியவனே நான்; வேதாந்தத்தை ஆக்கியவனும் கூட நான் தான். வேதங்களை அறிந்தவனும் கூட நானே.

நான் எல்லாவற்றுடைய இதயங்களிலும் உட்கார்ந்திருக்கிறேன்: இப்படி ஒரு சர்வசக்தியுள்ள, சர்வ வ்யாபியான, நித்யமுள்ள தெய்வ சக்தி உலகில் பல இடங்களில் பல பொருள்களைத் தோன்றிக் கொண்டிருந்தால், சாதகன், பாவம் அதை எங்கே தேடுவான்? எங்கே அந்தப் பெரும் தெய்வத்தைக் காண்பான்? பகவான் கிருஷ்ணன், 'நான் எல்லா உயிர்களின் இதயங்களில் அமர்ந்திருக்கிறேன்!' என்று சொல்கிறார். இங்கே 'இதயம்' என்ற சொல் உடலில் உள்ளே அமைந்திருக்கும் தசை நரம்புகளான இதயத்தைக் குறிக்கவில்லை. ஆனால் அது உடல் கடந்து நிற்கும் நுண்கருத்துக் கொண்ட 'இதயத்தைக்' குறிக்கிறது. தத்துவ சாஸ்திரங்களில் இதயம் என்றால், தொடர்ந்து இடையறாமல் அன்பு, பொறை, கருணை, அருள், தயவு போன்ற ஆக்கப்பூர்வமான நல்ல குணங்களையே கொண்டிருக்கும்படி பயிற்சி செய்விக்கபட்ட மனது என்று பொருள்படும். அமைதியும் ஆனந்தமும் கொண்டு சாந்தமாகவும் அதே சமயம் உயர்வுக்கு ஏற்ற புதுத்தெய்வீகக் குரல்களைக் கேட்கத் துடிப்புடனும் விழிப்புடனும் இருக்கும் மனதே இதயமாகும். எல்லையற்ற பரம்பொருள் 'இதயத்தில் அமர்ந்திருக்கிறது' என்றால் அவன் எல்லா இடத்திலும் இருக்கிறவர் என்றாலும் தியான நிலையில் அவரை எளிதாக 'இதயத்தில்' காணும்படி தானே வெளியாகிறார் என்று பொருள்.

என்னிடமிருந்தே நினைவாற்றல், அறிவு, அவையின் இன்மை (எல்லாம்)— உயிர்களின் இதயங்களில் அந்தத் தத்துவம் அமர்ந்து ரமித்துக்கொண்டிருக்கிறது என்று சொல்லப் பட்டது. உயிரின் ஒளி, உடல், உணர்ச்சிகள், எண்ணங்கள் எல்லாவற்றிலும் ஊடுருவிப் பரந்து நிற்கிறபோது அதற்கென்று தனி ஆட்சியிடம் இல்லை போல ஆகிறது. அப்படியானால் அந்த சைதன்யத்தின் தனித்த சிறப்பான அருள்தன்மை எங்கே இருக்கிறது என்று கீதை இங்கே சொல்கிறது. நம் அனுபவங்களை எல்லாம் ஒளிர (புரிய, உணர) வைப்பது அந்த உணர்வு ஒளி. இந்தப் பரம தத்துவத்திலிருந்துதான் எல்லா நினைவுகளும், அறிவுகளும், மறதியும்கூட நமக்குக் கிடைக்கின்றன. நினைவுகள் கடந்த கால அனுபவங்களைப் பற்றியவை. அவை நம்முடைய அறிவில் தங்கியிருந்து நம்மை தற்கால வருங்கால நிகழ்ச்சி

களுக்கு வழிகாட்டி அழைத்துச் செல்கின்றன. நாம் கற்ற கல்வி, பெற்றிருக்கும் அறிவு எல்லாம் கடந்த காலத்தவைதாம். அவற்றின் நினைவுகளே இப்போது நம்மிடம் இருக்கின்றன. அவைகள் நினைவில் இல்லை என்றால் அவை நம் இன்றைய வாழ்வுக்குப் பயன்படா. தற்போது கிடைக்கும் புலன் தாக்கல் களுக்குச் சரியான முறையில் எதிர்ச் செயல்கள் செய்து புதிதான பிரகாசமான அனுபவங்கள் பெறுவதே நம் அறிவின் பரப்பை அதிகரித்துக்கொள்ளும் வழியாகும். இவை எல்லாம் 'உயிரின்' ஒளியில்தான் சாத்தியமாகும்.

புதிய அறிவை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றால் பழைய தவறான கருத்துக்களை விட்டுவிடும் தெம்பு தேவை. புதிய அறிவை வளர்க்கிறவன் அரைகுறைக் கருத்துக்களை எல்லாம் களைந் தெறிந்து விடுவான். புதிய சரியான அறிவைப் பெறுவதற்கு மறக்கும் சக்தியும் தேவைப்படுகிறது. இந்த சுலோகம் ''மனதின் இந்த ஆற்றல்களை நினைவில் வைத்திருப்பது, அறிவு பெறுவது, மறப்பது—எல்லாம்—உணர்வின் மூல ஊற்றான பகவானிடத்தி லிருந்தே வருகின்றன. அவரிடத்திலேயே தங்கி இயங்குகின்றன'' என்று சொல்கிறது.

வேதங்களால் எல்லாம் அறியப்படுபவன் நானே: உலகில் உள்ள ஆத்யாத்மிக நூல்களில் எல்லாம், இந்தியாவின் வேதங்களுள்பட ''இந்த எல்லையற்ற பரம சைதன்யமான பரம் பொருள் ஒன்றுதான் என்று பொதுவாகவும் பேசிப் புகழ் பெற்றிருக்கிறது,'' என்று கிருஷ்ணர் சொல்கிறார். இந்த வஸ்துவை (நிலையை) அடைவதுதான் வாழ்க்கையின் குறிக் கோள். வாழ்க்கையின் பயன். எல்லாம் உயிர்களுள்ளும் இருந்து ஆனந்தித்துக் கொண்டிருப்பது அந்த அத்வயப் பொருளே; அழிவில்லாத உண்மைத் தத்துவமான கடவுளே. எங்கும் ஊடுருவிப் பரவியிருக்கும். அதுதான் இந்தப் பலவாறான தோற்றங்களும் அனுபவங்களும்கொண்ட உலகத்துக்கு ஆதாரம்.

நானே வேதாந்தம் செய்தவன், வேதம் அறிந்தவன்: இந்தப் பரம சைதன்யம்தான் என்றும் உள்ள உண்மை. மற்ற எல்லாம் அதன் மேல் எழுப்பப்பட்ட உருவத் தோற்றமே. சாதகன் வேதங்கள் பயின்றால் அவை கூறும் அறிவைச் சிந்திக் கிறான். தியானம் செய்து கடைசியில் வாழ்வின் பயனை எய்துகிறான். அந்த சாதகனும் எந்த நிலையிலும் இந்த உண்மைப் பொருளிலிருந்து வேறு அல்ல.

இந்த நான்கு சுலோகங்களின் சாரமாகச் சொல்லப்படுவது இதுதான். பரமசைதன்யமே சூரியனில் ஒளி. அதே சைதன்யம் தான் நிலத்துக்கு வளம் தருகிறது. அதுவே நிலவாக இருந்து

தாரவங்களுக்கு உணவு சத்தைக் கொடுக்கிறது. அதே உண்மைப் பொருள்தான் மனித உடலுக்கு உணவைச் செரிக்க இன்றியமை யாததான சூட்டைக் கொடுக்கிறது. அதுவே உயிரின் செயல் களையும், புறத்தே உலகின் இயக்கங்களையும் மேற்பார்வையிடு கிறது. அதே சைதன்ய ஒளியால்தான் நாம் கற்றுக் கொள்கி ரோம். நினைவில் வைத்துக்கொள்கிரோம், புதிய அறிவைப் பெற பழையதை மறக்கவும் செய்கிரோம். இவ்விதம் உலக சக்திகளாக ஆகி உயிர் வாழவும் வளரவும் உதவி, பரிணமத்தில் வளர்ந்த உயிர்களுக்கு உயரிய ஞானம் பெறவும் சாத்தியமாக்குகிற அந்த நித்திய தத்துவம்தான் வேதங்களின் உட்பொருள். அதைப் புரிந்துகொண்டு அதை அனுபவத்துக்குள் அனுபூதியாக்கிக் கொள்வது அந்த எல்லையற்ற பரம்பொருளை அறிவதாகும். இது வரை மேலே சொன்ன நான்கு சுலோகங்களும் சூரியன், சந்திரன், அக்னி, நிலம், உடல், மனம், புத்தி இவற்றில் வெளிப் படும் நாராயணன் பெருமைகளை விவரித்தன. இவை எல்லாம் ஸோபாதிக நாராயணன் வர்ணனை. மேலே கண்ணன் கிருபாதிக சுத்த பிரம்ம தத்துவத்தை, அதன் இயற்கையை விவரிக்கிருர். அது சர்வகதமான (எங்கும் சென்றிருக்கிற) நித்யப் பொருள். அந்த சுத்த சத்யம் புத்தியின் கற்பனைகளை மீறியது. நாம் எல்லை யற்றது என்னும்போது வரம்புள்ளதற்கு எதிராக நினைக்கிரோம். ஆனல் அந்த நித்யப் பொருள் ஒன்றுடனும் இணைத்துப் பார்க்கத் தக்கதல்ல. எதற்கோ மாருக வேறுபட்டதாக இல்லாமல் அதுவே எல்லாமாக சுத்தத் தனிப்பொருளாக இருப்பது.

''ஒன்ருல் ஒன்று'' என்று புரிந்துகொள்ளும் இந்த அனுபவ உலகத்தை மனதில்கொண்டு பகவான் சொல்கிருர்.

த் வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஸ் சாக்ஷர ஏவ ச
க்ஷர: ஸர்வாணி பூதானி கூடஸ்தோ (அ) க்ஷர உச்யதே
15:16

த் வௌ— இரண்டு; இமௌ— இந்த; புருஷௌ— புருஷர் கள் (இருப்புப் பெற்ற உயிர்கள்); லோகே— உலகில்; க்ஷர: அழியக்கூடியது; ச—மேலும்; அக்ஷர—அழியாதது; ஸர்வாணி— எல்லா; பூதானி—இருப்புப் பெற்ற பொருள்களுக்கும்; கூடஸ்த்த—மாருது இருக்கும் பொருள்; அக்ஷர: அழியாதது, உச்யதே—சொல்லப்படுகிறது.

உலகில் இரண்டு புருஷர்கள் இருக்கிருர்கள்; (ஒன்று) அழிவது; (மற்ருென்று) அழியாதது. எல்லா இருப்புப் பெற்ற பொருள்களும் அழிபவை; கூடஸ்தன் அழியாதவன் என்று அழைக்கப்படுகிருன்.

*முன்னே ஒரு அத்தியாயத்தில் நாம் க்ஷேத்திரத்தையும் (பிரகிருதியின் களத்தையும்) க்ஷேத்ரக்ஞனையும் (களத்தை அறிபவனையும்) பற்றி மிச்சமில்லாமல் முழுமையாகப் படித்திருக்கிறோம். இந்த அத்யாயத்தில் இதுவரை நாம் தெரிந்து கொண்டது: சூரியன், உலகத்தின் வெம்மை. நிலம், அதன் விளை வாற்றல், தாவர இனம், மனிதன், அவன் ஆற்றல்கள் அனைத்தும் அந்தப் பரம்பொருளே என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இவை எல்லாம்தான் (பிரகிருதியின் களம்) க்ஷேத்ரம் ஆகும்.

வரம்பெற்ற சர்வவ்யாபியான சைதன்ய தத்துவம் சூரியன், வெம்மை, நிலத்தின் வளம், தாவரத்தின் ரஸம், இதயத்தின் உணர்ச்சி அறிதல், மறத்தல் முதலிய திறமைகள் எல்லாமாக இருக்கிறது என்றால் அவை எல்லாம் சைதன்யத்தின் மாறுபட்ட உருவங்களே (தோற்றங்களே). க்ஷேத்திரமும் அந்தப் பரம தத்துவம்தான் என்று முன்னமேயே நிரூபிக்கப்பட்டது. வித்தியாசம் என்ன என்றால் ஆத்மதத்துவம் பிரகிருதியின் உருவத்தை அடையும்போது அது மாற்றத்துக்கும் அழிவுக்கும் உட்பட்டது போல, ஆகிவிடுகிறது. இந்த அழிவுக்கு உட்படக் கூடிய பிரகிருதி தத்துவத்தின் தொகுதிதான் இந்த சுலோகத்தில் அழியக் கூடிய (க்ஷர:) புருஷன் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

க்ஷேத்திரம் என்று இருந்தால்தான் அப்படி நம் சிந்தனையில் கருத்து ஏற்படும்போதுதான் (க்ஷேத்ரத்தை அறிபவன்) க்ஷேத்ரக்ஞன் என்ற கருத்தும் கற்பனையும், அந்தத் தோற்றமும் எழமுடியும். இதுவும் முன்பே சொல்லப்பட்டிருக்கிறது. இங்கேயும் அந்த அழியும் புருஷன் என்கிற அறிவைத் தழுவி, அதை முன் நிறுத்தி நினைக்கும்போது ஆத்மா 'அழியாத புருஷன்' என்று அறியப்படுகிறது.

*சுருக்கமாகச் சொல்லப் போனால் நாம் த்வந்தங்களாகிற ஒன்றை ஒன்று தழுவி அறியும் இந்த அனுபவ உலகில் சடமான அழியும் பொருளை இட்டுப் பார்த்தால் ஆத்மா உணர்வுத் தத்துவம் (சைதன்யம்); அது அழியாதது என்று கருத்துக் கொள்கிறோம். அவன் மனைவியை இட்டுத்தான் ஒருவனுக்குக் கணவன் என்ற நாமம் வருகிறது. ஒருவன் தன் பிள்ளைக்குத் தந்தையாகிறான். அதே மாதிரிதான் அழிவுக்கும் மாறுதல்

---

*கீதை 13ம் அத்தியாயம்

*சங்கிலி செய்ய, பொற்கொல்லன் தங்கத்தை அடித்துத் தட்டையாக்குகிறான். அதை கம்பியாக நீட்டி துண்டுகளாக வெட்டுகிறான். ஒவ்வொன்றையும் மடக்கி வளையங்கள் செய்து அவைகளைச் சங்கிலியாகக் கோக்கிறான். இந்தத் தங்கம் முதலிலும் தங்கம்தான். இடையிலும் மாறும் போதும் தங்கம்தான். சங்கிலியாகிவிட்ட பிறகும் தங்கம்தான். தட்டையான பாளம், கம்பி, வளையங்கள், சங்கிலி இவை எல்லாம் அதே தங்கத்தின் பலவகை (மாற்று) உருவங்களே.

களுக்கும் உட்படக்கூடிய இந்த பௌதிக உருவங்களை இட்டுப் பார்க்கும்போது ஆத்ம சைதன்யம் அழியாதது, மாறாதது என்று சொல்லப்படுகிறது. உடல் மாறி வருகிறது. குழந்தையா யிருந்தவன் இளைஞனாகிறான். பிறகு கிழவனாகிறான். மனது தன் உணர்ச்சிகளைக் கொண்டு மாற்றம் அடைகிறது. புத்தி புதிதாகக் கற்றுக்கொண்டதற்கு ஏற்ப, அனுபவங்களை ஒட்டி மாறி வரு கிறது. ஆனால் இந்த மாற்றங்களை எல்லாம் நான் அறிகிறேன். நீங்களும் அறிகிறீர்கள். இடையறாது இந்த மாற்றங்களுக்கு ஒளி தந்து அவற்றைப் புரிந்து கொண்டிருக்கும் அந்த அறிவுத் தத்துவம்—எந்தத் தளத்திலும் மனிதன் வாழ்க்கை பூராவாக எல்லா மாற்றங்களையும் கண்டு அறிந்துகொண்டிருக்கிற அந்த சுத்த உணர்வுத் தத்துவம், சைதன்யம் தன்னில் மாறாதிருக்க வேண்டும். இதைத்தான் 'அக்ஷரம்' என்கிறோம். மீண்டும் நினைவில் கவனமாக இருத்திக் கொள்ளுங்கள். அழியும் பிரகிருதியை வைத்துத்தான் இதற்கு 'அக்ஷரம்' என்கிற பேர்.

இந்த மாறாததும் அழியாததும் ஆன இந்த உயிர்த் தத்துவம் ஆத்மா. அது எல்லா உயிர்களுக்கும், எல்லாக் காலங்களிலும் ஒன்றே, பொதுவானதே. மாற்றத்திற்கிடையேயும் மாறாதிருப்பது. அந்தந்தத் தத்துவம் அதனுடன் ஒட்டும்போது தான் மாற்றங்களே ஏற்படும். மாற்றங்கள் அதன் மேல்தான் ஆட்டம் காட்ட முடியும். மாற்றங்களுக்கு அதுதான் மேடை. அந்த மேடையைத்தான் இங்கே கூடஸ்தம்** என்ற உருவகச் சொல்லால் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

க்ஷரம் அக்ஷரம் என்ற இந்த இரண்டுக்கும் அந்நியமாய், தெளிவாக வேறுபட்டு, இந்த இரண்டுக்கும் உள்ள குறைபாடு களால் சற்றும் தொடப்படாததாக இருக்கிறது பரமாத்மா.

உத்தம: புருஷஸ்த் வந்ய: பரமாத் மேத் யுதா ஹ்ருத:
யோ லோகத்ரய மாவிச்ய பிபர்த்ய வ்யய ஈ ச்வர:

**15:17**

உத்தம: எல்லாவற்றிற்கும் உயர்ந்த (கடந்த); புருஷ: புருஷன்; து—என்றாலோ; அந்ய:மற்றொருவன்; பரமாத்மா—

---

** கூடம் என்றால் ''பட்டடைக்கல்'' (கொல்லன் பழுக்கக் காய்ச்சிய இரும்பை இதன் மேல் வைத்துத்தான் சம்மட்டியால் அடிப்பிக்கிறான். உருவம் மாற்றப் பட வேண்டிய இரும்பு இதன் மேல்தான் வைத்து அடித்து மாற்றப்படுகிறது). ஸ்த்த: என்றால் உட்கார்தல். கூடஸ்த்த: பட்டடை போல் மாறாமலும் மாற்றத் துக்கு இடம் தந்து கொண்டும் இருக்கும் பொருள் அல்லது புருஷன்.

* புருஷன் என்றால் புரி சயந்தி—உடலில் வசிக்கிறவன் என்று பொருள். அதனால் உயிர் தத்துவம் புருஷன் என்று சொல்லப்படுகிறது.

பரமாத்மா; இதி—என்று; உதாஹ்ருத:—சொல்லப்படுகிறுன்; ய:எவன்; லோகத்ரயம்—மூன்று உலகங்களேயும்; ஆவிச்ய—ஊடுருவி, அவற்றுக்குள் பரவி; பிபர்த்தி—தாங்குகிறுன்; அவ்யய—மாருதவன் (அழியாதவன்) ஈச்வர: ஈச்வரன் (இறைவன், பிரபு).

ஆனுல் தெளிவாக வேறுபட்டு (இவற்றைக் கடந்து நிற்கும்) உயர்ந்த புருஷன், பரமாத்மா என்று அழைக்கப்படுபவன், யார் (விழிப்பு, கனவு, தூக்கம் என்கிற) மூன்று உலகங்களிலும் புகுந்திருந்து அவற்றைத் தாங்குகிறுனே (காக்கிறுனே), அவன் இருக்கிறுன்.

ஆனுல் வேறுபட்டு, பரமாத்மா என்று பேசப்படுகிற எல்லாவற்றிலும் உயர்ந்த* புருஷன் இருக்கிறுன்: என் குழந்தைகளேப் பற்றிப் பேசும்போதுதான் நான் தந்தை. என் உத்தியோகம் அல்லது பதவியின் காரணமாக எனக்கு வேறு பேர் இருக்கலாம். அதைப் போல ஆத்மாவைப் போர்த்தியிருக்கும் அழியக் கூடிய பிரகிருதியை ஒட்டித்தான் அந்த ஆத்மாவுக்கு 'அக்ஷரம்' என்று பதவி கிடைக்கிறது. என் குழந்தைகள் இறந்துவிட்டால் நான் தந்தை என்ற பதவியை இழந்துவிடுவேன். என் வேலேயிலிருந்து என்னே அனுப்பிவிட்டார்களானுல் என் உத்தியோகத்தால் வந்த பெயரும் அதனுடன் மறைந்துவிடும். ஆனுல் இப்படி குழந்தைகளோ, வேறயோ இல்லாதபோது நானும் சூனியமாகி விடுவதில்லே. அப்போதும் நான் 'என் தந்தைக்கு மகனுக' இருக்கலாம். அல்லது நான் வெறும் நானுக இருக்கலாம். எனக்குக் குழந்தைகள் மூலமோ உத்தியோகத்தின் காரணமாகவோ கிடைத்த பதவிப் பெயர் இருக்காது. அவ்வளவுதான். இந்தக் கருத்து புரிந்துவிட்டால் இந்த சுலோகம் புதிராக இருக்காது.

பதின்மூன்ருவது அத்தியாயத்தில், ** க்ஷேத்திரத்தில் க்ஷேத்திரத்தை அறிகிறவன் இருக்கிறுன். க்ஷேத்திரம் போய்விட்டால் அந்த அறிவுத் தத்துவம்' மட்டும்தான் இருக்கும் என்று தீர்க்கமாக விசாரித்து அறியப்பட்டது. அதைப் போல இங்கே க்ஷரத்தை—அழிவதைக்—கடந்துவிட்டால் கிடைப்பது அக்ஷரம் இல்லே. ஏன் என்ருல் க்ஷரத்துடன் அதை அண்டி நிற்கும் அக்ஷரமும் போய்விடும். பிறகு இருப்பது 'அக்ஷர புருஷனுக' அவதாரம் எடுத்து அதுவும் போய்விடவே தானே தானுக நிற்கும் பரமாத்மாதான். அவர்தான் மூன்று உலகங்களிலும் வியாபித்து அவற்றைத் தாங்கி அவற்றுக்கு இருப்பைக் கொடுப்பவர் ஸம்ஸ்க்ருதத்தில் உலகம் என்ருல் அனுபவங்களின் களம் அல்லது தளம் என்று பொருள். நாம் மூன்று வயல்

---

** க்ஷேத்ரக்ஞன்—க்ஷேத்ரம்= 13 ஞ. அதாவது சுத்த ஞானதத்துவம்.

களில் அனுபவங்களாகிற வாழ்க்கை நிலத்திற்குரிய அறு வடையைச் செய்கிறோம். அவை விழிப்பு நிலை, கனவு நிலை, தூக்க நிலை எனப்படுகின்றன. இந்த மூன்று தளங்களிலும் ஏற்படும் அனுபவங்களை உணர (துய்க்க) உதவுகிறது அந்த ஆத்மாதான்.

இந்த மூன்று நிலைகளில் மூன்று தனித்தனிப் புருஷர்கள் இல்லை. ஒரே ஆத்மாதான் சூழ்நிலையை வைத்து தனித்தனி போலத் தோன்றுகிறது. ஒரு பானை ஒரு அறைக்குள் இருக்கிறது. பானை வெளி அறைவெளியைவிடக் குறைந்ததாகத் தோன்று கிறது. அறைவெளி பரந்த அண்ட வெளிக்கெதிரே கணக்குக்கே வராது. ஆனால் அதே சமயம் பானை இல்லை என்று வைத்துக் கொள்ளுங்கள். அது இல்லை என்றால் அந்த வெளியும் அண்ட வெளியும் ஒன்றுதான். இந்த எடுத்துக்காட்டில் பானை வெளியும், அறைவெளியும் தனித்தனி தான். அவை அண்டவெளிக்கு அந்நியம் (வேறானது)தான். ஏன் என்றால் பானையும், சுவர்களும் வரம்புகட்டும் குறைபாடுகள். அவை அந்த வெளிக்குத் தனித் தனி இருப்பைக் கொடுத்துவிட்டன. ஆனால் இந்தக் குறை பாடுகள் நீங்கிய பானைவெளியும், அறைவெளியும் அகண்ட வெளியிலிருந்து வேறானதே அல்ல. பானையை உடைத்து, அறைச் சுவர்களை வீழ்த்திவிடுங்கள். பானை வெளி, அறைவெளி என்று ஏதோ பிரிந்ததுபோல் காணப்பட்டதே அந்த வெளி அண்ட வெளியாகப் பரந்து நிற்பதைப் புரிந்துகொள்வீர்கள்.

எல்லையற்ற பேருணர்வு (பரம சைதன்யம்)தான் அதன் மற்றொரு தோற்றமான க்ஷேத்ரமாகிறது. க்ஷேக்ரக் ஞனக அதுவே ஆகும்போது க்ஷரமான க்ஷேத்திரத்தில் அக்ஷரமாகத் தோற்றமளிக்கிறது. இந்த வரம்புகளை எல்லாம் கடந்து சென்றால் அதே தத்துவம் புருஷோத்தமனாகப் பெறப்படுகிறது. பரமாத்மா அதுதான்.

புருஷோத்தமன் என்ற சொல்லின் பகுதிகளையும் அவற்றின் பொருளையும் விளக்கி, பிரபு கண்ணன் உண்மையில் அவர் எப்படி பரமாத்மாவாகிறார் என்று விளக்குகிறார்.

*யஸ் மாத் க்ஷர மதீ தோ (அ) ஹ மக்ஷராதபி சோத்தம:*
*அதோ (அ)ஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:*
*15:18*

யஸ்மாத்—எதிலிருந்து; க்ஷரம்—அழியக் கூடியது; அதீத—தாண்டி; அஹம்—நான்; அக்ஷராத்—அழியாததையும்; அபி—கூட; ச—மேலும்; உத்தம—மேம்பட்டவன்; அத—எனவே; அஸ்மி—இருக்கிறேன். லோகே—உலகத்தில்; வேதே—வேதங்களில்; ச—உம்; ப்ரதித: சொல்லப்பட்டு புருஷோத்தம—புருஷோத்தமன் (மேம்பட்ட புருஷன்).

க்ஷரத்தைத் தாண்டியிருப்பதனுலும் அக்ஷரத்துக்கும் மேம்பட்டு இருப்பதனுலும் நான் உலகத்திலும் வேதங்களிலும் புருஷோத்தமன் என்று கூறப்பட்டிருக்கிறேன். (பிரசித்தி பெற்றிருக்கிறேன்).

புருஷோத்தமன் என்ற சொல்லுக்கு உரிய பொருளை விளக்கி பிரபு கிருஷ்ணர், ''சுத்த சைதன்யம்'' அழிவது'', ''அழியாதது'' இரண்டுக்கும் மேம்பட்டது' என்று சொல்கிருர். அழியாத உண்மை அடியில் இருக்கும்வரைதான் அழியும் பிரகிருதி தன் மாற்றமாகிற ஆட்டத்தை ஆட முடியும். மாற்றம் அடையாத ஒரு பின்புலம் இல்லாமல் எந்த மாற்றமும் நிகழக் காணமுடியாது என்பது அறிவியல் உண்மை. இரண்டு இரயில் வண்டித் தொடர்கள் சேர்ந்தாற்போல் ஒரே வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தால் இரண்டு தொடர்களிலும் உள்ளவர்களுக்கும் அவற்றின் ஓட்டம் புலப்படாது. பிரகிருதிக் களத்தில், உடல், மனம், புத்தியின் தளங்களில், மாறுதல்கள் காணப்படுகின்றன என்ருல் மாருத ஒரு தத்துவம் இருந்துகொண்டு இவற்றைப் புரிய வைத்துக் கொண்டிருக்கிறது என்ருகிறது. அழியும் தத்துவங்களுக்கிடையே இந்த மாருத தத்துவம் அழியாதது (அக்ஷரம்) என்று அறியப்படுகிறது.

ஒளிரச் செய்யும் (மனதைப் புரிந்துகொள்ளச் செய்யும்) இந்தத் தத்துவம் அந்த ''அழியும்'' தத்துவத்துக்குத் தான் அழியாத தத்துவம்! இந்த அழியும் உலகைத் தாண்டிவிட்டால் இதே அக்ஷர தத்துவம் சுத்த பரமதத்துவமாகி விடுகிறது. அது தான் புருஷோத்தமன். க்ஷரம், அக்ஷரம் என்ற இரண்டையும் தாண்டி அப்பால் போகும்போதுதான் 'புருஷோத்தமன்' உணரப்படுகிறது என்பதனுல் அது எல்லாவற்றுக்கும் மேம்பட்ட புருஷன் அல்லது ஆத்மா—அதாவது புருஷோத்தமன் என்று வேதங்களிலும் 'லோகம்' என்று குறிக்கப்படுகிற சிறந்த கவிகள். இலக்கியகர்த்தாக்கள் இவர்களுடைய எழுத்துக்களிலும் பிரசித்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

மேலே விவரிக்கப்பட்டிருக்கிற அந்தப் 'பரம சத்தியத்தை' அடைகிறவனுக்குக் கிடைக்கும் பயன்கள் என்ன என்று பகவான் கிருஷ்ணர் இப்போது சொல்கிருர்:

யோ மாமேவமஸம் மூ டோ ஜானுதி புருஷோத் தமம்
ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸர்வ பாவேன பாரத.

*15:19*

ய:எவன்; மாம்—என்னே; ஏவம்—இவ்விதம்; அஸம்மூட—மயக்கம் இல்லாதவன்; ஜானுதி—அறிகிருனே; புருஷோத்தமம்—புருஷோத்தமனே; ஸ—அவன்; ஸர்வவித்—எல்லாம் அறிந்தவன்;

பஜதி—வழிபடுகிறுன்; மாம்—என்னை; ஸர்வபாவேன—தன் முழு உயிருடன்; பாரத—ஏ பாரதா.

எவன் மோகம் நீங்கியவனுக என்னை இவ்விதம் புருஷோத்தமன் என்று அறிகிறுனே அவன் எல்லாம் தெரிந்த வனுக (இருந்துகொண்டு) அவன் முழு ஆளுமையுடன் (உயிர் உடலுடன்) என்னை வழிபடுகிறுன், ஏ பாரதா.

அவன் மயக்கமற்றவனுக: சங்கரரின் உபநிஷத் பாஷியங் களுக்குக் குறிப்பு எழுதியுள்ள ஆனந்தகிரி அவர்கள் மயக்கமற்ற வனுக்கு 'தன் உடல் முதலியவற்றைத் தானுகவோ தனக்கு உரியவை என்றே பார்க்காதவன்' என்று விளக்கம் கொடுத்திருக் கிறுர். அதாவது இந்தக் கருவிகள் அவற்றின் வழி கிடைக்கும் காட்சியறிவுகள், உணர்ச்சிகள், எண்ணங்கள் ஆகியவற்றிலிருந்து முழுமையாக எவன் ஒதுங்கிவிட்டானே அவன் என்று பொருள்.

இவ்விதம் என்னை அறிகிறவன்: இங்கே 'அறிவது' என்ருல் புத்தியைக்கொண்டு புரிந்துகொள்வதுமட்டுமல்ல. உள்ளூர அனுபூதியாகப் பெறுவதாகும். இதிலிருந்து,' மோகம், மயக்கங்கள் அற்றவன் தானே புருஷோத்தமன் என்ற நிலையை அடைந்து விடுகிறுன் என்ற கருத்து பெறப்படுகிறது.

இவ்விதம் முற்றிலுமாக தன்னையே 'பரம்பொருளான நானுக'வே ஆகும் நிலையைப் பெறுகிறவனே உண்மையான பக்தன். அவனே ''என்னை'' முழுமையாக வழிபடுகிறுன். அவனை ''பக்தர்களுக்குள் மிகப் பெரியவன், சிறந்தவன், மேம்பட்டவன்'' என்று பாராட்டிக் கூறுகிறுர் கீதாச்சாரியன். அன்புக்குரியவருடன் இரண்டற இணைவதே, அவரே தானுகக் கருதுவதுதான் அன்பின் அளவுகோல். எங்கேயும் இதுதான் உண்மை. அன்பு எவ்வளவு அதிகமாகிறதோ அவ்வளவு இந்த ஒன்றிப்பும் அதிகமாகிறது. கணக்குப் பண்ணி பார்த்தால் முழுமையாக ஒன்றிவிடுவது அப்படியே முழுமை அடைந்த அன்பு அல்லது பக்தியாகும்.

புருஷோத்தமன், எல்லையற்ற பேருணர்வு. காட்சி, உணர்ச்சி, எண்ணம் எது அறியப்பட்டாலும் அதை அறிவது அந்த உணர்வுத் தத்துவம் தான். எனவே புருஷோத்தமன் 'சர்வவித்' அதாவது 'எல்லாம் அறிந்தவர்'. எனவே எந்த பக்தன் இந்த வரம்புக்குட்படுத்தும் பிரகிருதி உறைகளைத் தாண்டி தன் ஆத்ம இயல்பை பரமசைதன்யம் என்று கண்டு கொள்கிறுரே அவனையும் இங்கே 'சர்வ வித்' எல்லாம் அறிந்தவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இறைவனின் உண்மையான இயல்பு பற்றிய அறிவுதான் இந்த அத்தியாயத்தின் அடக்கப் பொருள். கடைசியாக வரும்

இந்த சுலோகத்தில் கண்ணன் இந்த விஷயத்தைப் புகழ்ந்துரைக்கிருர். ஏன் என்ருல் இந்த அறிவு மனிதனுக்கு உடல் (சதை) கொடுக்கும் துன்பங்கள், மனதில் பிறக்கும் கலக்கங்கள், புத்தி தரும் அமைதியின்மை ஆகியவற்றிலிருந்து விடுதலே அளிக்கிறது.

இதி குஹ்யதமம் சாஸ்த்ர
மிதமுக்தம் மயாநக
ஏதத் புத்த்வா புத்தி மான்ஸ்யாத்
க்ருத க்ருத்யஸ்ச பாரத 15:20

இதி—இவ்விதம்; குஹ்யதமம்—ரஹஸ்யங்களுக்கெல்லாம் ரஹஸ்யமான சாஸ்த்ரம்— சாஸ்திரம் (ஞான); இதம்—இது; உக்தம்—சொல்லப்பட்டது; மயா—என்ஞல்; அநக—பாப மற்றவனே; ஏதத்—இதை; புத்த்வா—அறிந்து; புத்திமான்—புத்திசாலியாக; ஸ்யாத்—ஆகிருன்; க்ருதக்ருத்ய—செய்ய வேண்டியதைச் செய்து முடிந்தவன்; ச—உம்; பாரத—ஹே பாரதா.

இவ்விதம் இந்த மிகவும் ரஹஸ்யமான (மறை பொருளான) சாஸ்த்ர ஞானம் என்ஞல் கற்பிக்கப்பட்டது, ஏ பாபமற்றவனே. இதை அறிந்தவன் புத்திமாஞகவும், செய்ய வேண்டியதைச் செய்து முடித்தவஞகவும் ஆகிருன், ஏ பாரதா.

தலேக்கட்டும் இந்த சுலோகத்தில் கிருஷ்ணன் 'நான் மிகவும் ரஹஸ்யமான சாஸ்திரத்தைச் சொல்லிக் கொடுத்திருக்கிறேன்' என்று சொல்கிருர். பிரஹ்மவித்தை ரஹஸ்யமானது (மறைக்கப்பட்டு உள்ளது) என்று சொல்லப் படுகிறது. அதற்குப் பொருள் யாரும் யாருக்கும் அதைப் பற்றிச் சொல்லக் கூடாது என்பதல்ல. 'அதை ஞானநிஷ்டரான ஒருவர் சொல்லிக் கொடுக்காமல் அது நாமாகப் புரிந்துகொள்ளக் கூடிய ஒன்றல்ல' என்றுதான் இதற்குப் பொருள்.

ஏ பாவமற்றவனே!— பாவம் என்பது செய்யப்பட்ட எந்த ஒரு செயலோ, கொள்ளப்பட்ட ஒரு உணர்ச்சியோ, எண்ணப் பட்ட ஒரு எண்ணமோ மீண்டும் மீண்டும் வந்து நம்மைப் பரிகசித்து, நம்மை இகழ்ந்து நம் உள்ளத்தில் சங்கடங்களே ஏற்படுத்துமோ, எதற்காக நமக்கு கழிவிரக்கம் (பச்சாதாபம்) கொள்ள நேருமோ அந்தச் செயல், உணர்ச்சி அல்லது எண்ணமே பாவம் எனப்படுவது. அதாவது கடந்த காலத்தின் பயஞக வந்து நம்மிடமே நம்மை மதிப்பிழக்கச் செய்து, நம் உள்ளத்தில் புயலே எழுப்பி மனதில் முறிவையும் சிதறி அழிதலேயும் ஏற்படுத்தும் ஒரு செய்கையே (உடல், மனம், புத்தி இம்மூன்றில் எதஞல் நேர்ந் திருந்தாலும் சரி) பாவம். இப்படி உள்ளே ஒரு ஆளுமையின் சுமையைத் தூக்கித் திரிபவன், பெருமையைக் குலேக்கக் கூடிய செயல்கள், கொடூரத் திட்டங்கள் இவைகளின் நிஃனவுகளோடு

சுற்றுகிறவன். அவன் உள்ளம் எப்போதும் அமைதியிழந்து ஒரு பதற்ற நிலையிலேயே இருக்கும். அப்படிப்பட்ட மனம்—புத்தியாகிற கருவி புத்திக்கப்பால் கிடக்கும் ஒரு சுத்த உணர்வு நிலையைப் பற்றி தொடர்ந்து ஆராய்ந்து அறிவதற்குத் தேவையான ஆற்றலைப் பெற்றிருக்காது. எனவே பாபமற்றவனே என்பதற்கு இங்கே பொருள்: நிலைத்த, விழிப்புள்ள, சுறு சுறுப்பாயிருக்கும் மாணவனே!' என்பதேயாகும்.

'புருஷோத்தம' நிலையை உணர்ந்தவன் தானே 'ஸர்வவித்' (எல்லாம் அறிந்தவன்) ஆகிவிடுகிறான் ஏன் என்றால் இனி வாழ்க்கையில் அவன் அவிவேகத்தால் ஏற்படும் மயக்கங்களுக்கு உட்பட்டுத் தவறான எண்ணங்கள் கொண்டு தனக்கும் மற்றவர்களுக்கும் துயரையும் குழப்பத்தையும் ஏற்படுத்தமாட்டான். இது ஒரு பயன்.

தன் புருஷோத்தம நிலையை உணர்ந்தவனுக்குக் கிடைக்கும் மற்றொரு பயன். 'செய்ய வேண்டியதைச் செய்து முடிந்துவிட்ட நிறைவு. அதனால் ஏற்படும் பூரண மகிழ்ச்சி. இது அவனுக்குக் கிடைக்கும் பரிசாக இங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

ஓம் தத்ஸத் இதி ஸ்ரீமத் பகவத் கீதா ஸூபனிஷத்ஸு
ப்ரம்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
புருஷோத்தம யோகோ நாம
பஞ்ச தஸோத்யாய:

இவ்விதம் ஸ்ரீமத் பகவத் கீதையின் உபநிஷதங்களில் ப்ரஹ்ம (நித்யப் பொருள் அறிவு) வித்தையில் யோக சாஸ்திரத்தில் புருஷோத்தம யோகம் என்கிற பதினைந்தாவது பிரசங்கம் (அத்தியாயம்) முடிவுறுகிறது.

சங்கல்ப வாக்யத்தின் முழுப் பொருளும் தெரிந்துகொள்ள முதல் இரண்டாம் அத்தியாயங்களின் கடைசியில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

# தைவாஸுர சம்பத்து விபாக யோகம்

## முன்னுரை:

அறநெறிகளை வகுக்கும் எந்த சம்பிரதாயத்திலும் தர்ம அதர்மங்களின் பட்டியல்கள் இருக்கும். அதில் வியப்பு என்ன என்றால் அவற்றை உலகுக்குப் போதித்த ஆசாரியர்கள் அல்லது குரவர்கள் காலம் தேசத்துக்கு ஏற்றவாறு மாறுபட்டவர்களாக இருந்தாலும் அவர்கள் போதனை செய்து உலகுக்குச் சுட்டிக் காட்டிய இந்த தர்ம அதர்மக் குறிப்புக்கள் ஒன்றாகவே இருக்கின்றன. காலம், சம்பிரதாயம், இனம், மொழி இவை என்ன மாறுபட்டால் என்ன? நல்லவன் எங்கும் நல்லவனே. ஆம். உண்மை தான். ஒரு சமயத்துக்கும் மற்றொரு சமயத்துக்கும் சிற்சில மாறுபாடுகள் இல்லாமல் இராது. ஆனால் அந்த மாறுபாடுகள் குருமார்கள் மக்களுக்கு விதிக்கும் கட்டளைகளுள் சிலவற்றை நீக்குவதிலும் சிலவற்றைக் கைக்கொள்ளுவதிலும் காட்டும் அழுத்தத்தில்தான் இருக்கும். அப்படி அவர்கள் கொடுக்கும் சிறப்பு அறிவுரைகளாகட்டும் அல்லது வேண்டுகோள்களாகட்டும் அவை அந்தக் காலத்தில், அந்தந்த இடத்தில் வசித்த மக்களில் பெரும்பான்மையோருடைய வாழ்க்கை முறையை ஒட்டியே வகுக்கப்பட்டதாக இருக்கும்.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் எந்த சில குணங்களேயும் போக்குகளேயும் தர்மம் என்று எண்ணினர்களோ அவை இன்னும் நல்ல தருமங்களாகவே கருதப்படுகின்றன. அந்தத் தருமங்களேக் கடைப்பிடித்து வாழ்கிறவர்களே இன்னும் தர்மிஷ்டர்கள் என்றே ஒத்துக் கொள்ளப்படுகிறது. இன்று எங்கும் ஒரே ரகளேயாக கலவரமாக இருக்கிறது. இருந்தும் இப்போது இருக்கும் மனிதர்களும் அமைதியான பழைய கால மக்கள் போலவே இருப்பதைக் காண்கின்றோம்.

நாம் பார்க்கப் போகும் பகவத் கீதையின் இந்த அத்தியாயத்தில் எல்லா யுகங்கள், எல்லாக் காலங்களின் மக்களும் மூன்று விதமாகப் பிரித்துக் காண்பிக்கப்படுகிறார்கள். அவை (1) தெய்வீகத் தன்மையுள்ள நல்லவர்கள்—தேவர்கள் (2) கொடூரப் பொல்லாதவர்கள்—அசுரர்கள்; (3) திருத்தமுடியாதபடி மனிதத் தன்மையே அற்றவர்கள்—ராக்ஷஸர்கள்—அரக்கர்கள். இந்த மூன்று வகையினருள் கீதை மூன்றாம் வகையினரைப் பற்றிப் பேசவேயில்லே. ஒருகால், அந்த வகையினர் கேடு காலம் வந்து அதில் உடைபட்டு மீண்டும் புதிதாக ஆக்கப்பட வேண்டுமே தவிர சீர்திருத்தம் செய்ய இயலாத மனப்பாங்கு கொண்டவர்கள் என்ற காரணமாயிருக்கலாம். முன்னொரு இடத்தில் (9'ம் அத்தியாயம்) ஸ்ரீ கிருஷ்ணன் பிரகிருதியின் அதாவது உயிருள்ள சிருஷ்டியின் மூன்று தன்மைகளே விவரித்ததைப் பார்த்தோம். பிறகு (13'ம் அத்தியாயத்தில்) க்ஷேத்திரம் என்கிற அனுபவ பூமியையும், அனுபவ நிலத்தை அல்லது புலன்களே அறிகிற க்ஷேத்ரக்ஜனேயும் பற்றி விவரமாக ஆராயப்பட்டது, முடிவாக எல்லா க்ஷேத்ரங்களிலும் இருக்கும் க்ஷேத்ரக்ஞன் ஒருவனே என்று நிறுவப்பட்டது.

இந்த இடத்தில் பேச்சு நடக்கும்போது தெளிவொளி பொருந்திய அறிவாளியின் உள்ளத்தில் பின்வரும் கேள்வி எழாமல் போகாது. எல்லா க்ஷேத்ரங்களிலும் (புலவர்களிலும் க்ஷேத்ரக்ஞன் (புலன் நுகர் வோன்) அதே ஒருவனுக இருக்கும்போது அனுபவங்கள் ஏன் ஆளுக்கு ஆள் மாறுபட வேண்டும்? அதற்கு விடையாக (12'ம் அத்தியாயத்தில்) புலன்கள் குணங்களுக்கு ஏற்றவாறு மாறுகின்றன என்று விளக்கப்பட்டது. எந்த இருவரை எடுத்துக் கொண்டாலும் குணங்கள் காரணமாக அவர்கள் அனுபவங்கள் மாறுபட்டே இருக்கும். ஒன்றுக இருக்காது. இவ்விதம் புலன்—நுகர் அனுபவம் தன்மை அல்லது சுபாவ மாற்றத்துக்கு ஏற்றவாறு மாறுபடுகின்றன என்று விரிவாக விளக்கிய பிறகு பகவான் கீதாச்சாரியன் சாசுவதமான பிரமப் பொருளான ஆத்மா; க்ஷேத்ரக்ஞனுடைய தன்மைகளே விரித்துரைத்தார். இந்தப் புருஷோத்தமனே அறிவு கடந்த, உயர்வுக்கும் உயர்ந்த நிலேயான பரப்பிரம்மம், சுத்த அறிவாய், அந்த

''முற்றிலுமாக'' வளர்ந்து இருக்கும் நிலை மிகத் தெளிவாகவும் திறமையுடனும் விவரிக்கப்பட்டது.

பிறகு தர்க்கத்தின் தொடர்பாக அடுத்த நிலையில் க்ஷேத்ரக்ஞன் பலவித க்ஷேத்திரங்கள் ஊடே இயங்கும் போது என்னென்ன தோற்றங்கள் எல்லாம் எழுவது சாத்தியமோ அவற்றைப் பற்றி இங்கே பேசப்படுகிறது. ஆனாலும் அவசரப்படு கிறவர்களுக்கு இந்த 16'ம் அத்தியாயம் சற்றுத் தொடர்பற்றது போல் தோன்றலாம். ஏன் சில துணிச்சல்காரர்கள் ஸ்ரீ பகவத் கீதை தொடர்பில்லாமல் சுற்றி அலைகிறது என்று சொல்லவும் சொல்கிறார்கள். இது மிகவும் நியாயமற்றது. ஒன்பதாம் அத்தி யாயத்தில் எழுப்பப்பட்டு முடிவுறாத அநேகக் கருத்துக்களின் தொடர்ச்சி இது. தவிர முன் மூன்று அத்தியாயங்களில் சாதாரணமாகத் தொட்டு மட்டுமே விடப்பட்டுப் போன கருத்துக்களின் தொடர்பும் ஆம்.

ஹிந்துக்களுக்கு எதிராக எழுப்பப்படுகிற மற்றொரு குறை பாடும் உண்டு. அதாவது அத்வைத உண்மையான பிரம்மத்தை நம்புகிற காரணத்தால் ஹிந்துக்களுக்கு நேர்மை, நீதி, நல்ல நடத்தை இவற்றைப் பற்றி அதிகம் பாராட்ட முடியாமல் இருந்து விட முடிகிறது—என்பதால் அந்தக் குற்றச்சாட்டு சில குறை கண்டுபிடிக்கும் விமர்சகர்களோ பக்தியையே உயிர்நாடி யாகக் கொண்ட, இஸ்லாம் போன்ற செமிடிக் சமயங்களையும் மற்றவற்றையும் வேதாந்தத்துடன் ஒப்பிட்டு அவைதான் உயர்ந் தவை என்று துணிந்து கூறிவிடுகிறார்கள். இந்த அத்தியாயம் அந்தக் குற்றச்சாட்டைத் தகர்த்து எறிந்து விடுகிறது. தர்ம நியாயங்கள் வேதாந்தத்தின் தலைவாயிலுக்குள் நுழைய எவ்வளவு இன்றியமையாதவை என்று இந்தப் பதினாறும் அத்தி யாயம் எடுத்துக் காட்டுகிறது. நல்லவர்கள் மன அமைப்பும் கெட்டவர்கள் மன அமைப்பும் எவ்விதம் மாறுபடுகின்றன என்று ரிஷிகள் முடிவாகவும் பரக்க விரிவாகவும் பேசியிருக்கிறார்கள். அந்த அழகை இந்த அத்தியாயம் நன்கு வெளியிடுகிறது.

ஒன்று, மனிதர்களை நல்லவர், கெட்டவர் என்று பிரித்துக் காட்டுவதில்தான் கீதைக்கு அக்கரை போலிருக்கிறது என்று எண்ணிவிடக் கூடாது. அப்படிப் பிரித்து நல்லவர்களுக்குச் சொர்க்கமும் உண்டு. கெட்டவர்கள் நரகம் போவார்கள் என்று ஆசீர்வாதம் செய்வதோ சாபம் கொடுப்பதோ அதன் வேலை யில்லை. க்ஷேத்ரக்ஞன் நன்கு பண்பட்ட க்ஷேத்ரங்களின் ஊடே வெளிப்படும்போது அந்த ஜீவன் எவ்விதம் நடந்து கொள்கிறான்? பண்படாதபோது எப்படி நடந்து கொள்கிறான்? என்ற விஷயத்தை அவனுடைய உடல், மன, புத்தி நிலையில் செயல் படும் விவகாரங்களை நன்கு விஞ்ஞான முறையில் அணுகி

ஆராய்ந்து இந்தக் குணங்கள் அல்லது தன்மைகள் எடுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

பதினாறும் அத்தியாயம்

ஸ்ரீ பகவான் உவாச—

அபயம் ஸத்வ சம்சுத்தி: ஞானயோக வ்யவஸ்திதி:
தானம் தமஸ்ச யஜ்ஞஸ்ச ஸ்வாத்யாயஸ் தப ஆர்ஜவம்
16:1

அபயம்—அச்சமின்மை; ஸத்வ ஸம்சுத்தி—இதயத் தூய்மை; ஞானயோக வ்யவஸ்திதி—ஞானம் யோகம் இரண்டிலும் நிலைப்பு; தானம்—தானம் (ஐயம் இடுகை); தம:—புலனடக்கம்; ச—மேலும்; யஞ்ஜ:—வேள்வி; ச—மேலும்; ஸ்வாத்யாய:—சாஸ்திர; அத்யயனம்; தப:—தவம்; ஆர்ஜவம்—நேர்மை.

ஸ்ரீ பகவான் சொன்னார்:

அச்சமின்மை[1], இதயத் தூய்மை,[2] ஞான—யோக—நிலைப்பு,[3] தானம்,[4] புலனடக்கம்,[5] வேள்வி,[6] சாஸ்திரப்படிப்பு,[7] தவம்,[8] மற்றும் நேர்மை[9] —தொடக்கத்திலுள்ள இந்த வரிகளைப் படிக்கும் போதே நம்முடைய நினைவு தானாகவே ஏற்கனவே (13'வது அத்தியாயம் 7—11 சுலோகங்களில்) கிருஷ்ண பகவான் வாழ்க்கையைப் பயன்படுத்தப் பயன்படும் இருபது பண்புகளைக் கூறியிருப்பதைச் சென்று அடைகிறது. ஹிந்துவாக வாழும் ஒரு பண்பட்ட மனிதனுடைய வாழ்வின் மிக உயர்ந்த போக்குகள் இங்கே விரிவாக சொல்லப்பட்டிருக்கின்றன. அன்றாட உழைப்பின் உலகத்தில் வாழ்ந்து கொண்டே இந்த இருபது அர்த்தமுள்ள வாழ்க்கை முறைகளையும் ஏற்றுக்கொண்டு அவன் வாழும் வாழ்வு இது. இந்தக் குணங்களைக் குறிக்க விரும்பும்போது முதலாவது வருவது அபயம்—அச்சமின்மையாகும். அறியாமையினால் கலங்கி நிற்கும் சூழ்நிலையில்தான் அச்சம் ஏற்படும். அச்சம் அறியாமை (அவித்தை)யின் வெளிப்பாடே. அறிவில் தெளிவு (ஞானம்) ஏற்பட்ட இடத்தில் அச்சமின்மை இருக்கிறது. இதைப் பட்டியலில் முதலில் வைத்து கீதாசாரியன் வெளிப்படையாகச் சொல்லாது ஒரு சுட்டுதல் மூலமே ஒரு பெரிய உண்மையைக் குறித்துக் காட்டிவிடுகிறார். ஒருவனுடைய உண்மையான தார்மீக வளர்ச்சியின் முழுமை அவன் அடைந்த ஆன்மீகப் பரிணாமத்துக்கு நேர் விகிதத்தில்தான் இருக்கும். அதாவது ஆன்மீக வளர்ச்சிக்கு ஏற்றவாறு தார்மீக வளர்ச்சியும் அமையும்.

இதயத் தூய்மை: தார்மீக வாழ்வின் உயிர்நாடி முற்போக்கான இயக்கமே. இது எந்த சாதகனுக்கும் புற வாழ்வின் கட்டுத் திட்டங்கள் மூலம் மட்டுமே ஏற்பட முடியாது.

கீதையோ பேச்சு செயல் இரண்டிலுமே அபாரச் சுறுசுறுப்புடன் இயங்கக் கூடிய ஒரு வேக ஓட்டமுள்ள சமய வாழ்வையே போதிக்கிறது. பகவான் தேம்பிக் கிடக்கும் நல்ல குணம் கொண்ட தலைமுறையை வளர்க்க விரும்பவில்லை. பூரணத் தன்மை பெற்ற ஹிந்து சமய மக்கள் தாங்கள் மட்டும் சிறந்த மதிப்பீடுகள் கொண்டு பண்பட்டு வாழ்ந்தால் போதாது. அவர் கள் தங்கள் தலைமுறையினர் அவ்வளவு பேரையும் அர்த்தமுள்ள வாழ்க்கை வாழத் தங்கள் நேர்மை ஒளியால் அணைத்துக் கொள்ளும்படி வாழ வேண்டும். ஒவ்வொருவரும் நாணயமான விருப்பங்களும் தூய்மையான ஆசைகளும் கொண்ட ஒரு தார் மீக நெறியில் நின்று உண்மை ஒளிவீச வாழ வேண்டும். இது தான் அவர் வேண்டுவது.

ஞான—யோக—நிலைப்பு: மேலே சொன்ன இதயத் தூய்மை மனிதனின் ஆசைகள் சதையைப் பற்றி இருக்கின்றவரை ஏற்பட முடியாது. ஆன்மாவில் எல்லையற்ற அமர ராகங்களுடன் மனது ஓயாமல் லயித்திருக்க வேண்டும். அப்போதுதான் மட்டமான ஆசைகளை ஒழிக்கத் தேவையான துணிவு இதயத்துக்குக் கிடைக்கும். கௌவிக் கொள்ளும் பற்றுக்கள் அவற்றின் காரண மாக கொப்புளித்தெழும் தரம் கெட்ட ஆசைகள் ஒழிய வேண்டும். ஞான யோகமே (அறிவில் இணைப்பு) மனதைத் தன் மட்டமான ஆசைகளை விட்டொழிக்கும்படி பதப்படுத்த வழி. ஒரு குழந்தை ஒரு புதுமையான கண்ணாடிப் பொருளுடன் விளை யாடுகிறது. அந்தக் கண்ணாடிப் பொருளைக் காப்பாற்ற வேண்டு மானால் குழந்தைக்கு ஒரு சாக்லேட்டைக் காட்டினால் அது கண்ணாடிப் பொருளைக் கீழே வைத்து விடும். அதேபோல் மனம் ஆன்மாவின் அமைதியான மகிழ்ச்சிகளைப் புரிந்து கொள்ளும் அள வுக்கு விழிப்பு அடைந்துவிட்டால், அது புலனின்பங்களிலும் மற்றும் அற்ப சுகங்களிலும் நாட்டம் கொள்ளாது.

தானம், புலனடக்கம் வேள்வி ஞான யோக நிலைப்புப் பெறுவதற்கு மனிதன் தன் அந்தக் காரணங்களை அதற்கேற்ற சரி யான முறையில் சேர்ந்து செயல்பட சுருதி கூட்டி வைக்க வேண்டும். அதற்கு இந்த மூன்றும் உரிய வழிகளாம். தானம் செய்யும் எண்ணம் வருவதற்கு ஒருவனுக்கு தன்னிடம் இருப்பது அபரிமிதமாக உள்ளது என்கிற உணர்ச்சி இருக்கவேண்டும். தானம் செய்பவனுக்கு, வாங்குபவனும் தானும் வேறு வேறு அல்ல—ஒருவனே என்ற தத்துவ அறிவு தேவை. அப்போதுதான் தான உணர்வு வெளியாகும். மற்றவர் துன்பம் நமது துன்பம் என்று தத்துவ ரீதியாக மற்றவருடன் இணையத் தெரியாதவன், இல்லாத மற்றவருடன் தன் பொருளைப் பகிர்ந்து கொள்ள மாட் டான். அந்த சிறந்த எண்ணம் அவனுக்கு எழவே எழாது. பறிக்கவேண்டும், சேர்க்கவேண்டும் என்கிற சுபாவ (தானக

எழும் ஆசை) உணர்வுகளேக் கட்டுப்படுத்தி அவற்றின் இடத்தில் தியாக உணர்வை நிரப்பிக் கொள்ளும் திறமை அல்லது ஆற்றலி லிருந்துதான் தான எண்ணம் பிறக்க முடியும். அதற்குப் பொருள் நம்மிடமுள்ள பௌதீகப் பொருள்களே மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்வதுதான். (இதற்குப் பொருள் இதயம் மனம் இவற்றின் நிலேயில் பகிர்ந்து கொள்ளும் குணம் தவிர்க்கப் பட்ட தாக ஆகாது. நம்முடைய கருணேயும் இரக்கமும் பிறருக்கு அளிக்கப்பட வேண்டியதுதான். அதே போல் அறிவையும் பகிர்ந்து கொள்வது அதாவது தானம் செய்வது—(வித்யா தானம்) மிகச் சிறந்த தானங்களாகவே ஸ்மிருதியினுல் கருதப்படு கின்றன.)

ஒருவன் தன் சொத்திலுள்ள ஆசையை விலக்கித் தானும் அதிலிருந்து விலகி அதை ஏழைகளுடன் பகிர்ந்து கொள்ளும் விருப்பத்தையும், ஆற்றலேயும் தானம் வளர்க்கிறது. அதே போல் தன் சுயவாழ்க்கையில் இந்தத் தியாக உணர்வின் செயல்பாடே தமம் அல்லது புலனடக்கமாம். புலன்களே அவை விரும்பியபடி ஆட்டம் போட அனுமதிச் சீட்டு வழங்கி விடுவது மனிதனுடைய உயிர் ஆற்றலே எல்லாம் எதற்கும் உருப்படியில்லாமல் வீணடிப் பதில்தான் முடியும். புலன் நாடு பொருள்களிடையே இந்திரியங் கள் மேய்ந்து ஆற்றலேச் செலவிடுவதைக் கட்டுப்படுத்திஞல் இதுவரை வெளிப்படாது இருந்த புது அளவு ஆற்றலேக் காண லாம். இந்த ஆற்றலே மனமும் புத்தியும் தியான உலகில் உயர்ந்த உயரங்களேச் சென்றடையத் தேவையான இச்சா சக்தியாகப் பயன்படுத்த முடியும். மனதை ஆன்மாவுடன் இணேத்து வைக்க ஒரு சூக்குமமான ஆற்றல் தேவை. புலன்களே அடக்கு வதன் மூலம்தான் நாம் நமக்குள்ளேயே அந்த ஆற்றலேக் கண்டு கொள்ள முடியும். தமம், தானம் இரண்டும் இல்லாமல் ‘உண்மைப் பொருளேத் தேடிச் செல்லும் யாத்திரை வெறும் கனவாகவே போய்விடும்.

வேள்வி: வேத காலத்தில் யக்ஞம் அன்றுட அனுஷ் டானமாயிருந்தது. ஆன்ம வேட்கையுள்ள சாதகர்கள் அதை சிரத்தையுடன் செய்து வந்தார்கள். பிரார்த்தனேயும் பூஜையு மான அனுஷ்டானம் இப்போது எக்ஜத்திற்குப் பதிலாக இக் காலத்தில் ஏற்பட்டிருக்கிறது. இதைச் செய்யாமல் புலன்களே அடக்குவது கஷ்டம். புலனடக்கம் இல்லாமல் தான முயற்சி ஏற் படாது. தானம், புலனடக்கம் இரண்டும் இல்லாமல் ஆன்மானு பவம், அதாவது நம்முள் இருக்கும் தெய்வீகத்தை நாம் பெற முடியாது. இப்போது வரிசையாக வருகிற குணங்களேப் பார்த் தால் ஒரு வியப்புத் தோன்றும். ஒன்றை அடுத்து வருவது தர்க்க பூர்வமாக முதலில் வந்ததற்குப் பிறகு அதன் பலனுக ஏற்படுவ தாகவே இருக்கும்.

(வேத நூல் படித்தல்) சாஸ்திர அத்யயனம் (ஸ்வாத்யாயம்) மரபுப்படி பார்த்தால் இந்தச் சொல் தொடர்ந்து வழக்கமாய் சாஸ்திரங்களைப் படிப்பதைக் குறிக்கும். தினம் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட அளவுக்கு சாத்திர நூல்களைப் படித்து வந்தோமானால் அன்றாட வாழ்விலேயே தெய்வீக உணர்வுடன் வாழ்வதற்குத் தேவையான அகத் தூண்டுதல் கிடைக்கும். இதற்கு இங்கே பயன்பட்டிருக்கிற சொல் மிகவும் கருத்துச் சிறப்புச் செறிவும் கொண்டது. படிப்பு கேவலம் புத்திக்குப் பொழுது போக்காக இருக்கக் கூடாது. சாதகன் படிக்கும் போதே புரிந்து கொண்டு, ஆய்ந்து உண்மையைத் தெரிந்து, தன்னுடைய வாழ்க்கையுடன் ஒட்டிப் பார்க்க வேண்டும். படிப்பு, கூடவே படித்ததை நடைமுறையில் செய்யும் பழக்கம் (அதாவது வேள்வி) இரண்டும் இருந்தால்தான் புலனடக்கத்துடன் வாழ உறுதிகிட்டும். அந்தத் துணிவுதான் ஆக உயர்ந்த பரம்பொருளை அடையச் செய்யப்படும் தியானத் துக்குத் தேவையான நின்று நிலைத்த, அசங்காமல் இருக்கிற தன்மையைத் தர முடியும்.

தவம் (தப:) முயற்சியுடன் உடல் தளத்தில் தேவைகளை ஒதுக்கும்போது புற உலகில் இன்பம் துய்ப்பது குறைந்துவிடும். அப்போது உள்ளுக்குள்ளிருக்கும் சக்தி மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டேயிருக்கும். அந்த ஆற்றலை ஆன்ம வளர்ச்சிக்குப் பயன்படுத்தலாம். இந்த இருவகை முயற்சிக்கும் தான் தவம் என்று பெயர்.

(ஆர்ஜவம்) மறைவு ஒளிவில்லாத நேர்மை—எண்ணங்கள், உணர்ச்சிகள் பொதுவான நடத்தை—இவற்றில் கள்ளம் கபடம் இருந்தால் மனிதத் தன்மையே அழிந்து விடும். உண்மையான செயல்விருப்பங்கள், உள் கருத்துக்கள், முடிவுகள் அபிலாஷை கள், சாதித்தவைகள், பகுத்தறிவுகள் இவைகளைப் பொய்க்கும் படி செய்யப்படுகிற நம்முடைய செயல்கள் நம்முடைய ஆளுமை அல்லது மனிதத் தன்மையை வளைத்து கோணலாக ஆக்கிவிடும். இப்படி வாழ்வதில் ருசி கண்டவன் இரட்டைத் தன்மையை வளர்த்துக் கொண்டு விடுவான். உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவான், செய்வான். பிறகு வெற்றிக் குணம் மழுங்கி விடும். ஆளுமையும் குறைந்து விடும்.

தெய்வீக நிலையில் உள்ள நல்லவன் குணங்களைப் பட்டியல் போட்டுச் சொல்லத் தொடங்கிய இந்த சுலோகத்தில் வரும் குணங்கள் ஒன்றை அடுத்து ஒன்றாக நல்ல தெளிவான விஞ்ஞான முறையிலான தொடர்பு கொண்டிருப்பதை நாம் காண முடி கிறது. ஹிந்து மதத்தில் வருகிற அறநெறி மதிப்பீடுகள் தார்மீகச் சிறப்புக்கள் எல்லாம் யாரோ கற்பனை நிறைந்த சாது முனிவரோ

அல்லது அழுமூஞ்சி கடவுள் தூதரோ தன் இஷ்டத்துக்குச் சொல்லிய கூற்றுக்கள் அல்ல. காரணகாரிய ஆய்வு, அனுபவத் தெளிவு ஆகிய கடினமான பாறையின் மேல் கட்டப்பட்ட கட்டடங்கள் அவை. அவற்றை உண்மை உள்ளத்துடன் பழக்கத்துக்குக் கொண்டு வந்து முயற்சியுடன் அவற்றை வாழ்க்கையில் நிறைவேற்றினுல் மனிதன் தன் உள்ளே தூங்கிக் கிடக்கும் தெய்வீகச் சிறப்புக்களை வெளியே கொண்டு வர முடியும். இந்தியாவில் அறநெறிகள் சொர்க்கத்துக்குப் போகும் அனுமதிச் சீட்டு அல்ல! ஆனுல் மனிதனின் உள்ளே மறைந்து கிடக்கும் தெய்வீக ஆற்றல்களின் மலர்ச்சிக்கான தயாரிப்பேயாகும்.

*அஹிம்ஸா ஸத்யமக்ரோ தஸ்த்யாக: சாந்தி ரபைசுனம்*
*தயா பூதேலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீர சாபலம்*

***16:2***

*அஹிம்ஸா—ஊறு செய்யாமை; ஸத்யம்—உண்மை; அக்ரோதம்—கோபமின்மை; த்யாக—தியாகம்; சாந்தி—அமைதி; அபைசுனம்—கோணல் புத்தியின்மை; தயா—தயவு; பூதேஷு—உயிர்களிடத்தில்; லோலுப்த்வம்—வெளவ விரும்பாமை; மார்தவம்—மிருதுத்தன்மை; ஹ்ரீ—நாணம்; அசாபலம்—அலைவு (சபலம்) இன்மை.*

ஊறு செய்யாமை (அஹிம்ஸை) உண்மை, கோபமின்மை, தியாகம், அமைதி, கோள் சொல்லாமை, உயிர்களிடத்தில் கருணை, பேராசை கொள்ளாமை, மிருதுத் தன்மை (மென்மை) அடக்கமுடைமை ஆசையின் அலைவின்மை (பேதுருமை)

ஸ்ரீ கிருஷ்ணபிரான் தொடர்கிருர். தெய்வ மனிதர்களின் மற்ற பண்புகள் சொல்லப்படுகின்றன.

அஹிம்சை (ஊறு செய்யாமை) உயிர்களுக்கு பௌதீக உலகில் உடல் அளவில் காயம் ஏற்படுத்துவதை மட்டும் இது குறிக்கிறதில்லை. அதே அளவுக்கு உள்ளத்தால் கெடுதல் நினைப்பதையும் அது குறிக்கிறது. உடலளவில் அஹிம்சை என்பது ஒருகாலும் இயலாத ஒன்று. உயிர் வாழ எதாவது ஒரு வகையில் உடலால் ஹிம்சை செய்ய வேண்டியது நேரிடும். அது தவிர்க்க முடியாது. அப்படிச் செய்யும் போது நம்மைச் சுற்றி உலகில் நமக்கு தொந்தரவு நேர்ந்த போதும், உள்ளம் தூய்மையாய்க் கருணையுடன் இருந்தால் அப்போது நம்மால் நேரிட்டுவிடும் தொல்லையை புண்படுத்துவதாக, ஊறு செய்வதாக ஏற்றுக் கொள்வதில்லை.

ஸத்யம்—உண்மை. இதைப் பற்றித்தான் நாம் போன

சுலோகத்தில் நேர்மை என்பதைப் பற்றிப் பேசும் போது விரிவாகப் பேசினேம்.

அக்ரோதம்—சமமான மனநிலே. இதைக் கோபமில்லாத தன்மை என்று மொழிபெயர்ப்பது அவ்வளவு சரியில்லே. உண்மை யில் நாம் நம் உள்ளத்தில் கோபம் எழும் போது அதை சரியான நேரத்தில் அடக்கத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். அது நம் செயல்களில் வெளிவரக் கூடாது. மனம் கோபத்தை அறவே நீக்கிய நிலேயை அடையும் என்று எதிர்பார்ப்பது இயற்கைக்கு விரோதம். ஆனல் எந்த உணர்ச்சியையும் நம்மை கையாலாகத வனுக ஆக்கும் அளவிற்கு அடிமைப் படுத்திக் கொள்ள விடக் கூடாது. கோபம் பிறரிடம் சகிப்பில்லாதபோது வருகிறது. அதாவது பிறர் கருத்துக்கள், சொல், செயல்கள் நாம் விரும்புகிற வற்றுடன் மோதித் தொல்லே கொடுக்கும் போதும் அல்லது நாம் நம்மைப் பற்றிக் கொண்டிருக்கிற பெருமைக் கருத்துக்களே அலட்சியம் செய்யும் போது நம் சகிப்புத் தன்மை தொலேந்து கோபம் வந்து விடுகிறது. சுருக்கமாக அக்ரோதம் என்ருல் கோப சூனிய நிலே என்ற கருத்துக் கொள்ளக் கூடாது. ஆனல் மனதை முடிந்த வரை சம நிலேயில் வைத்திருப்பது என்றே பொருள் கொள்ள வேண்டும்.

*தியாக:* விட்டுவிடும் மனப்பாங்கு. இதற்கு முந்திய சுலோகத்தில் இருப்பது போலவே இங்கும் குணங்களுக்குள் அருமையான தொடர்பு இருப்பதைப் பார்க்கிறேம்! ஒரு குணத் துக்கும் அடுத்துச் சொல்லப்படும் குணத்துக்கும் கருத்தில் தர்க்க ரீதியான தொடர்பு இருக்கிறது. உண்மை இல்லாமல் அஹிம்சை சாத்தியமில்லே. அதேபோல் விட்டுவிடும் தியாக குணம் இல்லா மல் சம மனநிலே கிடைப்பது என்பது வீண் ஆசையாகிப் போகும்.

*சாந்தி (அமைதி நிலே):* உண்மையைத் தெளிவாகப் புரிந்து கொண்டு ஒருவருக்கும் எந்த ஹிம்சையும் செய்யாமல், சுற்றி என்ன நடந்தாலும், சமநிலேயில் நின்று தியாக உணர்வை விடா மல் வாழ ஒரு சாதகனுக்குச் சாத்தியம் ஆகிவிட்டது என்ருல் அவனுக்கு அகத்திலேயே பதற்றமற்ற நிலேயும் அமைதியும் கிடைத்துவிடும். பேய்க் காற்றுப் போல் சீறும் வாழ்க்கை, குத்திக் குதறும் சம்பவங்கள் இவற்றின் இடையிலேயும் அப்படிப்பட்ட மனிதன் ஒரு உள் அமைதியையும் புத்தியில் ஒரு சம நிலேயும் கொண்டவனுக ஆவதில் வெற்றியடைந்து வாழ்வான்.

*அபைசுனம்:* கோள் (புறம்) சொல்லாத நாக்கு—ஒருவன் நாவு அதற்கு உடைய மனிதனின் தன்மைக் கேற்றவாறுதான் அழகாகவோ அசிங்கமாகவோ இருக்கும். ஏற்கனவே ஒருவன் உள்ளம் வீறி, வெடித்து இருக்குமானல் அவன் நாவை

தீமைதரும் பொல்லாங்கு பேசுவதில் ஈடுபடுத்தி ஒரு கோண லான மனநிறைவைப் பெறுவான். அப்போது அந்த மென்மை யான சதைப் பிண்டமான நாக்குக்கு மிக பயங்கரமான அஸ்தி ரத்தைவிட அதிக அழிக்கும் ஆற்றல் ஏற்பட்டு விடுகிறது. இப்போது இருப்பதைவிட இன்னம் முழுமையான உள்ளத்தை யும், இன்னம் அதிக ஆத்ம விளக்கத்தையும் பெற விரும்பும் சாதகன் உள் லயத்தை ஏற்படுத்திக் கொண்டு வாழ வேண்டும். அப்போதுதான் அவன் நாவிதழில் இருந்து அவன் ஆன்ம மலரின் தெளிவான சொல்லமைதி, கருத்தில் கொண்டிருக்கும் நாணயம், கேட்பவர்களுக்கு மறைவு ஒளிவு இல்லாது தெளிவாக எடுத்துக் கூறும் ஆற்றல், நிறைந்த வாய்மை, ஈடுபாடு, அன்பு ஆகியவை இருத்தல்—ஆகியவை காரணமாக அந்த பேச்சு பேசுபவனுடைய சுயசரித்திரத்தையே எடுத்துச் சொல்லிவிடும்! அப்படிப்பட்ட பேச்சுத் திறன் வளரவேண்டும் என்ருல், நாம் அறியாமலேயே அதனுடன் ஒட்டிய பல பண்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் நம்முடைய அந்தக்கரணங்கள் ஒழுங் கான முறையில் முழுமையாகச் சுயக்கட்டுப்பாட்டுக்குள் வரும்.

(பூதேஷு தயா) உயிர்களிடத்தில் இரக்கம்—சமூகத்தில் மனிதன் உயர்ந்த குறிக்கோளைக் கொண்டுள்ளவன். அதே மாதிரி மற்றவர்களும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. சுற்றிலும் குறைபாடுகள் இருக்கவே செய்யும். ஆனுலும் சாதுக் களும் ரிஷிகளும் இந்தக் குற்றம் குறைபாடுகளுக்குள் ஊடுருவி நின்று இயங்கும் உயிர்த் தத்துவத்தின் எல்லையற்ற அழகைக் காண்கிருர்கள். அதனுல்தான் அவர்கள் உள்ளத்தில் நிரந்தர மான அருள் குடி கொண்டு இருக்கிறது. அன்புதான் நம்முள்ளே இருக்கும் அளவற்ற அருள் (கருணை) ஊற்றைக் கண்டுபிடிக்கும். மிக இழிவான இதயங்கள் கொண்ட வெறுக்கத் தகுந்த அவலக்ஷணமான மக்களுக்குள்ளேயும் இருந்து இயங்கும் உயிர்த் தத்துவத்தின் அழகைக் காண நாம் பயின்ருல் ஒழிய நம்முடைய மிருதுவான தன்மையால் உள்ளேயும் புறத்தேயும் ஏற்படும் இனிமை செய்யும் அருள் அமுதத்தை வெளியில் பரப்ப முடியாது. (அலோலுப்தத்வம்) பேராசையில்லாமை அகவாழ்வில் பேராசை யில்லாமை என்பது ஐம்புலன்களை அவற்றின் வெளிகளில் வேட்டையாட விடாமல் தடுத்து வைப்பதாகும். சராசரி மனித னுக்கு முடிவற்ற ஆசைகளும் அடக்க முடியாத பசியும் இருந்து கொண்டே இருக்கிறது. அந்த புலன்—பசியில்லாமல் அடக்கமாய் வாழ்வதையே நாம் இங்கு அலோலுப்தத்வம் என்று தெரிந்து கொள்கிருேம்.

மார்தவம் ஹ்ரீ: மென்மையும் நாணமும்—இவை மனித

னுடைய குறிப்பிட்ட குணங்களைக் குறிப்பதைவிட மனிதன் தன் உயர்ந்த பண்பாட்டின் காரணமாக உலகில் பழகும் போது காட்டுகிறுனே ஒருவகை அழகும் மணமும் பொருந்திய ஒரு சிறப்பும் இணக்க லயமும் அதையே அதிகம் குறிக்கிறது. எவன் ஒருவன் மேலே சொல்லப்பட்ட சிறந்த நற்குணங்களில் தோய்ந்து நிலைத்து நிற்கிறுனே அவனிடம் இருந்து இந்த இரண்டு குணங்கள் தாமாகவே வெளியாகின்றன. சுய கட்டுப்பாடு கொண்ட அந்த மனிதன் நடந்து கொள்ளும் விதத்தில் ஒரு மென்மையும் அடக்கத்தின் நாண எழிலும் இருக்கும்.

அசாபலம்: பரபரப்பு இன்மை—அநாவசியமாய் கையையும் காலையும் ஆட்டிக் கொண்டிருக்காத தன்மை. மனிதன் மனமும் மனப்பாங்கும் அமைதியுடன் இல்லாத போது அவன் உடலின் செயல்களிலும் அந்த அமைதியின்மையும் பரபரப்பும் பிரதி பலிக்கின்றன. உடல் மனதின் நிழலைப் பின்பற்றும் தன்மை யுள்ளது. இடைவிடாத பரபரப்பு திடீரென்று சுறுசுறுப்பாக அங்கங்களை இயக்கி வெறி ஆட்டம் போடுதல் இவற்றை நாம் கலங்காத மனப்பாங்கையும் பொறுப்புணர்ச்சி கொண்ட குணத்தையும் பெற்றிராத மனிதனிடத்தில் காண்கிறோம். இவை குழந்தைகளிடம் இருக்கலாம். அவை குழந்தையின் அழகை அதிகரிப்பதாகக் கூட இருக்கலாம். ஆனால் மனிதன் வளர்கிறான் என்றால் அவன் சுயகட்டுப்பாட்டின் மூலமாகப் பெற்றுவரும் ஒரு சீர்மையின் அழகை அவன் செயல்கள் காட்டிவிடும்.

சங்கரர் அவர்கள் இதற்குப் பொருள் கூறும்போது ‘வீணில் கைகளை’ கால்களை ஆட்டாதிருத்தலும் பேசாமலிருத்தலும்’ என்று குறிப்பிடுகிறார். இது சொல்லின் பொருளுக்கு ஒரு விரிவு கொள்வதாகும். அவர் திறமையான எந்தச் செயலிலும் காட்ட வேண்டிய செயல் விரைவையும் ஆற்றல் சிக்கனத்தையும் பற்றி எண்ணுகிறார். களைப்பை உண்டு பண்ணும் ஆட்டங்கள், கருத் தற்ற முயற்சிகள் இவற்றில் அநாவசியமாக தசைகளை (அங்கங் களை) ஈடுபடுத்தி வீணடித்தல் தன்னிடத்தில் இருக்கிற குறைபாட்டையும் பலவீனத்தையும் வெளிக்காட்டும். அப்படிப் பட்டவர்கள் கற்பனை பிரமாதமாக இருக்கும். ஆனால் அறிவின் கட்டமைதியும், உணர்ச்சிகளின் ஆற்றலும் இரக்கப்படும் அள வுக்கு பலம் குன்றி இருக்கும். எனவே அப்படிப்பட்ட அங்க இயக்கங்களைக் கட்டுப்படுத்தும் போது மனிதன் ஈடுபடும் அநேக துறைகளில், சாதாரணமாக ஏற்படும் பலவீனங்கள் குறைந்து பலம் அதிகரிக்கும்.

மேலும்

தேஜ: க்ஷமா த்ருதி: சௌசமத்ரோஹோ நாதி மானிதா
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய பாரத!

**16:3**

தேஜ—தேசு; க்ஷமா—மன்னிக்கும் குணம்; த்ருதி—பொறுத்துக்கொள்ளும் பண்பு; சௌச்சம்—தூய்மை; அத்ரோஹ—வெறுப் பின்மை; நஆதி மானிதா—அதிக சுயமதிப்பு இல்லாமை; பவந்தி—இருக்கின்றன; ஸம்பதம்—சொத்து; தைவீம்—தெய்வீக; அபி ஜாதஸ்ய—பிறப்புப் பெற்றவனுக்கு; பாரத—ஏ பாரதனே.

3.தேஜஸ், மன்னிக்கும் குணம்; பொறுத்துக்கொள்ளும் பண்பு, தூய்மை, வெறுப்பின்மை, அகங்காரமின்மை, —இவை தெய்வீகப் பிறப்புள்ளவனின் சொத்தாகும் —ஏ பாரதா!

தெய்வ சம்பத்துடன் பிறந்த மனிதன் இதயத் தன்மைகளை மேலும் ஒளிபொருந்தியதாக வண்ணம் தீட்டுகிறார் கண்ணன். மிகவும் குறைந்த தீட்டல்களைக் கொண்டு அப்படிப்பட்ட மனிதர்களின் மனப்பாங்கு, புத்தியின் அமைதிச் சீர்மை, ஆன்மீக ஒளி ஆகியவற்றை ஓவியப்படுத்திக் காட்டுகிறார்.

தேஜ: ஒளிரும் பிரகாசம்: நல்ல சாப்பாடு தேவையான ஓய்வு இவற்றின்மூலம் உடலுக்குக் கிடைக்கும் பளபளப்பை, இங்கே குறிக்கவில்லை. உடலை உரிய முறையில் வளர்த்தும் தசைப்பிண்டங்களைத் திட்டமிட்டுப் பெருக்கவைத்தும் புற அழகைப் பெற்றுவிடலாம். அதை இங்கே குறிக்கவில்லை ஆன்மீக அழகொளி தலையைச் சுற்றி வட்டமாகக் காட்டப்பட்டு நெருப்புப் போல் ஒளிதரும். தோற்றம் அல்ல. புத்தியின் உள் ஒளி, கண்களில் மிளிறும் பிரகாசம் அவனைச் சுற்றி இருக்கும் அமைதியின் நறுமணம், அவன் எல்லோரிடமும் கொண்டிருக்கும் அன்பின் கோலாகலம்; அவனுடைய உள்ளக்கிடக்கையில் மிக ஆழ்ந்த இடத்திலிருந்து எழுந்து ஒளிரும் மகிழ்வின் பேரொளி—இவை எல்லாம்தான் பரிபூர்ணமான அன்புடனும் ஆர்வத்துடன் பிறருக்கு சேவை செய்து அந்த தொண்டிலேயே தன்னுடைய முழுமையையும் பெறுகிற மகாத்மாவின் தனித் தன்மையின் ஆகர்ஷணங்களாம். (கவர்ச்சி சக்திகளாகும்)

க்ஷமை—(பொறுமை) இந்தச் சொல்லை இந்த இடத்தில் பயன்படுத்தியிருப்பதால் அதன் பொருளுக்கு ஒரு தனி மதிப்பு ஏறிவிடுகிறது. பிறர் மூலம் ஏற்பட்ட ஏதோ சிறிய உடல் துன்பம் அல்லது மனச் சங்கடத்தைப் பொறுத்துக்கொண்டிருப்பது என்ற அளவில் மட்டும் இங்கே இந்தச் சொல் குறிக்கவில்லை. ஆனால் மிகவும் பலத்த எதிர்ப்புகள், ஆளைக் குறுக்கிவிடும் சந்தர்ப்பங்கள் இவைகள் நேரிடும் போதும்கூட சற்றும் கலங்காமல் பொறுமையுடன் உலகத்தை எதிர்கொள்ளும் மனிதனுடைய நுண்மையான துணிவாகும்.

த்ருதி: (மன உறுதி) இடுக்கணழியாமை— பொறுத்துக் கொள்ளும் பண்பு—மனிதன் துணிவுடன் உலகை எதிர்கொள்

கிறுன். அதில் எப்போதும் மகிழ்ச்சி தரக்கூடிய நிலேகள் அனுகூல மான சம்பவங்கள், நன்மை தரக்கூடிய செயல்களின் தொகுதி கள் இவைகளே அவன் வேலேக் களத்தில் வந்துகொண்டு இருக்கும் என்று சொல்ல முடியாது. சாதாரணமாக, துணிவு குறைந்த மனிதன் திடீர் என்று அலுப்புப்பட்டுக்கொண்டு எடுத்த வேலேயைப் பாதியில் விட்டு விட்டுப் போவதைப் பார்க்கிறோம். அநேகருக்கு உன்னதமான சாதனேயைச் சாதிக்கும் பெருமை கிட்டாமலே போய்விடுகிறது. மூலே திரும்பியவுடன் வெற்றி காத்து நிற்பதைக் காணலாம் என்று இருக்கிற நிலேயிலும்கூட அவர்கள் களத்தை விட்டு ஓடி விடுகிறுர்கள். ஒருவனுக்கு 'துப்பாக்கியைக் கீழே போடாமல் பிடித்துக்கொண்டிருக்க வேண்டும் என்றுல் அவனுக்குள் மறைந்திருக்கும் ஒரு ஆற்றல் தேவைப்படுகிறது. அதுதான் அவனுடைய உரம் நீங்கிய களேப் படைந்த மனத்திற்கும் புத்தியின் திறமைக்கும் உரம் ஊட்டி வளர்க்கமுடியும். நன்கு ஓர்மைப்பட்ட 'மனிதத்தின்' உள்ளே யிருந்து ஊறிவரும் இந்தப் புனிதமான ஆற்றலேத்தான் மனஉறுதி அல்லது பொறுத்துக்கொள்ளும் குணம் என்கிறோம். நம்பிக்கை யின் உரம். லட்சியத்தில் உறுதியான பிடிப்பு, செயலில் சமச்சீர்த் தன்மை, குறிக்கோளேப் பற்றிய தெளிந்த விளக்கமான பார்வை, தியாகம் செய்யும் துணிவான உள்ளாற்றல் முதலிய நன்கு வளர்க்கப்பட்ட இந்தப் பண்புகளே உரனழிவு, களேப்பு, அவ நம்பிக்கை இவற்றைத் துடைத்து மன உறுதியுடன் சோர்வை வென்று லக்ஷியத்தில் வெற்றி அடைய உதவுகிறது.

சௌச்சம்—சுத்தம் அல்லது தூய்மை: மனதின் எண்ணங்கள், உள்ளச் செயல் தூண்டுதல்கள் இவை சுத்தமாக இருக்கவேண்டும் என்பதைமட்டும் இந்தச் சொல் குறிப்பதோடு அல்லாமல் சுற்றுப்புறம் சுத்தமாக இருக்கவேண்டும். பழக் கங்கள் தூய்மையாக இருக்கவேண்டும். மனிதன் வைத்திருக்கும் பொருள்களும் அப்பழுக்கு அற்று சுத்தமாக இருக்கவேண்டும் என்பதையும் தெரிவிக்கிறது. உள்ளத் தூய்மைக்கு அதிகமாக முக்கியத்துவம் கொடுத்து வந்த காரணத்தால் இன்று நம்மு டைய சமூகத்தில் புறத் தூய்மை அசட்டை செய்யப்பட்டு கிடப்பதை பார்க்கிறோம். சுத்தமான உடை மரியாதை காட்டும் பழக்கங்கள். இவை காணக்கிடைக்காத பொருள்களாகிக் கொண்டு வருகின்றன. பக்த ஜன சமுகம்கூட அப்படியா சொல் கின்றன? சாதகனுக்கு சுத்தமும், அழுக்கற்ற தன்மையும் இன்றியமையாத ஒழுக்கமுறைகள் என்று தாம் சொல்கின்றன.

அத்ரோஹம்: வெறுப்பின்மை: முன்னுலுள்ள சுலோகத்தில் அஹிம்சாதருமமும் பேசப்பட்டது. இங்கேயும் கிட்டத்தட்ட அதுதான் சொல்லப்படுகிறது. அதனுல் அழுத்தம் கிடைக்கிறது என்றுலும் பொருள் குறிப்பில் சற்று மாறுதலும்

இருக்கிறது. இதன்மூலம் வெறுப்பு இருக்கக் கூடாது என்று மட்டும் சொல்லப்படவில்லை. மற்ருெரு ஜீவனுக்கு மிக மிகக் குறைவாகவும்கூட, தெளிவாகப் புலப்படாதவாறுகூட, ஊறு விளைவிக்க வேண்டுமென்று நினைக்கக்கூடாது என்று குறிப்பிடப் படுகிறது. யாரும் கனவிலும்கூட தனக்கு ஊறு விளைவித்துக் கொள்ள விரும்பமாட்டான். அதே போல ஒரு உண்மையான காரணத்தால், எல்லாம் நானே தான் என்று அனுபவம் கொள் கிற காரணத்தால் பிறருக்கு இழைக்கப்படும் துன்பம் தனக்கே ஏற்படுத்திக்கொள்கிற துயர்தான் என்று உணரும் நிலையில் இருப் பான். இருக்க வேண்டும்.

நாதி மானிதா, அதிகப் பெருமை கொள்ளாமை: சுய மரியாதையைப் பற்றிக்கொண்டிருக்கும் மிகைப்படுத்தப்பட்ட எண்ணங்களை ஒழித்த அக்கணமே மனிதனுக்கு ஆயிரக்கணக் கான பதற்றங்களிலிருந்து, பொறுப்புக்களிலிருந்து விடுதலை கிடைத்துவிடும். மிகைப்படுத்தப்பட்ட அகம்பாவத்தை விட்ட வனுக்கு வாழ்க்கை 'பறவை இறகு' போல் லேசாகிவிடும். ஆனுல் ஒரு கொரியாலேன சுக்கோ *(coriolanus)* என்ருல் வாழ்வு ஒரு பளுவான சிலுவையாகி விடுகிறது. அதைத் தூக்கிக் கொண்டு போகவேண்டும். அது இரக்கமின்றிக் கழுத்துச் சதையை அறுக்கும். அவன் அழுதுகொண்டே சுமந்து போக வேண்டும். பாவம்.

தெய்வீக சம்பத்து: (குணங்களாகிய உரிமைச் சொத்தைப்) பெற்றவனுடைய இருபத்தாறு பண்புகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை பூரணமான ஒரு ஓவியத்தைத் தீட்டித் தருகின்றன. பரிபூரணத் தன்மையை அடைய விரும்பும் சாதகனுக்காக ஒரு வழிகாட்டி போல இவை கொடுக்கப் பட்டிருக்கின்றன. அந்த வழியில் நாம் எவ்வளவுக்கெவ்வளவு நம் வாழ்க்கையின் நோக்கை மாற்றிச் சீர்திருத்தி அமைத்துக் கொண்டு அதற்கேற்ற பாதையை வகுத்துக்கொள்கிருேமோ அவ் வளவுக்கவ்வளவு நம் ஆற்றல்களின் செலவு கட்டுப்பட்டு பெருகும். இல்லை என்ருல் அவை பயனற்ற வழிகளில் அழிந்து போகும். இந்த இருபத்தாறு பண்புகளையும் பூராவாக மதித்து வாழ்வது நமக்கு ஒரு சரியான வாழ்க்கை முறையை உறுதியாக அமைத்துக்கொடுக்கும்.

தம்போ தர்போமி மானஸ்ச க்ரோத: பாருஷ்யமேவச
அஜ் ஞானம் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பதமாஸுரீம்
16:4

தம்ப:(டம்பம்) உப்பிக்காட்டும் அகங்கார வேஷம்; தர்ப்ப—பொய்ப் பெருமை; அபிமான—அடிப்படையில்லாத சுயமதிப்பு; ச—மேலும்; க்ரோத—கோபம்; பாருஷ்யம்—சீரலைக்கும் கடினத்

தன்மை; எவச—இவையும்; அஜ்ஞானம்—அறியாமை; ச—உம்; அபிஜாதஸ்ய—பிறந்தவனுக்கு; பார்த்த—பார்த்தா; ஸம்பதம்—உடைமை: ஆஸுரீம்—அசுரத் தன்மை கொண்ட

டம்பம், பகட்டு, தற்பெருமை, கோபம், உறுத்தும் முரட்டுத் தனம், அறியாமை, இவை எல்லாம்; பார்த்தா, அசுர உடைமையுடன் பிறந்தவர்களுக்கு உரியது.

ஒரு சிறிய சுலோகத்தில் இவ்வளவு கச்சிதமாக அசிங்கக் குணம் படைத்த மனிதர்களின் கறுத்த தோற்றத்தை யாருமே எங்குமே இதற்கு முன் அடக்கிப் பேசியதில்லை. மனிதன் இத யத்தில் வந்து சேரக்கூடிய சைத்தான் படை முழுவதும், எல்லா வற்றையும் சேர்த்து குறிக்கக் கூடிய இனங்கள் இந்த சுலோ கத்தில் எடுத்து ஒன்ருகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப் பார்த்தால் நாம், 'எந்த 'உடைமை'களைத் தவிர்க்கவேண்டும். எவற்றைத் தவிர்த்தால் தங்கு தடையின்று நம் இதயத்தின் உள்ளிருந்து அதிக சக்தி இடையருது கிடைத்துக்கொண் டிருக்கும் என்று நமக்கு எச்சரிக்கை கிடைக்கும்.

தம்பம்—(டம்பம்): பொய்யாக ஊதிக்காட்டும் அகங்கார வேஷம்: ரொம்ப நேர்மையானவன் போல் காட்டிக்கொண்டே மோசமான துந்நெறியில் வாழ்ந்து வருதல்' என்ற பொருள் இதற்குச் சங்கரபகவத்பாதாளால் சொல்லப்படுகிறது. கெட்டவர்களுக்கு இந்த பகட்டான வழி (பூதஞ்சி) பழகு வதற்குக் கிடைத்த எளிய வழியாகிவிட்டிருக்கிறது. அவர்கள் நல்ல குணம் தூய்மை, சமய பக்தி, உண்மை முதலிய பசுத் தோல்களைப் போர்த்தி கொலைகார எண்ணங்கள், அசிங்கமான கருத்துக்கள் கொண்ட புலிகளாகிய தங்களை மறைத்துக் கொண்டு விடுகிருர்கள்!

தர்(ப்)பம்—கர்வம்: படிப்பு, சொத்து, சமூகத்தில் பதவி மதிப்பு குடும்ப சம்பந்தங்கள்—இவற்றைப் பற்றி எல்லாம் கர்வம் ஏற்படும்போது மனிதன் சகிக்க முடியாத ஒரு ஆகாயப் பார்வையைப் பெற்றுவிடுகிருன். பிறகு அவன் உலகைத் தவருகக் கணிக்கும் ஏமாற்றும் கண்கள் கொண்டு பார்க்கிருன். அவன் தன்னுடைய கற்பனை உலகில் தானே பெரியவன் முக்கிய மானவன் என்ற எண்ணத்தோடு வாழத் தொடங்கிவிடுகிருன். அதன் பயனுக ஒரு கர்வம் ஏற்பட உள்ள அமைதியே தொலைந்து விடுகிறது. அப்படிப்பட்ட மனிதனுக்கும் சமூகத்தின் அன்புக்கும் எவ்வித உறவும் இல்லாமல் போய்விடுகிறது. காற்றடைத்த தற் பெருமைபிடித்தவன். பாவம், உலகில் ஒரு தனித்த பிராணியாகி விடுகிருன். அவனுடன்கூட இருப்பதெல்லாம் அவன் கற்பனை யாகக்கொண்டிருக்கும் முக்கியத்துவமும் பெருமை விளக்கமாக அவன் காணும் கனவுகளேயாம். மேலும் தானே எல்லாம்

என்கிற கர்வத்தில் வளர்ந்துகொண்டே போய்விடுகிறுன்.

க்ரோத! (கோபம்): இப்படித் தன்னைப் பற்றி பொய்ப் பெருமையும் கர்வமும் கொண்ட வேஷக்காரன் தன்னைச் சுற்றி யுள்ள உலகத்தை உயர்த்திய விழிகளுடன் பார்க்கிறுன். தன்னைப் பற்றி அவன் கொண்டிருக்கிற மதிப்பை உலகம் ஒத்துக் கொள்கிற தாயில்லை. அது அவனைப் பற்றி மாறுபாடான அபிப் ராயம் கொண்டிருக்கிறது. எனவே அவன் தனக்குள்ளேயே பொங்குகிறுன். அது கோபமாக வெடித்து எதைக் கண்டாலும் ஆத்திரப்படுகிறுன். பிறகு இப்படி ஆத்திரத்தில் பொங்கும் மனிதனுடைய பேச்சும் செயல்களும் பிறரை அவமதித்து துன் புறுத்தும் முரட்டுத் தனத்தில் வந்து சேருவது இயற்கையாகி விடும்!

இப்படி அகங்காரம், தற்பெருமை, கோபம், அவமதிக்கும் முரட்டுத் தனம் — இவை எல்லாம் அவன் அஞ்ஞானத்திலிருந்துதான் எழுகின்றன. இந்த அஞ்ஞானம் தன்னைப்பற்றிய மருட்சியை ஏற்படுத்திவிடுகிறது. அவனுக்குத் தன்னைப் பற்றியும் தெரியாது. பிரபஞ்சத்தின் நியதி பற்றியும் தெரியாது. எனவே அவன் உலகுடன் கொள்ளவேண்டிய விஷ யத்தில் குருடாகி விடுகிறுன். சுருக்கமாகக் கூறினுல் அவன் தன்னைப் பற்றியே சதா எண்ணும் சுயநலமியாக மாறிவிடுகிறுன். உலகம் முழுதும் தான் எண்ணுகிறபடிதான் இருக்கவேண்டும், நடந்துகொள்ளவேண்டும் என்று எண்ணுகிறுன். இந்த மோகத்தில் இருந்துகொண்டு அவன் உலகம் நலமுடன் வாழ அதற்கு ஒரு பித்துக் குளித்தனமான திட்டத்தை அளிக்கிறுன். அத்திட்டம் உலகத்துக்கு உரியதாக இல்லாமல் அவன் செயல் உலகத்திற்கு உரியதாக இருக்கிறது. தன்னைப் பற்றியும் உலகுடன் தான் கொள்ளவேண்டிய உறவைப் பற்றியும் உள்ள அறியாமை தான் ஒருவன் சுற்றுப் புறத்திலுள்ளவற்றுடன் எதிர்த்துப் புரட்சி செய்து, பைத்தியம் போல் நடக்கவைக்கும் ரகசியக் காரணம்.

அப்படிப்பட்ட மனிதர்களைத்தான் கண்ணன் இங்கே— பேய்த்தனமாக இழிந்தவர்கள் அசுர உடைமை பெற்றவர்கள் என்கிறுர். இந்த நேர் எதிர்மாறுக குணங்கள் ஏற்கனவே பேசப் பட்ட தெய்வ உடைமை பெற்ற நல்லவர்களுடைய பெருமையை மிகவும் ஒளியுடன் எடுத்துக்காட்டுகின்றன.

தெய்வீக நல்லவர்கள், பேய்த்தனமாக இழிந்தவர்கள்— இந்த இரண்டு வகைக் குணங்களின் முடிவு பற்றி பின்வருமாறு கூறப்படுகிறது.

தைவீ சம்பத் வி மோ க்ஷாய நிபந்தாயாஸு ரீ மதா
மா சுச: ஸம்பதம் தைவீமபி ஜாதோ(அ)ஸி பாண்டவ

16:5

தைவீ—தெய்வீக; ஸம்பத்—(குணங்கள்) உடைமை; விமோக்ஷாய—உலக பந்தத்திலிருந்து விடுதலையாக; நிபந்தாய—பிணைப்புக்கு; ஆஸுரி—அசுர (உடைமை) மதா—கருதப்படுகிறது; மா சுச: கவலைப்படாதே. ஸம்பதம்—உடைமை; தைவீம்—தெய்வீகத்துக்கு; அபிஜாத—பிறந்தவனாக; அஸி—இருக்கிறாய்; பாண்டவ—ஏ பாண்டவா!

தெய்வீக குணம் (உடைமை) விடுதலை தருவதென்றும் அசுரத் தன்மை பந்தத்திற்கு உள்ளாக்குவது என்றும் கருதப்படுகிறது. நீ கவலைப்படாதே, பாண்டவா, நீ தெய்வீக உடைமையுடன் பிறந்திருக்கிறாய்.

இப்படி விவரமாக நல்ல உடைமைகளையும் தீய உடைமைகளையும் பற்றி கேட்ட பிறகு கீதையின் பற்றுள்ள யாருக்குமே, தன் நிலை என்ன? என்று புரியாமல் ஒரு நம்பிக்கையிழந்த சங்கட நிலை ஏற்படுவது இயற்கையே. நான் முன் வகுப்பில் சேர்ந்தவனா? பின் வகுப்பில் சேர்ந்தவனா? என்று புரியாத நிலை. சாதாரணமாக நான் பின் வகுப்புக்குச் சேர்ந்தவன்தான். முன் வகுப்பில் நான் எங்கே சேர்க்கப்படுவேன் என்று எண்ணிக்கொள்வதற்கு அதிக வாய்ப்பு இருக்கலாம். அர்ச்சுனனுக்கும் அந்த அவநம்பிக்கை தோன்றியிருக்கலாம். அந்த அகக் கருத்து முகத்திலும் தெரிந்திருக்கலாம். இதைக் கவனித்த கண்ணபிரான் அவனுக்கு ஆறுதல் கூறுகிறார்: ''பாண்டவனே (பாண்டுகுமாரா)! கவலைப்பட வேண்டாம். நீ தெய்வீக உடைமைக்கு உரியவனாகத்தான் பிறந்திருக்கிறாய்!'' ஒரு சாதகன் கீதையின் இந்த இடம் வரை படித்துப் புரிந்துகொள்வதற்கு வேண்டிய விருப்பமும் விடா முயற்சியும் கொண்டிருக்கிறான் என்றாலே அவன் 'தெய்வீக பண்புள்ள நல்லவர்' வரிசையில் சேர்க்கப்படத் தகுதி உள்ளவன் தான் என்பது தெளிவு.

இப்படி நன்னெறிப் பண்பின் அழகும் துர்நெறிப் பண்பின் குரூர ரூபங்களும் வர்ணிக்கப்பட்டிருப்பது முன் சொல்லப்பட்டவரை நிரந்தர சொர்க்க வாழ்வுக்கும், பின்னோரை நிரந்தரமாக நரகத்துக்கும் அனுப்புவதற்காக அல்ல. இங்கே இந்தப் பேச்சு ஒரு விஞ்ஞான முறையில் பேசப்படுகிறது. மனிதன் வாழத் தேவையான ஆற்றல்கள் அழிந்தும் உத்வேகம் குறைந்தும் இருக்கும்போது அவன் ஊக்குவித்து உத்வேகம் பெறுவதற்கான நல்வழிகளே இந்த நன்னெறி தர்மங்கள். தார்மீக வாழ்வுக்கான இந்த நன்னெறிக் கோட்பாடுகள் கொண்டு வாழ்ந்தால் மனிதன் தானே ஏற்படுத்திக்கொண்ட மனப் பிணைப்புப் பந்தங்களிலிருந்து விடுபடுகிறான். 'தெய்வீக உடைமை விடுதலைக்கு இட்டுச் செல்கிறது. இதற்கு நேர் மாறாக அசுரப் பிரகிருதி உடையவர்கள் வளர்த்துக்கொள்ளும் அழிவுப் போக்குகள் மனிதனை துயரங்கள்—குழப்பங்களுள், கட்டுப்படுத்துவதற்கென்றே தானே

செய்து மாட்டிக்கொள்ளும் விலங்குகளாகும்! அவன் தன் முழு மனிதப் பெருமையின் விஸ்தாரத்துக்கு வளர முடியாமல் அவை அவனைத் தடுத்துவிடுகின்றன. எனவேதான்—அஸுரஸம்பத்து பந்தத்துக்கு—(அழைத்துச் செல்லும் என்று கூறப்படுகிறது).

மா சுச (கவலைப்படாதே): உணர்ச்சிக்கு வசப்படுதல் நம்பிக்கையிழந்து பதற்றமுறுதல் அல்லது தானே இரக்கப்பட்டு தளர்ச்சியுற்றுப் போதல் அல்லது சுயசாபம் இட்டுக்கொள்ளுதல் போன்றவை ஒரு உளவியல் நோய். அதற்கு ஆள்பட்டவர் களிடம் ஊக்கம் அளிக்கும் மகிழ்ச்சி அல்லது தொடர்ந்து நின்று காப்பாற்றும் நம்பிக்கை இருக்காது. தன்னைப் பற்றி நன்றாகப் புரிந்துகொண்டு தானே குறைகளைக் காண்பதற்கும், அந்தக் குறைகளைக் களைய வழி காணவும் நல்ல குணங்கள் இருக்க வேண்டும். நன்னெறி காட்டும் கோட்பாடுகளின்படி வாழ்வது சாதகனுக்கு தன் மனித சுபாவத்தை பீடிக்கும் மனோ வியாதிகளி லிருந்து விடுபடுவதற்கான ஒரு அன்பான சிகித்ஸை முறை யாகும். ஹிந்துக்கள் கருத்தில் பாவி என்பவன் பயங்கரமான தொழு நோய் பிடித்த மனமுடையவனாக மாட்டான். அவனை சர்வசக்தி வாய்ந்த ஈசுவரனின் தோல்வி (சிருஷ்டி)யாகவும் கருதப்பட மாட்டாது. வேதாந்தி பிசாசை எப்போதும் கடவுளின் எதிரியாகக் கருதுவதில்லை. பலவீனம் அறியாமை இவற்றால் சூழப்பட்ட நல்லவைகள் கெடுதல் என்று கருதப்படு கிறது. அறியாமை நீங்கிய கெடுதல்கள் தான் தானே நல்லதாக விளங்குகிறது. தூசி பிடித்த கண்ணாடி ஒளியையும் எதிரே உள்ள பொருள்களையும் தெளிவாகப் பிரதிபலிக்க முடியாது. இதற்குப் பொருள் கண்ணாடிக்கு எதிரொளி தரும் சக்தி போய்விட்டது என்பதில்லை. அதன் ஆற்றலை அதன் மேல் படிந்து சேர்ந்த தூசி மறைத்திருக்கிறது. அந்த தூசியானது அடிப்படையில் கண்ணாடியைவிட முற்றிலும் வேறுபட்டது. அதைத் துடைத்து விட்டோமானால் கண்ணாடி தெளிவாகி எதிரே உள்ள பொருள் களையும் ஒளியையும் இன்னும் நன்றாக பிரதிபலிக்கும். இப்படி மோசமாக இழிந்தவனுக்கும்கூட அந்த அனந்தமான ஒளிரும் தன்மை தூய ஞானம் இருக்கிறது. ஆனால் அந்தோ! தவறான மதிப்பீடுகளாலும் தப்பான கருத்துக்களாலும் அது மிகவும் மங்கலாகிவிடுகிறது.

பேய் போல கொடிய இழிந்தவர்களைத் தனியாக எடுத்துக் கொண்டு கிருஷ்ணன் அவர்கள் மனதின் பண்புகளை பின்வரும் சுலோகங்களில் ஆராய்கிறார்.

த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மின் தைவ ஆசுர ஏவ ச
தைவோ விஸ்தரச: ப்ரோக்த ஆஸுரம் பார்த்த மே ச்ருணு
16:6

த்வௌ—இரண்டு; பூதஸர்கௌ—வகை உயிர்கள்; லோகே—உலகில்; அஸ்மின்—இதில்; தைவ—தெய்வீகமான; ஆஸுர—அசுரத்தன்மையுள்ள; ஏவ—ஏ; ச—உம்; தைவ—தெய்வீகத் தன்மையுள்ளது; விஸ்தரச—பரக்க; ப்ரோக்த—சொல்லப்பட்டது; ஆஸுரம்—அசுரத் தன்மையுடையது; பார்த்த—ஏ பார்த்தா; மே—என்னிடமிருந்து; ச்ருணு—கேள்.

6. இந்த உலகில் இரண்டு வகை ஜீவன்கள் உண்டு—தெய்வீகமானவை, அசுரத் தன்மை கொண்டவை. தெய்வீகத் தன்மை உடையவை (என்னுல்) பரக்க விவரிக்கப்பட்டுள்ளது. இப்போது என்னிடமிருந்து அசுரத் தனமானவை பற்றி கேட்டுக் கொள்.

இங்கே கிருஷ்ணன் உரையின்படி சிருஷ்டி முழுவதும் இரண்டு வகைகளுள்—தெய்வீகமான நல்லவை; (அசுரத் தன்மை) பேய்த் தன்மை கொண்ட கெட்டவை—அடங்கி விடுகிறது. ஆனுல் மூன்றும் வகை ஒன்றும் உண்டு—அது திருத்த முடியாதபடி தாழ்ந்து கெட்டவர்களின் வகை. அவர்களைப் பற்றி பகவான் நிம்மதியாக மௌனம் சாதித்திருக்கிறுர். இந்த மௌனமே அவர். மற்ற இரண்டு வகைகளைப் பற்றிப் பேசித் தெளிவாக்கியதைவிட சாதுர்யமாக இந்த விஷயத்தை அதிகம் தெளிவாக்குகிறது போலும். சமயம் தானே முழு வளர்ச்சி அடையும் வழி முதலியன அந்த இரண்டு வகையினரை மட்டுமே குறித்து சொல்லப்பட்டிருக்கிறது—ராக்ஷஸ வகுப்பினருக்குக் கூறப்படவில்லை. ஏன் என்றுல் அவர்கள் பரிணும வளர்ச்சியில் இன்னம் கேட்டுத் திருந்தத் தக்க உயரத்துக்கு வரவில்லை. இன்னும் இயற்கையின் கையிலேயே களிமண்ணுக இருக்கிறுர்கள். இன்னும் அவர்களுக்கு வாழ்க்கைச் சூளையில் எரிக்கும் அனுபவங்கள் மூலம் வேக வேண்டியது பாக்கி இருக்கிறது. அவர்கள் தேவையான அளவு வளரும்போது பேய்த்தனமான இழிந்த நிலையான அசுரத் தன்மையைப் பெறுவார்கள். அப்போது சமயம் உதவிக்கு வந்து அவர்களுக்கு 'தெய்வீக நல்லவர்கள்' வகையை அடைய வழிகாட்டும். பிறகு சமயம் மேலான நல்லதன்மை என்ற நிலையான சாசுவத சத்தியத்தை அடைந்து அனுபவிக்க உரிய வழியைக் காட்டிக்கொடுக்கும்.

அசுரப் பண்பு பெற்றவர்களைப் பற்றி சற்றுப் பொதுவாக முக்கியமான விஷயங்கள் ஏற்கனவே (4வது சுலோகத்தில்) சுட்டிக்காட்டப்பட்டிருக்கின்றன. இப்போது பின்வரும் சுலோகங்களில் விவரங்கள் பரக்கக் கொடுக்கப்படுகின்றன.

உலகின் எல்லா சமய நூல்களிலுமே நல்லதன்மை, தார்மீகம் இவற்றின் ஆக்க குணங்கள் புகழ்ந்து உரைக்கப்படுகின்றன. ஆனுல் அழிவுப் பாதைக்குக் கொண்டு செல்லும் பேய்க்

குணங்கள் விவரிக்கப்படுவதில்லை. ஹிந்து மதத்தைக் குறைத்துப் பேச விரும்புவர்களுக்கு இது கிடைத்ததில் ஒரு பெரு மகிழ்ச்சி. நம்முடைய ரிஷிகள் தீர்க்கதரிசிகள் இவர்களிடம் உள்ள பெரிய பலவீனமாக இதை அவர்கள் காண்கிறார்கள். இந்தக் குறை காணும் விமரிசனம் முக்கியமாக பத்தொன்பதாவது நூற்றாண்டி லிருந்த விமரிசகர்களால் செய்யப்பட்டது. ஆனால் விமரிசகர்கள் இப்போது மௌனமாகி விட்டார்கள். அதற்குக் காரணம் இருப தாவது நூற்றாண்டில் ஏற்பட்ட ஆத்ம தத்துவ நூல் ஆராய்ச்சி களும் உளச் சிகிச்சை முறைகளுமே. நம் மனிதத்திற்கு உள்ள நல்ல சக்தியை அழிக்கும் குணங்களை மிகவும் கூரிய தெளிவுடன் தெரிந்திருக்க வேண்டும் அந்த ஆபாச உணர்வுகளிடம் மனப் பூர்வமாக வெறுப்பு உண்டாக வேண்டும். அப்போதுதான் அந்தத் தவறான போக்குகளை உள்ளேயிருந்து முற்றிலும் அகற்ற முயற்சி தோன்றும் ஒரு பலவீனத்தைக் காண முயற்சி செய். 'அது நம்முடைய சீலம் அல்லது நடையிலிருந்து ஒழிந்துவிடும்' — என்றுதான் தற்கால உள்ளச் சிகிச்சையாளர்கள் சொல் கிறார்கள்.

கெட்டது என்பது நல்லதின் எதிர் மறைப் பொருள் மட்டுமல்ல. நல்லவற்றைத் தூண்டும் உந்தல்கள் வேறு, கெட்ட போக்கைத் தூண்டும் உந்தல்கள் வேறு என்று எண்ணக் கூடாது. மனிதன் உள்ளுந்தல்கள் எல்லாம் எப்போதும் ஒரு குறிப்பிட்ட வகையாகவே இருக்கும். நல்லகெட்ட உந்தல்கள் இரண்டுமே மனித இதயத்தின் உள் உள்ள துடிப்பு வெளி யீடுகளே. கெட்டது என்பது கருத்துத்தப்பாக உரு எடுத்த நல்லதே தான்! எனவே கெட்ட குணங்களை எண்ணிச் சொல்லும் போது அர்த்தமற்ற உயிரற்ற நல்லவற்றிற்கு எதிர்மறையான வற்றை நாம் பேசவில்லை. கெட்ட மனதின் உள் அடக்கங்களை நாம் கவனித்தால் அவை எல்லாமே நல்லவைதான். ஆனால் தவிர்க்கக் கூடிய ஆனால் தவிர்க்கப்படாத தவறான கருத்துக்கள் காரணமாக எழுந்த அசட்டு உற்சாகத்தில் நல்லது என்று செயற்படுத்தப்பட்ட ஊறுக்கள்தான் என்று கண்டுகொள்ள லாம். அறியாமை விஷம் தடவிய நல்லதுதான் கெட்டதாகிறது. கெடுதலை விஷத்திலிருந்து பிரித்து சரி செய்து விட்டால் அது தன் நலத்தை மீண்டும் பெற்று நற்பண்பாகிவிடும்.

இவ்விதம் அசுரப் பிரகிருதியை வர்ணிக்கும் முதல் சுலோகமே பேய்த்தனமாக இழிந்தவனுக்காக வக்காலத்து வாங்கிப் பேசுவது போல் அமைந்திருக்கிறது. கூடவே அவர் களிடத்தில் ஒரு மென்மையான அன்பையும் காட்ட வேண்டும் என்பதையும் இங்கிதமாகச் சொல்கிறது.

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் சஜனு ந விது ராஸுரா
ந செளசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே
16:7

ப்ரவிருத்திம்—கர்மத்தை; ச—உம்; நிவ்ருத்திம்—அகர்மத்தை; ச—உம்; ஜனு—மனிதர்கள்; ந விது—அறிகிறுர்களில்லை; அசுரா—அசுரப் பிரகிருதிகள்; ந—இல்லை; செளசம்—தூய்மை; ந—இல்லை; அபி—கூட; ச—உம்; ஆசார—சரியான நடத்தை; ந—இல்லை; ஸத்யம்—உண்மை; தேஷு—அவர்களிடம்; வித்யதே—இருக்கிறது.

7. அசுரத் தன்மையுள்ளவர்களுக்கு தான் செய்ய வேண்டியது என்ன? எவற்றிலிருந்து ஒதுங்க வேண்டும் என்று தெரியாது. அவர்களுக்குச் சுத்தம் தெரியாது. சரியான நடத்தை தெரியாது; உண்மையும் அவர்களிடத்தில் காணப்படுவதில்லை.

அஸத்ய மப் ரதிஷ்ட்டம் தே ஜ கதாஹுரனீச்வரம்
அபரஸ்பா ஸம்பூதம் கிமன்யத் காமஹைதுகம் 16:8

அஸத்யம்—உண்மையிருப்பில்லாதது; அப்ரதிஷ்ட்டம்—ஆதாரமற்றது; தே—அவர்கள்; ஜகத்—உலகத்தை; ஆஹு—சொல்கிறுர்கள்; அனீச்வரம்—ஈசுவரனற்றது; அபரஸ்பர ஸம்பூதம்—ஒன்றுடன் ஒன்று இணைந்ததால் உண்டானது; கிம்—எனின்; அந்யத்—வேறு; காமஹைதுகம்—கர்மத்தை மூலமாகக் கொண்டது.

8. அவர்கள் சொல்கிறுர்கள்: அந்த உலகம் உண்மையிருப்பில்லாதது; தார்மீக ஆதாரமற்றது; ஒருவருடன் ஒருவர் சேர்க்கையினுல் பிறந்தது; பின் என்ன? காமமே காரணம்.

ப்ரவிருத்திம் நநிவ்ருத்திம்

அசுரப் பிரகிருதி உடையவர்கள் செயலையும் அறிய மாட்டார்கள். அகர்மத்தையும் (செயலின்மையும்) அறிய மாட்டார்கள். இங்கே செயல் என்பது நல்லதை எண்ணி ஒரு சிறந்த உள் நிறைவுக்காக ஏற்றுக் கொள்ளப்படுகிற புத்தி பூர்வ மான செயலாகும்.

(இங்கே வருகிற ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி என்ற சொற்களுக்கு தனித் தனி பாஷ்யகாரர்கள் தனித் தனியாக பாஷியம் செய்திருக்கிறுர்கள். *(a)* சிலர் சொல் பிறப்பிலிருந்து பொருள் கொள்கிறுர்கள். இந்தத் தோற்றம் தரும் உலகின் வருகை

மேலும் அதன் திரும்பிச் செல்கை என்ற பொருளில் கொண்டால் அப்பொழுது இந்தச் சொற்கள் அவர்கள் சிருஷ்டியையும் அறிய மாட்டார்கள் சிருஷ்டி முடிவையும் அறிய மாட்டார்கள் என்று பொருள்படும்; (b) மற்றும் சிலர் கர்மம், என்று பொருள் கொண்டு சமய சடங்குகள், தார்மீக அனுஷ்டானங்களைச் செய்தல் என்றும், அகர்மத்துக்கு இந்த அனுஷ்டானங்களைச் செயல்களை உள்ளத் துறவுடன் செய்வது—அதாவது சன்யாஸம் என்றும் பொருள் கொள்கிறார்கள்.

சமயம் விதிக்கும் கர்மங்கள், தன்னலமற்ற வேலைகள் ஈடு பட்டுச் செய்யப்படும் தொண்டு இவையெல்லாம் நல்ல கர்மங் கள். இவற்றைச் செய்வதன் மூலம் மனிதனுக்கு உடனே கிடைக்கும் பயன் தவிர முடிவில் பண்பாட்டில் உயர்வும் அடை கிறான். அதர்மம் என்பது இங்கே அந்த நல்ல வேலைகளைச் செய்யாமல் நம்மை நாமே கெடுத்துக் கொள்வது என்று பொருள் படும். அப்படி இருந்து விட்டால் நாமும் அமைதி இழந்து நிற்போம். மற்றவர் அமைதியையும் குலைத்துவிடுவோம். எதிர் மறையான இன்மைப் போக்கு உடைய அழிவுப் போக்குகளை எண்ணும்போது முதலில் அறியாமை அல்லது அஞ்ஞானம் சொல்லப்படுகிறது. இது மிகவும் கருத்து முக்கியத்துவம் உடை யது. ஒருவன் அறியாமையால் குற்றம் செய்து விட்டால், சட்டம் அவனுக்கு மன்னிப்புத் தராமல் இருக்கலாம். ஆனால் சமூகத்தின் இதயத்தில் தவறு செய்தவன் விஷயத்தில் ஒரு மென்மையான மன்னிப்புப் போக்கு ஏற்பட்டு விடுகிறது.

சௌசம்: சுத்தம் அவர்களிடம் இருப்பதில்லை. வெளிச் சுத்தமும் பெருமளவு உள்ளத் தூய்மையின் பிரிதிபலிப்பேயாகும். கல்வி, கட்டுப்பாடு உடைய மனிதன்தான் தன்னைச் சுற்றிலும் சுத்தத்தில் வரன் முறை கொண்ட ஒழுங்கைக் கடைப்பிடிக்க முடியும்.

எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது என்று முடிவு செய்ய இயலாத மனிதன் மனதில் சம லயம் இருக்காது. எனவே அவன் உள் தூய்மையையும் பெற்றிருக்க மாட்டான். வெளியிலேயும் (சௌச்சம்) சுத்தத்தைக் காப்பாற்ற மாட்டான். மனதின் எண்ண அலைகளே வெளியே புறச் செயல்களாகப் பரிண மிக்கின்றன. மனதே வரன்முறையுடன் இல்லையென்றால் அழ கான, நன்கு அமைந்த வாழ்க்கை எப்படி ஏற்படும்? அதனால் தான் கண்ணபிரான் ''அவனிடம் நல்ல நடத்தை இல்லை என்பது வெளிப்படையாக இருக்கும்'' என்கிறார்.

பிரவிருத்தி நிவ்ருத்தியைப் பற்றிக் குழம்புபவன், உள் தூய்மை புறச் சுத்தம் இல்லாதவன்; நல்ல நடத்தை இல்லாதவன்—அவன் சொற்களில் உண்மையைக் காக்க முடி

யாது. தெய்வீக சாரதியான கண்ணன் சொல்லியிருக்கிற இந்தச் சொற்களைக் கூர்ந்து பார்த்தீர்களானால் கண்ணன் உள்ளத்தில் பேய்க் குணம் கொண்ட இவர்கள் விஷயத்தில் மென்மை இருப்பது தெரியவரும். கீதை முழுவதிலுமே எவருமே பாபிகளுக் கெதிராகப் பழிவாங்கும் மனப்பாங்கு காட்டப்படவே இல்லை. இதிலிருந்து நமக்குத் தர்க்கப் பூர்வமாக ஒன்று தெளிவாகிறது. அசுரப் பிரகிருதியுடையவன் வேண்டும் என்றே தவறாக நடந்து கொள்ளவில்லை. ஆனால் அவன் தன்மை அப்படி நாணய மாற்ற முறையில் நடந்து கொள்ளச் செய்கிறது. நேர்மையாக அவனால் இருக்க முடியாது.

மேலும்,

இந்த அசுரப் பிரகிருதியுள்ள மனிதன் எதிலும் சந்தேகம் கொள்ளக் கூடிய உலகாயத வாதியாக இருப்பதைக் காண் கிறோம். அவன் தன் புத்திக்கு எட்டிய குறுகிய வட்டத்திலிருந்தே உலகைப் பார்க்கிறான். இந்த ஒன்றுக்கொன்று தொடர்பற்று நடக்கும் சம்பவங்களை ஊடுருவி, அல்லது அவற்றிற்கு அடிப் படை காரணமான ஒரு நிரந்தர அஸ்திவாரத்தை அவன் காண முடிகிறது. இறுதியாக இவற்றிற்கெல்லாம் முடிவான ஒரு மூலம் அல்லது காரணம் உண்டு என்றும் அவனுக்குத் தோன்றுவதில்லை. அப்படிப்பட்ட உலகாயதவாதிகள் மகோன்னதமான புத்தியை உடையவர்களாகவும் இருக்கிறார்கள். தனித்துச் சிந்திக்கவும் ஆற்றல் பெற்றிருக்கிறார்கள். இருந்தாலும் அவர்களுடைய பொதுப் பார்வைக்கும் ஆராய்ச்சிக்கும் அப்பால் இருக்கும் பொருளைக் காண்பதற்கு என்று சற்றே பயிற்சி கொடுக்க வேண்டும். இந்த சுலோகத்தில் பௌதீக வாதி அல்லது உலகாயதவாதிக்கு உலகமும் வாழ்க்கையும் எப்படிப்படுகின்றன என்று விளக்கப்பட்டிருக்கிறது.

அஸத்யம்: உண்மையில்லை என்று—அவர்கள் பொது நோக்கும் பகுத்து அறியும் திறமும் அறிவியல் பூர்வமாக இருக்கின்றன. இருந்தும் அவர்கள் இந்த உலகத்தைத் தாங்கி நிறுத்தும் ஆதாரமான உண்மையைக் காணத் தவறி விடுகிறார் கள். அவர்கள் மாற்றங்களைக் காண்கிறார்கள். மாறி மாறித் தோன்றும் மாற்றங்கள்தான் உலகம். ஆனால் தனக்கென்று அதற்கு மாற்றம் அடையாத நிலையாக இருக்கிற ஒன்று கிடை யாது என்று சொல்கிறார்கள். அதே நேரத்தில் விஞ்ஞானிகள் (அறிவியலார்கள்) மாற்றம் என்பது மற்றஒன்றை ஒத்தே நிகழ் வது என்றும் மாற்றங்கள் ஏற்பட மாற்றமே அடையாத ஒரு அஸ்திவாரமே தேவை. அது இல்லாமல் மாற்றங்கள் நிகழவோ, நிகழும் போதே ஒரு தொடர்ச்சியைத் தோற்றுவிக்கவோ முடி யாது என்றும் ஒத்துக் கொள்கிறார்கள். அசையாத ஆடாத ஒரு திரை இல்லாமல் ஒரு சினிமாப் படம் காட்ட முடியாது.

அடிப்படுகை இல்லாமல் ஆற்றில் நீர் தொடர்ந்து பாய முடியாது. அப்படி இந்த சதா ஆட்டம் கொண்ட மாறும் உலகம் அடிப்படை ஒன்றில்லாமல் இப்படித் தொடர்ந்து இருக்கும் தோற்றத்தைத் தர முடியாது. இப்படி மாறும் உலகின் அஸ்திவாரமான மாறுத சாஸ்வதமான அந்தத் தத்துவத்தைத் தான் 'சத்யம்' என்கிறோம். இந்த உலகாயதவாதிக்கு உலகம் சத்தியமில்லாதிருக்கிறது! (அஸத்யம்) அநீச்வரம்—ஈசுவரனற்றது. சரி, அடிப்படுகைதான் இல்லை. இவற்றின் இயக்கத்தை எல்லாம் கட்டுப்படுத்தி நடத்துகிற ஒரு அறிவுத் தத்துவமானது இருக்கிறதாமா? லோகயதவாதிக்கு சம்பவங்களை இயக்குகிறவராக செயல்களை வகுக்கிறவராக ஒரு ஈச்வரனும் இல்லை. படைப்பாளி கிடையாது. ஆட்டுகிறவன் கிடையாது!

அபரஸ்பர ஸம்பூதம்—கிரமமாக உண்டானதல்ல—உயிர்களும் பொருள்களும் கொண்ட இந்த உலகம் பூதங்களின் சேர்க்கையால் திடீர் என்று ஏற்பட்ட ஒரு தற்செயல் நிகழ்ச்சியே. அதேபோல உயிர்கள் பிறப்பதற்குச் சேர்க்கையைத் தூண்டுவது காமமே! நவீன மன இயல் அறிஞர்கள் கூட ''பால் தூண்டுதல்தான் தாய்த் தூண்டுதல் (அடிப்படைத் தூண்டுதல்) என்றும் அதனுல்தான் எல்லாம் நடக்கிறது. சாதிக்கப்படுகிறது; வாழ்க்கையில் எங்கேயும் அதன் மூலம்தான் நலம் பெறப்படுகின்றது'' என்று உலகாயதவாதிகள் சொல்கிருர்கள்.

சுத்தமாகக் கலப்பற்ற லோகாயதவாதியாக இருப்பவனுடைய நோக்கை இவ்விதம் வர்ணித்த பிறகு கிருஷ்ண பகவான் அவர்களுக்குத் தன்னுடைய இரக்கத்தைக் காட்டுகிருர்.

ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய
நஷ்டாத்மானேல்ப புத்தய:
ப்ரபவந்த் யுக்ர கர்மாண:
க்ஷயாய ஜகதோஹிதா: 16:9

ஏதாம்—இதை; த்ருஷ்டிம்—நோக்கை; அவஷ்டப்ய—கொண்டு; நஷ்டாத்மான: ஆன்மாவை இழந்தவர்கள்; அல்ப புத்தய:—சின்னப் புத்திகள்; ப்ரபவந்தி—வெளிப்படுகிருர்கள்; உக்ர கர்மாண—உக்கிரமான செயல்கள் செய்கிறவர்களாக; க்ஷயாய—அழிவிற்கு; ஜகத்—உலகுக்கு; அஹிதா:—எதிரிகள்.

இந்தக் கருத்தைக் கொண்டவர்களான இந்த சின்னப் புத்தியுள்ள சீரழிந்த ஆத்மா உள்ளவர்கள், பயங்கரமான செயல்களைச் செய்கிறவர்களாகி இந்த உலகத்தை அழிக்க அதன் எதிரிகளாக வெளிப்படுகிருர்கள்.

ஏதாம் த்ருஷ்டிம் அவஷ்டப்ய: இந்த நோக்கை வைத்துக் கொண்டு மாறும் உலகைத் தாங்கி நிற்க மாருத அடிப்படுகை கிடையாது. உலகத்தை ஆட்டுவிக்கிற 'ஆற்றல்' ஒன்றும் கிடையாது; உலகம் தானே இருந்து தன்னேயே படைத்துக் கொள்கிறது—இவ்விதக் கருத்துக்களைக் கொண்டு ஒரு சமூகம் இயங்கினுல் பிறகு என்ன நடக்கும். அது மிருக வாழ்க்கை நடத்தும். அதனுல் இவ்வுலகில் அமைதியின்மையும் கலாட்டாவும், தொல்லையும் அழிவும்தான் மிஞ்சும்.

நஷ்டாத்மான: கேடடைந்த ஆத்மா உள்ளவர்கள்—தன்னைப் பற்றி தெளிவான அறிவும் சரியான மதிப்பீடும் உள்ள மனிதன் தான் சமநிலேயுள்ள மனிதனுக வாழ முடியும். ஒருவன் தன்னைப் பற்றி மறந்து விடுவானுனல் அப்பொழுது அவன் தன் ஜன்மத்துக்கு உரிய பெருமைக்கு ஒவ்வாத வகையில்தான் நடந்து கொள்வான். படிப்பு, பண்பாடு, சமூகத்தில் இருக்கிற பதவி ஒன்றுக்கும் மரியாதை இருக்காது. பைத்தியம் பிடித்தவன் அல்லது குடித்த முட்டாள் போல்தான் நடந்து கொள்வான். பௌதீகப் பகுத்தறிவுவாதி தன் உண்மையான தெய்வீகத் தன்மையை மறந்து உலகில் வாழும்போது அவன் மிருகம் போல் வாழ்க்கை நடத்துவான் என்பது மிகவும் தர்க்கத்துக்கு ஒத்த ஒன்றுதான்! அவன் தன்னுடைய தெய்வீகத் தன்மைக்குரிய மேலான பரிணும வளர்ச்சியையே அவமதித்துத்தான் வாழ்வான்!

அல்பபுத்தய: (சின்னப் புத்தியுடையவர்கள்): வாழ்க்கையை அணைத்து ஊடுருவி நிற்கும் உண்மைத் தத்துவத்தின் தெய்வீக இருப்பை ஒத்துக் கொள்ள ஒருவன் மறுக்கும்போது அவன் தன் இச்சைக்காகவே சுயநலமி போல்தான் நடந்து கொள்வான். உலகப் பொருள்களிலிருந்து அதிக இன்பம் பெற இடையருது உழல்வான். புலன்தரும் இன்பங்களையே தேடித் தேடி அலேந்து கடைசியில் அவன் பெறுவதெல்லாம் கழுத்தறுக்கும் ஏமாற்றமாகத்தான் இருக்கும். ஆருத பசியும் தோல்வியுணர்வுமே மிஞ்சும். கிருஷ்ணன் அளவற்ற கருணையினுல் அவர்களைப் பார்த்துப் பரிதாபப்பட்டு 'அட சின்னப் புத்திக்காரர்கள் இவர்கள்' என்கிருர்.

உக்ர கர்மாண: கொடுஞ் செயல்கள். உலகாயதவாதிகள் சாசுவதமான சத்யத்தை நம்ப மறுக்கிருர்கள். சரி, மற்றவர்கள் ஏதோ அமர ஸத்யத்தை நம்புகிருர்கள். இப்படி நம்புகிறவர்கள் (ஆஸ்திகர்கள்) நம்பாதவர்கள் (நாஸ்திகர்கள்). இரு வகையினருக்குமே சமமான சுதந்திரம் ஏன் கொடுக்கக் கூடாது? சாதாரண அறிவு உடையவன் உள்ளத்தில் கூட இந்தக் கேள்வி எழுவது இயற்கையே. அதுவும் அவன் உண்மையிலேயே ஜனநாயகவாதியாகவும் சகிப்புத் தன்மையும் உடையவனுகயிருந்தால் இப்படிக் கேட்காமல் இருக்க முடியாது. நேர்மையான

சீடன் உள்ளத்தில் இப்படிக் கேள்வி எழலாம் என்று எதிர் பார்த்தே கண்ணன் இரண்டாவது வரியில் அப்படிப்பட்டவர் களுடைய ஒரு போக்கைத் தெளிவாக்குகிறுர். மேலே உள்ள ஒரு ஸத்யத்தை நம்பாதபோது, அவன் தன்னுடைய எண்ணங்கள், சொற்கள், செயல்கள் எல்லாவற்றிலுமே தன்னிச்சையாக செயல்படுவான். எதற்கும் துணிந்து விடுவான். வாழ்க்கையில் இன்புற்றிருக்கதான் நினைக்கிற வகையில் இன்பம் துய்ப்பதுதான் உண்மை என்று அதைப் பெறவே அவன் ஆட்டம் போடுவான். முடிவில் அவன் தன்னுடைய யுகத்துக்கே தாங்க முடியாத, சீர் செய்ய முடியாத நாசத்தைக் கொண்டு வந்து சேர்த்து விடுவான். சரித்திரத்தைப் பார்த்தாலும் கண்ணன் கீதையில் சொன்ன அதே வழியில்தான் உலகம் இன்று போய்க் கொண்டிருக்கிறது. ஸத்யப் பொருளையும் அதன் செயல்பாடுகளையும், அதனுல் வாழ்க்கையில் ஏற்படும் நலனையும் உணர்ந்து கொள்ளாத லோகாயதவாதி, தன் வாழ்வின் செயல்கள் மூலம், அவன் அறி யாமலே சமூகத்தில் மிகவும் சங்கடமான ஒரு குழப்ப நிலையை ஏற்படுத்திவிடுவான். அதன் பலனுக உலகத்தை பயங்கரமான போர்க்குழிச் சகதியில் கொண்டு போய் அமுக்கி விடுவான்.

பின்வரும் சுலோகத்திலும் லோகாயதவாதியின் வாழ்க்கை நோக்கும், செயல் தூண்டுதல்களும் அழகாக விவரிக்கப் பட்டிருக்கின்றன.

காமமாச்ரித்ய துஷ்பூரம்
தம்பமான மதான்விதா:
மோஹாத் க்ருஹீத்வாஸத்க்ராஹான்
ப்ரவர்த்தந்தே சுசிவ்ரதா 16:10

காமம்—ஆசை; ஆச்ரித்ய—அடைந்து; துஷ்பூரம்—தணிக்க முடியாத; தம்ப மான மதான் விதா:—வேஷம், அலங்காரம், தற்பெருமை; மோஹாத்—மோகத்தினுல்; க்ருஹீத்வா—பிடித்துக் கொண்டு; அஸத் கிராஹான்—பொல்லாத கருத்துக்களை; ப்ரவர்தந்தே—ஈடுபடுகிறுர்கள்; அசுசிவ்ரதா:—கசமான செயல் முடிவுகளுடன்.

தணிக்க முடியாத ஆசைகள் வஞ்சம் நிரம்பிய வேஷம்; அகங்காரம், தற்பெருமை முதலியவைகளின் மோகத்தினுல் மயங்கி, பொல்லாத ஆசைகளை ஏற்று அவர்கள் கசமான முடிவு களுடன் வேலையில் ஈடுபடுகிறுர்கள்.

தான் சாதித்த செயல்களின் களங்களில் மார்பு தூக்கி நடக்கும் லோகாயதவாதிகளின் உள் இயற்கை எவ்வளவு அசிங்கமாக வயிற்றைக் குமட்ட வைக்கும் கோரமாக இருக்கி றது என்று இந்த சுலோகத்தில் சொல்லியிருப்பதைவிட தெளி வான வேறு வழியில் சொல்ல முடியாது. ‘பேய்த்தனமாக

இழிந்தவனைப் (அசுரப் பிரகிருதியை) பற்றிய இதைவிட உயிருள்ள பூரணமான படத்தை அவன் சமூகத்தில் செய்கிற அட்டூழியங்களைப் பற்றியும் இன்னும் தெளிவான விவரத்தையும் எங்கும் காண முடியாது. நீங்கள் இதுவரை உலகின் எல்லா மொழிகளிலும் எழுந்துள்ள எல்லா இலக்கியங்களிலும் தேடுங்கள்—இந்த சுலோகத்தைப் போல தெளிவாக இவர்கள் நிலையை எடுத்துச் சொல்லும் ஒப்பான ஒன்றைக் கூட காண இயலாது. தோல்வியுறுவீர்கள்.

காமம் ஆச்ரித்ய (விருப்பத்தை அண்டி): விருப்பம் தூண்டாமல் செயல்கள் எழுவது சாத்தியமில்லை. விருப்பங்கள் எங்கு இல்லையோ அங்கு சுறுசுறுப்பான இயக்கம் கொண்ட வாழ்க்கை சாதனைகள் வெளியாவதும் இல்லை. எனினும் விருப்பங்களுக்கு அடிமையாக இருந்தாலோ ஒருவன் பயங்கர இயந்திரமாகி உலகில் அவன் உள்ளேயிருக்கிற செறுக்கு சுயநல வேட்டை, இவற்றின் விஷத்தைக் கக்குகிறான். விருப்பத்தைப் பூர்த்தி செய்வதற்கு மட்டுமே உலகில் வாழ வேண்டும் என்று முடிவு செய்வது புத்திசாலித்தனமாகாது. ஏன் என்றால் ஒன்று பூர்த்தியாக மற்றொன்றாக ஆசைகள் எழும்பி அவை பல்கிக் கொண்டே இருக்கும். தன்மை உடையவை. அவற்றைத் திருப்தி செய்வது கடினம்! தணிக்க முடியாத ஆசைகளால் உந்தப்பட்டு மனிதன் தன் புத்தி, திறமை அறிவு எல்லாம் பயன்படுத்தினால் அவனால் உலகில் தன்னுள்ளேயும் தன்னைச் சுற்றிலும் முடிவு பெறாத தொல்லைகளின் வெள்ளத்தைத்தான் ஏற்படுத்த முடியும்.

தம்பமான மதான் விதா: டம்பம், அகங்காரம் இறுமாப்புக் கொண்டவர்களாக—விருப்பம் என்பது ஜீவனின் ஒரு வெளியீடுதான். அது ஏற்படும்போது மனிதன் புலன் நுகர்ச்சி மூலம் சாசுவதமான திருப்தியையும் எல்லையற்ற நிறைவையும் வேண்டுகிறான். அந்த இன்பத் திருப்தி அடைய தற்பெருமையில் மனிதன் மயங்கி விடும்போது எதிர்மறைப் (அழிவு) போக்குகள் அதாவது டம்பம், அகங்காரம், மதம் போன்றவை—இயற்கையாக எழுந்து அவனைப் பொசுக்கி எடுக்கும். அவன் தன்னுடைய கடிவாளம் இட்டு நிறுத்தப்படாத, கட்டுக்கடங்காத ஆசைகளின் குதிரை மேல் ஏறி அவற்றைப் பூர்த்தி செய்ய, முடிவில்லாமல் சுற்றித் தவிப்பான்.

மோகாத் மோகத்தினால்—அவர்கள் மோகத்தின் கைக்குள் சிக்கியவர்கள். பரிபூரண நிலையில் உள்ளவர்களுக்கு (ஆப்த காமஸ்ய கா ஸ்ப்ருஹா—ஆத்ம பூரணனுக்கு ஏது ஆசை—மாண்டுக்ய காரிகா) ஆசைகள் உண்டாகாது. தன் அகண்ட பூர்ணத்துவத்தை உணராது குறுகிய ஜீவபாவனை உடையவனுக்குத் தான் ஆசைகள் உண்டாகும். தன் தெய்வீக உண்மை

நிலை அறியாதவன் பொய்யான பொருள்கள், வாழ்க்கையின் பொய்யான மதிப்பீடுகள் இவற்றுடன் இணைந்து அமைதி யையும், மகிழ்ச்சியையும் பெற விழைகிறுன். இம்மாதிரி ஒரு பசியை வளர்த்துக் கொள்கிறுன். எனவே அவன் உள்ளே எண்ணற்ற ஆசைகள் எழுகின்றன. அவைகளைப் பூர்த்தி செய்ய அவன் புலனின்பங்களில் தோய்கிறுன்.

அஸத்க்ராஹான்: அசிங்கமான தீர்மானங்கள்—அசுரப் பிரகிருதியின் மனத்தின் கதை இங்கே வரிசையாக முழுமை அடைகிறது. ஜீவன் உள் அமைதி வேண்டி போராட்ட வெறி யுடன் முயலும் போது அவன் மற்றவர்களின் நலனைக் கருத மாட்டான். வாழ்க்கையின் உயர்ந்த லக்ஷயங்களை ஒதுக்கி விடு வான். செயல்களத்தில் சற்றுக் கூடக் கூச்சமில்லாமல் பொறை யற்று பிறரை மதிக்காத மிருகத் தன்மையுடன் வளைய வருவான். பேராசையின் போதை ஆசைகளின் மயக்கம்—இவை காரண மாக அவன் உலகில் ஒரே மதி கொண்ட பித்தன் போல் ஆட்டம் போட்டு தன்னைச் சுற்றிலும் உள்ள சமூகத்தின் மேல் அமிலத்தை யும் ரத்தத்தையும் கொட்டிக் குளிப்பாட்டி விடுவான். சாவையும் பேரிடர்களையும் பரப்பித் திரிவான்.

தனி மனிதன் (பிண்டத்தின்) விஷயத்தில் இந்தப் படம் ஆசையினுல் அலையும் மனதின் விருப்ப அலைகளின் இடையே வாரி அடிக்கப்பட்ட வாழ்வில், மேலோங்க விழையும் பௌதீக (லோகாயத) வாதிகளைக் குறிப்பிடுகிறது. இதையே உலகத்தின் விஷயத்தில் (அண்டத்தில்) பார்த்தோமானுல் இப் படம் லோகாயத வாதிகளின் சமூகங்களில் உடையவும், தேசங்களினு டையவும், உள்ள குரூரத்தை விளக்கித் தெளிவுபடுத்தும். வாழ்க்கையின் அழகு அது அமைக்கப்படுவதற்கு ஆதார மாயிருக்கும் சித்தாந்த தத்துவத்தின் அழகுக்கேற்றவாறுதான் இருக்கும். அஸ்திவாரமே தவருக இருந்தால் மேலே கட்டிடம் எவ்வளவு பலம் பொருந்தியதாக இருந்தாலும் அது வெறும் அட்டையினுல் கட்டிய கோட்டையாகவே இருக்கும். பொருளி யல் அமைப்பின் ஏற்றத் தாழ்வு சமூகக் கெடுதல்கள், அரசியல் கொந்தளிப்புகள், பொதுவாக அமைதியின்மை இவற்றையே நாம் நம்மைச் சுற்றி உலகில் எங்கேயும் பார்க்கிறுேம். இந்த சுலோகத்தை நன்கு புரிந்து கொண்டு நம்மால் படிக்க முடியு மானுல் மேலே கண்ட விஷயங்கள் எல்லாம் இதில் வெகு தெளி வாக விவரிக்கப்பட்டிருக்கிறதைக் காணலாம். ஊன்றி கவனித் தால் அசுர பிரகிருதியைத் தான் வர்ணிக்கிருர் கண்ணன். ஆனுல் அதே சமயம் நேரடியாகச் சொல்லாமல் அவர், உள்ளத்தில் நாஸ்தீகனுய் இருந்து கொண்டு இன்ப வேட்கையில் சதா ஈடு பட்டிருக்கிற ஒரு லோகாயத வாதியையும் சதா படம் பிடித்துக் காட்டியிருக்கிருர். லோகாயதவாதத்தின் இந்தக் கட்டத்தில் நம்

நிலை என்ன? நாம் எங்கே இருக்கிறோம்? இந்தப் படத்தில் நாமும் இருக்கிறோமா?

முற்றிப்போன லோகாயதவாதியின் வாழ்க்கை நோக்கை கண்ணன் மேலும் தொடர்ந்து வர்ணம் தீட்டுகிறார்.

சிந்தா மபரி மேயாம் ச ப்ரலயாந்தாமுபாச்ரிதா:
காமோப போகபரமா ஏதாவதிதி நிச்சிதா:

16:11

சிந்தாம்—கவலைகளை; அபரிமேயாம்—அளவிட முடியாதவை; ச—உம்; ப்ரலயாந்தாம்—சாவில் முடிபவை; உபாச்ரிதா:—அடைக்கலமடைந்து; காமோப போக பரமா—காம போகத்தையே எல்லைக் குறிக்கோளாகக் கொண்டு; ஏதாவத்—இவ்வளவுதான்; இதி—என்று; நிச்சிதா:—உறுதி கொண்டவர்களாக.

சாவில் முடியக் கூடிய அளவிட முடியாத கவலைகளுக்கு அடைக்கலமாகி, காம போகத்தையே அனைத்திலும் உயர்ந்த குறிக்கோளாகக் கொண்டு, வாழ்க்கையில் இவ்வளவுதான் (வேண்டியது) என்று மனதில் நிச்சயம் கொண்டு விடுகிறார்கள்.

அபரி மேயாம் சிந்தாம்—அளவற்ற (முடிவற்ற) கவலைகள்—பதற்றத்துக்கும் கவலைக்கும் தாலி கட்டி விட்டு, அப்படிப்பட்ட மனிதர்கள் அர்த்தமற்ற அசட்டு முயற்சிகள் கொண்ட தம் வாழ்க்கையை கேவலும் துயருமான சுற்றுச்சாலைகள் வழியாக சாவின் மௌனமான தர்பார் ஹாலுக்கு எடுத்துச் சென்று விடுகிறார்கள். சாதாரண வாழ்வில் நம் கவலைகள் அமைதி ஆனந்தம் இவற்றின் கோட்டையை முற்றுகையிடுகின்றன.—அதுவும் பலம் வாய்ந்த ஆசைகளின் பெரிய படையே வந்து மனிதனை வெற்றி கொள்ளும் போது அவனுக்கு அமைதி எங்கே? ஆனந்தம் எங்கே? பொருள் ஈட்டச் செய்யும் போராட்டங்கள், கிடைத்தவற்றைக் காப்பாற்றும் அச்சம் இந்த இரண்டும்தான் கவலைகளாக எல்லா வாழ்விலும் அடங்கியிருப்பவை. முழு வாழ்வையும் அப்படிப்பட்ட கவலைகளிலேயே கழித்துவிட்டுக் கடைசியில் 'எவ்வளவு மோசமான தோல்வியைச் சந்தித்தோம்' என்று புரிந்து கொள்வது உண்மையில் சோக வாழ்வுதான்.

காம உபமோக பரமா: காம நுகர்ச்சி இன்பத்தையே முடிவான குறிக்கோளாகக் கொண்டவர்களாகி—நல்லவையோ கெட்டவையோ அவற்றைப் பெற அவர்கள் உழைக்கிறார்கள்—விடாப்பிடியாக உழைக்கிறார்கள். ஆனால் ஒரு சித்தா... ந்தமோ சிறந்த வாழ்வின் தத்துவக் கொள்கையோ அவர்கள் ம... செயல்

களுக்குப் பொருளும் பொருத்தமும் கொடுக்க என அவர்களுக்கு இருப்பதில்லை.

அசுரத்தனமுள்ளவன் எங்கிருந்தாலும் அவன் ஏற்றுக் கொள்கிற வாழ்க்கைத் தத்துவம் எங்கும் ஒரே மாதிரித்தான் இருக்கும். நாஸ்தீகர்களின் கொள்கை இங்கே குறிப்பிடப் பட்டிருக்கிறது. (சார்வாகர்களின் தரிசனம்—தத்துவக் கொள்கை யாவத் ஜீவேத்—ஸுகம் ஜீவேத்ரிணம் க்ருத்வா க்ருதம் பிபேத்; பஸ்மீ பூதஸ்ய தேஹஸ்ய புனர் ஆகமனம் குத: என்பதுதான் அதாவது—வாழுகிற வரையில் சுகமாக வாழ், கடன் வாங்கு, நெய்யைக் குடி. சாம்பராகி விட்ட பிறகு எங்கிருந்து திரும்பக் கிடைக்கும் பிரஹஸ்பதி சூத்திரமும் காம, ஏக ஏவ புருஷார்த்த—காமம் ஒன்றுதான் புருஷார்த்தம் என்று கூவிச் சொல்கிறது. அவர்களுக்கு புலன் இன்பங்களைப் பூர்த்தி செய்து கொள்வது தான் வாழ்க்கையின் ஒரே லட்சியம் அதற்கப்பால் வேறொன்று மில்லை.

ஏதாவதிதி நிச்சிதா: இவ்வளவுதான் (முடிவு) என்று நிச்சயம் கொண்டவர்களாக—அநேகமான அப்படிப்பட்ட பௌதீகப் பொருள்வாதிகள் முட்டாள்கள் அல்ல. அவர்களுக்கு திடீர் என்று சந்தர்ப்பத்தில் பயன்படக் கூடிய நல்ல மூளை உண்டு. புலன் நுகர்ச்சிக்காக வாழ்வையே அர்ப்பணிப்பது சோக வாழ்வு என்று அவர்களுக்குத் தெரியும். அப்படிப்பட்ட வாழ்க்கையில் மனிதனுக்கு மிகவும் அற்பமான பொருள்களுக் காக அல்ப சுகத்திற்காக அபார விலை கொடுக்க நேர்கிறது என்றும் தெரியும். அப்படி இருந்தும் அடக்க முடியாத புலன் நுகர்ச்சியைத் தேடி வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்து கிறார்கள். அவர்களைக் கேட்டால் வாழ்க்கையே அப்படிப்பட்ட போராட்டங்களின் தொகுதிதான் என்று தத்துவம் சொல் கிறார்கள். அமைதியும் ஆனந்தமும் கொண்ட ஒரு வாழ்க்கை மனிதனுக்கு உண்டு என்பது அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் அநேகமாக அழுமூஞ்சிவாதிகள். வாழ்க்கையைப்பற்றி ஆழமாகச் சிந்திப்பதை அவர்கள் ஒதுக்கிவைக்கிறார்கள். அதனால் அவர்கள் தற்கொலைக்கு ஒப்பான ஒரு போக்கையும் சுய அழிவுப் பிரவிருத்தியையுமே மேற்கொள்கிறார்கள். அவர்கள் கருத்தில் கவலையும், துயருமே வாழ்க்கை சித்திரத்தின் அமைப்பு—மேலே தோன்றும் சிந்தனை அலைவுகளுக்கு அடிப்பகுதியில் இருக்கும் ஒரு லயம், அல்லது ஒத்து இயங்கும் நயம் இருப்பதை கவனிக்க அவர் கள் தவறி விடுகிறார்கள். அவர்கள் தங்கள் மேலேயோ உலகத்தின் மேலேயோ ஒரு நம்பிக்கையும் கொள்வதில்லை. அதனால் அவர்கள் உள்ளம் கசப்பு நிறைந்திருக்கிறது. அந்தக் கசப்புடனேயே அவர்கள் வாழ்கிறார்கள். உலகச் செயல்களைப் பழிவாங்கும் நோக்குடன் சந்திக்கிறார்கள். நல்ல விளைவுதராத

முயற்சிகளில் அவர்கள் தங்கள் ஆற்றல்களை வீணடித்து விட்டு முற்றிலும் களைத்த நிலையில் ஓய்ந்து போய் அசதிக்கும் ஏமாற்றத் திற்கும் ஆளாகி பரிதாபகரமாக முடிந்து விடுகிறார்கள்.

தனி மனிதன் வாழ்வில் மேலே சொன்ன தத்துவ சிந்தனை எப்படி பரிணமிக்கிறது என்று பின்வரும் சுலோகத் தில் கூறப்படுகிறது.

ஆசாபாச சதைர் பத்தா: காமக்ரோத—பராயணு
ஈஹந்தே காமபோகார்த்தம் அந்யாயேனுர்த்த சஞ்சயான்
16:12

ஆசாபாச சதை—நம்பிக்கையின் ஆயிரக் கட்டுக்களால்; பத்தா—கட்டப்பட்டு; காமக்ரோத பராயணு—காமம் குரோதம் இவைகளைப் பழகி; ஈஹந்தே—(அடைய) முயலுகிறார்கள்; காமபோகார்த்தம்—புலன் இன்ப நுகர்ச்சிக்கு; அந்யாயேன—அநி யாய வழிகளில்; அர்த்த ஸஞ்சயான்—பணம் சேர்க்க.

நம்பிக்கையின் ஆயிரக் கணக்கான பந்தங்களால் கட்டப் பட்டு, காலம் குரோதம் இரண்டுக்கும் அடிமைப்பட்டு, அவர்கள் புலனின்பப் பூர்த்திக்காக நேர்மையற்ற சட்ட விரோதமான வழி களில் பணத்தை குவியல்களாகச் சேர்க்கிறார்கள்.

ஆசாபாசசதைர் பத்தா: ஆசைக் கயிற்றினால் ஆயிரம் கட்டுகளுண்டு—சீடர்கள் மனதில் அப்படிப்பட்ட லோகாயத வாதிகளான பொருள் விரும்பிகளைப் பற்றிய படத்தை இன்னும் துல்லியமாக்க கிருஷ்ணர் இந்த சுலோகத்தில் அப்படிப்பட்டவனு டைய செயல்களைக் குறிக்கிறார். நூற்றுக்கணக்கான ஆசைகளில் அவன் சிக்கிக் கொள்கிறான். அவன் மன ஆற்றல்களும் புத்தி சக்தி யும் விரயமாகின்றன. அவனைச் சுற்றி நடக்கின்ற நிகழ்ச்சிகளைக் கண்டு அவன் அமைதி இழக்கிறான். பதற்றம் அடைகிறான். எரிச்சல்பட்டு, அதனைத் தொடர்ந்து சூழ்நிலையால் அமைதியற்று, தானும் சதா மகிழ்ச்சியற்று அவன் வாழ்வு ஆசையின் தாபங் களுக்கும் கோபங்களுக்கும் இடம் கொடுத்து விடுகிறது. ஆசை நிறைவேறாமல் அடக்கப்படும் பொழுது அதாவது அதன் கழுத்தை நெறிக்கும் போது கோபம் வருகிறது. இன்றியமையாத இயற்கைப் போக்கு, அவன் ஆசைகளுக்கு பக்தன்—புலன் விரும்பும் ஆசைகளுக்குத் தூபம் போடுகிறான். உலகமோ போட்டி பொறாமை நிறைந்து ஆசைகள் நிறைவேறாமல் சூழ்நிலை கள் தடுக்கும் போது அவன் தீவிர ஆசை, ஆழ்ந்த கோபமாக மாறி விடுகிறது.

ஈஹந்தே: உண்மைதான் ஐயமின்றி அவர்கள் முயலுகிறார் கள். தொடர்ந்து அவர்கள் உள்ளத்துக்குக் கிளுகிளுப்பையூட்டும் ஆசைகளைப் பூர்த்தி செய்ய சலிப்படையாமல் திறமையுடன்

உழைக்கிறன். தங்கள் பங்கு அளவு புலனின்பங்கள் பூர்த்தி அடைய வேண்டும் என்றல் அவர்கள் புலனின்பத்துக்கு இரை யாக வெளி உலகிலிருந்து பொருள்களைப் பெற்றிருக்க வேண்டும். உள்ளபடி (சிந்தித்துப் பார்த்தால்) அவர்கள் அமைதியையோ சந்தோஷத்தையோ தேடுகிறதில்லை: பிறகு அவர்களை ஆட்டி வைக்கிற கவலையெல்லாம் இனம் புரியாத ஏதோ ஒரு பசிக்கு அவர்கள் அவதிப்படுகிற ஒரு புது மாதிரியான பசிக்கு சரியான இரை தேடுவதுதான். தங்கள் விருப்பத் தூண்டுதல்களை உன்னிப் பார்த்து அறிவியல் முறைப்படி அதனை ஆராய அவர் களுக்கு வேண்டிய மனச் சமநிலை கிடையாது. எனவே சரியான தீர்மானமும் காண முடியாது. தேட்டம், சேர்க்கை இவற்றை எண்ணி வெறியுடன் செயல்படுகிறர்கள். இன்பத்தில் திளைத்து அனுபவிக்க வேண்டும் என்கிற ஆசைப் பதற்றப்படுத்துகிற கவலை யில் அவர்கள் கண்ணுக்கு வாழ்க்கையின் வரன்முறைகளும் மனசாட்சியின் கூற்றுக்களும் படுவதே இல்லை. என்றும் தணி யாத பேராசையைத் திருப்தி செய்ய அவர்கள் தங்களுக்குத் தெரிந்து எல்லா அநியாயமான முறைகள் மூலம் சொத்து ஈட்டிச் சேர்த்து இரவு பகலாக உழலுகிறர்கள்.

சுமார் ஐயாயிரம் வருஷங்களுக்கு முன் எழுதப்பட்டது இது என்றலும் என்ன ஆச்சரியம்! நம்முடைய காலத்தைப் பறறிய கசப்பான ஆனல் உண்மையான குறைபாடுகளின் எடுத்துக் காட்டாகவே இந்த அசுரப் பிரகிருதி வர்ணனை காணப்படுகிறது. எனவே கீதை படிப்பவர்கள் பெரும் திறமை நிறைந்த விஞ்ஞான அறிவு, பொருளியல் துறையில் முன்னேற்றம், சமய சார்பு இல்லாத துறைகளில் சாதனைகள், அரசியல் சுதந்திரம் முதலிய இவற்றுடன் கூடிய நம்முடைய காலத்தைக் கணிக்கத் தொடங்கினர்களானல் நம்மை பேய்த் தனமாக இழிவடைந்த, அசுர வர்க்கத்தில் தான் சேர்க்க வேண்டியிருக்கும். பெரு முழக்கம் செய்யும் தொழிற்சாலைகளில் ஊதும் சங்குகள், புது ஏவுகணைகளின் பயங்கர மோதல் சத்தங்கள், நாம் கண்டுபிடித்த இயற்கையின் பேராற்றல்களை நம்மை அழித்துக் கொள்ளவே கட்டவிழ்த்து விட்டிருக்கும் தன்மைகள், இவற்றிற்கிடையே நாம் மிகப் பழங் காலத்தில் அறிவாளிகளான சாதுக்கள் சொன் னர்களே அந்த இடிபோல் உரத்துக் கூவும் உண்மைகளைக் கேட்காமல் இருந்து விடலாம்; ஆனல் கீதையை உண்மையாக ஊன்றிப் படிக்கிறவர்கள் அவற்றைக் காணமலோ, இந்தக் கால உலகத்தை நினைத்து வருந்தாமலோ இருக்க் முடியாது.

பகவான் அப்படிப்பட்டவர்களுடைய மனப்போக்குகளைத் தொடர்ந்து சித்திரம் எழுதிக் காட்டுகிறர்:

இதமத்ய மயாலப்தம் இமம் ப்ராப்ஸ்யே மனேரதம்
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புனர்தனம் 16:13

இதம்—இது; அத்ய—இன்று; மயாலப்தம்—என்னால் அடையப்பட்டது; இமம்—இதை; ப்ராப்ஸ்யே—அடைவேன்; மனோரதம்—மன விருப்பத்தை; இதம்—இது; அஸ்தி—இருக்கிறது; இதம் அபி—இதுவும் கூட; மே—எனக்கு; பவிஷ்யதி—இருக்க வேண்டும்; புர:—மறுபடியும்; தனம்—சொத்து.

இன்று என்னால் இது பெறப்பட்டு விட்டது. இந்த ஆசையையும் நான் அடைவேன். இது என்னுடையது; இந்த சொத்துக்களும் கூட வருங்காலத்தில் என்னுடையதாகும்.

இந்த சுலோகத்தில் உலகியலில் உழல்கிற சாதாரண மனிதனுக்கு விளக்கிச் சொல்லிப் புரிய வைக்கும் படியாக எதும் அதிகம் இல்லை. ஏனென்றால் அவன் இதில் சொல்லியிருக்கிறபடியே தான் வாழ்கிறான். இந்தப் போட்டி நிறைந்த உலகில் முழுவதும் வெற்றியாளனாக இருக்கிற மனிதன் ஏற்கனவே ஈட்டிச் சேர்த்ததை சதா காலமும் நினைத்துக் கொண்டேதான் வாழ்கிறான். இன்னும் உலகை அடித்து உலையில் போட்டு மேலும் மேலும் சொத்தைச் சம்பாதிப்பதற்கும் சேர்ப்பதற்குமான பேராசைகளையும் விடாமல் நினைத்துக் கொண்டே இருக்கிறான். தனக்காகத் தேடிச் சேர்க்கும் இந்தச் சித்தாந்தத்தில் பிறர் சிரிப்புக்கு இடமாக உள்ள முரண்பாட்டுப் புதிர் என்னவென்றால், அதிகம் கிடைக்கக் கிடைக்க மனிதன் மேலும் அதிகம் பெறவே ஆசைப்படுகிறான். லோகாயதப் பொருள் தேடுபவன் எவனும் ''இவ்வளவு இருக்கிறது. எனக்கு இது போதும்'' என்று சொல்வதே கிடையாது. இதற்கு நேர்மாறாக தன்னிடமிருக்கும் சொத்தின் தற்பெருமைப் போதையில் முழ்கியவனுடைய வெட்கம் இல்லாத கூற்று. ''இதோ இவ்வளவு என்னிடம் இருக்கிறது. மற்றும் இந்தச் சொத்தும் என்னுடையதாகிவிடும் (விட வேண்டும்) என்பதுதான்.

ஆசையின் விளையாட்டு இருக்கிறதே அது முடிவே காண முடியாத சூதாட்டம். எவ்வளவு அதிகமாகத் தன்னிடம் இருக்கிறதோ அதைவிட அதிகமாக மேலும் பெறவேண்டும் என்றே தான் மனிதன் உழைப்பான். அவன் ஒவ்வொரு தடவையும் முயலும்போது கிடைப்பதில் முழு அளவு திருப்தி பெறவேண்டும் என்றுதான் நினைக்கிறான். ஆனால் ஒவ்வொரு தடவையும் அவன் அனுபவம் அவனுக்கு முழுமையான திருப்தி என்பதே ஏற்பட்டதில்லை. அந்த ஏமாற்றம் அவனை இன்னும் மேலே மேலே தாகம் கொள்ளச் செய்கிறது. (2ம். அத்தியாயம் 70வது சுலோகத்தில் சொல்லியுள்ளபடி) கீதையில் முன்னால் சொல்லிக் காட்டியது போல புற உலகப் பொருள்கள் அவன் உள்ளத்தில் ஒரு உணர்வலையையும் ஏற்படுத்தாதபடி எவன் ஒருவன் தன்னைக் கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்திக்கொண்டு அடங்கியிருப்பானோ

அவனுக்குத் தான் அமைதி என்றால் என்ன என்று தெரியும்—ஆசைகளை ஆசைப்படுகிறவனுக்கு அல்ல.

இந்த சுலோகம் பொருள் விருப்ப வாதி புறத்தே உள்ள பௌதிகப் பொருள்களைக் குறித்து மனதில் கொள்ளும் நிலையைத் தீட்டுகிறது. ஜீவன்களுடன் அவன் என்ன மாதிரி உறவு கொள்வான் என்று வருகிற சுலோகம் விவரிக்கிறது.

அஸௌ மயா ஹத: சத்ருர் ஹனிஷ்யே சாப ரானபி
ஈ சுவரோ ஹ மஹம் போகி ஸித்தோஹம் பலவான் ஸு கீ!
16:14

அஸௌ—அந்த; மயா—என்றால்; ஹ த—கொல்லப் பட்டான்; சத்ரு—எதிரி; ஹனிஷ்யே—கொல்லுவேன்; ச—மேலும்; அபரான்—மற்றவர்களை; அபி—கூட; ஈச்வர—கடவுள்; அஹம்—நான்; போகி—அனுபவிக்கிறவன்; சித்த—சித்தன் (பரிபூரண மானவன்) அஹம்—நான்; பலவான்—பலசாலி; ஸுகீ—சுகமா இருப்பவன்

14. அந்தச் சத்துரு என்னால் கொல்லப்பட்டுவிட்டான். மற்றவரையும் நான் கொன்றுவிடுவேன்; நான் ஈசுவரன் (எஜமானன்) நான் போகங்களை அனுபவிப்பவன். நான் பரிபூரணன், பலவான்; மகிழ்ச்சியுடையவன் இந்த சுலோகத்தின் அர்த்தமே போதும் அது விளக்கவுரையாகிவிடும். அதே சமயம் அது நம்மில் பெரும்பாலோரைப் பற்றியும் குறிப்புரைகள் தந்து விடுகிறது. உலகத்திலுள்ள அவ்வளவு வியாபாரிகளும் தம்மை யறியாமலேயே இந்த சுலோகத்தை தங்களுடைய இதயத்தின் அடியில் திருப்பிச் சொல்லிக்கொண்டுதான் இருக்கிறார்கள். ''சந்தையில் (மார்க்கெட்டில்) அந்தப் போட்டியாளனை நான் ஒழித்துவிட்டேன். இனி இந்த இரண்டு பேரையும் ஒழித்தாக வேண்டும்... இதில் என்ன இருக்கிறது? பாவம் இந்த பிசாத்துக்கள் நான் விரும்பியபடி செய்வதிலிருந்து என்னைத் தடுத்து நிறுத்தி என்ன செய்துவிட முடியும்?''... ''ஏன் என்றால் எந்த விதத்திலும் எனக்கு ஒப்பானவர் யார் இருக்கிறார்கள்? நானே பிரபு. நான் அனுபவிக்கிறேன். அமோக வெற்றி யடைந்தவன் நான்! செல்வாக்கு, முதல், வியாபார உறவுகள், பாங்கில் பணஇருப்பு— எதை எடுத்தாலும் நான் பலமாக இருக்கிறேன். தவிரவும் என் உடல்நலம் மிகவும் சிறப்பாக இருக்கிறது.'' உண்மையான பொருள் விருப்பவாதியின் இதயத்தோடு இதயமாக 'அகம்பாவம்' முணுமுணுக்கும் வெற்றிப் பாடல் இது தான். சைத்தானுடைய இந்த மயக்கும் தாலாட்டில் மனிதனிடத்தில் இருக்கிற உயர்ந்த ஊற்றுணர்வுகள். தெய்வீகத் தூண்டல்கள் எல்லாமே போதைத் தூக்கத்தில் முழுகிவிடுகின்றன.

பொருள்வாதி தன்னைப் பற்றி என்ன மதிப்புப் போடுகிறான்? கேளுங்கள்

ஆட்யோ பிஜனவானஸ்மி கோ அரன் யோ
அ ஸ்தி ஸ்த்ரு சோ மயா
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய
இத்யஞ்ஞான வி மோ ஹி தா

16:15

ஆட்ய—பணக்காரன்; அபிஜனவான்—நல்ல பிறப்புடையவன்; அஸ்மி—இருக்கிறேன்; க—யார்; அந்ய—வேறு; அஸ்தி—இருக்கிறான்; சத்ரு—சமானமாக; மயா—எனக்கு; யக்ஷ்யே—வேள்வி நடத்துவேன்; தாஸ்யாமி—தானம் செய்வேன்; மோதிஷ்யே—மகிழ்ச்சியில் திளைப்பேன்; இதி—என்று; அஞ்ஞானவிமோஹிதா—அஞ்ஞானத்தில் மயங்கியவர்கள்.

15. ''நான் செல்வச் செழிப்புடையவன்; நல்ல பிறப்பு உடையவன். எனக்கு சமமாக வேறு யார் இருக்கிறார்கள்? நான் வேள்வி செய்வேன். தானம் செய்வேன். மகிழ்ச்சியில் திளைப்பேன்'' இவ்விதம் அவர்கள் அறியாமையில் மருட்சி அடைந்திருக்கிறார்கள்.

தன்னைப் பற்றி தவறான அபிப்பிராயங்களைக் கொண்டுள்ள மனிதன் காமாலையினால் ஊதிய அகங்காரம் உடையவன். அவன் உலகை நோக்கும்போது டம்பத்தினால் கோணல் மாணலான மனதைக்கொண்டு நோக்குகிறான். எனவே தன்னைப்பற்றியும் உலகத்தோடு தன் உறவைப் பற்றியும் தவறான மதிப்புணர்வு கொண்டிருக்கிறான். தன் உயர்குடிப் பிறப்பு வளர்ப்பைப் பற்றி அவன் மகிழ்வடைகிறான். தன்னையே பாராட்டிக் கொள்கிறான். தன் உடைமை, சொத்து இவற்றைப் பற்றி எல்லாம் அபாரப் பெருமை கொள்கிறான். தனக்குச் சமமாக யாரையுமே அவன் காண்கிறானில்லை. சமூகத்திலிருந்து தானே தன்னை ஜாதிப்ரஷ்டம் செய்துகொண்டு, வீண் டம்பத்தினால் ஆகாயக் கோட்டை கட்டி அதனுள் வாழ்கிறான். எனவே அவனை மன வாழ்வில் எண்ணற்ற ஏக்கங்கள் தொல்லைக்குட்படுத்துகின்றன. அவன் பெருமையைப் பாருங்கள்—அவன் யாகம் செய்வானாம்; ஈசுவரனைக்கூட தான் விரும்பும் பயனைத் தரச் சொல்லி அவனைக் காக்கச் செய்வானாம்! கிடைத்த பிரசாதத்திலிருந்து உலகையே விலைக்கு வாங்கிவிடுவானாம்! இப்படி உலகம் பாராட்டி கடவுள் தான் சொன்னதைக் கேட்க, ''இவ்வுலகில் நான் மிக மகிழ்வுடன் இருப்பேன்'' என்று டமாரம் அடித்துக்கொள்கிறான் அவன். அறியாமையின் இருண்ட அதலபாதாளத்திலிருந்து அவன் அமைதியற்ற இதயம் இப்படிப் பைத்தியக்கார அலறல்களை வெளியிடுகின்றது அவற்றுள் சிலதான் மேலே சொன்னவை.

முந்திய மூன்று சுலோகங்களின் சாராம்சம் பின்வருமாறு சொல்லப்படுகிறது.

அநேக சித்த விப்ராந்தா மோஹ ஜால ஸமா வ்ருதா
ப்ரஸக்தா: காம போகேஷு பதந்தி நரகே சுசெள

16:16

அநேகசித்தவிப் ராந்தா—அநேக எண்ணங்களில் மருண்டு; மோஹஜால ஸமாவ்ருதா—மோஹவலையுள்பட்டு, ப்ரஸக்தா—ஆழ்ந்த விருப்பம் உள்ளவர்களாக; காமபோகேஷு—இன்பங்களை துய்ப்பதில்; பதந்தி—விழுகிறார்கள்; நரகே—நரகத்தில்; அசுசெள—அசிங்கமான.

16. அநேக விருப்பக் கருத்துக்களுள் மயங்கி, மோகவலை சுற்றிக் கொள்ள, இன்பத்தை துய்ப்பதிலேயே ஈடுபட்டு அவர்கள் அருவருப் பான நரகத்தில் விழுகிறார்கள்.

அநேக சித்தவிப்ராந்தா: அநேக கற்பனை ஆசைகளுள் மயங்கி—தன்னைப் பற்றியே நினைக்கும் ஒரு மனிதன் தன் இன்பத்துய்ப்பிற்கே தன்னை முற்றிலும் விற்றுவிட்டு அதற்கே தன்னை அடிமையாக்கிக்கொண்டு பொழுதைக் கழிக்கும்போது, உலகத்திலே புறப் பொருள்களிடையே இன்பம் கிடைக்கும் என்று தேடுகிறான். அதனால் அவன் மனது எப் போதும் அலைந்த வண்ணம் இருக்கிறது. புலன் நுகர்ச்சியைப் பெரிதாக மதித்து அதில் ஈடுபட்டு நிற்பவன் மனது தன்னுடைய தராண சக்தியைச் சீக்கிரமே இழந்துவிடக் கற்றுக்கொள்கிறது; மேலும் தன் மயக்கங்கள் வீணான மனோபாவங்கள் மற்றும் கற்பனைத் திட்டங்களிலேயே தன் ஆற்றலை எல்லாம் அழித்துக் கொண்டு விடுகிறது.

மோஹஜால ஸமாவ்ருதா: மோகவலையால் சூழப்பட்டு—ஒருவனின் மனம் தவறான கொள்கைத் தத்துவம் காரணமாக சாரமற்ற கனவுகளில் சிதறிப் போகிறது என்றால் அவன் புத்தியும் கூட வருத்தப்படத் தக்க நிலையில் இருக்கிறது. விஷயங்களைப் பிரித்தறிந்து முடிவு செய்யும் அவன் திறமை தவறான மதிப்பீடு மோகம் இவற்றின் வலைக்குள் சிக்கித் திணறுகிறது. எப்போதும் உள்ள அதன் தங்குமிடத்திலிருந்து புத்தி விலகி விடுகிற காரணத் தால் அதற்கு தான் இருப்பதை வெளிப்படுத்திச் சரியான வாழ்க்கையின் மதிப்பீடுகளை உணர்த்த முடியாமல் போய் விடு கிறது. வாழ்க்கையின் சாசுவதமான இனிய லயத்தைக் காணத் தவறிய அது அகங்காரத்தில் வருகிற வீண் ஆடம்பரங்களையே பார்த்துக்கொள்கிறது. இப்படி தன்மை தவறிய பார்வை கருவி யின் மூலம் உலகத்தைப் பார்த்தால் கோணல் மாணலான படம் தான் கிடைக்கும்.

காமபோகேஷு ப்ரவ்ருத்தா: காமம் துய்க்கின்ற

பழக்கத்துக்கு அடிமையாகி—புத்தியை மேகம் மூடிவிட்டது. மனது அலேந்து கொண்டிருக்கிறது. பிறகு என்ன? அவை இரண்டுக்கும் கருவிகளாக இருக்கிற இந்திரியங்கள் தப்பும் தவறுமாகத்தான் வேலே செய்யும். கார் ஓட்டி குடிபோதையில் இருந்தால் வண்டி சரியாகப் போகாது. அதைப்போல அப்படிப் பட்ட மனிதனும் தகாத சிற்றின்ப வேட்கை, புலன் திருப்தி இவற்றிற்கு அடிமையாகி விழுகிறான்.

அசுசௌ நரகே பதந்தி: அருவருப்பான நரகத்தில் விழுகிறார்கள். உடல் களேத்து, மனம் குழம்பி, புத்தி [illegible]ள்ளாருகி இருக்கிற மனிதன் இங்கே தனக்கென ஒரு நரகத்தைப் படைத்துக்கொண்டு சுற்றியுள்ள மற்றவர் களிடையேயும், தன்னிடமுள்ள தொல்லேகளேப் பகிர்ந்து கொடுத்து அவர்களேயும் தொல்லேக்கு உள்ளாக்கிக் கொண்டுதான் திரிவான் என்று சொல்வதற்கு நாம் பிரமாதமான வேதாந்தியாக இருக்கவேண்டும் என்ப தில்லே. ஒரு மனிதன் நரகத்தைச் சுவர்க்கமாக்கலாம். சுவர்க்கத்தை நரகமாக்கலாம். ஆம் அது அவன் தன்னுள் லயப்பட்டு இருப்பதையும் பிளவுபட்டு இருப்பதைப் பொறுத்திருக்கும். உள்ளம் சிதறிய மனிதன் எந்த நிலேயிலும் அமைதியையோ, மனநிறைவையோ காணமுடி யாது. சுற்றுச் சூழ்நிலே முன்னேற்றத்திற்கு ஒத்தாசையா யிருந்தாலும்கூட அவன் அதைத் தனக்குள்ள சங்கடங் களேக்கொண்டு கெடுத்துவிட வழிகள் கண்டு பிடித்துவிடு வான்.

ஒரு தனி மனிதன் தவருன மதிப்பீடுகள் காரணமாக மகிழ்ச்சிகரமான சுற்றுப்புறம் இருந்தும்கூட தனக்கு ஒரு துயர உலகைப் படைத்துக்கொள்ள முடியும் என்ருல், நம்மில் பெரும்பாலான மனிதர்கள் பல அளவுகளில் அந்த அழகான குணங்களுடன் விளங்கும்போது உலகின் நிலே எப்படி இருக்கும் என்று நாம் எளிதில் கற்பனே செய்து கொண்டுவிட முடியும். நாம் எவ்வளவுக்கெவ்வளவு நம் அந்தக் கரணங்களுக்குள்ளே ஓர் இசைவைக் கொண்டு வருகிருேமோ அதற்கேற்றவாறு தான் சுவர்க்கமோ நரகமோ அமையும்.

அப்படிப்பட்ட மக்களுடைய குணுதிசயங்களும் அவர் கள் செய்கிற வேள்விகளும்—

ஆத்ம ஸம்பாவிதா: ஸ்தப்தா: தனமான—மதாந் விதா
யஜந்தே நாம யஞ்ஞைஸ்தே தம்பேநாவிதி பூர் வகம்

16:17

ஆத்மஸம்பாவிதா—போலித் தற்பெருமை உடையவர்களாக; ஸ்தப்த்தா—பிடிவாதம் உள்ளவர்களாக; தனமானமதாந்விதா—பணம், புகழ், இவற்றினுடைய போதையுடன் கூடியவர்களாக; யஜந்தே—(அவர்கள்) வேள்வி செய்கிறுர்கள்; நாமயஜ்ஜை—பெயருக்கான வேள்விகள்; தே—அவர்கள்; தம்பேன—டம்பத்துடன்; அவிதிபூர்வகம்—நூல்களின் விதிகளுக்கு மாறுன விதத்தில்.

போலி இறுமாப்புக்கொண்டு பிடிவாதத்துடன் பணம் பதவி இவற்றின் போதையில் மூழ்கி அவர்கள் வெளி வேஷம் போட்டுக்கொண்டு விதிகளுக்குக் கட்டுப்படாமல் பெயருக்காக வேள்விகள் புரிகிறுர்கள். இங்கே வேள்வி (எக்ஞும்) என்பதற்கு வேதங்களில் விவரிக்கப்பட்டிருக்கிற விஸ்தாரமான எக்ஞுத்தைத் தான் எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற தேவையில்லை. கீதையில் (3ம் அத்யாயத்தைப் பார்க்கவும்) சொல்லியிருக்கிறபடி இங்கே அதை ஒரு சிறப்பான கூட்டுறவு முயற்சி என்று சொல்லலாம். அதில் ஒவ்வொருவருக்கும் வாழ்க்கையின் செயல்களிலே தன்னிடமுள்ள மிகச் சிறந்ததை ஆஹுதி போல் சமர்ப்பித்து, சத்தாக உள்ள உட்பொருளின் ஆற்றல் உள்ள ஒரு நன்மையை எழுப்பி வழிபடுகிறுர்கள். அந்நன்மை கிடைத்தவுடன் எல்லோருக்கும் சமமாக பங்கிடப்படுகிறது. மனித குலத்துக்குத் தொண்டு செய்கிற சுயநலமற்ற முயற்சியே இங்கு கிருஷ்ணபகவானுல் ஆகப் பெரிய எக்ஞும் என்று குறிப்பிடப்படுகிறது. தொழிலே வழிபாடாம். செய்யும் தொழிலே தெய்வம்.

தன்னைப் பற்றிப் பெரிதாக மதித்து, (இறுமாந்து) செறுக்குக் கொண்டு, கர்வம் நிரம்பி, தனக்குள்ள சொத்து சுகத்தின் போதைக்கு ஆள்பட்டு—ஒருவன் சமூக சேவை அல்லது தேசத் தொண்டு புரியப் போகும்போது அவன் எப்போதும் உண்மையான யக்ஞ மனப்பாங்குடன் போவதில்லை. எவ்வளவோ தலைவர்கள், தொண்டர்கள் தேசத்தை மேன்மைப்படுத்த கஷ்டப்பட்டு உழைக்கிறுர்கள். ஆனுலும் நம்முடைய காலத்தில் இந்த உலகம் வளப்பம், நிறைவு அமைதியிலிருந்து கீழே விழுந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறேம். ‘பேய்த்தனமாக இழிந்த’ அசுரப்பிரகிருதி எந்த செயற்களத்துக்குப் போய்ச் சேர்ந்தாலும், அவன் எவ்வளவுதான் சுயநலமற்ற தொண்டு, அது, இது என்று உரக்கக் கத்தினுலும் அவனுல் ஒன்றும் ஆகாது. ஏனென்றுல் அவன் சுபாவமும், குணமும் அவ்விதம். அப்படிப்பட்ட நம் சமூகத்தினுடைய நண்பர்கள் மிக உயர்ந்த பஷம் செய்தாலும் யக்ஞும் என்று பேருக்குத்தான் செய்யமுடியும். அவர்கள் அறியாமலே அவர்களின் செய்கைகளை அவர்களுடைய டம்பமே நச்சுப் படுத்திவிடும். அவர்களின் செருக்கு வேலையின் உருவத்தையே வளைத்துவிடும். அவர்களின் தவருன சித்தாந்தக் கொள்கைகள்

அவர்கள் செய்யும் வேலையை கறைபடிந்ததாகச் செய்துவிடும். இப்படியாக அவர்கள் செயல்களின் விளைவாக துன்பம் தான் மிஞ்சும்.

அப்படிப்பட்ட தாழ்ந்த மனிதர்கள் நாளுக்கு நாள் மேலும் மேலும் தாழ்ந்துகொண்டே போவார்கள்

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம்
ச ஸம்ச்ரிதா:
மாமாத்ம பரதே ஹேஷு
ப்ரத்விஷந் தோ(அ)ப்ய ஸூயகா:

16:18

அஹங்காரம்—சுயநல வெறி; பலம்—பலம்; தர்ப்பம்—செறுக்கு; காமம்—பலமான சிற்றின்ப ஆசை; க்ரோதம்—கோபம்; ச—உம் சம்ச்ரிதா; சரணடைந்து; மாம்—என்னை; ஆத்மபரதேஹேஷு—அவர்கள் உடலிலும் மற்றும் பிறருடைய உடல்களிலும்; ப்ரத்விஷந்த—வெறுத்துக்கொண்டு; அப்யஸூயகா—கெடு நோக்கானவர்கள்.

சுயநல வெறிகொண்டு, சக்தி, செருக்கு காம இச்சை கோபத்துக்குள்ளாகி இந்தக் கெடு நோக்குள்ள மனிதர்கள் தங்கள் மேலும் மற்றவர்கள் உடலிலும் உள்ள என்னை வெறுக்கிறார்கள்.

சுய நலவெறி ஒருவனைப் பிடித்துவிட்டதென்றால் அவன் கால் நடைத்தன்மையின் அருவெருக்கத்தக்க ஆழத்துக்கு இறங்கிவிடுகிறான். வெறி உணர்ச்சிக்குட்பட்டு பண்பாடு உள்ள மனிதனுக்குரிய கௌரவத்தையே துறந்துவிடுகிறான்.

மேலும் பின் கால்களினால் நின்று விழுந்துவிடும் போல் விறைத்துத் திரியும் புத்திசாலி மிருகம் போல் நடந்து கொள்கிறான். உயிரினத்தில் அது ஒரு புதிர். உடல் தோற்றத்தில் தான் அவன் மனிதன். ஆனால் குணத்தில் மிருகம். அஸுரப் பிரகிருதியில் அந்த வர்க்கத்தைப் பற்றித்தான் இங்கே பேச்சு.

அப்படிப்பட்ட மனிதனின் உள்ளக்கிடக்கைகளை எண்ணிச் சொல்லிவரும் பகவான் கிருஷ்ணன் அவனிடம் சுயநலவெறி, மிருகபலம், தற்பெருமை மட்டுப்படாத உணர்ச்சி, கோபம்—இவை இருக்கும் என்கிறார். இவற்றில் ஏதாவது ஒன்று இருந்தாலே போதும்—மனிதனை மோசமான மட்டமான குணங்களின் அதலபாதாளத்துக்கு இழுத்துச் சென்றுவிடும். ஆனால் பிரபு இந்த எல்லாக் குணங்களுமே சேர்ந்து அந்த மிருக மனிதனிடம் இருக்கிறது என்கிறார். அவனிடம் இந்த குணங்கள் இருப்பது மட்டுமல்ல—யாரிடம் தான் இக் குணங்கள் இல்லை? இவற்றை

விட்டு நல்ல துறையில் வளர வேண்டும் என்கிற எண்ணமே இல்லாமல் அசுர குணம் படைத்தவன் இந்தக் குணங்களேயே நம்பி இந்தப் போக்குகளே முழுமையாக நடத்தினல்தான் சித்தியை அடையலாம் என்று நம்பி போராடுகிறுனே—அதுதான் இவன் சிறப்பு!

இவ்விதம் ஆசைகளுக்கு அடிமையாகி அழிகிற இளேஞன் ஒருவனிடம் பெரியவர்கள் 'மட்டமான தூண்டுதல்களுக்கும் ஆசைகளுக்கும் சுலபமாக இடம் கொடுத்து வாழ்வைக் கெடுத்துக்கொண்டு வாழாதே' என்று புத்திமதி சொன்னல் அவன் அடிக்கடி இந்தக் கேள்வியைக் கேட்கிறுன். தனி மனிதன் ஒருவன் இப்படிப்பட்ட ஆசைகளுக்கே மதிப்புக் கொடுத்து வாழ்வதனல் என்ன சங்கடம் நேரிட்டுவிடுகிறது? அதற்குக் கீதாசாரியன் இங்கே ''பண்பாட்டின்படியான உயர்ந்த தகவுகளே எல்லாம் அவமதித்துவிட்டு, பண்பாடற்ற, சுயநலத்தையே மையமாகக்கொண்டு வேட்கைகளேயும் விருப்பங்களேயுமே மதித்து வந்தால் அதன் பலன் வாழ்க்கையையே முழுமையாக நிர்மூலமாக்கிக் கொள்வதைத் தவிர அதற்குக் குறைவான வேறு ஏதும் இருக்கமுடியாது!' என்று விடை கூறுகிறுர்.

மேலே கூறப்பட்ட போக்குகளே உடைய மனிதர்கள் வாழ்க்கையின் புனிதத் தன்மையை அலட்சியப்படுத்தி விடலாம்; பொறுப்பின்றி அதன் தூய்மையைக் கெடுத்து விடலாம். அப்போது அவர்கள் உக்ரமான வன்மம் கொண்டவர்களாக ஆகி விடுவார்கள். அவர்கள் தங்கள் மட்டமான சுய இன்பங்களேத் துய்க்க வேண்டும் என்கிற வெறியில் அவர்கள் உடல்களுக்குள்ளேயும் மற்றவர்கள் உடல்களுக்குள்ளேயும் இருக்கிற 'என்னே' வெறுக்கத் தொடங்கிவிடுவார்கள். மிக மட்டமான புலன் நுகர்ச்சித் தூண்டுதல்கள் போர்வையிட்டு மறைத்து விட்டால் அந்தப் புனிதமான வாழ்க்கை ஒளியான பரமாத்மா தன்னுடைய முழு ஒளியையும் வீசி இயங்க முடியாது. இந்த அத்தியாயத்தில் முன்னல் சொல்லப்பட்ட நெறி சம்பந்தப்பட்ட மதிப்புள்ள கருத்துக்கள் எல்லாம் ஆத்ம சாதகனுடைய மனதை சரியான கருவியாக்குவதற்கான எண்ணங்களேக் கட்டுப்படுத்தி வழி நடத்திச் செல்லும் திட்டங்கள். நன்னெறியற்ற மதிப்பீடுகள், நடத்தையைக் கெடுக்கும் செயல் முடிவுகள் எல்லாம் வாழ்க்கையின் இனிய நாதத்தையே அமுக்கிவிடும். அப்படிச் செய்கிறவன் தன் இதயத்திலும் மற்றவர்கள் இதயத்திலும் இருக்கும் மனநிறைவையும் சிதற அடித்துவிடுவான்.

அப்படிப்பட்ட சிந்தனேயற்ற பொருள் விருப்பவாதிகள் தங்கள் தவருன மதிப்பீடுகள் காரணமாகவும் அசிங்கமான செயல்கள் காரணமாகவும் பரிணும வளர்ச்சியில் எவ்வளவு

கீழ்நோக்கிச் செல்கிறுர்கள் என்ற விஷயம் பின்வரும் சுலோகங்களில் முறையாக சொல்லப்படுகிறது.

தானஹம் த்விஷத: க்ரூரான் ஸம்ஸாரே ஷு நராதமான்
க்ஷிபாம்யஜஸ்ரமசுபானுஸுரிஷ்வேவ யோநிஷு

16:19

தான்—அவர்களை; அஹம்—நான்; த்விஷத—வெறுக்கிறவர்களை; க்ரூரான்—கொடூரமான; ஸம்ஸாரேஷு—உலகங்களில்; நராதமான்—மனிதர்களுள் கடையர்களை; க்ஷிபாமி—எறிகிறேன்; அஜஸ்ரம்—நிரந்தரமாகவும்; அசுபான்—தூய்மையற்ற; ஆஸுரீஷு—அஸுர; ஏவ—மட்டிலும்; யோனிஷு—பிறவிகளில்.

உலகில் மனிதர்களுக்கெல்லாம் கடையர்களான இந்தக் கொடூரமான ''வெறுப்பு உடையவர்களை, இந்தத் தவறு இழைப்பவர்களை, நான் நிரந்தரமாக இருக்கும்படி அசுரப் பிறவிகளிலேயே எறிகிறேன் (பிறக்கச் செய்கிறேன்).''

பகவான் அன்பு பொங்கிய ஆத்திரத்தில் இந்தப் பேய்க் குணம்கொண்டு இழிந்த அஸுர வர்க்கத்தை உலகிலேயே மிக மோசமானவர்கள் என்று வர்ணிக்கிறுர். அவர்கள் கெட்ட எண்ணமுடையவர்கள், கொடுமையாளர்கள்: தங்களுடைய பெருமையை கெடுத்துக்கொள்ளுகிறுர்கள். சுற்றிலுமுள்ள உயிர்களுக்கும் கொடுமை புரிகிறுர்கள். பகவான் 'அவர்களை நிரந்தரமாக அசுர யோனிகளில் போட்டு விடுகிறேன்' என்று சொல்கிறுர். இங்கே கண்ணன் ''செயல்—செயலின் எதிர்விளைவு''க்குரிய நியதியுடன் ஒன்றி நிற்கிறுர் —தப்புச் செயல்கள் உள்ளத்தில் தப்பு வாஸனைகளை விட்டுச் செல்லும். அவற்றின் அழிவுப் போக்குகளால் தூண்டிச் செலுத்தப்பட்டு ஒரு மனிதனின் ஜீவன் இந்த உடலைவிட்டு இறந்த பிறகு அவற்றுக்கேற்ற புலனுக உள்ள ஜன்மத்தை வேண்டும் என்று தேடி அடைகிறுன். அசுரத் தன்மை படைத்தவன் அசுரனுக்கு உரிய மகிழ்ச்சிகளைத் தரக்கூடிய இடத்தில் தான் தன் இச்சைகளின் நிறைவைப் பெறமுடியும் என்பது கட்டாயம்தான். எனவே 'செயல்—விளைவுச் செயல்' என்கிற நியதி அவன் மீண்டும் மீண்டும் அப்படிப்பட்ட யோனிகளில் (பிறவிகளில்) பிறக்கவேண்டும் என்றுதான் சட்டம் போடும். அவர்களுடைய போகங்களின் பயங்கரத் தன்மை அதிகமாகி அதிகமாகித் தாங்க முடியாமல் போய் இப்படிப்பட்ட வாழ்வின் அர்த்தமற்ற தன்மையையும் முட்டாள் தனத்தையும் திடீர் என்று தெரிந்துகொள்கிற வரை அவர்கள் இப்படி மேலும் மேலும் பயங்கரமான கீழ்ப் பிறவிகளில் பிறந்து தானுக வேண்டும். இங்கே மறுபிறவி (புனர்ஜன்ம) வாதம் சுட்டப்படு

கிறது. அதைப் பற்றி நாம் முன்னமே நம் சொற்பொழிவுகளில் (8ம் அத்தியாயம் 6வது சுலோகத்தில்) பரக்கப் பேசியிருக்கிறோம்.

தொடர்ந்து:

ஆஸுரீம் யோனிமாபன்னு மூடா ஜன்மனி—ஜன்மனி
மாமப் ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்
16:20

ஆஸுரீம்—அஸுர; யோனிம்—பிறவியை; ஆபன்னு—அடைந்து; மூடா—மோகத்துள்பட்டவர்கள்; ஜன்மனி ஜன்மனி—பிறவிக்குப் பிறவி; மாம்—என்னை; அப்ராப்ய—அடையாமல்; ஏவ—ஏயே; கௌந்தேய—குந்தி மகனே; தத—அதைக் காட்டிலும்; யாதி—விழுந்தடைகிறார்கள்; அதமாம்—கீழான; கதிம்—கதியை (பாதை அல்லது முடிவை).

20. அசுர யோனிகளில் பிறந்து, பிறவிக்குப் பிறவி மோகம் அதிகமாகி என்னை அடையாமலே அவர்கள் இவ்விதம் விழுகிறார் கள்! ஏ குந்தி புத்திரா! —அதைவிடக் கீழான நிலைக்கு.

அசுரப் பிரகிருதியுள்ள மனிதன் வீழ்ச்சிப் பாதையைக் காண்பிக்க வரும் கண்ணன் கூறுகிறார்: ‘ஒரு மனிதன் முன்ஜன் மத்தின் பயனாய் மீண்டும் மீண்டும் அசுர ஜன்மத்திலேயே பிறந்து அநந்தமான ஆத்மானந்தத்தை அனுபவிக்கத் தவறிவிடுகிறான். பண்பாட்டின் அழகிய சிகரங்களுக்கு அவனால் ஏறமுடிவதே இல்லை. அடிமட்டங்களிலுள்ள உயிர்களாகவே இழிந்து இழிந்து பிறக்கிறான்!

இதுவரை நாம் தெளிவாக இரண்டு வகை மனிதர்களைப் பார்த்தோம்— 1. உயர்ந்த தெய்வீக மனிதர்கள். 2. பேய்த் தன மாக இழிந்த அசுரர்கள். நம்மில் பெரும்பாலோர் சற்றுக் கூடுதல் குறைவாக இரண்டாம் வகுப்பைச் சேர்ந்தவராயிருக்கிறோம். ஆன்மசாதகன் வெறும் விளக்கங்கள் வர்ணனைகளை மட்டும் தெரிந்துகொண்டு அத்துடன் திருப்தியடைவதில்லை. எனவே கிருஷ்ணபிரான் இப்பொழுது அர்ஜுனன் மூலமாக மக்கள் அவ்வளவு பேருக்கும்; நம்பிக்கையே அற்ற முறையில், இழிந்து அசுரநிலைக்கு வீழ்ந்தவனாக இருந்தாலும்கூட அவன் ஆன்மப் பரிணாம வளர்ச்சியில் எப்படி மெதுவாக முன்னே ஏறி மேல் நிலைக்குப் போய்க் கொண்டிருக்க முடியும் என்று சொல்கிறார். யாரும் ஒன்றுக்கும் உதவாதவன் என்று சபித்து தள்ளிவிடப் படுவதில்லை. யாரும் எப்போதும் நரகத்துக்கே உரியவன் என்று கிடையாது. அப்படிச் சொல்வது தர்க்க வாதத்துக்கு ஒவ்வாது. சித்தாந்தத் தத்துவத்துக்கும் சரியல்ல. அசட்டுத் தனமானதும் கூட.

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசனமாத்மன:
காம்: க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாதேதத் த்ரயம் த்யஜேத்

16:21

த்ரிவிதம்—மூன்று வகையானது; நரகஸ்ய—நரகத் தினுடைய; இதம்—இந்த; த்வாரம்—வாசல்; நாசனம்—அழிக்கக் கூடியது; ஆத்மன:—ஆத்மாவினுடைய; காம—ஆசை வெறி; க்ரோத—கோபம்; ததா—அவ்விதமே; லோப—பேராசை; தஸ்மாத்—அதனுல்; ஏதத்—இந்த; த்ரயம்—மூன்றையும்; த்யஜேத்—விட்டு விடல்.

நரகத்துக்குப் போக மூன்று வாயில்கள் இருக்கின்றன என்று காட்டுகிருர் கண்ணன். இதற்கு முன் ஒரு சுலோகத்தில் சொர்க்கம், நரகம் என்பதெல்லாம் (16'ம் சுலோகத்தில்) மனது ஏற்படுத்தித் தரும் உள் அனுபவ நிலேகளே என்று சொல்லி யிருக்கிருர். நரக அனுபவம் பெறுவதற்கு இந்த மூன்று தப்பான மதிப்புக் கணிப்பே காரணம்.

காமம், க்ரோதம், லோபம் (ஆசை, கோபம், பேராசை): புலன் நுகர்வு வாழ்க்கையிலிருந்து மனிதனேத் திருப்பி விருப்பமற்ற செயலும், அகங்காரம் நீங்கிய பரிபூரணத்துவமும் கொண்ட விரிவான வாழ்க்கைப் புலங் களுக்கு வரும்படி அழைப்பதுதான் இந்த அத்தியாயத்தின் முக்கிய அடக்கப் பொருள்.

ஆசையிருக்கும் இடத்தில் கோபம் ஒட்டி வரும். ஒரு மனிதனிடமிருந்து இச்சைக்குரிய ஒரு பொருளே நோக்கி தொடர்ச்சியாகச் செல்லும் எண்ணங்களின் கலேயாத ஓட்டமே 'ஆசை' எனப்படுவது. இந்த ஆசையால் ஏற்படும் பிடித்து வைத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ண ஓட்டம் ஒரு தடை யில் பட்டு மாறிச் செல்லும் போது அது கோபமாக விளேகிறது. விருப்பம் பூர்த்தியாவதில் ஏமாற்றம் வந்தால் உள்ளத்தில் ஒரு விரோதப் புயல் எழுகிறது. அதன் பயனுக கோபம் வாழ்க்கைப் படகை ஆட்டி உலுக்கி ஆழ்த்தி விட என எழும்பி உயர்கிறது.

விருப்பம் ஏமாற்றத்துக்குட்படும் போது மனதில் எழும் எண்ணப் புயலே கோபம்—என்ருல் ஆசைகள் பூர்த்தியாகப் பூர்த்தியாக மேலும் மேலும் ஆசைகள் தொடர்ந்து மன ஆற்றலே யும் உள் அமைதியையும் அரித்து விடுவதுதான் பேராசை. ஒரு ஆசை பூர்த்தியடைந்தவுடன் மேலும் மேலும் ஆனந்தத்துக்கு ஆருத தாகம் எழுகிறது. இந்த வற்ருத சுவைதான் மனத்தின் தெம்பையும் மனிதப் பிராணனின் ஆற்றலேயும் வாட்டி வற்ற வைத்துவிடுகிறது. பேராசை திருப்தியடையாத உணர்வு. அது

மனிதனை வசப்படுத்தி ஏற்கனவே நாம் பெற்றிருந்த திருப்தி உணர்வையும் விஷப்படுத்தி விடும். கட்டுப்பாடற்ற எந்த மனிதனை எடுத்துக் கொண்டாலும் அவனுக்குத் திருப்தியாய் இருந்தது என்கிற நேரமே இருக்காது. விருப்பங்கள் பூர்த்தி அடையும் போதும் அவன் மகிழ்ச்சி அடைய மாட்டான். ஏனென்ருல் போக ருசி தீவிரமடைந்து மேலும் வேண்டும் என்கிற பசி எழுந்து விடுகிறது. ஆசைகள் பங்கமாகி விட்டாலோ ஏமாற்றம் அவனுக்குக் கோபத்தை உண்டாக்குகிறது. அவன் அதன் பயனுக எரிச்சலடைகிருன்.

ஆசை, கோபம், பேராசையின் செயல்பாடுகளும் அதன் விளைவான பரஸ்பரச் செயல்பாடுகளும் இந்த விதமாக இருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டும் இந்தத் தர்க்கத்தை ஒப்புக் கொண்டால் பிறகு நாம் கிருஷ்ணன் முடிவாகச் சொல்கிருரே அதையும் தடையில்லாமல் ஒத்துக் கொள்ள வேண்டியதுதான். எனவே ஒவ்வொருவரும் இந்த மூன்றையும் விட்டுவிட வேண்டும் என்பதுதான் அவர் சொல்லும் முடிவு.

அப்படி சுயநல ஆசை, கோபம், பேராசையை விட்டவனைப் புகழ்கிறது அடுத்த சுலோகம்.

*ஏதைர் விமுக்த: கௌந்தேய தமோத்வானரஸ்த்ரிபிர் நர:*
*ஆசரத்யாத்மன: ச்ரேயஸ்ததோ யாதி பராம்கதிம்*

*16:22*

*ஏதை:—இவற்றிலிருந்து; விமுக்த:—விடுபட்டு; கௌந்தேய—ஏ, கௌந்தேயா; தமோத்வானர:—இருட்டு வாயிற்படிகள்; த்ரிபி:—மூன்று; நர:—மனிதன்; ஆசரதி—பயிலுகிருன்; ஆத்மன:—தன்னுடைய; ச்ரேய:—நலம் பயப்பது; தத:—பிறகு; யாதி—போகிருன்; பராம்—பரம்பொருளை; கதிம்—கதியை (போக்கை, லட்சிய இடத்தை)*

இருளில் உய்க்கும் இந்த மூன்று வாயில்களிலிருந்து விடுபட்டவுடன், ஏ கௌந்தேயா, அந்த மனிதன் தனக்கு எது நலம் பயக்குமோ அதைப் பயிலுகிருன். இவ்விதம் அவன் மேலான கதியை அடைகிருன்.

நரகத்துக்குப் போகும் மூன்று வாயில்களைத் தவிர்ப்பவர்கள் இங்கு பாராட்டப்படுகிருர்கள். தானே தன்னைச் சுரண்டிக் கொண்டு தானே அழிய வைக்கும் இந்த மூன்று இடைவழியிலுள்ள இடங்களில் வாழ்க்கை ரயிலை தண்டவாளத்தைவிட்டு இறக்கிவிட்டு விடாமல் தப்பிப் போகிறவர்கள் வாழ்க்கையின் இலட்சியத்தை நோக்கி ராஜபாட்டையில் போக முடியும் என்று உறுதி கூறப்படுகிறது. ஆசை, கோபம், பேராசை ஆகியவற்றிடையே சுற்றினல் சக்தி எல்லாம் வீணில் விரயமாகும். தெய்வீக

ஆற்றல்—முழுமையை அடைந்து சமநிலைப்பட்ட மனிதப் பெருமை—இவை இல்லாத போனல் சாதகன் சீக்கிரம் களைத்துப் போய், அவனுள்ளிருந்தே எழும் அறைகூவல்களைச் சமாளிக்கத் தேவையான சக்தியில்லாதவனுயிருக்கிருன். இந்திரியங்களை இழுக்கிற பொருள்கள் தரும் பலமான இழுப்பை சமாளிக்க வேண்டும் என்ருல், மனமும் புத்தியும் மனிதனுடைய உள் ஆற்றல்களுக்குப் புதுத் தெம்பை ஊட்ட வேண்டும். அப்போது தான் அவன் கஷ்டப்பட்டு முயன்று சுய வளர்ச்சி இலக்கைப் பெற முடியும். இந்த மூன்று நரக வாயில்கள் மேலும் மேலும் குழப்பங்களுக்கும் நம்பிக்கை அற்ற பதற்ற நிலைகளுக்குள் மனிதனை இட்டுச் சென்று மனித ஜன்மத்துக்குக் கீழாக இருக்கிற மகா மட்டப் பிறவிகளுள் உய்த்துவிடும். இந்த மூன்று வாயில் களை ஒதுக்குகிறவன் தனக்கு எது நன்மை பயக்குமோ அதையே பயிலுவான் என்று உறுதி கூறப்படுகிறது.

நாம் எழுதுகிற இங்கிலீஷ் மொழியில் (ஏன் தமிழிலும் கூட) சிரேயஸ் என்ற சொல்லுக்கு நேர் ஏற்றமான சொல் கிடையாது. வெறும் 'நல்லது' என்று மட்டும் அதற்குப் பொருள் இல்லை. அதற்கு இன்னும் ஆழமான விரிவான பொருள் உண்டு. நன்ருகப் பயின்று வந்தோமானல் 'சிரேயஸ்' பயிலுகிறவர்களுக்கு மட்டும் மகிழ்ச்சி தருவதில்லை. அவனைச் சுற்றிலுமுள்ள மக்கள் நல னுக்கும் கூட உதவி புரிகிறது.

இவ்விதம் சரியான பாதையில் முன்னேறி அவன் பரம லட்சியத்தை அடைந்து விடுகிருன். பண்பாட்டில் கிரமமாக முன்னேறுவது என்பது திடீரென்று அதிசயம்போல் ஒரு இரவில் நிகழ்ந்துவிடக் கூடியது இல்லை. மொட்டு வளரவேண்டும், விரிய வேண்டும், மலர வேண்டும். அதற்கு அலைவு இல்லாத சுய கட்டுப் பாடு வேண்டும். விறுவிறுப்பான படிப்பு, அதை முற்றிலுமாகப் புரிந்து கொள்ளுதல்—இம் மூன்றும் தேவையான வலிவைக் கொடுத்து உதவ வேண்டும். இந்தப் பண்பாட்டு மலர்ச்சி ஒரு மலரின் மலர்ச்சியைவிட மிகவும் மென்மையானது.

இந்த சுலோகம் 'சாதகன் எதைத் தவிர்க்க வேண்டும் என்றும் அதன் மூலம் அவன் ஆக்கப்பூர்வமான முன்னேற்றத்தை யும், உள் வளர்ச்சியையும் அடைவான்' என்று சொல்கிறது. எதையோ நிறுத்துவதன் மூலமோ, செய்யாமல் விடுகிற ஒரு செயல் மூலமோ ஆக்கபூர்வமான வளர்ச்சி எப்படி ஏற்பட முடியும்? என்று கேட்கலாம். கெட்ட உணவை நிறுத்தினல் தேக நலம் கிடைக்கலாம். ஆனல் நல்ல சக்கர வட்டமான உணவைச் சாப்பிடுகிற இன்பம் அதில் எங்கே கிடைக்கும்? அதேபோல் நம் ஆற்றல்களை ஆசை, கோபம், பேராசை இவற்றின் மூலம் சிதற வைத்து அழிப்பதை நிறுத்துவதனல் இம் மூன்றின் காரணமாக நம் மனதில் எழும் இயக்க அலைவுகளை நிறுத்தி விடலாம். ஆனல்

இதன் மூலம் நம் இடத்தில் ஆக்கப்பூர்வமான முன்னேற்றம் ஏற்படும் என்று எவ்வாறு சொல்ல முடியும்? கீதை ஒரு ஆக்கப் பூர்வமான வாழ்க்கை வழியையே கற்றுக் கொடுக்கிற நூல். இந்த சுலோகமும், அந்த மனிதன் தனக்கு எது சிரேயஸ்ஸோ (நல்லதோ) அதையே பழக்கமாகச் செய்வான் என்று குறிப்பால் உணர்த்துகிறது.

ஆக்கப்பூர்வமான அந்தப் பழக்கச் செயல் என்ன?

*ய: சாஸ்த்ரவிதிம் உத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத:*
*ந ஸஸித்திமவாப் நோதி ந சுகம் ந பராம் கதிம்* **16:23**

*ய:*—எவன்; *சாஸ்திரவிதிம்*—சாஸ்திரம் விதித்திருப்பதை; *உத்ஸ்ருஜ்ய*—விட்டு விட்டு; *வர்த்ததே*—செயல்புரிகிருனே; *காமகாரத:*—இச்சைக்கு ஆட்பட்டு; *ந*—இல்லை; *ஸ:*—அவன்; *ஸித்திம்*—பூரண சித்தியை; *அவாப்னேதி*—அடைகிருன்; *ந*—இல்லை; *ஸுகம்*—சுகத்தை; *ந*—இல்லை; *பராம்*—பரம; *கதிம்*—போக்கிடத்தை.

எவன் ஒருவன் சாஸ்திரங்கள் கூறும் விதிகளை ஒதுக்கிவிட்டு கேவலம் இச்சையின் தூண்டுதலினுல் வேலை செய்கிருனே அவன் சித்தியையும் பெற மாட்டான். மகிழ்ச்சியையும் பெற மாட்டான். பரமகதியும் கிடைக்காது.

பிராண சக்தியை மனது புத்தி இரண்டின் மூலமும் அழிகிற வகையில் செலவழிப்பதை நிறுத்தி, அந்தச் சக்தியின் ஆற்றலைத் தேக்கிய பிறகு, அதை சரியான போக்கில் செலவழிக்க வேண்டும். மறுபடியும் அந்த ஆற்றலைத் தவருகப் பயன்படுத்தினேமானுல் ஒருகால் சாதகன் பரிதாபப்படத்தக்க வகையில் இன்னும் வேகமாக மோதிக் கொண்டு இழிந்த வாழ்க்கையில் நழுவிவிட வாய்ப்பு உண்டு. புராணங்களில் வரும் ராவணன் அவன் போன்ற பலம் பொருந்திய அசுரர்கள் எல்லாம் கொடிய தவர் செய்து ஆற்றல் சேர்த்து உள் ஆற்றலை அதிகம் வளர்த்துவிட்டு அவைகளில் தங்கள் அறிவை முழுமையாகத் தேடிக் கொண்டதற்கு அவர்களே நல்ல எடுத்துக்காட்டுக்கள். இவ்வளவுக்கும் அவர்கள் தம் தலைமுறையினரை ஆட்டிப் படைத்து, அடித்து நொறுக்கி மண்ணைக் கவ்வ வைத்திருக்கும் அளவுக்கு அவர்கள் பிரமாத பலம் வாய்ந்தவர்களாக இருந்தவர்கள். அப்படியொரு ஆபத்து தனி மனிதனுக்கு வந்து விடக் கூடாது. அவனைச் சுற்றியுள்ள உலகத்துக்கும் ஏற்படக் கூடாது. அதற்கு ஒரு கடுமையான எச்சரிக்கை கொடுக்க வேண்டியது தான். இந்த இரண்டு கடைசி சுலோகங்களும் அந்த எச்சரிக்கையை விடுக்கின்றன.

துரதிர்ஷ்டவசமாக, இந்த ஆழ்ந்த கருத்து முக்கியத் துவத்தை உணராமல் அநேக விமர்சகர்கள் இந்த இரண்டு சுலோகங்களும் இடை செருகலாகப் பின்னல் ஒட்டப்பட்டது என்று கருதுகிருர்கள். அந்த முடிவுக்கு என்ன நியாயம் இருக்கிறது என்று நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லே. மனேதத்துவ ரீதியாகப் பார்த்தோமானுல், சுய முன்னேற்றத்துக்கான உத்தி, இந்த அத்தியாயத்தில் வரும் இந்த சுலோகங்கள் இல்லாமல் ஒரு முடிவில்லாததாகவும் முழுமை இல்லாததாகவும் இருக்கும்.

ய: சாஸ்த்ர விதிம் உத்ஸ்ருஜ்ய வர்த்ததே—யார் சாஸ்திர விதியை தள்ளிவிட்டு ஆசையின் தூண்டுதலில் செயல் ஆற்றுகிருனே அவன்—அப்படிப்பட்ட மனிதனுக்கு எந்தப் பயனும் கிடைக்காது. இங்கே சாஸ்திரம் என்று சொல்லும்போது குறுகிய வளேயத்தில் உள்ள வைதீகர்கள் பவித்திரமாக வலியுறுத்தி கொஞ்சம்கூட வழுவில்லாமல் காப்பாற்றி வருகிருர்களே அந்த கர்மானுஷ்டானங்களின் தொகுப்பைக் குறித்துச் சொல்வதாகக் கொள்ள வேண்டும் என்ற அவசியம் இல்லே. பிரம வித்தையைப் பற்றியும் ஆன்ம சாதனேயான யோகத்தைப் பற்றியும் சொல்லும் நூல்களுக்கு 'சாஸ்திரங்கள்' என்று பெயர். சாஸ்திரங்களே விளக்குகிற நூல்கள் பிரகரணங்கள் எனப்படும். பிரகரண க்ரந்தங்கள் வேதாந்த சாஸ்திரங்களில் சொல்லப்படும் பிரகரணங்களே (பொருள்களின் இனவகைக் கூறுகளே) விளக்குகின்றன. கீதை ஈசுவரனே அடையும் வழிகளேயும் அவற்றிற்கான விதி விளக்கங்களேயும் விவரமாகக் கூறும் வேதாந்தக் காவியம். அதனுல் அதை சாஸ்திரம் என்று சொல்லுகிறேம்.

காமகாரத: (ஆசை தூண்ட) மேலே இரண்டு சுலோகங்களிலும் விரித்துப் பேசிய பொருள் உயர்ந்த நிலேயை அடைய விரும்பும் சாதகன் இன்றியமையாத முறையில் ஆசை, கோபம், பேராசையைத் துறக்க வேண்டும் என்பதுதான். நாம் ஏற்கனவே ஆசையின் மென்னி பிடிக்கப்படும் போது கோபம், எழுகிறது என்றும், பேராசை என்பது இச்சை வெறி பிடித்தவன் இதய ஆசைகள் பூர்த்தியடைந்து பார்க்கும்போது அந்த மனேநிலேயை ஒட்டி அடுத்து எழுகின்ற ஆசை வேகம்தான் என்றும் பார்த்தோம். எனவே மூலகாரணம் ஆசைதான். இயற்கையாகவே கிருஷ்ண பகவான் கீதையில் தான் சொல்கிற வாழ்க்கை முறையை நாம் சாதாரணமாக ஆசையின் தூண்டுதலில் வாழ்ந்து வரும் முறையிலிருந்து பிரித்துக் காட்டுகிருர். கீதா சாஸ்திரம் சொல்லுகின்ற விதிகளுக்குட்பட்ட வாழ்க்கையை விட்டு விட்டு மட்டமான ஆசைகள் கீழான உணர்வுகள் இவற்றின் கட்டளேக்குட்பட்டு வாழ வேண்டாம் என்று சாதகர்களுக்கு அறிவுரை கூறப்படுகிறது.

நஸ ஸித்திம் அவாப்னோதி நஸுகம் ந பராம்கதிம் (அவன் ஸித்தியை அடைய மாட்டான் சுகமும் பெற மாட்டான்—பரம கதியையும் அடைய மாட்டான்)—கீதை காட்டு கிற வழியில் முற்றிலுமாக வாழாது போனல் சங்கடம் என்ன வரும்? புத்தி கெட்ட தனமாகவும் துஷ்டத்தனமாகவும் அந்த நல்ல வழியை மீறுகிறவனுக்கு ஏற்படும் தொல்லை இங்கே தெளிவாகக் குறிக்கப்படுகிறது. ஆசைகள் தூண்ட பேராசைகள் ஏமாற்றி இழுத்துச் செல்ல, கோபம் கிழித்தெடுக்க, இன்பம் விரும்பும் தசைகள் பாடும்பாட்டுக்கு ஏற்றவாறு மாறி மாறி ஆட்டம் போடும் மனிதன் அமைதியற்ற மன அலைச்சல்களும், குரூரமாக ஆட்டிப் படைக்கும் காம வேகங்களும் கொண்ட வாழ்வை வாழ்கிறன். அவனுக்கு சுகமும் கிடைக்காது. பண் பாட்டு உயர்வும் கிடைக்காது.

*தஸ்மாச்—சாஸ்த்ரம் ப்ரமாணம்தே*
*கார்யாகார்ய—வ்யவஸ்த்திதௌ*
*ஜ்ஞாத்வா சாஸ்த்ர விதானேக்தம்*
*கர்ம கர்த்து—மிஹார்ஹஸி* **16:24**

*தஸ்மாத்*—எனவே; *சாஸ்த்ரம்*—சாத்திரம்; *ப்ரமாணம்*—சான்று (ஆணை); *தே*—உன்னுடைய; *கார்யாகார்ய வ்யவஸ்திதௌ*—செய்ய வேண்டியது வேண்டாததை நிர்ணயிப்பதை; *ஞாத்வா*—அறிந்து கொண்டு; *சாஸ்த்ர விதானேக்தம்:*—சாத்திரம் விதித்தபடி; *கர்மம்*—கருமத்தை; *கர்த்தும்*—செய்ய; *இஹ*—இங்கே (இவ்வுலகில்); *அர்ஹஸி*—உரியவன் (நீ).

எனவே சாத்திரங்கள் நாம் செய்ய வேண்டியது என்ன, செய்ய வேண்டாதது என்ன என்பதை உறுதி செய்யும் பிரமாண மாகும். சாஸ்திரச் சட்டங்களில் சொல்லியிருப்பதை அறிந்து கொண்டு நீ இவ்வுலகில் காரியம் செய்ய வேண்டும்.

*தஸ்மாத்:* இதுவரை சொல்லி வந்த தர்க்கப்படி, அதிகப் பரிமாணமுள்ள நல்ல வாழ்க்கையைப் பெற விரும்புபவர்கள் தன் வாழ்க்கையைத் திட்டமிடுவதற்கு சாஸ்திரங்களின் சாஸனத்தை ஒத்துக் கொள்ள வேண்டும். செய்ய வேண்டியது எது; விலக்க வேண்டியது எது என்று சரியானபடி தெரிந்து கொண்டால்தான் ஒருவன் சரியான நடத்தையைத் தீர்மானம் செய்து கொள்ள முடியும். 'உண்மைக்கு ராஜபாட்டை எல்லோருக்கும் ஒன்றுதான். எனவே ஒவ்வொரு பிரயாணியும் தன் விருப்பப்படி வழியை வகுக்கிறேன் என்று தொடங்க முடி யாது. இந்தப் பாட்டையில் பல முறை சென்று அனுபவப் பட்டவர்கள்தாம் சாஸ்திரங்களை வகுத்துக் கொடுக்கிறார்கள்.

முழுமையை அடைய வழியின் வரைபடத்தை ரிஷிகள் கொடுத்திருக்கிறார்கள். நாமோ பணிவுள்ள பிரயாணிகள். எனவே உண்மையுடன் அவ்வழியைப் பின்பற்ற வேண்டும். நம்மை அனுக்ரஹிக்கப்பட்டவர்களாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

ஞாத்வா: அறிந்து: எனவே குறிக்கோளை நோக்கிப் பிரயாணம் செய்யத் தொடங்குமுன் சாஸ்திரத்தை நன்றாகப் படித்துக் கொள்ள வேண்டும். அவை ஏற்கனவே வெற்றிகரமாக நடை போட்டவர்கள் நமக்கு வழிகாட்ட என எழுதிவைத்த அறிக்கைகளாம். சென்றடைய வேண்டிய இடம், அது இருக்கும் திசை, வழியில் ஏற்படக் கூடிய சிரமங்கள் இவற்றைப் பற்றிய சரியான அறிவு தெளிவான கற்பனை இவை சாதகனுக்கு அவசியம் வேண்டிய முன் தேவைகள்.

இஹ கர்த்தும் அர்ஹஸி—இங்கே நீ செய்யக் கடமைப் பட்டிருக்கிறாய்—நூற்றுக்குத் தொண்ணூறு சாதகர்களுக்கு சாஸ்திரங்கள் பூராவாகத் தெரியும். ஆனால், பாபம்! அப்படிப் பட்ட வாழ்க்கையை வாழ எவ்வளவு குறைவான பேருக்குத் துணிவும் உறுதியும் இருக்கிறது! பரம்பொருளை அடையும்வரை தேவையான பொறுமை இருக்கிறது? எனவே இயற்கையாகக் கண்ணன் இந்த அத்தியாயத்தைப் பின்வரும் அறிவுரையுடன் முடிக்கிறார். —மனிதன் ஆசை, கோபம், பேராசையின்றி இங்கே வாழவேண்டும். இதுதான் கர்மத்தின் சரியான வழி. ஏற்கனவே ஒரு அத்தியாயத்தில் (3வது) இது முழுமையாக விவரிக்கப் பட்டிருக்கிறது.

ஓம் தத்ஸத் இதி ஸ்ரீமத் பகவத் கீதா ஸுபனிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
தைவாஸுர ஸம்பத் விபாக யோகோ நாம
ஷோடஸோத்யாய:

ஓம் தத் ஸத். ஸ்ரீமத் பகவத் கீதை என்கிற ஸ்ரீ உத்தம உபநிஷத்துக்களில் பிரம வித்தையில், யோக சாஸ்திரத்தில், ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனன் இவர்களிடையே நடந்த உரையாடலில் பதினாறாவது அத்தியாயம் முடிவடைகிறது. அதன் பெயர் (பொருளும்)

தைவ அஸுர சம்பத்துப் பிரிவு யோகம்

# ச்ரத்தாத்ரய விபாக யோகம்

## 17

### முன்னுரை

சென்ற அத்தியாயத்தில் கடைசி இரண்டு சுலோகங்களில் ஒரு கருத்து வலியுறுத்தப்பெற்றது. அதாவது சாஸ்திரங்கள் தான் நம் நடத்தைக்குப் பிரமாணம் என்பதாகும். அதாவது சாஸ்திரத்தின் தீர்ப்புத்தான் இறுதித் தீர்ப்பு. ஆனல் சாதாரண மனிதனுக்கு சாஸ்திரங்களின் வாசகங்களைப் புரிந்துகொள்ளும் அளவு அறிவுத் திறமை இருக்க முடியாது. எனவே அவனுக்கு வாழ்க்கையின் புனிதப் பயணத்தில் வழி காட்ட என, பார்த்த வுடன் புரிந்துகொள்ளும்படி வகுத்து எழுதப்பட்ட ஒரு வாய்ப் பாட்டுப் புத்தகமும் கிடைக்காது. இப்போது அர்ஜுனன் உள்ளத்தில் ''ஒரு உயர் வாழ்க்கையை அதன் எல்லா அமிசங் களிலும் சிறக்க வாழ வேண்டும்'' என்ற பசி தூண்டப்பட்டு விட்டது. அவனும் மனதுள் ஸ்ரீகிருஷ்ண தத்துவத்தை உண்மையி லேயே வாழ்ந்து சோதித்துப் பயன்பெறத் திட்டம் போட்டு விட்டான். அவன் செயல் துடிப்புக்கொண்டவன். ஆனல் சாஸ்திர அறிவை இன்றியமையாதது என்று சொன்னவுடன் அவன் அது கஷ்டம் என்று நினைக்கிருன். அதே சமயம் பவித்திரசாஸ்திரம் சொல்கிறபடி உயர்ந்த சிறப்பான வாழ்க் கையில் போதுமான அளவு சிரத்தையை வளர்த்துக் கொண்டிருக்கிருேம் என்ற நம்பிக்கையும் அவனுக்குத் தன்னிடம் இருக்கிறது.

இந்த அத்தியாயம் அவனுடைய பின்வரும் சந்தேகங்களுடன் தொடங்குகிறது. நல்ல நடத்தையுடனும் சீரில் சிறந்த ஆசைகளுடன் தன் வாழ்க்கையை சிரத்தையுடன் நடத்துகிறான் அது போதுமா? அல்லது அவன் சாஸ்திரங்களைத் தெரிந்து கொண்டு அவை கூறும் விதிகளை அப்படியே சிரத்தையுடன் பின் பற்ற வேண்டுமா?

இதற்கு முன்னும்கூட பல இடங்களில்[1] கீதையில் சிரத்தை என்பது சாதகன் மேலே ஆன்மீக உலகில் உயர்ந்து செல்லத் தேவை என்று சொல்லப்பட்டிருக்கிறது. சிரத்தைக்கு எவ்வளவு முக்கியத்துவமும் இன்றியமையாத தேவையும் கொடுக்கப் பட்டிருக்கின்றனவோ சாஸ்திரத்துக்கும் அவ்வளவு கொடுக்கப் பட்டிருக்கின்றன. எனவே அர்ஜுனன் 'சாஸ்திரங்கள் தெரியாமலேயே கண்மூடிய நம்பிக்கை மட்டுமே சாதகனை முன்னேற்றித் தொலைவில் அழைத்துச் செல்லுமா?' என்று கேட்பது சரிதான்.

மனிதன் புத்தியில் சாஸ்திரங்களைத் தெரிந்துகொண்டு அவை காட்டும் விதிகளை மதிப்பதுடன் நில்லாமல் அந்த உயர்ந்த லட்சியங்களை பூராவாகத் தனதாக்கிக் கொண்டதன் பயனால் தன்னுடைய செயல்களில் முழுமையாக அவை பிரதி பலிக்கும் படி நடந்துகொள்ள உதவும் ஆற்றல் ஒன்று உள்ளிருந்து எழும் ஒரு வலிவான ஆற்றல். அதனால் உந்தப்படும்போது தான் ஒரு மனிதனுடைய ஆளுமையின் எல்லா பாகங்களின் செயலாற்றலும் தங்கள் தங்கள் துறைகளில் சுறுசுறுப்பாக வெளிப்படுகிறது. மனிதனை முழுமையாக எடுத்துக்கொண்டால் அவனுக்குள்ள கருவிகளின் உள் அடக்கமும் சாரமுமே சிரத்தை தான். சிரத்தைதான் மனிதனுடைய தீர்மானத்துக்கு திசை, வேகம், லக்ஷியம் இவற்றை அளித்து உதவுகிறது.

இந்தக் கேள்விக்கு நேரடியாகப் பதில் சொல்லாமல் வேதாந்தி கண்ணன் மனிதனுடைய ஆகாரம், யக்ஞம், தவம், தானம் முதலிய பல துறைகளில் செய்யப்படும் முயற்சியில் காணப்படும் சிரத்தையை முழுமையாக விவரிக்கத் தொடங்குகிறார்.

விரிவுரையின் அமைப்பில் பிரபு கண்ணன் முதலில் சிரத்தை மூன்று வகை என்று சொல்கிறார். அவை மனிதனுடைய குணங்களின் தன்மைக்கேற்றவாறு அமைகின்றன. மனிதன் மனப் பாங்கு பின்வரும் மூன்று வகைகளில் அமைந்திருக்கும் 1. சாத்வீக ஆனந்தம், 2. பேராசையும் ஜுர வேகத்தில் செய்யப் படும் செயல்கள் (ராஜசம்); புத்தியற்ற சோம்பேறி வாழ்க்கை (தாமஸம்), முன்னமேயே மனிதன் மனம்—புத்தி வாழ்வை ஆட்சி

---

[1] 4ம் அத்தியாயம் சுலோகம் 39. 16வது அத்தியாயம் சுலோகம் 23

செய்து அடக்கும் இந்த குணங்களின் விவரம்[1] பூராவாக கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது இந்தக் குணங்கள் மாறுபட்ட விகிதத்தில் சேர்ந்து மனிதர்களை ஆளும்போது எவ்விதம் அவர்கள் தங்கள் சமய மதிப்பீடுகளை ஒப்ப ஆன்ம வளர்ச்சிக்கான வாழ்வை நடத்துவார்கள்? என்று விவரிக்கப் படுகிறது. இந்த அத்தியாயத்தை நாம் ஊன்றிக் கவனத்துடன் படித்து விஷயத்தைக் கற்றுக்கொண்டோமானுல் நம்முடைய இரண்டு கீழ்த்தரமான மட்டரக (ராஜஸ, தாமஸ) உணர்ச்சி களுக்கு வசப்படாமல் தப்பி உறுதியாக வெற்றிக்கு இட்டுச் செல்லும் சாத்வீகத்தை நோக்கி நம்முடைய ஆன்மீக சாதனை களைச் செலுத்த முடியும்.

*அர்ஜுன உவாச:*

யே சாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய யஜந்தே ச்ரத்தயான்விதா:
தேஷாம் நிஷ்டா து கா கிருஷ்ண ஸத்வமாஹோ ரஜஸ்தம:
*17:1*

*யே—எவர்; சாஸ்த்ரவிதிம்—சாஸ்திர விதியை; உத்ஸ்ருஜ்ய—ஒதுக்கிவிட்டு; யஜந்தே—யக்ஞம் செய்கிறுர்களோ; ச்ரத்தயா—சிரத்தையுடன்; அன்விதா:—கூடியவர்களாக; தேஷாம்—அவர்களுடைய; நிஷ்டா—நிலை; து—நிச்சயமாக; கா—என்ன; கிருஷ்ண—ஹேக்ருஷ்ணு; ஸத்வம்—சாத்வீகம்; ஆஹோ—ஆக இருக்கிறதா (அல்லது) ரஜ:—ராஜஸமா; தம:—தாமஸமா.*

*அர்ஜுனன் கேட்டான்:*

*சாஸ்திரங்கள் கூறும் விதிகளைத் தள்ளிவிட்டு யார் வேள்விகளை சிரத்தையுடன் செய்கிறுர்களோ அவர்கள் நிலை என்ன? ஏ கிருஷ்ணு, அது சாத்வீகமா, ராஜஸமா, தாமஸமா?*

சென்ற அத்தியாயத்தில் விட்ட அந்த இடத்திலிருந்தே அர்ஜுனன் விவாதத்தைத் தொடங்கி அதை மேலே செலுத்து கிறுன். இப்போது கிருஷ்ணன் அதிகபக்ஷம் பயனளிக்கக் கூடியதும் மிகவும் இயக்கம் பொருந்தியதுமான ஆன்மீக வாழ்வை எடுத்து விவரமாகக் கூறுகிறுர் அதே சமயம் தவருகக் கணிக்கப்பட்ட ஆன்மீக சாதாரண முயற்சிகளில் ஆற்றலை வீணடித்துப் பயன் தராத வகையில் நடத்தப்படும் வாழ்க்கை யிலிருந்து அதைப் பிரித்துக் காட்டுகிறுர்.

சாஸ்திர விதிகளை ஒதுக்கி விட்டு (சாஸ்த்ர விதிம் உத்ஸ்ருஜ்ய) சாஸ்திரப் புத்தகங்களில் கொடுக்கப்பட்டிருக்கும் விதிகள் சாதாரணமாக எல்லா மனிதர்களுக்கும் கிடைக்க நியாயமில்லை. கிடைத்தாலும் அவற்றைப் புரிந்து கொள்ளும்

---

[1] *14வது அத்தியாயம் — முக் குணங்கள்*

புத்தி ஆற்றல் மிகச் சிலருக்கே இருக்க முடியும். வெளியே வாழ்க்கையில் சந்தர்ப்பங்களின் கோலாகலம்; உள்ளே குழப்பங்களும் பதற்றங்களும்—இந்த நிலையில் நம்மில் மிகச் சிலர் தான் சாஸ்திர விதிகளுக்கேற்ப நம் வாழ்வை அமைத்துக் கொள்ள முடியும். ஆனாலும் சாதகன் உண்மையானவனாக இருக்கலாம். உயரிய வாழ்க்கை முறையில் நேர்மையான சிரத்தையும் பொதுவாக உலகில் பல வகையில் கிடைக்கும் இலக்ஷியத்தில் ஆழ்ந்த நம்பிக்கையும் கொண்டிருக்கலாம். இது சாத்தியமே! அதனால்தான் இந்தக் கேள்வி எழுகிறது.

ஸ்ரீ சங்கராச்சாரியார் அவர்கள் சிரத்தை மனிதனுடைய தன்மையைப் பொறுத்திருக்கும் என்று அபிப்பிராயப்படுகிறார். ஆனால் ஸ்ரீ ராமனுஜரோ இவ்வளவு தாராளம் கூடக் காட்டவில்லை. ''அறியாமையாலேனும் சாஸ்திரத்தை அவமதிக்கிறவர்கள், அவர்களிடம் சிரத்தை இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, கண்டிக்கத் தகுந்தவர்களே'' என்று அவர் கண்டிக்கிறார்.

யஜந்த: செயல்கள் (யக்ஞங்கள்) செய்கிறவர்கள்—இந்த யக்ஞம் என்ற சொல் வைதீக முறையில் செய்யப்படும் யாகங்களை மட்டுமே குறிக்கின்றது என்று கொள்ளவேண்டியதில்லை. கீதை தன் அளவில் முழுமையான சாஸ்திரம். எனவே அதில் உள்ள வார்த்தைகளுக்குத் தனிப் பொருள்கள், இலக்கணங்கள் உண்டு. இந்த யக்ஞம் என்ற சொல்லுக்கு ஏற்கனவேயே பின்வரும் இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. சமூகத்தில் மறைந்து கிடக்கும் சம்பத்தையும் வளத்தையும் வெளித் தோன்றச் செய்யும் சமூகத்தின் ஒவ்வொருவரும் மற்றவருடன் சேர்ந்து கூட்டாகச் செய்யும் முயற்சிகள் எல்லாமே 'யக்ஞம்' தான்* எனவே மனிதன் தன் வாழ்வின் பொது நன்மைக்கு எனச் செய்யும் எந்த சுயநலமற்ற செயலும் 'யக்ஞம்' என்ற வகையில் அடங்கும். இந்த வாழ்வின் பின்னல் உயிர்ப்புடன் இயங்கிக் கொண்டிருக்கும் மனதுக்கு ஆறுதல் அளிக்கும் இசை லயத்தை உணராத ஒருவன் பற்றும் சுயநலமும் அற்று உலகில் செயலாற்றும்போது தனக்கு ஏற்படும் மனதின் அலைகளிலிருந்து, பதற்றங்களிலிருந்து தப்ப முடியுமா? அவன் நிலை எப்படி இருக்கும்? இடையிலேயே ஒரு பகுதி வாக்கியத்தின் மூலம் அர்ஜுனன் ''அந்தச் செயல்கள் சாத்வீகம் (அதர்ம நிலை) என்ற வகைக்குள் அடங்குமா? அல்லது (சுறுசுறுப்பான கர்மம்) ராஜஸம் என்ற வகைக்குள்ளா அல்லது மடத்தனமான, அர்த்தமில்லாத செயல்கள் தாமஸ வகைக்குள்ளா?'' என்றும் கேட்கிறான்.

---

* அத்தியாயம் 3

மனித முயற்சிகள் ஒவ்வொன்றிலும் மூன்று வகைகள் உண்டு. கண்ணன் கொடுக்கும் பதில் அவற்றைப் பற்றி, முழுமையும் அடக்கி, விஸ்தாரமாக இருக்கிறது.

ஸ்ரீபகவானுவாச

த்ரிவிதா பவதி ச்ரத்தா தேஹினாம் ஸா ஸ்வபாவஜா
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ச்ருணு

*17:2*

ஸ்ரீ பகவான் சொன்னார்:

த்ரிவிதா—மூவிதமாக; பவதி இருக்கிறது; ச்ரத்தா—நம்பிக்கை (சிரத்தை); தேஹினாம்—உடல் எடுத்தவர்களுடைய; ஸா—அது; ஸ்வபாவஜா—இயற்கையில் உண்டானது; ஸாத்விகீ—பவித்திரமானது (சுத்தமானது) சாத்துவிகமானது; ராஜஸீ—ராஜஸமானது (ஆவல் பரபரப்புக் கொண்டது) ஏவ—அதே போல் (மேலும்) தாமஸீச—(இருள் கொண்டது) தாமஸமானதும்; இதி—என்று; தாம்—அதை; ச்ருணு—கேட்டுக் கொள்.

உடல் எடுத்தவருடைய இயல்பாக உள்ள சிரத்தை சாத்துவிகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்று விதமானது. அதை இப்போது கேள்.

தன் விளக்கவுரைக்கு முன்னுரையாக பகவான் சிரத்தை மூன்று விதமானது என்று சொல்கிறார். [1] தெய்வீகமானது; [2] தெய்வீகமல்லாதது; [3] அரக்கத்தனமானது. சிரத்தை நம்முடைய கருத்துப் பதிவுகளின் இழையமைப்பை நிர்ணயம் செய்கிறது. அந்த இழையமைப்புக்கேற்றவாறே வாழ்க்கையைப் பற்றி நாம் கொள்ளும் பார்வைக் கோணம் அமையும். எனவே ஒரு மனிதனுடைய உடலளவில் செயல்கள், மனப்பாங்குகள், புத்தியில் அமையும் கருத்துக்கள் எல்லாம் அவன் தனக்குள் வளர்த்துக்கொண்டு நிலையாக்கியிருக்கும் சிரத்தையின் வகைக் கேற்றவாறுதான் அமைய முடியும். சிரத்தை தவறான வகையினதாக இருந்தால் அவன் ஆளுமை வெளியாகும் எல்லாத் துறைகளிலும் எல்லாச் செயல்களும் அழகின்றிக் குரூரமாகத் தான் இருக்கும். உள்ளப் பாங்கு எப்படியோ அப்படித்தான் மனிதன் இருப்பான். உடல் உறையுடன் ஒருவன் எவ்வளவுக் கெவ்வளவு தன்னைப் பிணைத்துக் கொள்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் உள்ளப் பாங்குக்கேற்றவாறே அவன் 'அஹம்' நிலையும் பருமனாகிவிடும். மனிதன் நடத்தைக்கு உருத்தரும் உள்ளப் பாங்குகள் மூன்று: * சாத்விகம், ராஜஸம், தாமஸம் ஆகும்.

---

* இவற்றைப் பற்றிய விஸ்தாரமான விவரத்துக்கு 14வது அத்தியாயத்தைப் பார்க்கவும்.

நாம் எதற்காக இந்த மனநிலைகளைப் புரிந்துகொள்ள வேண்டும்? சிரத்தையின் வகைகளையும் அவை வாழ்க்கையில் ஏற்படுத்தும் மாறுதல்களையும் எதற்காகத் தெரிந்துகொள்ள வேண்டும்? வருகிற சுலோகத்தில் அவை விளக்கப்படுகின்றன:

ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத
ச்ரத்தாமயோயம் புருஷோ யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ:
17:3

ஸத்வானுரூபா—இயற்கைத் தன்மைக்கு ஏற்றவாறே; ஸர்வஸ்ய—எல்லோருடையவும்; ச்ரத்தா—சிரத்தை; பவதி இருக்கிறது; பாரத—ஏ பாரதா; ச்ரத்தாமஸ:—சிரத்தை மயமாக; அயம்—இந்த; புருஷ:—மனிதன்; ய:—எவன்; யச்ச்ரத்த:—சிரத்தை எதோ; ஸ: ஏவ—அவனே; ஸ:—அதாக இருக்கிறான்.

ஒவ்வொருவனுடைய சிரத்தையும் அவன் இயற்கைத் தன்மைக்கு ஒத்தே இருக்கும். ஏ (பரத குலத் தோன்றலே) பாரதா! மனிதன் சிரத்தையே (சிரத்தை மயமானவன்). அவன் சிரத்தை எப்படியோ அப்படியே அவனும் இருக்கிறான்.

(சத்வானுரூபா) அவன் இயற்கைக்கு ஒத்தே: தனித் தனியாக ஒவ்வொரு மனித உள்ளத்தையும் ஊட்டி வளர்க்கும் சிரத்தையின் வகை வெகுவாக மாறுபட்டு இருப்பதைப் பார்க்கிறோம். இந்த மாறுபாடுகளைக் கவனிக்கக் கவனிக்க ''இது ஏன்?'' என்று விசாரிக்கத் தோன்றுகிறது. கீதையில் பகவான், ''ஒவ்வொருவன் இதயத்திலும் (உள்ளத்திலும்) தோன்றும் சிரத்தை அவனுடைய தன்மைக் கொத்தவாறேதான் இருக்கும்'' என்கிறார். சிரத்தை இயற்கையை நிர்ணயிக்கிறதா? அல்லது இயற்கை சிரத்தைக்கு உருக் கொடுக்கிறதா? இது சொல்வது கடினம். ஏன் என்றால் இரண்டும் மிகவும் இணைந்து இருக்கின்றன. என்றாலும் ஒவ்வொன்றும் மற்றொன்றாலேயே உருக் கொடுக்கப்படுகிறது.

அது எப்படியானாலும் கீதையோ, 'மனிதனின் சுபாவம் தான் அவன் சிரத்தையை ஆள்கிறது'' என்று கூறுகிறது. சில சமயம் சிரத்தையின் தன்மையைத் திருத்தி மாற்றி அமைத்துவிட முடியும். வலி தரக்கூடிய அனுபவங்கள் ஏற்படும்போது சிரத்தை மாறலாம். அப்போது சுபாவம் புதிதாக ஏற்பட்ட சிரத்தைக்கு சிரம் தாழ்த்தி அதற்கேற்றபடி மாறும். இது சில சமயம்தான். ஆனால் பொதுவாக ஒவ்வொரு மனிதனுடைய சிரத்தையும் அவனுடைய அடிப்படை அமைப்புக்கு அதாவது அவனுடைய பெரும்பான்மைப் பண்புக்கு ஏற்றவாறே நிறமும் தோற்றமும் கொண்டிருக்கும். 'அஹம்' தத்துவத்துக்கு ஒரு சக்தி உண்டு.

அதைக் கொண்டுதான் இந்த 'அஹம்' தன் முடிவுகளில் அபார நம்பிக்கை வைத்து சரியாக தானே திட்டமிட்ட வழிகளில் நிச்சயமான, ஏற்கனவே முடிவு செய்யப்பட்ட லக்ஷியத்தை அடைகிறது. இந்த சக்தியில் தான் சிரத்தையின் 'சாரம்' இருக்கிறது.

மனிதனுடைய சாரமான செயலாற்றல் திறமையே ஒரு குறிப்பிட்ட (காரியத்தில்) முடிவில் சிரத்தையை நிர்ணயிக்கிறது. பிறகு இந்த நம்பிக்கை (சிரத்தை) அந்தத் திறமையைத் திருப்பி பாதிக்கிறது. அப்போது அது திறமையின் போக்கை நிர்ணயிக்கிறது. அப்போது சிரத்தை மனிதன் சத்துவத்தையே பாதித்து மாற்றுகிறது. இரண்டும் பரஸ்பரம் ஒன்றை ஒன்று பாதிக்கின்றன. பேராசிரியர் நிஹாரப் சந்த் இந்த சுலோகத்தைப் பற்றிச் சிந்தித்துச் சொல்லும்போது ''ஒன்றின் தன்மை மற்ருென்றுக்கு ஒரு அறிகுறிப்பு காட்டுகிறது!'' என்கிருர். மனிதனுடைய சுபாவம் மற்ற இரண்டுக்கும் மேலோங்கி யிருக்கும் ஒரு குணத்துக்கு ஏற்றவாறு இருக்கிறது என்ற விஷயம் ஏற்கனவே விவரிக்கப்பட்டிருக்கிறது.[1]

குறிப்பிட்ட மனப்பாங்கு வலுப்படுத்தப்படும் போது ஏதோ ஒரு குணம் குழந்தைப் பருவத்திலிருந்தே மற்ற இரண்டு குணங்களேயும் அடக்கி தான் மேலோங்கி வளர்ந்து விடுகிறது. இதைத் தான் இங்கே 'சத்துவம்' என்று கூறப்பட்டிருக்கிறது. அந்த சத்துவத்துக்கு அனுரூபமாக (அதனுல் அமைத்துத் தரப்படும் தோற்றமுடையதாக) அவனுடைய சிரத்தை அமைகிறது.

ஒரு மனிதனிடமுள்ள சிரத்தை: மனிதன் இந்த சிரத்தை யைத் தன் அமைப்பில் கொண்டு இந்த சிரத்தையில் வாழ்கிருன். ஏற்கனவே கண்ணன் 'பக்தன் தொடர்ந்தும், போதிய அளவு தீவிரத்துடனும் ஒரு பயனேப் பெற வேண்டும் என்று முயன்ருல் அவன் தான் பக்தி செய்யும் என் இடத்தை அடைகிருன்!'' என்று சொல்லியிருக்கிருர்.

மனிதன் சிரத்தை எவ்வாருே அவ்வாறே அவன் (யோ யச்சரத்தா ஸ ஏவ ஸ:) மனிதன் உண்மையிலேயே அவன் சிரத்தைதான். அவன் ஆளுமையின் தன்மையும் அவன் திறமையுடன் இருக்கிருனு இல்லேயா என்பதும் அவன் எந்த 'சிரத்தை'யைக் கொண்டு வாழ்கிருனே அதற்குக் கட்டுப்பட்டே

---

[1] 14 வது அத்தியாயம்—சுலோகம் 10

[1] அத்தியாயம் 7 சுலோகம் 20—23.

இருக்கும். [2] ''ஒரு மனிதன் எந்த வகையான சிரத்தையுடன் தன் செயல்களைச் செய்கிறானோ அந்தச் சிரத்தைதான் அவன் வாழ்க்கையின் வெற்றிகளுக்கு உருவும், அமைப்பும் கொடுக்கிறது'' என்ற விஷயத்தை செயல் வீரர்கள் அனைவரும் அறிவர். அவர்கள் இதைப் புரிந்துகொண்டும் இருக்கிறார்கள். கீதை தன் வாயாலும் இதை முன்னால் ஒரு அத்தியாயத்தில் விவரமாக விளக்கியிருக்கிறது.[3]

யஜந்தே ஸாத்விகா தேவாந்ய க்ஷரக்ஷாம்ஸி ராஜஸா:
ப்ரேதான் பூதகணாம்ச்சாந்யே யஜந்தே தாமஸா ஜனா:

17:4

யஜந்தே—பூஜிக்கிறார்கள்; ஸாத்விகா:—சாத்துவிக (நேர்மையான சாது) மனிதர்கள்; தேவான்—தேவதைகளை; யக்ஷரக்ஷாம்ஸி—யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும்; ராஜஸா:—ராஜஸ (தீவிர ஊக்கமுள்ள) மனிதர்கள்; ப்ரேதான் பூதகணான்—பிரேத பூத கணங்களை; ச—மேலும்; அன்யே—மற்றவர்கள்; யஜந்தே—பூஜிக்கிறார்கள்; தாமஸா ஜனா:—தாமஸ மனிதர்கள்.

சாத்துவிக மனிதர்கள் (நல்ல தூய குணமுள்ளவர்கள். தேவதைகளைப் பூசிக்கிறார்கள். (ஊக்கமும் தீவிரமும் கொண்ட) ராஜஸ மனிதர்கள் யக் ஷர் களையும் ராக்ஷஸர்களையும் பூசிக்கிறார்கள். மேலும் மற்றவர்கள் அதாவது தாமஸ மனிதர்கள் (இருள் போன்று கறுத்தவர்கள்) பூத கணங்களையும் பிரேத கணங்களையும் பூசிக்கிறார்கள்.

சாத்வீக மனிதர்கள் தேவதைகளை பூசிக்கிறார்கள்: ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்வில் ஏதோ ஒரு வழிபாட்டுக்குரிய இடத்தில் தன் முழு பக்தியையும் செலுத்தி தான் செய்யும் பூஜையிலிருந்து கிடைக்கும் நன்மைகளைத் துய்க்க விரும்புகிறான். சாஸ்திரங்களில் இதை பூஜை, (யாகம்) என்று சொல்கிறோம். இதற்கு 'ஏதோ ஒரு தேவதையை அல்லது கடவுளை வணங்கி சடங்குகளின் மூலம் பூசை செய்து வழிபடுவது' என்று மாத்திரம் பொருள் கொள்ள வேண்டியதில்லை. இந்தச் சொல்லுக்கு விரிவான பொருள் கொள்ள முடியும். நம்முள் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு 'வழிபாட்டுப் பொருளை'ப் பூசிக்கிறவரே! நாஸ்திகர்கள் கூட பூசிக்கிறவர்கள்தான். ஆம்... அவர்கள் இந்திரிய விஷயங்களை அல்லது, பணம், பதவிகளைப்

---

[2] பிளாட்டோ சொல்கிறார்: நம் ஆசைகளின் போக்கு எப்படியோ, நம் ஆத்மாக்களின் தன்மை எப்படியோ அப்படியே நம்மில் ஒவ்வொருவரும் ஆகிறோம்.

[3] அத்தியாயம் 9—23'ம் சுலோகம்

பூசைப் பொருளாகக் கொள்கிருர்கள் என்று சொல்லலாம். இந்தப் பரந்த பொருளை மனதில் கொண்டு சுலோகத்தை மீண்டும் படித்தால் சுலோகத்தின் பொருள் உண்மையிலேயே மிகத் தெளிவாகி விடும். சாத்துவிக மனிதர்கள் தெளிந்த அமைதியும், சாந்தமான குணமும் கொண்டவர்கள். அவர்கள் தெய்வீகத்தில், அதாவது பண்பில் உயர்ந்த விருப்பங்கள், பெருமைக்குரிய சிறந்த குணங்கள் இவற்றில் தன் வாழ்வின் முழுமையை அடைய முயலுகிருர்கள். எனவே, இயற்கையாக அவர்கள் அவற்றைத் தேடி அவற்றைப் பூசிக்கிருர்கள் (அதாவது ஈடுபட்டு அவற்றின் வழி நடக்கிருர்கள்).

ராஜஸ மனிதர்கள் யக்ஷ, ராக்ஷஸர்களைப் பூசிக்கிருர் கள்: ஊக்கமும் தீவிரத் துடிப்பும் கொண்ட ராஜஸ மனிதர்கள் பெரும் ஆசை கொண்டவர்கள். தங்கள் வேலையில் அமைதி இல்லாமல், பரபரப்புடனும், ஆத்திரத்துடனும் துடிப்புடனும் ஈடுபடுபவர்கள். அவர்கள் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் (அதாவது அரைகுறைத் தேவதைகளை) வழிபடுகிருர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே குறிப்பிட்டிருக்கிற கருத்து என்ன என்ருல் பக்தன் உள்ளம் எதை மௌனமாகக் கோரிக் கேட்கிறதோ அவற்றிற்கேற்றவாறு தான் அவன் ஈடுபட்டு வணங்கிப் பூசிக்கும் தேவதையும் இருக்கும். உடை வாங்க விரும்பி யாரும் புத்தகக் கடைக்குப் போக மாட்டார்கள். அதே போல் பரபரப்பும் துடிப்பும் கொண்ட ராஜஸ மனிதர்கள் தங்களைப் போல் சுறுசுறுப்பு, பரபரப்பு, ஊக்கம் துடிப்புக் கொண்ட கீழ்மட்டத்திலுள்ள தேவதைகளைத் தான் மதித்து வேண்டுவார்கள்.

யக்ஷர்களைக் ''குபேரங்களுடைய சகோதரர்கள்'' என்று சொல்கிருர்கள். இது ஒரு சுவையான தகவல். குபேரன் சொர்க்கத்தின் 'நிதி மந்திரி!' ராக்ஷஸர்கள் ஆற்றலும் பலமும் கொண்டவர்கள். செயலூக்கமும் ''வெற்றி வேண்டும், பிரமாதமாகச் செய்து முடிக்கவேண்டும்'' என்ற விருப்பமும் கொண்டவர்கள். பணக்காரர்களின் சகோதரர்களையும் ஆற்றலும் பலமும் கொண்டவர்களையே நிச்சயம் நாடிச் சேர்வார்கள். நீங்கள் எங்கே திரும்பினுலும் இந்தக் கோட் பாட்டின் உண்மை நன்ருக நிரூபிக்கப்படுவதைக் காண்பீர்கள்.

தாமஸர்கள் பிரேதங்களையும் பூதங்களையும் வேட்கிருர்கள்: உருப்படியான செயல் செய்ய விரும்பாத ஆனுல் மட்டமான செயல்களில் ஈடுபடவிரும்புகிற சோம்பேறிகள் இறந்தவர்களின் ஆவிகள், கீழ்த்தர துஷ்ட துர்தேவதைகளை வேண்டி பூசை செய்கிருர்கள். அவர்கள் விருப்பத் தூண்டுதல்கள் மட்டமானவை. அவர்கள் மிகவும் மட்டமான தசையின்பங்களைத் தேடுகிறவர்கள். மிக மட்டமான நெறி

முறைகள் கொண்டவர்களும் அபத்தமான கல்வி பெற்றவர்களும் தங்களுடைய கொலைகார விருப்பங்களை சமூகத்தின் மோசமான, பழிவாங்கும் குணமுடைய சக்திகளான பிரேத பூதங்கள் உதவியுடன் நிறைவேற்றிக் கொள்ளவே முயலுவார்கள். அவர்கள் உடலுடன் உயிர் சேர்ந்து இருந்தாலும் வாழ்க்கையின் இனிய நல்லவைகளை அறியாதவர்கள். அறிந்தாலும் புரிந்துகொள்ளும் ஆற்றல் செத்தவர்கள். இவர்கள் குண்டர்கள். சிறைப் பறவை களிடமிருந்து பொறுக்கி எடுக்கப்படுகிறவர்கள். இவர்கள் தாம் தாமஸ குணம் படைத்தவர்கள். தங்கள் அசிங்கமான கொலைகாரப் பேராசைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்கென்று பொறுக்கி எடுக்கத் தக்கவர்கள்!

இந்தக் கருத்து முன்னமேயும் பல சுலோகங்களில்* வெளியிடப்பட்டிருக்கிறது. நவீன மனிதன் பூதங்களும் பிரேதங்களும் உண்மையிலேயே உள்ளனவா என்று அறிய விரும்புவான். இங்கே கீதையைப் புரிந்துகொள்ள அந்தச் சர்ச்சை தேவையில்லை. நம்முடைய இந்த உலகில் சில வகை சக்திகளை அவை சுட்டுகின்றன.

நல்ல நண்பர்களிடமிருந்து பெரும் உதவி, பணம், சக்தி படைத்தவர்கள் நிழலில் அண்டுதல், மட்டமான, யோசனையற்ற, கொலைகார எண்ணங்கள் கொண்ட துஷ்டர்களிடமிருந்து வேண்டப்படுகிற அபாரமான பலம், இவை 'பூஜைப் பீடத்தின்' வகைகள். முறையே அவற்றை சாத்வீகர்களும், ராஜஸர்களும் தாமஸர்களும் வேட்கிறார்கள். ஒரு மனிதன் செயல்களத்தைக் கவனித்தால் அதன் தன்மையிலிருந்தே ஒரு பெரும் அளவு அவன் எந்த வகையைச் சேர்ந்தவன் என்று தெரிந்து கொள்ளலாம்.

பக்தி அல்லது பணிவுடன் கொள்ளும் மதிப்பும் ஈடுபாடும் மனிதர்களிடையே ஒரே தரத்ததாக இருக்கும் போதும் கூட ஒவ்வொருவனும் அவன் சிரத்தையின் வகைக் கேற்றவாறுதான் தன் 'பக்தி பீடத்தை'ப் பொறுக்கி எடுத்துக் கொள்கிறான் என்று மேலே சொல்லப்பட்டது. முயற்சியின் தவறான வழி அடுத்து சொல்லப்படுகிறது.

அசாஸ்த்ர விஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜனா:
தம் பாஹங்கார ஸம்யுக்தா: காமராக பலான்விதா:

17:5

---

* 7வது அத்தியாயம் 20—23 சுலோகங்கள். 9வது அத்தியாயம் 23—25 சுலோகங்கள்.

அசாஸ்த்ர விஹிதம்—சாஸ்திரங்களில் விதிக்கப்படாத; கோரம்—பயங்கரமான; தப்யந்தே—இயற்றுகிறார்கள்; யே—யார்; தப:—தவம்; ஜனா:—மக்கள்; தம்பாஹங்காரஸம்யுக்தா:—பொய்ப் பெருமை, அகங்காரத்துடன் கூடியவர்கள்; காமராகபலான்விதா:—வெறி ஆசை, பிடிப்பு இவற்றின் பலத்தால் தூண்டப்பட்டவர்கள்.

எவர் சாஸ்திரங்களில் சொல்லப்படாத பயங்கரமான தவங்களை (கோரமான உடல் வருத்திச் செய்யப்படும் சாதனைகளை) பொய்ப் பெருமை, அஹங்காரத்துடன் கூடி, வெறிப் பேராசை, பற்று இவற்றின் பலத்தால் தூண்டப்பட்டுச் செய்கிறார்களோ—

கர்ஷயந்த: சரீரஸ்த்தம்
பூதக்ராமம சேதஸ:
மாம்(ச்)சைவாந்த: சரீரஸ்தம் தான்
வித்த்யாஸுர நிச்சயான்

17:6

கர்ஷயந்த:—சித்திரவதைக்குள்ளாக்கிக் கொண்டு; சரீரஸ்தம்—உடலுக்குள்ளேயுள்ள; பூதக்ரஸம்—எல்லா பூததத்துவங்களையும்; அசேதஸ:—புத்தியில்லாதவர்கள்; மாம்ச ஏவ—என்னையும் கூட; அந்த: சரீரஸ்த்தம்—உள்ளே சரீரத்தில் இருக்கிற; தான்—அவர்களை; வித்தி—தெரிந்துகொள்; ஆஸுர நிச்சயான்—அசுர நிச்சயம் கொண்டவர்கள்.

மேலும் புத்தியில்லாத தனமாக உடலின் எல்லா பௌதிக தத்துவங்களையும் அவற்றுடன் சரீரத்தில் உள்ளே இருக்கிற ''என்னை''யும் சித்திரவதை செய்துகொண்டு (தவம் இயற்று கிறார்களோ) அவர்களை அசுர நிச்சயம் கொண்டவர்கள் என்று அறி.

அதிகப்படியான உற்சாகத்தால் உடலும் களைத்துவிடும். உள்ளமும் சோர்ந்துவிடும். அது தான் நடக்கும் சமயத்தின் பேரால் செய்யப்படுகிறது என்பதாலேயே தவறான முயற்சி களில், புத்தி கெட்டத்தனமாக சக்தியைச் செலவிடுவதால் ஆன்மீக மலர்ச்சி ஒன்றும் நிகழ்ந்துவிடாது. சாதகர்களில் பெரும்பாலானவர்கள் தங்கள் சக்திகளைத் தவறாக ஈடுபடுத்து கிறார்கள் அதன் பயனாக துயருறுகிறார்கள். அதனால்தான் ஸ்ரீ கிருஷ்ணன் அசட்டு சாதகன் நிலையைச் சொல்லி அவன் புத்தியற்ற முறைகளைக் கேலி செய்வது எளிது என்று எண்ணு கிறார்.

பீமன் போன்ற சரீரம் படைத்தவர்களுக்கு சில சமயம்

உடலுக்குக் கட்டுப்பாடும், சுயமறுப்பும் சொல்லப் பட்டிருக்கிறது, உண்மைதான். ஆனால் அதுவும் குறைவான காலத்துக்கே. அதே சமயத்தில், ''எந்தவிதமான சுய(வசதி) மறுப்பும் ஒரு தவம் (கடுமையான விரதங்கள்) ஆகும். அதைப் பின்பற்றுவதால் உன் ஆளுமையின் கிரியாபூர்வமான மறு மலர்ச்சி ஏற்பட்டுவிடும்'' என்று எண்ணுவது சரியுமில்லை உசிதமு மில்லை. விரதங்கள் அறிவுபூர்வமாக இருக்கவேண்டும். எனவே இவற்றைப் பற்றி எடுத்துச் சொல்லும் புனிதமான சாத்திர நூல்களில் சொல்லப்பட்டிருக்கிற விதிகளுக்கு எதிராக இருக்கக் கூடாது.

சிலர் வெறும் காட்சிக் கோலத்துக்காகவே விரதங்கள் ஏற்றுக்கொண்டு காக்கிறார்கள். அஹங்காரத்துக்கும் தம்பத்துக்கும் (வீண் போலிப் பெருமைக்கும்) ஆட்பட்ட மனிதர்கள் விரதங்களுக்கு உரியவரல்லர். அவர்கள் புலனின்பத் திடமும் புறப் பொருள்களிடமும் எல்லையில்லா விருப்பம் கொண்டவர்களாக இருக்கும் வரை மன அளவில் விரதம் இயற்றத் தகுதி இல்லாதவர்கள். அவர்களால் விரதங்களை ஒழுங்காகக் காக்க முடியாது.

அப்படிப்பட்டவர்கள், அப்படி ஒரு கால் விரதங்கள் இருந்து, அந்தத் தவத்தின் பயனாக கொஞ்சம் உள்ளே சக்தி கொண்ட வேகத்தை வளர்த்துக் கொண்டாலும், அவர்கள், முரட்டுக் கருத்துக்கள் உடையவர்களானபடியால் புதிதாகக் கிடைத்த இந்த சக்தியைத் தவறான முறைகளில் பயன்படுத்தி முடிவில் தங்கள் அழிவையே ஏற்படுத்திக் கொண்டு விடுவார்கள். புராணங்களில் வரும் ராக்ஷஸர்கள் இதற்கு ஏற்ற எடுத்துக் காட்டுகளாவர். இப்படிப்பட்ட விரதங்கள் காப்பவர்கள், சரியான சாஸ்திர விதிகளை அலட்சியம் செய்து தவம் புரிகிறவர்கள், 'அசுர' வகையைச் சேர்ந்தவர்களாவர்.

உடலில் உள்ளே இருக்கும் என்னை: அப்படிப்பட்ட வருத்தக் கூடிய நோன்புகள் சரீரத்தின் பௌதிகத் தத்துவங்களை சித்திரவதைக்குள் ஆக்குகின்றன. அத்துடன் நிற்காது அவர்கள் செய்கை. ஆனால் அது உள்ளேயுள்ள புனிதமான தெய்வப் பிரபுவையும் சங்கடத்துக்குள்ளாக்கி விடும். உயிரே மூச்சுத் திணறிவிடுகிறது. அதாவது இப்படி சிதறி நொறுங்கிய உடலின் மூலம் உயிர் தன் முழுமையான ஆற்றலை வெளியிட முடியாது. எல்லைக்கு மீறிய தவம் அசட்டுத்தனமானது. அது இங்கே கண்டிக்கப்படுகிறது. புத்திசாலித்தனமான அடக்கம் தான் தவம். கொடுமையான சுயச் சித்திரவதை அல்ல!

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய:
யக்ஞ்ஸ்தபஸ்ததா தானம் தேஷாம் பேதமிமம் ச்ருணு

17:7

ஆஹாரா:—உணவு; து—உண்மையில்; அபி—கூட; ஸர்வஸ்ய—எல்லோருடையவும்; த்ரிவிதா—மூன்று வகை; பவதி—இருக்கிறது; ப்ரிய:—பிரியமான; யக்ஞ:—யாகம்; தப:—தவம்; ததா—அவ்வாறே; தானம்—தானம்; தேஷாம்—அவைகளின்; பேதம்—வித்தியாசத்தை; இமாம்—இதை; ச்ருணு—கேள்.

எல்லோருக்கும் இஷ்டமான உணவும் மூன்று வகைப்படும். அதே போல் (தான் வேள்வி (பூஜை நோன்பு, விரதம், வழிபாடு) தவம், தானம் அவையும் (மூன்று வகைப்படும்.) அவற்றின் இந்த வித்தியாசத்தைக் கேட்டுக் கொள்.

பகவான் கண்ணன் தான் சொல்லப் போகிற விஷயத்தைப் பற்றி அறிமுகப்படுத்த தான் விவரிக்க இருக்கும் தலைப்புக்களை எண்ணிச் சொல்கிறார். ஒருவன் ஈடுபடும் செயலின் எல்லாப் பகுதிகளிலும் அவன் மனத்தையும் சிந்தனை வாழ்க்கையையும் ஆளுகின்ற மனதின் தன்மை வெளியாகிறது. அதாவது மனப்பாங்குக் கேற்றவாறுதான் அவன் செயல்கள் இருக்கும். ஏன் என்றால் மனப்பாங்கின் பாதிப்புக் கேற்றவாறே ஒருவன் மனமும் அவன் சிந்தனை வாழ்க்கையும் அமைய முடியும். அவன் தேர்ந்தெடுக்கும் உணவு வகைகள், நண்பர்கள், அவன் உள்ளத்தில் ஏற்படும் உணர்ச்சிகள் வாழ்க்கையைப் பற்றி அவன் கொள்ளும் பார்வைக் கோணம் எல்லாமே சாதகன் எந்த வகையைச் சேர்ந்தவன் என்று காட்டித் தருபவைகளே. உண்மையில் பார்க்கப் போனால் இந்த நில உலகின் மேல் வசிக்கும் யாரும் இம்மூன்று குணங்களில் ஒன்று மேலோங்கி யிருப்பவர்களாகவே இருப்பார்கள். அதனால் அவர்கள் இம் மூன்று (சாத்வீக, ராஜஸ, தாமஸம் என்கிற) வகையினர்களுள் ஒன்றின் பால் படுபவர்களாகவே இருப்பார்கள்.

யக்ஞம், தவம், தானம்: ஒரு சாதகன் அவன் தேர்ந்தெடுக்கப்படும் உணவின், உள் தூண்டுதல் பெற்று அவன் செய்ய விரும்பும் வேள்வியில், தேவை மறுப்பு விஷயத்தில், கொடுக்கும் தானத்தின் தன்மை, பரிமாணம் ஆகியவற்றில் எல்லாவற்றிலும் தன்னுடைய ''வகையை''க் காட்டி விடுவான். அதாவது அந்த வகைக்கு முழுமையும் ஒத்தே அவன் உணவு, தவம், தானம் முதலியன இருக்கும்.

ஒருவனுடைய குணம் அவனை ஆட்டி வைக்கும். அவன் தடுக்க முடியாதபடி அதற்கு உட்பட்டே நடந்து கொள்வான். அப்படிப் பட்டவன் உள் தன்மை எப்படி இருக்கும்? புறத்தே

---

கௌதம புத்தர் பின்வருமாறு தன் சீடர்களை எச்சரிக்கிறார்: கடுந்துறவு அதாவது தன்னை அதிகமாக ஒறுத்துக் கொள்ளுதல் வலிதரக் கூடியது. வேண்டாதது. பயன் ஒன்றும் இல்லாதது. அது பின்பற்றத் தக்கதல்ல. பின்பற்றக் கூடாது.

எப்படி நடந்து கொள்வான்? என்று ஆய்ந்து அலசி விவரம் இங்கே தரப்படுகிறது. இந்த சுலோகங்களைக் கையில் வைத்துக் கொண்டு, ''அவ்வப்பொழுது மற்றவரைக் கணிக்கப் பயன் படுத்தப்படும் வாய்ப்பாடு'' என்று எண்ணிவிடக் கூடாது. தனக்குத்தானே தன் ஆளுமையை எப்படி மேம்பாடு அடையச் செய்து கொள்ளலாம் என்று சொல்லும் ஆத்ம சாஸ்திரம் ஹிந்து மதம். ஆத்மாவின் அழகுருவங்களை வெளிவரச் செய்யவும், இதய ஆற்றலைப் பயன் படுத்தவும் விரும்பும் சாதகன் தாமஸ குணத்தில் மந்தத் தன்மையிலிருந்து தன்னை அழுக்கு நீக்கி பரிசுத்தம் செய்துகொள்ள வேண்டும்; ராஜஸத்தின் படபடப்புக் களிலிருந்தும் கலக்கங்களிலிருந்தும் விடுபட வேண்டும். அதே சமயம் சாத்துவீகத்தின் ஆக்கப் பூர்வமான விழித்திருக்கும் தன்மை, ஆன்ம ஒளியின் பிரகாசம் இவற்றில் தன்னை வைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

இதோ சரியான முறையில் நம் 'வகை'யை அறிந்து கொள்ள என அடையாளங்களின் தொடர் தொகுப்புக் கொடுக்கப்படுகிறது.

ஆயு: ஸத்வபலாரோக்ய
ஸுகப்ரீதி விவர்தனு:
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா
ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்விகப்ரியா: 17:8

ஆயு:—ஸத்வ பலா ரோக்ய ஸுக ப்ரிதீ விவர்தனு:—ஆயுள், தூய்மை, பலம், உடல் நலம், இன்பம், ப்ரியம்—இவற்றை வளர்க்கின்றனவையாயும்; ரஸ்யா—ரஸம் உள்ளவையாயும் ஸ்நிக்தா:—நெய்ப் பசையுடையனவும்; ஸ்திரா:—தங்க கூடியனவாகவும் (நெடுநேரம் தாங்கக் கூடியனவாகவும்) ஹ்ருத்யா:—மனதுக்குப் பிடிக்கக் கூடியனவாகவுமான; ஆஹாரா:—உணவுகள்; ஸாத்விகப்ரியா:—சாத்துவிகர்களுக்குப் பிரியமானவை.

ஆயுள், தூய்மை, பலம், உடல்நலம், ஆனந்தம், நல்ல ருசி இவற்றை அதிகரிக்கச் செய்யக் கூடியனவும், ரஸம் நிறைந்து, நெய்ப் பசை கொண்டதாகவும், மனதுக்கும் உடலுக்கும் ஸ்திர மான நிறைவைக் கொடுக்கக் கூடியதாகவும், மனதுக்கு பிடிக்கக் கூடியதாகவும் உள்ள உணவின் வகைகளே ஸாத்வீகர்களுக்கு இஷ்டமானவை.

சாத்வீக உள் தூண்டுதல்கள் உள்ள நல்ல மனிதர் களுடைய சாப்பாட்டு ருசி அதன் வகையில் தனித் தன்மை கொண்டது. அதை எடுத்து விளக்க முற்படும் கண்ணன்,

''அவர்கள் ஆயுளை அதிகரிக்கச் செய்யும் உணவு வகைகளையே தேர்ந்தெடுப்பர்'' என்கிறார். அளவில் அதிகமாக இருக்க வேண்டியதில்லை. உணவு தியானம் போன்ற முயற்சிகளுக்குத் தேவையான ஆற்றல் (வீர்யம்) அளிப்பதாக இருக்கவேண்டும். புலனுக்கு இன்பம் தரும் பொருள்களின் கவர்ச்சியைத் தடுப்பதற்கு ஏற்ற ரகசியமான பலத்தை அளிப்பதாக இருக்க வேண்டும். சாதகன் அடிக்கடி வியாதியாக விழுந்துவிட்டால் சாதனையின் கிரமம் கெட்டுவிடும். எனவே உணவு உடல் நலத்தைக் காப்பாற்றி வளர்க்கும் வகையைச் சேர்ந்ததாக இருத்தல் வேண்டும். அப்படிப்பட்டவர்கள் இயற்கையாகவே ப்ரீதியையும் உண்பதில் ஏற்படும் ஆனந்தத்தையும் அதிகரிக்கச் செய்யும் உணவையே விரும்புவார்கள். உணவு சுகத்தைக் கொடுக்க வேண்டும். சுருக்கமாக: அப்படிப்பட்ட ஆக்க குண முள்ள பெரியவர்கள் தாங்களே விரும்பி உண்ணும் உணவு தூய்மையானவாகவும் எல்லா விதத்திலும் நன்மை பயப்ப தாகவும் இருக்கும். உள்ளே சென்று தங்கி அழுகி சாப்பிடுபவன் உடல் நலம் உள்ள நலம் இரண்டையுமே கெடுத்து விடுவதாக இருக்காது.

மனிதர்கள் உண்ணும் உணவு வகைகள், அவற்றின் புற இயற்கையின் ஆதாரத்தில் வகைப்படுத்திப் பார்க்கும்போது அது நான்கு வகைகளாக அமைகின்றன. அவை—[1] ரஸம் நிறைந்தது; [2] எண்ணெய் (நெய்ப்)பசை உடையது [3] ஸ்திரமானவை(தங்கக் கூடியவை) [4] இதயத்துக்கு (மனதுக்கு) பிடித்தவை.—என்கிற நான்கு வகையாகும்.*

உணவு உண்பவன் தன்மையைப் பாதிக்கிறது என்பதில் சந்தேகமில்லை. பொதுவாக அவன் உண்ணும் உணவின் காரண மாக ஓரளவு மாற்றம் பெறுகிறான். உணவு உள் தன்மையை மாற்றுகிறது. பிறகு அது உணவின் ருசியை வலுப்படுத்துகிறது. எனவே, நாம் ஒவ்வொருவரும் இந்தப் பரஸ்பர பாதிப்பின் காரணமாக குறிப்பிட்ட சில உணவு வகைகளில் வலுவடைந்த ருசி உடையவர்களாகிறோம். அத்தகைய உணவை நம்மால் 'வேண்டாம்' என்று ஒதுக்க முடியாமல் போய்விடுகிறது. மிருகங்களைப் பார்த்தால், அவை உடல் தேவைக்கேற்றவாறு தன் உணவை மாற்றிக் கொள்கின்றன. நாய்கள், பூனைகள் சில சமயம் புற்களைக் கடிக்கின்றன. பசுக்கள் உப்புக் கட்டியை நக்கு கின்றன. மனிதர்களில் கூட குழந்தைகள் மணலைத் தின்கின்றன.

---

* சிலர் இந்தச் சொற்களை 'இனிப்பான, மிருதுவான, போஷாக்கு உள்ள, பிடித்தமான—என்றும் மொழி பெயர்த்து இப்படிப்பட்ட உணவுகள்.

[1] நல்லவர்களுக்குப் பிடித்தமானவை என்று சொல்கிறார்கள்.

கர்ப்பிணிகள் கர்ப்ப வளர்ச்சியின் பருவங்களில் தங்கள் ருசியை மாற்றிக் கொள்கிறார்கள்.[1]

ராஜஸ மனிதர்கள் உணவு ருசியைப் பற்றி பிரபு கண்ணன் பின்வருமாறு சொல்கிறார்:

கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ண ரூக்ஷவிதாஹின:
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து: க்கசோகாமயப்ரதா:

17:9

கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவிதாஹின:—கடு:—கசப்பான; அம்ல—புளிப்பான; லவண—உவர்ப்பான; அத்யுஷ்ண—மிகவும் சூடான; தீக்ஷ்ண:—காரமான; ரூக்ஷ:—உலர்ந்த; விதாஹின:—எரிச்சலூட்டும் ஆஹாரா:—உணவுகள்; ராஜஸஸ்ய—ராஜஸர்களின்; இஷ்ட:—விருப்பமான உணவுகள்; துக்க—துக்கம்; சோக—சோகம்; ஆமய வியாதி: ப்ரதா:—கொடுப்பவை.

கசப்பானவை; புளிப்பானவை, உப்பானவை, மிகவும் சூடானவை, காரமானவை, காய்ந்தவை, எரிச்சல் தருபவை—இவ்வகை உணவுகள் ராஜஸ குணம் உள்ளவர்களுக்கு இஷ்டமானவை; வலி, துயரம், வியாதி தருபவை.

சக்தித் துடிப்பும் உணர்ச்சிவேகமும் கொண்டவர்களான ராஜஸ மனிதர்கள் விரும்பும் உணவு வகைகள் மூக்கைப் பொசுக்கும் வாசனையும் அழுத்தமான ருசியும் உள்ளனவாக இருக்கும். அடக்க முடியாத ஆசை வேகத்தை உடைய அவர்கள் கசப்பான, புளிப்பான, உப்பு ருசியுள்ள, அதிகச் சூடான, காரமான மற்றும் எரிச்சல் தரும் ருசியுள்ள உணவுகளை விரும்பித் தின்கிறார்கள்.

இப்படிப்பட்ட உணவு ஒருவனுக்கு தீவிரமான சக்தி கொடுப்பது உண்மைதான். ஆனால் அச்சக்தி மிகவும் காட்டுத்தனமானது. எனவே அதை அடக்க முடியாது. கடைசியில் பார்த்தால் அது கொடுப்பது வலியும், துக்கமும் வியாதியும் தான்!

சாப்பாட்டைக் கட்டுப்படுத்துவதனால் மட்டுமே ஒருவன் தன் சிந்தனையையும் கட்டுப்படுத்த முடியும் என்று கீதை படிப்பவர் எண்ணினர் எனின் அது முற்றிலும் நியாயப்படுத்தக் கூடிய கருத்தாயிராது. இந்த சுலோகங்களிலிருந்து நாம் புரிந்து கொள்ள வேண்டியது என்ன என்றால் மனிதன் எண்ணங்களின் தன்மைகள் சிறக்கும்போது அவன் சுவைகளும் மாறுகின்றன. அவன் உணவு—விருப்பம் கூட மாறுதல் அடைகிறது.

---

[1] ஒரு கர்ப்பிணி சுவற்றிலிருந்து சுண்ணாம்பை நக்கித் தின்ற ஒரு அபூர்வமான நிகழ்ச்சி நடந்திருக்கிறது!

மன இருள் கொண்ட தாமஸர்கள் எவ்வித உணவை விரும்புவார்கள்?

யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத்
உச்சிஷ்டமபிசாமேத்யம் போஜனம் தாமஸப்ரியம்
17:10

யாதயாமம்—(ஒரு யாமம் கழிந்த) சமைத்து நேரமான, சப்பென்று இருக்கிற; கதரஸம்—ருசிபோன; பூதி:—நாற்றமெடுத்த; பர்யுஷிதம்—அழுகிய (ஊசிப்போன); ச—மேலும் யத்—எது; உச்சிஷ்டம்—எச்சிலான; அபி—கூட; ச—மேலும்; அமேத்யம்—தூய்மையற்ற; போஜனம்—உணவு; தாமஸ ப்ரியம்—தாமசர்களுக்கு இஷ்டமானது.

எது ருசியற்றதும் (சப்பென்று இருக்கிற) ருசி தீர்ந்து போனதும், அழுகி நாற்றமெடுத்ததும் மேலும் எச்சலானதும் தூய்மையற்றதாகவும் கூட இருக்கிறதோ அந்த உணவு தாமஸ மக்களுக்கு விருப்பமாக இருக்கிறது.

யாதயாமம்: ருசி வீணுன—ஒரு நாளே நம் சாஸ்திரங்களில் எட்டு ஜாமங்கள் (யாமங்க)ளாகப் பிரித்திருக்கிருர்கள் நம் பெரியோர்கள். எனவே 3 மணி நேரம் ஒரு யாமமாகும். மூன்று மணி நேரத்துக்கு முன் சமைத்தது தன்மை கெட்டுப் போனது என்று இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தற்போது தகர டப்பாவில் அடைத்த உணவுகள், பதப்படுத்தப்பட்ட பழ வகைகள், பல நாள் வைத்துக் காப்பாற்றப்பட, குளிர் சாதனப் பெட்டி வசதிகள்—எல்லாம் சேர்ந்து நம்மை ஒரு யாமம் என்ன ஒரு வாரம், ஒரு வருஷம், ஒரு மாமாங்கம் கழிந்த உணவைக் கூட தின்ன வைத்துவிட்டான்.

சுவை குன்றிய அல்லது தீர்ந்த (கதரஸம்) தென்னிந்தியாவில் பழைய சாதம் (முதல் இரவில் தண்ணீரில் ஊறவைத்த சாதம்) சாப்பிடும் வழக்கம் இருக்கிறது. மறுநாள் காலேயில் அதற்கு ருசியும் இருக்காது சப் என்றும் இருக்கும். உணவு என்ற பேருக்கே தகுதியாக இருக்காது. இதை ‘கதரஸம்’ உணவுக்கு எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம் என்று நினேக்கிறேன்.

(பூதி) அழுகி நாற்றம் எடுத்த—சோம்பேறிகளுக்கு இயற்கையிலேயே மற்றவர்கள் விரும்பாத பழைய, அழுகிய உணவு வகைகளில் விருப்பம் ஏற்படுகிறது. ‘புலாவ்’ என்று தற்போது சாப்பாட்டு மேஜையின் மேல் பரிமாறப்படுகிறதே அதை இந்த வகையில் சேர்க்கலாம். இருல் மீன் முதலியவற்றையும் இந்த வகையில் அடக்கலாம். இவ்விதம் உதாரணங்களேப் பெருக்கிக் கொண்டே போகலாம்.

தூய்மையுடைய நல்லவர்களுக்கு எந்த நாற்றம் கொண்ட உணவும் இயற்கையாகவே வெறுப்பாக இருக்கும்.

(பர்யுஷிதம்) அழுகிய—பல மணி நேரம் அல்லது பல நாள் வைக்கப்பட்டு ஊசிய உணவு. இங்கே தாமஸ மக்கள் விரும்புகிற சாராயம் முதலிய புளித்துப் பொங்க வைத்த பானங்களைக் கொள்ளலாம். எல்லாப் போதைப் பானங்களுமே புளிக்க வைத்தவைதாம். நாளாக நாளாக அவற்றின் போதை தரும் குணம் அதிகமாகிறது!

இழிவுக்குரிய, பொறுத்துக்கொள்ள முடியாத அளவு மண்டுத்தனம் படைத்த மட்டமான நடத்தையுடைய மனிதர் களுக்கு அசிங்கமான அசுத்தமான உடல்நலத்துக்கு உகவாத உணவு என்ற தன்மையையே நீக்கிய உணவு வகைகள் தாம் பிடிக்கும் போல் தோன்றுகிறது. எச்சிலைத்தின்பதற்கு அவர்கள் விரும்புகிறார்கள். அமேத்யம்—கொஞ்சம்கூட நல்ல குணம் இல்லாத உணவு. மனிதர்கள் சாப்பிடவே தகாத உணவு. மேலே கொடுக்கப்பட்ட பட்டியல் பண்பாடற்ற, அவிவேகிகளான தாமஸ மக்கள் விரும்பும் உணவுகளைத் தொகுத்துக் கொடுக் கிறது.

இந்த மூன்று வகை மனிதர்கள் விரும்பி உற்சாகத்துடன் செய்யும் வேள்விகள் பூசைகள், வழி பாடுகள், நோன்புகள் முதலியன எவ்வாறு இருக்கும்?

அபலாகாங்க்ஷிபிர் யஜ்ஞோ விதித்ரஷ்டோய இஞ்யதே
யஷ்டவ்ய மேவேதி மன: ஸமாதாய ஸ ஸாத்விக:

*17:11*

அபலாகாங்க்ஷிபி—பயன் விரும்பாதவர்களால்; யஞ்ஞ— வேள்வி; விதித்ரஷ்ட—சாஸ்திர விதிப்படி; ய—எது; இஞ்யதே சமர்ப்பிக்கப்படுகின்றதோ; யஷ்டவ்யம்—சமர்ப்பிக்கப்பட வேண்டும் (செய்யப்பட வேண்டும்); இதி—ஏவ—என்றே; மன— மனதை; ஸமாதாய—உறுதிப்படுத்திக்கொண்டு; ஸ—அது; ஸாத்விக—சாத்வீகமானது (தூய்மையானது).

எந்த வேள்வி, பயன் விரும்பாதவர்களால் சாஸ்திர ஆணைப்படி, ‘இந்த வேள்வி சமர்ப்பிக்கப்பட வேண்டியது’ என்று எண்ணியே செய்யப்படுகிறதோ அது சாத்வீகமாகும்.

குணங்களுக்கேற்றபடி மக்கள் காட்டும் பல சுவைகளைத் தெளிவாகவும் மிச்சம் இல்லாதபடியும் விவரித்த பிறகு கீதை, ‘மக்கள் செய்கின்ற வேலைகளின் வகையிலும் அக் குணங்கள் சந் தேகம் ஏற்படாத வகையில் பிரதிபலிக்கின்றன’ என்று சொல்லத் தொடங்குகிறது:

அபலாகாங்க்ஷிபி: (பயன் விரும்பாத மனிதர்களால்)—தூய்மை படைத்த (எந்தக் களங்கமுமற்ற) சாதுக்கள் செய்யும் வேள்விகள் (பூசைகள் முதலியன) எப்போதும் சுய நலமற்றே செய்யப்படுகின்றன. ஏற்கனவேயே நாம் கீதைக்கு விளக்கம் தரும்போது, ''பயனுக்குத் தாகம் கொண்டு மனதை எரித்துக் கொள்ளுதல் மனிதனுடைய பவித்திரமான உயிராற்றலை வீணடிக்கும் வழி'' என்று சொல்லி வந்திருக்கிறோம். பயன் வருங் காலத்து விஷயம். வருங்காலத்தைப் பற்றிக் கவலையில் அலைப் புண்டு புரண்டு நிகழ்காலத்தை நாசம் செய்வது புத்திசாலித் தன மற்ற வாழ்க்கைக் கொள்கையாகும்.

சாஸ்திர விதிப்படி: நம்முடைய வேத சாஸ்திரம் நம் செயல்களை நான்கு வகையாகப் பிரிக்கிறது. அவற்றுள் காம்ய கர்மங்கள் ஆசைச் சுமை தாங்குபவை. நிஷித்த கர்மங்கள் ஒருவகை அவை செய்வதால் நமக்கு அகவுரவம். இந்த இரண்டு வகைக் கர்மங்களையும் நிச்சயம் ஒதுக்கி விடவேண்டும். மற்ற இருவகை கருமங்கள் 1. நித்ய கர்மங்கள்: தினம் தோறும் செய்ய வேண்டிய கர்மாக்கள். 2. நைமித்ய கர்மாக்கள்: சில விசேஷ சந்தர்ப்பங்களில், விசேஷ தினங்களில் செய்ய வேண்டிய கர்மாக்கள். இவ் இரண்டு வகை கர்மங்களையும் விடவே கூடாது. மாறாக நல்லமுறையில் ஒழுங்காகச் செய்யவேண்டும். இவ் இரண்டு கர்மங்களையுமே சாஸ்திரம் கர்த்தவ்ய நித்ய கர்மம் என்று சொல்கிறது. இது தாமஸ கர்மங்களுக்கு நேர் எதிரிடையாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தாமஸ கர்மாக்களில் சாஸ்திர விதிகள் மீறப்படுகின்றன. [1] சிரத்தையும் இல்லாமல் செய்யப்படுகின்றன.

யஷ்டவ்யம்: வேட்பது நம் கடமை என்று—நல்லவர்களை வாழ்க்கையில் கர்மாக்களைச் செய்யத் தூண்டுவது இந்த உணர்வு தான்! அவர்கள் குறிப்பிட்ட இலஷியத்தை அடைந்தே தீர வேண்டும் என்று ஆத்திரப்படுவதில்லை. அதுமட்டுமல்ல—சூழ் நிலையைத் தாம் முன்னமே குறித்து வைத்து திட்டமிட்டு அதன் படி இணைத்து ஒருமைப்படுத்தி வைக்கவேண்டும் என்று அமைதி இழந்து அவதிப்படுவதில்லை. அதனால் அவர்கள் உள் உயிராற்றல் கள் வீண் வழிகளில் சிதறிப் போவதில்லை. அவர்கள் மனது எப் போதும் தனக்கே இயல்பான அமைதிக் கடலில் ஆழ்ந்து திளைத்துக்கொண்டிருக்கும். தான் செய்கிற கர்மா தானாகவே மக்களுக்கு நன்மையே தரும் என்று அவர்களுக்கு உள்ளூர திருப்தி இருந்துகொண்டே இருக்கும். அப்படிப்பட்ட நற்செயல் கள் சாத்வீக வேள்விகளின் வகைக்குள் அடங்கும்.

---

[1] இதே அத்தியாயம் (XVII): 13வது சுலோகம்.

ராஜஸ வகை பின்வரும் சுலோகத்தில் விவரிக்கப்படுகிறது:

அபிஸந்தாய து பலம் தம்பார்த்தமபி சைவ யத்
இஜ்யதே பரதச்ரேஷ்ட தம் யஞ்ஞம் வித்தி ராஜஸம்

17:12

அபிஸந்தாய து—நாடியே; பலன்—பயனை; தம்பார்த்தம் அபிவை ச—ஆடம்பரத்துக்கும்கூட (வெளியில் காட்டிக்கொள்ள); யத்—எது; இஞ்யதே; வேட்டப்படுகிறதோ; பரதச் ரேஷ்ட—ஏ பரதர்களில் சிறந்தவனே; தம—அந்த; யஞ்ஞம்—வேள்வியை (நல்ல கர்மாவை); வித்தி—தெரிந்துகொள்; ராஜஸ —ராஜஸம் என்று.

எந்த வேள்வி பலனை நாடியே, ஆடம்பரத்துக்காகவும்கூட செய்யப்படுகிறதோ, ஏ பரதர்களுள் சிறந்தவனே அதை ராஜஸம் என்று தெரிந்துகொள்.

பயனைநாடியே பலம் (அபிஸந்தாயது): ஏதோ குறிப்பிட்ட பயனைப் பெறுவதற்காக சிலர் உலகில் செயல்களைச் செய்கிறார்கள். அதனால் தவிர்க்க முடியாதவாறு அவர்கள் கவலைகள், ஏக்கங்கள் இவற்றைப் பற்றியே அதிகம் குழம்புகிறார்கள். கிடைக்குமோ கிடைக்காதோ என்ற அச்சம் அவர்களை எப்போதுமே வாட்டிக்கொண்டிருக்கும். எனவே அந்தக் கற்பனை அச்சம் காரணமாக அவர்கள் நரம்பு தளரத் தொடங்கிவிடுகிறது.

(பிறர் பார்த்து மெச்ச வேண்டும் என்கிற) ஆடம்பரத்துக்காக (தம் பார்த்தமபிச) வேறு மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் மிகவும் ஜோராக விறுவிறுப்பாக செயல்புரிவார்கள். அவர்களுக்குப் பயன் முக்கியமில்லை. தங்கள் சொத்தும், புத்திசாலித்தனமும் வெளியாருக்குத் தெரியவேண்டும். அவர்கள் ஆடம்பர ஆசை தீரவேண்டும். அப்படிப்பட்டவர்கள் சமூகத்துக்குக் காட்சிப் பொருளாக ஆகிறார்கள். அப்படிப்பட்ட நற்செயல்கள் செய்கிறவர்கள் உலகில் அநேகர் இருக்கிறார்கள். அவை தெய்வீக வேள்விகளாகா. அவை உள் அமைதி. ஆனந்தம் சமநிலை ஆகியவற்றைக் கொடுக்க வல்லவையும் ஆகா.

அப்படி குறிப்பிட்ட பயனை விரும்பியோ விரும்பாமலோ தங்கள் ஆடம்பர ஆசையை மட்டும் திருப்தி செய்துகொள்ள விரும்பியவர்கள் செய்யும் வேள்விகள் (நற் கருமங்கள்) ராஜஸக்கர்மாக்கள் என்று அறிந்துகொள்ளப் படவேண்டும்.

விதி ஹீனம் அஸ்ருஷ்டான்னம் மந்த்ர ஹீனம் அதக்ஷிணம்
ச்ரத்தாவிரஹிதம் யஞ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே

17:13

விதிஹீனம்—சாஸ்திரத்தின் கட்டளைகளை விட்டது; அஸ்ருஷ்டான்னம்—அன்னம் விநியோகிக்கப் படாதது; மந்த்ர ஹீனம்—மந்திரங்களற்றது; அதக்ஷிணம்—தக்ஷிணை கொடுக்கப் படாதது; ச்ரத்தா விரஹிதம்—சிரத்தை காட்டப்படாதது; யஞ்ஞம்—வேள்வி; தாமஸம்—தாமஸம்; பரிக்தே—கூறப்படுகிறது.

எந்த யஞ்ஞத்தில் சாஸ்திர விதிகள் பின்பற்றப்பட வில்லையோ, அன்னம் விநியோகிக்கப்படவில்லையோ, மந்திரங் கள் உச்சரிக்கப்படவில்லையோ, தக்ஷிணை கொடுக்கப்பட வில்லையோ, மேலும் சிரத்தை காட்டப்படாமல் இருக்கிறதோ அந்த வேள்வி தாமஸம் என்று சொல்லப்படுகிறது.

இவ்விதம் சாஸ்திர விதிகள், வேதத்தின் கட்டளைகள் இவைகளை அலக்ஷியம் செய்து, அதாவது சரியான வாழ்வுக்கான அறிவியல் (விஞ்ஞான) பூர்வமான விதிகளைப் புறக்கணித்துவிட்டு செய்யப்படும் வேள்விகள் மிகவும் கடைப்பட்டவை. அப்படிப் பட்ட வேள்வி செய்கிறவனுக்கும் நன்மை பயக்காது. நன்ருக ஆய்ந்து பார்த்தால் அது அவன் தலைமுறைக்கே நன்மை தராது.

அன்னம் விநியோகிக்காமல் (அஸ்ருஷ்டான்னம்) உணவு, உடை, வீடு இம் மூன்றுமே வாழ்க்கையின் அடிப்படைத் தேவை கள் என்று எங்கும் பேசப்படுவதை இந்தக் காலத்தில் கேட்கி ரேம். அப்போதும் நம் பண்டைய மொழியில் 'உணவு' என்ற சொல்லே அடிப்படைத் தேவைகள் எல்லாவற்றையும் குறித்து நிற்கிறது. மனஅளவில் வளர்ச்சி இல்லாமல், அதாவது வசதிகள் இல்லாத மற்றவருடன் பொருள்களைப் பகிர்ந்துகொள்ளும் அளவுக்கு அன்பு வளர்ந்து வெளிப்படாமல் நற்கருமங்கள் அல்லது வேள்விகளை புறத்தளவே செய்தால் மட்டும் ஒருவன் உள் வளர்ச்சி அடையமுடியாது.

மேலே சொல்லப்பட்ட விதிகளை அனுசரித்தல், உணவு விநி யோகம். இந்த இரண்டு தவிரமந்திரமும் தேவை. மந்திரமும், படித்த வித்வான்களுக்குக் கொடுக்கப்படுகிற தக்ஷிணையும் இல்லாமல் செய்யப்படுகிற வேள்விகள் தாமஸம் என்று சொல்லப்படுகின்றன.

தவத்திலும் மூவகை உண்டு. வேறு வேறு வகையினர் செய்யும் அந்தத் தவத்தைப் பற்றி இலக்கணம் தருகின்றன பின்வரும் மூன்று சுலோகங்கள்:

தேவத்விஜகுருப்ராக்ஞ பூஜனம் சௌசமார்ஜவம்
ப்ரஹ்மசர்ய மஹிம்ஸா ச சரீரம் தப உச்யதே

17:14

தேவத்விஜகுருப்ரஞ்ஞ பூஜனம்—தேவைகள். ''இரு பிறவி''கள் (அந்தணர்கள்) குருமார்கள், ஞானவான்கள் ஆகியோரை பூசித்தல்; சௌசம்—தூய்மை; ஆர்ஜவம்—நேர்மை; ப்ரஹ்ம சர்யம்—பிரம்மசர்யம்; அஹிம்ஸா—(அஹிம்சை) இன்னு செய்யாமை; ச—உம்; சரீரம்—உடல் பற்றிய; தம—தவம்; உச்யதே—சொல்லப்படுகிறது.

தேவர்கள். இரண்டு பிறவிகள் உடைய பிராமணர்கள், ஆசாரியர்கள் ஞானவான்கள். இவர்களைப் பூசித்தல், தூய்மை, நேர்மை; பிரம்மசர்யம் அகிம்சை ஆகியன சரீரம் பற்றிய தவம் (கடும் நோன்பு) ஆகும்.

(தேவ... பூஜனம்) தேவர்கள். இருபிறவியாளர்களான பிராமணர்கள், குருமார்கள் ஞானிகள்—இவர்களைப் பூசித்தல்— தியானம் செய்கிறவன் தியானிக்கும் தத்துவம் அல்லது தெய்வத்தின் குணங்களைத் தன்னுள் வளர்த்துக் கொள்வதற்காக உயர்ந்த இலக்ஷியத்துடன் தன் மனதை இணைத்து வைத்துக்கொள்வதே 'பூசையாகும்'' பூசைக்குள் அடங்கும் பல அமிலங்களான முயற்சிகள் மூலமே பண்பாட்டு வளர்ச்சி, மனதின் மலர்ச்சி, நெறிகளில் முன்னேற்றம் எல்லாம் ஏற்பட முடியும். * இது காந்த சக்தி ஏற்படுத்த இரும்புத்துண்டை காந்தத்துடன் ''ஒட்டி தேய்த்து எடுக்கும் முறையைப் போலத்தான். ஒருவன் தன் உள் ஆளுமையைத் தடைப்படுத்தும் குறைபாடுகளிலிருந்து வெளியேற வேண்டும் என்றால் அவன் சில இலக்ஷியங்களிடம் மதிப்பும் பக்தியும் கொண்டிருக்கவேண்டும். அவை தெய்வத்திடம் பிரதிபலிக்கின்றன. பிராமணர்கள் அவ்விதம் வாழ்கிறார்கள். குரு அவற்றைச் சொல்லிக் கொடுக்கிறார். ஞானிகள் அவற்றை வகுத்துக்கொடுக்கிறார்கள்.

(த்விஜர்) இரு பிறவியாளர்: என்ற சொல் பிராமணரைக் குறிக்கிறது. ''பிராமணன்'' என்றால் பிரமத்தை அதாவது ஆத்ம சாக்ஷாத்காரம் செய்தவர் என்று பொருள். தாயின் கருவிலிருந்து பிறக்கும்போது நாம் மனிதர்களாக ஒரு முறை பிறக்கி

---

* சாதாரண (*soft*) இரும்புத் துண்டை குதிரை லாட வடிவிலுள்ள காந்தத்துடன் பல தடவை ஒட்டித் தேய்த்து எடுக்கப்படுவதை *Touch Method* தொடு முறை என்கிறோம். அப்போது அந்தத் துண்டுக்கும் காந்த சக்தி ஏறிவிடுகிறது.

றேம். அப்போதும் நம்மிடம் சில நலன்கள் இருக்கின்றன என்பது உண்மைதான். இருப்பினும் நம்மிடம் அநேக தார்மீக குறைகளும் இருக்கின்றன. அம்மாவின் கருப்பையிலிருந்து வெளி யேறிவிட்டோம், சரிதான். ஆனால் நாம் இன்னம் பௌதிக சடப் பொருளின் முட்டைக்குள் இருக்கிறோம். நாம் அதிலிருந்தும் 'பொரிந்து' வெளியேற வேண்டும். அதாவது நாம் சடப்பொருள் களுடன் கொண்டிருக்கிற இணைப்பை அறுத்து பூரணத்து வத்தின் ஆனந்த உலகில் வந்து தெய்வ மனிதர்களின் நிலையாகிற தெய்வ பூமியில் செல்லவேண்டும். இதைத்தான் நம் வேதாந்த முறையில் இரண்டாவது பிறவி என்று சொல்லப்படுகிறது. ஒரு முறை கருப்பையிலிருந்து வெளியேறி மனிதராதல். இரண்டா வது ஆத்மா தன் தேகபுத்தி பிரமையின் காரணமாக ஏற்றுக் கொள்கிற நெருக்கிக் குறுக வைத்திருக்கும் குறைபாடுகளின் கூட்டிலிருந்து வெளியேறுதல்.

தூய்மையும் நேர்மையும்: (சௌசம், ஆர்ஜவம்) இவ்விரண்டும்[1] எவ்வளவு முக்கியம் என்று ஏற்கனவே விவரிக்கப் பட்டிருக்கிறது. உண்மையான சாதகனுக்கு புறச் சுத்தம்—உடல் மட்டுமல்ல சுற்றுச் சூழ்நிலையும்கூட சுத்தமாக இருக்க வேண்டும்—தவிர்க்க முடியாத தகுதித் தேவையாகும். அதே போல் சாதகன் விழிப்புடன் மற்றவருடன் பழகும்போது நேர் மையைக் காக்கவில்லை என்றால் அவன் உள் வாழ்வு பிளவுபட்டுப் போகும். அது அவனுடைய பதற்றமின்மை. அமைதி, மன ஆற்றல்—எல்லாவற்றையும் அடித்துக்கொண்டு போய்விடும்.

பிரம்மசரியம்: பரம்பொருளான பிரமன் தியானத்தில் இடையறாது ரமித்திருப்பதே பிரமசரியம்[2] எனப்படும். நம்முடைய மனப்பாங்கு புலனின்பம் தரும் பொருள்களில் ஈடுபட்டிருக்கும் வரை இது முடியாத ஒன்று. மனம் உள்ளே ஆத் மாவை நோக்கித் திரும்ப வேண்டும். பிரம்மசரியம் என்பது ''உள் நோக்கு'' அதிகரிப்பதற்காக நாம் ஏற்றுக்கொள்ளும் கட்டுப்பாடுகள் அனைத்தையுமே சேர்த்துக் குறிக்கும். வைத்தியக் கல்வி மாணவனையே நாம் 'டாக்டர்' என்று சொல்லுகிறோம். ஏன் என்றால் டாக்டர் ஆவதற்கு அவன் எல்லா வகையிலும் முயலுகிறான். வழிக்கும் முடிவுக்கும் ஓர் சம்பந்தம் உண்டு. ஒருவகையில் இரண்டும் ஒன்றேதான். ஏன் என்றால் அந்த வழிக்கு அந்த முடிவுதான் முடிவு.

---

[1] சௌசம்: 16வது அத்யாயம் 1—3 சுலோகங்கள்; ஆர்ஜவம் 17ம் அத்யாயம் முதல் சுலோகம்

[2] ப்ரஹ்மணி சரதி இதி பிரம்மசாரி.

அஹிம்சை: (இன்னு செய்யாமை) இந்தச் சொல்லும் மீண்டும் மீண்டும் ஏற்கனவே விஸ்தாரமாக விளக்கப்பட்டிருக் கிறது. நம்மனதில் மற்ற எவருக்கும் உடலூறு எண்ணுதிருப்பதை அஹிம்சை என்று நாம் சொல்கிறோம். ஓரளவு பிறருக்கு மறந்தும் ஏதாவது ஊறு விளைவிக்காமல் உயிர் வாழ்வது என்பது உடல் எடுத்த நமக்கு முடியாத செயல். ஆனுல் நாம் நம்முடைய மனப் பாங்கை மாற்றிக்கொள்ள முடியும். அப்போது தவிர்க்க முடி யாது செய்யப்பட்ட ஹிம்சை போல் தோன்றுகிற செயல்கூட உலகுக்குப் பெரிய நன்மையைக்கொண்டு வரமுடியும். கூரான கத்தி கொண்டு ஒரு டாக்டர் நோயாளியின் வயிற்றைக் கிழிக் கிறுர். அது ஹிம்சைச் செயல்தான். ஆனுல் அது கடைசியில் நோயாளியின் நோயைத் தீர்த்து வைத்துவிடும். ''பிறருக்குத் துன்பம் தருவதை, விடா முயற்சியுடன் நம் மன புத்தித் தளங்களிலிருந்து தவிர்ப்பதுதான் நாம் வாழ்வில் காக்கக் கூடிய 'அஹிம்ஸை' விரதமாகும்.

மேலே சொன்ன தேவ பூஜனம், சௌசம், ஆர்ஜவம், பிரம்ம சரியம் அஹிம்சை எல்லாம் உடல் தவமாகும்: உடலால் நோக்கப்படும் கடும் விரதமாகும்.

(தபஸ்) தவம் என்ருல் மிகவும் மோசமாக, மிருக வெறியுடன் தேவைகளை மறுத்துக்கொள்வதல்ல. மாருக நம் உயிர் ஆற்றல்கள் தேவையற்ற வழிகளில் சிதறி வீணுகிப் போகாமல் காத்து புறப் பொருள்களின் உலகில் சரியான வகையில் சம்பந்தம்கொண்டு புத்திசாலித் தனமான முறையில் வாழ்வதாகும். அப்படி சக்திகளைச் சேமித்த பிறகு அவை ஆக்க பூர்வமான வழிகளில் திருப்பிப் பயன்படுத்தப்படுகின்றன. மதிப் புள்ள புதிய சக்திகளைக் கண்டு பிடித்து அவற்றை சேமித்து ஆத்ம விசாரத்துக்கு உதவும் நல்ல வழிகளில் திருப்பும் செயல் திட்டத்துக்கே தபஸ் (தவம்) என்று பெயர். சக்திகள் சேமிப்பு, அதைத் தனக்கு உள்ளேயே புதுக் களங்களில் உரமூட்டப் பயன் படுத்தல்—இதையே இங்கே தவம் என்று சொல்லப்பட்டிருக் கிறது. சுலோகம் உடல் அளவில் செய்யப்படும் தவம் உண்மை யில் இதுவே என்று சொல்லி தலைக்கட்டுகிறது.

வாக்கில் தவம் இப்போது கூறப்படுகிறது:

அனுத் வேக கரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத்
ஸ்வாத்யா யாப்யஸனம் சைவ வாங்மயம் தப உச்யதே
17:15

அனுத்வேகரம்—உத்வேகத்தை உண்டு பண்ணுது; வாக்யம்— பேச்சு; ஸத்யம்—உண்மை; ப்ரியஹிதம் ச—இனியதும் நன்மை பயப்பதும்; யத்—எது; ஸ்வாத்யாப்யஸனம்—ஏவ ச—வேதம் ஓதும்

பயிற்சியும்; வாங்மயம் தப—வாக்கு மயமான தவம்; உச்யதே—சொல்லப்படுகிறது.

எந்தப் பேச்சு (கேட்கிறவர்களுக்கு) உத்வேகத்தை (ஆத்திரத்தை, எரிச்சலை) ஏற்படுத்தாதோ எது உண்மையாகவும் இனிமையாகவும் நன்மை பயப்பதாகவும் இருக்குமோ, அந்தப் பேச்சுப் பேசுவதும் வேதத்தை ஓதும் பழக்கமும் வாக்குமயமான தவமாம்.

மனிதனுக்கு உள்ள மிகவும் பலம் வாய்ந்த சாதனம் பேச்சு. ஒருவனுடைய பேச்சிலிருந்து அவன் புத்தியின் உரம், மனதின் கட்டுப் பாடுள்ள தன்மை உடலை அடக்கும் திறன் ஆகியவற்றைத் தெரிந்து கொள்ளலாம். அவன் இந்த மூன்று அம்சங்களிலும் நிறைவு பெருதவனுக இருந்தால் அவன் வார்த்தைகளுக்கு வேகம் இருக்காது. மந்திர சக்தி போன்ற வசம் செய்யும் குணம் இருக்காது. மேலும் பேச்சு எல்லோரும் தொடர்ந்து செய்து கொண்டிருக்கும் ஒரு வேலை. எனவே பெருமளவு மனிதன் சக்திகளை வெளியேற்றும் ஒரு வழியாகும் அது. எனவே தேவையற்று, பயன் விளைவிக்காது செய்யப்படும் இந்த அழிவை நிறுத்தி அந்தச் சக்தியை சேமிப்பது சாதகனுக்கு உள்ளே உள்ள பெரிய சொத்தாக மாறும் என்பதில் ஐயம் உண்டோ?

இதற்காக மனிதன் முழு மௌனமாக இருந்து தன்னையும் அழித்துக் கொண்டும் தன் வளர்ச்சியையும் தடுத்துக் கொண்டும், பிறருக்கு வெறுப்புடன் எரிச்சலையும் ஊட்டிக் கொண்டிருக்கவேண்டும் என்பதில்லை. சாதகன் ஆளுமை ஒருமைப்படுத்தப்பட பேச்சாற்றல் பயன்படுத்தப்பட வேண்டும். மற்றவர்களுக்கும் தனக்கும் உபயோகமாகும் வகையில், நன்மை பயக்கும் வகையில் இந்த ஆற்றலைப் பயன்படுத்த ஒரு நல்ல வழி உண்டு. பேச்சை மிகமிக லாபம் தரும் வழியில் பயன்படுத்துவதற்கு இங்கே இந்த சுலோகத்தில் உத்திகள் சொல்லிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த சுலோகத்தில் வரும் கருத்துக்கள் சென்ற சுலோகத்தில் மறைமுகமாகச் சுட்டப்பட்ட ஒரு கருத்துக்கு மேலும் ஆழம் கொடுக்கின்றன. அந்தக் கருத்து இதுதான்: தபஸ் என்பது தன்னை அழித்துத் தொலைத்துக் கொள்ளும் ஒரு நாசக்காரன் வேலையில்லை. ஆனுல் தபஸ் தன்னை (உண்மையான, மாருத அடிப்படை ஆத்மாவை) மீண்டும் கண்டு கொண்டு மீண்டும் சீரமைத்துக் கொள்வதாகும்.

உத்வேகத்தை (பிறர் மனதில் ஆத்திர உணர்வை) ஏற்படுத்தாத பேச்சு (அனுத்வேககாம்)—நாம் பேசுகிற பேச்சு பிறர் மனதில் சங்கடத்தை ஏற்படுத்தக் கூடாது. நம் வார்த்தைகள் எரிச்சல் ஊட்டுவனவாகவும் இருக்கக் கூடாது. ஆபாசமாகவும் இருக்கக் கூடாது. நாம் சொல்லும் வார்த்தைகள் சரியானவையா அல்லவா என்று அறிந்து கொள்ள ஏமாற்ருத உரைகல் ஒன்று உண்டு. அதுதான் கேட்கிறவர்கள் முகத்தில் தோன்றும் உணர்ச்சி—பாவம். ஆனுல் அநேகமாக மனிதர்கள்

கண்களை மூடிக் கொண்டு தாங்கள் சொல்வதைச் சொல்லித் தீர்த்து விடுகிறார்கள். கண்கள் பார்வைக்குத் திறந்திருக்கும் போதும்கூட அவை மூடியிருப்பவை போலத்தான்! உலகில் அனேகர், தங்கள் கசப்பு நாக்கு, கடுமையான சொற்கள், அழுகி நாறும் எண்ணங்கள் இவைகள் காரணமாகவே வாழ்வில் தங்கள் முயற்சிகளில் தோற்று, நண்பர்களையும் உறவினர்களையும் இழந்து விட்டிருக்கிறார்கள்.

உண்மையான பிடிக்கக்கூடிய நலம் தரக்கூடிய (சத்யம், ப்ரியம், ஹிதம்) மற்றவர்களுக்கு நன்மை விரும்பி இனிமையான நடையில் உண்மையைச் சொல்லப் பயன்படும் பேச்சு சரியான முறையில் பயன்படுத்தினால் பேசுகிறவனுக்கே ஆசீர்வாதமாக அமையும்.

பொய் சொல்வதால் எவ்வளவு ஆற்றல் வீணாகிறது? அதிக அளவில் வீணாகிறது என்று நாம் புரிந்து கொள்ளவில்லை. சொல்வதை உண்மையே சொல் வது என்று கொள்கையாகக் கொண்டு விட்டால் தேவையற்ற வழியில் அழிக்கப்படும் இந்த அழிவு தடுக்கப்படும். நம் புத்தியில் உண்டாகும் கருத்துக்களை அவற்றின் இழை மாறாமல் வெளியிடுகிற சொற்கள் 'உண்மை யான' வார்த்தைகள். அவைகளை வேண்டுமென்றே திரித்தோ மாற்றியோ சொல்லும் வார்த்தைகள் பொய்யாகும். அதே சமயம் 'உண்மை' சொல்கிறேன் என்று பேசி சமூகத்தில் வேண்டப்படாத ஒருவராக ஆகவும் முடியும்! சாதகன் இந்த விதம் ஆகக் கூடாது! பிறருக்குப் பிரியமாக உள்ள வார்த்தை களைத்தான் 'உண்மை வார்த்தைகள்' என்று கீதை ஒப்புக் கொண்டிருக்கிறது. ஒருகால் பகவான் கருத்து 'நாம் சொல்கிற உண்மை பிறருக்குப் பிடிக்காது போல் இருக்குமானால் கெட்டிக் காரத்தனமாக மௌனமாக இருந்து விடுவதே சரி' என்பது போல் இருக்கிறது.

நம் பேச்சில் சொற்கள் உண்மையாகவும் பிறருக்குப் பிடிப்புள்ளவையாகவும் மட்டும் இருந்தால் போதாது. அவை (ஹிதம்) நன்மை பயப்பனவாகவும் இருக்க வேண்டும். பேச்சை வீணடிக்கக் கூடாது. பயன் தராத பேச்சு பேசுபவன் சக்தி யையே அடித்துக் கொண்டு போய்விடும். நிரந்தரமான மதிப்புக் கொண்ட பிரியமான சொற்களையே பேசு. அவை கேட்பவர் களுக்கு நன்மையான பயன் தருவதாகவும் இருக்கட்டும். விடா மல் இந்த அறிவுரைகளை யார் அன்றாடம் 'பேச்சு' வாழ்வில் விடாமல் பயன்படுத்துகிறார்களோ அவர்கள் 'வாக்குமயமான' தவம் செய்கிறார்கள்.

(ஸ்வாத்யாய அப்யஸனம்) வேத சாஸ்திரங்களைப் படித்தல்: பேச்சை அடக்குவது என்றால் மயான அமைதியில்

முழுகி உயிர்நீங்கி ஜடமாகக் கிடப்பது என்று பொருள் அல்ல. பேச்சு ஆற்றலை தன்னை முன்னேற்றிக் கொள்ளவும், தனக்கு ஆன்ம நன்மை விளைவிக்கக் கூடியதுமான முயற்சிகளில் முதலீடு செய்வதையும்தான் ஸ்ரீ கிருஷ்ணன் 'வாக்குமயமான தவம்' என்று சொல்கிறார். ஸ்வாத்யாயம் என்பது ஒரு பரிபாஷைச் சொல். நம்முடைய பவித்திரமான சாஸ்திரங்களில் அந்தச் சொல்லுக்குக் கொடுக்கப்படும் கருத்து, சாஸ்திரங்களில் உயர்ந்த கருத்துக்களை நுணுகிப் படித்து ஆழ்ந்து சிந்திப்பதாகும். வாழ்க்கையில் உண்மையாகவும் பிரியமாகவும் ஹிதமாகவும் பேசுவது என்ற கொள்கையைக் கடைப்பிடித்து நடப்பதால் சேமிக்கப்பட்ட உயிர் ஆற்றலை உபநிஷத மந்திரங்களைப் படிக்கவும் மனனம் செய்யவும், நிதித்யாஸனம் என்று தியானம் செய்யவும் ஆகிய செயல்களில் முதலீடு செய்யப்பட வேண்டும்.

இந்த சுலோகம் உத்தியை முழுமையாக வர்ணிக்கிறது. முதல் வரியில் ஆற்றல் சேமிக்கும் வழி சொல்லப்படுகிறது. இரண்டாவது வரியில் எந்தத் துறைகளில் அந்த ஆற்றல்கள் முதலீடு செய்யப்பட்டால் அதிக இன்பம் என்கிற லாபாம்சத்தைப் பெறலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் சுட்டப்பட்ட இரண்டு திட்டங்களுமே 'வாக்குமயமான' தவத்தை முழுமையாகச் சுட்டிக் காட்டுகின்றன.

இப்போது 'மனத் தவம்' எடுத்துக் கொள்ளப்படுகிறது.

*மன: ப்ரஸாத: ஸௌம்யத்வம் மௌனமாத்ம விநிக்ரஹ:*
*பாவஸம்சுத்திரித்யேதத் தபோ மானஸ முச்யதே*

*17:16*

*மன: ப்ரஸாத*—மன அமைதி; *ஸௌம்யத்வம்*—நல்ல இதயமுடைய (அருளுடைமை); *மௌனம்*—மௌனம்; *ஆத்மவினிக்ரஹ:*—தன்னடக்கம்; *பாவஸம்சுத்தி:*—தூய (நோக்கம்) இயல்பு; *இதி*—என்ற; *ஏதத்*—இது; *தப:*—தமஸ்; *மானஸம்*—மனதின்; *உச்யதே*—சொல்லப்படுகிறது.

மன அமைதி, அன்புடைமை மௌனம், தன்னடக்கம், தூய இயல்பு—இது மனத் தபஸ் என்று கூறப்படுகிறது.

இங்கே வாழ்க்கையில் உயர்ந்தனவாகக் கருதப்பட வேண்டிய ஐந்து தகவுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவ்வாறு நாம் வாழ்ந்தோமானால் அந்த ஐந்தும் சேர்ந்து 'மனம் தபஸாகும்' நாம் உலகுடன் கொள்ளும் உறவில் சகிப்புத் தன்மை, பிறரைப் புரிந்து கொள்ளும் தன்மை அன்பு, இவற்றைக் கைக்கொண்டால்தான் மனதுக்கு அமைதி கிட்டும். தறிகெட்டுத் திரியும் புலனின்ப நாடிகள் அமைதியையோ

பதற்றமின்மையையே எண்ணிப் பார்க்கவும் முடியாது. மனம் தன் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ள இந்திரியங்களின் மூலம் வெளியேறி இந்திரிய விஷயங்களில் திரிகின்றது. அந்த மனதை அப்படி பல இடங்களில் திரிய வைப்பது பல ஆசை களால் தளும்பிக் கொண்டிருக்கும் புத்தியாகும். புறத்தேயிருந்து ஆசை காட்டி இழுக்கும் பொருள்கள் புலன்களின் மேல் ஏற் படுத்தும் தாக்கங்களிலிருந்தும், அதே போல் மனதைக் கண்ட படி இன்பக் களங்களுக்கு விரட்டிக் கொண்டேயிருக்கும் புத்தி யிலிருந்து கிளம்பிச் சாட்டையடி அடிக்கும் ஆசைகளிலிருந்தும் மனதைக் காப்பாற்றினுல்தான் மனதுக்கு அலேவு அற்ற தன்மை கிடைக்கும். உள்ளபடி மனிதன் எதை எண்ணித் தியானத்தில் திளேக்கும் போது மனது ஓடுவதை நிறுத்தவும், புத்தி ஆசைகள் வெளியேற்றுவதையும் நிறுத்துமோ அப்படிப்பட்ட தெய்வீக லக்ஷியத்தைக் கண்டு கொண்டவர்தான் 'மன அமைதியை (மன:பிரசாதத்தை) பெறுவோம்' என்ற நம்பிக்கையைப் பெற முடியும்.

ஸௌம்யத்வம்—அருளுடைமை (அன்புடைமை)—உண்மை யான பக்தியும் அன்பும் கொண்ட உள்ளத்திலிருந்து எல்லோரை யும் நேசிக்கும் ஒரு குளிர்ந்த உணர்வு தானுக எழுகிறதே அது தான் அன்புடைமை. உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களிடத் தும் உயிர்களிடத்தும் இந்தவித அருளுடைமை சாதகன் எப்பொழுதும் தெய்வீகச் சூழ்நிலேயில் இருக்கிறுன். அப்படிப் பட்டவனுக்கு ''சூழ்நிலே (உலகம்) என்னே வஞ்சித்து விட்டது'' என்று எண்ணக்கூட வாய்ப்பு நேராது; சூழ்நிலே தாற்காலிக மாகக் கூட அவனேத் தொல்லேக்குள்ளாக்க முடியாது.

மௌனம்: ஏற்கனவேயே நாம் 'மௌனம்' என்றுல் 'பேசாமலே இருத்தல்' என்று பொருள்படாது என்று குறிப்பிட்டிருக்கிறேம். இந்தச் சுலோகத்திலோ பகவான் கிருஷ்ணன் ''மனத் தபசை'' விவரிக்கும்போது 'மௌனத்தை' யும் சேர்த்து எண்ணுகிறுர். இது முரண்பாடுமல்ல, தவறுமாகாது. பேச்சில் மௌனம் வரவேண்டும் என்றுல் அது மனதின் மௌனத்தை ஒட்டித்தான் வரமுடியும். எனவே அரிக்கும் பேராசைகளும், ஆளேக் கரைத்துவிடும் விருப்பங்களும் ஒருவர் மனதில் குவியாதிருக்கும் போது ஏற்படுகிற அமைதியே 'மௌனமாகும்'. இந்தச் சொல்லுக்கு முனிவன் நிலே அதாவது 'எப்போதும் தியான நிலேயில் இருத்தல்' என்ற பொருளும் கொள்ளலாம்.

சுய அடக்கம்: (ஆத்ம விநிக்ரஹ:) மேலே சொல்லப்பட்ட மன அமைதி அருளுடைமை, இடையருத உள் மௌன நிலே இம் மூன்றும் நாம் நம் உள் இயல்பைக் கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ளாதவரை சாதிக்க இயலாதவை. நமக்குள்ளே உறுமிக்

கொண்டிருக்கும் மிருகத் தன்மை மிகவும் பலம் வாய்ந்தது. நாம் எப்போதும் விழிப்புடன் இல்லை என்றால் அதை அடக்கு வதில் சற்றுக்கூட தளர்ச்சி காண்பிக்காமல் இல்லை; என்றால் நமக்குள்ள மட்டத் தன்மைகள் மேலோங்கி நம்முடைய சமநிலையையும் அமைதியையும் கெடுத்துவிடும்.

பாவஸம் சுத்தி. எண்ணத் தூய்மை: நம் செயல் தூண்டுதல்களான எண்ணங்கள் தூய்மையானவையாகவும் அலை எழாத நீர் மட்டம் போல் அமர்ந்தும் இல்லை என்றால் தன்னை அடக்கி வாழ்தல் முடியாது. ஒரு உறுதியாக நிர்ணயிக்கப் பட்ட இலக்ஷியம் இல்லாமல், அந்த இலக்ஷியத்தை நோக்கி நம் யாத்திரைக்கான சரியான திட்டம் இல்லாமல் போனால் நாம் வழியில் ஏற்படும் இழுப்புக்கொண்ட ஆசைகளின் அழைப்பு களுக்கு வேட்டைப் பொருளாக ஆகி இண்டு இடுக்குகளின் சந்து களில் நடக்க ஆரம்பித்து சக்தியை அழித்துக்கொண்டுவிடு வோம். ராஜபாட்டையை விட்டு நகராமல் அதிலேயே நடந்து செல்வதுதான் ''உண்மை''யை நோக்கிய யாத்திரைக்கு வெற்றியை உறுதி செய்யும். நம்முடைய மனதின் செயல் பாடுகளைத் தூண்டும் தூண்டுதல் தெய்வீகத் தன்மை வாய்ந்த தாகவும், உற்சாகம் ஊட்டுவதாகவும் இருக்கவேண்டும். அவ்விதம் இல்லை என்றால் நாமே நம்முடைய பூரணத்துவத்துக் கான குணங்களுக்குக் குழி தோண்டிவிடுவோம்! நம்முடைய நிச்சயமான பெரும் வெற்றி வாய்ப்பை அழித்துக்கொள்வோம்.

மேல் வந்த மூன்று சுலோகங்களும் முறையே உலகுடன் நாம் உடல் மூலம் கொள்ளும் உறவுகள், பேச்சு, மனவாழ்வு— இவற்றின் தபஸ் (இவற்றின் வாயிலாக நோக்கும் நோன்பு வாழ்வு) மிகவும் தெளிவான வகையில் சித்திரமாகத் தீட்டப் பட்டிருக்கிறது. மாறுபட்ட பலர் ஒரே தபஸை நிறைவேற்றுகிறார் கள். அவர்கள் ஒரே வித நம்பிக்கையுடன் ஒரே தபஸை நிறை வேற்றும்போதும்கூட ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதப் பயனை யும் முடிவையும் பெற எண்ணி அவ்விதம் செய்கிறார். இது ஏதோ அடிப்படையின்றி காரணமில்லாமல் நிகழும் செய்தியல்ல. தபஸ் செய்கிறவர்கள் இயல்பான தன்மைகள் (குணங்கள்) மாறுபட்டிருக்கின்றன. தபஸ் செய்கிறவர்களிலும் சாத்விகர் கள், ராஜஸர்கள், தாமஸர்கள் உண்டு. அவரவர் குணத்துக் கேற்றவாறு அவர்கள் தவத்தின் வேகம், ஆழம், பயனில் மாறுபாடு இவற்றில் வேறுபாடு காணப்படுகிறது. அவர்கள் தங்கள் தபஸினால் பெறவிரும்பும் பயன்களும் மாறுபடுகின்றன.

பின்வரும் சுலோகங்களில் மூவகை தபஸ்விகள், அவர் கள் தபஸின் தன்மை ஆகியவை சொல்லப்படுகின்றன:

ச்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத் த்ரி விதம் நரை:
அபலாகாங்க்ஷிபிர் யுக்தை: ஸாத்விகம் பரிசக்ஷதே
17:17

ச்ரத்தயா—நம்பிக்கை கொண்ட ஈடுபாட்டுடன் பரயா—(உயர்வற) ஆக உயர்ந்த; தப்தம்—தோற்கப்பட்ட; தப—தவவிரதம்; தத்—அது; த்ரி விதம்—மூவித; நரை—மனிதர்களால்; அபலாகாங்க்ஷிபி—பயன்விரும்பாதவர்களால்; யுக்தை—நன்கு இணைந்து; ஸாத்விகம்—சாத்வீகம் என்று; பரிசஷதே—சொல்லப் படுகிறது.

இந்த மூவகை தவத்தை பயன் விரும்பாத, முற்றிலும் இணைந்து, மிக மிக உயர்ந்த நம்பிக்கை கொண்ட ஈடுபாட்டுடன் மனிதர்கள் செய்யும்போது அதை சாத்வீகம் என்று சொல்கிறார்கள்.

மனிதர்கள் இந்த உடல், பேச்சு, மனம் பற்றிய மூவகை நோன்புகளையும் (தவங்களையும்) முற்றிலுமாக அவற்றுடன் இணைந்து பயன்களில் கவ்விப் பிடிக்கும் பற்றோ பதற்றமோ இல்லாமல் செய்யும்போது அந்தத் தபஸ் ஸாத்விக வகையாகிறது. ''பயன் என்பது மொத்தமான, பழைமையின் விளைவுகள் நிகழ் காலம் மாற்றித்தருகிற ஏற்பாடுகள்'' என்று தெரிகிற காரணத்தால் எவர் வருங் காலத்தைப் பற்றி அலட்டிக்கொள்வதில்லையோ அவர்களே நல்லவர்கள். சாத்வீகர்கள்; சாதுக்கள். இன்று செய்யப்படும் செய்கைகளில் காட்டப்படும் திறமையும், முழுமையுமே வருங்காலப் பயனுக்கு உரிய உருவைத் தருகின்றன. எனவே வருங்காலத்தைப் பற்றிக் கவலைகொண்டு அலட்டிக்கொள்வது கண்டிப்பாய் புத்தி சாலித்தனமான செயல் ஆகாது. அதனால் தற்கால (இன்றைய) செயல்பாடு தரம் குன்றிப் போகும். எனவே சாத்வீகர்களான நல்லவர்கள் பயன் விரும்பாமலே உண்மையான ஈடுபாடுடன் மேலே சொல்லியபடி (உடல், மனம், வாக்குப் பற்றிய) மூவகைத் தபசையும் செய்து தங்கள் தவத்தின் மூலம் பெரும் பயனை அடைகிறார்கள்.

ராஜஸர்கள் செய்யும் தவம் பின் வருமாறு இருக்கும்:

ஸத்காரமான பூஜார்த்தம் தபோ தம்பேன சைவ யத்
க்ரியதே ததிஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்ருவம்
17:18

சத்காரமான, பூஜார்த்தம்—வரவேற்பு, மதிப்பு, பூஜை இவற்றைப் பெற எண்ணி; தப—தபஸ்; தம் பேனச ஏவ—போலி ஆடம்பரத்துடனேயும்; யத்—எது; க்ரியதே—செய்யப்படுகிறதோ; தத்—அது; இஹ—இங்கு; ப்ரோக்தம்—சொல்லப்படுகிறது;

ராஜஸம்—ராஜஸம்; சலம்—ஆட்டம் கொண்டது; அத்ருவம்—நிலேக்காதது.

எந்தத் தவம், நல்ல வரவேற்பு, மரியாதை, பூஜை இவை கிடைக்கும் என்பதற்காகவும், ஆடம்பரத்துடனும் செய்யப்படுகிறதோ அதை இங்கே ராஜஸம், உறுதியில்லாதது. நிலேயில்லாதது என்று சொல்லப்படுகிறது.

வரவேற்பு, பெருமை, பூஜை—இவை கிடைக்கும் என்று எதிர் பார்த்து செய்யப்படுவது ராஜஸத் தவமாம். அதை ராஜஸ குணம் படைத்தவர்களே செய்கிறுர்கள். உண்மையில் தன் இயல்பு தூய்மையும் சீரும் அடைய வேண்டும் என்று உள் அந்தரங்கத்தோடு செய்யப்படாமல் உலகில் கண்களில் கண்ணுடி மாட்டி விட்டு மக்களிடமிருந்து மலிவாக மதிப்பையும் பூசையையும் பெற்று விடலாம் என்று செய்யப்படும் ஆத்ம சம்யமம், ஆத்ம முயற்சி போன்றவைகள் மனிதன் செய்யும் மோசங்களிலேயே மிக மட்டமான ஏமாற்று வேலே. பகவானே அப்படிப்பட்டவர்களே 'வேஷதாரிகள்'[1] என்று குறை கூறியிருக்கிறுர். அதைத் தான் பகவான் ''தம்பேன'—போலியான ஆடம்பரத்துடன்'' என்கிறுர்.

'இவ்வகைத் தவத்தைச் செய்வதனுல் என்ன நஷ்டம்; என்ன சங்கடம் ஏற்பட்டுவிடும்?' என்று கேட்கலாம். கடைசியில் பார்க்கப் போனுல் தவம் என்பது சிந்தனேச் சக்திகளின் விரயத்தைக் குறைத்து அவற்றை சேமிப்பதும், சேமித்த சக்திகளே சுய வளர்ச்சியின் ஆக்க முயற்சிகளில் ஈடுபடுத்திப் பயன் பெறுவதும்தானே! இருந்தும் கீதாசாரியன் இந்தத் தப்பான எண்ணத்துடன் தவம் இருப்பவர்களேக் கண்டிக்கிறுர். அது 'உறுதியற்றது, நிலேக்காதது' என்று காரணமும் கூறுகிறுர். எந்த புத்திசாலித் தனமான சுயமுயற்சியானுலும் அதற்கு விளேவுகள் ஏற்பட குறிப்பிட்ட காலம் சென்றேயாக வேண்டும். சுய முயற்சி விடாமல், செய்யப்பட வேண்டும். அப்போது தான் உருப்படியான பயன்கள் விளேயும். கேவலம் சமூகத்தில் பெருமை பெற வேண்டும் என்ற மட்டமான விளேவை மட்டும் எண்ணி தவம் முயன்முல் அந்தத் தவத்தில் போதுமான அளவு தீவிரமோ அடர்த்தியோ ஏற்பட முடியாது. பிறகு அந்த ராஜஸத்தபசு நல்ல பயன் தராத ''சுயத் தேவை மறுப்புக்களில்'' தான் முடியும்.

புத்தி மந்தர்கள் தாமஸ வகையைச் சேர்ந்த தபசைச் செய்கிறுர்கள்:

மூடக்ராஹேணுத்மனே யத்பீடயாக்ரியதே தப:
பரஸ்யோத்ஸாத நார்த்தம் வா தத்தாமஸ முதாஹ்ருதம்
17:19

[1] 3ம் அத்தியாயம் 6,7,ம் சுலோகங்கள்

மூடக்ரோஹேண—மடத்தனமான பிடிவாதம் கொண்டு; ஆத்மன—ஆத்மாவினுடைய; யத்—எது; பீடயா—துன்புறுத்தியோ; க்ரியதோ—செய்யப்படுகிறதோ; தப—தவம்; பரஸ்ய—மற்றவரை; உத்ஸாதநார்த்தம்வா—அழித்தல் பொருட்டோ; தத்—அது; தாமஸம்—தாமஸமானது என்று; உதாஹ்ருதம்—சொல்லப்பட்டிருக்கிறது.

எந்தத் தபசு முட்டாள்தனமான கொள்கைக்காக தன்னைச் சித்ரவதை செய்துகொண்டோ, அல்லது பிறரை அழிப்பதற்கென்று செய்யப்படுகிறதோ அது தாமஸம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

தன்னைச் சித்திரவதை செய்துகொண்டு ஏதோ ஒரு முட்டாள் தனமான பிடிவாதத்தை ஈடேற்றச் செய்யப்படுகிற தபசு, அல்லது பிறரை அழிக்க வேண்டும் என்ற குரூர ஆசையால் செய்யப்படும் தபசு மிக மிக மட்டமான, கீழ்த்தரமான வகையைச் சேர்ந்தது. 'தவம்' செய்கிறவருக்கு, 'எதற்காகத் தவம் செய்கிறோம்? என்ற அறிவு இருக்கவேண்டும். மேலும் ''தவம் என்றால் என்ன? எப்படிச் செய்யப்பட வேண்டும்?'' என்கிற அறிவும் வேண்டும். முறையைப் பற்றி சரியான அறிவு இல்லாமல் யாரும் அந்தக் கரண ஒருமையையும் ஆன்மீக முழுமையையும் அடைவதற்கான வழியில் தன் இஷ்டப்படி தனி வழியில் நடக்க முடியாது.

வேதம் கருதிச் சொல்கிற தபஸைப் பற்றித் தவறாகப் புரிந்து கொண்டு தவம் செய்பவன் அதிகம் போனால் தன்னை வருத்திக் கொள்ளலாம். அதற்கு மேல் பலன் ஏற்படாது. தன்னை வருத்திக் கொள்ளல் ஆன்மாவின் உண்மை அழகை வெளிக்கொணர முடியாது. அது மோசமான முறையில் நம் பூரணத்துவத்தைக் கோணலாகக் காட்டும் முறுக்கப்பட்டும், கிழிக்கப்பட்டும் உள்ள ஆளுமை, தகாத வழிப்பட்ட உணர்ச்சிகள், தூய்மையற்ற கொள்கைகள்—இவை தன் அபத்தமான தவத்தின் பயனாக விளைய முடியும்.

இவ்விதம் தப்பாகப் புரிந்துகொள்ளப்பட்டு தவறான முறையில் செய்யப்படுகிற தவம் பிறரைத் துன்புறுத்த எனவும் செய்யப்பட்டால் அதை தாமஸத் தவம் என்கிறோம்.

தானமும் மூவகைப்படும்:

தாதவ்ய மிதி யத்தானம் தீயதே (அ)னுபகாரிணே
தேசே காலே ச பாத்ரே ச தத்தானம் ஸாத்வீகம் ஸ்ம்ருதம்
17:20

தாதவ்யம்—கொடுக்கப்படவேண்டும்; இதி—என்று; யத்—

எந்த; தானம்—தானம்; தீயதே—கொடுக்கப்படுகிறதோ; அனுபகாரிணே—நமக்கு உபகாரம் செய்யாதவர்களுக்கு; தேசே—சரியான இடத்தில்; காலே—சரியான நேரத்தில்; பாத்ரே—சரி யான ஆளுக்கு; ச—மேலும்; தத்—அந்த; தானம்—தானம்; ஸாத்விகம்—சாத்விகம் என்று; ஸ்ம்ருதம்—நினைவு கொள்ளப் படுகிறது.

எந்த தானம் பிரிதியுபகாரம் செய்யாதவருக்கு, கொடுப்பது கடமை என்ற எண்ணத்தில், சரியான இடம், காலம், பரத்ரம் (உரிய மனிதர்) என்று அறிந்துகொடுக்கப்படுகிறதோ அது சாத் வீகம் என்று கருதப்படுகிறது.

''இது கடமை. செய்யப்பட வேண்டிய தர்மம்'' என்று எண்ணி கொடுக்கப்படுகிற தானம் சரியான முறையில் செய்யப் படுகிற தானமாம். அதைப் பெற்றுக்கொள்கிறவன் அனுபகாரி யாக அதாவது பதிலுக்குத் திருப்பி ஒன்றும் உபகாரம் செய்யா தவனாக இருத்தல் வேண்டும். சரியான தானம் என்பது வாங்கிக் கொள்கிறவன் யார்? எவர் என்று வித்தியாசம் பாராட்டக் கூடாது. தன் விருப்பு வெறுப்புக்களால் பாதிக்கப்படாமல் பாத்ரம் அதாவது தானம் பெறுகிறவர் அதற்கு உரியவர் தானே என்று அறிந்து உரிய இடத்தில் தானம் கொடுக்கப்பட வேண்டும். சரியான நம்பிக்கையுடன் சரியான பாத்திரத்தில் சரியான இடத்திலும் காலத்திலும் கொடுக்கப்படும் தானம் சாத்வீக வகையைச் சேர்ந்ததாகும்.

''ஒரு மரம் தன் பழங்களைக் கொடுப்பது போல் தானம் கொடுக்கவேண்டும்'' என்று சொல்கிற 'கொள்கைக் குழு' (*School*) ஒன்று இருக்கிறது. மரத்திலுள்ள பழம், அதன் கீழ் யார் வந்தாலும் அவருக்குக் கிடைக்கிறது. அவர் எந்த இனத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும், ஆணாயிருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் அது அவருக்குக் கிடைக்கும். அவர் வகிக்கும் பதவியைப் பற்றியும் கவலை இல்லை. மரங்கள் மாறுபாடு பாராட்டாமல் எல்லோருக்கும் உதவவுவது போல மனிதனும் தன் சொத்தை எல்லோருடனும் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்று சொல்கிறார்கள்.

ஆனால் இந்தக் கோட்பாட்டை நம்பவும், அதன்படி நடக்கவும் அநேகரால் முடிவதில்லை. கீதை இந்த விஷயத்தில் தெளிவாக இருக்கிறது. அது, 'மனிதன் தன் பகுத்தறிவைப் பயன்படுத்தி தானம் உரியவருக்குப் போய்ச் சேருகிறதா என்று முடிவு செய்ய வேண்டும்' என்று சொல்கிறது.

ராஜஸ வகை தானம் அடுத்துக் கூறப்படுகிறது:

யத்து ப்ரத்யுப காரார்த்தம் பலமுத்திச்ய வா புன:
தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தானம் ராஜஸம் ஸ்ம்ருதம்
17:21

யத்து—எது...வோ; ப்ரத்யுபகாரார்த்தம்—பிரதி உபகாரம் கிடைக்கும் என்பதற்காக; பலம்—பயனை; உத்திச்ய—எதிர் பார்த்து; வா—அல்லது; புன—மீண்டும்; தீயதே—கொடுக்கப்படு கிறதோ; ச—மேலும்; பரிக்லிஷ்டம்—மனக்கிலேசத்துடன்; தத்—அது; தானம்—தானம்; ராஜஸம்—ராஜஸம் என்று; ஸ்ம்ருதம்—கொள்ளப்படுகிறது.

எது (எந்தத் தானம்) திரும்பக் கிடைக்கும் என்பதற் காகவோ, மீண்டும் பயனை எதிர்பார்த்தோ, மனதில் வருத்தத் துடன் கொடுக்கப்படுகிறதோ அந்தத் தானம் ராஜஸம் என்று கொள்ளப்படுகிறது.

'திரும்பி ஏதாவது லாபம் கிடைக்கும்' என்று தானம் செய்யும்போது தேசம், காலம் எதுவாக வேனும் இருக்கட்டும்—அது ராஜஸ தானமாகிறது. தாராளமாக, மனம் மகிழ்ந்து செய்யாமல் பிடித்தமில்லாத வகையில் மனத்தைக் குலுக்கி வருத்திக்கொண்டு செய்யப்படும் தானமும் ராஜஸ தானம்தான். நாம், நம்முடைய அன்றாட உலக வாழ்வில் செய்யும் தானங் களில் எவ்வளவுதான் இந்த வகையைச் சேர்ந்தனவாக இல்லை?

தாமஸ (ஒளி, அழகு, நலம் மங்கிய) வகை தானம் மேலே சொல்லப்படுகிறது):

அதேசகாலே யத்தான மபாத்ரேப்யச்ச தீயதே
அஸத்க்ருதமவஞ்ஞாதம் தத்தாமஸ முதாஹ்ருதம்
17:22

அதேச காலே—சரியில்லாத இடத்திலும் காலத்திலும்; யத்—எது; தானம்—தானம்; அபாத்ரேப்யச—தகுதியற்ற பாத்ரங் களுக்கும்; தீயதே—கொடுக்கப்படுகிறதோ; அஸத்க்ருதம்—மரி யாதையின்றி; அவஞ்ஞாதம்—அவமானம் செய்து; தத்—அது; தாமஸம்—தாமஸம் என்று; உதாஹ்ருதம்—கூறப்பட்டிருக்கிறது.

எது தவறான இடத்தில் தவறான காலத்தில், தகுதியற்ற பாத்ரத்துக்கு (பெறுவோருக்கு) மரியாதை காட்டாமல் அவமரி யாதையும் செய்து கொடுக்கப்படுகிறதோ அந்தத் தானம் தாமஸம் என்று சொல்லப்படுகிறது.

மந்த புத்தியுள்ள மனிதர்களால் தானம் தகவில்லாத இடத்திலும், நேரத்திலும், தகுதியற்ற நபருக்கும் மரியாதை காட்டாமல், அலக்ஷியமாகவும், வெறுப்புடனும் கொடுக்கப்படு

கிறது. அவ்வகைத் தானங்கள் தாமஸ தானங்கள் என்று சொல்லப்படுகின்றன.

தானம் உள்ளிருந்து எழும் தடுக்க முடியாத இனிய ஆசை யுடன் பிரியமாகக் கொடுக்கப்படல் வேண்டும். மனிதன் உள்ளத்தில் அபரிமிதமான தாராள உணர்வு இருத்தல் வேண்டும். அதிலிருந்து தான் புத்திசாலித் தனமான தான உணர்வு எழமுடியும். கொடுத்தால் குறைந்துவிடும் என்று எண்ணி தயக்கத்துடன் கொடுப்பவன் தானம் கொடுப்பதாகக் கருத முடியாது.

வேள்விகள், தானம், தவம்—இவற்றை பூரணமான பலனுடையனவாக ஆக்கப்பின்வரும் வழி காட்டப்படு கிறது:

ஓம் தத்ஸதிதி நிர்தேசோ ப்ரஹ்மணஸ் த்ரி வித: ஸ்ம்ருத:
ப்ராஹ்மணுஸ்தேன வேதாச்ச யஞ்ஞாச்ச விஹிதா: புரா
*17:23*

ஓம் தத்ஸத்—ஓம் தத்ஸத்; இதி—என்று; நிர்தேச—பதவி (பெயர்); ப்ரஹ்மண—பிரமத்துடைய; த்ரிவித—மூன்று விதமாக; ஸ்ம்ருத—சொல்லப்பட்டிருக்கிறது; ப்ராஹ்மண—பிராமணர்கள்; தேன—அதனுல்; வேதா—வேதங்கள்; ச—மேலும்; யஞ்ஞா—சட வேள்விகளும்; விஹிதா—படைக்கப்பட்டன; புரா—முன்னுல்.

ஓம் தத்ஸத்—என்று பிரம்மத்துடைய மூன்று அடை யாளங்கள் (பெயர்களாக, பதவிகளாக) சொல்லப்பட்டிருக் கின்றன. அதனுல் முன்னுல் பிராமணர்களும் வேதங்களும், வேள்விகளும் படைக்கப்பட்டன.

ஓம் தத்ஸத்—இது பிரம்மத்தினின் முப் பெயர்களாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வைதீகச் சடங்குகளில் இந்த 'நிர்தேசத்தைச் சொல்லி பவித்திரமான பூசையில் ஏற்பட்டுவிடும் குறைபாடுகளுக்குப் பரிகாரம் செய்கிருர்கள் (நீக்குகிருர்கள்). ஒவ்வொரு செயலுக்கும் பலன் ஏற்படுவது உண்மைதான். ஆனுல் அந்தப் பலனும் செயல் மட்டுமல்லாது, செய்பவனின் எண்ணத் தூய்மை, விருப்பத் தூய்மை ஆகியவற்றையும் பொறுத்திருக்கும். பவித்திரமான செயல்கள் எவ்வளவு திறமை, விடா முயற்சியுடன் செய்யப்பட்டாலும், அச் செயல்களைத் தூண்டி நிற்கும் எண்ணம் தீயதாக இருந்தால் அவை நல்ல அதிக மான பயன்களைக் கொடுக்க முடியாதவாறு செய்யப்பட்டுவிடும். நாம் செய்யும் வேலைகள் எல்லாம் வெளித் தோற்றத்தில் ஒரே மாதிரித் தோன்றலாம். ஆனுல் நம்மில் ஒவ்வொருவருடைய தனித் தனி எண்ணங்களுக்கேற்றவாறு பயன்கள் கூடியும் குறைந்தும், நல்லனவாகவும், கெட்டும் இருக்கும்.

நம்முடைய உள் எண்ணங்களின் பெருமையும் ஒளியும் பகவானுடைய பெயரை நினைப்பதனுல் அதிகமாகும். மனிதன் தன் சட உரைகளிலிருந்து (உடல் மனம் புத்தி—முதலியவற்றிலிருந்து) உறவைத் துண்டித்துக்கொண்டான் என்ருல் உடனே அவனுடைய உறவும் இணைப்பும் ஈசுவரனுடன் ஏற்பட்டு விடுகின்றன. எவ்வளவுக்கெவ்வளவு புனிதமான தர்மம் சுயநலமற்று இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதன் பயனுகக் கிடைக்கும் நன்மைகள் பரிசுத்தமானவையாக இருக்கும். ஒருவன் தன் 'அகம்' பாவத்தை ஒழிக்க வேண்டும் என்ருல் அவன் தன் ''ஆன்ம நிலையின் உணர்வை''ப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

ஓம் தத் ஸத் என்ற வாக்கியம் மூன்று சொற்களால் ஆகியது. ஒவ்வொன்றும் உண்மைப் பரம் பொருளின் ஒரு அமிசத்தைக் குறிக்கிறது. 'ஓம்' உணர்வுகளை மீறி பரம்பொருளாய் நிற்கும் சுத்த ஆத்மாவைக் குறிக்கிறது. அது பிறப்பில்லாத தனி முதல் பொருள், இந்த உடல், மனம், புத்தி ஆகியவற்றிற்கு தாராளப் பொருளாய் இருக்கும் எல்லை, வரம்பற்ற அடிப்படைத் தத்துவம் நம் சாஸ்திரங்களில் 'தத்' என்ற சொல்லின் மூலம் பூரணப் பொருளான அந்த அவ்யய பரம லக்ஷ்யப் பொருள் சுட்டப்படுகிறது. வேதங்களில் வரும் மஹா வாக்யமான 'தத்வமஸி'யில் வரும் 'தத்' எந்தப் பொருளிலிருந்து பிரபஞ்சம் தோன்றி, எதன் ஆதரவில் நின்று இயங்கி எதற்குள் மீண்டும் இறுதியில் மறைகிறதோ அந்தப் பொருளைச் சுட்டுகிறது. ஸத் என்ருல் ''இருப்பு: நம் அன்றாட வாழ்வில் காணப்படுகிற பொருள்கள், கொள்கிற உணர்ச்சிகள், எண்ணுகிற எண்ணங்கள் இவற்றின் மூலமாக எல்லாம் இயங்குகிற இருப்பு (உயிர்)த் தத்துவம்.

எனவே 'ஓம்' என்னும்போது நெருங்க நெருங்க கிட்டாமல் உயர்ந்து நிற்கும் தனி முதல் பொருள் பற்றிய சிந்தனைகளைத் தூண்டிக் கொள்கிறோம். 'தத்' என்று சொல்லி எங்கும் பரவி நிற்கும் உண்மைப் பொருள் பற்றிய எண்ணங்களை அழைத்துக் கொள்கிறோம். 'ஸத்' என்று சொல்லி உயிர்த் தத்துவமான சத்தியப் பொருள் பற்றிய சிந்தனைகளை வரவழைக்கிறோம். இவ்விதம் ஓம் தத் ஸத் என்று எண்ணும்போது நம் கர்மேந்திரியங்களை எல்லாம் ஒருமுகப் படுத்தி உயர்த்திக் கொண்டு உலகில் புறத்தே நாம் செய்யும் செயல்களை எல்லாம் சீரமைத்து பரிசுத்தமாக்கிக் கொள்கிறோம்.

இந்த சுலோகம் மிக அதிக விவாதத்துக்கு உட்படுத்தப் பட்டிருக்கிறது. இது கொஞ்சம் எளிதில் பொருள் புரியாத சுலோகம்தான். எனவே ஒரு ஊர்க்காரர் சொல்வதற்கும் மற்றொருவர் சொல்வதற்கும் மாறுபாடு இருக்கிறது. ஸ்ரீ சங்கராச்சாரியார் இந்த சுலோகத்தின் பாஷியத்துக்கு முகவுரை

யாக, ''வேள்வி, தானம், தவம் முதலியவற்றை பூரணமாக்க இந்த விதிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன'' என்று சொல்லி யருளுகிறார். ஆனந்தகிரி அவர்கள் இதற்கு மேல் பின் வரும் குறிப்புக்களைச் சேர்க்கிறார்: வேள்வி, தானம், தவம் முதலிய அனுஷ்டானங்களில் ஏதாவது குறை காணப்பட்டால் பிரம்மத்தின் இந்த மூன்று நிர்தேச மந்திரங்களையும் சொல்லி பூரணமாக்கிக் கொள்ளமுடியும்.''

''இப்படி ஒரு குருட்டு நம்பிக்கையினால் என்ன பயன்?'' என்று நமக்கு வியப்புத் தோன்றலாம். ஸ்ரீ சங்கரர் அவர்கள் பின்வருமாறு விளக்குகிறார்கள்: சாத்துவீக வகையைச் சேராத அனுஷ்டானங்களாக இல்லாத போனாலும் அவை (இந்த நிர்தேச உச்சாரணத்தால்) சாத்வீகமாக்கப்பட்டு நிறைவை அடைகின்றன.

பிரம்மத்தின் மூன்று நிர்தேசங்களால் சுட்டப்பட்டிருக்கிற அந்த அனந்தமான நித்ய சத்யதத்துவ மூலத்திலிருந்து தான் எல்லா ஜாதிகளும், வேதங்கள், வேள்விகளும் முதலில் தோன்றின. இவை காலம் சிருஷ்டிக்கப்படும் போதே சிருஷ்டிக்கப்பட்டு விட்டன. எது அடிப்படையோ (அதிஷ்டானமோ) அதிலிருந்துதான் அத்யாஸங்கள் (மேலேற்றிப் பார்க்கப்படும் பொருள்கள்) எழுந்து, தங்க முடியும் அதற்குள் தான் மறைய முடியும்.

மனித முயற்சிகளை எல்லாம் இரண்டு வகைகளாகப் பிரிக்க முடியும். ஒன்று ஆகாரம் சம்பந்தமான வேலைகள். அதாவது இந்த உடலை வளர்க்க என செய்யப்படும் செயல்கள். இரண்டாவது நியத கர்மங்கள். இவற்றுள் யஞ்ஞம் (வேள்வி) என்று சொல்லப்படுகிற கூட்டு முறையில், பக்தி சிரத்தையுடன், பண்பாடு வளர்க்கச் செய்யப்படும் அனுஷ்டானங்கள்; தான தர்மங்கள் தன்னை அடக்க உதவும் தவச் செயல்கள் ஆகியவை அடங்கும்.

'ஓம்' என்ற மந்திரத்தை எப்போது ஜெபிக்க வேண்டும்?

தஸ்மாதோ மித்யுதாஹ்ருத்ய யஞ்ஞதான தப: க்ரியா:
ப்ரவர்த்தந்தே விதானோக்தா: ஸததம் ப்ரஹ்மவாதினம்
17:24

தஸ்மாத்—அதனால்; ஓம்—ஓம்; இதி—என்று; உதா ஹ்ருதய—உச்சரித்து; யஞ்ஞதான தப: க்ரியா: வேள்வி, தானம், தவம் முதலிய செயல்க்ள்; ப்ரவர்தந்தே—தொடங்கப்படுகின்றன; விதானோக்தா:—சாஸ்திரம் விதித்த விதம்; ஸததம்—எப்போதும்; ப்ரஹ்மவாதினம்—பிரம்மவாதிகளால்.

எனவே 'ஓம்' என்று சொல்லி யக்ஞ தான தவக் கர்மங்கள் சாஸ்திர விதிகளின்படி பிரம்மவாதிகளால் எப்போதும் தொடங்கப்படுகின்றன.

பண்பாட்டுச் சீரில் உயர்ந்த வாழ்வு வாழ விரும்புகிறவர்கள் யக்ஞ தான தவக் கர்மங்களைச் செய்யும் போது 'ஓம்' என்று மந்திர உச்சாரணம் செய்கிறார்கள். ஓம் என்று சொல்லும்போது நாம் நம் மனதில் தெய்வீக உணர்வையும் எல்லையற்ற பரம் பொருளின் பரம ஈசுவரத் தன்மையையும் மணமாகப் பரப்பிக் கொள்கிறோம். அதனால் நம் அனுஷ்டானங்களுக்கு வேள்வி, தானம், தவம் முதலிய கர்மங்களுக்கு ஒரு கருத்தாழமும் பயன் மதிப்பும் ஏற்படுகின்றன. நம் உள்ளத்தை அந்தத் தனி முதல் தத்துவத்தின் உணர்வைக் கொண்டு நிரப்புகிறோம் என்றால் நம்முடைய 'சுயமுறைப்பு'க் காரணமாக ஏற்படுகிற பிணைப்புக்களின் குறுகிய பிடிப்பிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்கிறோம். இவ்விதம் மனம் விடுதலை அடையும் போது அது தன் தவ அனுஷ்டானங்களில் அதிகப்படியான ஈடுபாடும் திறமையையும் காட்டுகிறது; வேள்விகளில் அதிகப்படியாக சுயநலம் குறைகிறது. தானம் செய்யும் போது அது அதிகம் தாராளமும் பெரும் தன்மையும் கொண்டதாக ஆகிறது.

'தத்' எப்போது சொல்லப்படுகிறது?

ததித்யநபிஸந்தாய பலம் யஞ்ஞதப: க்ரியா:
தானக்ரியாச்ச விவிதா: க்ரியந்தே மோக்ஷ காங்க்ஷிபி:
17:25

தத்—'அது'; இதி—என்று; அநபிஸந்தாய—எதிர் நோக்காமல்; பலம்—பயனை; யஞ்ஞதப: க்ரியா:—வேள்வி, தவச் செயல்கள் தானக்ரியா: ச—தானச் செயல்களும்; விவிதா:—பல; க்ரியந்தே—செய்யப்படுகின்றன; மோக்ஷகாங்க்ஷிபி:—மோக்ஷம் (வீடு) விரும்புகிறவர்களால்.

'தத்' என்று சொல்லிக்கொண்டு பயன்களைப் பற்றி எண்ணிக்கொண்டிராமல் மோக்ஷம் விரும்புகின்றவர்களால் பலவகையான வேள்வி, தவம் மேலும் தானச் செயல்கள் செய்யப்படுகின்றன.

மோஷகாங்க் ஷிபி: மோக்ஷம் (விடுதலை) விரும்புகிறவர் களால் நவீன யுக மனிதன் தன்னை எந்தவிதத்திலும் உடலளவில் கட்டுப்பட்ட அடிமையாகக் கருதுவதில்லை. பிறகு இது என்ன விடுதலைப் பேச்சு? வேதாந்தத்தில் இந்தச் சொல்லைப் பார்க்கும் போது நாம் வியப்படைகிறோம். எதற்காக விடுதலைக்கு வழி அல்லது உத்தியைச் சொல்லிக் கொண்டு அலைகிறது இந்த வேதாந்த சாஸ்திரம். சாஸ்திரம் நமக்கு, நம்முடைய உடல்

பசிகள், உணர்ச்சிகளின் பலஹீனங்கள், புத்தியின் சிக்கல்கள் இவற்றிலிருந்து நம்முடைய முழு ஆளுமையையே விடுவிக்க வழிமுறைகளைச் சொல்லித் தருகிறது. நெருக்கி அமுக்கும் எல்லைத் தொல்லைகளிலிருந்து விடுபட்ட மனிதனுடைய ஆளுமை தன்னை பூரணத்வத்தை நோக்கி மலர வைத்துக் கொள்கிறது. அது தான் அதன் தெய்வீகப் பெருமை. அப்படி நாம் வளரும் போது நம் பார்வையின் வானவெளி விரிகிறது. சாதாரணமாக சுலபமாக வந்து நமக்குக் களைப்பையும் அமைதியின்மையையும் கொடுத்துக்கொண்டு மென்னியைப் பிடித்து நசுக்கும் உலகியல் பதட்டங்கள், துயர்கள் இவற்றை ஒதுக்கிவிட்டு நாம் மிக உயரே போய்விடுகிறோம்.

எவன் தன்னுடைய பற்றுதல்கள், சுயநலம் கொண்ட ஆசைகள், 'தனக்கே எல்லாம்' என்ற குறுகிய செயல்கள் இவற்றின் காரணமாக எழும் கவலைகள், பதற்றங்கள்—ஆகியவற்றிலிருந்து மோக்ஷம் (விடுதலை) பெற முயலுகிறானோ அவன் செய்யும் செயல்களின் முறை இவற்றுக்கெல்லாம் காரணமாக இருக்கும் வாசனைகள் அதிகம் ஆகிச் சேராமல் அழியச் செய்வதாக இருக்கவேண்டும். அதற்கேற்ற முறை மனப்பாங்கின் மாறுதல்தான். அந்த மாறுதல் மூலம் இந்த மிகவும் நுண்ணிய பயனை அடைவது எப்படி என்று இந்த சுலோகம் ஒரு ரஹசியத்தைச் சொல்லிக் கொடுக்கிறது.

[1] ''மோஷம்'' விரும்புகிறவர்கள் வேள்விகள், தானம், தவம் முதலியவற்றை 'தத்' என்று சொல்லியே தொடங்குகிறார்கள். அத்துடன் அவர்கள் பலனை விரும்பாமல் செய்கிறார்கள். ஏற்கனவே நாம் சொல்லியபடி 'தத்' என்பது பிரபஞ்சத்தின் அடிப்படையான தனி முதல் உண்மைத் தத்துவத்தைக் குறிக்கிறது. அது 'எல்லா உயிர்களின் ஒருமையை'ச் சுட்டிக் காட்டுகிறது. நாம் குடும்பம் பூராவும் எடுத்துக்கொண்டு அதன் நலனுக்காகச் சிந்திக்கிறோம் என்றால் நம்முடைய தனிச் சொந்த நலனை நாம் மறக்கிறோம் என்று ஆகிறது. சமூகம் பூராவுக்குமாகச் சிந்தித்தால் நம் குடும்பத்தின் தனி நலனை மறக்கிறோம். தேசத்தின் நலனைச் சிந்தித்துச் செயல்படும்போது நம் சமூகம் பின்னால் போய்விடுகிறது. உலகுக்கே, மனித சமூகத்துக்கே சிந்தித்து உழைக்கும்போது நம் தேச நலன்களை அமுக்கி விடுகிறோம். இவ்விதம் மேலே சிந்திக்கும் போது 'தத்'துடன், அதாவது பிரபஞ்சம் முழுவதும் ஒன்றாக இருக்கும் அந்த ஆன்மீக உண்மைத் தத்துவத்துடன் இணைந்த மனதுடன் வேள்வி தானம், தவம் இத்துறைகளில் செயலாற்றும் போது 'அகம்'காரம் இல்லாமல் செயலாற்றுவோம். அப்போது, அதன் பயனாய் நம் சதைக்கு நாம் கொண்டிருக்கும்

---

[1] ஆளுமையின் குறைபாடுகளிலிருந்தும் நெருக்கும் தடைகளிலிருந்தும் விடுதலை.

அடிமைத்தனம், சடப்பொருள்களுக்கு ஏங்கி அவற்றுக்குக் கை கட்டி நிற்கும் அவலத்திலிருந்து நம்மை விடுவித்துக் கொள் கிறோம்.

''சத்தை உச்சரிப்பதற்கு என்ன பொருள்? அதன் உட்கருத்துக்கள் என்ன?

*ஸத்பாவே சாதுபாவே ச ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே*
*ப்ரசஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே.*

*17:26*

ஸத்பாவே—உள்ளதான உண்மை என்ற பொருளில்; சாதுபாவேச—நல்லது என்ற பொருளிலும்; ஸத்—ஸத்; இதி—என்று; ஏதத்—இது; ப்ரயுஜ்யதே—ஆளப்படுகிறது; ப்ரசஸ்தே. மங்களமான; கர்மணி—செயல்களில்; ததா—அவ்விதமே; பார்த்த—பார்த்தா; யுஜ்யதே—உபயோகிக்கப்படுகிறது.

ஏ பார்த்தா! 'சத்' என்ற சொல் உண்மை என்ற கருத்திலும் நன்மை என்ற கருத்திலும் அம்மாதிரியே அந்த 'சத்' சப்தம் மங்களகர்மங்களிலும் உபயோகிக்கப்படுகிறது.

'சத்' உண்மை, நன்மை இரண்டையுமே குறிக்கிறது. பாராட்டுக்குரிய சுப காரியங்களைக் குறிக்கவும் அந்த மந்திரம் பயன்படுத்தப்படுகிறது. நம்முடைய அன்றாட அலுவல்களில், மற்றவருடன் கொள்ளும் உறவில் ஒரு உண்மையைச் சந்திக்கிறோம். அது மற்றதுடன் ஒப்பிட்டுச் சொல்லக்கூடிய உள்ள (அது மற்றதைச் சாராத தனி முதல் உண்மையல்ல). சாதகன் ஏமாந்து போய், அவன் இந்திரியங்கள், மனது, புத்தி, ஆகியன முறையே பார்த்து (தொட்டு) புரிந்துகொள்ளும் பொருள்கள், உணர்ச்சிகள், கருத்துக்கள் ஆகியவற்றையே தனி உண்மை என்று கருதிவிட வாய்ப்பு உண்டு. எனவே 'சத்' என்ற சொல்லை நாம் காணும் இந்த 'சார்பு உண்மைக்'கு அடிப்படையில் தனி உண்மைத் தத்துவமாக, மற்றதைச் சார்ந்து இராத உண்மைத் தத்துவமாக இருக்கும் அந்தப் பொருளை நினைவூட்ட அடிக்கடி உபயோகப்படுத்துகிறோம்.*

பிரமனின் அந்தப் பதமான சத் பின்வருமாறு உபயோகப்படுத்தப்படுகிறது:

*யஜ்ஞே தபஸி தானே ச ஸ்திதி: ஸ்திதி ஸோச்யதே*
*கர்ம சைவ ததர்த்தீயம் ஸதித்யேவாபிதீயதே* *17:27*

---

* பாண்டுக்யமும் காரிகையும் பற்றி சுவாமிஜியின் விரிவுரையில் இரண்டாவது அதிகாரத்தில் ''பலவாய்த் தோற்றமும் மாயையான இருப்பும்'' படிக்கவும். மேலும் கீதை இரண்டாவது அத்தியாயமும் பார்க்கவும்.

யஜ்ஞே—யாகத்தில்; தபஸி—தவத்தில்; தானே—தானத்திலும்; ச—மேலும்; ஸ்திதி—உறுதியுடன் இருப்பு; ஸத்—ஸத்; இதி ச—என்றும்; உச்யதே—சொல்லப்படுகிறது; கர்ம—செயல்; ச—மேலும்; ஏவ—கூட; ததர்த்தீயம்—இவற்றிற்காக அல்லது அந்தப் பரம் பொருளுக்காக; சத்—ஸத்; இதி ஏவ—என்றும் கூட; அபிதீயதே—கூப்பிடப்படுகிறது.

வேள்வி, தவம், தானம் ஆகியவற்றில் நிலைப்பு 'ஸத்' என்று சொல்லப்படுகிறது. மேலும் இவற்றிற்கான (அல்லது பரம் பொருளுக்காகச் செய்யப்படும்) செயலும் கூட சத் என்று கூறப் படுகிறது.

'சத்' என்ற சொல் (மந்திரம்) யாக, தான தர்மங்களில் மனிதன் கொண்டிருக்க வேண்டிய நம்பிக்கையைக் குறிக்கிறது. அதாவது அவற்றின் ஆதாரமாக உள்ள தத்துவங்களை நம்பி ஏற்றுக்கொள்வதை உறுதிப்படுத்துகிறது. அதே போல அவற்றிற் கான பலவிதச் செயல்களில் மனிதனுக்கு உள்ள ஊற்றத்தையும் அது உறுதிப்படுத்துகிறது.

சுருக்கமாக சற்றே சாத்வீக வகையைச் சேர்ந்தனவாக இல்லாத போனாலும் அந்த யாக தானத் தவச் செயல்கள், மனதில் ஓம் தத்ஸத்தின் மூலம் பரம் பொருளை தியானித்துச் செய்யும்போது அவை நலன் நல்குவனவாக ஆகிவிடும். இந்த மந்திரங்களை உளமார நம்பி நல்ல சிரத்தையுடன் இந்த மந்தி ரங்கள் ஜபிக்கப்பட்டால் சாதகன் மனது விரிவடைந்து சுய நலத்தையும் செருக்கையும் விட்டு விடும். 'நான்' என்ற தனித்வ மும் அதை மையமாகக் கொண்டு எழும் ஆசைகளும் (அஹம் கார மமகாரங்கள்) ஒரு பற்றை உண்டாக்குகின்றன. அந்தப் பற்றுக்கள்தான் மனிதனுக்குள்ள ஆன்ம ஆனந்த ஆகாயத்தில் பரக்கப் பறக்கும் சுதந்திரத்தைப் பறித்து விடுகின்றன.

செயற் களத்தில் இறங்கிச் செயல்படும் போது ஏற்பட்டு விடுகிற இவ்விலங்குகளை நாம் மீண்டும் செயல்களின் களத்தி லேயே இறங்கி சரியான கர்மங்களைச் செய்து முன்பு செய்யப் பட்ட தவறான கர்மங்களின் பலன்களைக் கரைத்து ஒழிக்க வேண்டும்.[1] இந்த வாசனாக்ஷய (வாசனைகளை நீக்கும்) வேலை கர் மங்களின் மூலமே நடக்க முடியும். அதே கர்மங்கள் தாம் நம் மனதில் மனக் குறைபாடுகளை ஏற்படுத்தின; ஏற்படுத்துகின்றன என்பதும் உண்மையே. எனவே மனப்பாங்கைச் சரியான முறை யில் வைத்துக்கொண்டு செயல்களைச் செய்து வர வேண்டும்.

1-சரி, தப்பு: எந்தச் செயல்கள் நம் மனதில் 'தவறு செய்து விட்டோம்' என்ற கழிவிரக்கச் சூறாவளியை எழுப்புமோ அவை தவறான செயல்கள். அமைதி யையும் 'நல்லது செய்தோம்' என்ற நிறைவையும் விட்டுச் செல்லும் செயல்கள் சரியான செயல்களாம்.

அப்படிச் செய்தால் கர்ம பலன்களாக வாசனைகள் தங்க மாட்டா. அந்த சரியான மனப்பாங்கு இந்த பிரமனிர் தேசங்களான ஓம் தத் ஸத்தை நினைத்து உச்சரிப்பதன் மூலம் கிடைக்கும். இதன் அடிப்படைத் தத்துவம் என்ன என்றால் கர்மங்கள் கர்ம கர்த்தாவின் மனப்பாங்கும் விருப்பமும் எவ்விதம் இருக்குமோ அதற்கேற்ற வாசனைகளைத்தான் விட்டுச் செல்லும்.

இந்த நற் கருமங்கள் முழு சிரத்தையுடன் செய்யப்படும் போதுதான் பூரணத்துவம் பெறும். எனவே:

*அச்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத்*
*அஸதித்யுச்யதே பார்த்த ந ச தத்ப்ரேத்ய நோ இஹ 17:28*

அச்ரத்தயா—சிரத்தையில்லாமல்; ஹுதம்—ஹோமம் செய்யப்பட்டது; (தியாகம் செய்யப்பட்டது) தத்தம்—தானம் செய்யப்பட்டது; தப:—தவம்; தப் தம்—செய்யப்பட்டது; க்ருதம்—செய்யப்பட்ட; ச—மேலும் (உம்); யத்—எது; அஸத்—அஸத்; இதி:—என்று; உச்யதே—சொல்லப்படுகிறது; பார்த்த—பார்த்தா; ந ச தத்—அது அல்ல; ப்ரேத்ய—சென்ற (இறந்த) பிறகு; ந இஹ—இங்கே இல்லை.

சிரத்தையில்லாமல் எந்த யாகம் (ஹோமம் அல்லது தியாகம்) செய்யப்பட்டாலும் தானம் செய்யப்பட்டாலும் தவம் செய்யப்பட்டாலும் எந்தச் செயல்செய்யப்பட்டாலும் அது 'அஸத்' என்று சொல்லப்படுகிறது. ஏ பார்த்தா! அது இருக்கும் போதும் (இவிடத்துக்கும்) ஆகாது. போன பிறகும் (அங்கேயும்) ஆகாது (உதவாது).

இந்த எதிர்மறையான கூற்று உரத்த இடிக் குரலில் சொல்லப்பட்டிருக்கிறது. 'சிரத்தை' தான் மனிதன் (மனிதனுடைய 'மனிதத்தன்மையின் உண்மையான உருவம்). சிரத்தையில்லாமல் பிரமாதமான பெருமைக்கு உரியதும் நன்மை தரக் கூடியதுமான செயலைச் செய்தாலும் அது 'பின்னால் போகப் போகிற அவிடத்துக்கும் ஆகாது; இருக்கிற இவ்விடத்துக்கும் ஆகாது (பயன்படாது).'' கர்த்தாவின் சிரத்தையின் கனமும் நம்பிக்கையின் ஆழமும் எப்படி இருக்கின்றனவோ அதற்கேற்றவாறு தான் கர்மங்களின் பயன் ஏற்படும். சிரத்தை, நம்பிக்கை இவ்விரண்டையும் சேர்த்துச் சொல்கிற ஸ்திதி:' ('நிலைத்த உறுதி') என்ற சொல்தான் இங்கு ஆளப்பட்டிருக்கிறது. சாதகன் தன் புத்தியில் கொண்டிருக்கும் நல்ல மதிப்பீடுகள்தான் அவன் செயல்களுக்கு ஒளி தருகின்றன. மேலும் சாதகன் செய்யும் கர்மங்கள் அவன் உண்மை நேர்மைக்கேற்றவாறு நல்லது அல்லது கெட்ட பயன்களைத் தருவதுதான் உண்மை என்கிறபடியால்

அவன் செயல்களின் நல்ல, கெட்ட பயன்கள் அவன் சிரத்தை யின் பலத்தைப் பொறுத்தே இருக்கும். இங்கே ''சிரத்தை இல்லாமல் எந்தத் தியாகம் (யாகத்தில் ஹோமம்) செய்தாலும், தானம் அல்லது தவம் செய்தாலும் அது 'அஸத்'தே என்று முடி வாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்கிருதத்தில் உண்மை யல்லாதது. அதாவது உண்மையான (நிரந்தரமான) இருப்பு இல்லாதது 'அஸத்' என்று குறிப்பிடப்படுகிறது. உண்மை யல்லாத தத்துவத்திலிருந்து 'உண்மை' கொண்ட எதுவும் வெளி வர முடியாது. அதே போல் உண்மையான இருப்பு இல்லாத செயலில் இருந்து உண்மையான பயன் கிடைக்க முடியாது. எனவே ஆன்மீகமோ, சமய பந்தமோ பக்திக்கான எந்தக் கர்மங் களாக இருந்தாலும் அவை சிரத்தை இல்லாமல் இயற்றப் பட்டால் எந்த விதமான பயனேயும் தர முடியாது. ஸ்ரீ கிருஷ்ணன் கருத்து இதுதான். சிரத்தை முக்கியம் இன்றியமை யாதது. அது இல்லாமல் முன்னேற்றமோ, பரிணும வளர்ச்சியோ ஏற்படவே முடியாது.

ப்ரேத்ய: இதற்குப் பிறகு (சாவுக்குப் பிறகு) இச்சட்டம் ஆன்மீக உலகிற்கு மட்டுமல்லாது நம்முடைய செயல்பாட்டில் அன்ருட உலகிலும் உண்மையே. இது வாழ்க்கையின் தனிப் பட்ட, ஐயத்துக்கு இடம் கொடுக்காத விதியாகும். சிரத்தை இல்லாமல் யாரும் எந்த செயல் களத்திலும் பிரகாசிக்க முடி யாது. எந்தச் செயலுக்கும், சிரத்தை இல்லாமல் எந்த ஊதியமும் (லாபமும்) பெற முடியாது. சாதாரணமாக சந்தைக் கடையான இந்தப் பொருளியல், உலகானுலும் சரி, பவித்ரமான சமயச் சடங்குகளானுலும் சரி, பலனின் தரத்தையும் பரிமாணத்தையும் உறுதி செய்வது நாம் நம்முடைய திறமை, நம்முடைய நல்ல தன்மை, செய்கிற வேலேயின் களம் இவற்றில் நாம் கொண் டிருக்கும் சிரத்தையேயாகும்.

சிரத்தையின்றிச் செய்யப்படும் அச் செயல்கள் மலடாகிப் போகும். 'அஸத்' என்று பிரபு கண்ணபிரான் கூறுகிருர்.

ஓம் தத் ஸதிதி ஸ்ரீ மத் பகவத் கீதாஸூபநிஷத்ஸு
ப்ரஹ்மவித்யாயாம் யோக சாஸ்த்ரே
ஸ்ரீ க்ருஷ்ணர்ஜுன ஸம்வாதே
ச்ரத்தாத் ரயவிபாக யோகோ நாம
ஸப்த த சோத்யாய:

ஓம் தத் ஸத். இவ்விதம் ஸ்ரீமத் பகவத் கீதையாகிற உபநிஷதங்களில், பிரம்ம வித்தையில், யோக சாஸ்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு இடையில் நடந்த சம்பாஷணேயில் ச்ரத்தாத்ரய யோகம் என்கிற பதினேழாவது அத்தியாயம் (விரிவுரை) முடிகிறது.

# மோக்ஷ ஸந்யாஸ யோகம்

18

முன்னுரை

ஸ்ரீ பகவத் கீதை அற்புதமான அழகுகள் கொண்ட ஒரு கலை ஆக்கம். அது மற்ற எல்லாவற்றையும் விட ஒரு தனித் தன்மை பெற்று விளங்குகிறது; கெட்டியான வேதாந்தத்தை (தத்துவப் பொருளை) விளக்கும் நீர்மையுள்ள காவியம். அது தன் அழகிய சந்த ஓட்டத்தில், கிடைக்க அருமையான, தார்மீக, ஆன்மீக மதிப்புக்கள் கொண்ட ரத்தினங்களை அடக்கி வைத்துக் கொண்டிருக்கிறது. அதன் காற்றோட்டம் போன்ற உரையாடல்களில் ஒரு கனமான நடை. அதன் நெகிழ்வான சொற் சாதுர்யம், உடைந்து, சிதறிய உள்ளத்தின் மேல் அமுத நீர்வீழ்ச்சி யாக விழுந்து தன் மந்திர ஸ்பரிசத்தால் அவனை முழு மனிதனாக்கி விடுகிறது. அது அறிவியல் நூல் அல்ல. ஆனாலும் அது சொல்ல வந்த விஷயத்தை அறிவியல் முறையில் விளக்குகிறது. சாதாரணத் தத்துவச் சொற்பொழிவுகள் போல் காற்றாய் மறையும் வெறுமை உள்ளது இல்லை அது. அதற்குள் எல்லாத் தத்துவக் கோட்பாடுகளும் இணைந்து இருக்கின்றன.

அறிவியலின் வேலை வாழ்க்கையை விவரிப்பது; தத்துவம் வாழ்க்கையை விளக்கும். அறிவியல், இயற்கையின் அமைப்புக்கள் போக்குகளை எடுத்து உள்ளபடி சொல்கிறது. தத்துவம் அவற்றின் விளக்கங்களை எடுத்துச் சொல்கிறது. அப்படிப் பார்த்தால் பகவத் கீதை சொல்வது எளிதில் நடக்க இயலாத, வசியப்படுத்துகிற தன்மையுள்ள ஒன்றுதான். அது ஒரு தத்துவம் அறிவியல் ஆக இரண்டுமாய் ஏககாலத்தில் விளங்குகிறது. ஆனாலும் அதில் உள்ள அதிசயம், அது அறிவியல் தத்துவம். அல்லது தத்துவ அறிவியல் இல்லை. அதன் பதினெட்டு அத்தியாயங்களும் வாழ்க்கையின் தத்துவத்தை விளக்குகின்றன. அப்படிச் செய்யும்போது கீதை வாழ்க்கை விஞ்ஞானத்தையும் எடுத்துக் கூறி செயல்முறை விளக்கத்தையும் கொடுத்து விடுகிறது.

கிருஷ்ணன் என்ற முழுமைத் தத்துவத்தின் அதிசய சங்கீதமாக. கீதை விஞ்ஞானம் தத்துவம் இரண்டையும் பூரணமாக இணைத்துப் பாடுகிறது. எனவே அது நம் அறிவையும் மனதையும் ஏக காலத்தில் தன் வயப்படுத்திக் கொள்கிறது. அதுதான் ரகசியம். அதனால்தான் ஸ்ரீ பகவத் கீதை (கடவுளின் பாட்டு) தலை முறை தலைமுறையாக மக்களை மயக்கி ஆட்படுத்திக் கொண்டு வருகிறது—எவ்வளவு காலமாக? அது ஏற்பட்டதி லிருந்து அதாவது கிறிஸ்துவுக்கு சுமார் 3000 ஆண்டுகளுக்கு முன்னாலிருந்து!

இது இறுதி அத்தியாயம்: பரமன் பாடல் முழுமையின் சுருக்கம். இரண்டாவது அத்தியாயம் முகவுரையாக அமைந்த கீதைச் சுருக்கம். பதினெட்டாவது அத்தியாயம் கீதையின் முடிவில் தரும், முன்னால் சொல்லப்பட்டவைகளின் நினைவுக் குறிப்புகளின் தொகுப்பு.

சத்ய, நித்ய பரமாத்மா தான் உலகப் பொருள்களில், உயிர் களின் மூலம் எப்போதும் எங்கும் இயங்கி பல அம்சங்கள் கொண்ட பன்மை உலகில் வெளிப்படுகிறது. இது ஏற்கனவே இந்த நூலில் நிருபிக்கப்பட்டு இருக்கிறது. பல்வகைப் பொருள்கள் நிறைந்த இந்தப் பல்பெருக்க உலகம் மிகவும் மாறுபட்ட அம்சங்கள் நிறைந்து உள்ளது. ஒவ்வொரு உயிரின் தன்மை, நடத்தை, தரம் எதை எடுத்தாலும் உயிருக்கு உயிர் ஆயிரக்கணக்கான விதமாக மாறுபட்டுக் காணப்படுகின்றன.

ஒவ்வொருவனுடைய ஆளுமையிலும் மேல் எழுந்து நிற்கிற சுபாவங்களின் 'மாறுபாடுகள் காரணமாகத்தான் இந்த நிலை என்று விரிவாக அங்கங்கே, ஏன், இதைப்பற்றிக் குறிப்பு வந்த எல்லா அத்தியாயங்களிலுமே எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த சுபாவங்களின் ஆதாரத்தில் கீதை மூன்று வகை மக்களை

இனம் காட்டுகிறது. சாத்வீகர்கள் (நல்லவர்கள்) ராஜஸர்கள் (முரட்டுக் குணம் உள்ளவர்கள்) தாமஸர்கள் (மந்தர்கள்) என அம் மூவகையாம். இம் மூவரும் தியாகம் செய்யும் தங்கள் ஆற்றல்களில் மாறுபாட்டின் காரணமாக ஞானம், கர்மம், துணிவு மகிழ்ச்சி இவற்றில் தங்களுக்குள் மாறுபாட்டை ஏற்படுத்துகிருர்கள் என்ற கருத்து இந்த அத்தியாயத்தில் விவரமாக விளக்கப்படுகிறது.

மேலும் கீதையில் ஸந்யாஸம் (துறவு) த்யாகம் (விட்டு விடுதல்) என்ற இரண்டு சொற்கள் அடிக்கடி பயன்படுத்தப்படு கின்றன. அவற்றிற்கு அங்கங்கே தனித் தனி அழுத்தம் இருப்பது போல் காணப்பட்டு வருகிறது. எனவே இந்த இரண்டு சொற்களை நன்கு தெளிவுபடுத்தி விடவேண்டும்.

அறிவியலில் (விஞ்ஞானத்தில்) சந்தேகம் ஏற்பட்டு விட்டால் ஆபத்துதான்.

இந்த அத்தியாயம், சந்யாஸம், தியாகம் என்ற இந்த இரண்டு சொற்களைப் பற்றிப் பூரண ஆய்வுடன் தொடங்குகிறது.

தொடக்கத்திலேயே அர்ஜுனன் நேரடியாகக் கேட்டு விடுகிருன். சந்நியாஸத்தின் உண்மைப் பொருள் என்ன? தியாகம் எந்தக் கருத்தை உள்ளடக்கியிருக்கிறது? கண்ணபிரான் இந்த இரண்டு சொற்களையும் விளக்கத் தொடங்குகிருர். கீதை படிப்பவர்கள் சிலருக்கு இதில் குறைபாடு தென்படுகிறது. கீதாசாரியன் முக்கியமான விஷயத்தைவிட்டுவிட்டு எதை எதையோ எடுத்துக் கொண்டு சுற்றி வளைக்கிருர் என்பது அவர்கள் காட்டும் குறைபாடு. உள்ளபடி இவர்கள் காட்டும் குறைபாடு நேர்மையான விமரிசனம் ஆகாது! பகவான் சந்நியாசத்தை விளக்கிவிட்டு தியாகத்தைப் பற்றி சொல்கிருர். பிறகு தியாகம் மூலம் தான் உண்மையான சந்நியாசம் ஸித்திக்கும்; சந்யாஸ வாழ்க்கை வாழவும் முடியும் என்று சொல்கிருர். நாம் நம் மனதிலிருந்து ஆரோக்யமற்ற பல பற்றுக்களைத் துறக்கவும் அந்த துறவு வாழ்வில் நிலையாக அசங்காமல் வாழ, மனதைப் பயிற்றவில்லை என்றுல் நம்முடைய ‘பொய்யான அகந்தை’ வாடாது. அது காட்டும் முடிவில்லாத ஆசைகளிலிருந்து தப்ப முடியாது. சந்நியாஸ நிலையின் உண்மையான பொருள் தியாகம்தான். தியாக உணர்வு இல்லாமல் சந்யாஸம் வெற்றுக் காட்சிதான்; ஆட்சி புரிய, உண்மையான சந்தோஷம் என்ற, சாம்ராஜ்யம் இல்லாத ஒரு அரசுக்கு சூட்டிய கிரீடம் போன்றுதான் இருக்கும்.

இங்கே மிகவும் நுணுக்கமாகவும் வாழ்க்கையுடன் உண்மைத் தொடர்பு கொண்ட முறையிலும் போக்குகள்

ஆசைகள், உணர்ச்சிகள் செயல்கள் முதலியன பகுக்கப்பட்டும் தொகுக்கப்பட்டும் விவரங்கள் அநேக வகையில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவை எல்லாம் நாம் நம்மைப் பற்றிய உண்மையை அறிந்துகொள்ள உதவும் குறிப்புகள். நம் உள்ளமாகிய மீட்டர் (*Meter*) பலகையில் அநேக மீட்டர்கள் (அதாவது உள்ளக் கிடக்கையை காட்டும் கருவிகள்) இருக்கின்றன. அவை நம்முடைய தன்மையாகிற இயந்திர இயல் வேலை செய்யும் முறையைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. ஓட்டுநர் ஒருவர் மீட்டர் போர்டில் அசங்கிக் கொண்டிருக்கும் முட்களிலிருந்து இஞ்சினுடைய போக்கையும் தன்மையையும் புரிந்துகொள்கிறார். இஞ்சினுடைய சூடு, அழுத்தம், எண்ணெய், தாவும் வேகம், ஓடும் வேகம், சென்ற மைல்கள் எரிவு முதலிய எவ்வளவு விஷயங்கள் தெளிவாகின்றன. அதே போல இங்கேயும் நமது உள்ளக் கிடக்கைகளைக் காட்டும் முட்களாகிய உள் உணர்ச்சி அசைவுகள் காட்டுவதைப் பார்த்து அவை குறிக்கும் விஷயங்களை கவனித்துக் கொள்ளும்படி சாதகனுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது.

எல்லா முட்களும் மிகவும் பாதுகாப்பான நல்ல குறிகளைக் காட்டுமானால், அதாவது 'இது சாத்வீகம்' என்று குறிக்குமானால் உச்ச பட்சத் திறமையும் நல்ல உறுதியான முன்னேற்றமும் கொண்ட சரளமான வாழ்வு உறுதி என்று நிச்சயமாகும். நம்முடைய போக்குகள், செயல்கள் ராஜஸ வகுப்பில் அமையுமானால் நாம் விழிப்புடன் இருந்து நம்மைத் திருத்திக் கொள்ள வேண்டும். 'தாமஸம்' தான் என்று உறுதியாகி விட்டால் உடனே நின்று நமது தன்மையாகிற இயந்திர இயல் இஞ்சினைக் கவனி. இது தான் இந்தக் கடைசி அத்தியாயத்தின் அறிவுரை என்று கொள்ளலாம்.

ராஜஸ தாமஸ குணங்களால் ஏற்படும் கீழ்மட்ட தூண்டுதல்களை கணத்துக்குக் கண விவகாரங்களில் துறந்து விடுதல் தியாகம். அதன் மூலம்தான் இறுதியில், இந்த அலைவுகளை உண்டாக்கும் ''அகந்தை மையத்தை நீக்க முடியும். நாம் நம்மை ஆட்சி செய்து கொள்ள முடியும். அந்த தத்துவத்தை உணரும் சமயம் இந்த அழிவுறும் தத்துவத்தை முடிவாக விட்டு விடுவோம். அந்த நிலை இங்கே சந்யாஸம் என்று சுட்டப்பட்டிருக்கிறது.

அர்ஜுன உவாச—

ஸன்ந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்வமிச்சாமி வேதிதும்
த்யாகஸ்யஹ்ருஷீகேச ப்ருதக் கேசி நிஷூதன

18:1

ஸம்ந்யாஸஸ்ய—சந்யாஸத்தின்; மஹாபாஹோ—மகத்தான

கரமுடையவரே; தத்வம்—அடிப்படை உண்மையை; இச்சாமி—விரும்புகிறேன்; வேதிதும்—அறிய; த்யாகஸ்ய—தியாகத்தின்; ச—உம்; ஹ்ருஷீகேச— ஏ இருஷி கேச; ப்ருத்க்—தனித்தனி; கேசிநிஷூதன—கேசியைக் கொன்றவரே.

ஏ மகத்தான கையுள்ளவரே! ஹ்ருஷிகேசா! நான் சந்யாஸம், தியாகம், இந்த இரண்டின் அடிப்படை உண்மைப் பொருளைத் தனித் தனியாக அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

பகவான் கண்ணன் கீதையில் அங்கும் இங்கும் அப்போது இப்போது இரண்டு சொற்களை உபயோகித்து வருகிறார் அவ் இரண்டு சொற்களின் சரியான பொருளையும் முழுமையான விளக்கத்தையும் அர்ஜுனன் அவரிடம் கோருகிறான். பல தடவைகள் சந்யாஸம், தியாகம் என்ற இவ் இரண்டு சொற்கள் வருகின்றன. அர்ஜுனன் ஒரு கால் இந்தக் கேள்வியை வெறும் மாணவருக்குரிய மனப்பாங்கில் கேட்டிருக்கலாம். ஆனால் ஸ்ரீ கிருஷ்ணன் கேள்வியை மிகவும் முக்கியமாக எடுத்துக்கொண்டு 'சீரியஸ்'சாக (மனதைப் பதித்து) விவாதிக்கிறார். சீடன் சந்தேகம் கேட்கும் போது அதை மிகவும் சரியான முறையில் சரியான வார்த்தைகளை உபயோகித்துக் கேட்பான் என்று சொல்ல முடியாது. ஆனால் ஆசிரியர் அவன் கஷ்டத்தைப் புரிந்து கொண்டு அவன் ஐயப்பாட்டைத் தீர்க்க வேண்டும். கீதா நாதன் அதைத்தான் இங்கே சொல்கிறார்:

இந்த அத்யாயத்தின் தர்க்க விளக்கம் முழுவதும் சந்நியாஸம், தியாகம் என்ற இந்த இரண்டு சொற்களையே சுற்றி வருகிறது. தியாகத்தைக் கொண்டு எழாத சந்யாஸம் என்பது, புரிந்துகொள்ள முடியாத ஒன்று. அப்படி யாராவது ''அப்படிப்பட்ட சந்யாஸத்தைக் கொண்டவன்'' என்று சொன்னால் அது பொய் வேடமாகத்தான் இருக்க முடியும்! இந்த அத்தியாயத்தின் முழுக் கருத்தும் எவ்வகைப் போக்குகள் ஆவல்கள், தூண்டுதல்கள், உள்ளுணர்வுகள், எண்ணங்கள் விடப்பட வேண்டும்? எவற்றை விட்டால் மனிதனுடைய அசுர சுபாவம் ''உண்மையாகத் துறக்கப்படும்? என்ற கேள்விகளுக்கு விடை அளிப்பதில் அடங்கியிருக்கிறது. இந்த அத்தியாயத்தை அந்த உளப்பாங்கு கொண்டு படிக்க வேண்டும். இல்லை என்றால் இதைப் படிப்பதனால் பயன் ஏதும் ஏற்படாது.

கேசி நிஷூதனன்: கேசி ஒரு அரக்கன். அவன் குதிரை உருவத்தில் ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்ல வந்தான். ஸ்ரீ கிருஷ்ணன் அவனை இரண்டாகப் பிளந்து கொன்றார் அதனால் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு இந்தப் பெயர் வந்தது.

இந்த இரண்டு (தியாகம், ஸந்யாஸம் என்ற) சொற்களுக்கும் இலக்கணம் கூறி இவற்றின் முழு விளக்கத்தையும்

அளிப்பதற்காக ஸ்ரீ கிருஷ்ணன் இவ்வாறு தொடங்குகிறார்.

ஸ்ரீ பகவானுவாச

காம்யானும் கர்மணும் ந்யாஸம் ஸந்யாஸம் கவயோ விது:
ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா:

18:2

காம்யாநாம்—ஆசைகளைப் பூர்த்தி செய்யும்; கர்மணும்—செயல்களுடைய (ஒளி) த்யாகம்—விட்டு விடுதல்; ஸ(ம்)ந்யாஸம்—ஸந்யாஸம் (துறவு) கவய:—விதிகள்; விது:—புரிந்து கொள்கிறார்கள்; ஸர்வகர்ம பலத்யாகம்—எல்லாச் செயல்களின் பயன்களையும் விட்டு விடுதல்; ப்ராஹு:—சொல்கிறார்கள்; த்யாகம்—தியாகம் என்று; விசக்ஷண:—புத்திசாலிகள்.

பகவான் சொன்னார்

கவிகள் (முனிவர்கள்—ஞானிகள்) ஆசைக்குட்பட்டுச் செய்யப்படும் செயல்களை விட்டு விடுதல் 'சந்யாஸம்' என்று அறிகிறார்கள். புத்திசாலிகள் (விவரம் தெரிந்தவர்கள்) எல்லாச் செயல்களின் பயனைத் துறத்தலையே 'தியாகம்' என்கிறார்கள்.

ஆசைகள் தூண்டச் செய்யப்படும் செயல்களை முழுமையாக விட்டு விடுதலே 'ஸந்நியாஸம்'. செயலின் பயனைத் துறந்து விடுதலே 'த்யாகம்'. விவரம் அறியாதவர்களுக்கு இரண்டு பொருள்களும் ஒன்றே போலத்தான் தோன்றும் ஏன் என்றால் எல்லா ஆசைகளுமே செயல்களின் பயன்பற்றியதாகத் தான் இருக்கும். எனவே ''ஆசைபற்றி எழுந்த வேலையை விடுவது'' என்றாலும். ''விளைவை அனுபவிப்பது என்ற பரபரப்பை விட்டு விடுதல்'' என்றாலும் மேலெழுந்தவாரியாக விளங்கும் பொருளைப் பார்க்கிறவர்களுக்கு ஒன்றாகத்தான் தோன்றும். இரண்டும் ஆசையை விடுதல்தான். ஆனால் தியாகத்துக்கும் சந்யாஸத்துக்கும் சற்றே மாறுபாடு உண்டு. என்றாலும் தியாகத்துக்கும் ஸந்யாஸத்துக்கும் பொருளில் பிரிக்க முடியாத இணைப்பு உண்டு. செயல், நிகழ்காலத்தில் செய்யப்படும் ஒன்று. உரிய வருங்காலத்தில் விரும்பிய விளைவை ஏற்படுத்தும் என்று நம்பிச் செய்யப்படுகிறது. விளைவு, இன்று நாம் செய்யும் செய்கையின் பயனாக வருங்காலத்தில் உரியநேரத்தில் நாம் பெறுவது. ஆசையினால் தூண்டப்பட்டு செய்யும் வேலையோ நிகழ் காலத்தது. ஆனால் செயலின் பலனை அனுபவிக்க வேண்டும் என்ற பரபரப்போ, வருங்காலத்தில் கிடைக்கும் ஒரு பயனை எண்ணி சஞ்சலப்படுவது அந்த விளைவு செயலுக்கப்புறம் வருவது, அது நிகழ்காலச் செயலில் வளர்ந்த விளைவாகும்.

ஆசையும், பயனுக்காகக் கொள்ளும் பரபரப்பும் அமைதியின்மையை விளைவிக்கும். ஆசையின் தீவிரம் அல்லது

ஆழத்திற்கு ஏற்றவாறு நம் உள் ஆற்றல்கள் திறமையுடனும் உண்மையான ஆர்வத்துடனும் செய்ய முடியாது. தவிரவும் ஆசை 'அகம்'பாவம் கிளப்பிவிட்ட எழுச்சியே. அகந்தையை அழிப்பது என்பது, தன் முனைப்பை சமனப்படுத்திய ஜீவாத்மா அடிமட்ட உணர்வுப் பிணைப்புகளிலிருந்து விடுபட்டு பிரமாண்டம் பரவிய உணர்வான ஏக, அனந்த ஈசுவரத் தன்மையை அடைவதாம்.

ஆசைகள்—நிறைந்த மனிதன் செயல்களின் —பயனை அனுபவித்தேயாக வேண்டும் என்ற கவலைக்கு அடிமையாகி விட்டான் என்றால் பிறகு அவன் வாழ்க்கை நரகமாவதில் மிச்சமேதுமிராது! பயன் வருங்காலத்தில் வருவது, நம் செயல் களின் பரிமாணம், தன்மை இவற்றைப் பொறுத்தது; குறிப்பிட்ட துறையில் இருக்கும் சூழ்நிலையைப் பற்றியது. எனவே பயனை விரும்பி நிற்கும் பரபரப்பான கவலையைத் 'தியாகம்' செய்யாமல் நாம் நம்முடைய முழுச் செயலாற்றும் திறனையும் உள் ஆற்றலையும் கண்டுகொள்ள முடியாது. எனவே நம் செயல்களும் திறமையுடனும் தரமாகவும் நடக்காது. தரமற்ற செயல்கள் இன்பம் தரும் பயன்களை ஏற்படுத்த முடியாது.

சுருக்கமாக சந்யாஸம் என்னும் குறிக்கோள் பலத்யாகத்தின் வழியே சென்றடைய வேண்டிய ஒன்று.

சந்யாஸம் தியாகம் இரண்டுமே நம் செயற்பாடுகளுக்குக் கட்டுப்பாடு ஏற்படுத்துபவை. ஸ்ரீ கிருஷ்ணன் செயலின் முக்கியத்துவத்தைத் திருப்பித் திருப்பிச் சொல்வதில் அலுக்கவே இல்லை. இந்த இரண்டு சொற்களுமே ''செயலைச் செய்யாதே'' என்று சொல்லவில்லை. அதற்கு மாறாக இரண்டு சொற்களுமே ''நாம் வேலை செய்தாக வேண்டும்'' என்றே சொல்கின்றன. செயல்திறமையைத் தடுக்கும் தடைகளை நீக்கினால்தான் வேலையே ஒரு சீரிய தன்மையை அடையும். அப்பொழுது ஒவ்வொரு சிறிய வேலையும் கூட முழுமையான நல்ல பயனைத் தரும். நம்மை முன் காலம் பின் காலம் இவற்றுடன் பிணைக்கும் சங்கிலியை அறுத்து, ஆசைக்கும் அடிமையாகாமல் பயன் வேண்டும் என்ற பரபரப்பால் கட்டி இழுத்துச் செல்லப்படாமல், நிகழ்காலத் தூண்டுதலில், ஆற்றலுடன் உழைப்பதே வேலையின் மிகச் சீரிய தன்மையாம். உள்ளபடி இந்த இரண்டு சொற்களும் வேதங்களில் குறிப்பதைவிட கீதையில் மிகவும் தாராள மனப்பான்மையுடன் பொருள் கொடுக்கின்றன.

அறிவிலி வேலை செய்ய வேண்டுமா வேண்டாமா?

*த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்ம ப்ராஹுர்மனீஷிண:*
*யக்ஞதானதப: கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே* 18:3

த்யாஜ்யம்—விடப்பட வேண்டும்; தோஷவத்—குற்றம்

போல்; இதி—என்று; ஏகே—ஓரொரு; கர்ம—வேலே; ப்ராஹு:—கூறுகிறுர்கள்; மனீஷிண:—தத்துவவாதிகள்; யக்ஞ தானதப: கர்ம—வேள்வி, தானம், தவம் ஆகிய செயல்கள்; ந த்யாஜ்யம்—விடக் கூடாது; இதிச—என்றும்; அபரே—மற்றவர்கள்.

''கர்மம் தோஷத்தை (குற்றத்தை விட்டு விடுவதைப்) போல் விட்டுவிடப்பட வேண்டும்.'' என்று ஓரோரு தத்துவ வாதிகள் சொல்கிறுர்கள், ''ஆனுல் வேள்வி, தானம், தவம் ஆகிய செயல்கள் விடப்படக் கூடாது'' என்று மற்றவர்கள் சொல்கிறுர்கள்.

போன சுலோகத்தில் அறுதியாக தியாகம், ''வழி'' என்றும் சந்யாஸம், சென்றடைய வேண்டிய ''குறிக்கோள்'' என்றும் கூறப்பட்டது. இந்த 'தியாக'க் கருத்தை வைத்துக் கொண்டு பேசும் ஒருவகைத் தத்துவவாதிகள் இருக்கிறுர்கள் அவர்கள், செயலே ஒரு தீமை போல் (கருதி) விட்டே விடவேண்டும் என்று சொல்கிற சாங்க்யர்கள். அவர்கள் சொல்வது—எல்லாச் செயல்களுமே வாசனேகளே ஏற்படுத்தும். அவை ஆத்மலாபத்தை மறைத்துக் கெடுத்துவிடும். எனவே எந்தப் பாகுபாடும் இன்றி எல்லா வேலேகளேயுமே விட்டு விடவேண்டும்'' என்பதாகும். சாங்கியத் தத்துவத்தை விளக்கும் சிலர், ''தவருன வழியில் அசுரத் தனமான ஆசைகளால் தூண்டப்படும் வேலேகளேத்தான் விட வேண்டுமே தவிர மற்றபடி செயல்களே விடக் கூடாது'' என்று சொல்கிறுர்கள்.

தத்துவவாதிகள், ''சாதகர்கள் ஆத்ம அழகை அழிக்கும் நலமற்ற வேலேகளே விட்டு விட வேண்டும்'' என்று சொல்கிறுர்கள். ஆனுல் அத்துடன் அவர்கள் 'ஒவ்வொரு மனிதனும் ஆன்ம ஆக்கம் நடத்தையில் திருத்தம்; தார்மீகப் புனருத்தாரணம் முதலியனவற்ருல், ஆற்றல்களின் இணேப்பு லயத்தையும் மனிதத்தின் உண்மை உயர்வையும் ஏற்படுத்தக் கூடிய, கர்மத்தை விடக் கூடாது என்றும் சொல்கிறுர்கள். பின் சொல்லப்பட்ட கருத்தோட்டத்தை ஆதரிக்கும் வகையினர் வேள்வி, தானம் மற்றும் தவ முயற்சிகளே ஒரு போதும் விடக் கூடாது என்கிறுர்கள்.

ஸ்ரீ சங்கராச்சாரியார் இந்த வரிகளேவைத்துக் கொண்டு அபார துணிச்சலுடன் இந்த சுலோகத்தை பிளந்து திரித்து தனக்கு மிகவும் செல்லமான கருத்தைத் தந்து விடுகிறுர். ''இது கர்ம யோகிகளுக்குச் சொல்லப்பட்ட அறிவுரை. ஞானிகளுக்கு வேலேயையே விட்டுவிடுவது தான் முறை என்பது சங்கரரின் வாதம். அவரை விமரிசனம் செய்யும் அநேகர் ''இது தேவையற்ற செயற்கையான (பொருத்தமற்ற) முறையில் கொள்ளப்பட்ட பொருள்'' என்கிறுர்கள். கீதையின் மாணவர்களான நாம்

தெரிந்து கொள்ள வேண்டியது: ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனன் தவறான செயல்களை எல்லாம் விட்டுவிட்டு ஆன்மிக சாதனைகளையும், உலகியல் வேலைகளையும், ஈடுபாட்டுடனும் பக்தியுடனும் செய்ய வேண்டும் என்றே விரும்புகிறார். ஸ்ரீகிருஷ்ணன் சொல்லும் கீதை, ''வேலையே மனிதன் பரம்பொருளுக்குச் செய்யும் மிக உயர்ந்த பூஜை'' என்கிறது.

பகவான் அஞ்ஞானிகள் வேலை செய்ய வேண்டும் என்று உத்தரவு இடுகிறார். இந்த இரண்டு முரண்பாடான கருத்து வகையைப்பற்றி:

நிஸ்சயம் ச்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம
த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித:
18:4

நிச்சயம்—முடிவான உண்மையை; ச்ருணு—கேட்டுக்கொள்; மே—என்னுடைய; தத்ர—அங்கு; த்யாகே—தியாகத்தில்; பரதஸத்தம—பரதர்களுள் உத்தமனே; த்யாக: ஹி—தியாகமோ; புருஷ வயாக்ர—மனிதருள் புலியே (சிறந்தவனே); த்ரிவித:—மூன்று விதமாக; ஸம்ப்ரகீர்த்தித:—கூறப்பட்டிருக்கிறது.

இந்தத் தியாகத்தைப் பற்றி முடிவான கருத்தை என்னிடம் கேட்டுக் கொள், ஏ பரதகுலப் பெரியோனே! மனிதருள் சிறந்தவனே! விட்டு விடுதல் என்ற தியாகமோ மூன்று விதம் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ கிருஷ்ணன் தியாகத்தைப் பற்றி விளக்கி அதன் வகைகளையும் தெளிவுபடுத்துவதாக அர்ஜுனனுக்கு உறுதியளித்துப் பேசுகிறார்.

இது ஏதோ இலக்கிய ஆர்வத்துக்காக ஒரு திருப்தியளிக்கும் சர்ச்சை அல்ல. ஆனால் பழகிப் பின்பற்ற வேண்டிய ஒரு சாதக மாகும். மனித உள்ளத்துக்கு எதையும் விட்டு விடுதல் என்பது அவ்வளவு எளிதான காரியம் இல்லை. ''வாரி வளைக்க வேண்டும்; சேர்க்க வேண்டும் என்பதுதான் அதன் உயிர் நாடி. ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனிடம் மனிதன் செய்யவேண்டிய மிகக் கஷ்டமான மிகச் சீரிய பொருளைச் சொல்லி அவன் உள்ளத்தைத் தயார் செய்ய வேண்டியிருக்கிறது. அதனால்தான் அவனை, 'நீ புலி'. 'நீ பெரியவன்' 'நீ சிறந்தவன்,' என்கிறார். பரதன் குலத்தின் பெயர் சொல்லி, 'நீ அக்குலத்தின் மிகப் பெரிய தோன்றல்' என்கிறார்.

ஆய்வு செய்யவும் புரிந்து கொள்ளவும் தியாகம் மூன்று வகைப்பட்டது என்று தெரிந்து கொள்ள வேண்டும். இம் மூன்று வகைகள் எவ்வளவோ இடங்களில் பேசப்பட்டிருக்கின்றன—

சாத்வீகம், ராஜஸம், தாமஸம் என்று ஸ்ரீ பகவத் ராமானுஜர் தியாகத்தின் வகைகளைப் பின்வருமாறு கூறுகிறார்: (1) பலத்யாகம் (2) நான் காரணம் என்ற எண்ணத்தைத் தியாகம் செய்து அதன் காரணமாக பற்றுத் துறவு (3) 'நான் செய்கிறேன்'' என்ற எண்ணத்தைத் துறந்து ஈசுவரனே செய்கிறான் என்ற எண்ணம். ஸ்ரீ ராமானுஜர் செய்வதும், ''ஆசாரியர்கள் அவர் அவர் கொள்கையைப் பரப்ப சொற்களுக்கு, தங்களுக்குப் பிடித்தமான பொருளைக் கற்பிக்கிறார்கள்'' என்ற உண்மைக்கு உதாரணம் தான். இதன் பயனாக சுலோகங்களே சில இடங்களில் பருத்து தங்கள் உண்மை அழகையும் சரியான அளவையும் மீறி குரூபமாகக் கூட ஆகி விடுகின்றன!

பிறகு தீர்ப்புத்தான் என்ன? எம்பெருமான் கூறுகிறார்:

யக்ஞ தான தப: கர்ம ந த்யாஜ்யம் கார்ய மேவ தத்
யக்ஞோ தானம் தபஸ்சைவ பாவநாநி மனீஷிணும்
18:5

யக்ஞ தான தம—கர்ம— வேள்வி, தானம், தவம் இந்தக் கர்மங்கள்; ந த்யாஜ்யம்—விடப்படக் கூடியவையல்ல; கார்யம்ஏவ—செய்யப்பட வேண்டியதே; தத்—அது; யக்ஞம் தானம், தபச்சர—பூசனை, தானம், தவமுமே பாவநாநி—பவித்திரமானவை; மநிஷிணும்—அறிவாளிக்கு.

யக்ஞ, தான, தவச் செயல்களை விட்டுவிடுதல் கூடாது. அவை செய்யப்பட வேண்டியவையே; வேள்வி தானம் தவம் அறிவாளிகளைப் புனிதமாக்குபவை.

ஏற்கனவே சொல்லப்பட்ட விஷயம் இங்கே ஒத்துக் கொள்ளப்பட்டு வலியுறுத்தபட்டிருக்கிறது. வேள்வி அல்லது பூசனை, தானம், அனுஷ்டானக் கட்டுப்பாடு அல்லது தவம்—இவற்றை விடக் கூடாது. இவை ஒழுங்காகச் செய்யப்பட்டால் ஒரு நல்ல கட்டுப்பாடு ஏற்படும். அதன் அடிப்படையில்தான் ஆன்மீக முழு மலர்ச்சி ஏற்பட்டு அந்தப் பரமானுபவத்தைப் பெறுவது சாத்தியமாகும். கிருஷ்ணபிரான் இவை மனிஷிகளை (சிந்தனையாளர்கள் அறிவாளிகள்—என்று பொருள்)ப் புனிதமாக்கும் என்கிறார். தங்கள் தனித்தன்மையின் பிணைப்புக்குள்ளிருந்துவிட்டு வளரவிருக்கும் மனப்போக்கு உடையவர்கள் யக்ஞம், தானம், தவம் இவற்றைச் செய்கிறார்கள். அவர்களுக்குத்தான் எல்லையற்ற ஆன்ம அமைதியும் சமநிலையும் கிடைக்கிறது.

கடமையாக விதிக்கப்பட்ட இச் செயல்கள் பற்றற்றுச் செய்யப் பட வேண்டும்.

ஏதான்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலானி ச
கர்த்தவ்யானீதி மே பார்த்த நிஸ்சிதம் மத—முத்தமம்
18:6

ஏதான்யபிது கர்மாணி—இந்த வேலைகளையுமோ; ஸங்கம்—பற்றை; த்யக்த்வா—துறந்து; பவானி ச—பயனையும்; கர்த்தவ்யானி இதி—செய்யப்பட வேண்டியவை என்று; மே—என்னுடைய; நிச்சிதம்—உறுதியான; மதம்—நம்பகமான கருத்து; உத்தமம்—ஆகச் சிறந்தது.

ஆனால் இந்தக் கர்மாக்களையும் பற்றையும் பலனையும் துறந்து செய்ய வேண்டும். ஏ பார்த்தா! இது என்னுடைய உறுதியான மிக உயர்ந்த நம்பிக்கை.

வேள்வி, தானம், தவம் ஆகிய கர்மாக்களையும் பற்றையும் பயனையும் துறந்து செய்ய வேண்டும். கீதையில் 'பற்று' என்ற சொல்லிற்குத் தனி மனம் உண்டு. சொந்த 'என்'னுடைய ஆசைகளுக்காக 'நான்' என்கிற ஆள் செய்யும் வேலைகளையே இந்தச் சொல் எங்கேயும் குறிக்கிறது. ஏனவே பற்று என்றால் அகம் (நான்) அதன் ஆசைகள் ஆக இரண்டும் சேர்ந்தது. ஒரு 'அகம்' (தான்) தன்னுடைய சுட்டெரிக்கும் (மிகவும் தீவிரமான) ஆசைகளைப் பூர்த்தி செய்ய முயலும் போது உலகுடன் அதன் உறவு ஒருமாதிரி இருக்கிறது. அந்தத் தவறான உறவையே 'பற்று' என்கிறோம்.

பற்று அல்லது ஆசை நச்சின் மயக்கத்தில் ஒருவன் கர்மாவைத் தொடங்கும்போது அவனிடம் தன்னையே அழித்துக் கொள்ளும் தன்மைவாய்ந்த ஒரு அறிவற்ற தீவிரம் ஏற்பட்டு விடுகிறது. அதாவது ''செயல்களுக்கு நாம் விரும்பும் பயனை உடனே பெற வேண்டும். அதை நாமே துய்க்க வேண்டும்.'' செயல்கள் முடிய எவ்வளவோ நேரம் இருக்கிறது. அதற்கு முன்பே பயனைத் துய்க்கும் ஆசையும் பசியும், ஒரு மாயை நிலையை ஏற்படுத்தி விடுகின்றன. அதன் பயனாக எடுத்துக் கொண்ட கர்மத்தைச் செய்யும் திறன் பாதிக்கப்பட்டு விடுகிறது.

யக்ஞம், தானம், தவம் இவை பற்றற்ற நிலையில் செய்யப்பட வேண்டும் என்ற கருத்து 'என் கருத்து' என்கிறார் கண்ணன். ஆனாலும் கீதை தனியாகக் கண்ணன் கருத்து மட்டுமல்ல. ஹிந்து சாஸ்திரங்கள் சொல்லிவரும் சுயநலமற்ற சேவைக் கருத்துத்தான். ஒருகால் கண்ணன் ரிஷிகள் சொல்லியிருக்கிறார்கள் என்று சொல்வதைவிட 'நான் சொல்கிறேன்' என்று உறுதி சொன்னால் முதல் முறையாகக் கிருஷ்ணரிடம் புது குரு—சிஷ்யன் உறவை ஏற்படுத்திக் கொண்ட அர்ஜுனனுக்கு அதிக நம்பிக்கை ஏற்படும் என்று நம்புகிறார் போலும். ஏனவே அவனுக்கு ஆசி தந்து நலம் ஏற்படுவதற்காக இது என் நம்பக

மான கருத்து என்கிறார்.

இன்று நாம் எடுத்துக் கொள்ளும், வேலையில் பற்றுக் கொள்ளுதல், அதற்குப் பிரதிபலிப்பிரயோஜனமாக வருங்காலத்தில் நேரக்கூடிய பயனுக்கு இப்பொழுதே, 'ஆலாய்ப் பறத்தல்' இந்த இரண்டையும் விடுதலே கீதையில் கிருஷ்ணன் தரும் கொள்கைப் பாடத்தின் இரு அங்கங்களாகும். இந்தக் கிருஷ்ணன் (காட்டும்) வழியைப் பின்பற்றினால் அந்தக்கரணம் ஆரோக்கியமடையும். அது நம்மை அதிமானுஷ நிலைக்கு மிகவும் ஜாக்கிரதையாக அழைத்துச் செல்லும். இங்கே கண்ணன் அர்ஜுனனை மிகவும் அன்புடன் விளிக்கிறார். அதற்கே நல்ல பயன் இருக்கிறது. தியாகம் என்கிற கிருஷ்ணன் கொள்கையை அவனுக்குப் பிடித்ததாக்குகிறது.

எனவே ஆன்ம விடுதலை வேண்டும். சாதகனுக்கு கர்மம் இன்றியமையாதது. அது 'தியாக' மனப்பாங்குடன் செய்யப்படும் போது இந்த தியாகம் அவனுக்கு வழி காட்டி வழியையும் எளிதாக்கும்.

தாமஸத் தியாகம்:

நியதஸ்யது ஸந்யாய: கர்மணோ நோபபத்யதே
மோஹாத் தஸ்ய பரித்யாகஸ் தாமஸ: பரிகீர்த்தித: 18:7

நியதஸ்ய—கடமையாக்கப்பட்டது; து—ஓ என்றால்; சந்யாஸ:—துறத்தல்; கர்மண:—வேலைகளுடைய; ந உபபத்யதே—சரியாகாது; மோஹாத்—மருளினால்; தஸ்ய பரித்யாக—அதை விட்டே விடுதல்; தாமஸ—தாமஸம் என்று; பரிகீர்த்தித:—கூறப்பட்டிருக்கிறது.

நிச்சயமாக, ''கடமைக் கர்மங்களை'' விடுதல் சரியல்ல. அதை மோகம் (மருள்) காரணமாக விடுதல் தாமஸமாகும். (மந்த குணமாகும்).

பகவான் கடமைக் கருமங்களை விடுதல் மிகவும் கீழ்த்தரமானது மந்தமானது என்று கருதுகிறார். ஒவ்வொருவனும் தனக்கும் சமூகத்திற்கும் செய்ய வேண்டிய கடமைகள் உண்டு. அவை நித்ய கர்மங்கள், நைமித்திக (சமூகத்தில் அவ்வப்போது குறிப்பிட்ட சமயங்களில் செய்ய வேண்டிய) கர்மாக்களாகும். மனிதன் தான் வாழும் சமூகத்தின் அங்கமாக இருக்கும் வரை அதன் பாதுகாப்பையும் அதனிடமிருந்து நன்மையையும் எதிர்பார்க்கும் வரை அவனுக்கு கடமைக் காரியங்களை விட்டு விடும் உரிமையை வாழ்க்கைக்கான ஹிந்து சாஸ்திரங்கள் அவனுக்குக் கொடுக்கவில்லை.

ஒருவன் அறியாமையினால் தார்மீகக் கடமைகளை விட்டு விட்டால் கூட அவனுக்கு மன்னிப்புக் கிடையாது. சர்க்கார்

சட்டங்கள் போல பௌதீக உலகத்தின் விதிகள் போல ஆன்மீக உலகத்திலும் 'சட்டம் தெரியாது என்பதால் மன்னிப்புக் கிடையாது'. அறியாமையாலோ தவருன சிந்தனை காரணமாகவோ ஒருவன் தன் கடமைகளை ஒதுக்கி தான் வாழும் உலகத்துக்குத் தான் செய்ய வேண்டிய பணியைச் செய்யாமல் விட்டு விடுவாஞ்ஞல் அந்தத் தியாகத்தை மந்தமான (தாமஸ)த் யாகம் என்று சொல்கிருர்கள்.

ராஜஸத் யாகம் எது?

துஃக்கமித்யேவ யத் கர்ம காயக்லேச பயாத் த்யஜேத்
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத்
18:8

துஃக்கம்—துயர் தரும்; இத்யேவ—என்றே; யத்—எது; காயக்லேச பயாத்—உடல் வருத்தத்துக்கு அஞ்சி; த்யஜேத்—விட்டு விடுவாஞே; ஸ:—அவன்; க்ருத்வா—செய்து; ராஜஸம் த்யாகம்—ராஜஸமான த்யாகத்தை; த்யாக பலம்—தியாகத்தின் பயனையும்; ந லபேத் ஏவ—அடையவும் மாட்டான்.

உடலுக்கு வருத்தம் ஏற்படுமே என்று பயந்து எவன் கர்மத்தை விட்டு விடுகிருஞே அவன் செய்வது ராஜஸத்யாகம்; தியாகத்துக்கு பயனும் கிட்டாது.

சிலர் தங்களுக்கு உரிய கடமையான கர்மத்தை உடலுக்கு வருத்தம் நேரும் என்று உடல் துயருக்கு அஞ்சிவிட்டு விடலாம். இது 'தியாகம்தான்! ஆனுல் ராஜஸ வரிசையில் சேர்ந்தது. இதிலிருந்து குறிப்பு: சுறுசுறுப்பான ராஜஸப் பரபரப்பு உள்ளவன் 'கஷ்டமில்லை களைப்பு ஏற்படாது' என்ருல் அவ்வித வேலைகளை ஏற்றுக்கொண்டு செய்வான். தன் அளவில் எந்தக் கஷ்டமும் ஏற்றுக்கொள்ளாமல், எந்த சுய நன்மையும் தியாகம் செய்யாமல் எல்லாக் கடமைகளையும் செய்கிறேன் என்பதில் வீரத்தனம் ஒன்றுமில்லை. அவற்றிற்கு சிறப்பான பரிசும் கிடையாது. கண்ணன் திண்ணமாகச் சொல்கிருர்— அப்பேர்ப்பட்டவன் தன் தியாகத்தின் மூலம் எதையும் பெற மாட்டான்.

தன் கடமையான கர்மங்களைச் செய்வதே தியாக வகைகளுள் மிகவும் பெருமை வாய்ந்த 'தியாகமாம்.' அதுவும் தன் சௌகரியங்களைவிட்டு உடல் வருத்தத்தையும் ஏற்றுச் செய்யப்படுமானுல் அது இரண்டு மடங்கு பெருமை வாய்ந்ததாகும். அர்ஜுனன் சண்டையிடும் தன் கடமையைவிட்டுவிட விரும்பினுன். இதை ராஜஸத் யாகம் என்றுதான் சொல்லவேண்டும்.

உண்மையான தியாகம் சுய அபிவிருத்தியை விசாலமாக்க

வேண்டும். வாழ்க்கையை வளமாக்க வேண்டும். ஆனந்தானு பவம் அதிகமாக வேண்டும். மொட்டு தன்னை தியாகம் செய்து பூவாகிறது. பூ மிருதுவான இதழ்களையும் மயக்கும் மணத்தையும் தியாகம் செய்து 'பழம்' என்கிற பரிபூரண நிலையை எய்துகிறது. ஒவ்வொரு தியாகமும் நம்மை உயர்த்த வேண்டும். முழுமை நிரம்பிய உயர்ந்த பதவியைத் தர வேண்டும்.

சாத்துவிகத் தியாகம் என்பது என்ன?

கார்யமித் யேவ யத்கர்ம நியதம் க்ரியதே அர்ஜுன
ஸங்கம் த்யக்த்வா பலம் சைவ ஸ த்யாக: ஸாத்விகோ மத:
18:9

கார்யம்—செய்யப்பட வேண்டியது; இதி எவ—என்றே; யத் கர்ம—எந்தக் கர்மம்; நியதம்—கடமையாக; க்ரியதே—செய்யப் படுகிறதே; அர்ஜுன—ஏ அர்ஜுனா; ஸங்கம்—பற்றை; த்யக்த்வா—விட்டு; பலம் சைவ—பயனையும் கூட; ஸ த்யாக—அந்தத் தியாகம்; —ஸாத்விக:—ஸாத்வீகம் (புனிதமானது); மத:—(என்று) கருதப்படும்.

கடமை, செய்தாகவேண்டும் வண்டும் என்று செய்யப் படுகிற கர்மத்தின் பற்றையும் விட்டு, பயனையும் விட்டு, செய்யப்படும்போது அந்தத் தியாகமே சாத்துவீகமாகக் (தூய்மையானதாகக்) கருதப்படும்.

கடமை, செய்தாகவேண்டும் என்று செய்யப்படுகிற கர்மத்தின் பற்றையும் விட்டு, பயனையும் விட்டு செய்யாமல் இருப்பதை அவர்கள் சாவு என்றே கருதுவார்கள்—சாத்துவீக வகைப்படுவார்கள். அவர்கள் சில வேலைகளை மட்ட மானவை என்று விட்டு விடுவார்கள். அப்படிப்பட்டவர்கள் தூண்டுதல் ஊட்டும் இக் கருத்துக்களினால் உந்தப்பட்டு சமூ கத்தில் சேவை செய்யும்போது அவர்கள் எந்தத் துறையில் வேலை செய்தாலும் சரி—சாத்வீகத் தியாகத்துக்கு சிறந்த உதாரணம் காட்டுகிறார்கள்.

செயல்களுக்கு இன்றியமையாத வகையில் சில தடைகள் இடையூறுகள் ஏற்படவே செய்யும். பகவான் சொல்ல விரும்புவது இதுதான். இந்தத் தடைகள், இடையூறுகள் நம் செயல்களை நிறுத்திவிடக் கூடாது. நம் செயலுக்குரிய சுதந் திரத்துக்குப் பாதகம் விளைவிக்க விடக் கூடாது. உண்மையில் சாத்வீகத் யாகம் என்றால் 'சரியான மனப்பாங்குடன் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்வது' என்றே பொருள் படும். இது விசித்திரமாகப் படலாம். ஆனாலும் சரியாகப் படித்து வந்தவர்கள் 'எதை விட்டுவிட வேண்டும் என்பதல்ல,' ஆனால் எங்கே எப்படி எந்த வேலையைச் செய்ய வேண்டும், என்றே இந்த

சுலோகங்கள் சொல்லி வருகின்றன என்று புரிந்து கொண்டிருப் பார்கள். கண்ணபிரான் உலகத்தையும் அதில் நமக்குள்ள நமது கடமையையும் விட்டு விடும் மனப்பாங்கை கண்டிக்கிறார். தியாகம் என்பது கண்ணன் கருத்துப்படி, சுயநலத்தையும் ஆசை யையும் விட்டுவிடும் மனத் தியாகம்தான். அவை மனிதன் சுதந் திரத்தைக் கட்டுப்படுத்தி விடுகின்றன. ஒரு எடுத்துக்காட்டு: சாப்பாட்டிடத்தில் நாம் பசியை விடுகிறோமே, உணவைச் சாப்பிடும் வேலையைச் செய்வதன் மூலம் அது மாதிரித்தான்.

கீதை உபநிடதங்களில் அடிப்படையைக் கொண்டிருந் தாலும் கூட அர்ஜுனன் இருந்த காலத்தில் உபநிஷதங்களின் பாடங்களைப் புரிந்து கொண்டிருந்ததற்கு ஒரு புது மெருகை ஊட்டிற்று. அந்த மெருகு இந்த மாதிரியான நாசூக்கான விளக்கங்கள் மூலம் தான் கிடைக்கின்றன. கீதை புதிதாக ஒன்றையும் சொல்லிவிடவில்லை. ஆனால் உபநிடதக் கருத்துக்களை நேரடி வாழ்வில் நடத்திப் பயன் பெற, அதாவது நிகழ் காலச் சூழ்நிலைக்கு ஏற்றபடி அக்கருத்துக்களுக்கு உபயோகத்தை ஏற் படுத்திக் கொடுத்து சிறப்புற்றது.

இந்த மூன்று சுலோகங்களிலும் விளக்கப்பட்டிருக்கிற தியாகம் கர்மங்களைவிட்டு விடுவதல்ல. ஆனால் நம் ஆளுமையை சுதந்திரமாக முழுமையாக வளரவிடலாம். தடுக்கிற தடைகளை நீக்கி விடுவதாகும். தியாகி என்றால் சுறுசுறுப்பான மனிதன். ௳ லகில் மிகவும் திறமையுடன் இயங்கும் ஊழியனுகும்.

புற உலகில் 'நான்' என்ற அகந்தையும், அகந்தை பற்றி எழும் 'ஆசைகளையும்' விட்டுவிட்டு ஊழியம் செய்பவன், தன் ''வாசனைகளை'' அழியவிட்டு, உள் தூய்மையில் வளர்கிறான்.

அவ்விதம் சாத்வீகத் தியாகத்தின் மூலம் தூய்மை யடைந்த சாது எப்படி மிக உயர்ந்த ஆன்மீக அனுபவத் தைப் பெறுகிறான்?

ந த்வேஷ்ட் யகுசலம் கர்ம குசலே நாநுஷஜ்ஜதே
த்யாகீ ஸத்வஸமாவிஷ்டோ மேதாவீ சின்ன ஸம்சய:
18:10

ந த்வேஷ்டி—வெறுக்கிறதில்லை; அகுசலம்—பிடித்தமில்லாத; கர்ம—கர்மத்தை; குசலே—விருப்பமானதுடன்; ந அநுஷஞ்ஞதே—பற்றுக் கொள்வதில்லை; த்யாகீ—தியாகி; ஸத்வ ஸமாவிஷ்ட:—தூய்மையால் உள் நிரம்பியவரும்; மேதாவி—புத்திசாலி; (ச்)சின்ன ஸம்சய:—ஐயம் நீங்கியவன்.

புத்திசாலியும் ஐயம் நீங்கியவனுமான 'தியாகி' பிடிக்காத வேலை என்று கர்மத்தை வெறுக்க மாட்டான்; பிடித்தது என்று அத்துடன் ஒட்டிக்கொள்ள மாட்டான்.

செயல் பற்றும் வீர சாகஸ ஆசையும் கொண்ட மனிதனுக்கு மேலே முன் சுலோகத்தில் சொல்லிய கருத்து அசம்பவப் பேச்சுப் போல் தோன்றலாம். மகத்தான உள்ளம் படைத்த அர்ஜுனனுக்கு 'செய்ய வேண்டும் என்பதற்காக, பற்றையும் பயனையும் துறந்து கர்மம் செய்பவன் ஒருவனைக் கற்பனை கூட செய்ய முடியாது. அவன் முகத்தில் அந்த 'பாவம்' வெளிப்பட்டிருக்கும். அதைப் புரிந்துகொண்டு அதற்கு விடை கூறும் முகத்தான் கண்ணபிரான் அப்படிப்பட்ட தியாகியைப் பற்றி மேலும் விளக்கம் தருகிறார்.

சாத்வீக தியாகத்தில் நிலைத்து நிற்பவன் எதையும் எப்போதும் வெறுப்பதுமில்லை; எப்போதும் எதனுடனும் பற்றுக் கொள்வதுமில்லை. வெறுக்கிறான் என்றால் மதிப்புக்கு ஊறு விளைக்கும் செயல்களைத் தான் வெறுப்பான். நல்ல செயல்களில் ஈடுபடுவான். மனதுக்கு இன்பம் தராத செயல்கள் என்பதற்காக அவற்றைச் செய்யும்போது அருவெறுப்புக் கொள்ள மாட்டான். மனதுக்கு இன்பம் தரும் வேலை என்பதால் அத்துடன் ஒட்டிக் கொள்ளவும் மாட்டான். கடமைகளை, பிடித்த துறையோ, பிடிக்காத துறையோ, எங்கேயும் செய்வான். வெற்றியின் உச்சியை அடைந்தவுடன் எம்பிக் குதிக்க மாட்டான்.'' குழியில் விழுந்து விட்டால் அப்போதும் எரிச்சல் படமாட்டான். அவனை அதிக சந்தோஷமோ,..அதிக துக்கமோ அமுக்கி விட முடிவதில்லை. சம நிலையிலிருப்பது அவன் முக்கிய இயற்கையாகி விடுகிறது. பாறை போல் அசையாமல் இருந்துகொண்டு நடப்பவைகள் அலை போல் எழுவதையும் விழுவதையும் மனதை ஒரு அபூர்வமான சமநிலையில் வைத்துக்கொண்டு கவனிக்கிறான். சுருக்கமாகச் சொல்லப் போனால் அவனைச் சுற்றி நடந்தேறும் காலக் கிரமத்தின் நிகழ்ச்சிகளினால் சற்றும் பாதிக்கப்படாமல் அவன் தனித்தே இருக்கிறான்.

அப்படிப்பட்ட சாத்வீகத் தியாகிக்கு நம் போன்றவர்களைப் போல் பொறுமை, கோபம், பேராசை, உணர்ச்சி வேகம் முதலிய உள்ள எழுச்சிகளுடன் பிணைப்பு இருப்பதில்லை. அவன் மிக எளிதாகவே தன்னுள் உள்ள ஒரு திறமையைக் கண்டு அதைக் ஙக்க் கொண்டு, பொய்யான, மட்டமான உணர்ச்சிகளுடன் ஒட்டாமல் ஒதுங்கி விடுகிறான். அவன் தன் மன வாசனைகளுக்கு அடிமைப்படுவதில்லை; வேட்டைப் பொருளாவதில்லை. அவன் உள்ளத்தின் உணர்ச்சிப் பேரலைகளிலிருந்து ஒதுங்கியே நிற்கிறான்.

அப்படிப்பட்டவனைத் தான் பண்டிதன், பண்பாளன் என்கிறோம். அப்பண்பு இல்லாதவர் உலர்ந்த சருகு போல; காற்று வீசும்போதெல்லாம் அங்கும் இங்கும் அலைக்கப்படுவான். அவன் சமுத்திரத்தின் நீரில் இருக்கும் நாணல் போல

அலுக்காமல் களைக்காமல் அடித்துக் கொண்டிருக்கும் அலை களின் விளையாட்டால் அலைக்கப்படுவான். மிருகங்களுக்குத் தான் இயற்கையாக எழும் உள் தூண்டுதல்களுக்கும் உணர்ச்சி களுக்கும் அடிமையாக இருப்பது பெருமைதரும். எழுந்து வரும் உணர்ச்சிகளைக் கூர்ந்து கவனித்து அவற்றின் இயற்கையைத் தெளிந்து தெரிந்து, தான் கொண்டிருக்கும் குறிக்கோளின் ஒளியில் அவற்றை மதிப்பிட்டு, தேவையானால் ஒதுங்கி நின்று அவற்றை அப்படியே அழிந்து போகும்படி விடும் ஆற்றல் மனித னுக்குத்தான் உண்டு.

ஆனால் சாதாரணமாக மனிதனுக்குத் தன் உணர்ச்சி கொந் தளிப்புகளுக்கு உட்படாமல் தனித்து நின்று இயங்க முடிவ தில்லை. ஏன் என்றால், மனிதன் தியாகம் புரியும் மனப் பான்மையை சாகும்படி விட்டு விட்டான்.

வாழ்க்கையைப் புத்திசாலித்தனமாக வாழ வேண்டும். அதற்குக் கணத்துக்குக் கணம் தன் உள்ளே எழும் மிருக ஆசை களின் ரகசிய முணுமுணுப்புக்களை அலட்சியம் செய்து ஆன்மா வின் சங்கீதத்தைத் தொடர்ந்து செல்ல வேண்டும். அதற்குப் பழ கியவன் தான் தியாகியாவான். அவன் தான் சாத்வீகத் தியா கத்தில் நிலைத்து நிற்பவன்.

சரியானதைத் தேர்ந்து பொய்யானதை விட வேண்டு மென்றால் மனிதனுக்குத் தன்னுள் இருக்கும் அந்தக் குறை யில்லாத முழுமைத் தத்துவத்தின் அறிவு இருக்கவேண்டும். 'மேதை' சக்தி என்பது மூளையின் புரிந்துகொள்ளும் அல்லது வாதிடும் ஆற்றல் அல்ல. ஆனால் மனப்பாடமாக நினைவில் நிறுத்திக்கொள்ளும் ஆற்றலாம்.

இடையறாத சமநிலை அலைவு இல்லாத அறிவாற்றல் உடைய பண்டிதன் (பண்பாளன்) பின்வரும் விஷயங்களைத் தொடர்ந்து நினைவில் வைத்திருக்க வேண்டும். (1) தான் செயலாற்றும் பூமி; (2) புற உலகுடன் தொடர்பு கொள்ளும் பொறிகள்; (3) தன் னுடைய அடிப்படையான தெய்வீகத்தன்மை (4) தன் பொறிகள் மூலம் ஏற்றுக்கொள்ளும் புற உலகின் பொருள்தன்மை. அவன் தான் மேதாவி—அலைவில்லாத ஸ்திரமான அறிவாற்றல் பெற்றவன். அவன் அறிவில் சந்தேகப் புள்ளிகள் அமைந்திருக்குமானால், அல்லது பொய்யான உண்மை யற்ற கருத்துக்களால் நச்சுப்படுத்தப்பட்டிருந்தால் அவன் உள் ளத்தில் முடிவற்ற குழப்பங்கள் தான் இருக்கும். அவை தீர்ப்புத் தெளிவைக் கெடுத்துவிடும். தவறான முடிவுகளுக்கு வந்து விடு வான். அதனால்தான் கண்ணபிரான் சாத்வீக தியாகி என்பவன் சம்சயங்கள் துண்டிக்கப்பட்ட (இல்லாமல் இருக்கும்) மனிதன் என்கிறார்.

உயர்ந்த நிலைத் தியாகிகள் அதிகம் காணப்பட மாட்டார்கள். மிகச் சிலர் தான் தன்னுடைய ஜடப் பொருள்களாலான உறைகளுடன் ஒட்டாமல் ஒதுங்கி இருக்க முடியும். ஆனால் பெரும்பான்மை சாதாரண மக்களுக்குத் தங்கள் உடல், மனம், புத்தி உறைகளுடன் ஒட்டி இருப்பதுதான் இயற்கையாயிருக்கிறது. அதனால், தான் தொடர்பு கொண்டு உலகில் நடத்தும் செயல்களுக்குத் தாங்கள் தான் 'முகவன்' என்ற கருத்தைக் கொண்டு விடுகிறார்கள். அப்படிப்பட்ட சாதாரண மனிதன், அஹங்கார மமகாரத்துடன் வேலை செய்வான். அவன் பலனையாவது விட்டுவிடக் கற்றுக்கொள்ள வேண்டும்.

கிருஷ்ண பிரான் பின்வரும் விளக்கத்தைத் தருகிறார்:

ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்ய சேஷத:
யஸ்து கர்ம பலத்யாகி ஸ த்யாகீத்ய பி தீயதே. 18:11

தேஹ்ப்ருதா—உடல் கொண்டவனால்; நஹி சக்யம்—முடியவே முடியாது; த்யக்தும்—விட்டு விட; கர்மாணி—வேலைகளை; அசேஷத:—முழுமையாக; ய:—எவன்; து—ஓ; கர்மபலத்யாகி—கர்ம பலனைத் தியாகம் செய்கிறானோ; ஸ:—அவன்; தியாகி—தியாகி; இதி—என்று: அபிதீயதே—கூப்பிடப்படுகிறான்.

உண்மையில் உடல் படைத்தவனுக்கு வேலைகளைப் பூராவாக விட்டுவிடுவது என்பது முடியாது. ஆனால் கர்மத்தின் பயனை தியாகம் செய்கிறவன் தியாகி என்று சொல்லப்படுகிறான்.

ஆழமில்லாத அவசர புத்தி அர்ஜுனனுடையது அதனால் அவன் வேலை செய்வதற்கான எல்லா வாய்ப்புக்களையுமே ஒரேயடியாக உதறிவிட்டு, அதன் மூலம் இந்த சச்சரவுக்கிடமான உலகையே விட்டு, காட்டுக்குள் போய் அமைதியாய் வாழலாமே என்று நினைக்கிறான். இந்த சுலோகம் இந்த உண்மையற்ற முடிவைத் தவறு என்று எச்சரிக்கிறது. வேலை நாம் செய்தேயாக வேண்டும். இயங்காமல் எந்த உயிர்ப் பொருளும் தொடர்ந்து உயிருடன் இருக்க முடியாது. உயிருடன் இருப்பு என்றாலே அது செயல்களின் மூலம்தான் வெளியாகும். சும்மா இருத்தல் என்பதும் ஒரு வேலைதான். உடலோ மனமோ உடல் சவக்குழிக்குப் போகிற வரையில் வேலை செய்துகொண்டுதான் இருக்கும். உடல் என்று படைத்த ஒற்றை 'செல்' பிராணியும் கூட எல்லா வேலைகளையும் விட்டுவிட்டு இருக்க முடியும் என்று எதிர்பார்க்க முடியாது. இயக்கம் அல்லது செயல்கள்தான் வாழ்கிறோம் என்பதற்கே அடையாளம்.—வாழ்க்கைதான் மலரின் மணம். செயல் இல்லை என்றால் உயிர் போய்விட்டது—வாழ்க்கை சருகாகி உதிர்ந்து விட்டது—வாழ்க்கையின் பொருள்

போய்விட்டது—அழுகி நாறும் சாவு வந்து விட்டது—என்று பொருள்!

நாம் எல்லோருமே 'உடம்பு'டன் இருப்பவர்கள். எனவே இந்த உடலில் இருக்கிறவரை எல்லா வேலைகளையும் விட்டுவிட முடியாது. நமக்குக் கிடைக்கிற உபாயம் ஒன்று தான்: நம்முடைய செயல்களைக் கட்டுப்படுத்தி சரியான வழியில் செலுத்தி நம் உள் வாழ்வில் ஒரு இசைவையும், வெளியே செய்யும் கடமைக் கர்மங்களில் ஒரு வேகம் கொண்ட லயத்தையும், கொண்டு வரலாம்.

நமக்கு எல்லோருக்கும் உலகப் பொருள்களில் பற்று இருப்பதால் சாத்வீக தியாகம் செய்வது இயலாமல் இருக்கலாம். என்றாலும் பயனுக்காக ஏங்குவதையும் அதனுடன் ஈஷிக் கொள்ளும் போக்கையும் விட்டுவிடப் பயிலலாம்; கண்டிப்பாய்ப் பயில முடியும். ஸ்தூல, சூட்சும, காரண சரீரங்களுக்கு உள்ளே கட்டுப்பட்டுக் கிடக்கும் யாருக்கும் செயலை விட முடியாது. நம்மில் பெரும்பாலோர் பரிணும வளர்ச்சியில் இந்த நிலையிலுள்ளவர்கள் தாம்.—அப்படிப்பட்டவனுக்கு கண்ணபிரான் கூறும் அறிவுரை இது: செயலின் பயனைத் துய்க்க பரபரப்புக் கொள்ளாதே. அது இனிமேல்தான் வரப் போகிறது. செய்கிற வேலையை பயனை எண்ணுவதையும், அதைத் துய்க்கும் ஆசையின் பரபரப்பையும் விட்டுவிட்டு, முழுமையாக, திறமையாக, ஊக்க உற்சாகத்துடன் செய். இவ்விதம் பயனைத் துய்க்கும் தாகத்தை விடுகிறவன் தியாகியாம்.

செயலைத் தியாகம் செய்வதனுல் என்ன நன்மை?

அநிஷ்டமிஷ்டம் மிச்ரம் ச த்ரிவிதம் கர்மண: பலம்
பவத்யத்யாகி நாம் ப்ரேத்ய ந து ஸந்யாஸிநாம் க்வசித்
*18:12*

அநிஷ்டம்—அபத்தமான, பிடிக்காத அல்லது கெடுதலான; இஷ்டம்—பிடித்தமான, அல்லது விரும்பிய அல்லது நல்ல; மிச்ரம்ச—கலந்ததுமான; த்ரிவிதம்—மூன்று விதமானவை; கர்மண: பலம்—கர்மாவின் பலன்கள்; பவதி—உண்டாகின்றன; அத்யாகிநாம்—தியாகிகளல்லாதவர்களுக்கு; ப்ரேத்ய—இறந்த பிறகு; ந து ஸந்யாஸி நாம்—ஸந்யாஸிகளுக்கில்லை; க்வசித்—ஒரு போதும்.

கர்மத்தின் மூன்று வித பயன்களான விரும்பத்தக்கது, கெட்டது. இரண்டும், கலந்தது 'தியாக'மில்லாதவர்களுக்கு இறந்தவுடன் சென்று சேர்கிறது. ஆனுல் தியாகிகளுக்கு ஒரு நாளும் போகாது.

செய்கைகளின் பயன்கள் செயல்களின் தரத்தைப்

பொறுத்தே இருக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தியாக மும் மூன்று வகை என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே அந்த மூன்று வகை தியாகத்தின் மூலம் வந்து சேரும் பயன்கள் கூறப் படுகின்றன.

செயல் என்பது தீவிர ஆசையின்புற உலக வெளிப்பாடு தான். மேலும் செயல் புரிகிறவனின் விருப்பத்தின் அடிப்படை, அவன் சமநிலே, நேர்மை இவற்றுக்கு ஏற்றவாறு செயல் புரிபவன் மனத்தில் ஒரு எதிர்ச் செயல்' பாதிப்பு தங்கிவிடும். மனதுக்குத் தானே திரும்பத் திரும்ப ஒப்பிக்கும் குணம் உண்டு. கடந்த காலக் கருத்துக்களின் அடிச் சுவட்டையே வருங்காலக் கற்பனை களும், அப்படியும் இப்படியும் அசையாமல் தொடரும். இவ்விதம் நாம் செய்யும் செயல்கள் நமது மனதின் கருத்துப் போக்கை நிர்ணயிக்கின்றன. இந்தக் கருத்துப் போக்கு அல்லது வாசனைகள் தாம் நம்முடைய மனக் கசிவுக்கு உருக்கொடுத்து, புற உலகில் நடக்கும் நிகழ்ச்சிகளை எதிர்நோக்கும் அல்லது அவற்றுக்கு ஏற்றவாறு நடந்துகொள்ளும் போக்கை நிர்ணயிக் கின்றன. தத்துவ சாஸ்திரத்தில் கர்ம பலன் என்று பேசும்போது அது பொருள் மயமான உலகில் தோன்றி வெளிப்படும் பயன் களைப் பற்றி மட்டும் குறிப்பதில்லை. ஆனல் மனிதனுடைய சிந்தனை அமைப்பில் ஏற்படுத்தும் அமைப்பு மாறுதல்களையும் குறிக்கும்.

புற உலகில் செய்யப்படும் செயல்களின் பின் விளைவாக மனம் இயங்கும் முறையில் ஏற்படும் மாறுதல்கள் தெளிவாக மூன்று வகையாக இருக்கும் என்பது கண்ணபிரான் கொள்கை: 1) விரும்பத்தகாதது, அதாவது கெடுதல் விளைவிக்கக்கூடியது— அதாவது நிச்சயமாகக் கெட்டது (2) விரும்பத்தக்கது அதாவது கேடு விளைவிக்காதது அதாவது நல்லது; (3) இரண்டும் கலந்தது அதாவது நல்லது கெடுதல் இரண்டும் சம நிலையில் உள்ளது.

கால வெள்ளம் பாய்ந்து கொண்டே இருக்கிறது நிகழ் காலம் தான் அடுத்து வரும் வருங்காலத்தை நிர்ணயிக்கிறது. எனவே மேலே கூறப்பட்ட மனப் போக்குகள் நாம் புறச் சூழ்நிலையில் அடுத்து என்ன செய்யப் போகிறோம் என்பதை முடிவு செய்யும். இந்தக் கருத்தை சாவு வரை தொடர்ந்து பார்த்தால் சாவுக்குப் பிறகு அடுத்த பிறவியில் நாம் எடுக்கும் உடல் இப்போக்குகளுக்கு உரியதாகவும், அதற்கேற்ற சூழ் நிலைக்கு ஒத்ததாகவும் தான் இருக்கும். இதைத் தவிர, ஸநாதன தர்மத்தில் மறுபிறவி வாதம் அல்லது அவதார வாதம் என்கி றோம். வாசனைகள் சாத்வீகமாக இருந்தால் அவை உள்ள மனதுக்குக் கிடைக்கும் சூழ்நிலை இன்பமும் முன்னேற்றமும் கிடைக்கக்கூடிய ஒரு மகிழ்ச்சிகரமானதாக இருக்கும். தெரிந்தே மனதில் மிருக வாசனைகளை வளர்க்கிறவர்கள் 'கீழ்த்தர யோனி

களில் பிறந்து தங்கள் வாசனைகளைப் பூர்த்தி செய்து கொள்வார்கள். இரண்டும் சமமாக இருந்தால் கர்ம பூமியில் பிறக்கிறோம்—இது புத்திசாலியான மனிதனுக்கு உரிய இடம். நமக்கு உள்ளேயே ''மேன்மையான நிலைக்கு'' அழைப்புக் குரல் இருக்கிறது. அதைப் பற்றித் தெளிவில்லை, தெளிவும் கிடைக்காது. அதே மாதிரி நம்முள்ளேயே ''மட்டமான'' மிருகங்களின் கூவல்கள், ஊளையிடுதல்கள், குரைப்புகள், பெருமூச்சுகள், கீசல்கள், கூச்சல்கள்—இவையும் இருந்து கொண்டு நம்மை உண்மையான குறிக்கோளைக் கண்டு அறிய முடியாமல் திட்டமிட்டதுபோல் குழப்பிக் கொண்டிருக்கின்றன.

உயர்ந்த குறிக்கோளைக் கைக்கொண்டு முடிந்த வரை அதற்கு உரிய வாழ்க்கையை நடத்துவானானால் உயர்வான வாசனைகள் பல்கிப் பெருகி கீழ்த்தரமான வாசனைகளை முழுமையாக அழித்துவிடும். மாறாக, இந்தப் புது உலகின் போக்கின்படி மட்டமான கருத்துக்களுடன் இணைந்துகொண்டு அங்கே ஒதுங்கி வாழ ஆரம்பித்தோமானால் மிருக உணர்வுகளும் போக்கும் அதிகமாகி நம் தெய்வத்தன்மையையே பரிகாசத்துக்குள்ளாக்கிவிடும். சுருக்கமாக மேல்நோக்கியா, கீழ் குனிந்தா என்ற இழுப்புச் சண்டையில் முடிவு செய்ய வேண்டியது ஒவ்வொரு மனிதனுடையவும் தனி மனிதப் பண்பின் தொகுதி (Personality) தான்.

வாசனைகள்—நல்லவையோ கெட்டவையோ இரண்டு நிலையிலும் வலி, கிலியுடன் கூடிய 'பிறவி' என்ற ஒன்று உண்டு. இந்த 'துய்க்கும் மனிதன்' இவற்றை மீற வேண்டும். அதற்கு நிஷ்களங்கமான ஆத்ம தரிசனம் வேண்டும். ஆனால் வாசனைகளும் அவற்றின் விளைவாக ஏற்பட்டிருக்கிற மனித அமைப்பும் இந்த நிலையை தம் வஞ்சப் பிடிக்குள் வைத்திருப்பதுபோல் இருக்கிறது. எனவே அந்த நிலையும் ஒழிந்து வாசனைகளும் அற்றால்தான் அந்தப் பேறு சாத்தியம்.

தியாகத்திற்கும் சன்யாஸத்திற்கும் உள்ள மாறுபாட்டையும் கண்ணன் இங்கே விளக்குகிறார். ஸந்யாஸியைப் பழைய செயல்களும் கட்டுப்படுத்துவதில்லை தற்போது செய்யும் கர்மங்களும் கட்டுப்படுத்துவதில்லை. தியாகம் என்பது கணத்துக்குக் கணம் நம் மனதின் தூண்டுதல்களையும் விருப்பங்களையும் விட்டு விடுவது. சந்யாஸம் நல்லது கெட்டது இரண்டு போக்குகளையுமே முழுமையாக விட்டு விடுவதாகும்.

மனிதன் தன் சிறந்த மானுடப் பண்பை சீரமைத்துக் கொள்ள கீதை வகுத்துள்ள முறை மிகவும் விவரமாக எல்லா விதத்தாலும் விளக்கப்பட்டிருக்கிறது. அது இதுதான்: (அ) சாதகன் சுய கட்டுப்பாடு அறநெறிக் கோட்பாடுகள் ஆகிய சீரிய

உயர்ந்த போக்குகளுடன் மனதை இணைத்து கீழ்த்தரமான புலனின்ப வேட்கைகளையும், ஆசைகளையும் விடுகிறான் (ஆ) அந்த மனது புலன் தூண்டல்களுக்குக் கட்டுப்படும் மனதைவிட அடக்கமுள்ளதாக ஆகிறது. தூய்மையடைந்த மனதுக்கு சூக்குமச் சிந்தனையாற்றல், அலைவுறாத நற்பணியில் ஈடுபாடு, தவிர அப்புறம் இப்புறம் கலங்காத தியானம்—இவற்றுக்கான ஆற்றல் கிடைக்கிறது. (இ) மிகவும் தூய்மையான 'ஸத்வத்'தை 'உண்மை இருப்பை' அடைந்தவுடன் 'ஆடும் (மாறும்) நிலைகள் எல்லாம் நின்று விடுகின்றன. நிஷ்களங்கமான ஆன்மாவுக்கு பிறகு ஆடுதல் (மாற்றம்) கிடையாது. பிறகு வாசனைகள் அதை எந்த முறையிலும் கட்டுப்படுத்த முடியாது. ஆத்மா அனந்த மானது. அத்வைதமாக எங்கும் பரவி ஊடுருவி நிற்கும் தன்மை யுள்ளது. அதன் சூக்கும இருப்பு எப்போதும் பவித்ரமாகவும், எதனாலும் பாதிக்கப்படாததாகவும்தான் இருக்க முடியுமே யன்றி வேறு எப்படியும் ஆக முடியாது.

விருப்பத்துக்கு உகந்தது, விரும்பத் தகாதது, இரண்டும் கலந்ததான கர்ம விளைவு முதலியன கர்மங்கள், அவற்றிற்கு ஏற்றவாறு நிகழும் எதிர்விளைவுகள், இவற்றை 'என்னுடையது' என்று இணைத்துக் கொள்பவர்களுக்குத்தான் ஏற்படும். 'நான்' என்ற முனைப்பையும் கர்மப் பயன்களை எதிர்பார்க்கும் பரபரப் பான பற்றையும் விட்டவர்களான தியாகிகள். செய்கைகளின் பயனான எதிர் விளைவுகளின் வழியில் சிக்குவதில்லை. கடந்த கால நினைவுகள்தான் ஆசைகளின் விளை நிலம். வருங்காலம் என்ற உச்சியில்தான் செய்கைகளாகிற மரங்களில் பழங்கள் உண்டா கின்றன. கடந்த காலத்தின் வாரிசாகி அவற்றின் ருசி காண் பதும், வருங்கால விளைவுக்கு ஆத்திரப்படுவதையும் விட்டு விட்டு, உலகில் பணியை 'கடவுள் சேவை'யாகச் செய்வதுதான் தியாகம்.

தியாகம் என்கிற விஷயத்தைப் பற்றி பொதுவாகப் பேசிய பிறகு 'வேலையின்' உறுப்புக்களைத் தனித் தனியாகச் சொல்லி விஷயத்தை மிகவும் நுணுகி நெருங்கி ஆராய்கிறார் கண்ணபிரான்:

பஞ்சைதானி மஹாபா ஹோ
காரணாநி நிபோத மே
ஸாங்க்யே கிருதாந்தே ப்ரோக்தானி
ஸித்தயே ஸர்வகர்மணாம் 18:13

பஞ்ச—ஐந்து; ஏதானி—இவைகள்; மஹாபாஹோ—பெரும் கையனே (வீரா); காரணாநி—காரணங்கள்; நிபோத—தெரிந்து கொள்; மே—என்னிடமிருந்து; ஸாங்க்யே—சாங்கியத்தில்; க்ருதா

ந்தே—கர்மத்தின் முடிவில்; ப்ரோக்தானி—சொல்லியபடி; ஸித்தயே—நன்கு முடிவுற; சர்வ கர்மணும்—எல்லா வேலை களுடையவும்.

ஏ வலிமை பொருந்திய கைகளை உடையவனே; என்னிடமிருந்து சாங்க்ய (உபநிஷது) சித்தாந்தத்தில் கர்மத்தின் சித்திக்கான ஐந்து காரணத்தைத் தெரிந்து கொள்.

கண்ணன் கர்மம்; தனக்கான ஆசைகள்; பயனைத் துய்க்கத் துடிக்கும் பற்று, இவை இல்லாமல் செய்ய வேண்டும் என்று அறுதியாகச் சொல்லி விட்டார். அர்ஜுனன் புத்திசாலியான சிந்தனையாளன். எனவே அவன் கர்மத்தின் பொருளை அறிய விரும்புவது இயற்கைதான். கர்மத்தின் உட்பொருளை முழுமை யாக வெளிப்படுத்த கிருஷ்ணன் வேலையின் வெளி அமைப்பைக் கூறு போட்டு விளக்குகிருர்; அத்துடன் செயலுக்கும் உடலுக்கும் உள்ள சம்பந்தம், உள் தூண்டுதல்கள், காரணங்கள், உந்துதல் கள் இவற்றையும் எடுத்துச் சொல்கிருர்.

பலம் பொருந்திய கைகளை உடையவனே! என்று கண்ணன் அர்ஜுனனை அழைத்துச் சொல்கிருர். ஒரு சாதனைக்கு, செயலின் வெற்றிகரமான முடிவுக்கு ஐந்து தத்துவங்கள் சரியானபடி கட்டுப்பாட்டுடன் அமைந்து பயன்பட்டு ஆகவேண்டும். அவை ஐந்தும் செயலின் அங்கங்கள். அவை இல்லாமல் செயல் இல்லை. வேலை தெய்வீகமாகவோ, உலகாயதமாகவோ, பூத சம்பந்த மானதோ, ஆத்மீகமானதோ எதுவாயிருந்தாலும் இந்த ஐந்து அங்கங்களும் இனிமையான இசைவுடன் இணைந்து வேலை செய் தால் ஏற்றுக்கொண்ட செயல் தலைசிறந்த வெற்றி பெறுவது உறுதி. இங்கே அர்ஜுனனுக்கு அவன் பலம் நினைவுறுத்தப்படு கிறது. காரணம், அவன் உள்ளத்தில் சாஹஸ உணர்வு தூண்டப் படுகிறது. ஏன் என்ருல் துணிவு கொண்ட தைரியம், செயலில் ஒருமித்த ஊக்கம், சுயநம்பிக்கை புத்தியில் வீரம் இவை எல்லாம் இருந்தால்தான் யாரும் தங்கள் செயல்களைச் சிறந்த ஒழுக்கக் கட்டுப்பாட்டுக்குள் கொணர்ந்து உண்மையான, முழுமையான உள்ளப் பண்பாட்டு வளர்ச்சியை வெற்றிகரமாக ஏற்படுத்திக் கொள்ள முடியும்.

இந்த சுலோகத்தில் கீதாச்சாரியன் இந்தத் தொகுப்பு தான் ஏற்படுத்தியதல்ல என்று ஒப்புக் கொள்கிருர். சாங்கியத் தத்துவத் தொகுப்பில் சொல்லப்பட்டதுதான். இந்த சாங்கிய சாஸ்திரம் தனியாகக் கிடைப்பதாகத் தெரியவில்லை. ஒருகால் இங்கே அது உபநிஷதங்கள் என்ற பொருளில் வந்திருக்கலாம். கிடைக்கிற சாங்கிய நூல்களில் இந்த ஐந்து வகை உபகரணங் களைப் பற்றிய பேச்சு இல்லை. வியாச பகவான் காலத்தில் இவற் றைப் பற்றிச் சொல்லிய நூல்கள் இருந்திருக்கலாம். அவை

இப்போது நமக்குக் கிடைக்கவில்லை. இருப்பினும் ஒன்று நிச்சயம். கீதா சாஸ்திரத்தில் இந்தக் கருத்துத் தெளிவாகியிருக்கிறது. கீதை ஆத்மஞானம் வந்தவுடன் எல்லா வேலையும் நின்றுவிடுகிறது என்று கூறுகிறது. அதையொட்டிய அத்வைத விரிவுரையாளர்கள் ஞானம் புகட்டும் வேதாந்தம் என்பது கர்மத்தின் முடிவு என்று சொல்கிறார்கள்.

வருகிற சுலோகத்தில் பகவான் கர்மங்களின் ஐந்து அங்கங்களை விவரிக்கிறார்.

அதிஷ்டானம் ததா கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம்
விவிதாஸ்ச ப்ருதக் சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம்
18:14

அதிஷ்டானம்—இருக்கை அல்லது உடல்; ததா—அப்படியே; கர்த்தா—செய்பவன் (தன் முனைப்பு); கரணம்—ஞானேந்திரியங்கள்; ச—மேலும்; ப்ருதக்விதம்—தனித்தனியான; விவிதா—விதவிதமான; ப்ருதக்—வேறு வேறான; சேஷ்டா—செய்கைகள் (கர்மேந்திரியங்கள்); தைவம்—அதிர்ஷ்டமான தேவதை; ச—மேலும்; ஏவ—ஏ; அத்ர—இங்கே; பஞ்சமம்—ஐந்தாவது.

உடல், 'தன் முனைப்பு' தனித்தனியான பல ஞானேந்திரியங்கள்; கர்மேந்திரியங்களின் பல செயல்பாடுகள்—ஐந்தாவதாக அதிஷ்டான தேவதையும்—(ஆகும்)

சென்ற சுலோகத்தில் கொடுக்கப்பட்ட வாக்குறுதி இந்த சுலோகத்தில் நிறைவேற்றப்படுகிறது. ஒரு செயலுக்கு உரிய ஐந்து அமிசங்களையும் கண்ணபிரான் பிரித்துச் சொல்கிறார். இது 'சாங்கி'யத்தில் கூறப்பட்டிருப்பதுடன் ஒத்திருக்கவில்லை என்று முன்னமேயே நாம் சொல்லியிருக்கிறோம். உரைகாரர்கள் விளக்கங்களில் சற்றே மாறுபாடுகள் இருக்கின்றன. அவை நேரடியாக சாதகனுக்கு உதவுவதாக இல்லை. ஆனாலும் சாங்கியர்கள் கூறும் 24 தத்துவங்களையும் இந்த ஐந்து வகைகளுள் காண முடியும்.

உடல் (அதிஷ்டானம்) உதவி கொண்டுதான் செயல்கள் நிறைவேறுகின்றன. ஏனென்றால் உடலில்தான் வெளித்தாக்கல்கள் உறைக்கின்றன. அதே மாதிரி எதிர் நிகழ்ச்சிகளும் வெளியேறுகின்றன. கர்த்தா (அதாவது 'நான்' என்று இயங்கும் தத்துவம்) உள்ளே இல்லை என்றால் உடல்தானாகப் புற உலகை ஏற்றுக் கொள்ளவோ அதற்கேற்றவாறு இயங்கவோ முடியாது. ஆசைகளுக்கு அதிபதியாகி அவற்றை நிறைவேற்ற உடலின்—செயல்கள் மூலம் முயற்சி செய்து கொண்டிருக்கும் ஒரு அறிவு கொண்ட' தத்துவம் தேவை. இந்த 'நான்' என்ற தத்துவம்

உடலை சதா வேலையில் தூண்டி வைத்துக் கொண்டிருக்கிறது. இப்படி நான் என்ற ஜீவன் புற உலகப் பொருள்களில் துய்ப்பை விரும்பி நிறைவேற்ற முடியும்போது அதற்கு ஞானேந்திரியங்கள் இயற்கையாகவே தேவைப்படுகின்றன. இந்தப் புறப் பொருள் அறியும் கருவிகள் (ஞானேந்திரியங்கள்) இல்லாமல் உள்ளே உள்ள 'நான்' என்னும் ஜீவன் புறத்தே சுற்றி உள்ள போகம்; திருப்தி தரும் உலகுடன் எந்தவிதமான தொடர்பும் வைத்துக் கொள்ள முடியாது.

'சேஷ்டை' என்பதற்கு ஸ்ரீசங்கரர் ப்ராணன், அபானன் போன்ற உடல் செய்யும் செய்கைகள் என்று பொருள் கொண்டிருக்கிறுர். வேதாந்தக் கருத்து தெரிந்தவர்களுக்கு இந்தப் பொருள் தெளிவு கொண்டதுதான். ஆனுல் சாதாரண மாணவனுக்குக் குழப்பம் ஏற்படும். உடலுக்குள் மூச்சு விடுதல் (ப்ராண அபானம்) போன்ற செய்கைகளால் உடல் சீர்பெற்று நிற்கிறது. அது அப்போதுதான் கர்மேந்திரியங்கள் மூலம் செயல்களைச் செய்யும் ஆற்றலையும் வேகத்தையும் கொள்கிறது. எனவே நாம் இங்கே நேரடியாகவே சேஷ்டை என்பதற்கு கர்மேந்திரியங்கள் என்று பொருள் கொள்ளலாம்.

ஐந்து ஞானேந்திரியங்களுக்கும் பஞ்சபூதங்கள் ஆளும் அதிகாரிகள் (கண்—அக்னி; காதுகள்—ஆகாயம்; நாக்கு—நீர்; தோல்—காற்று; மூக்கு—பூமி) இந்த ஆளும் அதிகாரிகளை தேவதைகள் என்கிறோம். அவைதான் கண்களில் பார்வை, காதுகளில் கேள்வி, போன்று புலன்களின் ஆற்றல்கள் செயல்களைக் குறித்துக் காட்டுகின்றன. அதாவது ஐம்பொறிகள் முழு ஆற்றலுடன் ஒழுங்காக செயல்பட அவைகள் அவ்வவற்றின் க்ஷேத்திரங்களில் இயங்க வேண்டும்.

விளக்கத்தின் இவ்விவரணங்களை விட்டு விட்டு சுலோகத்தைப் பார்த்தோமானுல் அது செயல்பாட்டுக்கு உரிய ஐந்து அங்கங்களையும் பெயரளவில் குறிக்கின்றன. அவை: 1. உடல், 2. நான் என்ற ஜிவதத்துவம் (சங்கரர் பாஷ்யம் இதைத் தெளிவாக போக்தா அதாவது புத்தி மனம் இவற்றுடன் துய்ப்பதற்காக இணைந்த ஆத்ம தத்துவம்—உபாதிலக்ஷணே போக்தா என்று குறித்திருக்கிறுர்) 3. ஞானேந்திரியங்கள்; 4. கர்மேந்திரியங்கள் 5. ஐந்து பூத சக்திகள். இந்த சுலோகம் செயலுக்கு இன்றியமையாத ஐந்து அம்சங்களின் பேரைச் சொல்வதற்கு மட்டுமே பயன்பட்டிருக்கிறது.

மனிதனின் ஒவ்வொரு செயலுக்கும் இவ்வைந்தும் எப்படி பங்கேற்கின்றன?

சரீர வாங்மனோபிர்யத் கர்ம ப்ராரபதே நர:
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ:
18:15

சரீரவாங்மனோபி:—உடல் வாய் மனத்தால்; யத்—எந்த ஒரு; கர்ம—செயல்; ப்ராரபதே—செய்கிறானோ; நர—மனிதன்; ந்யாயம்வா—சரியானதோ அல்லது; விபரீதம்வா—மாறானதோ; பஞ்ச—ஐந்து ஏதோ—இவை; தஸ்ய—அதன்; ஹேதவ:—காரணங்கள்.

எந்த வேலையை ஒரு மனிதன் உடலாலோ வாக்காலோ, மனதாலோ செய்தாலும்—அது நியாயமானதாக இருந்தாலும் சரி; எதிரிடையாக இருந்தாலும் சரி—இவ்வைந்தும்தான் காரணங்கள்.

இவ்வைந்தும் முழுமையாகத் தங்கள் வேலையை இணைந்து செய்யும் போதுதான் ஒரு செயல் நிறைவேறும் என்பதனால் இவை காரணங்கள் என்று சொல்லப்படுகின்றன. இதில் எக்காலத்தும் மாறு பாடு கிடையாது என்று அழுத்திச் சொல்லவே உடல், பேச்சு, மனது இவற்றின் மூலம், சரியோ தப்போ எந்த வேலையாக இருந்தாலும் என்று குறித்துச் சொல்கிறார்.

இந்த ஐந்தும் செயலுக்குக் கருவிகள், செயலேயற்று ஆத்மா மனதின் ஆசைகளால் பாதிக்கப்படும்போது ஜீவன் போல் மாறிவிடு கிறது. அந்த ஜீவன் தன் உண்மை நிலையை மறந்து பொறியின்பங்களின் மூலம் மகிழ்ச்சியை வேண்டி, அப்பொறியின்பத் துய்ப்புகளைப் பயன்படுத்தி பல பொருள்கள் கொண்ட இந்த உலகில் சேர்க்கவும், பறிக்கவும், வெற்றியடையவும் விரும்புகிறார். இந்த ஐந்தும் மோட்டார்காரில் 'பானெட்'டின் கீழ் உள்ள உறுப்புக்கள் போல்தான் என்பதை மறக்கக் கூடாது. அவை பெட்ரோல் இல்லை. வேடிக்கை என்னவென்றால் 'பெட்ரோல்' மட்டும் பிரயாணம் செய்ய முடியாது. இஞ்சினும் பெட்ரோலும் இல்லாமல் பிரயாணம் செய்ய முடியாது.

மோட்டர் கார் பெட்ரோல் இஞ்சின் வழி இயங்கி நகர்த்தும்போது அது ஓடும் காராகிறது. காரோட்டி காரின் சொந்தக் காரர் விருப்பப்படி போக வேண்டிய இடத்தை நோக்கி காரை சரியான முறையில் செலுத்தினால்தான் அது குறிப்பிட்ட இடத்துக்குப் போய்ச் சேரும். இந்த சமநிலையிலுள்ள எடுத்துக்காட்டைப் புரிந்து கொண்டோ மானால் கிருஷ்ண பகவான் எண்ணிக் குறிப்பிடும் இந்தப் பகுதியைப் புரிந்து கொண்டு அவர் 'இவை ஐந்தும் காரணங்கள்' என்று சொல்லும் கருத்தையும் சரி என்று ஒத்துக் கொண்டு அனுபவிக்க முடியும்.

''சென்ற இரண்டு சுலோகங்களில் எண்ணப்பட்டவை யும் அவற்றுக்குக் கொடுத்த விளக்கங்களும் சேர்ந்து என்ன முடிவைக் கொள்ள வைக்கின் றன? ஆத்மாவை 'கர்த்தா' என்று எண்ணுவது ஒரு பிரமையே!

தத்ரைவம் ஸதி கர்த்தாரமாத்மாநம் கேவலம் து ய:
பச்யத்யக்ருத புத்தித்வாந்ந ஸ பச்யதி துர்மதி:

18:16

தத்ர எவம் ஸதி—அது அப்படி இருப்பதனுல்; கர்த்தாரம்—கர்த்தாவாக; ஆத்மாநம்—ஆத்மாவை; கேவலம் து—மட்டுமே; ய:—எவன்; பச்யதி—பார்க்கிருனே; அக்ருதபுத்தித்வாத்—உண்மை பழகாத அறிவால்; ஸ ந பச்யதி—அவன் பார்க்கிருனில்லை; துர்மதி—தப்பான அறிவுடையவன்.

அது (உண்மை) அப்படி இருக்கும்போது சரியான பழக்கம் (பயிற்சி) இல்லாத காரணத்தால் யார் தன் ஆத்மாவை மட்டுமே (''இஞ்சினுல்'' பாதிக்கப்படாத) கர்த்தாவாக பார்க்கிருனே அவன் தவருன அறிவுடையவன். உண்மையைப் பார்க்கிரு னில்லை.

சென்ற சுலோகத்தில் நாம் செயல், (ஜடப்) பொருள்களின் உலகத்தில் நிகழ்வது என்று பார்த்தோம்—ஆம் அத்மாவின் எதிரில்தான் நிகழும் என்பதும் உண்மை. செயல்களின் கருவி களும், செயலே இல்லாத ஆத்ம தத்துவமும் எப்படியோ தவருன பிணைப்பில் சிக்கி 'கர்த்தா'வாகக் காட்சி தருகிறது. கருவிக்கும் ஆத்ம தத்துவத்திற்கும் மாறுபாடு தெரியாமல் 'தான்' என்ற ஜீவன் ஏமாற்றம் அல்லது தோல்வி பெற்றபோது பெருமூச்சு விடு கிறது. மகிழ்ச்சியும் வெற்றியும் பெற்ருல் குதிக்கிறது; ஆடுகிறது. இந்த உள் கரணங்கள், அவற்றின் ஆட்டம் இவற்றை ஒருவன் கண்டு கொண்டால் அந்தக் கணமே மாயமான இந்த ஜீவன் முடிந்து விடுகிருன். காரணம்: அது மனதின் பிரமைதான். 'நட்ட நடுநிசிக் கனவில் தோன்றிய பூதம்தான்! இந்தக் கருத்தைத் தான் கண்ணன் இங்கே அழகாகத் தெரிவிக்கிருர்.

தத்ர ஏவம் ஸதி உடல் மனம் பேச்சு இவற்றினுல் நிகழும் நல்ல அல்லது கெட்ட எல்லா செயல்களுக்கும் அடங்கிய அம்சங் கள்: உடல், ஜீவதத்துவம், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங் கள் பஞ்ச பூதங்கள் இவைதான். எனவே எல்லா செயல்களும் ஜடப் பொருளுலகத்தைச் சேர்ந்தவைதாம். அப்படியிருந்தும் மனிதனின் உண்மை உயிர்த் தத்துவமான ஆத்மா, அவனுடைய ஜடப் பொருள் உரைகளுடன் இணைந்து மாறும் மனிதன் ஏற்கும் இன்னல்களுக்கு தன்னையும் உள்படுத்திக் கொள்கிறது. வேதனை கள், மகிழ்ச்சிகள், தோல்விகள், வெற்றிகள், குறைகள், தடை

கள் எல்லாம் ஜீவனைப் பாதிக்கின்றன. அந்த ஜீவ தத்துவம் செயலின் இக் கூறுகளால் பாதிக்கப்படுவதாக எண்ணிக் கொண்ட ஆத்ம தத்துவமே! பரிபூரண, பரம்பொருளான சுத்த ஆத்மாவை கர்த்தா என்று தவருகக் கொள்ளப்படுகிறது. அப்போது ஜீவத்வ பாவனையில் தெய்வீக தத்துவம் மறக்கப்படுகிறது. தனி ஜீவன் கஷ்டப்படுகிறது.

இந்த மாயை (தப்பான) அறிவுக்கும் இங்கே காரணங்கள் சுட்டப்படுகின்றன. ஆகிருதபுத்தி, துர்மதி. அதாவது பயிற்சியில்லாத மனம் தவருன கோணல் அறிவு—இரண்டு கோளாறுகள். இவற்றின் காரணமாக தன் அடிப்படை தெய்வீகத் தன்மை உணர்வு நிலையாக தொடர்ந்து வைத்துக் கொள்ளப்படுவதில்லை. இந்தக் கூற்றிலிருந்து பெறப்படுவது இது தான். சாதகன் ஒருவன் தன் பகுத்தறியும் ஆற்றலைச் சரியானபடி நடத்தி, மனதையும் புத்தியின் கோணங்களில் சிக்காமல் காத்து, தன்னுள் இணைப்பு லயத்தை ஏற்படுத்தி அதை நிலையாகக் காப்பாற்றி வர முடியுமானல், அவனுக்கு பின்வரும் அனுபவம் ஏற்பட்டுவிடும்—அதாவது வெளியுலகச் செயல்களில் ஜடப் பொருள்களால் ஆன ஐந்து அங்கங்கள்தான் ஈடுபட்டு அவஸ்தைப் படுகின்றன. 'தனக்கும்' அவற்றிற்கும் ஒரு உறவும் இல்லை. *

மேற்கூறிய கருத்துக்களுக்கு இன்னம் விளக்க ஒளி தருவதற்காக பிரபு கண்ணன் சொல்கிருர்:

யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே
ஹத்வாபி ஸ இமாம் லோகான் ந ஹந்தி ந நிபத்யதே
*18:17*

யஸ்ய—யாருடைய; ந—இல்லையோ; அஹம் க்ருத:—தான் என்ற; பாவ—கருத்து; புத்தி—புத்தி; யஸ்ய—யாருடைய; ந லிப்யதே—பற்றுக் கொள்கிறதில்லையோ; ஹத்வா—கொன்று; அபி—உம் கூட; ஸ:—அவன்; இமான்—இந்த; லோகான்—மக்களை; ந ஹந்தி—கொல்கிருனில்லை; ந நிபத்யதே—பிணைக்கப்படுகிருனில்லை.

---

* கோபியர்கள் சுற்றிநின்று ஆடுகிருர்கள். ஆனல் அந்த உண்மையான பரமாத்மா கண்ணன் சுற்றிச் சுழன்று தன்னை மறந்து ஆடும் கூட்டத்துக்கு நடுவில் ஆடாமல் அசையாமல் நிற்கிருர். ஆயர்பாடியின் தெய்வீக அழகு நங்கையர் குழலூதியின் குழலின் பித்துப் பிடிக்க வைக்கும் நாதத்துக்கு மயங்கி ஆடுகிருர்கள். கண்ணன் தன் மூச்சுக் காற்றின் மூலம் இருப்பின் நாதத்தை இழுத்து வெளியிடுகிருர். நாம் அந்த மாயைத் தத்துவத்துடன் இணைந்து நிற்க வேண்டும். ஆட்டக்காரிகள் குழுவில் சேர்ந்து ஆடினல் களைப்பும், வலிவிழப்பும் தான்—பிருந்தாவனத்தின் கோபியர்கள் கொள்ளும் விம்மிதமும் அழுகையும் தான் நமக்கும் கிடைக்கும்.

'நான் தான்' என்ற கருத்திலிருந்து எவன் விடுபடுகிருனே, யாருடைய அறிவு கறைபடுகிறதில்லையோ அவன் இந்த மக்களைக் கொன்ருலும் அவன் கொல்கிறதில்லை. அவன் அந்தச் செயலுக்கு (குற்றவாளி) ஆளாகவும் மாட்டான்.

நமக்கு இதுவரை செயலுக்கான வயல் ஜடப் பொருளின் பூமியில்தான் என்று சொல்லப்பட்டு வந்திருக்கிறது. அங்கேதான் துயரங்கள் உளைச்சல்கள் என்ற காளான்கள் முளைக்க முடியும். ஆன்மா என்ற குடியானவன் வயலல்ல. அவன் இருப்பே தனித்தது. வயலுக்குப் புறம்பானது என்ருலும் அந்தக் குடியான வன் வயலில் தன்னை நாட்டிக் கொள்கிருன். அதில் தன்னைப் பரப்பிக் கொள்கிருன். அந்தப் பரப்பல்களுடன் தன்னை இணைத்துக் கொண்டு குறிப்பிட்ட கணத்தில் அப்பொழுது இருக்கும் வயலின் நிலைக்கேற்றவாறு அழுகிருன் அல்லது ஆனந்த மடைகிருன்.

அதே போல்தான் நாமும் நம்முடைய ஜடப் பொருள் உரை களில் நம்மைப் பரப்பி அந்தப் பரப்பல்களுடன் சுகாதாரமற்ற முறையில் ஒட்டிக் கொள்கிரேம். அந்த உறவுதான் இந்த 'தான்' என்ற தனி ஜீவத்வ பாவனைக்கு அடிப்படை. பிறகு அது வாழ்க்கையின் மோதல்களுக்கு ஆட்பட்டுத் தொல்லைப்படுகிறது. எனவே கிருஷ்ண பகவான், ''நான் என்ற உணர்வு இல்லாதவன், சொத்து சேர்த்தல், வெளவுதல் முதலிய ஆசை களால் கறைபடாத புத்தியுடையவன் உண்மையில் அவனைச் சுற்றி அவன் மூலமாகக் கூட நிகழ்ச்சிகள் நிகழும் போதும் அவன் செய்கிறதில்லை'' என்று சொல்கிருர்.

அப்படியானல் பொருள் உலகத்துடன் தன் உறவை விடுவித்துக் கொண்ட ஞானி உலகத்தில் ஒரு வேலையுமே செய்ய மாட்டான் என்று பொருளில்லை.

கல் சிலை போல நடந்து கொண்டிருப்பவனல்ல ஞானி. இதற்கு மாருக 'அவன் உலகில் வேலை செய்யும் போதும் அதை அவன் லீலையாகவே செய்வான் என்றுதான் பொருள். நாம் 'தன்னை' அதனுடன் கோந்து வைத்தது போல் ஒட்டிக் கொண்டு செய்தால்தான் வேலை நம்முடைய மனதில் வாசனைகளை'ப் பதிய விடும். அப்போது பழைய வேலைகள் மேலும் மேலும் வேலை செய்யத் தூண்டிவிடும். ஆனல் முழு வளர்ச்சியடைந்தவனுக்கு விவேகம் இருக்கும். அதனல் அவன் வேலையிலிருந்தும் பயனின்பற்றிலிருந்தும் தன்னைப் பிரித்து வைத்துக் கொள்ளத் தெரிந்திருப்பான். அதனல் சென்று போன நிகழ்ச்சிகள் ஆழமான சுவடுகளை ஏற்படுத்த முடியாது.

கிராமபோனை எடுத்துக் கொண்டால் ஊசி ஓட்டினல்தான் கிராமபோன் பாடும். அதே மாதிரி ஜீவத்வபாவனை, மனதுடன்

இணையும் போது அந்த மனிதன் தன் வாசனைகளின் போக்கில் போகத் தூண்டப்படுகிறான். தான் என்ற அகந்தையை விட்ட ஞானி எந்தத் துறையில் வேலை செய்தாலும் அவன் ஈசவான் (என்கிற பிரபஞ்ச அறிவின்) சித்தத்தை நிறைவேற்றுகிறான். எனவே அவன் முழுமையாக சரணாகதி உணர்வுடன் பக்திப் பொறுப்புடன் இயங்குவதால் எந்தச் செயலும் அவன் உள்ளத்தில் எந்தப் பதிவையும் விட்டுச் செல்லாது.

பகவான் கிருஷ்ணன் சொல்கிறார்: ''அவன் கொன்றாலும் கொல்கிறானில்லை. அவன் பந்தத்துக்குள்ளாவதில்லை'' இங்கே தான் வியாஸ முனிவரின் கலை முதிர்ச்சி வெளியாகிறது. பொதுவான தத்துவக் கூற்றுக்களைச் சொல்லும்போதே எதிரேயுள்ள பிரச்சினையைத் தொட்டு விடுகிறார். அர்ஜுனனுக்கு எதிரே யுத்த களத்தில் ஏற்பட்ட பிரசினை! வழி நடத்தப்பட தயாராயிருந்தாலும் அவன் சண்டையில் ஈடுபடத் தயங்குகிறான். அர்ஜுனன் புற பௌதீக உறைகளுடன் ஒட்டாமல் தனித்து நின்று கொண்டே, தெய்வீகத் தன்மையின் இடையறாத நினைவுடன் செயலில் விடாமல் ஈடுபட்டானானால், அப்போது அவன் உறவினர், பெரியோர், ஆசிரியர் யாரைக் கொன்றாலும் அது அவன் செய்யும் குற்றமாகாது. அம்மாதிரியே அவன் செயல்கள் மனதில் 'கொலைகார' வாசனைகளைப் பதிய விடாது. அவன் பண்பாட்டுச் சமநிலையும் அவன் ஆளுமையின் அழகும் கெட வாய்ப்பே இல்லை என்று அர்ஜுனனிடம் சொல்லப்படுகிறது.

பொருளாசை கொண்டு தீவிர உணர்ச்சிகளுடன் வேலை செய்யும் சுயநலக் கொலைகாரன் செயல்களின் விளைவையும், தன் தேசத்தின் விடுதலை சுதந்திரம் இவற்றைக் குறிக்கோளாக ஏற்று தொழில்புரியும் தேச பக்தியும் ஈடுபாடும் கொண்ட ஒரு போர் வீரனுடைய செயல்களையும், ஒப்பிட்டுப் பார்த்தால், பகவான் சொல்லும் இந்தக் கருத்து நன்கு விளங்கிவிடும். கொலைகாரன் வாசனைகளை வளர்த்துக் கொள்கிறான். அவற்றுக்கேற்ற உள் உந்தல்களால் உந்தப்பட்டு அவன் மீண்டும் மீண்டும் படு பாதகமான குற்றங்களைப் புரிந்து சமூகத்தில் கொந்தளிப்பை ஏற்படுத்தி விடுகிறான். அங்கே வீரன் அநேக உயிர்களுக்குச் சேதம் விளைவித்தாலும்கூட போர் களத்திலிருந்து திரும்பி வரும்போது அதிகப் பண்பட்டவனாகவும், கல்வியறிவும் பெருந்தன்மையும், நளினமான ஆளுமையுடனும் திரும்பி வருகிறான். முன்னதில் தன் முனைப்பு இருந்தது. எனவே கசுமாலமான வாசனைகள் பதியப் பெற்று விடுகின்றன. ஆனால் பின் உதாரணத்திலோ வீரர் உள்ளம் தேசத்தின்பால் அன்பில் நிலைத்திருந்தது. எனவே போர்க்களத்தில் செய்த கொலைகள் அவன் உள்ளத்தில் கொடூரமாக விளையக் கூடிய வாசனைகள் ஏற்படவில்லை. தெய்வீகத் தன்மை இருப்பில் ஜீவன் அடைக்கலம் அடைந்து விட்டானானால்

வாசனைகளின் பந்தமும் அவனுக்கு ஏற்பட முடியாது.

கர்மத்தின் மூன்று அம்சங்களை இவ்விதம் விளக்கிய பிறகு கண்ணபிரான் கர்மத் தூண்டுதல், கர்மத்தின் அடிப் படை இரண்டையும் விவரிக்கிறார்:

ஜ்ஞானம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்ம—சோதனா
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித: கர்ம—ஸங்க்ரஹ:
18:18

ஞானம்—அறிவு, ஞேயம்—ஞானத்தின் இலக்கு (அறியப் பட்டது அல்லது அறியப்பட வேண்டியது); பரிஞ்ஞாதா—அறிபவன்; த்ரிவிதா—மூன்று விதம்; கர்மசோதனா—கருமத்துள் முதல்; கரணம்—கருவி; கர்ம—செயல்; கர்த்தா—கருத்தா (செய்பவன்); இதி—என்று; த்ரிவித—மூன்று விதம்; கர்ம ஸங்க்ரஹ:—கருமத்தின் ஆதாரம்.

அறிவு, அறியப்படும் பொருள், அறிபவன்—இம் மூன்றும் கருமத்தின் தூண்டுதல்கள்; அங்கங்கள், செயல், கர்மம் செய்கிற கர்த்தா. இம் மூன்றும் கருமத்தின் ஆதாரம்.

எடுத்துக் கொண்ட விஷயத்தை அறிவியல் (விஞ்ஞான) ரீதியில் எடுத்துச் சொன்னார். 'ஒரு செயலில் கூறுகளாக விளங்கிய அம்சங்களைச் சொல்லிவிட்டு அவையாவும் பிரகிருதி அல்லது ஜடப் பொருள்களிலானவை என்றும் விளக்கிய பிறகு அவர் கர்மத்தைத் தூண்டிவிடும் சக்தியான மூவகைத் தத்துவங்களை யும், கருமத்தின் தொகுப்பாக அல்லது ஆதாரமாக விளங்கும் மூன்று தத்துவங்களையும் கூறுகிறார்.

கிருஷ்ணர் கருத்தில் கருமத் தூண்டுதல் மூவகைத் தத்துவங்கள் அடங்கிய ஒரு ஏற்பாடு. அறிவு, அறிபடுபொருள், அறிபவன் ஆகிய இவற்றை வேதாந்தத்தில் 'திரிபுடி' என்பர். துய்ப்பவன் துய்படு பொருள், துய்ப்பு. இம் மூன்றும் இல்லாமல் அறிவு இல்லவே இல்லை. ஏனென்றால் இம் மூன்றின் சேர்ந்த இயக்கத்தில்தான் வேலை செய்யும் தூண்டுதலும் துய்ப்பும் ஏற் படுகின்றன. துய்ப்பவன், துய்க்கும் இடத்தில் இயங்கி பலவகை அனுபவங்கள் (துய்ப்புக்களை)ப் பெறுகிறான். எனவே இம் மூன்றும்தான் செயலின் பின் மறைந்திருக்கும் மூன்று அம்சங்கள். இவற்றிற்குப் பதில் அறிபவன், அறிபடு பொருள், அறிவு என்ற சொற்களையும் பயன்படுத்தலாம்.

செயல் தூண்டுதல் துய்ப்பிலிருந்து ஆசை மூலம் எழலாம். அல்லது துய்ப்புப் பொருளிலிருந்து, அதன் கவர்ச்சி மூலம் எழ லாம்; அல்லது துய்ப்பிலிருந்து அத்துடன் ஒத்த சில பழைய நினைவுகளிலிருந்தும் வரலாம். இம் மூன்றைத் தவிர கர்மத்தைத்

தூண்டும் உறுப்பு வேறு ஒன்றும் கிடையாது.

'கருமத்துக்குத் தூண்டுதல்' எழுந்த பின், கர்மம் நடக்க ஒரு ஆதாரம் (கர்ம சங்கிரஹம்) வேண்டும். கரும சங்க்ரஹம் மூன்று அம்சங்களைக் கொண்டிருக்கிறது. கரணங்கள், எதிர்ச் செயல், வேலை செய்பவன் தன் ஆவலில் சிக்கித் தவிக்கும் ஜீவன் செயல் களத்தில் இறங்கி கர்த்தா என்கிற பாத்திரத்தை ஏற்கிறது. 'நான் செய்பவன்' என்ற எண்ணத்தைக் கொள்கிறது. இந்த 'கர்த்தா பாவம்' தான் அடைய விரும்பும் பயனைப் பற்றிய தெளிவான கற்பனையைக் கொண்டிருக்கிறவரையில்தான் இருக்க முடியும். செயல் மூலம் அடைய விரும்பும் பயன்தான் இங்கே 'கர்மம்' என்ற சொல் மூலம் குறிக்கப்படுகிறது. சங்கராச்சாரியார், கர்மம் என்றால் 'முடிவு' என்றே சொல்கிறார்கள். அதாவது கர்த்தா தன் கருமத்தின் முடிவில் அடையும் பயன்.

விருப்பம் கொள்பவன் அதாவது கர்த்தா திருப்தி தரும் என்று எண்ணும் ஒரு பயனால் தொடர்ந்து ஈர்க்கப்பட்டவனாக அதை அடைய வேண்டும் என்று முயலும்போது அவன் கரணங்களை (அதாவது செயலுக்காக கருவிகளைப் பயன்படுத்துவது) இன்றியமையாதது. கரணங்கள் என்று சொல்லும்போது ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை மட்டுமல்லாது உள் கரணங்களான மனம் புத்தியையும் சேர்த்துக் கொள்கிறோம். இப்பொழுது தொகுத்துப் புரிந்து கொள்வது மாணவர்களுக்குக் கடினமாய் இராது. 1. விருப்பம் ஒன்று கொண்ட கர்த்தா; 2. லக்ஷியத்தை அல்லது முடிவைப் பற்றிய தெளிவான கற்பனையை விடாமல் மனதில் நிறுத்திக் கொண்டு ; 3. செயலுக்கான கரணங்களைக் கொண்டு வேலை செய்வது இம் மூன்றுமே எந்தக் கர்மத்துக்கும் ஆதாரம் (கர்மஸங்க்ரஹம்). இம் மூன்றில் எது ஒன்று இல்லையென்றாலும் வேலை நடக்காது. இம் மூன்றும் கரணம், கர்த்தா, கர்மம். இம் மூன்றுமே கர்மத்தின் கூட்டு அல்லது எல்லா கர்மத்தின் ஆதாரம் என்று சொல்லப்படுகிறது.

இவ்விதம் கர்மத்துக்கான 'மூன்று வகைத் தூண்டுதல்கள் அல்லது உந்துதல்கள், கர்மத்தின் கூட்டு அல்லது கர்மத்தின் ஆதார அம்சங்களை விவரித்த பிறகு கிருஷ்ண பகவான், தன் கீதையில் (கீதத்தில்) 'மக்கள் ஏன் மாறுபட்டுச் செயல்படுகிறார்கள் மாறுபட்ட உந்தல்களுக்கு உள்ளாகிறார்கள். அப்படியே மாறுபட்ட ஆதாரங்களுக்கு உட்படுகிறார்கள்?' என்று சொல்கிறார். அவர் மக்களை சாத்வீக, ராஜஸ, தாமஸ மக்கள் என்று மூன்று விதமாகப் பிரிக்கிறார்.

இப்போது இறைவன் மேலே கூறப்பட்டவர்கள் ஒவ்வொருவருக்கும் தத்தம் பெரும்பான்மையான

குணங்களாயிருக்கிற சாத்வீக, ராஜஸ, தாமஸத் தன்மைக்கு ஏற்றவாறு மூன்று வகையாக இருக்கிறார்கள் என்று சொல்கிறார்.

ஞானம் கர்மச கர்த்தா ச த்ரிதைவ குணபேதத:
ப்ரோச்யதே குண ஸங்க்யானே யதாவச்ருணு தான்யபி
18:19

ஞானம்—அறிவு; கர்ம—கர்மம்; ச—மேலும்; கர்த்தா ச—செய்வோனும்; த்ரிதா ஏவ—மூவகைகளே; குண பேதத:—குணங்களின் மாறுபாடு காரணமாக; ப்ரோச்யதே—கூறப்பட்டிருக்கிறார்கள்; குண ஸங்க்யானே—குணங்களைப் பற்றிய விஞ்ஞானத்தில்; யதாவத்—உள்ளபடி; ச்ருணு—கேள்; தானிஅபி—அவற்றையும்.

அறிவு, செயல், செய்வோன் இம் மூன்றையும் குண விஞ்ஞானத்தில் குணம் காரணமாக மூன்று விதமாகவே உள்ளதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதை உள்ளது உள்ளபடி (சொல்லுகிறேன்) கேள்.

பின்னால் வரப் போவதற்கு முன்னுரையாக கண்ணன் இவ்விதம் சொல்கிறார்: மனிதருடைய குணங்களில் மாறுபாட்டின் காரணமாக குறிப்பிட்ட நேரத்தில் ஞானம், கருமம், கர்த்தாவையும் மூன்று வகைப் பிரிவுக்குள் அடக்க முடியும். இந்தப் பிரிவுகளை மிகவும் முழுமையான முறையில் கண்ணன் வரும் சுலோகங்களில் விவரிக்கிறார்.

ஒருவன் உள் இயற்கையின் வாகில் எந்தத் தன்மை மேலோங்கி இருக்கிறதோ அதைக் கொண்டு அவன் குணம் குறிக்கப்படும். மனிதன் மனமும் புத்தியும் எப்போதும் இயங்கிக் கொண்டிருக்கின்றன. என்றாலும் அவை நம்முடைய மனதில் அவ்வப்போது ஏற்படும். பருவ நிலைகளுக்கு உட்பட்டு வேலை செய்கின்றன. இப்படி மாறுபடும் பருவங்களை மூன்று வகைக் குணங்கள் என்று சொல்கிறோம். அதாவது நல்லது (சாத்துவீகம்) துருதுருப்பான நிலை (ராஜஸம்) மந்தமான குணம் (தாமஸம்).

இம்மூன்று குணங்களின்படி இயங்குகிற மனிதர்கள் அவரவர்களுக்கு உள்ளதன்மையுடன் மாறுபாடாக நடந்து கொள்கிறார்கள். அளவில் அதிகமாகவும் குறைவாகவும் சமமாகவும் சேர்ந்து உலகில் பல்வேறு வகையான தன்மையுடன் மனிதர்கள் ஏற்பட்டு இருக்கிறார்கள். ஒரே மனிதனை எடுத்தாலும் கூட அவன் சூழ்நிலை சம்பவத்தின்தன்மை, பிரச்னையின் வாகு, அவனுக்கு ஏற்படும் அறை கூவல் இவற்றிற்கு ஏற்றவாறு அவன் நடத்தை அவ்வப்போது மாறுபடுவதைக் காணலாம்.

கபிலரின் சாங்கிய நூலில் உள்ள குணங்களின்

சாஸ்திரப்படி ஞானம், கருமம் கர்த்தா இம் மூன்றையும் இம் மூன்று வகைகளுக்குள் அடக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது. கண்ணன் இவற்றைப் பாகுபடுத்தி எண்ணிச் சொல்லிவிட்டு, கீதை மாணவர்களை 'நான் சொல்வதை கவனமாகக் கேளுங்கள்,' என்கிறார். அர்ஜுனனிடம் நீ கவனி' என்று சொல் வதற்குப் பொருள் இல்லை; ஏன் என்றால் அவன்தான் கவனித்துக் கொண்டிருக்கிறானே! குறிப்பு என்ன என்றால் ஆசாரியரான கண்ணன் பொருளின் முக்கியத்துவம் கருதி மாணவனின் தனிக் கவனத்தை ஈர்க்கிறார்.

இதோ ஞானத்தின் மூன்று வகைகள்:

ஸர்வபூதேஷு யேனைகம் பாவமவ்யயமீக்ஷதே
அவிபக்தம் விபக்தேஷு தஞ்ஞானம் வித்தி ஸாத்விகம்
18:20

ஸர்வபூதேஷு—எல்லாப் பொருள்களுள்ளும்; யேன—எதன் மூலம்; ஏகம்—ஒரு; பாவம்—உண்மை; அவ்யயம்—அறியாதது; ஈக்ஷதே—(ஒருவன்) பார்க்கிறானோ; அவிபக்தம்—பிரிவுபடாததாக; விபர்தேஷு—தனித் தனி பிரிவாக இருப்பவற்றுள்; தத்—அந்த; ஞானம்—அறிவு; வித்தி—அறிந்துகொள்; ஸாத்வீகம்—சாத்வீகம்.

எந்த அறிவைக் கொண்டு ஒருவன் தனித் தனி பிரிந்து இருக்கும் பொருள்களுள் இருக்கும் பிரியாத ஏகாக்ரதமான உண்மையை பார்க்கிறானோ அந்த அறிவு சாத்வீகம் என்று அறிந்து கொள்.

அறிவு, கர்மம், கர்த்தா மூன்றும் தனித்தனி மூவகை மனோநிலைகளில் (குணங்களுக்கேற்றவாறு) இருக்க முடியும். நாம் இந்த மூன்று குணங்களிடையேயும் ஊசலாடுகிறோம். குணங்கள் பல விகிதங்களில் கலந்து நிற்கும். எனவே ஒவ்வொரு சமூ கத்திலும் பலதரப்பட்ட மக்களைப் பார்க்கிறோம்.

இங்கே ஞானம், கர்த்தா, கருமத்தின் பலவகைகளை விவர மாகக் கூறப்பட்டிருப்பதற்குக் காரணம்: இவற்றைக் கொண்டு பிறரை அளப்பதற்கல்ல. சாதகன் தன்னைத் தான் சோதித் தறியவே இவை விவரிக்கப்பட்டிருக்கின்றன. பண்பாட்டில் சிறந்து வளர விரும்புபவன் கூடிய வரையில் சாத்துவீக நிலையிலே இருக்க முயல வேண்டும். நம்மை நாமே சோதித்துப் பார்த்தால் நம் குறைகள் தெரியும். உடனே அவைகளைக் களைந்து நம்மைச் சீர்திருத்திக்கொள்ள வேண்டும்.

இந்த சுலோகத்தில் சாத்துவீக ஞானத்தின் லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. நாம் பார்க்கும் உயிர்கள் பொருள்களி லெல்லாம் எந்த ஞானம் கொண்டு ஒரே பரமாத்மாவான அந்த

அழியாத உண்மையைப் பார்க்க முடிகிறதோ அது சாத்துவீக (தூய்மையான) அறிவாம். உடல்—மனம்—புத்தியாகிற அமைப்புக்களாக உலகில் வந்திருக்கும் உயிர்களிடையே அவ்வமைப்புக்களின் தன்மைக்கேற்றவாறு மாறுபாடுகள் இருக்கும். ஆனல் சாத்வீக அறிவு அவற்றை எல்லாவற்றையும் அவற்றுக்குள் அவற்றின் சாரமாயிருக்கும். அதே உண்மைத் தத்துவத்தின் பல வெளிப்பாடுகளாகவே காணும்.

மின்பொறியாளர் எல்லா பல்புகளுக்குள்ளும் ஒளிர்கிற ஒரே மின் தத்துவத்தைக் காண்கிறார். தங்க நகை செய்பவர்கள் எல்லா நகைகளுள்ளும் ஒரே பொன்னைத் தான் பார்க்கிறார். நமக்குச் சட்டைகள் எல்லாம் ஒரே பஞ்சினல் ஆனவை என்று தெரிகிறது. அதே போல் வாழ்க்கையாகிற சினிமாப் படம் நிழலாகும். அந்த மாருத திரையையும் அந்தத் திரையின் மேல் தான் வாழ்க்கையின் ஆட்டம், அழுகை எல்லாம் திரையிடப்படு கின்றன என்றும் காண்கிற அறிவு, சாத்துவீக அறிவாம்.

அவிபக்தம் விபக்தேஷு—தனிப்பட்டவைகளுள் பிளவு படாமல் ஏகாகாரமாய்: பானைகள் பல நூறு இருக்கலாம். அவை அமைப்பு, தோற்றம், நிறம், அளவு எல்லாவற்றிலும் மாறு பட்டுத் தனித்தனியே இருக்கலாம். ஆனல் அவற்றிலுள்ள வெளி (ஆகாசம்) இருக்கிறதே அது பிளவுபடாத ஒன்று. பல்புகள் வேறு வேறு. ஆனல் அவற்றுள் பாயும் மின்சக்தி ஒன்றே. அலைகள் வேறு வேறு. ஆனல் அந்த அலைகள் எல்லாவற்றிற்கும் சாரம், அவற்றின் உண்மைத் தத்துவம் ஒரே சமுத்திரம். அதே மாதிரி, ஒரே உயிர்த் தத்துவம் தான் எல்லா உயிருள்ளும் துடிப்புடன் இயங்குகிறது. ஆனல் அது பூத தத்துவங்களின் சேர்க்கையில் உள்ள வித்தியாசம் காரணமாக அவை தனித் தனியாக இருப்ப தனல் இதுவும் மாறுபட்டுத் தனித்தனியாகத் தோற்றம் தரு கிறது. பல அமைப்புகளுள்ளும் இருந்து விளையாடும் அந்த ஒரே உணர்வுத் தத்துவத்தின் ஆட்டங்களே எல்லாம், என்று உணரும் அறிவே, சாத்துவீக அறிவாம்.

ராஜஸ குணமுள்ளவர்கள் அறிவின் வகை எப்படி இருக்கும்?

ப்ருதகத்வேன து யஞ்ஞானம் நாநாபாவான் ப்ருதக்விதான்
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஞ்ஞானம் வித்தி ராஜஸம்
*18:21*

ப்ருதக்த்வேன—(ஒவ்வொன்றையும்) தனித்தனியாக; து—ஆனல்; யத்—எது (எந்த); ஞானம்—அறிவு; நாநாபாவான்—பலவித வஸ்துக்களை; ப்ருதக்விதான்—மாறுபட்ட வகைகளாக; வேத்தி—அறிகிறதோ; ஸர்வேஷு—எல்லா; பூதேஷு—பொருள்

களில்; தத் ஞானம்—அந்த அறிவு; வித்தி—அறிந்துகொள்; ராஜஸம்—ராஜஸமானது.

ஆனுல் எல்லாப் பொருள்களேயும் தனித் தனி விதமாகத் தனித் தனிப் பொருள்களாக பார்க்கிற அறிவைராஜஸம் என்று அறிந்துகொள்.

சாத்வீகத்தின் லக்ஷணங்களேத் தெரிந்துகொண்ட பிறகு நாம் இங்கே ராஜஸ ஞானத்தின் முழு விவரத்தையும் பார்க்கிறோம்.

பொருள்கள் தனித்தனி இருக்கிற காரணத்தால் அவைகளே வேறு வேருகவும் பலவாகவும் பார்க்கிற அறிவு தன் அமைப்பில், ராஜஸமாம். ராஜஸ ஞானம் எப்போதும் சக்தியின் துடிப்பில் இருக்கும். அது மற்ற பொருள்களேத் தனித் தனியாகவே பார்க்கும். ராஜஸ அறிவுக்கு இந்த உலகம் மாறுபட்ட பல வகைப் பொருள்களின் கூட்டமாகத் தென்படும். அப்படிப்பட்ட மனிதனின் அறிவு உயிர்களே விதவிதமான வகைகளில் பிரித்துப் பார்க்கும். எடுத்துக் காட்டாக மிருகங்கள், தாவரங்கள், மனிதர்கள் என்று வர்க்கம் பிரிக்கும்.

ஹிந்து பண்பாட்டின் உயிர் நாடியே இருப்புக்கொண்ட உலக சிருஷ்டிப் பொருள்கள் அனேத்தும் 'ஒன்று' என்று உணருவதேயாகும். ஆசைகள் ஆத்திரங்கள் எழுவதேதான் வேறு. அவைகள் வேறு என்னும் பன்மையுணர்விலிருந்துதான். பன்மையை உணர்ந்தால் உடனே அந்தக் காட்சியாளன் 'அஹம் பாவம்' உயிர்த்து விடுகிறது. உலகிலிருந்து தனித்துத் தன்னே வைத்துக்கொள்ளாது போனுல் அவனுல் பொருள்களேயும் உயிர்களேயும் தனித்தனியாகவும் தம்முள் மாறுபட்டதாகவும் காண முடியாது.

தாமஸ 'அறிவின்' தன்மை என்ன?

யத்து க்ருத்ஸ்னவதேகஸ்மின் கார்யே ஸக்தமஹைதுகம்
அதத்வார்த்தவதல்பம் ச தத் தாமஸ முதாஹ்ருதம் 18:22

யத்—எந்த; து—ஆனுல்; க்ருத்ஸ்வைத்—எல்லாம் போல்; ஏகஸ்மின்—ஒரு தனி; கார்யே—காரியத்தில்; ஸக்தம்—பற்றுக் கொண்டு; அஹைதுகம்—காரணமின்றி; அதத்வார்த்தவத்—உண்மையில் கால் கொள்ளாமல்; அல்பம்—சிறிது; ச—மேலும்; தத்—அது; தாமஸம்—தாமஸம் (மந்தமானது); உதாஹ்ருதம்—எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது.

ஆனுல் ஒரே காரியத்தை அதுவே எல்லாம் என்று, அர்த்த மில்லாமல், உண்மையில் கால் கோள் இல்லாமல், குறுகிய விதத்தில் எந்த அறிவுபிடித்துக் கொள்கிறதோ அந்த அறிவு தாம

ஸம் (மந்தம்) உச்சநிலை தாமஸத்தின் மந்தப்படுத்தும் புகைக்குள் சிக்கிய அறிவு ஏதாவது ஒன்றைச் சற்றேனும் சிந்திக்காமல் அப்படியே அதுவே எல்லாம் என்று பிடித்துக்கொள்ளும். ஆன்ம சாதகர்களுள் இந்தத் தாமஸ அறிவு படைத்தவர்கள் கடைநிலையிலுள்ளவர்கள் இங்கே சித்தரிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் நம்பிக்கை, பக்தி, பார்வைகள், மதிப்பீடுகள் எல்லாவற்றிலும் கண்மூடித்தனமான வெறி கொண்டவர்களாக இருப்பார்கள். காரியங்களின் காரணங்களை அவர்கள் ஆய முற்படுவதே இல்லை. அவர்கள் அஹேதுகர்கள் அதாவது காரணம் ஆராயாமல் காரியம் செய்பவர்கள். (சங்கராச்சாரிய ஸ்வாமிகள் இந்த அஹைதுகம் என்ற சொல்லுக்குக் குறிப்பு எழுதும்போது 'தாமஸ புத்தி விளைவான காரியத்தை ஏற்றுக்கொண்டு விடுகிறது. ஆனால் காரணங்களை விட்டு விடுகிறது' என்கிறார்').

பிடிவாதமான கருத்தைப் பிடித்துக்கொள்ளும் குழம்பிய அறிவைக் கொண்டு உலகைப் பார்க்கும் தாமஸ ஆசாமி புறத்தேயுள்ள பொருள்களை அவை இருக்கும் உண்மை நிலையில் பார்ப்பதில்லை. அவற்றின் மேல் தன் கருத்துக்களை ஏற்றி வைத்து அவற்றைத் தவறாகக் கணித்து விடுகிறான். அவனுடைய தாமஸ அறிவு உலகே அவனுக்காகவும் அவன் இன்பத்துக்காகவுமே படைக்கப்பட்டதாக எண்ணுகிறான். ''உண்மை''யில் ஆதாரமில்லாமல் எதையும் தனக்கு வேண்டும் என்று அதனுடன் விலக்க முடியாத பற்றுக்கொண்டு, மிக அதிகமான எல்லாவற்றையும் கபளீகரம் பண்ணும் எண்ணத்துடன் அவன் தன் பௌதீக உறைகளின் (பொறி புலன்களின்) இன்பத்துக்கெனவே வாழ்கிறான். அவன் பரமசாக்ஷியான தெய்வத்தின் சந்நிதியில் இருக்கிறோம் என்பதை மறந்து விடுகிறான். தாமஸனின் அறிவு அவனுடைய சுய முக்கியத்துவ அபிப்பிராயத்தினால் சுற்றி வளைக்கப்பட்டு சிறுத்துக் குறுகி (அல்பம் ஆகி) விடுகிறது.

சுருக்கிச் சொன்னால் சாத்வீக அறிவு பிரபஞ்சத்தின் உள்ளே ஊடுருவி நிற்கும் ஒற்றுமையை உணர்கிறது. ராஜஸ அறிவு பன்மையை (நாநாவிதப் பொருள்கள் உள்ள உலகைப்) பார்க்கிறது. தாமஸ அறிவு மிகவும் கெட்டிப்பட்ட உருக் கொண்டு சுயம் பாவமே கொண்டிருப்பதால் உலகை எப்போதும் விபரீதமாகவும் தப்பாகவும் பார்க்கிறது. தாமஸ அறிவு படைத்தவர்கள் உலகில் அமைதியின்மை, துயரம் இவற்றில் அவஸ்தைப் படுவதை நாம் பார்க்க முடியும். ராஜஸ வகையினரின் வாழ்வு மிகவும் மேலானது. இருப்பினும் பன்மையைப் பார்ப்பதின் காரணமாக அதனால் ஏற்படும் சங்கடங்கள், வெறுப்புக்கள், படபடப்புக்கள் அவனுக்கும் உண்டு. ஆனால் சாத்வீக அறிவு தலை சிறந்த வகையைச் சேர்ந்தது. அந்த அறிவு படைத்தவர்கள் வாழ்வு அதிகமான அமைதி, லயம், மகிழ்ச்சி, இன்பம் இவை நிறைந்ததாக இருக்கின்றது.

## அறிவின் மூன்று வகைகள்

முதல் சார்ட்

| சாத்வீகம் (தூய) அறிவு | (பேராசையும் துறுதுறுப்பும் கொண்ட) ராஜஸ அறிவு | மந்த அறிவு |
|---|---|---|
| 'உண்மையை' உணர்ந்து இடையறாது அதிலேயே நிற்கவல்லது எதுவோ அதுவே சாத்வீக அறிவு, பொருளின் இடையறாத மாறுதல், போக்குகள் இவற்றை அவ்வளவே என்று அறிந்து மாறுபாடான தோற்றங்கள், நடப்புக்கள் இவற்றிற்குள் ஊடுருவி நிற்கும், நின்று உயிர்க்கும் வேற்றுமையில் ஒற்றுமையுள்ள அந்த ஒரே உயிர்த் தத்துவத்தை' உணர்ந்து வாழ்வது தான் சாத்துவீக அறிவின் உண்மை யான சாதனை. | மற்ற உயிர்களை பரஸ்பரம் மாறு பட்டதாகக் காணும் படபடப்புள்ள அறிவு ராஜஸம். உலகம் பல தரப்பட்ட பலவகைகளின் கூட்டம். அவை மாறுபட்ட மனப் போக்குகள் கொண்டு அவற்றுக்கேற்றவாறு நடந்துகொள்ளும் என்றும் இந்த உலகம் கணக்கோ முடிவோ அற்ற, புரிந்துகொள்ள முடியாத பன்மை இருப்பு உள்ளது என்று மட்டும் பார்க்கிற அறிவு ராஜஸ அறிவாகும். | இந்த 'அறிவு' காரணம், பொருத்தப் பொருள் முதலியன இன்றி ஒரு வழி அல்லது முடிவையே அதுதான் முடிவு அல்லது வழி என்று வெறித்தனமாக ஏற்றுக்கொள்ளும் அது. அந்த வழி அல்லது முடிவைப் பற்றி தெளி வாகவும் புரிந்து கொள்ளாது. எல்லை யில்லாத அஹங்காரம், தான் செய்வது சரி என்ற முரட்டுப் பிடிவாதத்துடன் இந்த உலகம் முழு வதும் எனக்காகத்தான் ஏற்பட்டிருக் கிறது என்று எண்ணும் அதற்கு தன் 'சிறிய நான்' என்ற தத்துவத்துக்கு அப்பால் இருப்பது எதுவும் கண்ணில் படாது. அப்படிப்பட்ட அறிவு மந்த அறிவு அல்லது தாமஸ அறிவாம். |

இந்த அத்தியாயத்தில், மீண்டும் கவனிக்க வேண்டும். நம்முடைய அந்தரங்க வாழ்வின் பல அம்சங்களின் மும்மூன்று கூறுகள் வகுத்துக் கூறப்பட இருக்கின்றன. அவைகள் பிறரை விமரிசிப்பதற்காக அல்ல. அடிக்கடி நம்மையே நாம் திருத்திக் கொள்வதற்காகத்தான்.

மேலேயுள்ள சுலோகங்களில் கர்த்தாவின் மூன்று கூறுகள் விவரிக்கப்படுகின்றன:

நியதம் ஸங்க ரஹித மராகத்வேஷத: க்ருதம்
அபலப்ரேப்ஸுநா கர்ம யத்தத்ஸாத்விக முச்யதே 18:23

நியதம்—கடமையாக்கப்பட்ட; ஸங்கரஹிதம்—பற்றற்று; அராகத்வேஷத:—அன்போ வெறுப்போ அற்று; க்ருதம்—செய்யப்பட்ட; அபலப்ரேப்ஸுநா—பயனை விரும்பாதவனுல்; கர்ம—கர்மம்; யத்—எதுவோ; தத்—அது; ஸாத்விகம்—சாத்துவிகமானதாக (தூய்மையானதாக); உச்யதே—சொல்லப்படுகிறது.

விதிக்கப்பட்டு, பற்றற்று, விருப்பு வெறுப்பில்லாமல், பயனை விரும்பாத ஒருவனுல் செய்யப்படும் ஒரு கருமம் (செயல்) (காரியம்—வேலை) சாத்வீகமானது (தூய்மையுள்ளது) என்று சொல்லப்படுகிறது.

அறிவின் மூன்று வகைகளைச் சொல்லிய பிறகு கண்ணன் கருமத்தின் அதே மூன்று வகைகளை விவரிக்கிருர். சாத்துவீக கர்மம் தான் ஆகச் சிறந்தது. நம் உள்ளேயும் அமைதியை ஏற்படுத்தி வெளியே நம் வேலைக் களத்திலும் இணைப்பு லயத்தை ஏற்படுத்தும். எனவே அதுதான் மூன்று வகைக் கர்மங்களுள் தலை சிறந்து 'தூய்மை'யானதாக இருக்கிறது. அது கடமையாக வகுக்கப்பட்டது. அது அதற்காகவே ஏற்று செய்யப்படுகிறது. சமூகத்தில் சேவையே கடவுளின் அர்ச்சனை' என்ற மனேபாவத்தில் அது செய்யப்படுகிறது. அப்படிப்பட்ட வேலைகள் மனிதனின் முழுத் தன்மையான ஆளுமையைச் செம்மைப்படுத்துகிறது. வேலையே ஊக்கமாகி விடுகிறது. உள் ஊக்கம் கொண்டு செய்யப்படும் வேலை செய்பவனின் சீர்மையைக் கூட மிஞ்சிய திறமையைக் கொடுத்து விடுகிறது. அப்படிப்பட்ட வேலை எவ்விதப் பற்றும் கொண்டு செய்யப்படுவதில்லை. குறிப்பிட்ட பயன் தான் வேண்டும் என்றும் செய்யப்படுவதில்லை. அது ஈடுபாட்டுடன் செய்யப்படும் அன்பின் செயல் (சட்டத்திற்காகச் செய்யப்படாத செயல்; அருள் வேலை கடமை என்று மட்டும் செய்யப்படும் வேலை இல்லை.) ஆனுலும் அது அன்பினுலோ வெறுப்பினுலோ களங்கப்படுவதில்லை.

சாதுக்கள் தீர்க்கதரிசிகள் போன்ருேர்கள் சமூக சேவை உணர்வுடன் செய்யும் செயல்கள் இப்படிப்பட்ட கருமங்களுக்கு சரியான எடுத்துக் காட்டுக்கள். நாமும் கூட சில அபூர்வமான சந்தர்ப்பங்களில்

இவ்விதம் செய்வதைக் காண முடியும். ஒரு சரியான உதாரணம் தற் சமயம் நினைவுக்கு வருவது: ஒருவன் தன் காயம் பட்ட உடலுறுப்பைக் கவனித்துக் கொள்கிறனே அதை எடுத்து ஆய்ந்தால் கிடைக்கும். உன் இடது கால் விரல் வீட்டு உபயோகத்திலுள்ள ஒரு மரச் சாமானில் பட்டுக் காயமடைந்து விடுகிறது. அப்போது உன் உடல் முழுவதும் அதைக் கவனிக்கக் குனிகிறது. இங்கே கவனிக்க வேண்டியது மற்ற உறுப்புக்களைக் காட்டிலும் இடது காலிடம் தனியான விருப்போ, தனி வெறுப்போ உனக்குக் கிடையாது. ஒரு மனிதனுக்கு முழு உடலும் அவ னுடையதுதான். எல்லா பாகங்களும் முக்கியத்துவத்தில் சமமே. அந்த உடலிலுள்ள ஜீவன்தான் முழுவதும் வியாபித்து அமர்ந்து இருப்பதாக உணர்கிறது.

அதே போல சாத்வீக அறிவு உள்ள ஒருவன் எங்கும் ஊடுருவி நிற்கும் தனியொரு பொருளை உணர்ந்துவிட்டபடியால் அந்த ஒளி உண்மைத் தத்துவத்தின் உணர்விலேயே நிலைத்து நிற்கிறன். அது உலகம் எங்கும் உலகம் முழுமையும் ஊடுருவி நிற்கிறது. எனவே அவ னுக்கு ஏழைத் தொழு நோயாளியோ, அரசனே, வியாதியஸ்தனே, நல்ல தேகாரோக்கியம் உடையவனே எல்லோரும் எல்லாமும் ஆன்ம நிலையிலுள்ள ஆளாகிய அவனுக்கு ஒன்றேதான். அப்படிப்பட்ட ஞானி சுய முழுமை பெற உள்ளுக்கம் தரும் இன்பப் பெருக்குடன் உலகுக்குப் பணி புரிகிறன்.

சுருக்கிக் கூறும்போது: சாத்வீக கர்மம் என்பது பற்றற்றுச் செய்யப்படும் மனிதாபிமான சேவை. அதை விருப்போ வெறுப்போ தூண்டுவதில்லை. அதே போல் அப்பணிகள் எல்லாம் பயனை ஆர்வத் துடன் எதிர்நோக்கியும் ஏற்கப்படுவதில்லை. செயலே திருப்தி. சாத்வீக மனிதன் வேலையில் ஈடுபடுகிறன் என்றல் சேவையில் ஈடுபடாமல் இருப்பது அவன் மூச்சடங்கி சாவதற்கொப்பாகும். அப்படிப்பட்ட சாத்வீகக் கர்மம் செய்யும் மனிதனே உண்மையான பிராமணன்— அந்தணன்.

ராஜஸக் கர்மம் என்பது எது?

*யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புன:*
*க்ரியதே பஹுலாயாஸம் தத்ராஜஸ முதாஹ்ருதம் 18:24*

துயத்—ஆனுல் எது; காமேப்ஸுநா—ஆசைகளுக்கு விருப்பப்பட்டு; கர்ம—செயல்; ஸாஹஸ்காரேண—அஹங்காரத்துடன் வா—அல்லது; புந:—மீண்டும்; க்ரியதே—செய்யப்படுகிறதோ; பஹுலாயாம்—மிகவும் முயற்சியுடன்; தத்—அது; ராஜஸம்—ராஜஸம் என்று; உதாஹ்ருதம்—எடுத்துக் காட்டப்படுகிறது.

எந்தச் செயல் ஆசைகள் கொண்டு, அல்லது மீண்டும் அஹங் காரத்துடன் அல்லது மிகவும் முயற்சியுடன் செய்யப்படுகிறதோ அந்தச் செயல் ராஜஸம் என்று எடுத்துக் காட்டப்படுகிறது

எந்தச் செயல் ஒருவனால் தன்னுடைய ஆசைகளைப் பூர்த்தி செய்வதற்காக மிக மோசமான அஹங்கார பாவத்துடன் செய்யப்படுகிறதோ அது ராஜஸ கர்மம் ஆகும். அநேகமாக அப்படிப்பட்ட வேலைகள் மிகவும் உழைப்புடன் செய்ய வேண்டியவை யாக இருக்கும். அதனால் மிகவும் உள்ள அழுத்தம் ஏற்படும். உடல் களைத்துப் போகும். மனம் அலுத்து சோர்ந்துவிடும். மிகவும் திட்ட மிட்ட, எல்லைக்கே போன அஹங்காரத்துடன் வேலை செய்ய வேண்டி நேரிடும். ஏன் என்றால் அவன், தான் தான் இதைச் செய்வதாகவும் யாரும் உதவ மாட்டார்கள் என்று எண்ணுகிறான். நாம் வெற்றியடை வோமோ மாட்டோமோ என்ற அச்சம்; பதற்றம் கொண்டுவேலை செய்ய நேரிடுவதால் அவன் அலுத்துச் சலித்துப் போகிறான். மிகவும் 'தன்'னையே சுற்றி நிற்கும் அஹம்பாவத்துடன் ஒருவன் செயலில் ஈடுபடும்போது அவன் சமநிலையை இழந்து எப்போதும் பதற்றத்துடன் இருப்பான். அந்தப் பதற்றம் அவனை முழுமையாக களைப்படையச் செய்து முற்றிலும் சோர்வடையச் செய்துவிடும். அப்படிப்பட்ட செயல்கள் ராஜஸம் என்ற வகையுள் அடங்கும்.

அரசியல் தலைவர்கள், சமூக சேவகர்கள், பெரிய தொழிலதிபர்கள் குழந்தைகளிடம் அதிக நம்பிக்கை கொண்ட ஆத்திரக்காரப் பெற் றோர்கள் வெறி கொண்ட பிரசாரகர்கள் மதம் மாற்றும் பாதிரிகள், கண்ணை மூடிப் பணம் சம்பாதிக்கிறவர்கள்—இவர்கள் எல்லாம் அவர்கள் தங்கள் உச்ச நிலையிலிருக்கும்போது இந்த வகைக்குள் வரு வார்கள். (உச்ச நிலை என்று ஏன் சொல்கிறோம் என்றால் இவர்களை அடுத்து வரும் 'தாமஸ செயலர்கள்' வகைக்குள் சுலபமாகச் சேர்த்து விட முடியும்).

தாமஸ வகையினர் செயல்களில் அடையாளம் காட்டும் முக்கிய இலக்கணங்கள் மேலே தரப்படுகின்றன.

அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமந பேக்ஷ்ய ச பௌருஷம்
மோ ஹாதாரப்யதே கர்ம யத்தத் தாமஸ முச்யதே *18:25*

அனுபந்தம்—பின் வருவது; க்ஷயம்—நஷ்டம்; ஹிம்ஸாம்—ஊறு; அநபேக்ஷ்ய—எதிர்பார்க்காமல்; ச—மேலும்; பௌருஷம்—தன் மனித ஆற்றலை; மோஹாத்—மோகம் காரணமாக; ஆரப்யதே—தொடங்கப்படுகிறதோ;; கர்ம—வேலை; யத்—எதுவோ; தத்—அது; தாமஸம்—தாமஸம் (மருள் நிரம்பியது); உச்யதே—சொல்லப்படுகிறது.

மோகத்தால், வினைவு நஷ்டம், ஹிம்சை, ஆற்றல் இவற்றையெல்லாம் ஓராது எந்த வேலை தொடங்கப் பெறு கிறதோ அது தாமஸமானது (மருள் நிரம்பிய மந்தர்கள் வேலை).

தாமஸ குணிகளின் வேலைகள் பின் விளைவுகளைப் பற்றியோ, தங்களின் வேலையாற்றல், பிராண சக்தி தேயும் என்றோ நினைக்

காமல் செய்யப்படுகின்றன. தங்கள் வேலைகளால் பிறருக்கு ஏற்படும் ஹிம்சையையோ நஷ்டத்தையோ எண்ணிப் பார்க்க மாட்டார்கள். தங்கள் நிலை, தங்கள் சக்தியைப் பற்றியும் சிந்திக்க மாட்டார்கள். லக்ஷியத்தைப் பற்றித் தவறான கணிப்பின் பேரில் இப்படி ஆரம்பிக்கப்படுகிற பொறுப்பற்ற, கவலையற்ற வேலைகள் தாமஸ வகைக்குள் அடங்குகின்றன. குடிப் பழக்கம், சூது, லஞ்சம் எல்லாம் இத்தகைய தாமஸ வேலைக்கு எடுத்துக் காட்டுக்கள்.

அப்படிப்பட்டவர்கள் தங்கள் வேலைகளினால் என்ன நேரிடுகிறது என்று கூட சிந்திப்பதில்லை. அதனால் கூடிய சீக்கிரமே அவர்கள் உயிராற்றலை இழக்கிறார்கள். அவர்களை நம்பியிருக்கிறவர்களுக்கு கஷ்ட நஷ்டத்தை உண்டாக்கி விடுகிறார்கள். தங்கள் பெருமை, மதிப்பு, திறமை, நுண்ணிய புத்திசாலித்தனங்கள் இவற்றை எல்லாம் மோகத்தில் கருதப்பட்ட லக்ஷியத்துக்காக ஓடி ஆடி இழந்து விடுகிறார்கள். அவர்கள் கேட்பதெல்லாம் ஏதோ தற்காலிகமாகவாவது புலனின்பம் கிட்ட வேண்டும். ஏதோ அந்தக் கணத்தில் அவர்கள் உள்ளத்தில் எழுந்த ஆசை பூர்த்தியாக வேண்டும். குதிரைப் பந்தயத்துக்குப் போகிற ஒருவன் 'எல்லோரும் பந்தயத்தில் ஜயிக்க முடியாது. உண்மை தான். ஆனால் ஒவ்வொரு நாளும் யாராவது ஒருவன் வெற்றி பெற வேண்டும். இன்று அந்த ஆளாக நான் ஏன் இருக்கக் கூடாது' என்று கேட்டான். இந்த வாதத்தின் அசட்டுத்தனத்தைப் பற்றி வியாக்யானம் செய்ய வேண்டுமா என்ன?

இவ்வகைப்பட்ட தாமஸச் செயல்கள் உடனேயே செய்கையாளனுக்குத் துயரை நல்ல லாபப் பங்காக அளித்து விடுகிறது. ராஜஸச் செயல்கள், ஒத்திட்டுப் பார்க்கும்போது, ஏமாற்றம், துயர் முதலியவற்றின் நிர்ணயிக்கப்பட்ட அளவை அளிக்கச் சற்று அதிக நேரம் எடுத்துக் கொள்கிறது. ஆனால் சாத்வீக வகைக் கர்மாக்கள் எப்போதும் நிலையாகவும் மகிழ்ச்சியளிப்பதாகவும் இருக்கின்றன.

பின்வரும் சுலோகங்களில் மூன்று வகைக் 'கர்த்தாக்கள்' விவரிக்கப்படுகிறார்கள்:

*முக்தஸங்கோனஹம்வாதீ த்ருத்யுத்ஸாஹஸமன்வித:*
*ஸித்யஸித்யோர்நிர்விகார: கர்த்தா ஸாத்விக உச்யதே*
***18:26***

முக்தஸங்க:—ஒட்டிக் கொள்ளாதவன்; அநஹம்வாதி—நான் என்ற எண்ணம் இல்லாதவன்; த்ருத்யுத்ஸாஹஸமந்வித—பொறுக்கும் ஆற்றல்; உத்ஸாஹம்—இவற்றுடன் கூடியவன்; சித்யசித்யோ:—வெற்றி தோல்வியில்; நிர்விகார:—பாதிக்கப்படாதிருப்பவன்; கர்த்தா—கர்த்தா; சாத்விக:—சாத்வீகன் என்று;

## கர்மாக்களின் மூன்று வகை

| சாத்வீக கர்மாக்கள் | ராஜஸ கர்மாக்கள் | தாமஸ கர்மாக்கள் |
|---|---|---|
| சமூகத்தின் நலனுக்காக விதிக்கப்பட்டு, பயனில் ஆதுரமான பற்றில்லாமல், விருப்பு வெறுப்புக்களால் தூண்டப்படாமல் செய்யப்படும் கர்மாக்கள் சாத்வீக கர்மாக்கள். சாத்வீக கர்மா செய்பவன் இயல்பாகவே இந்தக் கடன்களைச் செய்கிறான். வேலையிலேயே அவனுக்கு இன்பமும் பரிசும் கிடைத்து விடுகின்றன. சாத்வீக * ஞானம் (அறிவு) படைத்தவர்கள் தாம் இவ்வகை வேலையைச் செய்வார்கள். | விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளவும், ''தானே செய்பவன்,'' என்ற பொய்யான, தன்னலம் கருதும் மனப்பாங்குடனும் செய்யப்படுபவை ராஜஸச் செயல்கள். அப்போது மிகவும் நெருக்கடி கஷ்டம் சகிக்க நேரிடுகிறது. ராஜஸ அறிவு படைத்தவர்கள் தாம் ராஜஸ வேலை செய்கிறார்கள். | விளைவைப் பற்றிக் கொஞ்சம் கூடக் கருதாமல் செய்யப்பட்டு, செய்பவனைச் சுற்றியுள்ள எல்லோருக்கும் நாசத்தையும் துயரத்தையும் விளைவிப்பதாயும், செய்பவன் உயிராற்றலையும், உடல் சக்தியையும் வறள வைப்பதாயும் உள்ள செயல் தாமஸச் செயல். இது செய்பவன் உள்ளத்தில் எழும் தவறான குறிக்கோளின் கற்பனையால் செய்யப்படுகிறது. அநேகமாகத் தாமஸ ஞானம் படைத்தவர்களாலேயே இத்தகைய செயல்கள் செய்யப்படுகின்றன. |

*மூன்று வகை 'அறிவு' களுக்கு முதல் சார்ட்டைப் பார்க்கவும் (பக். 455)

உச்யதே—சொல்லப்படுகிருன்.

பற்றற்று, அஹம்பாவம் இல்லாமல் உறுதியும் ஊக்கமும் கொண்டு வெற்றி தோல்விக்குக் கலங்காதவனுக இருக்கும் கர்த்தா சாத்வீக கர்த்தா என்று சொல்லப்படுகிருன்.

இது வரை மூன்று வகை அறிவு (ஞானம்) மூன்று வகை கர்மம் இவற்றின் விவரத்தைப் பார்த்தோம். ஒரு செயலுக்குரிய மூன்ருவது அமிசம், செய்பவனுகும். அதாவது செயல் செய்ய விரும்பும் 'நான்' தத்துவம். மேலே சொல்லப்பட்டு வந்த மூன்று குணங்களும் நம்முடைய மன வாழ்வு, புத்தியின் நோக்கு இவற்றைப் பாதிக்கின்றன. எனவே நம்முள் இருக்கும் கர்த்தா குறிப்பிட்ட நேரத்தில் மேலோங்கியிருக்கும் குணத்துக்கு ஏற்ற வாறு நோக்கையும் போக்கையும் ஏற்றுக் கொள்கிருன். எனவே இந்த (அகம் என்ற 'நான்' தத்துவமும் மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இந்த சுலோகத்திலிருந்து தொடங்கி வெளியுலகில் வேலை செய்யும் கர்த்தாக்களின் மூன்று வகைகளைப் பற்றி விவரிக்கப்படுகிறது.

எவன் தன் உறவினர்கள் எவருடனும் பற்று வைக்காமல் (முக்த ஸங்க) நான் என்ற முனைப்பு இல்லாது (அநஹம் வாதி) வேலை செய்கிருனே அவனே சாத்வீக கர்த்தா. அவன் தன்னைச் சுற்றியுள்ள பொருள்கள், உயிர்கள் எதனுடனும் ஒட்டிக் கொள்ளும் பற்று வைத்துக் கொள்ள மாட்டான். ஏன் என்ருல் அவனுக்குத் தெரியும் புறப் பொருள் எதுவும் அவன் விரும்பும் வாழ்க்கையின் நிறைவைக் கொடுக்க வல்லது அல்ல என்று மக்களுக்கு பிரமாதமான நன்மை செய்திருந்தாலும் கூட தான் பிரமாதமாக ஒன்றும் சாதிக்கவில்லை என்று உண்மையாகவே நம்புவான். ஏன் என்ருல் அவன் 'தான்' என்று 'தன்னை'ச் சுற்றி நிற்கும் பாவனையான ஸ்ரீ வத்வ பாவனையை, அந்தப் பரமம் பொருளுடன் முற்றிலும் இணைத்துக் கொள்வதின் மூலம் பகவானிடம் முழுமையாக சரணுகதி அடைந்து விட்டிருப்பான்.

தன்னுள்ளே 'தான்' என்கிற முனைப்பையும் அதனுல் எழுகிற உலகப் பற்றையும் அழித்துவிட்ட ஒருவன், உலகத்தில் செயல்துறைகளில் செயலாற்றும்போது அவன் உறுதியான எண்ணத்துடனும் (த்ருதி) மிகுந்த உற்சாகத்துடனும் செயலாற்றுவான். த்ருதி என்ருல் நல்ல பொருளில் பிடிவாத உறுதி என்று சொல்லலாம். அதாவது குறிப்பிட்ட இலக்கை நோக்கி இடைவிடாது முயலும் ஒரு வித உள்சக்தி. அவன் வழியில் தடங்கல்கள் வரும்போது இந்த 'த்ருதி' தான் மேலும் மேலும் அவைகளை எல்லாம் எதிர்கொள்ளத் தேவையான தைரியத்தையும் ஊக்கத்தையும் கொடுத்து குறித்த இலக்கை நோக்கிச் செல்லத் தூண்டுகிறது. இந்தப் பிடிவாத உறுதிக்கான

சக்திதான் த்ருதி என்று சொல்லப்படுகிறது. சாதனை, வெற்றி இவற்றை அடையும்வரை சுணங்காத ஊக்கத்துடன் வேலையில் ஈடுபட்டு இருக்கும் ஆற்றலை உற்சாகம் என்கிறோம்.

கடைசியாக சாத்வீக கர்த்தா வெற்றியாயினும் தோல்வியாயினும் இன்பமாயினும் துன்பமாயினும் கலங்காமல் உழைப்பவனுவான். இந்த நேரத்தில் நான் ஒரு எடுத்துக்காட்டைத் தான் நினைக்கிறேன். ஆஸ்பத்திரியில் வேலை செய்யும் நர்ஸ் அல்லது செவிலி. அவளுக்கு 'நான் வியாதியஸ்தனைக் காப்பாற்றுகிறேன்' என்ற தன் முனைப்பு இருக்காது. ஏன் என்றால் டாக்டர் தான் வியாதி தீர்வதற்கு பின்னாலிருந்து உதவுகிறார் என்று அவளுக்குத் தெரியும். அவளுக்கு உள்ளப் பொறுமை (த்ருதி) இருக்கிறது. உற்சாகமும் இருக்கிறது—இல்லை என்றால் அவள் அந்த வேலையைத் தொடர்ந்து திறமையுடன் செய்ய மாட்டாள். கடைசியாக அவனுக்கு வெற்றி தோல்வியைப் பற்றி அக்கரை இல்லை. வியாதியஸ்தன் வியாதி தீர்ந்து வெளியே போகும்போது மகிழ்ச்சி ஆரவாரம் செய்வதில்லை. அல்லது சாகிற ஒவ்வொருவருக்காகவும் அழுதுகொண்டு நிற்பதில்லை. அவன் அம்மாதிரி விஷயங்களில் ஈடுபட முடியாது. ஆஸ்பத்திரி வெற்றி தோல்வி சாவு, பிறப்பு இரண்டும் கலந்த ஒரு தீவு என்று அறிந்து வைத்திருக்கிறான். அவன் சேவை செய்வதற்காகத்தான் அங்கே இருக்கிறான்.

இப்படிப்பட்ட கர்த்தாவுக்கு ஆற்றலழிவு ஏற்படுவதில்லை. எனவே அவன் செய்யும் வேலையில் முழுமையாக வளர்ந்த பலம் வாய்ந்த மனித ஆளுமையினால் பெறக் கூடிய அவ்வளவு ஆற்றல் வாய்ப்புக்களையும் செலுத்த முடிகிறது. சாத்விக கர்த்தா சாத்வீக ஞானத்தின் தூண்டுதலுடன் சாத்வீக கர்மங்களில் ஆனந்தமாக ஈடுபடுகிறான். அவன் பெறும் வெற்றி தளராத வெற்றி. அப்படிப்பட்ட தீர்க்கதரிசிகளான சாத்வீக ஞானிகளின் அருள் சேவையினால் உயிர்கள் முடிவடையாத நன்மைகளைப் பரிசாகப் பெறுகின்றன.

சற்று சிந்தித்தால் நாம் மேலே கூறப்பட்ட சாத்வீக கர்த்தாவை வீட்டு துடைப்பக் கட்டையின் போக்குடன் ஒப்பிடலாம். துடைப்பக்கட்டை தான் வீட்டை குப்பை கூட்டிச் சுத்தமாக வைக்கிறது, ஐயமில்லை. ஆனால் அது தானாக ஒன்றும் செய்ய முடியாது. ஒதுங்கி சுவற்றுடன் ஒட்டிச் சாய்ந்து செயலற்று நிற்கும். ஆனால் அது வீட்டைச் சுத்தம் செய்யும் போது அதற்கு, ''நம்முடைய மிருதுவான அடிப்பாகம் வீட்டைச் சுத்தம் செய்யும் செயலைத் திறமையாகச் செய்வதற்குக் காரணம் அதன் தடித்த பாகம் (பிடி) அந்த வீட்டின் தாயின் நெகிழ்ச்சியுள்ள கைகளில் இருப்பதால் தான் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

சாத்விக கர்த்தா, ''நான் செய்யும் வேலைகளில் என் உடல், மனம், புத்தி உழைக்கிறது உலகுக்கு சேவை செய்கிறது. இதற்கு எல்லையற்ற பரமாத்மா அவற்றின் பின்னால் இருப்பதுதான் காரணம்,' என்று அனுபவபூர்வமாக உணருகிறான். இந்தக் கரணங்களாகிற கருவிகள் மூலையில் கிடக்கும் துடைப்பக் கட்டையைப் போலத்தான்—ஒன்றுக்கும் கையாலாகாதவை. உடல் வேலை செய்யும் போது, மனம் புத்தி துடித்து, புது இலக்கு களுக்கும் சாதனைகளுக்கும் அதை இட்டுச் செல்கின்றன. இதற்குக் காரணம் 'உயிர்' பின்னால் இருந்து அவற்றுக்கு உரிய வேலைகளில் ஊக்கிவிடுவதுதான்.

துடைப்பக்கட்டை அசட்டுத்தனம் காட்டி வீட்டின் தாயாரின் விருப்பத்தால் நடப்பதை மறந்து, மேலும் அவள் விருப்பத்தை நிறைவேற்றும் ஒரு சாதனமாகத் தன்னை அடைக்கலப் படுத்திக் கொள்ளா விட்டால் துடைப்பக்கட்டைக்குத்தான் கெடுதல். அநேகமாக துடைப்பம் சரியானபடி பெருக்காவிட்டால் 'தாய்' அதைத் தலைகீழாக மாற்றித் திருப்பி அதன் தலையைத் தரை மீது மோதுகிறாள்—என்று நாம் பார்க்கிறோம். (கட்டியிருக்கும் கயிறு அப்போதுதான் இறுகும்!) புத்தியின் சாமர்த்தியம், இதயத்தின் செம்மைகள், உடலின் ஆற்றல் எல்லாம் பரம் பொருளின் விருப்பமாகிற தெய்வீக சங்கீதம் வெளிவர ஏற்பட்ட கருவிகளே! சாதனங்கள் கட்டுப்பாட்டுக்குள் இல்லை என்றால் அவை பரம்பொருளுக்கு முற்றிலுமாக அடைக்கலமாகாவிட்டால் அவற்றிற்குத்தான் நஷ்டம். உடைந்து நொறுங்கி விடும்.

எவன் எப்போதுமே இடையறாது பரம் பொருளின் ஸ்பரிசத்தை உணர்ந்து கொண்டேயிருக்கிறானோ அவனே சாத்வீக கர்த்தாவாம்.

ராஜஸக் கர்த்தா யார்?

*ராகீ கர்மபலப்ரேப்ஸுர் லுப்தோ ஹிம்ஸாத்மகோ அசுசி:*
*ஹர்ஷசோகான்வித: கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித:*

**18:27**

ராகீ—விருப்ப வெறிகொண்டவன்; கர்மபலப்ரேப்ஸு:—செயலின் பயனை வேண்டுபவன்; லுப்த: பேராசை பிடித்தவன்; ஹிம்ஸாத்மக:—இமிசை செய்யும் கொடுமைக்காரன்; அசுசி:—சுத்தம் அற்றவன்; ஹர்ஷ சோகான்வித:—சந்தோஷம் துயரம் இவற்றால் பாதிக்கப்படுபவன்; கர்த்தா—கர்த்தா; ராஜஸ:—ராஜசன் என்று; பரிகீர்த்தித:—சொல்லப்படுகிறான்.

விருப்ப வெறியுள்ளவன் செயல்களின் பயன்விளைவுகளை விரும்புபவன் பேராசை கொண்டவன்; ஹிம்சை செய்பவன்

சுத்தமில்லாதவன் இப்படிப்பட்ட கர்த்தா ராஜச கர்த்தா என்று சொல்லப்படுகிறான்.

ராஜஸ (ஆத்திரமும் பேராசையும் சுறுசுறுப்பும் கொண்ட) வகை செயலாளனின் சித்திரம் இங்கு மிகவும் விளக்கமாகத் தீட்டப்பட்டிருக்கிறது. அவன் ஆசைகள், வெறிகள், பற்றுக்கள் கொண்டவனாக இருப்பான். தான் கற்பனை செய்த குறிக்கோள் அல்லது லாபத்துடன் அலுக்காத பிணைப்பு கொண்டிருப்பான். விருப்பவெறி அவனை ஆட்டி வைக்கும். (ராகீ)—செயலின் பயனை மிக ஆதுரத்துடன் தேடுவான். எப்போதும் ஆசைகளைக் கொண்டு ஆலாகப் பறப்பான் அதாவது என்ன கிடைத்தாலும் அவனுக்குத் திருப்தி வராது. இன்னும் வேண்டும் இன்னும் வேண்டும் என்று ஓடிக் கொண்டே இருப்பான். அவன் ஆசைகள் கணத்துக்குக் கணம் பெருகிக் கொண்டே இருக்கும். எனவே அவன் ஒரு நாளும் திருப்தியடையும் நிலையிலிருக்க மாட்டான்.

ஆசைகளும் விருப்பப் பதற்றமும் நிறைந்த ஒருவன் அதிகரித்து வரும் பேராசைகளுடன் வேலை செய்யும் போது அவன் தன் போக்கில் இடைப்படுகிறவர்களுக்கு இன்னல் விளைவிப்பவனாகத்தான் (ஹிம்ஸாத்மக) இருப்பான். அடுத்தவனைக் காயப்படுத்தினால்தான் தன் இஷ்டம் நிறைவேறும் என்று அவனுக்குத் தோன்றிவிட்டால் ஊறு செய்யத் தயங்க மாட்டான். மற்றவர்களுக்குக் கொடுக்கும் துயரைப் பற்றிக் கவலையே படமாட்டான். ‘அவன் விருப்பம் ஈடேற வேண்டும்’ அதுதான் அவன் கவலை. இப்படிப்பட்டவன் தன் குறிக்கோளை நிறைவேற்றத் தொடங்கி செயலாற்றும்போது அவன் (அசுசி:) சுத்தமில்லாதவனாக அதாவது நேர்மையற்ற வனாகத்தான் இருப்பான்.

அநியாயம், அக்கிரமம் எல்லாம் அவனுக்கு ஒரு பொருட்டேயல்ல. அவைகளைச் செய்ய அஞ்சமாட்டான். அவன் எண்ணம் ஈடேற வேண்டும். அவ்வளவுதான் அவன் ஆத்திரம். அவன் சாதாரண நிலையில் நேர்மையான, தர்மம், நியாயம் தெரிந்தவனாக இருக்கலாம். ஆனால் அவன் நியாய புத்தியின் நிலை அடக்கத்தின் அழகு எல்லாம் அவனுடைய பேராசை வெறியும் ஆத்திரப் பதட்டமும் பழிவாங்கும் திட்டங்கள், தொல்லை தரும் யோஜனைகளும் ஆகிற கோடாலி படும்போது அவை எல்லாம் பிளந்து தார் தாராகச் சிதறி விடும்.

அப்படிப்பட்ட ராஜஸக் ‘கர்த்தா’ குருட்டுத்தனமான ஆசைகளுடன் ஆத்திர வாழ்வு வாழும்போது இந்த உடலில் உயிர் இருக்கும் வரை பதற்றம் நிறைந்த அவல வாழ்வு கொண்டவனாக, சந்தோஷம், துக்கம் இவைகளால் அலைக்கழிக்கப்பட்டும் அவற்றால் சூழப்பட்டும் (ஹர்ஷ, சோக

அன்வித:) வாழ வேண்டியிருக்கும் என்பது மிகவும் இயற்கை தானே.

செயல் களத்தில் தாமஸக் கர்த்தா எப்படி செயல் படுகிறுன்?

*அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த: சடோ நைஷ்க்ருதிகோஅலஸ:*
*விஷாதீ தீர்கஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே*

*18:28*

அயுக்த:—நிலேயில்லாத; ப்ராக்ருத:—நயமற்ற; ஸ்தப்த:—நெகிழ்வு இல்லாத; சட:—ஏமாற்றுகிற; நைஷ்க்ருத:—கெடுநோக்குக் கொண்ட; அலஸ:—சோம்பேறியான; விஷாதீ—அழுது கொண்டிருக்கிற; தீர்கஸூத்ரீ—காலத்தை நீட்டுகிற; மேலும்; கர்த்தா—கர்த்தா; தாமஸ—தாமசன் என்று; உச்யதே—சொல்லப்படுகிறுன்.

நிலேயில்லாதவன், நயமற்றவன், நெகிழ்வு இல்லாதவன், ஏமாற்றுகிறவன், கெடுநோக்குக் கொண்டவன், சோம்பேறி. அழுமூஞ்சி, காலத்தை நீட்டுகிற சோம்பேறியுமான கர்த்தா தாமஸ கர்த்தா என்று சொல்லப்படுகிறுன்.

இது தாமஸ அறிவின் வழிகாட்டலில், தாமஸச் செயல்களின் மூலம், தன் தன்மையை வெளிப்படுத்தும், தாமஸ கர்த்தாவின் இலக்கணம்.

(அயுக்த:) தன்னேத் தானே அடக்கிக் கொள்ளத்தெரியாதவன். அதனுல் ஒரு நிலேயில் இருந்து செயலாற்ற இயலாதவன். அப்படிப்பட்டவன் தாமஸ வகையைச் சேர்ந்தவன், அவன் மனது புத்தி கொடுக்கும் எச்சரிக்கைக்குக் கீழ்ப்படியாது. அதனுல் அவன் செயல்களில் ஒரு சமநிலே இருக்காது. யுக்த மனது என்ருல் புத்திக்கு முழுமையாகக் கட்டுப்பட்டு அதற்குப் பணிந்துநிற்கும் மனதாகும். தாமஸ மனிதன் மனம் போனபடி எல்லாம் நடக்கிற காரணத்தினுல் அவன் நயமற்றவனுக இருப்பான். மனதின் சூருவளித்தனத்தை புத்தியின் திறமையான வழிகாட்டலால் அதன் செம்மைப் படுத்தும் கட்டுப்பாட்டுக்குள் அடக்கிச் செயலாற்றுவதில் தான், பண்படைந்த மனிதனுடைய பெருமை வெளிப்படுகிறது. தன்னுடைய மிருக உணர்ச்சிகள்மட்டமான இயற்கை ஆசைகள் இவற்றை அடக்க முடியாதவன் போல் வாழுகிறவன் ‘அயுக்தன்’ அப்படி இருப்பவன் உலகியல் வேலேயில் ஈடுபடும்போது அவன் காட்டுமிராண்டி போல் தான் நடந்து கொள்வானே தவிர நயம், நாகரீகம் ஒன்றும் அவனிடம் இராது.

இந்தவிதம் அவன் நடந்து கொள்ளும்போது யாராவது சுற்றி இருப்பவர்களில் ஒருவன் அவனுக்கெதிரே அறிவாகிற கண்ணுடியைக் காட்டி அவனுடைய அநாகரீகங்களைப் பார்க்கும்படி செய்தாலும் அவன் அதற்காக தன்னைப் பற்றிய அந்தப் படத்தைப் புரிந்து கொண்டு அசைந்து கொடுக்கமாட்டான். அகம்பாவம் பிடிவாதம் அதிகம். அதனுல் கல்லைப்போல் இருப்பான். நெகிழமாட்டான். மேலும் கௌரவமான முறையில் நடந்துகொள்ளுமாறு பிறர் சொன்னுலும் அதற்கு உட்படமாட்டான். (பாவிருத்தி சேதனபரா: அவன் வழியில் குறுக்கே வருகிறவர்களிடம் பகைமை கொள்வான்)

சோம்பேறி (அலஸ:—மந்தன்) தாமஸ கர்த்தா இன்பம் துய்ப்பதில் மிக அதிகமாக நேரம் கழிப்பான். ஆக்கபூர்வமான, பயன்தரக்கூடிய செயல்கள் செய்யமாட்டான். ஏமாற்று, தந்திரம் இவற்றின்மூலம் இன்பங்களைச் சேகரிப்பதில் அவன் நாட்டம் இருக்கும். அந்தப்போக்கு எவ்வளவு அநியாயமாக இருந்தாலும் கவலைப்படமாட்டான். அவன் சமூகத்திற்கு ஒரு கொள்ளைநோய். முயற்சியில்லாமல் ஒன்றும் உற்பத்தி செய்யாமல் அவன் சாப்பிடுகிருன், சுகம் அனுபவிக்கிருன். மந்தத்தன்மை அவன் புத்தியைக் கெடுத்து சோம்பேறித்தனத்தை அவன் குணமாக்கி விட்டிருக்கிறது இலங்கையின் மூன்று சகோதரர்கள் (ராவணன், கும்பகர்ணன் விபீஷணன்) மூவரும் இந்த மூன்று வகைக் கர்த்தாக்களுக்கு எடுத்துக் காட்டு. ஆறுமாதம் தூங்கி, எழுந்தபிறகு ஆறுமாதம் சாப்பிட்டே காலம் கழித்த கும்பகர்ணன் தாமஸ கர்த்தா. (பலசாலி ராவணன் ராஜஸ கர்த்தா. பக்தன் விபீஷணன் சாத்விக கர்த்தா.)

நம்பிக்கை அற்ற அழுமூஞ்சி (விஷாதி) அவனுல் வாழ்வில் எதிர்ப்படும் அறை கூவல்களை நேரில் சந்திக்க இயலாது. அதற்கு அவனிடம் உள்ள வலிவும் உயிர் ஆற்றலும் இராது. காரணம் என்ன என்றுல் சோம்பேறித்தனமும் சுக ஆசையும் அவன் ஆற்றலை உறிஞ்சி விடுகின்றன. உள்ள ஊக்கத்தைக் குலைத்துவிடுகின்றன. அவன் சுற்றியுள்ள மனிதர்கள் பொருள்கள் இவைகளைப்பற்றிக்குறை கூறிக்கொண்டே இருப்பான். உலகில் இருந்து ஒதுங்கி பாதுகாப்பான தனி இடத்துக்குச் செல்ல விரும்புவான். அங்கே சென்று தங்கு தடையின்றி தன் புலனின்பத்தாகத்தை தீர்த்துக் கொள்ளலாம் என்ற ஆசை அவனை அப்படிச் செய்யச் சொல்லும்.

காலம் கடத்துபவன் (தீர்க்க ஸூத்ரீ) இப்படி சுணை குன்றிப் போன ஒருவன் மெல்ல மெல்ல எதைப் பற்றியும் ஒரு முடிவு எடுக்க முடியாத ஒரு நிலையைப் பெற்று விடுகிருன்.

ஏதாவது தெளிவில்லாத ஒரு முடிவு எடுத்தாலும் அதைத் தொடர்ந்து விடாமல் செயலாற்றும் மனத் திண்மையும் அவனிடம் இருப்பதில்லை. சோம்பேறியானபடியால் சரியான காரியத்தைத் தெரிந்திருந்தாலும் செய்வதைத் தள்ளிப் போட்டுக் கொண்டேயிருக்கிறான். காலமும் கடந்து விடுகிறது. இந்தக் காலம் கடத்தும் இயல்பு தாமஸக் கர்த்தாவுக்கு உரிய ஒன்று. சிலர் தீர்கஸூத்ரி என்றால் ''பழி வாங்கும் எண்ணத்தை நீண்ட நாள் உள்ளத்தில் வைத்திருப்பவன்'' என்று சில உரைகாரர்கள் உரை எழுதியிருக்கிறார்கள் அதுவும் சரி என்றே கொள்ள முடியும்.

இவ்விதம் செயலாற்றுபவர்களுள் நிலையற்று, நய நாகரீக மற்று, அஹம்பாவம்கொண்டு, ஏமாற்றும் குணம், பழிவாங்கும் குணம் சோம்பேறித் தனம், நம்பிக்கை இழந்த நிலை, காலம் கடத்தும் இயல்பு—இவ்வளவும் கொண்டு விளங்கும் செயற் காரன் தாமஸ கர்த்தாவாகும். இந்த மூன்று சுலோகங்களிலும் மூன்று கர்த்தாக்களைப் பற்றிய முழுமையான, சரியான அழகான ஓவியம் தீட்டப்பட்டிருக்கிறது. ஏற்கனவே நாம் சொல்லியுள்ள படி இந்த விவரம் பிறரை அளக்க அளவு கோலாகப் பயன் படுத்தப்படுவதற்காக அல்ல. சாதகர்கள் தங்களையே புரிந்து கொள்ள இதைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். தாமஸ, ராஜஸப் போக்குகள் தம்முள் தலை எடுப்பதாகத் தோன்றினால் உடனே முயற்சி செய்து 'சாத்வீக அழகைப் பெற ஏற்பாடு செய்ய வேண்டும்.

குணங்களின் ஆதிக்கம் காரணமாக 'புத்தி' த்ருதி இவையும் மூன்று வகைப் படலாம். —என்று கண்ணன் கூறு கிறார்.

புத்தேர் பேதம் த்ருதேஸ்சைவ குணதஸ்த்ரி விதம் ச்ருணு
ப்ரோச்ய மானமசேஷேண ப்ருதக்த்வேன தனஞ்ஜய
*18:29*

புத்தே—அறிவாற்றலின்; பேதம்—வகைகளை; த்ருதே—பொறுத்துக்கொள்ளும் சக்தியின்; (மன உரத்தின்); ச—உடையவும்; அப்படியே—குணத; குணத்தின்படி; த்ரி விதம்—மூன்று விதம்; ச்ருணு—கேட்டுக்கொள்; ப்ரோச் யமானம்—சொல்லப்படுவதை; அசேஷேண—மிச்சமில்லாமல்; ப்ருதக்த் வேன—தனித் தனியாகவும்; தனஞ்ஜய—ஏ தனஞ்ஜய.

(ஞானம், புத்தி என்ற சொற்களை தமிழில் அறிவு, அறியும் ஆற்றல் என்று புரிந்துகொள்ள வேண்டும். மாறுபாடு விளங்கு வதற்காக நாம் ஞானம், புத்தி என்றே மொழிபெயர்க்கிறோம்.)

குணங்களுக்கேற்றவாறு ஏற்படும் புத்தி, மன உரம்

## மூன்று வகைக் கர்த்தாக்கள்

| சாத்வீக கர்த்தா | ராஜஸ கர்த்தா | தாமஸ கர்த்தா |
|---|---|---|
| தான் செயலாற்றுகிற களத்தில் பற்று வைத்திராதவன்— 'தான்' என்கிற முனைப்பு இல்லாதவன்— பொறுத்துக்கொள்ளும் (த்ருதி) சக்தியும் உற்சாகமும் கொண்டவன்— விளைவுகளால் எள்ளளவும் பாதிக்கப் படாதவன்—அவை வெற்றியானாலும் அவனுக்கு ஒன்றுதான், தோல்வியானாலும் அவனுக்கு ஒன்றுதான்— இப்படிப்பட்ட கர்த்தாவே சாத்வீக கர்த்தா | விருப்ப வெறிகளால் அலக் கழிக்கப் படுபவன், ஒவ்வொரு செயலின் விளைவிலும் கழுகுப் பார்வையை வைத்திருப்பான்—அபார பேராசை கொண்டவன்—மற்றவர்களுக்குக் கெடுதல் செய்யாமல் செயல் ஆற்ற மாட்டான்—மனத் தூய்மையற்றவன்—நெறிக்குப் புறம்பான வழிகளைப் பின்பற்றுபவன்; சுக தூக்கங்களினால் அலைக் கழிக்கப்படுபவன்— அப்படிப்பட்ட கர்த்தா ராஜஸக் கர்த்தா | தன் மனதின் போக்குகளைக் கட்டுப்படுத்த முடியாதவன்—எந்த அநாகரீகத்துக்கும் தாழ்ந்து விடுபவன்— அஹம்பாவமும் பிடிவாதமும் கொண்டவன்—அநேகமாகத் தவறான முடிவுகள் 'முயலுக்கு மூன்றே கால்' என்ற முறையில் அவற்றையே நிலைநாட்ட முயல்வான்—ஏமாற்றுக்காரன் வஞ்சனையுடையவன்—சோம்பேறி— சுகத்திலேயே ஆசை கொண்டவன்— எப்போதும் 'என்ன செய்வேன்?' என்று கவலைப்படுபவன்—அப்படிப்பட்டவனை தாமஸக் கர்த்தா என்கிறோம். |

இதற்கு முன்னால் கொடுக்கப்பட்டிருக்கிற 1,2 சார்ட்டு (அட்டவணை)களைப் பார்க்கவும். கவனியுங்கள்: சாத்விக கர்த்தா சாத்வீக ஞானத்தால் உந்தப் பெற்று அதற்கேற்ற செயல்களை செய்து முடிக்கிறான். அதே போல ராஜஸ, தாமஸ கர்த்தாக்கள் முறையே ராஜஸ தாமஸ அறிவினால் உந்தப்பட்டு அவற்றுக்குத் தக்க செயல்களைச் செய்கிறான்.

(பொறுத்துக்கொள்ளும் மன வலிவு) இவற்றுடைய மூன்று வித வேறுபாடுகளையும், பூராவாகவும், தனித் தனியேயும் சொல்கிறேன், கேட்டுக்கொள்.

ஒரு கர்மத்துக்கு ஞானம், செயல், கர்த்தா மூன்று அமிசங்கள் தேவை. அது சரிதான். இவை மூன்று குணங்களுக்கேற்றவாறு மூன்று மூன்று வகைப்படும். அவற்றின் விவரம் மேலே தரப்பட்டது (படங்களையும், அட்டவணைகளையும் பார்த்துக் கொள்ளவும்) ஒரு செயலாளி ஞானத்தின் வழிகாட்டலில் உலகில் செயலாற்றும்போது ஒரு கர்மம், (செயல்) ஏற்படுகிறது. இம் மூன்றுக்கும் அடிப்படையில் இரண்டு அமிசங்கள் உள்ளன. அவைதான் எல்லா நீடித்த முயற்சிகளுக்கும் அடிப்படையில் இருந்துகொண்டு தேவையான செயல்நோக்கமும் (*Motive*) எரிபொருளுமாக செயலை நடக்க வைக்கின்றன.

முதல் சொல் புத்தி. அதற்குப் பொருள் தன்னைச் சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளை அறிந்து புரிந்துகொள்ளும் மனிதனிடம் உள்ள ஆற்றல். 'த்ருதி'யில் பின்வரும் கருத்துக்கள் அடங்கும். ஒரே எண்ணத்தைவிடாமல் அது நிறைவேறும் வரை மனதின் முன்னே வைத்திருத்தல்; குறிக்கோளில் நிலைப்பு, ஈடுபாட்டுடன் முயற்சி. காற்றில் பறக்கும் சருகு போல் வீணில் அங்கும் இங்கும் அலைக் கழியாமல் இருத்தல்.

எந்தக் களத்தில் வேலை செய்தாலும் செயலாற்றும் பகுதி நம்முடைய புத்தி (அறியும் ஆற்றல்) அதன் உரம் (த்ருதி) இரண்டாலும்தான் நியமிக்கப்படுகின்றன. இந்த புத்தி, த்ருதி இரண்டினுடையவும் மும் மூன்று வகைகள் பற்றி அறிவியல் (விஞ்ஞான) பூர்வமாகப் பேசப் போகிறோம் என்பதற்கு இந்த சுலோகம் ஒரு முகவுரை.

கிருஷ்ணன் மீண்டும் அர்ஜுனனிடம் எச்சரிக்கையுடன் கேள் என்று சொல்லி அவன் கவனத்துக்குக் கடிவாளம் போடுகிறார்:

சாத்வீக புத்தி எது?

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம்ச
கார்யா கார்யே பயாபயே
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்தி:
ஸா பார்த்த ஸாத்விகீ

18:30

ப்ரவ்ருத்திம்—வேலையில் ஈடுபடும் வழி; ச—மேலும்; நிவ்ருத்திம் ச—வேலைத் துறவுப் பாதையும்; கார்யா கார்யே—செய்யப்பட வேண்டியது வேண்டாதது; பயாபயே—பயம்; பய

மற்றது; பந்தம்—கூட்டு; மோக்ஷம்—வீடு; ச—உம்; யா—எந்த; வேத்தி—அறிகிறதோ; புத்தி—புத்தி; ஸா—அது; பார்த்த—பார்த்தா; ஸாத்விகீ—சாத்துவிகம்.

'எந்த புத்தி ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி மார்க்கம், செய்ய வேண்டியது வேண்டாதது, பயம், பலமற்றது, பந்தம், மோக்ஷம் இவற்றை எல்லாம் அறியுமோ அந்த புத்தி சாத் வீக மாம்.

புத்தி சீக்கிரமே தெளிவாக செயல் களத்தின் இருப்புக்களையும் நிகழ்ச்சிகளையும் புரிந்துகொள்ளுமானுல் அது சாத்விக புத்தியாகும். புத்திக்குப் பல வேலைகள் இருக்கின்றன. கவனித்தல், பகுத்தல், வகைப்படுத்துதல், உறுதி கொள்ளுதல், விரும்புதல், நினைவு கொள்ளுதல்—இவ்விதமே பல வேலைகள். இருப்பினும் இவற்றிற்கெல்லாம் பொதுவாக அடிப்படையாக இருப்பது ஒன்று. அதுதான் விவேகம். அதாவது பகுத்துப் பார்த்து உண்மையை அறிந்துகொள்ளும் ஆற்றல். அது இல் லாமல் பார்த்தல், வகைப்படுத்துதல், புரிந்துகொள்ளுதல், சரி, சரியற்றது என்று முடிவு செய்தல்—எதுவும் நிகழ முடியாது. எனவே புத்தியின் சாரமான வேலை பகுத்தறிதல்—அதாவது சரி யானதைப் புரிந்து கொள்ளுதல்:

புத்திக்கு ப்ரவ்ருத்தியின் சரியான மார்க்கத்தையும் தவருன போக்குகளின் வழியையும் பகுத்துப் புரிந்துகொள்ளும் ஆற்றல் இருக்கும்போது அதை சாத்விக புத்தி என்கிறோம்.

அந்த புத்திக்கு மனிதனை சரியான போக்கில் செலுத்தும் துணிவு இருக்கவேண்டும். அதே போல் பயன் தராத அபத்த முயற்சிகளிலிருந்து ஒதுக்கி நீக்கவும் தைரியம் இருக்கவேண்டும். சுருக்கமாக நேர்மையான புத்தியானது செய்யப்பட வேண்டிய உரிய வேலைகளின் வழி, (ப்ரவ்ருத்தி மார்க்கம்) விட்டுவிடப்பட வேண்டிய உரிய வேலைகளின் வழி —இரண்டையும் பகுத்து அறிந்துகொள்ளும், ''உடனே செயல்படும் ஆற்றலை'' உடைய தாக இருக்கும்.

உண்மையான வகை வேலைகள், ஏமாற்றிவிடும் வகை வேலைகள் இவற்றைச் சரியானபடி புரிந்துகொள்ளக் கூடிய புத்தி எது சரி, எது தவறு என்பதையும் நிர்ணயம் செய்யும் ஆற்றல் படைத்ததாக இருக்கும். நம்மைச் சுற்றி எப்போதும் ஓட்டங் கள், மாறுபட்ட நிகழ்ச்சிகளின் ஆட்டங்கள் அறை கூவல்கள் இருந்துகொண்டே இருக்கின்றன. ஒவ்வொரு கணமும் நாம் இந்த நிலையில் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்று முடிவு எடுக்கவேண்டிய நிர்ப்பந்தம் இருந்துகொண்டே இருக்கிறது. சாத்வீக புத்தி தான் எப்பொழுதும் சரியான முடிவுக்கு வர உதவி செய்யும். நாம் பார்க்கிறோம்: கோபத்தில், அல்லது சுயமரியாதை கெட்டுவிட்டது என்ற ஒரு பொய்க் கருத்தைக்கொண்டு, சிலர்

வேலையை ராஜீ நாமா செய்கிறார்கள். ஆனால் பிறகு தன் தவற்றுக்கு வருந்துகிறார்கள். இங்கே அவர்களுடைய கோபம் அந்தக் கணத்தில் புத்தியின் நிர்ணய ஆற்றலை நச்சுப்படுத்தி விட்டது. அல்லது தன்னைப் பற்றிய உயர்ந்த அபிப்ராயம் அவ் விதம் தவறான முடிவுக்கு வரச் செய்துவிட்டது. அது வருந்தத் தக்க நிலையில் கொண்டுவந்து வைத்துவிட்டது. அர்ஜுனனும் ஒரு மனக் கொந்தளிப்பு (இசிப்பு) நோய்க்கு உள்ளாகி,' என்னிட மிருந்து சரியான தீர்வு செய்யும் ஆற்றல் போய்விட்டது' என்று சொல்கிறான்.

பய, அபய— எதற்கு அஞ்ச வேண்டும்? எதற்கும் பயப்படக் கூடாது? 'தேவதைகள் காலடி வைக்கப் பயப்படும் இடத்தில் அசடுகள் ஓடுகிறார்கள்' என்று ஒரு பழமொழி (ஆங்கிலத்தில்) உண்டு. பகுத்தறிவற்ற மக்கள் மோக மயமான புலனின்பம் பற்றிய எண்ணத்தினால் உண்மையற்ற பொருள்களை ஆசையுட் பட்டுப் பற்றிக்கொண்டு திரிகிறார்கள். அவற்றிடம் அவர்களுக்கு அச்சம் தோன்றுவதில்லை. ஆனால் அவர்கள் தத்துவத்தைப் படிக்க, அதைத் தெரிந்துகொண்டு பரம தத்துவத்தை அடைய முயலவே பயப்படுகிறார்கள். உண்மையான புத்திக்கு, அஞ்சுவது, அஞ்ச வேண்டாதது இவற்றைச் சரியாகப் புரிந்துகொள்ளும் ஆற்றல் இருக்கவேண்டும். இதற்கு மிகவும் பொருத்தமான எடுத்துக்காட்டை ஸ்ரீ ராமாயணத்தில் பார்க்கிறோம். வெற்றி வீரன் ஸ்ரீ ராமபிரான் சீதா பிராட்டியை மீட்பதற்காக, அநேக மாகத் தனியாகவே, மிகவும் பலம் வாய்ந்த ராக்ஷஸன் ராவணனை எதிர்த்து போரிடுகிறார். ஆனால் அதே வீரன் ஸ்ரீ ராம பிரான், ஒரு வண்ணான் சீதையைப் பற்றிக் குறை சொல்லும்போது அவன் வார்த்தைக்கு மதிப்புக் கொடுக்கிறார். இந்த அறிவு அஞ்ச வேண்டியது எது, அஞ்ச வேண்டாதது எது என்று சரியான முடிவு எடுக்கும் ஆற்றல் படைத்த சாத்வீக புத்திக்குத் தக்க எடுத்துக்காட்டாகும்.

பந்தம், மோக்ஷம்—(பற்று, விடுதலை) —அறிவாற்றல் தெளி வாக இருந்தால் நாம், 'நம் முன் இருக்கும் ''உயர்வு'' செயல் படாமல் அதைத் தடுப்பது எது என்று புரிந்துகொள்ள முடியும். நம்மிடமிருந்தே நம்மைப் பிரித்துக்கொண்டு நம்முடைய மனம் போகும் போக்கையும் நடந்துகொள்ளும் விதத்தையும் கூர்ந்து நுணுகி, ஆய்ந்து புரிந்துகொள்வது சுலபமில்லைதான். நல்ல முறையில் பயிற்றுவிக்கப்பட்ட சாத்வீக புத்தி கொண்டவர் களுக்குத்தான் இது சாத்தியமாகும். சாத்வீக புத்தியை வளர்த்துக்கொண்டோமானால் அது நம்மிடம் சுறுசுறுப்பாக இருக்கும். பொய்யான மதிப்பீடுகள் தவறான உணர்ச்சிகள், இவைகளைக் காட்டித் தரும். அதே சமயம் அது தானாகவே இந்தக் கொலைகார வாசனை வலைச் சிக்கலிலிருந்து விடுபடும்

வழியையும் தானுகவே தோன்றச் செய்யும். நாம் இந்த உள் வலைகளிலிருந்து நம்முடைய ஆளுமையை விடுவித்து எடுத்து சரியானபடி செயல்படும் சுதந்திரத்தையும் அடையமுடியும்.

சுருக்கிக் கூறுமிடத்து: சாத்விக புத்தி என்பது நமக்கு எவ்வகையான வேலைகளைச் செய்யவேண்டும்; எவ்வகையான வேலைகளை விட்டுவிட வேண்டும்; என்று எடுத்துக்காட்டும் புத்தியாம்; சரியானவற்றிற்கும் தப்பானவற்றிற்கும் இடையே உள்ள மாறுபாட்டை அறிவதாம்; எதற்கு அஞ்ச வேண்டும், எதை அஞ்சாமல் எதிர்கொள்ள வேண்டும் என்று காட்டிக்கொடுப்பதாம். கடைசியாக தற்சமயம் நம்மிடம் இருக்கும் அழுக்கு, அசிங்கங்களின் காரணங்களைக் காட்டி இவற்றை நீக்க வழி காட்டுவதாம்.

சரியான அறிவாற்றல் (புத்தி) பாலைவனத்தில் சோலை நிரம்பிய நகரத்தை நிர்மாணிக்கும். அச்சுறுத்தும் ஒவ்வொரு தோல்வியிலிருந்தும் வெற்றியைக் கடைந்து எடுத்துக் கொடுத்துவிடும். புத்தியும், த்ருதியும் இல்லாமல் போனுல் மிகச் சிறந்த வாய்ப்புக்கள்கூட மோசமான நாசமாக மாறிவிடும். சற்று சரியான முறையில் அறிவைப் பயன்படுத்தி உண்மையை அறிந்து கொண்டோமானுல் அது மிக பயங்கரமான துன்பியல் நிகழ்ச்சிகளைக் கூட வளமான விதி வாய்ப்பாக மாற்றிவிடும். இந்தக் கருத்தை தெளிவாக்குவதற்கு வயதான மகாத்மாக்கள் ஒரு கதை சொல்வதுண்டு.

ஒரு காலத்தில் ஓர் ஆற்றின் கரையில் ஒரு நாடு இருந்தது. அதற்கு ஒரு அரசன் இருந்தான். எதிர்த்த கரையில் மலைகளும் மனிதனைக் கொல்லக் கூடிய கொடிய மிருகங்கள் நிறைந்த அடர்த்தியான காடுகளும் இருந்தன. இந்த ராஜ்யத்தில் ஆளுவதற்கு அரசன் ஒவ்வொரு முறையும் தேர்ந்தெடுக்கப்படுவான். அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டவன் ஐந்தாண்டுகள் ஆள்வான். ஐந்தாண்டுகள் முடிந்த பின்பு ஒரு சுப நாளில் அந்த ராஜாவை மக்கள் கொட்டுமேளத்துடன் ஆற்றங்கரைக்கு அழைத்துச் செல்வார்கள். பிறகு அவனை அரசருக்குத் தகுந்த ஆடம்பரமான படகில் அமர்த்தி எதிர்த்த கரைக்கு அழைத்துச் சென்று காட்டில் அந்த மிருகங்களுக்கு இரையாக விட்டுவிட்டு வந்துவிடுவார்கள். அவைகள் அவனைக் கிழித்துக் குதறிக் கொன்றுவிடும்.

விவேகமில்லாத அசட்டு அரசர்கள் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு சிம்மாசனம் ஏறுவார்கள். ஐந்தாண்டுகளுக்குப் பின்பு எதிர்க் கரையில் சென்று எமனைச் சந்திக்க வேண்டும் என்பதையே மறந்து அவர்கள் இன்பங்களில் திளைத்து வாழ்வார்கள். இப்படி அவர்கள் எல்லோரும் இன்ப வாழ்வு வாழ்வதிலேயே

தங்கள் வாழ்வையே முடித்துக்கொண்டார்கள்.

பிறகு தேர்ந்தெடுக்கப்பட்டு அரசனான ஸ்ரீமான் புத்திமான். வழக்கம் போல பிரதிநிதிகளும் பிரபுக்களும் ''இந்த அரசனை எல்லோரும் மதித்து கீழ்ப்படிய வேண்டும்'' என்று பறையறைவித்தார்கள். புத்திமான் தான் சிம்மாசனம் ஏறியவுடன் செய்த முதல் வேலை என்னவென்றால் தன்னுடைய படைகள் அத்தனையும் எதிர்க் கரைக்கு அனுப்பி காட்டை சீர் செய்தான். பொக்கிஷத்திலிருந்த அவ்வளவு பணத்தையும் செலவு செய்து எதிர்க் கரையில் ஒரு புது நகரை நிர்மாணித்தான். பிறகு தன்னுடைய நாட்டிலிருந்த பெரிய தொழிலதிபர்களையும், வியாபாரிகளையும் புது தலை நகரில் குடியேறச் செய்தான். ஐந்தாண்டுகளுக்குப் பிறகு அந்த நாட்டுப் பழக்கப்படி அவனை மக்கள் எதிர்க் கரைக்கு அனுப்பியபோது அவன் தன்னுடைய புது ராஜ்யத்திற்கு அமர்க்களமாக அரச கௌரவத்துடன் சென்று சேர்ந்தான். இது அவனுடைய சரியான அறிவாற்றலினால் சாத்தியமாயிற்று.

சரியான முறையில் விஷயங்களைப் பகுத்தறிந்து, கெட்டிக்காரத்தனத்துடன் திட்டமிட்டு அதை முயற்சியுடன் நிறைவேற்றும் ஆற்றல் படைத்த அறிஞனால் பின்னால் தனக்கென்று இன்பம், வெற்றி, வளம் இவைகள் கொண்ட ஒரு பெரிய ராஜ்யத்தையே ஏற்படுத்திக் கொள்ள முடியும். அப்படிப்பட்ட புத்தியைத்தான் கண்ணபிரான் சாத்வீக புத்தி என்கிறார்.

ராஜசபுத்தி எது?

யயா தர்மம் அதர்மம்ச கார்யம் சாகார்ய மேவச
அயதாவத் ப்ரஜாநாதி புத்தி: ஸா பார்த்த ராஜஸீ 18:31

யயா—எதனால்; தர்மம்—தர்மம்; அதர்மம்—அதர்மம்; ச—மேலும்; கார்யம்—என்ன செய்யப்பட வேண்டும்; ச—மேலும்; அகார்யம்—என்ன செய்யப்பட கூடாது; ஏவ—அப்படியே; ச—மேலும்; அயதாவத்—தவறாக; (இருக்கிறப்டி இல்லாமல் மாறாக); பிரஜாநாதி—அறிகிறதோ; புத்தி:—புத்தி; ஸா—அந்த; பார்த்த—ஹே பார்த்தா; ராஜஸ்—ராஜஸம்.

ஒருவன் எந்த புத்தியைக் கொண்டு தர்மத்தையும், அதர்மத்தையும் செய்ய வேண்டியதையும் செய்யக் கூடாததையும் தவறாகப் புரிந்து கொள்கிறானோ அந்த புத்தி, ஏ பார்த்தா, ராஜஸ புத்தியாகும்.

ராஜஸ புத்தியுடைய மனிதன் தர்மாதர்மத்தையும் செய்ய வேண்டியது வேண்டாததையும் சற்று உண்மைக்குப் புறம்பான (அயதாவத்) முறையில் கணிக்கிறான். அவன் புத்தியின் மேல்

அவனுடைய பலமான விருப்பு வெறுப்புக்கள், மனச் சாய்வால் தவருக ஏற்பட்ட கருத்துக்கள் ஆகியவையாலான, திரை விழுந்திருக்கிற காரணத்தால் அவனுல் சரியான தீர்வுக்கு வர முடியாது.

சங்கரபாஷ்யத்துக்கு உரை எழுதிய ஸ்ரீ ஆனந்தகிரி அவர்கள் தர்மாதர்மம், கார்யாகார்யம் என்ற இரண்டு ஜோடி வார்த்தைகளுக்கும் இடையே ஒரு மிகவும் நுண்ணிய மாறுபாட்டை எடுத்துக் காட்டுகிருர். 'தர்மம் அதர்மம்' என்பது ''அபூர்வத்தை'' (இதற்கு முன் இல்லாததை)க் குறிக்கின்றன. அதாவது செயல்களின் விளைவு வெளித்தோன்றுவதற்கு முன்னுல் செய்யப்பட்ட செயல்கள் ஏற்றுக் கொள்ளும் உருவங்கள் அல்லது நிலைகள். கார்யம், அகார்யம் என்பது செயல்களைச் செய்வது செய்யாததைக் குறிக்கின்றன. அதைச் சுட்டத்தான் இப்படி இரண்டு விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

தாமஸ புத்தி எது?

*அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா*
*ஸர்வார்த்தான் விபரீதாம்ஸ்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ*
*18:32*

அதர்மம்—அதர்மத்தை; தர்மம் இதி—தர்மம் என்று; யா—எது; மந்யதே—எண்ணுகிறதோ; தமஸா—இருளில்; ஆவ்ருதா—மூடப்பட்டது; ஸர் வார்த்தான்—எல்லாப் பொருள்களையும்; விபரீதான்—விபரீதமாக (முற்றிலும் தலைகீழ் மாறுதலாக); ச—மேலும்; புத்தி:—புத்தி; ஸா—அது; பார்த்தா—பார்த்தனே; தாமஸீ—தாமஸமானது (மந்தம்).

(அறியாமை) இருளில் மறைக்கப்பட்டு எந்த புத்தி அதர்மத்தை தர்மமாகவும் மற்றும் எல்லாப் பொருள்களையும் தலைகீழாகப் பார்க்கிறதோ அது பார்த்தனே, தாமஸ (மந்த)மான புத்தி.

தனக்கும், பிறருக்கும் துயர் இழைக்கிறவனுடைய புத்தி (மந்த(ன்) புத்தியாகும். உள்ளபடி அது புத்தியேயல்ல. மிகவும் பெருந்தன்மையாகச் சொல்வதானுல்கூட, தவருகப் புரிந்தவைகளின் மூட்டை என்றே சொல்லலாம். மந்த புத்தி தன் வழியில் அறிந்து கொண்டு முடிவுகள் கொள்ளும். ஆனுல் அநேகமாக அம்முடிவுகள் எல்லாம் தவருகவே இருக்கும். மிகவும் விபரீதமாக (தாறுமாருகத் தலைகீழாக)ப் புரிந்து கொள்ளும் தன்மை வாய்ந்தது அது அதனுல் அது அதர்மத்தை தர்மமாகவும் சரியைத் தப்பாகவும் புரிந்து கொள்ளும். தாறுமாருன முடிவுக்கு வரும்

## புத்தியின் மூன்று வகை

| ஸாத்வீகம் | ராஜஸிகம் | தாமஸிகம் |
|---|---|---|
| ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி, கார்யம் (செய்ய வேண்டியது) அகார்யம் (செய்யப்படக் கூடாதது) இதை சரியாக முடிவு செய்யக் கூடியதும், அஞ்சுவது எது, அஞ்சாதது எது என்பதை நன்கு தெரிந்துகொள்ள ஆற்றலுடையதுமான புத்தி ஸாத்வீக புத்தியாகும். | சரி, தப்பு, செய்யப்பட வேண்டியது, செய்யப்படக் கூடாதது, இவ்விஷயங்களில், (தவறான அஹங்காரச் சாய்வு மனப்பான்மை காரணமாக) தவறான முறையில் முடிவு செய்யும் புத்தி ராஜஸ புத்தியாகும். | எல்லாவற்றையும் தலைகீழாக தப்பை சரி என்று புரிந்துகொள்ளும்—அறியாமை இருளால் மூடப்பட்டிருக்கும்—உண்மை நிலைக்குப் புறம்பாக நேர் எதிர் மாறாகப் புரிந்து கொள்ளும் இதை 'இருள்' புத்தி அல்லது மந்த (தாமஸ புத்தி) என்கிறோம். |

'புத்தி' எழும் நிகழ்ச்சிகள், வெளியிலிருந்து வரும் புலன் தாக்குகள் இவற்றின் மேல் உடனே முடிவு மேற்கொள்ளும் ஆற்றல்; அறியும் ஆற்றல். இதன் முடிவு சரியில்லை என்றால் ஒருவன் செயல்கள் சரியாக அமையா. இது இல்லாத காரணத்தால்தான் துயர்கள், தோல்விகள் ஏற்படுகின்றன. சாத்வீகபுத்தி ஒரு போதும் வீணாகாது. ராஜஸ புத்தி வீணாகலாம். தாமஸ புத்தி உருப்படுவது அபூர்வமே.

இந்த ஆற்றல் மந்தனிடம் தாராளமாக இருக்கிறது. காரணம் அவனுடைய முழுத் தேர்வாற்றலும் அஹம்பாவ போதை, அறியாமை இருள் இரண்டாலும் பூராவாகப் போர்த்தப்பட்டு அமுக்கப்பட்டிருக்கிறது.

''த்ருதி''யின் மூன்று வகைகளைச் சொல்லத் தொடங்குகிறார் கண்ணபிரான்:

த்ருத்யா யயா தாரயதே மன: ப்ராணேந்த்ரியக்ரியா:
யோகேனா வ்யபிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ
*18:33*

த்ருத்யா—தாங்கிக் கொள்ளும் உறுதி; யயா—எதனுல்; தாரயதே—கட்டுப்படுத்தப் படுகின்றனவோ; மன: ப்ராணேந்த்ரியக்ரியா:—மனம், பிராணங்கள், இந்திரியங்கள் இவற்றின் செயல்பாடுகள்; யோகேன—யோகத்தினுல்; அவ்யபிசாரிணு—அகலாமல்; த்ருதி—த்ருதி; ஸா—அது; பார்த்த—ஏ பார்த்தனே; ஸாத்விகி—சாத்வீகமானது.

எந்த அசையாத த்ருதியினுல் (பொறையுறுதி) மனம், பிராணன்கள் இந்திரியங்கள்—இவற்றின் செயல்பாடுகள் கட்டுக்குள் வைத்திருக்கப்படுகின்றனவோ அது, ஏ பார்த்தா—சாத்வீக த்ருதியாகும்.

மூன்று சுலாகங்கள் கொண்ட இந்தப் பகுதியில் த்ருதியின் மூன்று வகைகள் கூறப்படுகின்றன. 'த்ருதி' என்ற சொல்லுக்கு ஒரே சொல்லாக மொழிபெயர்ப்பு தருவது கடினம். அலேயாமை, பிடிவாதம், தொடர்ந்த ஈடுபாடு, உறுதி, பொறையழுத்தம், துயர்தாங்கும் தைரியம்—என்று எல்லாவற்றையும் அடக்கிய சொல் அது. இவ்வளவும் சேர்ந்தாலும் 'த்ருதி'யின் ஏதோ ஒரு அமிசத்தைக் குறிக்காமல் விட்டுவிடும்.

த்ருதி நம்முள் உள்ள ஓர் ஆற்றல். அது இடையறுமல் தன் லட்சியத்தைக் கண் எதிரே வைத்திருக்கும். அதை அடையக் கூடிய முயற்சியையும் அந்த முயற்சிக்குத் தளராத ஊக்கத்தையும் தரும். மேலும் வழியில் ஏற்படும் தொல்லே, துயர்களைத் தாங்கிக் கொள்ளும் வலிவும், அதுவே. அது துயர்களை சாகஸம்,

வீரத்தனம், அறியாமை இவற்றுடன் தாங்கி எதிர்கொள்ளத் தேவையான சக்தியை எங்கிருந்தோ ரஹஸியமாக எடுத்துக் கொடுத்துவிடும்.

இது ஒரு ரஹசிய நெருப்பு! மனிதனுக்கு ஒரு உயிர்ஒளி கொடுத்து வியக்கவைக்கக் கூடிய சாதனைகளின் ஆகாயத்தில் அவனை உந்திவிடக்கூடியது. இந்த ஆற்றல், தங்களை அடக்கிக் கொள்ளத் தெரியாமல் உலகப் பொறியின்பங்களில் வாயைப் பிளந்து கொண்டு, காய்ந்த மாடு கம்பில் விழுந்தது போல் விழுந்து வாழ்வைக் கழிப்பவர்களுக்குக் கிட்டாது. தன் உயிர் ஆற்றலை தவறான எண்ணங்கள், மோகவாழ்வு இவற்றில் அழித்துக் கொள்பவனுக்கு 'த்ருதி' தோன்றாது. இந்த நுண்ணிய த்ருதி இங்கே சாத்வீக, ராஜஸ, தாமஸ என்ற மூன்று வகை களில் பிரிக்கப்பட்டு விளக்கப்படுகிறது. இந்த மூன்றிலுமே ஒரு கருத்து மையமாக நிற்பதைக் காணலாம். மூவரிடமுமே தங்கள் செயல்களில் இடுக்கண் அழியாமல் தொடர்ந்து ஈடுபடும் ஆற்றல் இருக்கிறது. அவன் புத்தி காட்டும் முடிவு, பாதை இவற்றில் தான் மாறுபாடு காணப்படுகிறது.

ஒருவன் தான் நினைத்த ஒரு குறியில் ஒருமுகப்படுத்தப்பட்ட கவனம், சலிக்காத ஊன்றல் மூலம் தன் மனதையும், இந்திரியங் களையும் அவற்றின் செயல்களையும் சற்றுக்கூடத் தளரவிடாமல் அடக்குகிறான். அந்த அடக்கலின் அடர்த்தியை சாத்வீக த்ருதி என்கிறோம்.

மனது தான் கர்மேந்திரிய ஞானேந்திரியங்களை அடக்க முடியும். இந்த இந்திரியங்கள் தோன்றி மறையும் பொய் இன்பங் களைத் தேடிப் போகும். அப்போது அவற்றின் பயனாக சக்தி எல்லாம் சிதறிப் போகும். அவைகளைத்தடுத்து நிறுத்த மனதுக்கு தேவையான ஆற்றல் பெறவும், திருப்தியளிக்கவும் தக்கதான ஒரு நிலைத்த கவனம் தேவை. உயர்ந்ததும் பெருமையுள்ளதுமான வேறொன்றையும் பிடித்துக் கொள்ளாமல் நாம் இப்பொழுது இந்திரியங்கள் போகும் போக்கிலிருந்து அவற்றைத் திருப்ப முடியாது. எனவேதான் கிருஷ்ணன் 'யோகம்' தேவை என்கிறார்.

ஏமாறாத ஆத்ம தியானத்தின் மூலம் மனம் சம நிலையையும் சலிக்காது நிற்கும் சக்தியையும் அடைகிறது. அதன் மூலம் அது இந்திரியங்களை அடக்கும் வலிவு பெறுகிறது. இவையெல்லாம் 'த்ருதி'யிலிருந்து மனிதனுக்குத் தொடர்ந்து சக்தி கிடைத்துக் கொண்டிருந்தால்தான் சாத்தியமாகும். முயற்சியில் தொடர்ச்சி, குறிக்கோளில் சலிக்காத நாட்டம் இதுதான் சாத்வீக த்ருதி.

ராஜஸிக 'த்ருதி' எது?

யயாது தர்ம காமார்த்தான் த்ருத்யா தாரய தே(அ)ர்ஜுன
ப்ரஸங்கேன பலாகாங்க்ஷீ த்ருதி: ஸா பார்த்த ராஜஸீ

*18:34*

யயா—எதனுல்; து—ஆனுல்; தர்ம, காம, அர்த்தான்—அறம் இன்பம் பொருளை; த்ருத்யா—த்ருதியினுல்; தாரயதே—பிடித்துக் கொள்கிருனே; அர்ஜுன—ஏ அர்ஜுனு; ப்ரஸங்கேன—நல்ல பற்றினுல்; பலாகாங்க்ஷீ—செயலின் பலனை விரும்பி; த்ருதி:—ஊக்கம்; ஸா—அது; பார்த்த—ஏ பார்த்தா; ராஜஸி—ராஜஸம்.

ஆனுல், ஏ, அர்ஜுனு! எந்தத் 'த்ருதி' (ஊக்கத்தின் பயனுக) ஒருவன் கடமை, இன்பம், பொருளை, பற்று, பயன் விருப்பம் காரணமாக தீவிரமாகப் பற்றி நிற்கிருனே அது, ஏ பார்த்தா—ராஜஸமாம்.

தர்மார்த்த காமத்தைப் பற்றி நிற்பதற்கான, ஊக்கம் (த்ருதி) ராஜஸத்ருதி, அவற்றின் பயனை அனுபவிக்கும் ஆசை வளர்ந்து ஒருவனுக்கு அந்த ஊக்கத்தை வளர்க்கிறது. இங்கே கண்ணன் மோக்ஷம் என்கிற நான்காவது உறுதிப்பொருளை (புருஷார்த்தத்தை) விட்டுவிடுகிருர், கவனியுங்கள்.

ராஜஸ மனிதனுக்கு விடுதலையில் அக்கரை இல்லை. அவனுக்கு இந்த பூவுலகில் கிடைக்கிற மூன்று வகைப் பொருள் களும் போதும்.

ஒன்றைத் தேடுவதில், அவனுக்கு உள்ள தளர்வுரு ஊக்கம், இம் மூன்று துறைகளில்தான் செல்லும். அவற்றுள் ஒன்றை, அது தரும் பயனில் திருப்தியடையும் கடுமையான ஆசையால்தான் அவன் பற்றித் தொடர்வான். தர்மத்தை, அவன் சுவர்க்கம் கிடைக்கும் என்றுதான் செய்வான். இந்த வாழ்வில் இங்கே அதிகாரம், பதவி கிடைக்கும் என்ற ஆசையுடன்தான் பொருள் ஈட்டுவான். சதையின்பங்கள் தரும் பொருள்கள் தனக்கு வாழ்க்கையின் முழுத் திருப்தியையும் தந்துவிடும் என்று கருதித் தான் அவன் 'காம'த்தைத் தேடுவான்.

இந்தத் துறைகளில் அவன் காட்டும் பிடிவாதத்தைத்தான் ராஜஸ த்ருதி என்கிருேம்.

தாமஸத்ருதி எது?

யயா ஸ்வப்நம் பயம் சோகம் விஷாதம் மதமேவ ச
ந விமுஞ்சதி துர்மேதா த்ருதி: ஸா பார்த்த தாமஸீ

*18:35*

யயா—எதனுல்; ஸ்வப்நம்—தூக்கம்; பயம்—அச்சம்;

சோகம்—துயரம்; விஷாதம்—மனத் தொய்வு; மதம்—கர்வம்; ஏவ—அம்மாதிரியே; ச—மேலும்; ந—இல்லை; விமுஞ்சதி—விடுகிறது; துர்மேதா—துர்ப்புத்தி; த்ருதி—நிலைத்த ஊக்கம்; ஸா—அது; பார்த்த—ஏ பார்த்தா; தாமஸீ—தாமஸம்.

எந்த த்ருதி (நிலைத்த ஊக்கம்) காரணமாக ஒரு அசடன் தூக்கம், பயம், துயரம், மனத்தொய்வு, கர்வம் இவற்றை விடாமல் இருக்கிறானோ அது ஏ, பார்த்தா தாமஸம்.

இந்த சுலோகத்தில் தாமஸ த்ருதி விளக்கப்படுகிறது. இதை அறிந்து கொள்வதில் கஷ்டமிராது. ஏன் என்றால் நமக்குள் பெரும் அளவு மக்கள் இந்த வகையைச் சேர்ந்தவர்கள்தாம். கனவுகள், கற்பனைகள், பயன்கள், பதற்றங்கள், மனக்கலக்கங்கள் துயர்கள், கர்வம் இவற்றை விடாப்பிடியாக வைத்துக் கொண்டிருக்கிற 'த்ருதி' (அழுங்காது நிலைத்த ஊக்கம்) தாமஸ த்ருதியாகும்.

இங்கே ஸ்வப்னம் என்பது கனவு தரும் தூக்கத்தைக் குறிக்கும். இல்லாத பொருள்களை கற்பனை செய்து இருப்பது போல் பார்ப்பது கனவு. தாமஸப் பிரகிருதிகள், உலகின் மேல் உண்மைக்கு ஒரு கனவு உருவத்தை ஏற்றி வைத்துப் பார்ப்பார்கள். பொய்யான இன்பத்தைச் சுவைக்க முயலுவார்கள். பிறகு அவற்றை அடைய முழு மூச்சுடன் முயலுவார்கள்.

பயம்: அப்படி மயக்கத்திலுள்ளவர்கள் மனதில் வருங்காலத்தைப் பற்றி அநேக பயங்கள் தோன்றும். பயந்த அவை ஏற்படாமல் அல்லது நிகழாமல் போகலாம். ஆனால் அந்தப் பயங்கள் அவர்கள் மன அமைதியையும் சமநிலையையும் பூராவாக அழித்துவிடும். அப்படி நூற்றுக்கணக்கான பயங்களைக் கற்பனை செய்து சீரழிந்த பலர் நம்மிடையே இருக்கிறார்கள். சிலர் 'நாளை நாம் இறந்து விடுவோம்' என்று பயப்படுகிறார்கள். ஆனால் ஒவ்வொரு நாளும் காலையில் முந்தைய நாளைவிட அதிக ஆரோக்கியத்துடன் விழித்து உலகத்தில் நடமாடுவார்கள். இதில் வேடிக்கை என்ன என்றால் அவர்கள் குரங்குப் பிடியாக இந்தப் பயக் கற்பனைகளை அணைத்துக் கொண்டு அவஸ்தைப் படுவதுதான். அவர்கள் 'த்ருதி' அப்படி!

சோகம், விஷாதம், மதம்: மனிதன் உயிராற்றல் அழிவதற்கு இவை மூன்றும் பெரிய வழிகள். பாய்கால்கள்! முழுத் தாமஸ மனிதன் இந்த மூன்றையும் தன் நெஞ்சில் அடைத்து வைத்திருப்பான். அவற்றின் காரணமாக அவன் நொந்து தொய்ந்து போய்விடுவான். நடந்ததுக்கு வருந்தும் போது அது சோகம் எனப்படும். விஷாதம் என்பது வருங்காலத்தில் நடந்து விடும் என்று பயப்படும் போது ஏற்படும் உணர்ச்சி. மதம் என்பது

அசட்டுத் தாமஸன் நிகழ்காலத்தில் தான் அனுபவிக்கும் இன்பங் களுக்குக் கொள்ளும் கர்வமாம்.

வாழ்க்கையில் இந்த ஐந்து வகை உணர்வு மதிப்பீடுகளைக் கொண்டவனை கண்ணன் துர்மேதா துர்ப்புத்தி அல்லது அசடன் என்கிறார். அவன் கொண்டிருக்கிற த்ருதி தாமஸ வகையைச் சேர்ந்ததாகும்.

இன்பமும் (சுகம்) கூட குணங்களுக்கேற்றவாறு மூவகைப்படும். செய்கையின் பயனாக விளைகிற இன்பத்தின், அம் மூன்று வகையும் இங்கே தொடர்கின்றன.

ஸுகம் த்விதானீம் த்ரிவிதம் ச்ருணு மே பரதர்ஷப
அப்யாஸாத்ரமதே யத்ர து:காந்தம் ச நிகச்சதி

*18:36*

ஸுகம் து—இன்பமும்; இதானீம்—இப்போது; த்ரிவிதம்—மூன்று விதம்; ச்ருணு—கேள்; மே—என்னிடம்; பரதர்ஷப—பரதகுல ஏறே; அப்யாஸாத்—அப்பியாஸத்தினால்; ரமதே—மகிழ்கிறான்; யத்ர—எங்கே; து:காந்தம்—துன்பத்தின் முடிவு; ச—மேலும்; நிகச்சதி—அடைகிறான்.

இப்போது என்னிடமிருந்து கேட்டுக்கொள். ஏ, பரதகுல ஏறே! மூன்று வித இன்பத்தை; அதில் பழக்கத்தால் ஒருவன் ரமித்து நிச்சயமாக துன்பத்தின் முடிவைக் காண்கிறான்.

இந்த அத்தியாயத்தில் கூறிவந்த தர்க்கத்தைத் திரும்பிப் பார்த்தால் ஞானம், கர்த்தா, கருமம் இம் மூன்றும் எல்லாச் செயலுக்கும் உரிய மூன்று தூண்டுதல்கள் என்று பார்த்தோம். பிறகு எல்லாச் செயல்களையும் நடத்திச் செல்லும்—அதாவது செயல்களைத் தொடங்கச் செய்து, அவற்றிற்கு வலிவும் கொடுக்கும் புத்தி, த்ருதி இவற்றின் பாகுபாடுகளையும் தனித்தனியாகப் பார்த்தோம்.

ஒவ்வொரு கர்த்தாவும் தன் ஞானத்தால் வழி காட்டப் பட்டு, அவன் அறிவாற்றலுக்கும் உள்ளடங்கி தன் 'த்ருதி'யால் நிலைத்த ஊக்கம் கொண்டு தன் துறையில் வேலை செய்கிறான். இப்போது வேலை அல்லது கர்மத்தை நன்கு பாகுபடுத்தி ஆய்ந்து ஆயிற்று. அதன் ''உடற்கூறு செயல்விதம் பார்த்து விட்டோம். இப்போது செயலின் ''மனோபாவம்' பேசப்படுகிறது. மனிதன் ஏன் கர்மம் புரிகிறான்? உண்மையில் எந்த ஒரு உயிரும் ஒரே ஆசையினால் தூண்டப்பட்டுத்தான் வேலை செய்கிறது. அதுதான் இன்ப நாட்டம்.'

ஞானம், கர்த்தா, கர்மம் மூன்றும் ஒரு செயலின் மூன்று

அமிசங்கள். ஒவ்வொரு உயிரும் இம் மூன்றும் இருக்கும் போது சரியானபுத்தி, நல்ல த்ருதியுடன் கருவிலிருந்து (சுடு)காடு வரை உலகில் செயலாற்றிக் கொண்டே இருக்கிறது. எதற்கு? ஒவ்வொருவனும் இன்பம் நாடியே—அதாவது இப்போது கிடைப்பதை விட அதிக புலனின்பம் கிடைக்கவேண்டும் என்று விரும்பியே வேலை செய்கிறான்.

குறிக்கோள் (இன்பம்) ஒன்றே. இருப்பினும் செயலில் பல கூறுகள் சேர்ந்திருக்கின்ற காரணத்தாலும், நாமும் நம்முள் புத்தியிலும் த்ருதியிலும் பரஸ்பரம் மாறுபட்டிருப்பதாலும் நாம் ஒவ்வொருவரும் பொறுக்கி எடுத்துக் கொள்ளும் வழிகள் மாறுபட்டு இருக்கின்றன. பலதரப்பட்ட செயல்களிலும் அவற்றின் மூலமும், சாத்வீக, ராஜஸ, தாமஸ மக்கள் யாவரும் தங்கள் தங்கள் இன்ப நிறைவையே தேடுகிறார்கள்.

ஐந்து கூறுகள் செயலில் அமைந்திருக்கின்றன. இந்த ஐந்து கூறுகளும் மும்மூன்று குணங்கள் காரணமாகப் பாடுபடுகின்றன. எனவே மக்கள் பெறும் ''இன்பம்'' அமைப்பு, முழுமை, முடிவுறுதல் எல்லா அமிசங்களிலும் தனித் தனியான வகையாகத்தான் இருக்கும்.

முன்னால் கொடுக்கப்பட்டிருக்கிற 4 படங்களையும் சேர்த்துப் பாருங்கள். அப்போது சத்து, ராஜஸ, தாமஸ குணப்பிரகிருதியுள்ள மனிதர்களின் தனித்தன்மையைப் பற்றி முழுச் சித்திரம் கிடைத்துவிடும்.

இதோ மூன்று வித சுகங்களுக்கு இலக்கணம் தொடர்கிறது.

அப்யாஸாத்—அப்பியாசம் (பயிற்சி அல்லது பழகுதல்) மூலம் அந்தக் காரணத்தின் திட்ட சட்டங்களை அறிந்து அவற்றுக்குப் பழக்கப்பட்டுப் போவதன் மூலம் ஒருவன் தன்னை நன்றாக ஆய்ந்து புரிந்து கொள்ளமுடியும். பிறகு ''தனக்கு வரும் தொல்லை துயர்கள் ஏன் வருகின்றன. எப்படி ஏற்படுகின்றன என்று புரிந்து கோள்ள முடியும். புரிந்து கொண்டு தன் வாழ்வைத் திருத்தி அமைத்து அவ்வப்போது மதிப்பிட்டுக் கொள்ள முடியும். இப்படிச் செய்வதனால் தொல்லை துயர்களை நீக்கிக் கொள்ளலாம். அல்லது பெருமளவு குறைத்துக் கொள்ளவாவது செய்யலாம்.

ஒருவன் இந்தப் பயிற்சியின் காரணமாக ரமிக்கிறான்—உறுதியாக தொல்லை—துயர்களுக்கு முடிவு காண்கிறான் என்று இந்த சுலோகம் கூறுகிறது. இந்த இரண்டாவது (முடிவு) வரியையும் அடுத்த சுலோகத்தையும் சேர்த்து எடுத்துக் கொண்டு ஸ்ரீதரர், மதுசூதன ஸரஸ்வதி போன்ற சில ஆசாரியர்கள் பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள். ஸ்ரீசங்கரர் பாஷியம் இது தேவை என்று எண்ணுவதாகத் தெரியவில்லை. இந்த சுலோகத்தையே வரப் போகிற கருத்துத் தொடருக்கு முன்னுரையாக எடுத்துக் கொண்டாலே அது இதுவரை சொல்லிவந்த கருத்துக்களில் தர்க்கப்

## மூன்று வகை ‘த்ருதி’

| சாத்வீகம் | ராஜஸம் | தாமஸம் |
|---|---|---|
| யோகத்தின் மூலம் மனம் கர்ம, ஞான இந்திரியங்கள் இவற்றை எந்த த்ருதியைக் கொண்டு கட்டுப்படுத்துகிறதோ, அது சாத்விக த்ருதியாம். | அவற்றுக்கான வேலையைச் செய்வதால் கிடைக்கும் பயனை அனுபவிக்கும் ஆசையுடன் தர்மார்த்த காமத்தை ஒருவன் எந்த த்ருதியின் காரணமாக பற்றுடன் சேவிக்கிறானோ அது ராஜஸ த்ருதியாம். | ஒரு அறிவிலி தூக்கம், (உண்மை அறியா நிலை) ஏதாவது நடந்து விடுமோ என்ற பயம், நடந்ததை நினைத்துத் துயருறுதல் மனச் சோர்வு (தற்காலத்தில்) இவற்றை எந்தத் த்ருதி காரணமாக விடமாட்டானோ அந்தத் த்ருதி தாமஸ த்ருதியாம். |

பூர்வமான அமிசமாக அமைய முடியும். இது அடுத்த சுலோகக் கருத்துக்கு நம்மைத் தயாராக்குகிறது.

சாத்வீக (தூய்மையான) சந்தோஷம் எது?

யத்ததக்ரே விஷமிவ பரிணாமே(அ)ம்ரு தோபமம்
தத் ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்த மாத்மபுத்தி ப்ரஸாதஜம்
18:37

யத்—எது; தத்—அது; அக்ரே—தொடக்கத்தில் (முதலில்) விஷம்இவ—விஷம்போல; பரிணாமே—முடிவில்; அம்ருதோபமம்—அமுதத்துக்கு சமம்; தத்—அது; ஸுகம்—இன்பம் (சந்தோஷம்) ஸாத்விகம்—சாத்வீகம்; ப்ரோக்தம்—சொல்லப்பட்டது; ஆத்ம புத்தி ப்ரஸாதஜம்—ஆத்ம புத்தியின் தூய்மையின் பயனாகப் பிறந்தது.

முதலில் விஷம் போலவும் (தோன்றி) முடிவில் அமுதத்துக்கு சமானமாக இருக்கும். தவிர ஆத்ம—புத்தி ஏற்பட்டதன் பயனாக மனதின் தூய்மையிலிருந்து பிறந்தது. எதுவோ அது சாத்வீக சந்தோஷம் என்று சொல்லப்பட்டது.

முதலில் விஷம் போல் இருக்கும். மிகவும் கஷ்டம் கொடுக்கும். ஆனால் தன் வேலை மூலம் முழுதாக மலரும் போது அமுதமயமான வெற்றியாக மாறும். அந்த சந்தோஷம் (இன்பம்) சாத்வீக இன்பமாகும். சுருங்கச் சொன்னால் இடையறாத, சலிக்காத, தொலையாத முயற்சியின் மூலம் கிடைக்கும் இன்பம்தான் நமக்கு மிகவும் அழகானதும் பெருமளவில் திருப்தி தருவதாக அமைந்திருக்கும். சிற்றின்பங்களுக்கு ஆசைப்பட்டு புலன்களை அவற்றின் இஷ்டப்படி ஆடவிட்டால், அதனால் கிடைக்கும் இன்பம் நிலையற்றது. அது சீக்கிரம் மறையக் கூடியது. அது வந்து போனபிறகு ஒரு பயங்கரமான ஓட்டம் வந்து நம் அமைதியையும் சமநிலையையும் கவிழ்த்து நம்மை அவநம்பிக்கை, ஆழ்ந்த மனக் கிலேசத்தின் அடித்தளத்துக்கே அடித்துச் சென்றுவிடும்.

உள்ள அடக்கம் அதன் பயனாய் கிடைக்கிற முழு ஆன்ம வளர்ச்சி இவை சாதாரண திருப்தியல்ல. தொடக்கத்தில் அது நிச்சயமாகத் துயர் தருவதாகவும் கஷ்ட சாத்யமாகவும்தான் இருக்கும். ஆனால் தேவையான வலிவையும், சுய முழுமை உள்ள சமநிலையாகிற மலைப்பாதையில் எழத் தேவையான வீரத்தையும் தன் உள்ளே ஒருவன் கண்டுபிடித்துக் கொண்டு விட்டானானால் அவனுக்கு சூட்சும இன்பத்தின் பயன் கிடைத்துவிடும். அவன் உள் அமைதியாகிற எல்லாவற்றையும் நல்கும் திருப்தியையும் பெற்றுவிடுகிறான். தன்னைத்தானே கட்டுப்படுத்தும் ஆத்ம சம்யமத்தின் மூலம் கிடைக்கிற சுகம்தான் கண்ணனால் இங்கே

சாத்வீக இன்பம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஆத்ம புத்தி பிரஸாதஜம்— தன்னுடைய தூய புத்தியினால் உண்டான.

சாத்வீக வாழ்வு வாழ்ந்து கொண்டும், உலகில் முடிந்த வரை வரைமுறைக்குட்பட்ட சுயக் கட்டுப்பாட்டுடன் செயலாற்றிக் கொண்டும், அமைந்த அமிசங்களில் எல்லாம் சாத்வீக குணத்தை வளர்த்தும் வருபவன் தன் உள் இயற்கையின் பிரசாதத்தை அடைய முடியும். சடங்கைப் பற்றிய நம் மொழியில் 'பிரசாதம்' என்ற சொல் அநேக சந்தர்ப்பங்களில் தவறாகப் புரிந்து கொள்ளப்படுகிறது.

மனதும் புத்தியும் தன் சுயகட்டுப்பாட்டின் காரணமாகவும், தியான முறைகளாலும் அமைதி, சாந்தி, மகிழ்ச்சி, வளர்ச்சி இவற்றை அடைகிறது. அதுதான் உண்மையான 'பிரஸாதமாகும்'. ஆத்ம சாதனைகளால் அந்தக் கரணங்கள் ஒருமுக இசைவை அடைகின்றன. அந்த நிலையில் கிடைக்கும் இன்பமே பிரசாதம் என்று அழைக்கப்படுகிறது. ஸ்ரீ கிருஷ்ணன் கருத்தில் இந்த பிரசாதத்தின் மூலம் கிடைக்கும் இன்பமே சாத்வீக இன்பமாகும். பண்பட்ட மனிதன் உயர்ந்த கொள்கைகள் தெய்வீகக் குறிக்கோள்கள் கொண்ட வாழ்வு வாழ்வதன் மூலம் குறியை எட்டிவிட்டோம் என்ற திருப்தியையும், இதய ஆனந்தத்தையும் பெறுகிறான். சுருக்கமாக அந்தத் திருப்தியும் ஆனந்தமும்தான் ஆன்ம பூரணத்துவம் அடைந்தவர்கள், உண்மையான சமய வாழ்வு வாழ்கிறவர்களுடைய நிரந்தர சுகமாகும்.

ராஜஸ சுகம் எது?

விஷயேந்த்ரிய ஸம் யோகாத்யத்ததக்ரே அமிருதோபமம்
பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம்

*18:38*

விஷயேந்த்ரிய ஸம் யோகாத்—பொருள்கள்—புலன்க்ள் இவற்றின் சேர்க்கையால்; யத்—எது; தத்—அது; அக்ரே—முதலில்; அம்ரு தோபமம்—அமுதம் போல; பரிணாமே—முடிவில்; விஷம்—நஞ்சு; இவ—போல; தத் ஸுகம்—அந்த இன்பம்; ராஜஸம்—ராஜஸம் என்று; ஸ்ம்ருதம்—கூறப்படுகிறது.

மனிதனுடைய இந்த்ரியம் (புலன்) பொருளுடன் சேரும் போது முதலில் அமுதம்போல ஏற்பட்டு முடிவில் விஷம் போல ஆகிவிடுகிறதே அந்த இன்பம் ராஜஸம் என்று கூறப்படுகிறது.

உரிய பொருள்களை புலன்கள் சேர்ந்து அனுபவிக்கும்போது நம் மனதில் ஒரு இன்பம் எழுகிறதே அது உண்மையில் அமுதம் போன்ற ஒரு கிளுகிளுப்புத்தான். ஆனால் அது வந்தது போன்றே

சீக்கிரம் வடிந்து போகிறது. சுகம் அனுபவித்தவனை சக்தி பூராவும் அழிந்த ஒரு அசதியாகிற குழியில் தள்ளி விடுகிறது. அது மட்டுமல்ல அவன் உள்ளத்திலும் பெருமை குறைந்த ஒரு சக்தி விரயத்தில் ஈடுபட்டிருந்த ஒரு கசப்பு உணர்வையும் ஏற்படுத்தி விடுகிறது.

இந்த ராஜஸ இன்பம் இந்திரியங்கள் பொருள்களுடன் இணைந்திருக்கிறவரைதான் இருக்கும். ஆனால் துரதிருஷ்ட வசமாக இந்த இணைப்பு நிரந்தரமாக இருக்கமுடியாது. ஏன் என்றால் பொருள்களின் தன்மையே கூடிக் குறைவதுதான். அதே போல் சுகம்துய்ப்பவன் மனம் புத்தி என்கிற கருவியும் மாறக் கூடியது. இந்திரியங்கள் ஒரே அளவான இன்பத்தை நிரந்தரமாகப் பொருள்களிடமிருந்து பெறமுடியாது. அப்படியே பெற்றாலும் அது அணைத்திருக்கிற பொருள்கள் அழுகும், உலரும் கல்லாகும். அவற்றிலிருந்து சாவின் துர்க்கந்தம் வீச ஆரம்பித்து விடும். அனுபவிக்கும் போதேகூட அந்த சுகம் போய்விடுமே என்ற அச்சம்கூட இருந்து அதைக் கெடுத்துவிடும். எனவே உண்மையைச் சிந்திக்கிறவர்களுக்கு புலன்—பொருள் இன்பம் திருப்தியே தருவதில்லை. ஏன் என்றால் அது அனுபவிப்பவனை சீக்கிரமே வருத்தக் கல்லறையில் சமாதி வைத்து விடுகிறது.

ராஜஸ குணம் உள்ளவர்களே இந்த சுகத்தைத் தேடி அலைகிறார்கள் இது ராஜஸ இன்பம்.

*தாமஸ (மந்த) 'இன்பம்' எது?*

*யதக்ரே சானுபந்தே ச ஸுகம் மோஹனமாத்மன*
*நித்ராலஸ்யப்ர மா தோத்தம் தத் தாமஸ முதா ஹ்ருதம்.*
***18:39***

*யத்—எது; அக்ரே—முதலில்; ச—உம்; அனுபந்தே—விளைவில்; ச—உம்; சுகம்—சந்தோஷம்; மோஹனம்—மயக்குவதாகவும்; ஆத்மந—ஆத்மாவினுடைய; நித்ராலஸ்யப்ரமா தோத்தம்—தூக்கம்; மிஷ(சோம்பேறித்தனம்)கவனமற்ற செயல்; இவற்றிலிருந்து கிடைக்கிற; தத்—அது; தாமஸம்—தாமஸம் என்று; உதாஹ்ருதம்—சொல்லப்படுகிறது.*

எந்த 'சுகம்' தூக்கம், சோம்பேறிகள், அஜாக்ரதை இவற்றினடியாகப் பிறந்து முதலிலும் விளைவிலும் ஆத்மாவை மயக்கத்துக்குள்ளாக்குகிறதோ அதை தாமஸ சுகம் என்று சொல்லப்படுகிறது.

தாமஸ சுகம் நம்முடைய உயர்ந்த தன்மையை மயக்கத்துள்ளாக்கி விடுகிறது. நம்முடைய பண்பாட்டை நச்சுப்

படுத்தி விடுகிறது. அப்படிப்பட்ட சுகத்தை நீண்ட காலம் தேடித் துய்த் தோமானுல் அது புத்தியின் மேல் தவருன மதிப்பீடுகளும் பொய்யான குறிக்கோள்களும் கொண்ட ஒரு கனமான பத்தையை ஏற்றிவிடுகிறது. மேலும் ஆன்மீக ஆளுமையை அழித்தே விடுகிறது.

இப்படிப்பட்ட தாமஸ சுகம் இந்திரியங்களின் வேட்கைக்குத் தான் தீனி தருகிறது. ஏன் என்ருல் அந்த சுகம்; கண்ணன் கருத்தில், தூக்கம், சோம்பேறித்தனம், அஜாக்ரதை இவற்றின் அடிப்படையில் தான் கிடைக்கிறது.

(நித்ரா) நித்திரை—தினம் நாம் தூங்குகிருேமே அந்த உடல் மனநிலையை இங்கே குறிக்கவில்லை. வேதாந்தத்தில் நித்திரை 'ஆத்ம—அறிவு' இல்லாததைக் குறிக்கும். அதாவது அது எங்கும் எப்போதும் அழியாது இருக்கும் லட்சிய நிலையைப் புரிந்து கொள்ள முடியாத தாமஸ புத்தியின் ஆற்றலின்மையைக் குறிக்கும். இந்த நிலைதான் அழியும் சதைக்குத் தீனிபோடும் புலனின்பங்களை நாடவைக்கிறது.

ஆலஸ்யம் (சோம்பேறித்தனம்) இதன் பொருள் புத்தியை மோதும் பிரசினைகளை நன்கு சிந்தித்து அவற்றிற்குச் சரியான சமாதானங்களைக் கண்டு பிடிக்கும் புத்திக்குள்ள இயலாமை. அந்த ஆலஸ்யம் வாழ்க்கையின் இனிய ராகங்களைக் கேட்டு ரசிக்கும் ஆற்றலை அழித்து விடுகிறது. அதனுல் புத்தி, கேவலம் உணர்ச்சிகளுக்கும், முற்றிலும் உருப்பெருத உள் தூண்டுதல்களுக்கும் ஏற்றவாறு அங்கும் இங்கும் அலைந்து அழிகிறது.

(பிரமாதம்) அஜாக்ரதை—புறத்திலிருந்து அறை கூவல்கள் வந்து மோதி நம்முடைய பிரதிச் செயலைக் கோருகின்றன. அப்போதெல்லாம் நம்முள் உள்ள உயர்ந்த ஆளுமை நம்மை வழி காட்டி அழைத்துச் செல்ல ஆயத்தமாயிருக்கிறது. * ஆனுல் நம்முடைய கீழ்மட்டப் பகுதி, ஆலஸ்ய மனது எப்படியோ சமாதானம் செய்துகொண்டு அந்தக் குரலுக்கு மதிப்புக் கொடுக்காமல் இருந்துவிடுகிறது. இப்படி உயர் மனதின் குரலைக் கேட்காமலேயே மனிதன் பல நாள் வாழ்ந்துவிட்டான் என்ருல் அவன் வர வரத் தன்னுடைய தெய்வீக முழுமையிலிருந்து விலகியே போய் விடுகிருன். மேலும் மேலும் தன் மிருகத் தனத்தில் ஆழ்ந்து கொண்டே போகிருன்.

தன் உள்ள உயரத்திலிருந்து வரும் புத்திமதிகளை அலட்சியம் செய்கிற மனிதன், புத்தியில் ஆலஸ்யம் உடையவன், மேலும் 'உண்மைப் பொருளின்' இருப்பையும் அதன் விலைகளையும்

---

சுவாமியின் மாண்டுக்ய காரிகையின் உரைகளில் 4வது அத்தியாயத்தைப் பார்க்கவும்.

அறியாதவன். அவன் மகிழ்ச்சியைத் தேடுகிறுன் என்ருல் எங்கே தேடுவான்? தன்னே மயக்கும் ஆத்ம மோஹனமான பொருள் களில்தான் தேடுவான்! அது முதலிலும் அப்படித்தான் இருக்கும். முடிவிலும் அப்படித்தான் இருக்கும். ஸ்ரீ கிருஷ்ணன் அப்படிப்பட்ட சுகத்தைத்தான் தாமஸ சுகம் என்கிருர்.

நம்முடைய தற்சமயச் சர்ச்சைக்கு முடிவாக ஒரு சுலோகம் இதோ:

ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி
தேவேஷு வா புந:
சத்வம் ப்ரக்ருதிஜைர் முக்தம் யதேபி:
ஸ்யாத் த்ரிபிர் குணை: 18:40

ந—இல்லே; தத்—அது; அஸ்தி—இருக்கிறது; ப்ருதிவ்யாம்—பூமியில்; வா—அல்லது; திவி—தேவ லோகத்தில்; தேவேஷு—தேவர்களிடையே; வா—அல்லது; புந—மறுபடியும்; ஸத்வம்—உயிர்; ப்ரக்ருதிஜை—பிரகிருதியிலிருந்து பிறந்த; முக்தம்—விடுபட்ட; யத்—எது; ஏபி—இவைகளில்; ஸ்யாத்—இருக்கலாம்; த்ரிபி—மூன்று; குணை—குணங்களால்.

பிரகிருதியிலிருந்து பிறந்த இம் முக்கோணங்களிலிருந்து விடுபட்ட உயிர் பூமியிலும் இல்லே; மீண்டும் தேவ லோகத்தில் தேவர்களிடையேயும் இல்லே.

உயிர் படைத்த எல்லா வற்றையுமே நன்கு பாதித்து நிற்கிற மூன்று குணங்கள் பற்றிய விஸ்தாரமான வர்ணனே இந்த சுலோகத்துடன் முடிவடைகிறது. பன்மை படைத்த இந்த உலகில் நாம் காண்கிற பலதரப்பட்ட பல்வேறு உயிர்கள் பல வகையாக இருப்பது மட்டுமல்ல, பலதரப்பட்டு செயலும் ஆற்று கின்றன. இந்த மாறுபாட்டுக்கான மனம் கடந்த ரீதியிலான காரணங்களே இந்த அத்யாயத்தின் இந்தப் பகுதி காட்டித் தரு கிறது. ஞானம், செயல், செய்பவன், அறிவு, த்ருதி—என்று ஒவ் வொரு தலேப்பின் கீழும் முக்குணங்களின் வெளிப்பாடு விவரிக்கப்பட்டிருக்கிறது. நாம் உள் தன்மையிலும் வெளி விவ காரத்திலும் எப்படி, எங்கே இருக்கிருேம் என்று நம்மையே அறிந்து கொள்வதற்காகத்தான் இந்த விவரம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

மேற்கண்ட அளவு கோலே வைத்துக்கொண்டு பார்த்து நாம் தாமஸ, அல்லது ராஜச நிலேயிலிருக்கிருேம் என்று கண்டு கொண்டால், நாம் ஆன்மீகப் பண்பாட்டில் உயர்ந்து வளர விரும்புகிறவர்களானபடியால் எச்சரிக்கைக்கு கவனம் செலுத்தி சாத்வீக நிலேக்கு உயர உடனே முயற்சி செய்யவேண்டும். நான் மீண்டும் சொல்கிறேன். கவனியுங்கள்: இவை மற்றவர்களே

## படம்: 6 சுகத்தின் 3 வகை

| சாத்விகம் | ராஜஸம் | தாமஸம் |
| --- | --- | --- |
| உள்ளக் கட்டுப்பாடு அதன் பயனாகக் கிடைக்கும் ஆன்ம பூரணத்வத்திலிருந்து எழுவது சாத்விக ''சுகம்'' இது முதலில் துன்பம் தருவதாகவும் கஷ்டமாகவும் காணப்படும். ஆனால் நிலைத்து நிற்கும். புலன்களைக் கிசுகிசு மூட்டும் இன்பங்கள் போய்விடக் கூடியவை. இவற்றிற்கு மாறானது அந்த சாத்விக சுகம். உள்ளக் கட்டுப்பாடும் தியானமும் புத்திக்குப் பிரசாதத்தை அளிக்கின்றன. இந்த அமைதியிலிருந்து புத்தி ''சாத்விக இன்பத்தைக்'' கொப்புளித்து எழச் செய்கிறது. | இந்திரியங்கள் அவற்றிற்குரிய பௌதிகப் பொருள்களுடன் சேர்ந்திருக்கும்போது தான் ராஜஸ ''சுகம்'' தோன்றுகிறது. முதலில் அது அமுதம்போல் மிகவும் ரம்யமாக இருக்கும். ஆனால் போகப் போக துய்ப்பவன் மனதில் ஒரு களைந்த வெறுமை உணர்ச்சியையும் சக்தி விரயத்தையும் உண்டாக்கிவிடும். அனுபவிக்கும் போதே கூட இது முடிந்துவிடுமே என்கிற கவலையும் தோன்றி அதையும் கெடுத்துவிடும். எனவே சீக்கிரம் மறையக்கூடிய இந்த ''சதை நுகர்ச்சி இன்பம்'' ''ராஜஸ சுகம்'' எனச் சொல்லப்பட்டிருக்கிறது. | தாமஸ ''இன்பம்'' நம்மை நம்முடைய உண்மைத்தன்மையிலிருந்து நம்மை வெகு தூரம் இட்டுச் சென்று விடுகிறது. நம் உள் வாழ்வில் 'பண்பாட்டுக்கு' நோய் விளைவித்து விடுகிறது. புத்தியின் மேல் தவறான மதிப்பீடுகள், சத்தில்லாத குறிக்கோள்கள் ஆகியவற்றின் கனத்த சாந்தைப் பூசி விடுகிறது. தாமஸ சுகத்தைத் துய்ப்பதால் நித்தியமானதும் அழியாததுமான லட்சியம் பின்னுக்குத் தள்ளப்பட்டு கேவலம் உடலளவில் இன்பம் தேடச் செய்கிறது. இது புத்தியில் சரியான சிந்தனை சக்தியை இழக்கச் செய்து அதை ஆவஸ்யத்தில் ஆழ்த்தி விடுகிறது. புத்திக்கு பலம் குன்றியவுடன் மனசில் பிரமாதம் ஏற்பட்டு மட்டமான இன்பங்களுடன் சமரசம் செய்து கொள்கிறது. அப்படி தொடக்கத்திலும் இறுதியிலும் ஆத்மாவை மோக்ஷத்துக்குள் ஆழ்த்தும் சுகம் ''தாமஸ சுகம்'' எனப்படுகிறது. |

வகைப்படுத்துவதற்காகக் கொடுக்கப்பட்டவை அல்ல. அதை விட நாம் விடாமுயற்சியுடன் சிறந்து சாத்வீக நிலையை அடைய அவ்வப்போது நம்மையே தெரிந்துகொள்வதற்கும் நம் நடத்தையைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்குமாகக் கொடுக்கப் பட்டிருக்கும் ''ரெடிரெக்கனர்'' ('உடனடி கணிப்புச் சுவடி') ஆகும்.

இம் மூன்று குணங்களும் விவரிக்கப்பட்டதற்குக் காரணம் என்ன என்றால் (ப்ருதிவ்யாம் புன: திவிதேவேஷு) நிலவுலகிலும் சரி வானுலகில் தேவர்களிடையேயும் சரி இக்குணங்களின் வசத்துக்கு உட்படாத உயிரே கிடையாது. எந்த உயிரும் இந்த மூன்று குணங்கள் கிழித்த கோட்டைத் தாண்ட முடியாது. பிரகிருதி (இயற்கை)யே இம் மூன்று குணங்களாலானதுதான். உள்ளபடி பிரகிருதி வெளித் தோற்றமே தாம் இக்குணங்கள்.

எனினும் எந்த இரு உயிர்களை எடுத்துக்கொண்டாலும் அந்த இரண்டும் ஒரே முறையில் புற உலகத்துடன் உறவு கொண்டு ஒரே மாதிரி நடந்துகொள்வதில்லை. ஏன் என்றால் இந்தக் குணங்கள் அவற்றை ஒரே மாதிரி பாதிப்பதில்லை. மாறுபட்ட நேரங்களில் மாறுபட்ட விகிதத்தில் அவற்றை இயக்கி விடுகின்றன. இந்த மூன்று குணங்களும் சேர்ந்து 'மாயை' எனப்படுகிறது. இதை ஸ்ரீ சுவாமியின் தியானமும் வாழ்க்கையும் என்ற நூலில் மனிதன் 'ஏற்றமும் வீழ்ச்சியும்' என்ற அத்தியா யத்தில் பார்த்துக்கொள்ளலாம். இந்த மூன்று குணங்களும் மாறுபட்ட விகிதங்களில் சேர்ந்து, தனித்தனி உயிர்களைப் பாதிக் கின்றன. இந்த மாயைதான் உயிர்களுக்குத் தனித்தன்மை கொடுக்கிறது. ஆனால் அதே சமயம் எந்த உயிரும் இம் மூன்று குணங்களை மீறியும் இருக்க முடியாது. மிக மிகக் குறைந்த—அதாவது கவனத்துக்கே வராத அளவிலாவது இவை இருந்தே தீரும்.

இந்தியாவில் வீடுகளில் கிடைக்கும் 'காஃபி' டிகாஷன் பால், சர்க்கரை என்ற மூன்று அமிசங்கள் சேராமல் தயாராக முடியாது. ஆனால் அவற்றைக் கலக்கும் விகிதம் மாறுபடும். அதற் கேற்றவாறு ஒரு கோப்பை காஃபி மற்றொரு கோப்பை காஃபி யின் ருசியிலிருந்து மாறுபட்டு இருக்கும். யார் இந்த மூன்று குணங்களையும் மீறி விடுவானோ அவனுக்கு இந்த உலகத்தின் பன்மையின் லீலை அவ்வளவுமே அந்த ஒரே பரம்பொருளாகத் தான் தோன்றும். எனவே நாம் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கணமும் நம்மைச் சோதித்துக் கொள்வோம். மட்டமான கீழ்க் குணங்களை விட்டு உயர்ந்து சாத்வீக நிலையை அடைய தொடர்ந்து இடையறாது முயலுவோம். சாத்வீக நிலையை எய்திய பிறகே நாம் இறைநிலையை அதாவது பூரண நிலையை அடைய முடியும்.

இந்த மூன்று குணங்களாகிற அளவு கோலை எடுத்துக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணன் மக்கள் உலகில் புகுந்து அவ்வளவு பேரையும் மூன்று முக்கிய பிரிவுகளுக்குள் கொண்டுவந்து காட்டு கிறார். இந்தப் பாகுபாட்டுக்கு அடிப்படை அடையாளம் ஒருவன் தன் செயல்களத்தில் எந்த மாதிரியான உடல் சாதனங்களைப் பயன்படுத்துகிறான் என்பதேயாகும். இதற்கேற்றவாறு ஹிந்து சாஸ்திரங்கள், மனித குலத்தையே நான்கு வகுப்புகளாகப் பிரிக்கின்றன. அந்தப் பாகுபாடு இந்தியாவுக்கு மட்டுமல்லாது முழு உலகத்துக்கே பொருந்தும். ஏன் என்றால் மனிதன் குணத்தைக் கொண்டு செய்த பாகுபாடு அது.

குறிப்பிட்ட, நன்கு தெளிந்த சில தனிச்சிறப்புக்கள் மனித இயற்கையின் இந்த நான்கு பாகுபாடுகளை இனம் காட்டு கின்றன. இவை அகஸ்மாத்தாகப் பிறவியினாலோ, பரம்பரை யிலோ வரவேண்டும் என்பதில்லை. அந்த நான்கு பகுப்புக்கள் வருமாறு. பிராமணர்கள்—சத்வகுணம் மேலோங்கி நிற்க ராஜஸ மும், தாமஸமும் சிறிதளவு.
க்ஷத்திரியர்கள்—ராஜஸகுணம் பெரும்பகுதி. சத்வ, தாமஸம் குறைவு.
வைசியர்கள்—ராஜஸ குணம் அதிகம். சத்வம், தாமஸம் சிறிதளவு.
சூத்திரர்கள்—பெரும்பகுதி தாமஸம். ராஜஸம் கொஞ்சம். சத்வம் இருக்குமோ என்று எண்ணும் வகையில் இருக்கும்.

நான்கு வருணங்கள்

| குணம் | பிராமணர் | க்ஷத்திரியர் | வைசியர் | சூத்திரர் |
|---|---|---|---|---|
| சத்வம் | 80சதம் | 15சதம் | 5சதம் | 5சதம் |
| ராஜஸம் | 15 ” | 80 ” | 80 ” | 5 ” |
| தாமஸம் | 5 ” | 5 ” | 15 ” | 90 ” |

இந்த நான்கு பிரிவுகள் முறை உலகம் அளாவியது. எந்தக் காலத்துக்கும் ஒத்தது. இன்றும் இவை காணப்படுகின்றன. நவீன மொழியில் சொல்லவேண்டுமானால் அவர்களை முறையே பின்வரும் விதத்தில் அழைக்கலாம். 1. ஆக்கபூர்வ சிந்தனை யாளர்கள். 2. அரசியல்வாதிகள். 3. வியாபார முதலாளிகள். 4. தொழிலாளிகள் (பொதுவுடைமை மொழியில் ப்ரோலதேரியர்கள்) இந்த வகைகளில் ஒரு வகையினரிடம் அடுத்த கீழ் வரிசையிலுள்ள வகையினர் எவ்வளவு அஞ்சு கிறார்கள் என்று நாம் எளிதாக அறிந்து கொள்ளலாம். முதலாளி களிடம் தொழிலாளிகள் பயப்படுகிறார்கள். வியாபாரிகள்

அரசியல்வாதிகளைக் கண்டு அஞ்சுகிறார்கள். அரசியல்வாதிகளோ சுதந்திரமான வலிவுபெற்ற சிந்தனையாளர்களிடம் பயப்படுகிறார்கள்.

மேலே வருகிற சுலோகங்கள், அவற்றின் சிந்தனைப் போக்குகள் இவற்றின் மூலம் ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனிடம், அவன் உள்ளப்பாங்கும் அந்தக் கரண அமைப்பும் போக்கும் 'க்ஷத்திரிய' வகுப்புக்கு உரியவனாக இருக்கின்றன என்று எடுத்துக் காட்டுகிறார். எனவே பாண்டவ ராஜகுமாரனான அவன் விரும்புகிறபடி காட்டுக்குச் சென்று தவ வாழ்க்கையில் ஈடுபட முடியாது. அவன் அதற்கு முதலில் பிராமணத் தன்மையை சாத்வீகக் குணத்தைப் பெற்றிருக்க வேண்டும். அப்போதுதான் உலகிலிருந்து விடுபட்டு தியானம் போன்ற தவ இயலில் ஈடுபட்டுப் பயன் பெற முடியும். எனவே இன்று அவனிடம் அவன் மனம்—புத்தியின் நிலைகளைக் கொண்டு பார்க்குமிடத்து அவனுக்கு உரிய ஆன்மீக சாதனை போர்க் களத்தில் சுறுசுறுப்பாக இயங்கி வருவதுதான். அதுவோ அவன் கேட்காமலேயே அவனுக்குக் கிடைத்திருக்கிறது. அதில் ஈடுபடுவதன் மூலம் அவன் தன்னுடைய ராஜஸ தாமஸ வாசனைகளை சாதித்துக் கொள்ள வகை ஏற்படும்.

வருகிற சுலோகங்களில் ஸ்வபாவம், வாழ்க்கையின் நிலை (ஸ்வதர்மம்) இவற்றால் நிர்ணயிக்கப்படுகிற கடமைகள் மிகவும் சட்டவட்டமாக (சட்டப் புத்தகம் போல்) எடுத்துக் காட்டப்படுகின்றன.

ப்ராஹ்மண க்ஷத்ரிய விசாம் சூத்ராணும் ச பரந்தப
கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவப்ரபவைர் குணை:

**18:41**

ப்ராஹ்மண க்ஷத்ரிய விசாம்—பிராமண க்ஷத்திரிய வைச்யர்களுடைய; சூத்ராணும் ச—சூத்திரர்களுடையவும்; பரந்தப—ஏ, பரந்தப; கர்மாணி—கடமைச் செயல்கள்; ப்ரவிபக்தானி—பிரிக்கப்பட்டிருக்கின்றன; ஸ்வபாவப்ரபவை—சுயத் தன்மையின் அடியாகப் பிறந்த; குணை—குணங்களால்.

ஏ பரந்தபா! படிப்பாளிகள் (பிராமணர்கள்) தலைவர்கள் (க்ஷத்திரியர்கள்) வியாபாரிகள் (வைசியர்கள்) மற்றும் உழைப்பாளிகள் (சூத்திரர்கள்) ஆகியோருக்கு அவர்கள் சுபாவத்தின் அடியாகப் பிறந்த குணங்களுக்கேற்றவாறு கடமைகள் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

முன்னே சொல்லிய சுலோகங்களில் குண வேறுபாடுகளைப் பற்றி எல்லாம் சொல்லப்பட்டன. இப்போது ஸ்ரீ கிருஷ்ண

பிரான் அவற்றை வைத்து சமூக அமைப்பைக் கணிக்கிருர். கணித்து மக்களைத் தெளிவாகப் பிரிந்த நான்கு வகைகளுக்குள் அடைத்துக் காட்டுகிருர். அதாவது பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என்று.

இவர்களுக்கு என்று தனித்தனியாகக் கடமைகள் கர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவை அவர்களுடைய சுபாவத்தை ஆதாரமாகக் கொண்டு அவர்கள் உள்ள அமைப்பில் குணத்துக் கேற்றவாறு வகுக்கப்பட்டிருக்கின்றன. நல்லது கெட்டது என்பது உடலின் தோற்றம், மயிரின் நிறம் இவற்றை வைத்து முடிவு கட்டப்படுவதில்லை. ஒருவன் வாழ்க்கையில் எப்படித் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிருன்? உலகுடன் உறவு கொள்ளும்போது எப்படி நடந்து கொள்கிருன்? என்பதற்குக் கிடைக்கும் விடையைப் பொருத்துத்தான் அவன் மதிக்கப்படுகிருன். அவைதான் அவனுடைய உண்மையான ஆளுமையை, அவன் மனம் புத்தியின் அமைப்பு, தன்மை இவற்றை எடுத்துக் காட்டும்.

தனி மனிதர்களின் உள் ஆளுமையை நன்கு சோதித்து அதன் தரத்தை நிர்ணயம் செய்த பிறகு அவர்கள் வகைப்படுத்தப்பட்டு அந்தந்தப் பிரிவுக்கேற்றவாறு வெவ்வேறு கடமைகளும் வகுக்கப்பட்டன. எனவே பிராமணர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட கடமைகள் க்ஷத்திரியர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படுவதிலிருந்து மாறுபட்டிருப்பது இயற்கையே வைசியர்கள் சூத்திரர்கள் வேலைகள் பிராமணர்—க்ஷத்திரியர்களின் காரியங்களிலிருந்து மாறுபட்டுத்தான் இருக்கும். சாஸ்திரங்கள் விதிக்கும் கடமைகள் ஒழுங்காகப் பின்பற்றப்படுமேயானுல் மேலோங்கி நிற்கும் ''தாமச'' குணம் குறைந்து ''ராஜஸம்'' மேலோங்கி வரும். மீண்டும் அதுவும் மாறி ''சத்வம்'' ஆகும். பிறகும் கூட சத்வமும் முழு வளர்ச்சியடைந்து லயமாகும் வரை சாதகன் முயற்சி செய்து கொண்டு காத்திருக்க வேண்டும். அப்போதுதான் பரமானுபவமாகிற இறுதிநிலை கிட்டும்.

ஒருவனை நன்கு கவனித்தால் அவன் செய்யும் செயல்களின் வகை, அவன் 'அகத்'தின் தரம், அவன் ஞானத்தின் ஒளி, அறிவின் தன்மை, த்ருதியில் வலிவு, ஆனந்தத்தின் வசீகரம். இவை எல்லாம் சேர்ந்து ஒருவன் வருணத்தைக் காட்டிக் கொடுக்கும். இவற்றைக் கவனித்தால் ஒருவன் பிராமண வருணத்தைச் சேர்ந்தவனு, அல்லது க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வகுப்பைச் சேர்ந்தவனு என்று முடிவு செய்து விடலாம். இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் ஒன்று சொல்லலாம். ஒருவன் சாத்வீகமாக இருக்கிருன் என்று சொல்லும்போது அவனிடம் சாத்வீக குணம் மேலோங்கி நிற்கிறது என்றே பொருள். ஏன் என்ருல் மிகவும்

சாத்வீகமான சாதுக்களிடம்கூட சில சமயங்களில் ராஜஸ தாமஸ குணங்கள் வெளியாகத்தான் செய்யும். அதே போல அபார தாமஸ குணிகளிடம் கூட சில சமயங்களில் ராஜஸ சாத்வீக குணங்கள் தோன்றுவதுண்டு.

இன்று இந்தியாவில் இருக்கிற நிலைமையில் இந்த சாதிப் பாகுபாட்டின் பொருளே பெருமளவு மறைந்துவிட்டது. பிறப் புரிமைமட்டும் சமூகத்தில் கொண்டாடப்படுகிறது. அதனுல் வெறும் தூலமான பாகுபாடு ஏற்பட்டு பல சாதிகள் கிளைத்து விட்டன. உண்மையான பிராமணன் மிகவும் சாத்வீக குணமுள்ள பண்பட்ட சாதுவாக இருப்பான். அவனுல் அவன் தன் புலன்களை முற்றிலும் அடக்கி மனதை தியானத்தில் பயிற்றி பரம்பொருள் தியானத்தில் மிக உச்ச நிலைக்குச் சென்றடைய முடியும். ஆனுல் இன்று பிராமணன் தன் சாதிப் பெருமைக்கு உரிமை கேட்கிறவனுகி விட்டான்! ஆனுல் அந்தோ! அவனுக்கு மரியாதை கிடைப்பதில்லை. ஏன் என்றுல் அவன் அதற்காக உரிய படி உழைக்கவில்லை.

மனதின் தன்மைகளால் நிச்சயிக்கப்படுகிற நான்கு சுபாவ வகைகள் இருக்கின்றன. அவற்றுக்கேற்றபடி நான்கு வகை சமூக வாழ்வுகள் ஏற்படுகின்றன. ஒவ்வொன்றுக்கும் சமூகத்தில் வரையறுக்கப்பட்ட வேலை உண்டு. அவை கீழே விவரிக்கப்படுகின்றன.

ச மோ தமஸ் தப: சௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச
ஜ்ஞானம் விஞ்ஞான மாஸ்திக்யம் ப்ரஹ்மகர்மஸ்வபாவஜம்

18:42

சம:—மன அமைதி; தம:—சுய அடக்கம்; தப:—தவம்; சௌசம்—தூய்மை; க்ஷாந்தி—பொறை; ஆர்ஜவம்—நேர்மை; ஏவ—அதுபோலவே; ச—மேலும்; ஜ்ஞானம்—ஞானம்; விஞ்ஞானம்—சாஷாத்காரம்; ஆஸ்திக்யம்—கடவுள் நம்பிக்கை; ப்ரஹ்ம கர்ம—பிராமணன் கடமைகள்; ஸ்வபாவஜம்—சுபாவத்தால் ஏற்பட்டவை.

அமைதி, அடக்கம், தவம் (நிஷ்டையுடன் கூடிய வாழ்க்கை முறை) தூய்மை, மன்னிக்கும் குணம், நேர்மை, ஞானம், சாக்ஷாத்காரம், கடவுள் நம்பிக்கை இவை எல்லாம் பிராமணர் களுக்கு அவர்கள் சுபாவத்திலிருந்து ஏற்பட்ட தர்மங்கள் (கடமைகள்).

இங்கே ஒரு பிராமணனுக்கு, அவன் சாத்வீகமாகிய இயற்கைத் தன்மையிலிருந்து (சுபாவத்திலிருந்து) பெறப்படும் தர்மங்கள் (கடமைகள்) விவரமாகக் கொடுக்கப்பட்டிருக்

கின்றன. சமம். அவனுடைய தர்மங்களில் ஒன்று. சமம் என்றால் மனதை புறப் பொருள்களில் மேயப் போகாமல் கட்டுப்படுத்துவ தாகும். நாம் புறப்பொருள்களிலிருந்து ஒதுங்கி தனித்து இருந் தாலும் நம் மனது நம்முடைய பழைய இன்பங்களின் நினைவைக் கொண்டு பொருள்களைப் பற்றி எண்ணி அவற்றிடையே திரியப் போய்விடும். இப்படி ஓடுவதை கட்டுப்படுத்துவதே சமமாகும்.

(தம:) புலனடக்கம், புற உலகப் பொருள்கள் தம் அதிர்வு களை இந்திரியங்களாகிற வாயிற்படி மூலமே நம் மனதில் ஏற் படுத்தி, நம் அமைதியைக் கெடுக்கின்றன. இந்த இந்திரியங்களை அடக்குவதே தமமாகும். தமம் உள்ள மனிதனை இந்திரிய இன்பங்கள் தருகிற பொருள்களுக்கிடையே வைத்தாலும் கூட அவை அவனை அசக்கி விட முடியாது. உண்மையான பிராமண னுக்கு உரிய தர்மங்கள் விடாமல் சமம், தமம் இரண்டையும் பயிலுவதுதான்.

தவம்—மனித சக்தி. இன்ப போகத்தின் ஆசையில் தவறான பாதைகளில் ஏராளமாகச் செலவழிக்கப்படுகிறது. வேண்டு மென்றே மனதைக் கட்டுப்படுத்தி உடலுக்கு இன்பம் கொடுக்காமல் தடுத்து, அந்தச் செலவைத் தவிர்த்து அந்த ஆற்றலை உள் வளர்ச்சிக்கும் உள் மலர்ச்சிக்கும் பயன்படுத்தும் வழியே தவம் ஆகும். சம, தமம் இவற்றின் மூலம் பிராமணன் மனதையும் இந்திரியங்களையும் அடக்கிக் கொள்கிறான். இதன் மூலம் உள் உயிர் ஆற்றல் சேமிக்கப்படுகிறது. இல்லை என்றால் அது வெறிபிடித்த இந்திரியங்கள் மூலம் இந்திரிய இன்பங்களில் வீணடிக்கப்பட்டு உயர்ந்து விட்டிருக்கும். இப்படி சேமிக்கப்பட்ட ஆற்றல் தியான வெளியில் உயர்ந்து பறக்கப் பயன்படுகிறது. செலவைக் குறைத்து, சேமித்து அந்த ஆற்றலை சரியான வழியில் பயன்படுத்த ஒருவன் உள் முயற்சி செய்கிறானே அதைத்தான் தவம் என்கிறோம். தவவாழ்க்கை பிராமண தர்மமாகும்.

சௌசம்—தூய்மை. இந்த வடமொழிச் சொல் மேல் தூய்மை உள் தூய்மையையும் குறிக்கிறது. சம தமம் இவற்றைப் பயிலுகிற ஒருவருக்கு தன் சொந்த வாழ்க்கையையும் சுற்றுப்புறத்தையும் தூய்மையாக வைத்துக் கொள்வது வாழ்க் கையை அணைக்கும் முக்கிய நிபந்தனையாம் தவம் பயிலுதல் பயிலுகிறவனை மிகுந்த கட்டுப்பாட்டுக்குட்பட்டவனாக ஆக்கிவிடும். அப்போது அவன் தன்னைச் சுற்றி எங்கேயும் அசட்டை காரணமாக குழப்பம் ஏற்பட விட மாட்டான். சுற்றி பொருள்களை, ஒழுங்கில்லாமல் சிதற விட்டுக் கொண்டு அங்கும் இங்கும் அசிங்கமாய் வைத்துக் கொண்டிருக்கும் அழுக்கு மூட்டையான மனிதன் சோம்பேறித்தனமான பழக்கங்கள் உடையவனாக இருப்பான். பிராமணனுடைய தர்மம் தன்னை

எப்போதும் சுத்தமாகவும் தூய்மையாகவும் வைத்துக் கொள்வதாகும்.

ஷாந்தி: பொறை (மன்னிக்கும் குணம்) பொறுமையாகவும், பிறர் தனக்கெதிராக செய்யப்பட்ட இன்னல்களைக் கூடப் பொறுத்துக் கொண்டு மன்னித்தும் வாழ்தல் பொறையாகும். இதுவும் பிராமணர்களின் தர்மம். அவன் உள்ளத்தில் யாரைப் பற்றியும் வெறுப்போ கோபமோ இராது. செந்தண்மை அவன் பண்பு. நன்மை தீமை இரண்டுக்கும் இடையே அவன் சமநிலை அமைதியுடன் வாழ்வான்.

ஆர்ஜவம்: நேர்மை. உண்மை, நாணயம் என்றும் சொல்லலாம். இந்தக் குணம் உள்ளவன், நடத்தை நேர்மையுள்ளதாக இருக்கும். பொய் இராது. கறவு மறைவு இராது. இந்த நேர்மை அவன் வாழ்க்கையில் அச்சமில்லாமல் வாழ உதவும். அவன் யாருக்கும் அஞ்ச மாட்டான். உயர்ந்த வாழ்வை மட்டமான முணுமுணுப்புகளுக்காக விட்டுக் கொடுக்க மாட்டான்.

மேலே கூறப்பட்ட சமதமாதி ஆறு தர்மங்களையும் பயின்று கொண்டு தன் செயல்கள் எல்லாவற்றிலும் அவற்றின் மணம் பரிமளிக்க உலகில் சாகும் வரை வாழ்வது பிராமணனுக்கு விதிக்கப்பட்ட தர்மமாம். உலக அரங்கில் எல்லோருக்கும் பலதரப்பட்ட பல சூழ்நிலைகளில் பல பேருடன் வாழ வேண்டியிருக்கிறது. பிராமணனும் வாழ்கிறான். ஆனால் அவன் எவ்விதம் நடந்து கொள்கிறான் என்ற சித்திரத்தை மேலே கண்ட ஆறு குணங்களாகிற கோடுகளும் மிக அழகாக வர்ணம் தீட்டிக் காண்பிக்கின்றன. இவை தவிர, எம்பிரான் கண்ணன் ஆன்மீக வாழ்வைக் கட்டுப்படுத்தும் மூன்று தர்மங்களை எடுத்துக் கூறியிருக்கிறார்.

ஞானம்—அறிவு. உலகம், அனுபவம் ஏற்கும் கருவிகளின் அமைப்பு. அவை உலகில் அனுபவங்கள் பெறும்போது இயங்கும் விதம், வாழ்க்கையின் சிறந்த குறிக்கோள், ஆன்மாவின் நிலை—சுருங்கக் கூறின் உபநிஷதங்கள் எடுத்துச் சொல்லும் அவ்வளவையும் பற்றி அறிவளவில் தெரிந்து கொள்வதையே ஞானம் என்று இங்கே கூறப்பட்டிருக்கிறது.

விஞ்ஞானம்—பட்டறிவு; அறிவளவில் தெரிந்து கொள்வதை ஞானம் என்றால் அறிந்து கொண்டதை அனுபவத்தில் பெறும் பட்டறிவை விஞ்ஞானம் என்கிறோம். படித்தோ கேட்டோ தெரிந்தவற்றை நன்கு புரிந்து கொண்டு சீரணித்துக் கொள்ளும் போது மனிதனுக்கு ஒரு உள் அனுபவம் கிடைக்கிறது. பிறகு அவன் வாழ்க்கையில் அந்த அனுபவம் வழிகாட்ட அதன்படி நடக்கிறான். அறிவு சொல்லித்தரப்பட முடியும். ஆனால் அனுபவத்தை மனிதன் தானேதான் பெற்றுக் கொள்ள

வேண்டியிருக்கும். படித்துப் பெற்ற அறிவின்படி வாழ ஒரு சீடன் உற்சாகம் கொண்டு வாழத் தொடங்கும்போது அவனுக்கு அனுபவஞானம் (பட்டறிவு) அதாவது விஞ்ஞானம் கிடைக்கிறது.

ஆஸ்திக்யம்—ஆழ்ந்த நம்பிக்கை. படித்து அதற்குத் தக்க நடக்க முயலும்போது அதில் ஆழ்ந்த நம்பிக்கை இல்லாமல் போனுல் வாழ்க்கையில் ஊக்கம் இருக்காது. வாழ்க்கை முழுமையும் அடையாது. இந்த உறுதியான நம்பிக்கை, தான் படித்துப் புரிந்து கொண்டபடி நடக்கத் தூண்டும் ஆற்றல். அதுவே அறிவை அனுபவமாக மாற்றி நிலைக்க வைக்கும் சூக்கும ஆற்றல். இந்த உள் ஒழுக்கம், புத்தியின் நேர்மை, களைப்பைத் தவிர்க்கும் சூக்கும ஊக்கமே ஆஸ்திக்யமாகும்.

தொடர்ந்து இடையருமல் உள் வளர்ச்சியில் ஈடுபட்டு ஞானம், விஞ்ஞானம், ஆஸ்திக்யம், இந்த முன்றையும் தேடிக் கொள்வது பிராமணன் தர்மமாகும்.

க்ஷத்திரியனின் தர்மங்கள் என்ன?

சௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயநம்
தானமீச்வர பாவஸ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம்

*18:43*

சௌர்யம்—சூரத்தனம்; தேஜ:—பலத்தின் ஒளி; த்ருதி:—உறுதி; தாக்ஷ்யம்—திறமை; யுத்தே—யுத்தத்தில்; ச—மேலும்; அபி—கூட; அபலாயநம்—ஓடாதிருத்தல்; தானம்—கொடை; ஈசுவரபாவம்—பிரபுத்தன்மை; ச—மேலும்; க்ஷாத்ரம்—க்ஷத்திரியர்களுடைய; கர்ம—வேலை; ஸ்வபாவஜம்—இயல்பிலிருந்து பெறப்பட்டவை.

சூரத்தனம், ஒளி, மன உறுதி, திறமை மேலும் அமர்க்களத்தில் முதுகு காட்டி ஓடாமை, கொடைக்குணம், பிரபுத்வம்—இவை க்ஷத்திரியர்களுடைய தர்மங்கள். அவர்கள் இயல்பிலிருந்து பிறந்தவை.

ரஜோ குணத்தின் மாத்திரை க்ஷத்திரியர்களிடம் அதிகமாக இருக்கும். கண்ணன் க்ஷத்திரியனுக்கு இலக்கணம் கூறும்போது ஒரு க்ஷத்திரியனுக்கு சட்டப்படி பிறந்திருக்க வேண்டும் என்று சொல்லவில்லை. உண்மையான ராஜகுணம் படைத்த ஒரு மனிதனிடம் என்னென்ன தர்மங்கள் இருக்க வேண்டும், கவனிக்கும்போது இருக்கின்றன என்று மட்டுமே சொல்கிருர். பகவத் கீதையில் நான்கு வருணங்களைப் பற்றிய விவரம் தனி

மனிதன் தன் செயல் களத்தில் எந்த மாதிரி குணங்களை வெளிப்படுத்துகிறான்? என்பதன் ஆதாரத்திலேயே தரப் பட்டிருக்கிறது. இந்த விவரங்களில் எல்லாம் தனி மனிதன் தன் தார்மீக வாழ்க்கைக்கு எதிரொலியாக மனத்தையும் புத்தியையும் எப்படி வெளியிடுகிறான் என்ற விவரங்கள்.

சௌர்யம், தேஜ (சூரத்தனமும் தைரிய ஒளியும்)

அதாவது வாழ்க்கையில் எதிர்ப்படும் அறைகூவல்களைச் சந்திப்பதில் காட்டப்படும் வேகமும் விடாமுயற்சியும் ஆகும். வீரத்தனமும் தேஜஸும் ஆகிய இந்த இரண்டு குணங்களைக் கொண்டவன் பிறரைப் பார்வையிலேயே தோற்றத்திலேயே ஆளும் ஆளுமை கொண்டவனாக ஆகிறான், ஆம் நிச்சயம் ஆகிவிடு கிறான்.

த்ருதி: (மன உறுதி): இதைப் பற்றி முன்னமேயே வந் திருக்கும் சுலோகங்களில் தெளிவாக்கப்பட்டிருக்கிறது. இங்கே அதற்குப் பொருள் க்ஷத்திரியனுக்குரிய திடமான மன உறுதி யாகும். அவன் ஒரு காரியத்தைச் செய்ய முடிவு செய்தால் அதற் கேற்ற வேகம் விடாமுயற்சி இரண்டையும் பெற்றுவிடுகிறான். பிறகு அவன் எந்த சோதனை வந்தாலும் சமாளிக்கத் தயாராகி விடுகிறான்—தேவையானால் வெற்றிக்குக் குறுக்கே நிற்கும் தடங்கல்களை உடைத்து நீக்கி வெற்றியை அடைகிறான்.

தாக்ஷ்யம்:

கவனமாகச் செய்யும் திறமை. இது சேனைப் படை வகுப்பில் 'கவனி' என்று சொல்கிற உத்தரவின் வடமொழிச் சொல்லாகும். எப்போதும் தயாராயிருத்தலும் சுறுசுறுப்பான கவனமும் தான் தாக்ஷ்யம். இங்கே சொல்லப்படுவது என்ன என் றால் க்ஷத்திரியன் முடிவு எடுப்பதில் எவ்வித தாமதமும் இல்லா மல் உடனே செய்யும் குணமும் அந்த முடிவை முழுவதுமாக நிறைவேற்றும் ஆற்றல் கொண்டவனாகவும் இருப்பான். அப்படிப்பட்டவன் மிகவும் சுறுசுறுப்பாக இருப்பான். எவ்வளவு ஆபத்தான போராட்டமாக இருந்தாலும் அவன் காட்டும் விடா முயற்சி மற்றவர் மனத்தில் பொறாமை ஊட்டக் கூடியதாக இருக்கும்.

போரை விட்டு ஓடாதிருத்தல்:

மேலே சொல்லப்பட்ட குணங்களை உடைய ஒருவன் ஒருபொழுதும் சுலபமாக எந்தச் சண்டை காலத்திலும் களத்தி லும் தோல்வியை ஒப்புக் கொள்ள மாட்டான். வேலையைப் பாதி யில் விட்டு விட்டு அப்பால் செல்ல மாட்டான். ஸ்ரீ கண்ணன் இங்கே பொதுவாக மக்களைப் பாகுபாடு செய்து பேசுகிறான். எனவே சொற்களுக்குப் பொருள் சொல்லும் போது விசால

மாகக் கொள்ள வேண்டும். உண்மைதான். வீரன் போர்க்களத்தை விட்டு ஓட மாட்டான். ஆனால் பொருளை அத்துடன் கொண்டு நிறுத்தி விடக் கூடாது. போர்க்களம் என்றால் துடிப்பும் திறமையும் கொண்ட மனிதன் எந்த வேலை களத்தில் புகுந்தாலும் அங்கே எதிர்ப்புக் கிளம்புமானல் மனிதர்கள் எதிர்த்தாலும் சரி, பொருள்கள், நிகழ்ச்சிகள் குறுக்கே வந்தாலும் சரி. அதைப் போர்க்களமாக கொள்ள வேண்டும். ஒரு க்ஷத்திரியன் எந்த நிலையிலும் நிலைகுலைந்து பயந்து விட மாட்டான். அவன் புகுந்த எந்தக் களத்திலிருந்தும் பின்வாங்கி ஓடிவிடமாட்டான். அவன் களத்தை விட்டுப் போகிறான் என்றால் வெற்றித் தலை முடி அணிந்து கொண்டுதான் வெளியேறுவான்.

பெருந்தன்மை—கொடைக்குணம் (தானம்) அரசோ, அரசனோ தன் ''பணப்பையின் வாய்க்கட்டை அவிழ்த்து விடாமல் மக்களுக்குப் பிரியமானவர்களாக இருக்கமுடியாது. இன்றைய நவீன காலத்தில் கூட சர்க்கார் நிதி பட்ஜெட்டைப் பார்த்தால் சட்டமன்றத்தில் பாஸ் செய்யாத அநேக துறைகளுக்கு பணம் ஒதுக்கி வைப்பதைப் பார்க்கிறோம். செயல் வீரன் கருமியாயிருக்கக்கூடாது. முடியாது. ஏன் என்றால் நண்பர்கள், உதவியாளர்கள் இவர்கள் பெருமளவில் இருந்தால்தான் வெற்றி உறுதிப்படும். ஒரு அரசன் எவ்வளவுக்கெவ்வளவு தன் நம்பிக்கையாளர்களிடம் இரக்கம் வைக்கிறானே அவ்வளவுக்கவ்வளவே அவன் பெருமை ஏறும்.

ஈச்வரபாவம் (பிரபுத்வம்) தலைமை வகிப்பவனுக்குத் தன் ஆற்றலில் நல்ல நம்பிக்கை இருக்கவேண்டும். இல்லாவிட்டால் மற்றவருக்கு வழிகாட்டி அழைத்துச் செல்லமுடியாது. இது தலைமைக்கு முதல்விதி. தலைவனுக்கு மற்ற எல்லாவற்றையும் விழுங்கிவிடக் கூடிய சுயநம்பிக்கை இருக்கவேண்டும். அப்போதுதான் மற்ற சோனி இதயங்கள் உள்ளத்திலும் தைரியத்தையும் ஊக்கத்தையும் நிரப்ப முடியும். அவனைச் சுற்றி ஒளியும் ஓட்டமும் மணம் வீசிக் கொண்டிருக்கவேண்டும். அவன் ஆளுகைக்குட்பட்ட இடத்தில் எல்லாம் அவன் அங்கே இருந்தாலே ஒரு மின் ஆற்றல் பரவ வேண்டும். பொன்னுடைகளும், நவரத்தினக் கிரீடங்களும் மட்டும் ஒருவனை அரசனாக்கமுடியாது. ஆனால் ஒன்று இந்த நகைகளும் கிரீடமும் சிம்மாஸனமும் தங்களுக்கு உரிய ஒருவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் திறமை பெற்றிருக்கின்றன! பிரபுத்வம் க்ஷத்திரியனுக்கு முக்கிய அடையாள வார்த்தையாம்.

வைசியர்கள் சூத்திரர்களின் கடமைகள் பின்வரும் சுலோகத்தில் சொல்லப்படுகின்றன.

க்ருஷி கௌரக்ஷ்ய வாணிஜ்யம் வைச்யகர்ம ஸ்வபாவஜம்
பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் 18:44

க்ருஷி கௌரக்ஷ்ய வாணிஜ்யம்—விவசாயம், (ஆடு) மாடு வளர்த்தல்; வியாபாரம் வைச்ய கர்ம—வைசியர்கள் கடமை; ஸ்வபாவஜம்—சுபாவத்துக்கு ஒத்தது பரிசர்யாத்மகம்—தொண்டை அடிப்படையாகக் கொண்ட; கர்ம—வேலை; சூத்ரஸ்ய—தொண்டருடைய; அபி—மேலும்; ஸ்வபாவஜம்—இயல்புக்கு ஒட்டியது.

பயிர்த்தொழில், (ஆடு) மாடு வளர்த்தல் மேலும் வியாபாரம் வைசியர்களுக்கு. அவர்கள் இயல்பினடியாகப் பிறந்த தர்மங்களாம். இட்ட வேலையைச் செய்து தொண்டு புரிவது, சூத்திரர்களுக்கு அவர்களின் இயல்புக்கு ஒத்து ஏற்பட்ட தர்மங்களாம்.

மனம் புத்தி இரண்டும் சேர்ந்த அந்தக்கரணம் ஒவ்வொன்றையும் மேவி நிற்கும் குணம், அவற்றை தன் ஆட்சிக்கு உட்படுத்திக் கொள்கிறது. எனவே ஒவ்வொரு மனம்—புத்தியின் இயல்பு தனித்தனியாக மாறுபட்டு நிற்கிறது. ரோட்டில் பிரமாதமாக ஓடும் கார் தண்ணீரில் என்ன செய்யும்? ராஜஸ மனது தியானத்துக்குள் பறந்து செல்லமுடியாது; சென்று சாத்வீக மனதைப் போல் சமநிலையையும் அமைதியையும் காத்துக்கொள்ள முடியாது. அதேபோல க்ஷத்திரியன் (ராஜஸவீரன்) எந்தத்துறையில் எல்லோரையும் விஞ்சி நின்று சாகஸம் புரிவானோ அங்கே வைசியனோ சூத்திரனோ அவ்வளவு திறமை காட்டி வேலை செய்யமுடியாது. வாழ்க்கையில் மிக உச்ச பதவி அடைய எல்லோருக்கும் ஒரே மாதிரியான வாய்ப்புக்கள் கிடைக்க வாய்ப்பு இல்லை. எந்த சமூக அமைப்பும் 'சம வாய்ப்புக்கள்' தான் தரமுடியும். அதன் அங்கத்தினர்கள் தங்கள் தங்கள் இயற்கை பரிசு போல் கொடுத்த திறமைகளை வளர்த்துக் கொள்ள முடியும். இந்தக் கட்டுரையை விளக்கவே தனித்தனி வகையினரான மனிதர்களுக்குத் தனித்தனி தர்மங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன.

வைசியர்கள் உள் ஊக்கத்துடன் வேலை செய்து, தங்கள் குறைபாடுகளை அகற்றிக் கொள்ளத் தக்க துறைகள் விவசாயம், மாடு வளர்த்தல், வியாபாரம்—வாணிபம் இந்த மூன்று துறைகள் தான் வியாபாரியின் இயல்புக் கேற்ற தர்மம் இது.

சூத்திரன் கடமையாக ஆகிறதுறை பக்தி சிரத்தையுடன் தொண்டாற்றுவது தான்.

ஒரு மனிதனுடைய மன அமைப்பு அவன் எந்த வகுப்பைச் சேர்ந்தவன் என்று நிர்ணயிக்கிறது. ஒவ்வொரு வகுப்புக்கும் இந்த உலகில் செய்ய வேண்டிய தர்மங்கள் குறிக்கப் பட்டிருக்கின்றன. ஒரு வகை வேலைக்குத் தகுதியானவனை

மற்ருெரு வகை வேலேயில் ஈடுபடுத்திஞல் அவன் அந்த வேலேயை மட்டும் குழப்ப மாட்டான். தன்னேயும் சீரழித்துக் கொள்வான். உதாரணமாக ஒரு க்ஷத்திரியனிடம், 'நீ கொஞ்சம் விசிறி எடுத்து விசிறு' என்று சொன்ஞல் ஒருகால் அவன் ஒத்துக் கொள்ளலாம். ஆஞல் நன்கு கவனியுங்கள் உடனே அவன் பக்கத்திலிருக்கிற ஒருவனிடம் தன் தூண்டுதலாகவே, ''சென்று ஒரு விசிறி எடுத்துவா,'' என்று உத்தரவிடுவான். அதேமாதிரி ஒரு வியாபாரியைக் கூப்பிட்டு கோவில் பூசாரி வேலேயைப் பார் என்ருல் அவ்வளவுதான் கொஞ்ச காலத்துக்குள்ளேயே அந்தப் புனித இடம் மோசமான வியாபார இடத்தைவிட மோசமாக ஆகிவிடும். தன் இயல்பின் காரணமாகவே அரசு பீடத்திலிருந்து கொண்டே வியாபாரம் செய்யத் தொடங்கி விடுவார்கள்.

நாம் நம்மைப் பற்றி நன்ருக ஆய்ந்து நம்முடைய வாசனேகளின் வகைகள். நம்மில் மேவி நிற்கும் குணங்கள் இவற்றைப் புரிந்து கொண்டு நாம் எந்த வகையைச் சேர்ந்தவர்கள் என்று முடிவு செய்து கொள்ளவேண்டும். யாருக்கும் தம்மை விடக்கீழுள்ள வகையினரைப் பார்த்து முகத்தைச் சுளிக்கவோ வெறுப்புக் காட்டவோ உரிமை இல்லே. ஒவ்வொருவரும் தன்ஞல் முடிந்த அளவுக்கு சமூகத்துக்குச் சேவை செய்கிருன். ஒவ்வொருவரும் தன்னுடைய முன்னேற்றம் செய்துமுடித்தோம் என்ற திருப்தி இவற்றிற்காக ஈடுபாட்டுடன் தன் வேலேயைச் செய்யவேண்டும். இப்படி ஒருவன் தன் வாசனேகளுக்கு ஏற்றவாறு வேலே செய்து கொண்டு வேலேகளில் தனக்கு என்று காட்டப்பட்ட தர்மங்களேக் காப்பாற்றி வருவாஞுஞல் அவன் உள்ளே நன்கு வளர்ந்து படிப்படியாக உயர்ந்து முடிவாக முழுமையை அடைவான். என்று இங்கே கூறப்பட்டிருக்கிறது.

சரியான துறையில் சரியான சூழ்நிலேயில் ஒருவன் உண்மையுடனும் நேர்மையுடனும் ஈடுபட்டு அவனுக்கென ஏற்பட்ட வேலேயைச் செய்துவந்தால் அவன் தன்னுடைய வாசனேகளே அழித்து விடுகிருன். வாசனேகள் குறையும்போது அவனுக்கு உள் அமைதியும் சாந்தியும் கிடைக்கிறது. அப்போது மேலும் மேலும் திறமையான ஒரு முக நோக்கும் தியான சக்தியும் கிடைக்கிறது இந்த வசதிகளேக் கொண்டு அவன் முழுமை நிலேயை அடையமுடியும் அதாவது ஆத்மஸ்தானத்தில் நிலேக்கமுடியும்.எப்படி?

ஸ்வேஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர:
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தச்சருணு

18:45

ஸ்வே ஸ்வே—தத்தம்முடைய; கர்மணி—வேலேயில்; அபிரத:

மனதுடன் ஈடுபட்டு ஸம்ஸித்திம்—பூரண சித்தியை; லபதே அடைகிறுன் நர:—மனிதன்; ஸ்வகர்ம நிரத:—தன் வேலையில் ஈடுபட்டு; ஸித்திம்—பூர்ணத்வத்தை; யதா—எப்படி; விந்ததி அடைகிறுன்; தத்—அதை; ச்ருணு—கேள்.

மனிதன் தன் தன் வேலையில் முழுமையாக ஈடுபட்டு பூர்ண சித்தியை அடைகிறுன். தன் வேலையில் ஈடுபட்டு பூரணத்வத்தை எப்படி அடைகிறுன்? அதைக் கேட்டுக்கொள்.

ஒவ்வொருவரும் தன் கடமையில் ஈடுபட்டு மனிதன் பூரணத்வத்தை (சித்தியை) அடைகிறுன்—நம்முடைய உணர்வுகள் கருத்துக்கள் எந்தத் தரத்துக்கு அல்லது மட்டத்துக்கு இருக்கின்றனவோ நம் மன வளர்ச்சி எவ்வளவு இருக்கிறதோ அதற்கு நேர்மையாக ஒத்துவரும்படி நடந்து கொண்டால் நாம் வரவர சுயவளர்ச்சியில் முன்னேற்றம் காண முடியும், உயர்ந்து கொண்டும் போகமுடியும்.

மனிதரை இவ்விதம் பிரித்திருப்பதை மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் அவ்வளவு சரி என்று தோன்ருது. ஆனல் செயல்வீரர்களின் சரித்திரத்தைப் பாருங்கள். இந்தச் சட்டம் எவ்வளவு சுத்தமாக மனிதர் வாழ்க்கையில் சரியாக இருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம். அது மாறுவதில்லை. அதை மாற்றவும் முடியாது.என்ற அளவுக்கு இது உண்மையாக இருக்கிறது. ஒரு கார்சிகா என்ற ஊரில் பையன் ஒருவனே ஆடு மேய்க்கச் சொன்னர்கள். அவன் படித்து விட்டு மறுத்துவிட்டு பாரீசுக்குப் போனுன். அவன் பிற்பாடு உலகம் அதுவரை ஏன் இன்று வரை கூட பார்த்திராத அளவுக்கு பெரிய மனிதர் களுள் ஒருவரானுன். அவன்தான் நெப்போலியன். ஒரு கோல்ட்ஸ்மித், மச்சில் உட்கார்ந்து செய்யுள் யாத்தானே தவிர தொழில் செய்து வளமான சுகம் நிறைந்த வாழ்வை வரவேற்க விரும்பவில்லை. ஒவ்வொருவனையும் சுபாவம் ஆளுகிறது. அந்த ஆட்சிக்கு உட்பட்டு ஒழுங்காக .நேர்மையாக வேலை செய்பவன்தான் தன் பூரணத்துவத்தைக் காண முடியும்.

தன் வாசனைகள் நிர்தாரணம் செய்கிற துறையில் ஒருவன் வேலை செய்யத் தொடங்கி அதிலேயே தன் 'அகத்'தையும் அகத்தை மையமாகக் கொண்ட பயன் விருப்பங்களையும் அர்ப்பணம் செய்து வாழ்வானுனல் அவனுக்கு 'செய்து முடித்தோம்' என்பதால் எழும் ஆனந்தமும், வாசனைகள் கரைவதால் ஏற்படும் அமைதியும் கிட்டும். முடிவற்ற பூரணப் பரம்பொருளிடம் சமர்ப்பணபுத்தியில்லாமல், வேலையில் முழுமையாக ஈடுபாடில்லாமல் அகமும் அதன் வேட்கைகளும் விட்டு விடுவது என்பது சாத்யமாகாது. பிரபுவின் இடையருத தியானம் மனதின் மங்காத நினைவாக ஆகிவிடும்பொழுது ஈடுபாடும் சமர்ப்பணமும்

எளிதாகிறது. அங்கே மனதின் பரிணும வளர்ச்சி தொடங்கி விடுகிறது.

மனிதருடைய நடையுடை பாவனை, மனத்தின் அமைப்பு, புத்தியின் நாட்டங்கள் இவற்றை அடிப்படையாக வைத்து மனிதர்களை இவ்வளவு புத்திசாலித்தனமாக வகைப்படுத்தியிருக்கிறுர்களே அந்தப் பாகுபாடு இந்தியாவுக்கு மட்டுமே பொருந்தும் என்று எண்ணக் கூடாது கொரல்ட் ஹேர்ட் சொல்லியிருக்கிறுர். ''ஆரிய—ஸம்ஸ்கிருதச் சிந்தனை சமூகத்தில் நான்கு அமைப்புக்கள் அல்லது வருணங்களை முதலில் பிரித்துச் சொல்லி இருக்கிறது. அது எவ்வளவு இந்தியாவில் உண்மையோ அவ்வளவே நமக்கும் ஊண்மைதான்!'' இந்த நான்கு வர்ணப் பாகுபாடு உலகம் அளாவியது. வாழ்க்கையில் வைத்துப் பார்த்தாலும் சரி மனிதன் பண்பாட்டு வளர்ச்சி ரீதியாகப் பார்த்தாலும் சரி.

கடமையில் ஈடுபாடுடையவன் எப்படி சித்தி அடைகிறுன்? அதை ''இப்போது கேட்டுக் கொள்'' என்கிறுர் கண்ணன்.

யத:ப்ரவ்ருத்திர் பூதானும் யேந ஸர்வமிதம் ததம்
ஸ்வகர்மணு தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ:

18:46

யத:—யாரிடமிருந்து; ப்ரவ்ருத்தி:—முன்னேற்றம்; பூதானும்—உயிர்களுடைய; யேந—யாரால்; ஸர்வம்—எல்லாம்; இதம்—இது, ததம்—வ்யாபிக்கப்பட்டிருக்கிறதோ; ஸ்வகர்மணு—தன் கர்மத்தின் மூலம்; தம்—அவனை; அப்யர்ச்ய—பூசித்து; ஸித்திம்—சித்தியை; விந்ததி—அடைகிறுன்; மாநவ—மனிதன்.

எவனிடமிருந்து இந்த உயிர்கள் எல்லாம் எழுந்து தோன்றினவோ, யாரால் இந்த எல்லாம் வியாபிக்கப் பட்டிருக்கிறதோ, அவனையே அவன் கர்மத்தால் பூசித்து மனிதன் பூர்ணத்வத்தை அடைகிறுன்.

இந்த அத்தியாயத்தில் மனிதர்களின் நான்கு பிரிவுகள் கொடுக்கப்பட்டு, அந்தந்தப் பிரிவில் ஒவ்வொரு மனிதனின் தர்மங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒரு மனிதன் தன் சுபாவத்துக்கு ஏற்றபடி சுதர்மத்துக்கு (வாழ்வில் கிடைத்திருக்கிற பதவிக்கு) உரிய வேலையைச் செய்து வருவானுனல் அவன் வாசனைகள் கழிந்துவிடுகின்றன. இப்படி வாசனுக்ஷயமும் அதன் பயனுல் நிம்மதியும் ஆனந்தமும் பெற வேண்டும் என்றுல், முழு சமர்ப்பண புத்தியுடன் வெற்றி கிட்டும்படி வேலை செய்தால் தான் அது முடியும்.

தொடர்ந்து எப்போதும் எந்த உயர்ந்த லட்சியத்தை

அடைய விரும்புகிறுமே அதை நினைவில் கொண்டு, நாம் நம் வேலையை அதிகபட்சத் திறமையுடன் செய்தோமாஞல் வாசஞக்ஷயம் ஏற்பட வாய்ப்புண்டு. அப்படி நினைவில் கொண்டிருக்க வேண்டிய குறிக்கோள் இந்த சுலோகத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. எவனிடமிருந்து இந்த உயிர்கள் வெளிவருகின்றனவோ, எவஞல் இது எல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவோ, கோக்கப்பட்டிருக்கின்றனவோ அவன்.... உடல் மனம் புத்தி என்ற மூன்று கருவிகள் வேலையில் இயங்குகின்றன. ஆஞல் அவை சடப் பொருள்கள். அவற்றுக்கு உணர்வு கிடையாது. உயிராகிய ஒளியின் கிரணம் பட்டாலே இந்த சடப் பொருள்கள் வாசனைகளுக்கு ஏற்றவாறு சங்கீதமயமாக இயங்க ஆரம்பிக்கின்றன.

இந்த உணர்வுத் தத்துவத்தை அதாவது ஆத்மாவை, சடப்பொருள்களுக்கு அவற்றினுடையது போல் காணப்படுகிற இய்க்க ஆற்றலைக் கொடுக்கிற ஆத்மாவை, விடாமல் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் என்ருல், அது வாழ்க்கைப் போரில் வருகிற எல்லாப் படபடப்புகளிலிருந்தும் தனித்து ஒதுங்கி, பாதிக்கப்படாமல் நின்ருல்தான் ஆகும். அப்படிப்பட்ட மனிதனை வாழ்க்கை ஒருபோதும் தப்புப் பிடி பிடிக்க முடியாது. நல்ல சங்கீத வித்வான் தாளம் லயத்தை மறப்பதில்லை. சுலபமாகப் பாடுகிருன். ஒரு நர்த்தகி தபலாவின் நாதத்தை நினைவில் வைத்திருக்கிருள் அழகாக ஆடுகிருள். அதைப்போல் அந்த மனிதன் வேலை செய்கிருன். அதில் நன்கமைந்த சுகமான அமைதியும் ஒரு இயக்கப்பூர்வமான அருளும் வெளியாகின்றன. அவன் அடையும் வெற்றிச் சாதனைகள் ஒரு அலௌகீகமான பூரணத்வத்தின் நிழல்படாத ஒளியைக் கொண்டு பிரகாசிக்கின்றன.

வேலை செய்யும்போது பூராவும் நாம் ஆத்ம உணர்வுடன் மனதை இடையருது இணைத்து வைத்துக் கொண்டிருந்தோமாஞல் வேலையையே பூஜையாக மாற்றி விடலாம். அப்படிச் செய்கிற மனிதன்தான் தன்னைச் சிருஷ்டித்தவனுக்கு மிக அதிகப்படியான வணக்கத்தைச் செலுத்துகிருன். மனப்பாங்கின் இந்தச் சிறுமாறுதலே கூட மிகவும் பயங்கரமான முறையில் கஷ்டம் தரக்கூடிய நிலையையும் மாற்றிவிடும். மிகவும் மோசமான கொடுமையான செயல்துறையும் பக்தியின் பவித்திர கர்ப்பக் கிரகமாக மௌனப் பிரார்த்தனை மண்டபமாக, அமைதியான தியான பீடமாக மாறிவிடும்.

மனதையும் புத்தியையும் இடையருது ஆத்மதத்துவத்தின் சந்நிதியில் வைத்துக் கொண்டு புறப்பொருள்களாலான செயற்களத்தில் கைகளையும் கால்களையும் வேலை செய்ய விட்டால், ஒருவன் 'தன் கடமைகளைச் செய்வதன் மூலம் சித்தியை அடைய முடியும்.' உள் ஆளுமை ஒருவகைப்படுகிறது.

ஒருமுகப்பட்ட அந்தக்கரணம் உள்ள மனிதன் தன் தியான சாதனையில் நிலைத்து சீக்கிரம் வளர்ச்சியை அடைகிறான்.

''அப்பொழுது நான் ஏன் சென்று தியான வாழ்வில் ஈடுபடக் கூடாது?'' என்பது அர்ஜுனனுடைய மனதில் எழுகிற நியாயமான கேள்வியாக இருக்கும். எனவே கிருஷ்ணன் பதில் அளிக்கிறார்:

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்ஸ்வனுஷ்டிதாத்
ஸ்வபாவநியதம் கர்ம குர்வந்நாப்னோதி கில்பிஷம்

18:47

ச்ரேயான்—சிறந்தது; ஸ்வதர்ம:—தனக்குரிய கடமை; விகுண:—பெருமைகள் இல்லாவிட்டாலும்; பரதர்மாத்—பிறருக்குரிய கடமையை; ஸ்வனுஷ்டிதாத்—நன்றாக நடத்தியிருப்பதைவிட; ஸ்வபாவநியதம்—தன் சுபாவத்துக்கு ஒத்து விதிக்கப்பட்ட; கர்ம—கர்மத்தை; குர்வன்—செய்து கொண்டு; ந—இல்லை; ஆப்நோதி—பெறுகிறான்; கில்பிஷம்—பாபம்.

பிறருக்குரிய கடமையைத் தான் செய்வதைவிட, பெருமைகள் (நல்ல குணங்கள்) இல்லாத போனாலும் தன் கடமையே சிறந்தது. தன் சுபாவத்துக்கு ஒத்து விதிக்கப்பட்ட கடமையைச் செய்வதனால் பாபம் ஒட்டுவதில்லை.

இந்த சுலோகத்தின் தொடக்கக் கருத்து ஏற்கனவே அறுதியாக விளக்கப்பட்டிருக்கிறது. தத்தம் வாசனைகளால் நிர்ணயிக்கப்பட்ட துறையில் வேலை செய்வது சிறந்தது; என்ன காரணம் என்றால் அங்கேதான் இருக்கிற வாசனைகள் கரைந்து மறைய வாய்ப்பு உண்டு. இருக்கிற வாசனைகளுக்கு மாறுபட்ட துறையில் வேலை செய்ய முயலும்போது அவன் வாசனைகளும் க்ஷயமாகாது! மேலும் வாசனைகளின் சுமையையும் ஏற்றுக் கொள்வான். அதனால்தான் ''குறைபாடுகள் இருந்தாலும் நன்கு செய்யப்பட்ட பிறருக்குரிய தர்மங்களைவிட, தன் தர்மமே (கர்மத்தைச் செய்தலே) சிறந்தது'' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

''சுபாவத்தினால் நிர்ணயிக்கப்பட்ட தருமங்களைச் செய்யும் போது செய்யும் மனிதன் கெடுதலைச் செய்கிறான் இல்லை. அதாவது அவன் செய்யும் வேலை அவன் மனதில் ஏதும் புதுப் பதிவை ஏற்படுத்துவதில்லை. இந்தப் பதிவுகள் ஏற்பட்டுவிட்டதானால் அவை மீண்டும் அவனை முயற்சி செய்யவும், தேடவும், நாட்டம் கொள்ளவும், வெற்றி கொள்ள வேண்டும் என்று ஆசைப்படவும் தூண்டிவிடும்.

இந்த அத்தியாயம் இறுதி அத்தியாயம் யோகாரூடனுன பகவான் தன் இயற்கைத் தூண்டுதலில் சொன்ன கருத்துக் களுக்குச் சிறந்த முறையில் செய்யப்பட்ட முடிவுரை. எனவே இதில் கீதை முழுவதன் சுருக்கம் அடங்கியிருக்கிறது. எனவே இங்கே நாம் முன்னுல் சொல்லப்பட்ட முக்கியமான கருத்துக் களை எல்லாம் மீண்டும் காண்கிறோம். (நாம் முன்னுரையில் சொல்லியபடி) இவை எல்லாம் 'அர்ஜுன வியாதியைத் தீர்ப்ப தற்கு அவசியம் தேவையானவை.

(இந்த குணப் பாகுபாடுகள், தனி மனிதன் தனித்தன்மை) இதை எல்லாம் அநேக மாணவர்களுக்கு ஒரேயடியாக ஒப்புக்கொள்வது கடினமாக இருக்கிறது. அவர்கள் சமூகம் முழுவதுமே ஒரே அச்சாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறார் கள். குழு முழுவதுமே இரும்புக் கூட்டுக்குள் அடங்கி தன் விருப்பத்தையே மறந்து உயிரில்லாத ஒரு செயற்கைக் கோடுக ளாலான ஒரு கோல அடைப்புக்குள் இருக்க வேண்டும் என்று எண்ணுகிறார்கள். ஆனுல் துரதிர்ஷ்ட வசமாக மனிதன் அபார இயக்க முள்ளவன். தடுக்க இயலாதபடி அவன் ஓடும்போது அவனுடைய கருத்துக்கள் கொள்கைகள் எல்லாம் அந்த அடைப்புச் சட்டத்தையே உடைத்துவிடும். அதனுல் சாவோ கேடோ வந்தால்கூடத் தயங்க மாட்டான். மனிதன் உள் இயற்கையும் சரி, வெளி இயற்கையும் சரி. மிகவும் ஆற்றல் வாய்ந்த ஒரு சக்தியாகும்.

இருந்தும், சந்தேகிப்பாளர்கள் 'சுதர்மத்தைச் செய்கிறவர் கள் ஒரு கேட்டையும் அடைய மாட்டார்கள்' என்பதன் தர்க்கத் தைப் புரிந்து கொள்ள பின்வரும் விஷயங்களைச் சிந்தித்தார் களானுல் மிகவும் உதவியாயிருக்கும். 1. பாம்பின் நச்சுப் பல்லில் உள்ள துளைத்துக் கொல்லும் விஷம் பாம்பையே கொல்லுவ தில்லை. 2. புளிக்கப் பொங்குகிற மதுவில் நெளியும் உயிர்நுண் புழுக்கள் மதுவைக் குடிப்பதில்லை. 3. கொசுக்களில் உள்ள மலேரிய நுண்உயிர்கள் கொசுவுக்கு முறை ஜுரத்தைக் கொடுப்ப தில்லை. அதேபோல் தனி மனிதனின் சுபாவம் அவனைக் கொல்ல முடியாது. பாம்பிடமிருந்து விஷத்தை எடுத்து மதுவுக்கு விஷம் ஊட்டப்பட்டால் அந்த உயிர் நுண் அணுக்கள் இறந்துவிடும். அதே போல் க்ஷத்திரியன் ஒருவன் பிராமண அமைப்புக்கு இடப்பட்ட கடமையைச் செய்யத் தொடங்கினுல், அவன் ''ஹரகிரி'' (தற்கொலை—ஜப்பானிய முறை) செய்து கொள் கிறுன். அர்ஜுனன் க்ஷத்திரிய வீரன். போர்க்களத்தைவிட்டு தியானம், ஜபம் செய்யக் காட்டுக்குப் போயிருந்தால் அது அவனையே அழித்துவிட்டிருக்கும்.

சுருங்கச் சொன்னுல் நம் மனதை நம் சுபாவத்துக்கு விரோத

மான துறைகளில் செலுத்துவதில் பயனில்லை. இந்த சிருஷ்டியில் ஒவ்வொருவருக்கும் விதிக்கப்பட்ட இடம் உண்டு. ஒவ்வொருவனுக்கும் மதிப்பு பெறுவது உரிமை. யாரையும் இழிவாகக் கருதக் கூடாது. ஏன் என்றால் மற்றவர்செய்யாத, செய்ய இயலாத ஒன்றை அவர்தான் செய்ய முடியும். கடவுள் சிருஷ்டியில் இரட்டிப்பு கிடையாது ஒரு புல்தளிர்கூட அநாவசியமாக சிருஷ்டியாவதில்லை.

ஒவ்வொன்றுக்கும் ஒரு உபயோகம் உண்டு. ஆம் நினைவில் இருக்கட்டும். நல்லது மட்டுமல்ல. கெட்டது என்று சொல்லப் படுபவதற்குக் கூட ஒரு பிரயோஜனம் உண்டு. எல்லாம் பகவான் எண்ணத்தை நிறைவேற்ற வந்த தோற்றங்கள். பாண்டவர்களின் பெருமை பெரிதுதான், சந்தேகமில்லை. ஆனால் கௌரவர்களின் கயமையும் ஈசுவரனின் படைப்புப் பெருமைதான். இவர்கள் இல்லாமல் இருந்திருந்தால் அவர்களின் பெருமைக்கு முழுமை ஏற்படாது. எதையும் ஒதுக்கக் கூடாது; எதையும் இகழக் கூடாது. எல்லாம் 'அவனே' 'அவன்' மட்டுமே உண்டு.

ஆனால் நமக்குக் கடமை என்று விதிக்கப்பட்டதில் கெடுதல் நிறைந்திருந்தாலும் நாம் அதைத் தொடர்ந்து செய்ய வேண்டுமா?—

கிருஷ்ணன் பதில் சொல்கிறார்:

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்ய ஜேத்
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேன அக்நிரிவாவ்ருதா:
*18:48*

ஸஹஜம்—உடன் பிறந்த (சுபாவத்துடன் பொருந்திய— கர்ம— வேலையை; கௌந்தேய—ஏ குந்தி மகனே; ஸதோஷம் அபி— குறையுடன் இருந்தாலும்கூட; ந த்யஜேத்—விடக்கூடாது; சர்வாரம்பாஹி—எல்லா முயற்சிகளுமே; தூமேன—புகையினால்; அக்நி—நெருப்பு; இவ—போல;ஆவ்ருதா—மூடப்பட்டனவே.

ஏ குந்தி மகனே, ஒருவனுக்குப் பிறவியுடன் கிடைத்த தர்மத்தை அது குறையுள்ளதாயிருந்தாலும்கூட அவன் அதை விட்டுவிடக்கூடாது ஏன் என்றால் எல்லா முயற்சிகளுமே நெருப்புப் புகையினால் சூழப்பட்டிருப்பதைப் போல தோஷத்தால் சூழப்பட்டவைதாம்.

சுபாவ சுதர்மங்களை விளக்கிய பிறகு கிருஷ்ணன் அந்தக் கருத்தின் நுண்ணிய உச்சிப் பகுதிக்குக் கட்டடம் கட்டுகிறார். அவர் அறிவுரை பொதுமை கொண்டது. யாருக்கும் எந்தக் காலத்திலும் எந்த நிலையிலும் பொருந்தக் கூடியது. மனதின்

வாசனைகளால் உந்தப் பட்ட சுபாவ கர்மம் (ஸஹஜம் கர்ம) குறைகள் சேர்ந்திருந்தால் (ஸதோஷம்) கூட. அதை விடக்கூடாது (ந த்ய ஜேத்) என்று ஸ்ரீகிருஷ்ணன் அறிவுரை கூறுகிறார்.

மேலெழுந்த வாரியாக அவசரமாகப் படிக்கும் போது இது ஆத்மீகம் அல்ல என்று ஒருவர் முடிவு செய்துவிட முடியும். ஆனால் நன்கு சிந்திக்கிறவனுக்கு (ஸஹஜம்) ''கூடப்பிறந்த என்ற சொல் புதிரை விடுவித்துவிடும்.'' கூடப்பிறந்த என்ற சொல்லுக்கும் பிறந்தபின் கிடைத்த இரண்டு சொற்களுக்கும் ஒரு பெரிய கடலளவு வித்தியாசம் இருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது: ஒருவனுடைய 'அவனுடன் பிறந்த மோசமான வாசனைகளால் நிர்ணயிக்கப்படும் வேலைகளை விடப்படாது. ஆனால் கண்ணன், ''பிறந்தபின் ஏற்ற கெட்ட வேலையைத் தொடர வேண்டும்'' என்று சொல்லவில்லை.

நம்முடைய வேலையை நிச்சயித்து, தூண்டி, வழிநடத்தி செய்விக்கும் சக்திகள் இரண்டு உண்டு. ஒன்று நம்முடன் பிறந்து நம்முள்ளிருந்தே தூண்டுவது. இரண்டாவது சூழ்நிலையில் புறத்தே இருந்து கொண்டு நமக்கு ஏற்கனவே இல்லாத ஆர்வத்தைக் காட்டி இழுத்து விடுவது. நாம் உறுதியாக நம்முள் இருந்து வரும் உடன் பிறந்த வாசனைகள் தரும் வேலை தோஷமுள்ளதாயிருந்தால் கூட அதைச் செய்யவேண்டும். ஆனால் அதே சமயம் புற உலகம் மயக்கித் தூண்டி விடும் எந்த வேலையையும் தைரியமாக விலக்கி விடவேண்டும்.

சகஜமான (கூடவே பிறந்த) வாசனைகள் வாழ்ந்தே தீர்க்கவேண்டியவை. ஆனால் நான் என்ற முனைப்பு இருக்கக்கூடாது. விருப்பம் இருக்கக்கூடாது. அதே சமயம் புதுவாசனைகள் தரக்கூடியதாய் உள்ள எந்தச் சூழ்நிலைக்குள் பிறந்திருக்கிறானோ அந்தச் சூழ்நிலை தன்னைப் பாதிக்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும். சுருக்கமாக கிருஷ்ணன் கூறுவது: சாதகன் சூழ் நிலையின் விலங்குக்குக் கட்டுப்படும் நிலையிலிருந்து விடுபட்டு இருக்கத் தொடர்ந்து முயற்சி செய்து கொண்டு விலகி இருக்கவேண்டும் கீதையின் கருத்தில் மனிதன் சூழ்நிலைக்கு எஜமானன். அதன் மேல் எவ்வளவுக்கெவ்வளவு அவன் தன் அதிகாரத்தை நிலை நாட்டுவானோ அவ்வளவுக் கவ்வளவு அவன் வளருகிறான்.

உண்மையில் 'எல்லாக் கருமங்களுமே புகையினால் மறைக்கப்படும் தீ போல குறைகளால் நிரம்பியவையே. இங்கே வேலையை ஆரம்பம் என்ற சொல்லால் குறிக்கப்பட்டிருக்கிறது. அது மிகவும் கவனத்துக்குரியது. ஆரம்பம் என்ற ஸ்மஸ்கிருதச் சொல்லுக்கு தொடக்கம் என்று

பொருள். 12ம் அதிகாரம் 16வது சுலோகத்தில் கருமத்துக்கு 'கர்த்தா' எண்ணத்தை விட்டு விட வேண்டும் என்று கூறவந்த இடத்தில் இந்தச் சொல்லே பயன் பட்டது. 'நான் செய்கிறேன்' என்கிற இடத்தில் அகந்தை மையமாகக் கொண்ட சுய அதிகாரபுத்தி இருக்கிறது எனவே அது தோஷம் நிறைந்ததாக இருக்கிறது.

தீயில் புகை இன்றியமையாத குறை. அதே போல இந்தச் செயலின் குறையும் தவிர்க்க முடியாதது. அடுப்புக்கு வெளி வாயு நிறையக்கிடைத்தால் உள்ளே எரியும் நெருப்பு புகை குறைந்து இருக்கும். அதே போல நம் இதயத்துள் தெய்வ சாந்நித்யம் அதிகமாக அதிகமாக அகம்பாவம் குறையும். பிறகு குறைகள் வந்து நம் செயலைக் கெடுக்காது. தவறான வாசனைகள் உள்ளே நிறைந்திருக்கும் போது அவற்றை எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரமாக 'நான்' என்கிற எண்ணத்தையும் 'எனக்கு வேண்டும்' என்கிற ஆசையையும் துறந்து, வேலைகள் மூலம் கரைத்து விடுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு சீக்கிரம் நம் உள்ள ஆளுமையிலிருந்து வாசனைகளின் சுமை தொலையும்.

'உடன்பிறந்த போக்குகளுக்கு ஏற்றவாறு செயல் படுவதால் என்ன பயன்?

அஸக்த புத்தி: ஸர்வத்ர ஜிதாத்மா விகிதஸ்ப்ருஹ:
நைஷ்கர்ம்ய ஸித்திம் பரமாம் ஸம்ந்யாஸேநாதிகச்சதி.
18:49

அஸக்த புத்தி—பற்றற்ற புத்தியுடையவன்; ஸர்வத்ர—எங்கேயும்; ஜிதாத்மா—ஆத்மா வெற்றி பெற்றவன்; விகதஸ்ப்ருஹ—விடப்பட்ட ஆசைகள் உடையவன்; நைஷ்கர்ம்யஸித்திம்—செயல்முக்தியாகிற ஸித்தியை; பரமாம்—மிக உயர்ந்த; ஸந்யா ஸேத—துறவின் மூலம்; அதிகச்சதி—அடைகிறான்.

எவனுடையபுத்தி எங்கும் ஒட்டாமல் இருக்கிறதோ; யார் தன்னுடைய ஆத்மாவை ஜயித்துவிட்டானோ, எவனிடமிருந்து விருப்பங்கள் பறந்தோடிவிட்டனவோ அவன் துறவின் மூலம் செயலிலிருந்து விடுபட்டு நிற்கும் மிக உயர்ந்த ஸித்தி நிலையை அடைகிறான்.

கீதையே, எதிரே உள்ள வேலையின் பிரமாதத் தன்மையைக் கண்டு குழப்பம் அடைந்த, அர்ஜுனனுக்குச் செய்யப் படும் உபதேசம். அவன் காட்டுக்குள் ஓடி தன் கருத்தில் 'துறவி'யாகி வாழலாம் என்று நினைக்கிறான் வாழ்க்கையிலிருந்தும் அதன் கடமைகளிலிருந்தும் ஓடினால்மட்டும் அது துறவாகி விடாது என்று சொல்வதுதான் கிருஷ்ணன் எடுத்துக் கொண்ட ஆய்வுப் பொருள். இங்கே இந்த சுலோகத்தில் கிருஷ்ணன் (நைஷ்கர்மய

ஸித்திக்கு) செயல் நீக்கிய நிலையானசித்திக்கு இலக்கணம் கூறுகிறுர். நாம் நம்முடைய ஞானேந்திரியங்களுடனும் உண்மையை மறைத்து மாற்றிக் காட்டும் உடல், மனம், புத்தி என்ற மூன்று உட்கருவிகளுடனும் ஒட்டாமல் இருக்கும் நிலைதான் செயல் நீங்கிய நிலையாகும். 'சுத்த உணர்வு' நிலையில் நம் வாழ்வை மீண்டும் அடைவதுதான் அந்தப் பரம நிலையாகும்.

நாம் நம்முடைய ஆத்மஸ்வரூபப் பெருமையை மறந்துவிடும் போது 'அகம்' பாவம் (பார்ப்பவன், உணர்ச்சியாளன்— சிந்தனையாளன்— இவை உடல், மனம் புத்தி மட்டத்தில் கடந்த கால அனுபவங்களின் விளைவு) தன் மாயையின் விளைவை ஏற்படுத்தி விடுகிறது. நாம் நம் உண்மைத் தன்மையை மறந்து, நாம் மாயைகளினுல் கட்டுப்பட்டிருக்கும் 'நான்' என்று நம்பி விடுகிறோம். குடித்துவிட்டு ஆடுகிறுனே அவனைப்பார்த்தால் இந்த நிலை புரிந்துவிடும். அவன் தன்னை மறக்கிறுன். சமூகத்தில் உள்ள தன் நிலையை மறக்கிறுன் மறந்துவிட்டு போதை நிலையில் இருக்கிறவரை தன்னைப்பற்றித் தவறுன கருத்தைக் கற்பித்துக் கொண்டு அந்த நிலையிலேயே செயல்படுகிறுன்.

நம்முடைய 'ஆத்ம நிலையை' அறியாதிருக்கும் போதுதான் ''நான்'' என்கிற தத்துவம் எழுகிறது. இந்த அறியாமை ஒழியும்போது பரமாநந்த நிலை, பூரணமான பேருணர்வு நிலையின் அனுபவம் ஏற்படுகிறது. அப்போது, தேவை ஒன்றும் இருப்பதில்லை, எனவே விருப்பம் எழுவதில்லை. விருப்பங்கள் இல்லையென்றுல் எண்ணங்கள் பிறந்து வளர்வதில்லை. எண்ணங்கள் கருகிவிட்டால் அவற்றின் நடைப்படைகளான உடம்பின் மூலம் வெளிப்படும் செயல்கள் இருப்பதில்லை. இந்த நிலைதான் ''நைஷ்கர்ம்ய''ஸித்தி நிலையாகும்.

உபநிஷதங்களில் விரிவாக விளக்கப்பட்டு இங்கே நைஷ்கர்ம்ய ஸித்தி என்ற சொல்லால் சுட்டப்பட்டிருக்கிற அந்தப் பேருணர்வு நிலை ''அறியாமை'' நீங்கிய ஒளிமய நிலையாகும். விருப்பங்கள் அறியாமை பெற்றெடுக்கும் குழந்தைகள். எண்ணங்கள் விருப்பங்களிலிருந்து எழுபவை. செயல்கள் புற உலக அரங்கில் ஏற்படும் அந்த விருப்பங்களின் வெளிப்பாடுகள். வேதாந்தத்தின் ஆன்ம—மனேவிஞ்ஞான மொழியில் ''அறியாமையை'' செயலின் தாத்தா தந்தைக்கு தந்தை என்று சொல்லலாம். ''ஆன்ம அறிவு'' ஏற்பட்டவுடன் அறியாமை முடிந்துவிடும். அந்த நிலையில் எண்ணங்கள் இல்லை. செயல்கள் இல்லை. இதுதான் 'முழுவிழிப்பு'' நிலை. ஏற்கனவே உடலின் மூலம் தோற்றம் தந்து கொண்டிருந்த நிலையை வைத்துப் பார்த்தால் இந்த நிலை அகர்ம நிலை (நைஷ்கர்ம்ய நிலை) அல்லது எண்ணற்ற நிலை அல்லது விருப்பமற்ற நிலையாம்.

இந்த சுலோகத்தில் கீதாசாரியன், இந்த 'செயல் நீங்கிய' நிலை லேசாக, வாழ்க்கையின் நடவடிக்கைகளிலிருந்து அவமானத்துடன் ஓடி விடுவதால் கிடைத்துவிடாது! என்று உறுதியாகக் கூறுகிறார். நமக்கு ஏற்பட்ட துறைகளில் வேலை செய்து இருக்கும் வாசனைகளைக் கழிப்பதன் மூலம் ஆத்ம சுத்தி பெறவேண்டும். அர்ஜுனன் க்ஷத்திரியன். அவனுக்குப் போர்புரிவது தர்மம். போர் புரிந்து தான் வாசனைகளைக் கழித்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் பூர்ணத்வ நிலையை, சுத்த ஞான நிலையை சீக்கிரமே அடையமுடியும்.

சர்வத்ர அஸக்த புத்தி: (எங்கும் ஒட்டிக் கொள்ளாத புத்தி) புற உலகிலுள்ள புலன்களுக்கு உரிய பொருள்களில் பற்று வைத்திருக்கும் புத்தி தனக்குள் அமைதியையே அறியமுடியாது. அது படபடப்புக்கு உள்ளாகும் அதன் பயனாக இந்த நோஞ்சான் உடல், மனது தன் திருப்திக்காக இதை அலைக்கழிக்கும்போது உடைந்து நொறுங்கிப் போகும். 'முழு மொட்டையடித்த' * புத்தி , பார்ப்பது, உணர்வது, சிந்திப்பது முதலிய செயல்களைப் புரியும் கருவிகளினால் ஏற்படும் பந்தங்களாகிய ஒட்டடைகளிலிருந்து சுத்தம் செய்யப்பட்டு, அதே மாதிரி அவற்றிற்குரிய பொருள்கள் உணர்ச்சிகள் எண்ணங்களிலிருந்து விடுபட்டு, இவற்றின் ஊடே இருந்து உயிர் தருகிற அந்தப் பரம்பொருளைக் காட்டி, தான் மறைந்து கரைந்து விடத்தக்கது.

இதுதான் உண்மையான 'அகர்ம' நிலையாகும். ஏற்கனவே தன் அறிவை நன்கு கட்டுப்படுத்திப் பழக்கிய மனிதன் தான் இதைப் பெறமுடியும்.

அர்ஜுனன் விஷயத்தில் அவன் பற்றற்று சந்யாஸம் வாங்கிக் கொள்வதாகப் பேசுவதெல்லாம் ஏதோ தெய்வீகத் தூண்டுதல்கள் போல் வேஷம் போடும் ஒட்டம்பிடிக்கும் ஆசைகளே! உறவினர்கள் அரசு இவற்றிடம் உள்ள பற்றிலிருந்து பிறந்ததே அவன் ஸந்யாஸ ஆசை. உண்மையான ஸந்யாஸம் பற்று நீங்கிய உள்ளத்திலிருந்து எழவேண்டும்.

ஜிதாத்மா: ''நான் என்ற முனைப்பை வெற்றி கொண்டவன் (அடக்கியவன்) முழுவதுமாகப் பற்றறுத்த புத்தி என்பது நடக்காதது: கனவு. சாதகன் புலனின்பம் தரும் பொருள்களை மனம் நாடும் போதெல்லாம் அதை அடக்குகிறான். அவன் உள்ளே விருப்பத்தின் லவலேசமாவது இருக்கும் வரை இது மிகவும் சிரமம். எவன் உள்ளத்திலிருந்து ஆசைகள் முற்றி

* ஸந்யாஸத்தில் தலையை மொட்டையடிப்பது இதற்கான அடையாளம்தான் உபநயனத்துக்குமுன் பிராமணச்சிறுவன் தலையில் குடுமிவைத்துக் கொள்வதும் இதற்கு அடையாளம்தான் அதன் பொருள் பிரம்மச்சாரி பரமன் பாலுள்ள பற்று ஒன்றைத்தவிர மற்ற பற்றையெல்லாம் துறந்துவிட்டான் என்பதுதான்.

லுமாகப் போய்விட்டனவோ அவன் தான் மனதை அடக்க முடியும். அப்படிப்பட்ட சாதகன் தான் புற உலகப் புலன் நாடும் பொருள்களிடம் புத்தி வைத்திருக்கும் பற்றை அறவே நீக்க முடியும்.

மனம், தான் 'நான் செய்கிறவன்' என்று எண்ணுதல் போன்ற வீண் தற்பெருமைகளின் இருப்பிடம். (கார்த்ருத்வபாவனே) புத்தி, நான் அனுபவிப்பவன். என்ற பொய்யான பேராசைகளின் இருப்பிடம். (போக்த்ருத்வ பாவனே) இந்த இரண்டும் சேர்ந்துதான் 'நான் என்கிற அகம்பாவம் உண்டாகிறது. அது புற உலகப் பொருள்களிடம் உள்ள தீவிர ஆசையால் போஷித்து வளர்க்கப்படுகிறது. நன்கு ஆய்ந்து, துருவிப்பார்ப்பதனுல் உண்மை தெரிந்து இந்த ஆசை (ஸ்ப்ருஹா) உலர்ந்து விடும்போது போக்த்ருத்வ பாவனே, கர்த்ருத்வபாவனே இரண்டும் லயமாகி ஆன்ம—அகண்ட—அனுபவம் ஏற்படும். கீதை சற்றுக் கூட அலுப்புப் படாமல் திரும்பத் திரும்ப ''ஆத்ம ஸம்யமமும், விருப்பத்திலிருந்து விடுதலேயுமே ஆன்ம முன்னேற்றத்தின் இன்றியமையாத முன் தேவைகள் என்று சொல்லி வருகிறது. இங்கே பரமலக்ஷியத்திற்கு புதுமையான அழகான இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. ஏதோ உயர்ந்த நிலேயை அடைவது என்கிற முறையில் இல்லாமல் மட்டமான கீழ்த்தரத் தூண்டுதல்களிலிருந்து முழுமையாக விடு படுதலே அது, என்று கூறப்படுகிறது.

செயல்களிலிருந்து விடுபட்டு நிற்கும் நிலேயில்தான் பரம் பொருள் அனுபவம் சீக்கிரம் கிடைக்கும். அது எப்படி? ''என்னிடமிருந்து சுருக்கமாகக் கற்றுக்கொள்.''

ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம ததாப்நோதி நி போதமே
ஸமாஸேனேவ கௌந்தேய நிஷ்ட்டா ஞானஸ்ய யா பரா.
*18:50*

*ஸித்திம்—(பூரணத்வ) சித்தியை; ப்ராப்த—அடைந்தவனுக; யதா—எப்படி; ப்ரஹ்ம—பிரம்மம் (அநந்த தத்துவம்); ததா—அப்படி ஆப் நோதி—அடைகிருன்; நிபோத—தெரிந்து கொள்; மே—என்னிடமிருந்து ஸமாஸேந—சுருக்கமாக; ஏவ—வே; கௌந்தேய—குந்தி புத்திரா; நிஷ்டா—நிலே;—ஞ்ஞானஸ்ய—ஞானத்தின்; யா—எந்த; பரா—மிக உயர்ந்ததோ.*

சித்திபெற்றவன் பிரம்மத்தை எப்படி அடைகிருன் அதை என்னிடமிருந்து தெரிந்து கொள். (அது) ஏ குந்தி புத்திரா! ஞானத்தின் பரம எல்லேயாம்.

வாழ்க்கையில் தவருன போக்குகளிலிருந்து நாம் நம்மை விடுவித்துக் கொள்வது எப்படி? அப்படி விடுவித்துக்

கொள்வதனுல் எப்படி அமைதியும் பரபரப்பற்ற தன்மையும் கிடைக்கின்றன? இந்த விஷயங்கள் இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. சடப்பொருள்கள் காட்டும் மயக்குப் பொய் வேஷங்களின் பிடிப்பிலிருந்து தனிப்பதே ஆன்ம செளந்தர்யத்தை மீண்டும் கண்டு கொள்வதாகும். மேலே வரும் சில சுலோகங்கள் சேர்ந்து ஒரு சிறந்த தொகுதியாகின்றன. இதில் சித்தி பெற்ற மனிதனைப் பற்றிய பல விவரங்கள் இருக்கின்றன. இவை பகவத்கீதையில் தொடர்ந்து சொல்லப் பட்டு வருகின்றன. நாம் தூய்மையடையும்போது அதாவது நம்முடைய புத்தி அதன் ஆசைப் பிடிப்புகளிலிருந்து விடுபடும் போது நம் மனதும் உடலும் புத்தியின் நல்ல கட்டுப்பாட்டுக்கு உள்படுகின்றன. அப்போது தான் நாம் தியானப் பாதைக்கு உரியவராகிறோம். அதுதான் மட்டமான, கீழ்த்தர 'அகம்' 'நான்' என்ற மமதைக் கருத்தைத் துறக்கும் சாதனைக்கு வழியாகும்.

எல்லா ஆசைப் பற்றுக்களையும் பூராவாகத் துறப்பது என்பது நடக்கக்கூடிய ஒன்றல்ல. சத்தியப் பொருளை உணர்ந்து அனந்த ஆத்மாவானுல்தான் இது சாத்தியம். நாம் இப்போது முயலுவது ஆத்மாவை மறைக்கும் அறியாமைத்திரையை எவ்வளவுக் கெவ்வளவு மெலிதாக ஆக்கமுடியுமோ அவ்வளவுக் கவ்வளவு ஆக்கும் வரையில் நம் பற்றுக்களை எவ்வளவு முடியுமோ அவ்வளவு குறைத்து விடவேண்டும். அதைவிடக் குறைக்கமுடியாது என்கிற அளவுவரை குறைத்துவிடவேண்டும். கிருஷ்ணன் இங்கே சொல்கிறார்—ஏ குந்தி புத்திரா! கடைசியில் தங்கும் அந்த அறியாமையின் கடைசித்திரையையும் எப்படி விலக்குவது? அந்தக் கடவுள்—உணர்வுள் அதாவது ஆன்ம நிலையில் எப்படி நிரந்தரமாக இருப்பது என்று* ''என்னிடம் சுருக்கமாகக் கேட்டுக் கொள்.''

தியான முறை இங்கே விவரிக்கப் படுகிறது. சித்தியடைந்த தியான நிலையில் அறிதல், உணர்தல், சிந்தித்தல் இம்மூன்றையும் செய்கிற கருவிகள் எந்த நிலையில் இருக்கவேண்டும் என்று இந்த் சுலோகமும் அடுத்துவரும் இரண்டு சுலோகங்களும் விளக்குகின்றன.

புத்த்யா விசுத்தயா யுக்தோ
த்ருத்யாத்மாநம் நியம்ய ச
சப்தாதீன் விஷயாம்ஸ்
த்யக்த்வா ராகத்வேஷௌ வ்யுதஸ்யச: 18:51

---

* பகவான் 'ஆத்ம வித்தையை இங்கே சுருக்கமாகச் சொல்கிறேன்' என்று உறுதி சொல்வதற்குக் காரணம் ஏற்கனவே ஐந்தாவது ஆறுவது அத்தியாயங்களில் தியான முறைகள் விஸ்தாரமாகவும் பூராவாகவும் விளக்கப் பட்டிருக்கின்றன.

புத்த்யா —புத்தியினுல்; விசுத்த்யா—சுத்தமான; யுக்த—இணைந்து; த்ருத்யா—உறுதியுடன்; ஆத்மாநம்—ஆத்மாவை; நியம்ய—அடக்கி; ச—மேலும்; சப்தாதீன்—சப்தம் முதலிய; விஷயான்—புலன் நாடும் பொருள்களை; த்யக்வா—விட்டுவிட்டு; ராகத்வேஷௌ—விருப்பு, வெறுப்பை; வ்யுதஸ்யச—விட்டுவிட்டும்;

சுத்தமான புத்தியைக்கொண்டு ஆத்மாவை உறுதியுடன் அடக்கி, சத்தம் முதலிய புலன் நாடும் விஷயங்களை ஒதுக்கி விருப்பு வெறுப்புக்களையும் விட்டுவிட்டு.

சுத்தமான புத்தியைக் கொண்டு—வாசனைகள் அற்றபுத்தி. அதாவது பொருள்களை ஈட்டவேண்டும், வைத்துக் கொள்ளவேண்டும் என்ற எண்ணங்கள் ஏற்கனவே ஒருவித இன்பத்தைக் கொடுத்து வந்தன. அவற்றை எல்லாம் மறந்த புத்தி. அதாவது இன்பம் நாடும் போக்குகள் ஒழிந்தது, இங்கே விசுத்த(முற்றிலும் களங்கமற்ற) என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

மனதையும் இந்திரியங்களையும் (கஷ்டத்தையும் சகித்துக் கொண்டு) திட உறுதியுடன் அடக்கி: தியான ஆசனத்தில் அமரும் யோகியின் உள் அமைதியையும் லயத்தையும் இந்த இரண்டும் தான் வெடிவைத்துத் தகர்க்கின்றன. அப்போது இந்திரியங்கள் திடீரென்று தியானத்தின் சங்கீதலயத்தை நாசமாக்கும் அதிர்வுகளை ஏற்கின்றன. அல்லது மனதே சில சமயம் பழைய எண்ணங்களை எண்ணி தன்னையே கவிழ்த்துக் கொள்ளமுடியும். இந்த இரண்டையும் எற்கனவே சொல்லப்பட்ட சமம் தமம் மூலம் அடக்கினுல் சாதகன் தன்னை சரியான முறையில் திருப்பிக்கொள்ள முடியும். அப்போது இப்படி வரும் எந்தத் தாக்குதலும் அவனை ஒன்றும் செய்யமுடியாது.

மனதையும் இந்திரியங்களையும் கட்டுப்படுத்த வேண்டும் என்ற கருத்து இரண்டாவது வரியில் விவரமாக விளக்கப் பட்டிருக்கிறது. புலன் நாடும் பொருள்களை (சப்தாதீன் விஷயான் த்யக்தவா) இந்திரியங்களை அடக்குவது என்பதன் பொருள் இந்திரியங்கள் நாடும் பொருள்களான சத்தம், உருவம், ஊறு, சுவை, வாசனை முதலியன காது கண்கள், தோல், நாக்கு மூக்கு இந்த வாயில்கள் மூலமாக வரவிடாமல் இருப்பதுதாம். இவ்விதம் வெளியிலிருந்து வரும் தாக்குதல்களிலிருந்து காக்கும் வகையில் மனதைச் சுற்றி ஒரு சுவர் எழுப்பப்பட்டுவிட்டாலும் மனது தனக்குத்தானே பழைய மகிழ்ச்சிகரமான சம்பவங்களை அல்லது பொருள்களை நினைத்துக் குதிக்கலாம் அல்லது தன்னுடைய விருப்புக்கள் வெறுப்புக்கள், அன்பு, வெறுப்புக் காரணமாக ஏதாவது துயரத்தை எதிர்பார்த்து அழத்

தொடங்கலாம். எனவே இப்படி அறிவுறுத்திக் கொள்ளும் மனதில் எழுச்சிகளையும் அடக்கவேண்டும்.

தொகுத்துக் கூறினால் தியான யோகி 1. வெளிநோக்கிச் செல்லும் ஆசைகள் நீங்கிப் பூரணமாக சுத்தமடைந்த புத்தி; 2. அப்படி சுத்தமாக்கப்பட்ட புத்திக்குக் கட்டுப்பட்ட மனது இந்திரியங்கள்; 3. புறப் பொருள்களுடன் இணைய ஓடாத இந்திரியங்கள்; மேலும் 4. விருப்பு வெறுப்புக்களை விட்ட மனது—இவற்றை உடையவனாக இருப்பான், இப்படிப்பட்ட மனிதன்தான் சித்தி பெறத்தக்க தியான யோகியாக முடியும்.

மீண்டும்

விவிக்த ஸேவீ லக்வாசீ யதவாக்காய மானஸ:
த்யான'யோக பரோ நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரித:
18:52

விவிக்த ஸேவீ—தனிமையை நாடுபவன்; லக்வாசீ—குறைவாக சாப்பிடுபவன்; யதவாக் காய மானஸ:—சொல், உடல், மனம் மூன்றையும் அடக்கியவன்; தியான யோகபர:—தியானம் யோகத்தில் ஈடுபட்டிருப்பவன்; நித்யம்—சதா; வைராக்யம்—வைராக்யத்தில்; ஸமுபாச்ரித:—அடைக்கலம் புகுந்திருப்பவன்.

தனிமையில் வசித்துக் கொண்டு, குறைவாகச் சாப்பிடு பவன், மனோ வாக், காயத்தை அடக்கி, தியானத்திலும் ஒருமுக ஈடுபாட்டிலும் நேரத்தைச் செலுத்தி, வைராக்யத்தில் அடைக் கலம் புகுந்து.

விவிக்த ஸேவி: தனிமையில் வசித்துக் கொண்டு; ஏற்கனவே சொல்லியபடி உடல், மனம், புத்தி ஆகிய கருவிகளைச் சரியானபடி பதப்படுத்திக் கொண்ட சாதகன் இப்போது ஒதுக்க மான ஒரு தனி இடத்தை நாட வேண்டும். இதன் கருத்து பட்டணத்தை விட்டு காட்டுக்கு ஓடவேண்டும் என்பதில்லை. 'மிகவும் குறைவாகத் தடங்கல்கள் ஏற்படக் கூடிய' இடம் என்றுதான் இதற்குப் பொருள். சாதகன் உண்மையாக முயன் றால் தன் வீட்டிலேயே கூட அம்மாதிரியான அமைதியுள்ள நேரத் தைக் கண்டு கொள்ள முடியும்.

கொஞ்சமாக உணவு உண்டு: நினைத்தபடி வயிற்றில் வைத்துத் திணிப்பதும் நல்ல சத்தான உணவை அதிகமாகச் சாப்பிடுவதும், உடலைப் பருக்க வைப்பதுடன் மூளையையும் பருமனாக்கிவிடும். அதன் நுண்புலம் கெட்டுவிடும். ஆன்மீக சாதகர்களுக்கு முதல் பாடமே 'ஆஹார விஹார யுக்தம் * தான்.

---

* காண்க: ஆறாம் அத்தியாயம் 17வது சுலோகம்

வாக்கு, உடல், மனம் இவற்றை அடக்கி: உடலே மனதின் ஆட்சிக்குள் கொண்டு வந்தாலொழிய மனதை அடக்க முடியாது. உடல் ஞான இந்திரியங்களேயும் கர்ம இந்திரியங்களே யும் (அறிவு ஏற்கும் புலன்கள், செயலாற்றும் புலன்கள்) கொண்டது. மனம் அதிகப்படி ஸ்தூலமாகத் தோற்றம் எடுப்பது தான் செயலாகும். செயலேக் கட்டுப்படுத்த வேண்டும் என்ருல் மனதைக் கட்டி நன்கு நடத்த வேண்டும். இங்கே வாக்கு எல்லா ஞானேந்திரியங்களுக்கும் பிரதிநிதியாக நிற்கிறது. உடல் என்று சொல்லும்போது ஞானேந்திரியங்கள், இந்திரிய விஷயங்கள் அனைத்தையுமே பிரதிபலிக்கிறது. இந்த இருவகை இந்திரியங்களேயும் அடக்காத வரை மனது பிடிக்குள் வராது.

உள்ளபடி மனம்தான் உடல் மட்டத்தில் இயங்கும்போது இந்திரியங்களாகிறது. அதுவே வெளியே திரியும் போது இந்திரிய விஷயங்களின் (புலன் நாடும் பொருள்களின்) பேருலமாக மாறு கிறது. மனம் உடல் மூலமாக செயல்பட்டு தானே வெளியே உண்டாக்கிய பொருள்களுடன் ஒத்திருத்தலே அடையும்போது அது புலனறிவாகிறது *(perception)* அதுவே புற உலகப் பொருள். களுடன் தனக்கு இன்பம் தேடி ஏற்ற உறவு கொள்ளும்போது செயலாகப் பரிணமிக்கிறது. செயல்களேக் கட்டுப்படுத்தி நடத்து தல், புலனறிவை சீர்ப்படுத்துதல் அதாவது புலனறிவுகள் ஏற்ப டும் போதும், புற உலகப் பொருள்களுடன் உறவு கொள்ளும் போதும் 'அகத்'தை மையமாகக் கொள்ளும் போக்கை நீக்கு தலே இங்கே அறியாமையாகக் கூறப்படுகிறது.

தியானத்தில் எப்போதும் ஈடுபட்டு: மனம் இந்திரியங் களின் மூலம் இந்திரிய விஷயங்களே நோக்கி இடையருது பாய்ந்து கொண்டே இருக்கும்போது அதன் செயல்கள், புலனறி வுகள் பெறுதல் இவற்றை அடக்க முடியாது. இந்திரிய சுகங் களேத் தேடிக் கொண்டிருக்கும்போது மனது இடைவிடாது பதற்ற நிலேயிலேயே இருந்து கொண்டிருக்கும். அந்த மனதை அமைதிப்படுத்தி வைக்கவேண்டும் என்ருல் அதற்கு நினேத் திருக்க ஒரு விஷயம்' காட்ட வேண்டும். அது எப்படி இருக்க வேண்டும் என்ருல் அதனுடன் அது மேலும் மேலும் ஈடுபட ஈடுபட மேலும் மேலும் நிறைந்த ஆன்ம இன்பம் பெற வேண்டும். அதே சமயம் மற்ற எல்லாவற்றிலிருந்தும் அது விடு பட்டுவிட வேண்டும். இந்திரிய விஷயங்களின் உலகிலிருந்து மனதை அப்பால் திருப்பி கடவுளுடன் முழுமையாக இணேத்துக் கொண்டு அவரைப் பற்றிய எண்ணத் தாரையிலேயே ஈடு பட்டிருப்பதைத்தான் தியானம் என்கிருேம்.

வைராக்யத்திடம் அடைக்கலம் புகுந்து (வைராக்யத்தின் ஆளுகையில் இருந்து) வைராக்யம் என்பது மனமகிழ்வு தரக் கூடிய பொருளே வேண்டாம் என்பது அல்ல. அது ஒரு மனேநிலே.

அதைப் பெற்றுவிட்ட மனது புறப்பொருள்களிடம் இன்பம் தரும் ஒளி கிடையாது என்று அறிந்து கொண்டு அந்த ஞானத்தின் பயனுய் தன்னிடமே வந்து சேரும். பொருளிலிருந்து நாம் விலகி ஓடினுல் அது வைராக்யம் ஆகாது. உண்மையான வைராகியிட மிருந்து புறப்பொருள்கள் வேறு வழியின்றி சொல்ல முடியாத சங்கடம் கொண்டு ஓடிவிடுகின்றன.

புற உலகத்துடன் நாம் கொள்ளும் 'உறவிலும்கூட' கிடைப்பதும்—வேண்டுவதும் (தரவும்—தேவையும்) (*Supply-and Demand*) சித்தாந்தம் உண்மையாயிருக்கிறது. குடிகாரனுக்கு எதிரே, கள் மொந்தைகள் ஊர்வலம் வருகின்றன. குடிக்காத வனைக் கண்டால் அலமாரியிலுள்ள போத்தல்களும் ஓடி மறைந்து விடுகின்றன. வைராக்யம் இல்லாமல் மனம் ஒரு நாளும் வளர முடியாது. ஏன் என்ருல் மனம் தன் இன்றைய நிலை யிலிருந்து, வளரும் ஆற்றலையும் பொறுத்துத்தான், வளரும். எந்த நேரத்தை எடுத்துப் பார்த்தாலும் மனதின் வளர்ச்சியைத் தடைப்படுத்துவது அது வைத்திருக்கும் சுவைகளின் உலகமாகத் தான் இருக்கும்.

ஒருவனிடம் உள்ள பழைய சுவைகள் புத்தியின் புது 'கனவு கள்' காரணமாக மாயும். அப்போது புதுச் சுவைகள் எழும். அப்போது பழைய உலகமும் அதன் பொருள்களும் மறைந்து புதுச் சுவைகளுக்கு உரிய புது உலகம் திடீர் என்று எழுந்து வரும். நான் பொல்லாதவனுக இருக்கும்வரை என் அறையில் என்னைச் சுற்றி சிற்றின்பப் பிரியர்களும் சுகபோகிகளும் நிறைந்திருப்பார் கள். நான் என் போக்கை மாற்றிக் கொண்டு மனம் செலுத்தி சமூக சேவை செய்யத் தொடங்கினேன். பழைய சோம்பேறிகள் போய்விடப் புதிதாக அரசியல்வாதிகளும் சமூகத் தொண்டர் களும் அந்த இடத்தில் வந்து சேர்ந்தார்கள். அதேபோல் நான் ஆன்மீக வளர்ச்சியில் சுவை கொண்டு முன்னேறத் தொடங்கி னேன். அதிகார ஆசையால் பீடிக்கப்பட்ட அரசியல்வாதிகளும், பொருமையும் போட்டியும் கொண்ட சமூகத் தொண்டர்களும் சிந்தனையாளர்கள், ஆன்மீக அருளாளர்கள் இவர்களுக்கு இடத்தைக் கொடுத்துவிட்டுப் பிரிந்து போய் விட்டார்கள். மனம் வளரும்போது அது தன் பழைய விளையாட்டுச் சாமான் களை விட்டுவிட்டு மிகவும் உயர்ந்த லயங்கள் கிடைக்கக் கூடிய சிறந்த துறைகளுள் புகுகிறது என்பதற்கு (நான் சொன்ன) இந்தச் செயல் நல்ல தரமான எடுத்துக்காட்டாகும். தொகுத்துக் கூறின் உயந்த வாழ்வு விரும்பும் ஒரு உண்மையான சாதகன் தனிமையை நாட வேண்டும். குறைவாகச் சாப்பிடவேண்டும். பேச்சை மனதை, உடலை அடக்க வேண்டும். வைராக்யம் கொள்ளவேண்டும். இலக்கை நோக்கி உயர உண்மையாக தீவிர ஆசைப்பட வேண்டும்.

மனிதனுடைய உள்ள ஆளுமை நிலையான சில மதிப்பீடு களின் ஆதாரத்தின் மேல் அமைந்திருந்தால்தான் இந்த முயற்சி கள் ஒரு வெற்றித் திருக்கோயிலைக் கட்ட முடியும். அவை பின்வரும் சுலோகத்தில் எண்ணிச் சொல்லப்படுகின்றன.

அஹங்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம்
விமுச்ய நிர்மம: சாந்தோ ப்ரஹ்மபூயாய கல்பதே:

*18:53*

அஹங்காரம்—'தான்' என்ற முனைப்பு; பலம்—பலம்; தர்ப்பம்—கர்வம்; காமம்—ஆசை; க்ரோதம்—கோபம்; பரிக்ரஹம்—பிடுங்கிச் சேர்க்கும் ஆசை; விமுச்ய—விட்டுவிட்டு; நிர்மம்—என்னுடையது (மம) என்ற எண்ணம் இல்லாமல்; சாந்த:—அமைதியாக; ப்ரஹ்மபூயாய—பிரம்மமாவதற்கு; கம்பதே—தகுதியுடையவனுகிறுன்.

தன் முனைப்பு (அஹங்காரம்) பலம், கர்வம், ஆசை, கோபம், பிடுங்கிச் சேர்க்கும் ஆசை, மம காரம் ஆகியவற்றை விடுத்துவிட்டு எவன் அமைதியாக இருக்கிறுனே அவனே பிரம மாகிற தகுதி பெறுகிறுன்.

சென்ற சுலோகத்தில் தியானயோகியின் வெளித் தளங் களில் என்னென்ன தன்மைகள் இருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் அவனுடைய உள்ளே சேரவேண்டிய குணங்களின் பட்டியல் தரப்படுகிறது.

இந்தப் பட்டியலில் உள்ள அவ்வளவையும் தனித்தனியாக எடுத்துக் கொண்டு 'அவ்வளவா?' என்று எண்ண வேண்டாம். ஒரே ஒரு அறியாமைக் கருத்தின் பல உருவங்களே அவ்வளவும். அதாவது கர்த்ருத்வபாவனை ''நான்தான் செய்கிறவன்'' என்ற எண்ணம். 'அஹம் பாவனை'. இந்தச் ''செயல் புரிகிறவன்'' என்ற கருத்து ஏற்பட்டவுடன் அதைத் தொடர்ந்து, 'அஹத்தை மையமாகக் கொண்ட வீண் பெருமை எண்ணங்கள் வளர் கின்றன. அவைதான் ''பலமாக''—அதாவது போராட, சண்டை யில், முயற்சி செய்ய, ஆண்மை காட்ட, ஆவல்களையும் ஆசைகளை யும் பூர்த்தி செய்ய—மாறுகின்றன. பலம் கொண்ட அஹம், ஒவ்வொரு வெற்றியின் போதும் மேலே மேலே கர்வத்தை அடுக்கிச் சேர்த்துக் கொண்டே போகும்.

மனிதனுக்கு ''பலமும்'' ''கர்வமும்'' ஏறினல் ''காமம், ''குரோதம்'' என்ற இரண்டு பிசாசுகளும் இயற்கையாகவே, எங்கே என்று காத்துக் கொண்டிருக்கும். பிறகு அவன் பதற்ற மும் அலைவும் கொண்டு பித்துப் பிடித்துத் தாறுமாருக ஓடும் இயந்திரமாகி விடுவான். அவனுக்குள்ளேயும் ஆரவாரம்,

வெளியேயும் சமூகத்தில் அவனுல் கலவரம்! ஏன் என்ருல் அவன் சமூகத்தில் புகுந்து கொள்ளையடித்துச் சேர்த்து வைத்துக் கொள்ள அலேவான். அதைத்தான் 'பரிக்ரஹம்'என்கிருேம்.

மேலே குறித்த ஆறுமே கந்த்ருத்வ பாவனையின் உருவங்கள் தான். ஸ்ரீ கிருஷ்ணன் இந்த ஆறையும் விட்டுவிட்டு தியான சாதகன் 'மம' காரம் நீங்கியவனுகவும் உள் அமைதி பெற்றவனுக வும் ஆகவேண்டும் என்கிருர். இந்த அமைதி மயான அமைதியோ அல்லது பாலேவனத்தின் மௌனமோ அல்ல. ஞானத்தின் பக்குவ நிலேயில் விளேகிற அமைதி அது. முழுமைத்தளத்தில் நாம் பெறும் பேரின்பம் அது.

அழியும் பொருள்களிடையே அழியாத மாருத இன்பத்தைத் தேடி அலேந்து ஆரவாரம் செய்யும் இயல்பு கொண்டது இந்த 'அஹம்' பாவனே. இந்த அமைதியற்ற பரபரப்பு பதற்றம் எல்லாம் அதன் திருவிளேயாடலே. இந்த 'நான் செய்கிறவன்' என்ற பாவனேயும் புலனின்பங்களே நாடி இடையருது ஆட்டம் போடும் முயற்சிகளும் விட்டு விடப்படும் போது சாதகன் தனக்குள்ளேயே ஒப்பிட்டுப் பார்க்கத் தக்க ஒரு அமைதியை உணர்கிருன். இப்படி மாறியவன்தான் அறிவின் காரணமாக கட்டுப்பாட்டின் மூலமும் முழுவதுமாக மனம் தெளிந்த வளர்ச்சி உச்சிக்கு ஏறுவதற்குத் தேவையான நடுநிலேமையையும் சமநிலேயையும் பெற்றவனுக ஆகிருன். இந்த சுலோகம் 'அவன் சித்தியை, அதாவது பூரணத்துவத்தை அடைந்து விட்டான் என்று சொல்லவில்லே. கவனியுங்கள். அது திட்டவட்டமாக அப்படிப்பட்டவன் பிரம்மமாகத் தகுதி யுள்ளவனுகிருன் என்றே சொல்கிறது. முடிவாக அடைய வேண்டிய ஆத்ம சாக்ஷாத்காரத்துக்கு இது ஆரம்பத் தயாரிப்பே. அவ்வளவுதான்.

வளர்ச்சியின் அடுத்தபடி எது? பகவத் கீதை அதை பின் வருமாறு விளக்குகிறது:

ப்ரஹ்மபூத ப்ரஸந்நாத்மா ந சோசதி ந காங்க்ஷதி
ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம்.

*18:54*

ப்ரஹ்மபூத—பிரம்மமானவன்; ப்ரஸந்நாத்மா—சந்தோஷ அமைதி யுடைய மனத்தினன்; ந—இல்லே; சோசதி—கவலேப்படுகிருன்; ந—இல்லே; காம்க்ஷதி—விரும்புகிருன்; ஸம:—ஒரே மாதிரி; ஸர்வேஷு—எல்லா; பூதேஷு—உயிர்களிடத்தும்; மத்பக்திம்—என்னிடம் பக்தியை; லபதே—பெறுகிருன்; பராம்—உயர்வினும் உயர்ந்த.

பிரம்மமாக ஆகியவன் தன்னுள் அமைதியின்பம் கொண்டவனுக, வருந்துகிறதுமில்லை; எதையும் விரும்பித் தேடுவதுமில்லை. எல்லா உயிர் களிடமும் சமமாக இருந்து கொண்டு அவன் என்னிடம் உயர்ந்ததிலும் உயர்ந்த பக்தியை அடைகிருன்.

'அகம்' பாவனையையும் அதன் பல உருவத் தோற்றங்களையும்—அதாவது மேல் சுலோகத்தில் சொன்ன பலம், தர்ப்பம், புலனின்ப வேட்கை, ஆசை, உரிமை சேர்க்கும் வேகம் இவற்றை எல்லாம் கரைத்து அழித்து விட்ட பிறகு சாதகன் தனக்குள்ளே முன்னைவிட அதிக அமைதியை உண்டாக்குகிருன். ஏன் என்ருல் அவன் அப்போது இந்திரியங்களின் தவருன போக்கினுலும் மன, புத்தியின் தவருன வாழ்க்கை மதிப்பீடுகளாலும் ஏற்பட்டிருந்த குழப்பங்களிலிருந்து விடுதலை அடைந்திருக்கிருன். புதிதாகக் கிடைத்த இந்த அமைதி ஒரு விதத்தில் ஆத்ம சம்யமத்தினுல் கிடைத்த செயற்கையான அமைதி தான். ஆனுல் அதை உறுதியான முயற்சிகள் மூலம் விடாமல் கண் காணித்தும் வலுப்படுத்த வேண்டும்.

தொடர்ந்த ஒரே மாதிரியான வலுத்த சுயமுயற்சிகளால் உள்ளே கிடைத்த, ஏற்கனவே இல்லாது கிடைத்த இந்த அமைதியை அதிக நேரம்வரை நிலைநிறுத்தி மிகவும் உன்னிப்பாகக் காப்பாற்ற வேண்டும். ஏன் என்ருல் மகிழ்ச்சியும், துன்பங்களும் வெளி உலகிலிருந்து தொடர்ந்து நம் உள்ளத்தைத் தாக்கிக் கொண்டே இருக்கும். நம்மால் அவைகளை ஒன்றும் செய்ய இயலாது. கர்த்ருத்வ (நான் செய்கிறேன் என்கிற) பாவனை போய் விட்டாலும், 'நான் நுகர்கிறேன்' என்கிற போக்த்ருத்வ பாவனை போகாது இருந்து கொண்டு தியானம் செய் பவனை நச்சாக சரித்துவிடும். சில புழுக்களை இரண்டாக வெட்டினுல் இரண்டு துண்டும் உயிருடன் தனித்தனி புழுவாகிவிடும். ஒவ்வொரு புழுவும் இரண்டு இரண்டாகிவிடும். அதேபோல 'அஹம்' காரத்தின் ஒரு பகுதியான கர்த்ருத்வ பாவனையை வெற்றி கொண்டு விட்டாலும் அதன் மற்ருெரு பகுதியான போக்த்ருத்வ பாவனையைப் பற்றியும் விழிப்புடன் இருக்க வேண்டும். இல்லை என்ருல் அந்த மிஞ்சிய பகுதி, அதிக உடல் நலம், பலத்துடன் உயிர்த்து எழுந்து விடும். அது அதிக பலசாலியாகவும் அதிக ஆபத்தை விளைவிக்கக் கூடியதாகவும் இருக்கும்.

ப்ரஹ்மபூத: சாஸ்திரங்களில் அந்தப் பரமசுத்த உண்மைத் தத்துவத்தைப் பற்றி படித்து சிந்தித்து நன்கு தெரிந்து கொண்ட வனை இங்கே ப்ரஹ்மபூத: என்று குறிப்பிடப்பட்டு இருக்கிறது. இதற்கு, பிரம்மமாக ஆனவன் என்று பொருள் செய்துவிடக் கூடாது. சாஸ்திரங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிற பிரம்மத்தை யும் அதன் வர்ணனையையும் முழுமையாக நம்பி பிரம்மம் இருக்கிறது என்று உறுதி கொண்டவனை இங்கே 'பிரம்மபூத' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆன்ம உண்மை தெரிந்த பிறகு சீடன் மனதின் பதற்றம் குறைகிறது. ஏனென்ருல் பதற்றம் நாம் நம்மை அனுபவம் ஏற்கும் கருவிகளுடன் இணைத்துக் கொள்வதனுல் ஏற்படும் குழப்பங்கள் மூலமாக வருவதுதான். புத்தி எவ்வளவுக்கெவ்வளவு நமக்குள்ளே இருக்கும் இறைத்

தத்துவத்தை உணர்ந்து கொள்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது சடப் பொருள்களுடன் இணைந்து அவதிப்படுவதை நிறுத்தி விட்டு ஒதுங்கும்; அவ்வளவுக்கவ்வளவு அதை இந்திரியங்கள், உணர்ச்சிகள் எண்ணங்கள் அதைப்பாதிக்காது. அவன் பிரஸந்நாத்மா ஆகிறான்.

படிப்பின் வாயிலாக பிரம்மத்தைப் பற்றிய அறிவு பெற்ற ஒரு சாதகன் மனனம் அல்லது சிந்தனையின் பலனாக அந்த அறிவை உணர்வாக்கிக் கொள்கிறான். அகங்காரமும் ஓரளவு விலகிவிடுகிறது. அப்போது அவனுக்குக் கவலையிருந்தும் விருப்பத் திலிருந்தும் விடுபட்டு தனியே அமர்ந்து நிற்கும் ஆற்றல் கிடைக்கி றது. அவன் (ந சோக்ஷி) கவலைப்படுகிற நிலையில் இல்லை. ஏன் என்றால் தனக்குள் அவனுக்கு ஒரு குறைவும் தென்படுவதில்லை. குறைவை அவன் கர்வம் பிடித்த அஹம்பாவம் இருந்த போது உணர்ந்து கொண்டிருந்தான். இப்போதோ ஏதோ குறைவு இருக்கின்றது. என்கிற எண்ணம் இல்லாதபடியால் அவன் புத்தி தாற்காலிகப் பூர்த்திக்காகவும், திருப்திக்காகவும் புதிது புதிதான திட்டங்களை வகுக்கிறதில்லை. அதாவது புது விருப்பங்களை ஏற்றுக் கொள்வதில்லை. பிறகு கவலைப்படாதவன் இனி மகிழ்ச்சிக்கு ஏதும் வேண்டும் என்று நினைக்காத காரணத்தால் (ந காங்க்ஷிதி) எதையும் விரும்பப் போவதுமில்லை.

அலைவற்ற அமைதி கொண்ட சாதகன்—அறிவு பெற்றதன் காரணமாக எதையும் விரும்பாமல் புறப்பொருளை நம்பாமல் தனியாக ஒரு இன்ப ஊற்றைக் கண்டு கொள்கிறான்—அவன் உள்ளே இறையுணர்வு நிரம்பித் தளும்பும் காரணத்தால் வாழ்க் கைக்குப் புதுவகை மதிப்பீடுகளை ஏற்படுத்திக் கொள்கிறான். எனவே அவன் தன்னுடைய பார்வையில் ஒரு சமத்வத்தை ஏற் படுத்திக் கொள்கிறான்.[1]

இப்படிப்பட்ட சாதகன் என்னிடத்தில் உயர்வினும் உயர்ந்த (பரம) பக்தியை அடைகிறான். ஏற்கனவே முழுமையான ஒரு[2] அத்தியாயத்தில் பக்தியைப் பற்றிப் பேசப் பட்டிருக்கிறது. அதில், சாஸ்திரப்படி உயர்ந்த கொள்கையுடன் நாம் இணைந்திருக்கும் தன்மையின் அளவைக் கொண்டே பக்தி

---

* சில சாதகர்கள் அல்லது சாதுக்கள் முதலில் துறவு, இறைவனைத் தேடிப் போதல் இவற்றில் முன்னேறிக் கொண்டிருக்கும் போதே திடீர் என்று எல்லா வற்றையும் விட்டுவிட்டு தூய காவி உடைகளையும் நீக்கிவிட்டு புலனின்ப வாழ்வில் ஈடுபட்டுவிடுவதைப் பார்க்கிறோம். காரணம் இந்த மனோநிலைதான். அவர்கள் இந்தப் போக்த்ருத்வ பாவனையை பூராவாக சாதனையின்போது வெற்றி கொள்ளவில்லை.

---

[1] அத்தியாயம் 5 சுலோகங்கள் 18, 19, 20.
[2] அத்தியாயம் 12.

மதிப்பிடப்படுகிறது என்று பார்த்தோம். அந்தப் பரம்பொருளுடன் தாதாத்ம்யம் அடைய வேண்டும் என்ருல் நாம் உள்ளேயும் சரி வெளியுலகத்திலும் சரி நமது ஆற்றலை அழித்த பழைய போக்குகளை விட்டுத் தள்ள வேண்டியிருக்கும்.

இதற்கு முந்திய சுலோகத்தில் ஆசைப் பிணைப்பை விடுவதற்கான வழி சுட்டப்பட்டது. அங்கே நாம், 'தன் உள் அமைப்பிலேயே வெளிப் பொருள்களிலிருந்து விலகியிருக்கும் ஆற்றலை வளர்த்துக் கொண்டவன் மட்டும்தான் இந்த அழியும் பொருள்களின் ஊடே லீலை புரிந்து கொண்டிருக்கும் அந்த அழியாப் பரம்பொருளுடன் தாதாத்ம்யம் ஏற்படுத்திக் கொள்வதில் வெற்றியடைய முடியும்,' என்று பார்த்தோம். பார்வையின் விசாலம், அன்பின் எல்லைகளை மீறும் குணம், புலன்களுடன் இணைந்து இன்பம் நாடும் போக்கை விட்டு விடுதல்—இவை எல்லாம் சாதகன் உள்ளத்தில் பரமனிடம் பரமபக்தியை ஏற்படுத்த மிகவும் தேவையானவை. இதைத்தவிர உண்மையை நோக்கிச் செய்யப்படும் யாத்திரையில் இன்னும் ஒரு கட்டம் உண்டு.

திட்டமாக அந்தக் கட்டம் எது?

*பக்த்யா மாமபிஜாஞதி யாவாந்யஸ் சாஸ்மி தத்வத:*
*ததோ மாம் தத்வதோ ஞாத்வா விசதே ததநந்தரம்*
*18:55*

பக்த் யா—பக்தியினுல்; மாம்—என்னை; அபிஜாஞதி—அவன் என்னை அறிகிருன்; யாவான்—எது, ய:—யார்; ச—மேலும்; அஸ்மி—இருக்கிறேன்; தத்வத:—தத்துவபூர்வமாக; தத:—பிறகு; மாம்—என்னை; தத்வத:—உண்மையில்; ஞாத்வா—அறிந்து; விசதே—புகுகிருன்; ததீ—அதற்கு; அனந்தாம்—பிறகு.

பக்தியினுல் அவன் என்னை தத்துவபூர்வமாக, நான் எது என்றும் யார் என்றும் அறிகிருன். என்னை என் தத்துவ (உண்மை) நிலையில் அறிந்து கொண்டு அதற்குப் பிறகு என்னுள் (பரம்பொருள் தத்துவத்துக்குள்) புகுந்து விடுகிருன்.

பக்தியினுல் அவன் என்னை அறிகிருன்: பக்தி, என்பது பரமனிடம் நாம் வைக்கும் சுத்த அன்பு என்று நாம் ஏற்கனவே விளக்கியிருக்கிறோம். ஒரு அன்பன் அன்புக்குரிய நபருடன் எவ்வளவு லயமாகிருன் என்பதை வைத்துத் தான் அன்பு அளக்கப்படுகிறது. இப்போது 'நான்' என்ற இந்தத் தன் ஜீவன் மேலே சொல்லப்பட்ட வகையில் தேவையான குணமாற்றங்களைப் பெற்று ஆன்மாவைத் தேட ஆரம்பிக்கிறது. மேலும் மேலும் ஆத்மாவுடன் தன் ஒருமைப்பாட்டைக் கண்டு கொள்

கிருன். அப்போது மேலும் மேலும் திடமாக தன்னிடம் உள்ள ஆத்மாவின் தன்மையை உணர ஆரம்பிக்கிருன். அந்த சாதகன் 'நான் யார்' என்றும் எது என்றும் தத்துவபூர்வமாக உணர்ந்து கொள்கிருன்.

பகவத் கீதை முழுவதும் கண்ணன் 'நான் என்ற சொல்லை இறுதிக் குறிக்கோளான பரம்பொருளைக் குறிக்கவே பயன்படுத்தியிருக்கிருர். அவர் அறவுரைகளில் வந்திருக்கிற 'நான்' 'என்னுடைய' என்ற சொற்கள் பிரபு கிருஷ்ணன் என்ற தனி நபரைக் குறிக்கவில்லை. இது பகவானே தன் பக்தர்களுக்குப் புத்துயிர் ஊட்ட எனப் பாடப்பட்ட கீதம். இந்தப் பிரதிப் பெயர்ச் சொற்கள் பரமாத்மனையே குறிக்கின்றன. ஆத்மனை அறிதல் என்ருல் அதன் தன்மையையும், அதன் அங்க அடையாளங்களையும் முழுமையாக அறிதல் என்று பொருள். எல்லா சாத்திரங்களின் பொருளும் இதுதான். ஆனுல் அவற்றைப் படிப்பதனுல் அறிவளவில் அதைப் புரிந்து கொள்வோமே தவிர, தத்துவப்பூர்வமாக அதாவது 'அப்படியே உணர்வது' என்பது, அதாவது வாழும் அனுபவமாக இராது.

பிறகு என்னை தத்வபூர்வமாக அறிந்து—பேருணர்வின் ஒளி மெதுவாக விளங்க, விளங்க உடல் முதலிய கருவியுடன் நம் இணைப்பாகிற அறியாமையின் திரைகள் விலக விலக நமக்கு இந்த 'அனுபவம்' வரும். அப்பொழுது நாம் பரமாத்மனை முழுமையாக அறிவோம். நம் தனி இருப்பு, 'நான்' என்ற இந்த அகந்தை, நின்று போகும். அப்போது நாம் கண்ணனுக்குள் புகுந்து விடுவோம்.

இங்கே 'புகுதல்' என்பது ஒரு வீட்டுக்குள் புகுவது போல் இல்லை. அங்கே வீடும் புகுபவனும் தனி; புகுபவன் முதலில் வீட்டில் இல்லை. இப்போது புகுந்து அங்கே சேருகிருன். ஆனுல் இங்கேயோ இறைப் பேருணர்வில் புகுவதற்குத் தனியாக 'நான்' ஒன்றும் கிடையாது. 'கனவு' காண்பவன் விழிப்பு நிலைக்குள் புகுந்தான்' என்று சொன்னேமானுல் எந்தப் பொருளில் சொல்வோமோ அதே பொருளில்தான் இங்கேயும் 'ஜீவன் பரமனுக்குள் புகுந்து விடுகிருன்' என்று சொல்லப்படுகிறது. கனவு காண்பவன் விழிப்பு நிலைக்கு வந்த பிறகு தனித்து இருக்க மாட்டான். ஏன் என்ருல் அவரேதான் விழித்திருக்கிறவனும். அதைப் போல இந்தத் தனி ஜீவன் பரமனுக்குள் புகுந்து விடும்போது அவன் தனித்தன்மை இராது. அது 'நான் தனி' என்று கொண்டிருந்த பொய் பாவனை மடிந்து விடும். அது அப்போது தன் பிரம்மநிலையை உணர்ந்து கொள்ளும். அந்த நிலையில் விழித்துக் கொள்ளும் 'கிருஷ்ண உணர்வுக்குள் முழுகி மறைந்துவிடும்!

ஜீவ உலகுக்குத் தொண்டு செய்யாமல் ஈசுவர பக்தி ஒருகாலும் முழுமை பெறுது.

ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்யபாச்ரய:
மத்ப்ரஸாதாதவாப்நோதி சாச்வதம் பதமவ்யயம்

18:56

சர்வகர்மாணி—ஏல்லாச் செயல்களை; அபி—கூட; ஸதா—எப்போதும்; குர்வாண—செய்து கொண்டு; மத்வ்யபாச்ரய:—என்னிடம் அடைக்கலம் புகுந்து; மத்ப்ரஸாதாத்—என் அனுக்ரஹத்தினல்; அவாப்னேதி—அடைகிருன்; சாச்வதம்—எப்போதும் இருக்கிற (சாச்வதமான) பதம்—பதவியை; அவ்யயம்—அழியாத (தேயாத)

எல்லா வேலைகளையும் செய்து கொண்டும், என்னிடம் தன்னை ஒப்புவித்தும் (இருக்கும்) அவன் என் அருளால் அழியாத தேயாத என்றும் இருக்கும் பதவியை அல்லது இடத்தை அடைகிருன்.

கீதை சொல்லும் வேதாந்தத் தத்துவம் அதி வேக இயக்கம் கொண்டது. பகவான் கீதம் பார்ப்பதற்கு சாதுவாகத் தோன்றும். ஆனுல் வெடிமருந்துக் குவியல் அது. சரியான அறிவுப் பொறி பட்டால் வெடித்துவிடும். வாழ்வதால் ஏற்படும் சூடு அதை வெடிக்க வைத்து மாணவனுடைய மறைந்திருக்கும் தெய்வீக ஆற்றல்களையும் உயர்ந்த ஆளுமையையும், மறைத்து மூடியிருக்கும் அறியாமையின் படலங்களையும் தகர்த்துவிடும்.

பகவானிடம் பக்தி—கீதையில் சொல்லப்பட்டிருக்கும் பக்தி ஆதரிசத்துக்குச் செலுத்தப்படும் ஒரு வேகமற்ற மந்தமான அர்ப்பணம் ஆகாது. அல்லது உடலளவில் செய்யப்படும் ஒரு கிரியையும் அல்ல. ''கர்த்ருத்வ போக்த்ருத்வ பாவனைகளிலிருந்து திறமையான புத்திசாலித்தனம் கொண்டு விலகி 'உயர்ந்த தத்துவத்துடன் இணைந்து நிற்பது மட்டுமல்ல, நம்முடைய அறிவும் அனுபவமும் புற உலகில் நாம் செய்யும் செயல்கள் நாம் கொள்ளும் உறவுகள் எல்லாவற்றிலும் தெளிவாக ஆக்கப்பூர்வமாக வெளியாக வேண்டும். நம்முடைய செயல்களில் அதன் மணம் கவிந்திருக்க வேண்டும்—என்கிருர் கண்ணபிரான்.

கண்ணபிரானுக்கு புலன்களுக்குத் தீனி போடும் பொருள்கள் கொண்ட புற உலகிலிருந்து ஒதுக்கிவிடுவது சமயமாகாது. ஆனுல் மீண்டும் உலகியலில் ஈடுபட வேண்டும். ஈடுபட்டு வேலை செய்யும் போது 'அங்கே தொலைவில்' இருக்கும் அமைதி ஆனந்தம் இவற்றின் மணம் நன்கு பரவி வீச வேண்டும். அது இந்த சுவையில்லாத சடப் பொருள்களுக்கு ஒளிதந்து இன்ப நிலை அளிக்க வேண்டும். அதனுல்தான் கண்ணபிரான் பரமபக்தன் எனப்படுபவன் இலக்கணம் கூறிய பிறகு சாதகர்கள் நிறை

வேற்ற வேண்டிய மற்ருெரு நிபந்தனையையும் சேர்க்கிறுர்.

சமூகத்தில் தன்னலமற்ற தொண்டு என்கிற அனுமதிச் சீட்டுடன் வருகிறவனைத் தவிர வேறு யாரையும் கீதாச்சாரியன் தன் அரண்மனை வாயிற் கதவுகளண்டை வரவேற்கவோ, அல்லது அவர்களுக்கு பேட்டி தரவோ தயாரில்லை. ''சதா எல்லா வேலைகளையும் செய்து கொண்டு அதே சமயம் என்னைத் தஞ்சமடைந்து''—என்று சொல்கிறுர் பகவான்.

'நான்சொல்கிறேன்' என்ற பாவனையை விட்டு உலகில் தொண்டு புரிய கவைக்கு உதவக்கூடிய வழி' என்னிடம் தஞ்சமடைவது'' என்பதுதான். சமூகத்திற்கும், தனக்கும் தன் தர்மங்களையும் (கடமைகளையும்) செய்து கொண்டுள்ள, இந்த விதம் வேலை செய்கிற சாதகனுக்கு, 'என் பிரசாதம்' அனுக்ரஹம் அல்லது அருள் உண்டு.

அவன் அருளேதான் அவன்! பரமனுக்கு அவன் அருளை விட்டு வேறு இருப்புக் கிடையாது. அவனேதான் அவன் அருளும்.

எனவே ஆத்மாவின் அருள் என்ருல் நம்முடைய பல உள் உறைகளின் வழியே மேலும் மேலும் இறை உணர்வு வெளிப் படுதல் என்று பொருள். ஆன்ம உண்மைக்கு எவ்வளவுக்கெவ்வளவு ஒருவனுடைய மனதும் புத்தியும் கட்டுப்பட்டு இருக்குமோ அவ்வளவுக்கவ்வளவு அவன் 'ஈசுவரனுடைய' பிரசாதத்தின் * அனுக்ரஹத்தையும் பெற்றவனுகிறுன்.

அவன் என்றுமுள்ள அழியாத (மாருத) நிலையை அடைகிறுன்.

ஒருவன் இவ்விதம் 'நான் செய்கிறேன்' என்கிற பாவனையையும் (கற்பனை எண்ணத்தையும்) நான் துய்க்கிறவன் என்கிற பாவனையையும் விட்டு உலகில் வேலை செய்யும் போது ஏற்கனவே உள்ள வாசனைகள் அழிந்து அத்துடன் 'அஹம்' என்று முளைக்கிற தத்துவமும் இல்லாமல் போய்விடும். அதன் விளைவாக அவன் 'அஹம் தத்துவம் பரப்பியிருந்த மோக உலக நிலையிலிருந்து விழித்து சுத்தப் பேருணர்வு நிலையை அடைந்து விடுகிறுன். அப்போது அவன் அழியாத அந்த அமர நிலையில் அதாவது பூரணத்துவ கண்ணன் நிலையிலேயே இரண்டறக் கலந்து விடுகிறுன்.

இதற்கு முன்னுள்ள மூன்று சுலோகங்களில் ஞான பக்தி கரும மார்க்கங்கள் பேசப்பட்டிருக்கின்றன. அந்த மூன்றிலுமே

---

* பிரசாதம்—கதோபநிஷத்தைப் பார்க்கவும்—அங்கே பிரஸாதம் உள் தூய்மை (தாது பிரசாத்) என்று விளக்கப்பட்டிருக்கிறதைக் காணவும்.

சாதகன் தன் இலக்ஷியத்துடன் கொண்டுள்ள ஒருமைதான் சொல்லப்பட்டிருக்கிறது.[2] கீதையின் உத்தியின் உயிர்நாடியே ஒருங்கிணைந்த சாதனைதான். பக்தி, கர்மம், ஞானம் மூன்றையும் சேர்த்துச் செய்வதென்னும்போது உடல், மனம், புத்தி மூன்றை யும் ஒருசேரப் பயிற்றுவது குறிக்கப்படுகிறது. உடல் தளத்தில் மனதைத் தடுத்து குறிக்கோளில் நிறுத்துவதற்காகச் செய்யப் படும் எல்லா சாதனைகளுமே கரும யோகமாம். உணர்ச்சிகளுக்கு மனதை அடக்கக் கொடுக்கப்படும் பயிற்சி பக்தி யோகத்தில் அடங்கும். படிப்பு, சிந்தனை, வைராக்யம், தியானம் இவைகள் எல்லாம் புத்தித்தனத்தில் செய்யப்படும் சாதனைகள். இவற்றின் மூலம் மனது கட்டுப்பட்டு தன்னுடைய அநந்தத்துவத்தை மௌனமாக அனுபவிக்கிறது. இந்த முயற்சியை ஞானயோகம் என்று சொல்கிறோம். மூன்றையும் வாழ்வில் பயில்கிறவன் தன் ஜீவத்வத்தின் மூன்று தளங்களிலும் மனதைக் கட்டுப்படுத்திவிடு கிறான். பார்க்கிறவன் (அறிகிறவன்) உணர்கிறவன். சிந்திக்கிற வன் என்ற மூன்று கவலையுடைய மனிதன் முழுமையாக மாறு கிறான். இவ்விதம் ஆன்ம மாற்றம் உபநிஷதங்கள் கணக்கற்ற நாட்களாகச் சொல்லி வந்த தத்துவத்துக்கு கீதை தந்த ஒரு புரட்சிகரமான ரகசிய வளர்ச்சி மாற்றமாகும்.

*சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸந்யஸ்ய மத்பர:*
*புத்தியோகமுபாச்ரித்ய மச்சித்த: ஸததம் பவ*

*18:57*

சேதஸா—மனதால்; ஸர்வகர்மாணி—எல்லா செயல்களை யும்; மயி—என்னிடத்தில்; ஸந்யஸ்ய—ஒப்படைத்துவிட்டு (விட்டு விட்டு); மத்பர—என்னையே மிக உயர்ந்த குறிக்கோளாகக் கொண்டு; புத்தி யோகம்—விவேக யோகத்தை; உபாச்ரித்ய—ஏற்றுக் கொண்டு; மச்சித்த:—மனதை என்னிடம் நிறுத்தி; ஸததம்—எப்போதும்; பவ—இரு.

மனதினால் எல்லாச் செயல்களையும் என்னிடத்தில் ஒப்புவித்து விட்டும் என்னையே மிக உயர்ந்த அடைய வேண்டிய இலக்காகக் கொண்டும் விவேக யோகத்தை கைக்கொண்டும் உன் மனதை என்னிடம் உறுதியாக நிலைநிறுத்து.

மனதினால் எல்லாச் செயல்களையும் என்னிடத்தில் ஒப்பு வித்து விட்டு—இறைவனுடைய பீடத்தில், 'அஹம்' என்கிற பாவனையையும் 'நான் துய்க்க வேண்டும்' என்று எழுகிற

---

[2] 52ம் சுலோகம்—மத்பக்திம் லபதே பராம்; 55, மாம் விசதே ததநந்தரம்; 56 ஆப்னோதி சாச்வதம் பதமவ்யயம்.

அஹத்தை மையமாகக் கொண்டு கிளம்பும் அங்கலாய்ப்பு—ஆரவாரங்களேயும், சமர்ப்பித்து விட்டு உலகில் வேலே செய்யும் வழியில் சென்ருல் செயலாற்றும் மனிதன் உயர்ந்த பண்பாட்டு நிலேக்குச் செல்கிருன். இந்த சமர்ப்பணக் கருத்து ஏற்கனவே மிகவும் விரிவாகப் பேசப்பட்டிருக்கிறது.* என்னே மிக உயர்ந்த அடைக்கலமாக சென்று அடைய வேண்டிய இடமாக, ஏற்றுக் கொள்ளும் தொடர்ந்த தொய்வில்லாத ஆசை கொண்டிருக்கும் மிக வன்மையான மனேபலம் இருந்தால்தான் இந்த சமர்ப்பண புத்தி கிடைக்கும். மனது இப்போது பிடித்துக் கொண்டிருக்கும் பிடியை விட்டுவிடச் செய்ய வேண்டும் என்ருல் அதற்கு வேறு ஒரு பிடிப்பைக் கொடுக்க வேண்டும்.

புத்தி யோகத்தைக் கைக் கொண்டு—புத்தியின் வேலே பிரித்து அறிவதும் சரியானதை ஏற்றுக் கொள்வதும்தான். உண்மையைப் பொய்யிலிருந்து பிரித்து அறிந்து கொண்டு உண்மையைத் தேடும் வழியில் உறுதியுடன் செல்வதைப் புத்தி யோகம் (விவேக யோகம்) என்கிருேம். வாழ்க்கையை விவேகத்தின் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தி அதன் செயல்களேத் திட்டமிட்டபடி செயலாற்றுவது கர்மயோகம் ஆகும். சுயநலமற்ற கர்ம யோகத்தை புத்தியோகம் என்று புரட்சிகரமாகக் குறிப்பது கீதையில்தான் முதன் முதலில் காணப்படுகிறது. இது கீதையின் தொடக்க பாகத்திலேயே வந்திருக்கிறது. அங்கேயே இதைப் பற்றி நாம் விஸ்தார மாக விளக்கியிருக்கிருேம்.*2

எப்போதும் உன் சித்தத்தை என் மேலேயே செலுத்தி நிறுத்து: கிருஷ்ண தத்துவத்தை வாழ்க்கையின் லக்ஷ்யமாக நிலேநிறுத்திக் கொண்டவன் இந்த லக்ஷ்ய பீடத்தை மனதால் எப்போதும் அடைக்கலமாகக் கொண்டு பகவானுடைய சிருஷ்டி யான ஜீவன்களுக்குச் சேவை புரிகிருன். விவேகத்துடன் தெய்வீக விரோதமான எண்ணங்களேப் புரிந்து கொண்டு ஒதுக்கு பவன்; அகத்தை மையமாகக் கொண்டு சுயநலத்துடன் கொண்டிருக்கும் பிடிவாதங்களே ஒதுக்குபவன்—அப்படிப் பட்டவன் இயல்பாகவே கண்டிப்பாகத் தன் எண்ணங்களே இறைவன் மேலேயே செலுத்துவான்.

மன வாழ்வின் ஒரு சட்டம் உண்டு. அது என்றும் உண்மையானது. அதாவது ''நாம் எப்படி நினேக்கிருேமோ

---

* மூன்ருவது அத்தியாயத்தின் மிக முக்கியமான 30ஆவது சுலோகத்தின் விளக்கவுரையைப் பார்க்கவும்.

*2 இரண்டாம் அத்தியாயம் 39வது சுலோகம்—அங்கே புத்தி யோகம் விஸ்தார மாக விளக்கியிருக்கிருேம்.

அப்படியே ஆகிறோம்.'' எனவே ''கிருஷ்ண உணர்விலேயே'' எல்லா வேலைகளையும் தன் இலட்சியத்தோடு சமர்ப்பணம் செய்து வாழ்கிற பக்தன் கிருஷ்ணன் போன்றே வாழ ஆரம்பித்து விடுவான். அதாவது தன் ஆத்மாவின் அமரத் தன்மையை நேரடியாக அனுபவிப்பான்.

இந்த வழி கஷ்டமானதாகத்தான் தோன்றுகிறது. இருந்தாலும் இதைப் பின்பற்ற ஒருவன் மறுத்து விடுகிறான்—என்றால் அவன் நிலை என்ன ஆகும்?—கவனியுங்கள்.

மச்சித்த: ஸர்வதுர்காணி மத் ப்ரஸாதாத்தரிஷ்யஸி
அதசேத் த்வமஹங்காராந்ந ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி
18:58

மச்சித்த:—என்னிடத்தில் சித்தத்தை வைத்து; ஸர்வ துர்காணி—எல்லாத் தடைகளையும்; மத்ப்ரஸாதாத்—என் அருளினால்; தரிஷ்யஸி—தாண்டுவாய்; அத:—இப்போது; த்வம்—நீ; அஹங்காராத்—அகங்காரத்தால்; ந ச்ரோஷ்யஸி—சேத்—கேட்காத போனால்; விநங்க்ஷ்யஸி—நாசமடைவாய்.

என் பேரில் சித்தத்தை வைத்து (பாரத்தைப் போட்டு இருக்கும் போது) என் அருளால் நீ எல்லாத் தடங்கல்களையும் தாண்டிவிடுவாய். ஆனால் அகங்காரம் கொண்டு என் (வார்த்தையைக்) கேட்காது போவாயானால் நீ நசித்துவிடுவாய்.

அர்ஜுனன் ஆளுமை தேஜஸ் வாய்ந்தது. தொடக்கத்தில் ஒரு மாதிரியான பிராந்தி மயக்க நிலையில் இருந்தது உண்மை தான். ஆனால் இப்போது விழித்து விட்டான். எனவே ஒவ்வொரு கணமும் உயிர்த் துடிப்புடன் இருக்கிறான். செயலுக்குப் பயன்படக்கூடிய அரிய இதயத்திற்கு உரித்தான வேட்கையுடன் இருக்கிறான். கிருஷ்ணன் உரைகளிலிருந்து தெரியவரும் நிறைவுகளைப் பெற விரும்புகிறான். மனதுக்கு ரம்மியமான சர்ச்சைகள். இப்படி ஆகலாம் அப்படி நடக்கும் என்கிற கற்பனைகள், சோம்பேறித்தனமான கனவுகள் இவற்றைக் கொண்டு அவன் திருப்தியடையத் தயாராயில்லை. அவன் அந்த எல்லை முடிவற்ற பரம நிலையை அடைய விரும்புகிறான். அதற்கென கிருஷ்ணன் தேவையான செயல்படக்கூடிய குறிப்புக்களைக் கொடுக்கிறார்.

ஸாரமாகக் கண்ணன் சொல்கிறார்: உன் எண்ணங்கள் மூலம் உன் செயல்கள் எல்லாவற்றையும் என் மேல் போட்டுவிடு. உலகில் செய்யப்படும் செயல்கள் எல்லாம் மனிதனுக்குள்ளே இருக்கும் தெய்வீகப் பேருணர்வு உடல் மூலம் வெளியிடும் ஒளிகளே. அது இன்றி ஒரு வேலையும் நடக்காது. அந்தப் பரமனை உன் குறிக்கோளாகக் கொள். ''எல்லாச் செயல்களுக்கும் இறைவ

ஞன'' அந்தத் தத்துவத்தை எப்போதும் இடைவிடாது உன் புத்தியில் நிறுத்திக் கொள். பிறகு உன் மனதும் உடலும் அப்படி உள் ஊக்கம் கொண்ட புத்திக்கும் கட்டுப்பட்டு நடக்கும்.''

புத்தி சரியாகத் தன் செயலைச் செய்து சரியான தீர்வைக் காணுத போதுதான் நாம் நம் வாழ்க்கையில் தவறுகளைச் செய்கிறோம். அடிக்கடி நம் மனதுக்குக் கீழ் நோக்கிச் சென்று நம் புத்தியை மட்டமான உணர்வுத் தூண்டுதல்களுக்கும், குணங்களுக்கும் உட்படுத்தி விடும் சுபாவம் உண்டு. புத்தியை எப்போதும் விழித்த நிலையில் வைத்திருக்க வேண்டும் என்றால் மனிதன் சதா சர்வதா எல்லாவிதச் செயல்களுக்குமே இறைவனை அந்தப் பிரபுவின் இருக்கையை உள்ளே நினைவில் நிறுத்தி வெளியே அவன் லீலையைக் கண்டு கொண்டே இருக்க வேண்டும். பக்தன் ஒரு தேசத்தின் தூதன் போல. அவனுக்கு எப்போதும் 'நாம் நம் தேசத்தின் பிரதிநிதி' என்ற நினைவு வார்த்தைகளிலும் எண்ணத்திலும் வெளியே செய்யும் செயல்களிலும் ஊடுருவி உயிர் தந்து கொண்டு நிற்க வேண்டும். அவன் அனுப்பப்பட்டிருக்கிற வேற்று நாட்டில் தங்கியிருக்கும் வரை ஒவ்வொரு கணமும் அவனுக்கு இது நினைவில் இருக்க வேண்டும். நாம் நம் உடல், மனம், புத்தி இவற்றில் இருக்கும்போது நாம் இடைவிடாமல் தொடர்ந்து ''நாம் அவரால் அமர்த்தப்பட்ட முகவர்களே (*agents*) அவர்தான் நம் மூலமாக செயல்படுகிறார்' என்று நினைந்து கொண்டே இருக்க வேண்டும்.

இப்படி பரமனை விடாமல் எண்ணுவது எந்த விதத்தில் உதவும்? இந்த சுலோகத்தில் இந்தக் கேள்விக்கு விடை தரப்படுகிறது. ஸ்ரீ கிருஷ்ணன் சொல்கிறார்: ''என் பேரில் முழுமையாகத் தன் எண்ணங்களைச் செலுத்துகிறவன் என் அருளால் எல்லாக் கஷ்டங்களையும் தாண்டி விடுவான்.'' நமக்கு வாழ்க்கையில் ஏற்படும் தடைகளில் பெரும்பாலானவை கற்பிதமானவை. அவை நம்முடைய கும்பிய மனத்தின் பொய்யான கிலிகளாலும், ஏமாற்றுபவையுமான ஏக்கப் பரபரப்புக்களாலும், ஏற்படுபவை. இங்கே ''பிரசாதம் அருள் என்று சொல்லப்படுவது'' நம் உள்ளத்தில் அந்தர்யாமியாய் எழுந்தருளியிருக்கும் பிரபுவின்பால் நாம் தொடர்ந்து மனதை வைத்திருப்பதும் அவனுடைய முடிவற்ற தன்மையில் அமைதியாக அமர்த்தியிருப்பதாலும், ஏற்படும் மனத்தின் பக்குவநிலையாகும். அன்பு மயமான அந்தப் பிரபு தனக்கு வேண்டிய யாரோ சிலருக்குக் காட்டப்படும் 'சலுகை' என்று பொருள் அல்ல. எங்கும் ஊடுருவி நிற்கும் அந்தப் பரமதத்துவத்தின் அருள் இல்லாத இடம் இல்லை. எங்கும் இருக்கிறது ஏன் என்றால் அருளே அவன் உருவமாம். நல்ல பகலில் சூரியனுடைய ஒளி எப்போதும் எங்கும் படும். ஆனால் என் ஜன்னல் கதவுகள் மூடப்பட்டிருந்தால் என் அறைக்குள் ஒளியின்

அருள் வராது. அதேபோல் நம்முடைய புத்தியின் விவேகமாகிற ஜன்னல் அழுத்தி மூடப்பட்டிருந்தால் அவன் அருளான வாழ்க்கையின் இசைவு லயமும் ஆனந்தமும், என் வாழ்க்கையில் புக முடியாது. என் அறையின் ஜன்னல் கதவுகள் எவ்வளவுக் கெவ்வளவு திறந்திருக்குமோ அவ்வளவு என் அறையில் பிரமாத மான ஒளி வெள்ளம் நிறைந்திருக்கும் ஒரு சாதகன் எவ்வளவுக் கெவ்வளவு தன் சாதனையைத் தொடர்ந்து கடைப்பிடித்து மேலே கூறப்பட்ட மாற்றங்களேயும் பக்குவங்களேயும் செய்து கொள்கிறுனே அவ்வளவுக்கவ்வளவு ஆன்மாவின் அருள் வெள்ளம் அவன் உள்ளத்திற்கு ஒளிதரும்.

பரமனுன இறைவனையும் அவன் பெருமைகளேயும் எப்போதும் நினேவில் இருத்தி வாழ்க்கைக்குச் சீரியதும் சிறந்தது மான ஒரு லக்ஷியத்தை ஏற்படுத்திக் கொள். இப்படிச் செய் வதனுல் நம்முடைய ஆளுமையின் ஆற்றல் சேமிக்கப்படும். இல்லே என்ருல் அது புலனின்ப நுகர்ச்சியில் சிதறிவிடும். மட்ட மான இன்பங்களின் நரகவாதனே தரும் சூருவளிகளில், பேராசையின் அழித்துவிடும் வெள்ளத்தில், விருப்பங்களின் எரிமலேக் கக்கல்களில், சிக்கிச் சிதறி அழிந்துவிடும். இந்தப் புத்திக் குறைவானவும் நாம் அறியாமலேயே நம்மை மடக்கி விடக் கூடியதுமான சிதறும் போக்குகளேத் தடுத்து விட்டோ மானுல் நம் மனது ஒரு புது சக்தியையும் உயிராற்றலேயும் மீண்டும் கண்டு பிடித்துவிடும். அதன் ஆற்றல்களுக்குப் புது ஆக்கங்களும் சேர்ந்துவிடும். ஆற்றல்கள் பல்கிப் பெருகும்.

சுலோகத்தின் இரண்டாவது வரியில் இறைவன் இந்த ''வாழ்க்கைச் சட்டத்தை'' மீறுகிறவர்கள் எல்லோருக்கும் ஒரு எச்சரிக்கை விடுக்கிருர். இயற்கைச் சட்டங்கள் மாற்றப்பட முடி யாதவை. அவைகளுக்குக் கண்ணும் கிடையாது; காதும் இல்லே. அவைகள் தன் இசைப் போக்கில் போய்க் கொண்டே இருக்கும். எந்த மனிதன் இந்தச் சட்டத்தைக் கண்டு கொண்டு அதைச் சற்றுக்கூட மீருமல் கீழ்ப்படிகிருனே அந்த மனிதன் சந்தோஷ மாக இருக்கிருன்.

'ஆனுல் அகந்தையின் காரணமாக நீ நான் சொல்வதைக் கேட்காது போனுல் நீ நாசமடைந்து விடுவாய்: இது ஏதோ கொடுங்கோலனுன இறை அதிகாரம் மனிதர்களே அச்சுறுத்திக் கீழ்ப்படிய வைப்பதற்காக வீசப்பட்ட ஒரு தெய்வீகப் பயமுறுத்தல் அல்ல. மற்ற சமயங்கள் காட்டும் ''நரகப் பூச்சாண்டியுடன்'' இதை ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது.

இது உண்மையை அப்பட்டமாகக் கூறியதாகும். *. விஞ்ஞானி நியூட்டனே கூட (புவியீர்ப்புச் சக்தியைக் கண்டு பிடித்தவன்) தன் வீட்டின் மாடியிலேயிருந்து கீழே விழுந்தால் புவியீர்ப்புச் சக்தி அவனையும் விடாது. இயற்கையின் சட்டத்தின் தன்மையே அது சாதாரணமாக மீறப்படமுடியாது, என்பது தான். மனிதனுக்கு அடிமைத்தனத்தையோ, சுதந்திரத்தையோ தன் இச்சைப்படிப் பொறுக்கி எடுத்துக் கொள்ளும் உரிமை இருக்கிறது. சுதந்திரத்துக்கான வழி மேலே கூறப்பட்டிருக்கிறது. பகவான் சொல்லில் தெளிவாக இருப்பதற்கான அதிக அக்கரை காட்டுகிறார். அதனால் மிகவும் அப்பட்டமாக (அம்மணமாக— மறைவே இல்லாமல்) சொற்களைப் பயன்படுத்தியிருக்கிறார்.

நமக்குள்ளே ஒரு 'மெதுவான' ரகசியமான குரல் இருக்கிறது. அவன் பேச்சு நம் இயற்கையின் மிக ஆழ்ந்த அடித்தளத்திலிருந்து எழுந்து இந்த 'உண்மையான வாழ்க்கை' வழிக்கு அடையாளம் காட்டுகிறது. ஆனால் மனிதனின் தன் முனைப்பும் அதை மையமாகக் கொண்டு எழுந்த ஆசைகளும் பிரபுவின் அந்த மணி ஓசைக் குரலைக் கேட்க விடாமல் தடுத்து விடுகின்றன. அப்படி அவற்றின் பிடியில் சிக்கியவர் புற உலகப் புலனின்பங்களை நாடும் அநாகரீகமான வாழ்க்கையைப் பின்பற்றுகிறான். பிறகு அவனை அவனுடைய கட்டுப்படுத்தப்படாத உணர்வுகளும், செம்மைப்படுத்தப்படாத எண்ணங்களுமே அவனுக்குத் தண்டனை தந்துவிடுகின்றன. அதனால் தான் கண்ணன் கடுமையாக எச்சரிக்கிறார். நீ நர்சமடைவாய்!' என்று.

இந்தக் கருத்தை அர்ஜுனன் வாழ்வாகிற துணியின் ஊடு, பாவுக்குள் நுழைப்பதற்காக பகவான் பின்வருமாறு உரைக்கிறார்:

யதஹங்கார மாச்ரித்ய ந
யோத்ஸ்ய இதி மந்யஸே
மித்யைஷ வ்யவஸாயஸ் தே
ப்ரக்ருதிஸ்த்வாம் நி யோக்ஷ்யதி 18:59

யத்—ஆல்; அஹங்காரம்—அகங்காரத்தை; ஆச்ரித்ய— அண்டி; ந யோத்ஸ்ய—சண்டையிட மாட்டேன்; இதி—என்று; மன்யஸே—நினைத்தால்; யத்—(ஆனால்); மித்யைஷ:—வீணே; வ்யவஸாய—வேலை; தே—உன்னுடைய; ப்ரக்ருதி—இயற்கை;

---

* நம் தலைமுறை அவசரக் குடுக்கைகளின் தலைமுறை. இந்தத் தலைமுறையின் இந்தக் கூற்றை சமயத்தின் கொடுங்கோன்மைச்சட்டம் என்கிறார். சற்று சிந்தித்தால் இந்தத் தவறு நீங்கிக் கருத்து தெளிவுறும் விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்கள் இயற்கையின் ஆற்றலை மனிதனுக்கு உதவச் செய்கின்றன என்றால் அறிவியல் துறை இயற்கையை ஆளும் சட்டங்களின் உண்மையைத் தெரிந்து கொண்டு விட்டன. இந்தத் தலைமுறையும் கீழே இறங்கி வந்து அவற்றுக்குக் கீழ்ப்படியக் கற்றுக் கொண்டுவிட்டன.

த்வாம்—உன்னை; நீ யோக்ஷ்யதி—பிடிவாதப்படுத்தும்.

அகங்காரம் கொண்டு நீ ''நான் சண்டையிட மாட்டேன்'' என்று முடிவு செய்தாயானால் அது வீண் கருத்து. (ஏன்) என்றால் உன் இயற்கை உன்னைப் பிடிவாதப்படுத்தும்.

உண்மை நிலையைப் பற்றிப் பொதுவான கூற்றுக்கள் மனிதர் அறிவில் நிலையாகத் தங்காதபடி காற்றோடு காற்றாகப் போகும் குணம் படைத்தவை ஆனால் அவற்றை ஒரு மனிதன் வாழ்க்கை யுடன் இணைத்து விடப் படும்போது அவை அவன் தேடித் தெளிந்து கொண்ட நல்ல அனுபவ அறிவாகிவிடுகின்றன. எனவே கண்ணன் தன் அறிவுரைகளின் சாரத்தை; அர்ஜுனன் உடனே சந்திக்க, என எதிரே இருக்கும் பிரச்னையின் உயிர்நாடி யுடன் சேர்க்க முயல்கிறார்.

'நான்' என்கிற தன்மையைப் பற்றி பெரும் அபிப்பிராயம், கர்வம் இவற்றின் காரணமாக அர்ஜுனன் நினைக்கிறான்—''நான் சண்டையிடப் போவதில்லை'' என்று. அந்த எண்ணம் பொரு ளற்றது. வீணான கருத்து. இரவுக்குப் பின் பகல் வருகிறது. எவ்வ ளவு ஒழுங்காகவும், தடுக்க முடியாமலும் நேர்ந்துவருகிறதோ, அதைப் போல் எண்ணத்துக்கு விளைவும் ஏற்படும் அர்ஜுனன் சுபாவம் வெளியாக விரும்புகிறது. அவனோ க்ஷத்திரியன் அவன் ரஜோ குணம் மேலோங்கித்தான் நிற்கும். அவன் இயற்கையே அவனை நிர்ப்பந்தப்படுத்தும். உப்பைத் தின்றவனுக்குச் சற்று நேரத்துக்கெல்லாம் அநியாயத் தாகம் ஏற்படும். சண்டையிடா மல் இருப்பதற்கு அர்ஜுனன் காட்டிய காரணங்கள் எல்லாம் தன்னை ஏமாற்றிக் கொள்ள எனப் பேசுகிற பேச்சுக்களே. அவன் 'அகங்காரம்' ஏற்பட்ட சூழ்நிலையுடன் செய்து கொள்ள முயலும் அர்த்தமற்ற உடன்படிக்கைகளே!

பயத்தினால் ஓடிவிடலாம் என்று தாற்காலிகமாக அவன் உள்ளம் நினைக்கிறது. சண்டையை விட்டு விடலாம் என்று அவனுக்குத் தோன்றுகிறது. ஆனால் சற்று நேரம் போனபிறகு அவன் சுபாவம் ஓங்கிவரும். அப்போது அந்தோ! அவனுக்குத் தன் வாசனைகளைத் தீர்த்துக் கொள்ள சரியான களம் கிடைக் காது.

''கீழே சொல்லப்படும் இந்தக் காரணத்துக்காகவும் நீ சண்டையிட்டே ஆக வேண்டும்.''

ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்த:
ஸ்வேன கர்மணா
கர்த்தும் நேச்சஸி யன்மோஹாத்
கரிஷ்யஸ்யவ சோ(அ)பி தத்

18:60

ஸ்வபாவஜேன—உன் இயல்பில் வெளியாகும் போக்கினல்; கௌந்தேய—குந்தி மகனே; நிலேத்த—கட்டுப்பாடு; ஸ்வேந—தன்னுடைய; கர்மணு—செய்கையினுல்; கர்த்தும்—செய்ய; ந இச்சஸி—விரும்பாத; யத்—எதுவோ; மோஹாத்—மோகத்தினுல்; கரிஷ்யஸி—செய்வாய்; அவச:—வேறு வழியின்றி; அபி—கூட; தத்—அது.

ஏ குந்தி புத்திரா! உன் சுபாவத்தினுல் உண்டான கர்மத்தினுல் கட்டப்பட்டு, இன்று மோஹத்தினுல் எதைச் செய்ய விரும்பவில்லேயோ அதை வேறு வழியின்றிச் செய்வாய்.

பகவான் சாரபூதமாகச் சொல்வது இதுதான். ''எனக்கு உன்னிடம் இரக்கமில்லாத காரணத்தால் உன்னேச் சண்டை செய்யச் சொல்லவில்லே. ஆனுல் உனக்கு இருக்கிற வழி அது ஒன்றுதான். வேறு வழியே இல்லே. நீ இப்போது பிடிவாதமாகச் சண்டையிட மாட்டேன்' என்று சொல்லலாம். அது ஒரு பிரமையான கருத்தே. உன் இயற்கை ஓங்கிவிடும். அப்போது நீ சண்டையிட்டே தீருவாய்.

நாம் செய்கிற செயல்கள் நம் வாசனேகளால் தூண்டப்படுபவை. அவ்வாசனேகள் நம்முடைய ஆளுமையைக் கட்டி ஆள்கின்றன. அர்ஜுனன் அடிப்படையில் ரஜோகுணி. எனவே அவன் போரிட்டே தீரவேண்டும். அந்தப் பாண்டவ இளவரசன் திடீர் என்று சாத்வீக குணம் பெற்றவன் போல், அப்படிப்பட்ட இதயத்தின் நலங்கள் உடையவன் போல், நடிக்க முடியாது. தனிமையில் ஒரு இடத்துக்குச் சென்று படித்தல் சிந்தித்தல் தியானம் செய்தல் முதலான சாதுச் செயல்களில் ஈடுபட முடியாது. அதன் விளேவாக சுயவளர்ச்சி அடைய முடியாது.

எண்ணங்கள் தவறு; கணிப்புக்கள் அசட்டுத்தனமானவை. இவற்றின் விளேவாக அர்ஜுனன் ''எனக்கு சண்டையில் விருப்பமில்லே. எனவே இதை நான் செய்ய மாட்டேன்!'' என்று எண்ணுகிறுன். தன்னேச் சுற்றியுள்ள நிலேகள் பொருள்களிடத்தில் கொண்டுள்ள அசட்டுக் கற்பனேயான விருப்பங்கள், பிடிமானம் இவைகளால் தன் வசமின்றி அலேகளில் ஏறி இறங்குகிறுன். ஆனுல் மனதைப் பூராவாகத் தன் வசப்படுத்தியவனுயிருந்தால் அவன் அந்தராத்மாவான தூய ஒளி (பா)யில் ரமித்திருப்பான். (ரதி, கொண்டிருப்பான்). இந்த ஆன்ம 'சாஸ்திரப் பண்பாட்டிற்கு மதிப்புக் கொடுத்து அதை உணர்ந்திருக்கும் காரணத்தால்தான் நம் நாடு 'பாரதம்' என்ற அழியாப் பெயரைப் பெற்றிருக்கிறது.

இந்தக் கிதையின் பதினெட்டாவது அத்தியாயம் ஒரு வேதாந்தத் தத்துவத்தை நிலேநாட்டுகிறது என்று கொண்டால்

இதற்கு முந்தைய பதினேழு அத்தியாயங்களும் அதை நிலைநாட்டு வதற்காகக் கொடுக்கப்பட்டிருக்கும் பொருள் பொதிந்த அறிவொளி கொண்ட தர்க்கங்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிக மாக புத்தி மனதைக் கட்டுப்படுத்திவைத்திருக்குமோ அவ்வளவுக்கவ்வளவு அந்த மனிதன் சீரும் சிறப்பும் பெறுகிறுன். அந்த மனிதனுடைய இயல்பும் பதமும் அவன் புத்தி வாழ்க்கை யில் ஏற்றுக் கொண்டிருக்கும் மதிப்பீடுகளின் தரத்துக்குத் தகுந்தபடி மதிப்பின் பெருமையை ஒட்டியே இருக்கும்.

முந்தைய இரண்டு மூன்று சுலோகங்களில் ஸ்ரீ கிருஷ்ணன் 'என்னை தொடர்ந்து நினைவில் இருத்திக் கொள்' என்கிறுர். இதன் பொருள் என்ன? எப்படி நினைவில் இருத்திக் கொள்வது? அவனைத் தியானித்திருப்பது என்று பொருளா? அவருடன் நாம் எப்படி ஒட்டி உறவு கொள்ள வேண்டும்? அவரை சரீரத்தில் வந்து தித்த ஒரு நபராக எண்ணுவதா? அல்லது நம்முள் நம்மு டன் ஊடேயும் எப்போதும் ஒளிதந்து நிலைத்திருக்கும் ஒரு இருப் பாக' எப்போதும் நம்முடன் இணைந்திருக்கும் ஒரு உயிருள்ள உறவாக எண்ணியிருப்பதா?

மேலெழுந்தவாரியாக இல்லாமல் உள்ளூற சிந்திக்கிற எந்தச் சீடனுக்கும் மேற்கண்ட கேள்விகள் எழுவது திண்ணம்! அவைகளுக்குக் கீழே அடுத்த சுலோகத்தில் விடை கொடுக்கப் பட்டிருக்கிறது.

ஈச்வர: ஸர்வபூதானும் ஹ்ருத் தேசே அர்ஜுன: திஷ்டதி
ப்ராமயன் ஸர்வ பூதானி யந்த்ரா ரூடானி மாயயா:
*18:61*

ஈச்வர:—பிரபு; ஸர்வபூதாநாம்—எல்லா உயிர்களுடையவும்; ஹ்ருத்தேசே—இதயத்தில்; அர்ஜுனன்—ஏ அர்ஜுனு; திஷ்டதி—வசிக்கிறுர்; ப்ராமயன்—வட்ட மடிக்கச் செய்து கொண்டு (மயங்கி இயங்கச் செய்து கொண்டு); ஸர்வபூதானி—எல்லா உயிர்களை யும்; யந்த்ராரூடானி—இயந்திரத்தில் ஏற்றி; மாயயா—மாயை யினுல்.

ஈசுவரன் எல்லா உயிர்களின் இதயத் தேசத்தில் வசிக்கிறுர். ஏ அர்ஜுனு! அவர் எல்லா உயிர்களையும் தன் மாயாசக்தியினுல் யந்திரத்தில் ஏற்றியவை போல் சுழலச் செய்து கொண்டு (நிற் கிறுர்.)

இறைவன் கொடுக்கும் அறிவுரை மிகவும் தெளிவாகவும் சந்தேகத்தின் சாயையே படாததாகவும் இருக்கிறது. ''இந்த உலகை அமைத்து, செம்மைப் படுத்தி நடத்தி வைப்பவர் அவர். அவர் நியமனம் இல்லாமல் எதுவும் நடப்பதில்லை. அப்படிப்பட்ட

இறைவனை நினைவில் கொள்'' என்கிறார். கீதையின் ஆசிரியர். ''அவன் ஸந்நிதியில்'' எல்லாம் நடக்கும். எனவே அவனை ஈசுவரனாக நினை. இஞ்சினுடைய பிஸ்டனில் இயங்கும் நீராவி இஞ்சினின் இறைவன். அது இல்லாமல் பிஸ்டன் இயங்காது. ரயில் வண்டிக்கு ஓடும் சக்தி கொடுத்து ஓடவைப்பது அந்த நீராவிதான்.

எனவே ஈசுவரனை மனித உருவுடன் கூடிய கைலாச பதியாகவோ, வைகுண்டநாதனாகவோ பரமலோகத்தில் இருக்கும் பரமபிதாவாகவோ எண்ணாதீர்கள். ஆனால் எல்லோருடைய இதயத்துள்ளும் இருக்கிற பரமாத்மாவாக அவனைப் புரிந்து கொண்டு நினைவில் வையுங்கள். யாரையாவது தேட வேண்டும் என்றால் அவன் முகவரி தெரிந்தால் அவனை அங்கே கண்டு கொள்ளலாம். அதே போல பகவான் கண்ணனால் ஈசுவரனுக்கு இங்கே உள்ள உள்ளூர் முகவரி கொடுக்கப்பட்டிருக்கிறது.

'பிரபு எல்லா உயிர்களுக்கும் இதயப் பிரதேசத்தில் வசிக்கிறார்': —என்று சொல்லும் போது இங்கே உடலுக்குள் நம்மால் காணப்படும் 'இதயம்' என்ற உறுப்பைக் குறிக்கவில்லை. வேதாந்தத்தில் 'இதயம்' என்ற சொல் அதன் நேரடிப் பொருள் கொண்ட சொல் அல்ல. அதற்கு 'அணி மூலம்' பொருள் கொள்ள வேண்டும். சில சமயம் நாம் சொல்கிறோமே— அவனுக்குப் 'பெரிய இதயம்', 'நல்ல இதயம்'—என்றெல்லாம். அங்கே நாம் அவன் அன்பு உள்ளவன் நல்ல மனிதப் பண்பு கொண்டவன் என்றுதான் பொருள் கொள்கிறோம்.

இதயப் பிரதேசத்தில் வசித்துக் கொண்டு: அதாவது நெஞ்சின் கர்பக்கிருஹத்தில்—தெய்வீகக் குணங்களான அன்பு, தயவு, கருணை, பொறுமை, சந்தோஷம், நேசம், மெதுத்தன்மை, மன்னிப்புக் குணம் கொடைக்குணம் முதலியன நன்கு பயின்ற, பண்பாட்டையுடைய மனிதன் நெஞ்சு மையத்தில் என்று பொருள். ஈசுவரன் எல்லோருக்கும் செயலாற்றத் தன் தெய்வ ஆற்றலைத்தான் அளிக்கிறார். அவர்தான் எல்லாவற்றையும் சக்திநிரம்பியனவாகச் செய்கிறார். ஒவ்வொன்றும் அவரை மையத்தில் கொண்டுதான் சுற்றிச் சுழல்கிறது. பொம்மலாட்டத்தில் பொம்மைகள் ஆடுகின்றன. அவற்றை ஆட்டும் கை, காண முடியாது இயங்கி அவற்றையும் இய்க்குகிறது. பொம்மைக்கேது உயிர், ஆடும் சக்தி ஏது? அவற்றுக்குப் பின்னால் இருக்கும் காண முடியாத கைகளின் ஆற்றலின் எண்ணம், போக்கு, இவை அல்லவா அவற்றிற்கு இயக்கம் தருகின்றன.

நம்முடலில் இருக்கும் ஜடப் பொருள்களா வேலை செய்கின்றன? அல்லது உலகியல் செயல்களைப் புரிந்து கொள்கின்றன? அப்படி இருந்தால் நம் உடலுக்கு பரிமாணம் கொடுக்கும்

தக்கரிக்காய், பூசணிக்காய், அரிசி, தக்காளி எல்லாமே ஓடி ஆடி உணர்வு காட்டி வாழலாமே! அதே கரிகாய்கள் நம்முள் ஜீரணிக்கப்பட்டு நம் உடலின் பிரிக்க முடியா அமிசங்களாக மாறும் போது ஆச்சரியமே நிகழ்ந்து விடுகிறது. அவை இயக்கம் கொள்கின்றன. காண, சிந்திக்க, உணர—எல்லாவித ஆற்றல் களும் பெற்றுவிடுகின்றன. காரணம் நம்முள்ளே இருக்கும் 'அந்த உயிர்த் தத்துவத்துடன் அவை உறவு பெற்று உயிர்ப்பும் பெற்று விடுகின்றன. உள்ளே உள்ள உயிர்ப்பொறி, சநாதன, சுத்த உணர்வுத்தத்துவம் இந்த ஜடப்பொருள்களை ஆடவைத்து விடு கிறது. அந்த சுத்த உணர்வுத்தத்துவத்துக்கு சுய இயக்கம் கிடை யாது. ஆனால் அதன் சந்நிதியில் இந்த ஜடப்பொருள் உரைகள் இயக்கம் பெற்றுச் செயலாற்றுகின்றன.

உடல், மனம், புத்தி கொண்ட இந்தக் கூட்டினால் பந்தப் பட்ட ஆத்மா, இயக்கமும் செயலும் காட்டுகிறது. நாம் ஒவ்வொருவருள்ளும் இருக்கும் தனித்தனி ஜீவனை அடையாளம் காண்கிறோம். எல்லா செயல்களுக்கும் மொத்த (பூரண) காரணங்களின் மூலம் இயங்கும் பரிபூரண பரதத்துவமே 'ஈசுவரன்' என்று சொல்லப்படுகிறது.[1] நம் ஒவ்வொருவருள்ளும் இயங்கும் உயிர்த்தத்துவங்கள்தான் நம் ஒவ்வொருவரின் தனித்தனிச் செயல்களை நியமிக்கிறது. கட்டுப்படுத்துகிறது. அவற்றுக்கு எஜமானனாகவும் இருக்கிறது.

நம் எல்லோருக்குள்ளும் இருக்கிற சாரபூதமான உயிர் ஒன்றேதான். இந்த மொத்த (பிரபஞ்சமளாவிய) 'உயிர்' இந்தப் பிரபஞ்சம் பூராவும் வியாபித்து இருக்கிறது. அதன் மூலம் வெளி யாகிறது—அதாவது இருக்கிற கருவித் தொகுதிகளுக்கு இயக்க மும் ஆற்றலும் கொடுக்கிறது. இந்த உலகத்தின் இறைவன் ஈசுவரன்; எல்லா செயல்கள் மூலம் தன் இருப்பை வெளித் தோன்றச் செய்கிறார். இந்தப் பொருளை மனதில் நன்றாய்ப் புரிந்து கொண்டு இந்த சுலோகத்தை மீண்டும் படித்தால் இங்கே உபயோகப்படுத்தப்பட்டிருக்கிற உருவகத்தை நன்கு புரிந்து கொள்ள முடியும்.

இப்படி என்னுள்ளே ஈசுவரன் இருக்கிறான்—அதாவது என் செய்கைகளை எல்லாம் ஆண்டு வழிகாட்டும் ஒரு ஆற்றல் இருக்கி றது என்றால் அந்த ஈசுவரனுக்கு நான் செய்ய வேண்டிய பொறுப்புக்கள் என்ன? ஆற்ற வேண்டிய கடமைகள் என்ன?

தமேவ சரணம் கச்ச
 ஸர்வபாவேன பார்த:
தத் ப்ரஸாதாத் பராம் சாந்திம்
 ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் **18:62**

---

[1] ஸமஸ்த காரண—சரீர அபிமன்ஸி—ஈசுவர.

தம் ஏவ—அவரையே; சரணம் கச்ச—சரணடை; ஸர்வ பாவேன—உன் முழு பாவத்துடன்; பாரத—ஏ பரதகுலத் தோன்றலே; தத் ப்ரஸாதாத்—அவன் அருளினுல்; பராம் சாந்திம்—பரம அமைதியை; ஸ்தானம்—இடத்தை; ப்ராப்ஸ்யஸி—அடைவாய்; சாச்வதம்—சாசுவதமான.

உன் முழு உயிருடன் அவனைச் சரணடைந்து விடு. ஏ பரதகுல ஸிரேஷ்டனே! அவன் அருளால் நீ பரம சாந்தியையும் சாசுவதமான இடத்தையும் அடைந்துவிடுவாய்.

உள்ளே இருக்கிற தெய்வ சாந்நித்யத்தை மிகமிக விரிவான முறையில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதுதான் மனிதனைச் சுற்றி உள்ள பூதப் பொருள்களுக்கு உயர்ப்பை அளிக்கிறது. அதை இப்படி விவரித்து சீடன் முழுமையான சுய வளர்ச்சியை அடைய வேண்டும் என்பதற்காகவே! பகவத் கீதையிலுள்ள தத்துவத்தின் சாரமே ஈசாவாஸ்ய உபநிஷதத்தின் முதல் மந்திரம்தான். எல்லை, முடிவற்ற பரம்பொருள்தான் உலகத்திலுள்ள எல்லாவற்றையும் உட்புகுந்து ஊடுருவி நிறைந்து நிற்கிறது. எனவே பன்மைத் தோற்றம் அவ்வளவையும் துறந்து அந்த அனந்த தத்துவத்தை அனுபவி. பிறர் சொத்துக்கு ஆசை கொள்ளாதே.*

தேக ஆத்ம புத்திதான் தனியான ஒரு 'நானை' (அஹம் என்கிற ஜீவதத்துவத்தை) உற்பத்தி செய்கிறது. இந்த ஜீவன் தான் பெருமூச்சுவிடுவதும் அழுது அங்கலாய்ப்பதும்.

இந்தத் தெய்வீகக் கீதத்தின் விடாமல் மிகைப்படுத்தப்படுகிறதோ என்று ஐயம் ஏற்படும்படி, அடிக்கடி சொல்லப்படும் கட்டளை, அகந்தையை விட்டு செய லாற்று! என்பதுதான். நம் குறைபாடுகள், கவலைகள் எல்லாவற்றிற்கும் இந்த 'அஹம்' தான் காரணம். இந்தத் தனித்தன்மை கொண்ட 'நான்' என்கிற பாவனையை எவ்வளவுக்கெவ்வளவு இல்லாமல் ஆக்கிவிடுகிறேமோ அவ்வளவுக்கவ்வளவு முழுமை வானில் ஏறுகிறேம். நமக்குள்ளே இன்பத்தைக் காண்கிறேம்.

சமர்ப்பண பாவனை கொண்ட பக்தி மனப்பாங்கை வளர்த்துக் கொண்டு (சரணுகதி செய்யப் புரிந்து கொண்டு) 'அஹம்' தத்துவத்தை பகவானிடம் அர்ப்பித்துவிடு' என்று கிருஷ்ணன் ''சரணுகதி''யைச் சொல்லிக் கொடுக்கிறுர். அர்ஜுனன் உண்மையில் புத்திசாலியான சீடனுயிற்றே! அவன் கேட்கிறுன்—என் செயல்களை எல்லாம் எந்த ஈசுவரனுக்கு எந்த பலிபீடத்தில், அல்லது லக்ஷியத்துக்கு 'அர்ப்பணம் செய்ய' என்று? ஸ்ரீ கிருஷ்ணன் முன் சுலோகத்தில் ஈசனுக்கு இலக்கணம்

---

* சுவாமியின் ஈசாவால்யோபநிஷத உரைகளைக் காண்க. சாந்தி பாடத்தின் விளக்க உரையையும் கவனிக்க மறக்கவேண்டாம்.

கூறி அவரைச் சுட்டிக் காட்டியுள்ளார். இப்போது அவர் அர்ஜுனனிடம் ''அவரிடம் அகத்தையை சரணுக்கி விடு என்கிருர். அவரிடம் ''முழுமையாகப் பறந்து சென்று அடைக்கலம் ஆகு.''

நம் யுகம் ஐயப்பாடும் கேள்விகளும் நிறைந்த யுகம். அர்ஜுனன் நமக்கு உண்மையான பிரிதிநிதி போலவே இருக்கிருன். நம்பிக்கையைக் கிளறிக் கேள்விகள் கேட்பவனை ஐயுறவுவாதி என்கிருேம். நம்பிக்கைக்கு ஆதாரம் என்ன என்று அவன் புத்தி பூர்வமாகப் புரிந்து கொள்ள விரும்புகிருன். [2]

ஸ்ரீ கிருஷ்ணன் ஏற்கனவே 'ஈசுவரன்' என்ற பதத்தின் குறிப்புப் பொருளை விளக்கியிருக்கிருர். இப்போது கீதை அர்ஜுனனை நீ அவரிடம் அடைக்கலம் சேர்' என்கிறது. அந்தப் பேருணர்வு, உயிரின் இசைலயம் பொருந்திய ஒருமை—அதுதான் எல்லாக் கருவிகளுக்கும் (உயிர் கொண்ட உடலமைப்புக்களுக்கும்) உள்ளிருந்து இயக்கம் கொடுக்கிறது. ''அந்தத் தத்துவத்திடம் நம் இதயத்தை அடைக்கலமாக ஒப்புவித்து விட்டு நாம் வாழ வேண்டும்—செயலாற்ற வேண்டும்' என்று கீதை நம்மைப் பணிக்கிறது. சுருங்கக் கூறின் ஆத்மாவுடன் தாதாத்ம்யத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அது எந்தக் கருவிகள் மூலம் தன் இருப்பை வெளியிடுகிறதோ அவற்றுடன் இணைப்பைக் கத்தரித்துக் கொள்ளுங்கள். இவ்விதம் முழுமையாக (சர்வபாவேன) எவன் அடைக்கலம் புகுகிருனே அவன் புத்தி நன்கு விழிப்படைந்து விடுகிறது. அதற்குப் பிறகு வெளிவிவகாரங்கள் அவனை அங்கும் இங்கும் அலைக்கழித்து அவன் ஜீவனை நசுக்கி வாட்டிவிட முடியாது.

நிகழ் காலத்தின் பசுமையும் ஒளியும் பொருந்திய நிலையை எப்போதும் எண்ணியிருப்பவன் உடலும் மனமும் முட்டாள்தனமான எந்தத் தேவையையும் ஏற்றுக் கொள்ளா. அப்படிப்பட்ட ஒளி பொருந்திய புத்தியைக் கொண்டு வாழ்க்கையில் ஈடுபடும் ஒருவனுக்கு எந்தப் பிரச்னையும் எழாது. எழும் பிரச்னைகளும் கருகிவிடும்! அவன் வழி கம்பளம் விரித்தது போல் மிகவும் சுகமானதாக ஆகிவிடும். அவன் ஆனந்தமாக முன்னேறுவான்.

எவ்வளவுக்கெவ்வளவு நாம் 'அந்தப் பரமனுக்குள் அடங்கி விடுகிருேமோ அவ்வளவுக்கவ்வளவு அவன் ஆற்றலும் ஒளியும்

---

[2] ஐயுறவுவாதியுடன் நாஸ்திகனை ஒப்பிட்டால் அவன் மந்தபுத்தி. அறிவு வளர்ச்சி குறைந்தவன். மனித உடலில் இருந்து கொண்டே மிருக வாழ்வு வாழ்பவன். அவ்வப்போது எழும் ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்வதுதான் அவன் குறிக்கோள். நரம்பு நுனிகள் அமைதியடைய வேண்டும்—அவ்வளவுதான்! வாழ்வின் உன்னதப் பெருமையைப் புரிந்து கொள்ளும் அளவுக்கு இதயமோ, மூளையோ, வளரப் பெருதவன். நம்பிக்கையைப் பற்றிக் கேள்வி கேட்டு சிந்திக்க முடியாதவன்.

நமக்கும் கிடைத்துவிடும். அவற்றைத்தான் —நாம் அவன் பிரஸாதம் (அருளின் விநியோகம்) என்கிறோம். நம் ஆளுமையை ஒருவயப்படுத்தி, எப்போதும் அகங்காரத்தை அவனுக்கு அர்ப்பணிப்பதன் மூலம் நம்முள்ளே அவன் பிரசாதம் வெள்ளமாய்ப் பொங்கிச் சேரும். அப்படிச் சேர்ந்த போது நமக்கு 'பரம சாந்தியும் பரம நித்தியமான சொர்க்க இருப்பும் கிடைத்துவிடும்.

சர்வபாவேன—அப்படியே முழுமையான உயிருடன்—சரணகதி தாற்காலிகமானதாகவும் தன்னை ஏமாற்றிக் கொள்வதாகவும் இருக்கக் கூடாது. நம் வாழ்வின் எல்லா நிலைகளிலும், எல்லா மட்டங்களிலும் தெய்வீகத்தின் இருப்பை உணர்வுபூர்வமாக இழைத்துவிட வேண்டும். இதற்கு எடுத்துக் காட்டுத்தான் 'ராதை, அனுமான் பிரஹ்லாதன்... இன்னம் மற்றவர்கள்.' நம்முடைய எல்லா நிலைகளையும், நம் ஆளுமையின் எல்லா அமிசங்களையும் பரிபூரணமாக அவன் அன்புக்குள் இணைக்காவிட்டால் நாம் நம்முடைய அழிவுறும் 'அகம்' பாவத்தை அழிக்க முடியாது. அந்த எல்லையற்ற பரம்பொருளின் மடியில் ஆனந்தமான இடத்தையும் பெறமுடியாது. ஒரு உண்மையான பக்தன் இந்தவிதம் தன் இருப்பு, நடத்தை, எண்ணம் எல்லாவற்றையும்,தன் முழு ஆளுமையையும் அப்படியே பரிபூரணமாக மாற்றிக் கொண்டுவிட வேண்டும். பரமன் கைப்பாவையாக, அவனுடைய வெளியிட்டுக்கு சுய முனைப்பு இல்லாத, கருவியாக மாறிவிட வேண்டும். அப்போது தான் இந்த மோகங்கள் எல்லாம் மறையும்—அவன் அமரத் தன்மையை இறைநிலையை அடைய முடியும்!

முடிவுரையாக ஸ்ரீ கிருஷ்ணன் மேலும் கூறுகிறார்:

இதி தே ஜ்ஞானமாக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா
விம்ருச்யைத தசேஷேண யதேச்சஸி ததா குரு

*18:63*

இதி—இவ்விதம்; தே—உனக்கு; ஜ்ஞானம்—தெய்வீக அறிவை; ஆக்யாதம்—சொல்லப்பட்டிருக்கிறது; குஹ்யாத்—ரஹஸ்யத்தைவிட; குஹ்யதரம்—அதிக ரகசியமானது; மயா—என்னால்; விம்ருச்ய—இதை நன்கு முன்னும் பின்னும் சிந்தித்து ஆய்ந்து; ஏதத்—இதை; அசேஷேண—பூராவாக; யதா இச்சஸி—எப்படி விரும்புகிறாயோ; ததா—அவ்விதம்; குரு—செய்.

இவ்விதம் ரஹஸ்யத்திலும் ரஹஸ்யமான இந்தப் பேரறிவு உனக்கு என்னால் சொல்லப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி நன்கு முன்னும் பின்னும் ஆய்ந்து சிந்தித்து பிறகு எப்படி விரும்பு கிறாயோ அவ்விதம் செய்வாயாக.

குருக்ஷேத்திரச் சண்டைக் களத்தில் ஸ்ரீ கிருஷ்ணன்

நிகழ்த்திய பேருரையின் முடிவான சுலோகமாக இதைக் கொள்ளலாம். வடமொழியில் 'இதி' என்ற சொல் ஆங்கிலத்தில் '*Quotation closes*' மேற்கோள் முடிகிறது. என்று சொல்லப் படுவது போன்ற இடத்தில் வடமொழியில் பயன்படுகிறது. பகவான் தன்னுடைய உபந்யாஸத்தை இங்கே முடித்து வைக்கிறார்.

கீதாசார்யன் கண்ணன் வாழ்க்கை வாழவேண்டிய கருத்து வழி இவற்றின் சாரபூதமான அமிசங்களை எல்லாம் கூறி விட்டான். இனிமேல் சேர்த்துச் சொல்வதற்கு ஒன்றுமில்லை.

குஹ்யாத் குஹ்யதரம்: ரஹஸ்யங்களை எல்லாம் விட ரஹஸ்யமானது. ரஹஸ்யம் என்பது வெளியே தெரியாதவரை தான் ரஹஸ்யமாக இருக்க முடியும். நமக்குத் தெரிந்துவிட்ட அக்கணமே அது ரஹஸ்யமில்லாது போய் விடுகிறது. ஆன்ம உண்மைப்பொருளும், சரியான வாழ்க்கை முறையும் மேலே சொல்லப்பட்டிருக்கின்றன.. அவற்றை ரஹஸ்யத்தைவிட ரஹஸ்யம் என்கிறார் கண்ணன். இதற்குப் பொருள் என்ன என்றால் இதற்கு உரிய தீக்ஷை (உபதேசம் வழிகாட்டுதல் முதலியன) இல்லாமல் கீதை காட்டும் ஆக்க, இலக்க பூர்வமான வாழ்க்கை முறை, உண்மையைப் பற்றி கீதை தரும் நோக்கு இவற்றை சரியாகப் புரிந்து கொள்வது எல்லோருக்கும் சுலப மில்லை என்பதுதான். இந்தப் பௌதீக உலகை நன்கு நுணுகிப் புரிந்து கொள்ளும் ஆற்றல் படைத்த நுழைமாண் நுண்புலம் கூட பௌதீக உலகத்தின் பொருள்கள். அவற்றின் அமைப்பு, ஒன்றுக் கொன்று அவை பாதிக்கும் விதம் எல்லாவற்றையும் மிகவும் எளி தாகப் புரிந்து கொண்டுவிடும் சக்தி பெற்றிருக்கலாம். ஆனால் அதுகூட இந்த சூட்சுமமான, அநித்ய அநந்த தத்துவமான ஆத்மாவைக் காண்பதில் தோல்வியடைந்துவிடும்.

இந்த 'குஹ்யம்' என்ற சொல்தான். இந்தியாவில், சமீப காலத்தில் மிகவும் தவறாக, அபத்தமாக, குழப்பம் அளிக்கும் வகையில் பொருள் செய்யப்பட்டு வருகிறது. நம் நாட்டின் பண்பாட்டின் சாரபூதமான இந்த ஆத்மஞானத்தை யாரும் அணுகாதபடி மிகவும் பத்திரமாகவும் பொருமையுடனும் மறைத்து ஒளித்துக் காப்பாற்ற வேண்டும்' என்று பொருள் கொள்ளப்பட்டது.

இந்தப் புனித சாஸ்திரங்களை நமக்குத் தந்த ரிஷிகள் மிகுந்த உதாரகுணம் படைத்தவர்கள். அந்த குணத்துடன் இந்த சாஸ்திரங்களை நாமும் படித்தோமானால் இப்படிப் பொருள் கொள்வதற்கு இடமே இல்லை என்று தெரியும். ஆம். சில மக்கள் இருப்பார்கள்; அவர்களுக்கு இந்தப் பேருண்மையையும் அதன் சூக்குமமான அமிசங்களையும் புரிந்து கொள்ளும் அளவுக்கு புத்தியின் பார்வையோ, மனதின் உறுதியோ, உடல் கட்டுப்

பாடோ இல்லாமல் இருக்கலாம். அவர்களிடம் இது சொல்லப் படுவதில்லை. அவர்களிடமிருந்து இது மறைக்கப்படுகிறது. அதுவும் அவர்கள் இந்தப் பெரிய சக்தி கொண்ட தத்துவத்தைத் தவருகப் புரிந்து கொண்டு நேர்மையற்ற முறையில் வாழ்ந்தார் களானுல் அவர்கள் தங்களுக்கே தீங்கு செய்து கொண்டு விடுவார்கள் அன்ருே!

இதைப்பற்றி எல்லாம் முன்னும் பின்னும் ஆய்ந்து சிந்தித்து (விம்ருச்ய) எவ்வளவுதான் கேட்டாலும் விஞ்ஞானம் (அனுபவ ஞானம்) கிட்டாது. படித்தோ, கேட்டோ அறிந்ததை நாம் நம்முடையதாக்கிக் கொள்ள வேண்டும். அதாவது அந்த அறிவு நம்முடைய வாழ்வு என்னும் ஆடையில் ஊடு பாவு ஆகி விட வேண்டும். அப்போதுதான் 'அறிவு' ஞானமாகும். எனவேதான் கிருஷ்ணன் தான் சொன்ன வாழ்வுத் தத்துவக் கதையை அப்படியே ஏற்றுக் கொள்ளாதே என்கிருர். 'நான் கூறியதை எல்லாம் தனியே நீயாக சந்தி' என்கிருர். கருத்துக்களை மனதுக்கும் புத்திக்கும் இடையே வைத்து சரியான முறையில் அவற்றை அசை போட்டு ஞானமாக்குவதையே 'மனனம்' (சிந்தித்தல்) என்கிருேம். ஒவ்வொருவரும் இதை எல்லாம் தன் உள்ளத்திலிருந்தே புரிந்து கொண்டு 'சரிதான்' என்று ஒப்புக் கொள்ள வேண்டியது அவசியம்.

அப்பால் நீ விரும்பியபடி செய்: நீ கிருஷ்ண பகவான் செயலில் ஈடுபட்டு சிறந்து உயர்ந்த வாழ்வை வாழும் சுதந் திரத்தை அர்ஜுனனுக்கே கொடுத்துவிடுகிருர். தான் முயன்றுதான், யாரும் ஈசுவரனை அடைய வேண்டும். இதில் நிர்ப்பந்தம் கிடையாது; கூடாது ஏன் என்றுல் புதுப் பிறவி களுக்கு சுய விருப்பம் இன்றியமையாத நிபந்தனையாகும். வயிற்றைக் கிழித்துக் குழந்தையை எடுப்பது அநேக நேரங்களில் பயங்கர விளைவை ஏற்படுத்திவிடும். குழந்தைக்குக் கெடுதல், தாய்க்குக் கெடுதல் (ஆசை காட்டியோ அச்சுறுத்தியோ) பலாத்கார மதமாற்றம் சமய நிறுவனத்துக்கும் நல்லதல்ல; மதம் மாறுகிறவனுக்கும் நல்லதல்ல.

ஹிந்து மதத்தில் பிடிவாதம், நிர்ப்பந்தம் பலாத்காரம் ஒன்றும் கிடையாது. நாம் செடியை நம் இஷ்டப்படி வளர்க் கலாம் அங்கே இங்கே கத்தரித்து விடலாம். அழகுத் தோற்றம் ஏற்படுத்தலாம். நீர் பாய்ச்சி எரு ஊட்டி நல்ல சூரிய வெளிச்சத் தில் இருக்கும்படி பார்த்துக் கொள்ளலாம். ஆனுல் ஒரு பூ மொட்டைக் கூட நம் இஷ்டப்படி மலர்ந்து மணம் வீசும்படி செய்ய முடியாது. அதேபோல் மனிதனை நம் இஷ்டத்துக்குக் கட்டுப்படுத்தி தார்மீகம் நெறிமுறை ஆகியவற்றில் வளரச் செய்ய முடியாது. ஆன்மீக மலர்ச்சியையும் தந்துவிட முடியாது.

உண்மையில் ஒரு கலைஞன் விடுதலை வானில் தான் வளரமுடியும். கைகால்களைக் கட்டிப்போட்டு அவனை மலரச் செய்யமுடியாது. ஹிந்துவிடம் அவன் சாஸ்திரங்கள், ''நீ தனியே நீயாகச் சிந்தித்து நீ விரும்பும் முடிவுக்கு வா. அதையே ஏற்றுக் கொள்'' என்று சொல்கின்றன. சிந்திப்பதற்கு உதவ சில அறிவுரைகள், சில வழிகள் கொடுக்கப்படுகின்றன. உண்மை. ஆனுல் ஒவ்வொருவரும் தன் வழியேதான் போய், தானே அறிந்து புரிந்துகொள்ள வேண்டும். சமயம் எதையாவது நிர்ப்பந்தமான கட்டுப்பாடாக யாரிடமாவது திணிக்க முயன்றுல், சமயம் ஒரு கட்டுப்பாடான புறச் சடங்காகவும் உடற்பயிற்சியாகவும் முடிந்துவிடும். உள் வளர்ச்சிக்கு அவ்வளவு உதவாது. அதனுல்தான் கண்ணபிரான் பகவத் கீதையில், வழியையும் குறிக்கோளையும் செவ்வனே விளக்கிவிட்ட பிறகு, ''நீ எவ்விதம் விரும்புகிருயோ அவ்விதம் செயல்புரி'' என்று குறிப்பாக உணர்த்துகிருர்.

தெய்வீக அழைப்பை ஏற்றுக் கொள்ளவோ மறுக்கவோ மனிதனுக்கு உரிமை உண்டு. அவன் இரண்டில் எதையும் ஏற்றுக் கொள்ளலாம். ஆனுல் ஒரு தலைமுறை மக்களையே ஆடு மாடு போல் சமய வேலிக்குள் விரட்டி அடைத்துப் போடுவது என்ற பேச்சுக்கே இடமில்லை. ஹிந்துக்களின் சிந்தனை (கல்விக் கூடத்தில்) முறையில், பண்பாடு நாடுபவர்கள் தனித்தனியாக சிறந்த வாழ்வு முறையின்பால் ஈர்க்கப்பட்டு அவர்களே சென்று அடைய வேண்டும். உண்மையாக ஆன்ம வாதிகளான குருமார்கள் அச்சுறுத்தியோ, அதிசயங்கள் நிகழ்த்தியோ, பொய்யான ஆசைகள் காட்டியோ, தங்கள் தலைமுறையினரை சமய வாழ்வுக்கு அழைக்கக் கூடாது. அழைக்கவும் மாட்டார்கள். உண்மையான தீர்க்கதரிசி தனக்கு உண்மையில் உரிமையல்லாத எந்தப் பொறுப்பையும் அநாவசியமாக ஏற்றுக் கொள்ள மாட்டான். ஆனுல் அவர் தன் கடமையாக ஏற்றுக் கொண்டு அறிவுரைகள் பகர்வார். வழிகளைச் சுட்டுவார். ஆனுல் ஒருநாளும் நிர்ப்பந்தப்படுத்த மாட்டார்.

வெறியின் பிடிவாதம் சொல்லவொண்ணு அளவு மனிதனுக்குக் கஷ்டங்களைக் கொடுத்து விட்டது. புரோகித வர்க்கத்தினரின் வீண்வாதங்களால் சிந்தனைத் திறனற்ற தலைமுறை, கொலை செய்யவும் தூண்டப்பட்டு விடுகிறது. அதைப் 'புனிதப் போர்'கள் என்றும் பாராட்டிக் கொள்கிறது. இந்த நிலை, பெரும் அளவில் சிடர்கள் கூட்டம் அறிவற்ற சூழ்நிலையில் வைத்து விடப்படும் போது, சாத்தியமாகி விடுகிறது. அந்தக் கூட்டம் சற்றுக்கூடத் தானே தனியாக சிந்தித்துப் பார்க்காமல் அருட் போதகர்கள் அல்லது குருமார்கள் சொல்வதைக் கண் மூடித்தனமாக நம்பிவிடுகிருர்கள்.

ஆனால் இங்கே பாருங்கள். பகவத் கீதைக் காட்சியில் காணப்படும் அடையாளச் சித்திரத்தில் கிருஷ்ணன் தேரோட்டியாயிருக்கிறான். அர்ஜுனன் எங்கே சொன்னாலும் அங்கே தேரை ஓட்டிச் செல்லத் தயார்! அவரிடத்தில் ஆயுதம் கிடையாது. அவருக்கும் எந்தப் போருக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. குருக்ஷேத்திரச் சண்டையின் மூலம் அக்களத்தில் அவர் அடையப் போகிற லாபமும் கிடையாது. நஷ்டமும் கிடையாது. இருப்பினும் அவருக்கு ஒரு கடமை இருக்கிறது. அவருடைய 'எஜமானன்' இருந்த குறிப்பான ஒரு விசேஷ மனோநிலை காரணமாக அவன் சில விஷயங்களை, சில பல மாறுபட்ட அமிசங்களை, சில கருத்து நோக்குகளை மறந்துவிட்டிருந்தான். அல்லது அலட்சியம் செய்து விட்டிருந்தான். அவற்றை எடுத்துக் காட்டும் கடமை அவன் சாரதியான கண்ணனுக்கு இருந்தது. அதனால் அவர் வாழ்க்கையின் தத்துவங்கள். அவற்றின் எண்கள், வாழ்க்கைக்கான முறைகள் போக்குகள்—ஆகியவற்றை எல்லாம் பூராவாக, ஒன்றும் விடாமல் எடுத்துக் கூறினார். பிறகு முடிவில் 'இவற்றை எல்லாம் மனதில் கொண்டு நீயே தனியாக, சுதந்திரமாக உன் முடிவை உன் பொறுப்பிலேயே செய்து கொள் என்கிறார். மிகவும் சரியான முறையில். ஆன்மீக ஆசாரியர்கள் நிர்ப்பந்தம் செய்தல் கூடாது. அப்படி இந்தியாவில் அந்த விதமாக மூளை வெளுப்போ' பரப்பும் பிடிவாதமோ இருந்ததில்லை.

கர்ம யோகத்தில் தெய்வத்திடம் திடமான பக்தி வேண்டும். அதுதான் வெற்றிக்கு ரகசியம். அந்த விஷயம் பின்னால் இதோ வருகிறது.

ஸர்வ குஹ்யதமம் பூய: ச்ருணு
மே பரமம் வச:
இஷ்டோ(அ)ஸி மே த்ருடமிதி ததோ
வக்ஷ்யாமி தே ஹிதம்

*18:64*

ஸர்வ குஹ்யதமம்—எல்லாவற்றுக்குள்ளும் மிகவும் மறைவானது (ரகசியம்); பூய:—மீண்டும்; ச்ருணு—கேள்; மே—என்னுடைய; பரமம் வச:—மிகவும் உயர்ந்த வார்த்தையை; இஷ்ட:—பிடித்தவனாக; அஸி—இருக்கிறாய்; மே—எனக்கு; த்ருடம்—மிகவும்; இதி—என்று; தத:—அதனால்; வக்ஷ்யாமி—சொல்வேன்; தே—உன்னுடைய; ஹிதம்—நன்மையை.

மறுபடியும் என்னுடைய மிக உயர்ந்த வார்த்தையைக் கேள்; அது பரம ரகசியமானது; (உனக்குச் சொல்கிறேன்) ஏன் என்றால் நீ எனக்கு மிகவும் பிரியமானவன்; அதனால் உனக்கு

நன்மையானதைச் சொல்வேன்.

பகவான் விரிவுரையை, ''ஞானம் என்னுல் உனக்குச் சொல்லப்பட்டு விட்டது. இனி நீ உன் இஷ்டப்படி செய்!'' என்று சொல்லி முடித்துவிட்டார். அர்ஜுனன் இதுவரை கவனமாகவும், சிரத்தையாகவும் பக்தியுடனும்தான் கேட்டுக் கொண்டிருந்தான். என்ருலும் அவன் முகத்தில் ஒரு குழப்பத்தின் நிழல் தோன்றிற்றுப் போலும். அவன் இன்னம் ஏதோ கேட்க விரும்புகிருன். *

பாண்டவ ராஜகுமாரன் ஒருகால் மிகவும் ஆழமான வாழ்க்கைத் தத்துவத்தை முற்றிலும் புரிந்து கொள்ளாதவன் போலவும் தோற்றம் அளித்திருக்கலாம். இதை எல்லாம் எண்ணி கிருஷ்ணன் தொடர்ந்து சொல்கிருர்.—அர்ஜுனு! கேள். நான் மிகவும் சிறந்த பரமரகசியமான ஞானத்தைப் புகல்கிறேன். மீண்டும் இந்த மிகவும் ஆழமான விஷயத்தை ஒரு முறை கேட்டுக் கொள்.

உலகில் ஆசாரியர்கள் பிறக்கிருர்கள். தத்துவத்தை உருக்கொடுத்து, விளக்கிப் பரப்புவதில் வாழ்நாளைக் கழிக்கிருர்கள். அவர்களை அப்படித் தூண்டுவது ஏது? அவர்களுக்கு மக்கள்பால் உள்ள அளவு கடந்த அன்புதான். கிருஷ்ணனும் சொல்கிருர். ''அர்ஜுனு! நான் வாழ்க்கைத் தத்துவத்தையும் வழிமுறையையும் விளக்கிச் சொல்கிறேன். உனக்காகவே சொல்கிறேன். ஏன் என்ருல் உன்னிடம் எனக்கு மிகவும் பிரியம். நீ எனக்கு மிகவும் இஷ்டனுக இருக்கிருய்!'' அதற்காகவே அவர் மீண்டும் போட்டோ படத்தில் அமைவது போல், இதுவரை சொன்னதை எல்லாம் சுருக்கி அமைத்துக் காட்ட விரும்புகிருர். அதீற்காக முயலுகிருர்.

அர்ஜுனன் பிறவியாலும் குணத்தாலும் வீரன். ஒரு சிப்பாயின் மனம் சொற் சிக்கல்கள் நிறைந்த விரிவுரையைக் கேட்டுக் கொண்டிருக்கும் பொறுமை கொண்டிருக்காது. அவனுக்கு சின்னதாவும் தெளிவாகவும் இருக்கிற உத்தரவு உரத்த குரலில் கத்தப்படும் போதுதான் உரைக்கும். அதை அப்படியே கீழ்ப்படிந்து நடக்க அவன் கற்றுக் கொண்டிருக்கிருன். வாழ்நாள் முழுதும் பயிற்சி பெற்றிருக்கிருன். அறிக்கைகள் நினைவுக் குறிப்புக்கள் என்று நீண்ட முழக்கங்கள் ஒரு சிப்பாயைக் குழப்ப வைத்துவிடும். குறிப்பிட்ட தெளிவான

* கேனே பநிஷத்திலும் இப்படி ஒரு நிலை வருகிறது. சீடன் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு, பிரமத்தைப் பற்றிக் கற்பியுங்கள் என்கிருன். குரு நான் சொல்ல வேண்டியது எல்லாம் சொல்லி விட்டேன். என்கிருர். என்ருலும் மீண்டும் தொடக்கத்தில் உள்ள சீடனுக்குத் தேவையான கட்டுப்பாட்டுக்கான சில மந்திரங்களைச் சொல்கிருர். சுவாமி கேனேபநிடத விரிவுரை காண்க.

செறிந்த சொற்களில் உத்தரவு—அதை உரத்த குரலில் எடுத்துக் கர்ஜனை செய். உடனே அவன் அதை நிறைவேற்றி விடுவான். அர்ஜுனன் முழு தத்துவ விரதத்தையும் தீர்மானமான, தெளிவான, பிசிறில்லாத உத்தரவின் உருவத்தில் கிருஷ்ணன் சொல்ல வேண்டும் என்று எதிர் பார்க்கிறான். ஒரு படை வீரன் உள்ளத்தில் எழும் மௌனமான தேவையைக் கண்ணன் உணர்ந்து கொள்கிறார். அதனால் அவர் ''இந்த எல்லாவற்றிலும் மிகவும் ரகசியமான (ஸர்வகுஹ்யதமம்) உண்மையை எடுத்துச் சொல்கிறேன் கேள்!'' என்கிறார்.

அது என்ன?''

மன் மனாபவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானே ப்ரியோஸி மே

18:65

மன்மனா—என்னிடம் நிறுத்தப்பட்ட மனமுள்ளவனாக; பவ—இரு; மத்பக்த—என்னிடம் பக்தி கொண்டவனாக; மத்யாஜி—என் பேரில் தியாகம் செய்பவனாக; மாம்—என்னை; நமஸ்குரு—நமஸ்காரம் செய்; மாம் ஏவ—என்னையே; ஐஷ்யஸி—அடைவாய்; ஸத்யம்—உண்மையை; தே—உனக்கு; ப்ரதிஜானே—நம்பிக்கை தருகிறேன்; ப்ரிய:—பிரியமானவனாக; அஸி—இருக்கிறாய்; மே—எனக்கு.

உன் மனதை என்னிடம் நிறுத்தி வை. என்னிடம் பக்தி கொள். எனக்குத் தியாகம் செய். என்னை நமஸ்காரம் செய். நீ என்னையே அடைவாய். உண்மையாக இதை உனக்கு நான் சத்தியம் செய்து கொடுக்கிறேன். நீ எனக்குப் பிரியமானவனாக இருக்கிறாய்!

மறுமலர்ச்சி யுகத்தைக் கொண்டுவர விரும்புகிற தத்துவ மேதைகளுக்கு அடிப்படை உண்மையை மீண்டும் மீண்டும் வலியுறுத்திச் சொல்ல வேண்டியிருக்கும். ஏன் என்றால், காலம் மிகவும் தாழ்வடைந்து, நலிந்து நடத்தை தவறி கெட்ட காலமாக இருக்கும். இரண்டாவது விளக்க உரைகளின் சொற்கள் எழுப்பும் புகை மண்டலம் உண்மையின் தெளிவான பொருளை மறைத்து நிற்கும். என்றாலும் விளக்கங்களும் விபரங்களும் இல்லாமல் அடிப்படை உண்மைகளைப் புரிய வைக்கவும் முடியாது. அவற்றை நன்கு அடித்துப் பதிய வைக்கவும் இயலாது. வழவழப் பேச்சுக்கோ சுணையற்ற வார்த்தைக்கோ உண்மையை ஆணி அறைந்தாற் போல் உள்ளே இறக்க முடியாது. கொஞ்சம்கூட தயக்கமோ, தாட்சண்யமோ இல்லாமல் ஒரு சுத்தியலால்தான் தலையிலடித்து ஆணியை இறக்க

முடியும். அநேகக் கருத்துக்களை 'மீண்டும் கூறுதல்' என்கிற சுத்தியால் அடிகள் இல்லாமல், குழம்புகின்ற மனச் சுவற்றில் தங்கவைக்க முடியாது. எல்லா சாஸ்திரங்களுமே இதை முறை யாக வைத்துக் கொண்டிருக்கின்றன. இங்கேயும் கிருஷ்ணன் தன் சீடன் நன்மைக்காக தன் தத்துவக் கருத்துக் கோவையில் முக்கியமான உயிர்நாடியான உண்மையைத் திருப்பிக் கூறு கிறான்.

'நீ என்னையே அடைவாய்' என்று இங்கே சத்தியம் செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு . சாதகனுக்கு இருக்க வேண்டிய நான்கு நிபந்தனைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒரு பெரிய தத்துவம் சுருக்கப்பட்டு சில கருத்துத் துளிகளாகக் கொடுக்கப்படும் போது அது பார்ப்பதற்கு எவ்வளவோ மிகவும் எளியது போலத் தோன்றுகிறது. கேட்கிறவனையும் அதன் முழுப் பொருளையும் தெரிந்து கொள்ள முடியாதவனாக ஆக்கிவிடுகிறது. அந்தத் தவற்றைப் போக்கி கவனத்தை உறுதி செய்வதற்காக ஆசிரியர் தவறாமல் 'நான் சத்யமாகச் சொல்கிறேன்' என்று மீண்டும் மீண்டும் சொல்லித் தன் கருத்தை வெளியிடுகிறார்.

இப்படி உறுதி சொல்லியும்கூட அதற்கும் அழுத்தம் கொடுப்பதற்காக கிருஷ்ணன் தன் செய்கைக்கான காரணத்தை யும் 'நீ எனக்கு மிகவும் வேண்டியவன், 'பிரியமானவன்!' என்று சொல்லி தன் வார்த்தைகளுக்கு மேலும் உரம் ஊட்டுகிறார். ஆன்ம சாஸ்திரம் அன்பின் அடிப்படையைக் கொண்டு அதனால் உயிர் பெற்றுத்தான் எழுந்திருக்கிறது. ஆசாரியனுக்கு ஊக்கமும் சீடனிடம் அபரிமிதமான அன்பில்லை என்றால் சொல்லிக் கொடுப்பதற்கு ஊக்கமும் இருக்காது. மகிழ்ச்சியும் ஏற்படாது. தொழிலாகக் கருதி வேலை செய்யும் ஆசிரியர் வெறும் கூலி வாங்கும் ஆசாமிதான்! அப்படிப்பட்டவருக்கு மாணவனுக்குள் ஊக்கத்தை ஏற்படுத்த முடியாது. அவருக்கும் சொல்லிக் கொடுப்பதனால் ஏற்பட வேண்டிய உண்மையான திருப்தியினா லும், சரிவரச் செய்தோம் என்கிற எண்ணத்தாலும் எழுகிற உச்ச மகிழ்ச்சியும் கிடைக்காது.

இங்கே சொல்லப்பட்டிருக்கிற தத்துவ விஷயத்தில் சார மான பகுதியும் காட்டப்பட்டிருக்கிற வழியும் முன்னால் ஒரு அத்தியாயத்தில் (9ஆம் அத்தியாயம் 34வது சுலோகத்தில்) சொல்லப்பட்டிருப்பதுதான். இங்கே மீண்டும் இதை 'இது முற்றிலும் வேறு கலப்பு,இல்லாத உண்மையே! ஏதோ தேவைக் காக ஏற்படுத்திக் கொண்ட சலுகை அல்ல' என்ற அதிகப்படி யான உறுதியுடன் கண்ணன் சொல்லியிருக்கிறார்.

(மன்மனா) என்னிடம் மனதை நிறுத்தி—அதாவது எப்போதும் என்னையே எண்ணிக் கொண்டு—உன் செயல்களை

எல்லாம் எனக்கே அர்ப்பணம் செய்வதன் மூலம், எங்கும் ஊடுருவி பரவியிருக்கும் 'உயிர்த் தத்துவத்துக்கு அடைக்கல மாக, உன் செயல்களைக் காணிக்கையாக்குவதன் மூலம்—என்று பொருள். அவ்விதம் நீ உலகில் சேவை புரிந்தால் நான் கொடுக்கும் சத்தியம் (வாக்களிப்பு) என்ன என்றால் நீ அந்தப் பரம லக்ஷ்யத்தைக் கண்டிப்பாய் சென்று சேர்வாய் என்பதாகும்.

மற்ற சமயங்களில் எல்லாம் சென்று அடைய வேண்டிய குறிக்கோளும் இதை போதிக்கிற போதகரும் ஒன்றாயிருக்க மாட்டார்கள். ஆனால் கீதையில் அந்தப் பரம் பொருளே பேசுகிற படியால் 'நீ என்னையே அடைவாய்' என்று சொல்லப்பட்டிருக்கி றது.

வாசுதேவனையே உன் ''அடைய வேண்டிய இலக்காகவும் அவரையே வழியாகவும், சாதனமாகவும் கொள். நீ 'என்னையே' (வாசுதேவனையே) அடைவாய்.'' பகவான் கூற்றுக்கள் சத்திய மானவை. மோக்ஷம் பக்தியின் பலன். இதை நம்பி ஒவ்வொருவரும் பகவானையே ஒரே அடைக்கலமாகவும் மிகச் சிறந்த அடைக்கலமாகவும் கொள்ள வேண்டும்.

நம்மிடம் உள்ள 'அகம்' தத்துவம் தவறான முறையில் அமைந்திருக்கிறது. தவறான கருத்துக்கள், பொய்யான கற்பனை கள்—இவைகள் மூலம் குழப்பங்களாலான கூண்டுக்குள் நம்மைப் பிணைத்து அடைத்து விடுகிறது. நம்மை விலங்குகள் கட்டி வைத்துவிடுகிறது. இந்தக் கட்டுக்களை அறுத்து நம்மை விடுவித்துக் கொள்வது நம் கையில்தான் இருக்கிறது. சம்பூர்ண பரம் பொருள் இவ்விதம் கட்டப்பட்டது போன்ற ஒரு கற்பனை நிலை ஏற்பட்டு விடவே—நாம் காண்கிறோம்—நம்முடைய மனமும் புத்தியும்தான் இந்த அசட்டுத்தனத்தைச் செய்து வைத்திருக்கின் றன. நாம் அவற்றையேதான் பயன்படுத்தி சுற்றிக் கட்டி யிருக்கும் கயிறுகளை அறுத்து எறிய வேண்டும். நாமே நம்மை அறைக்குள் அடைத்துக் கொண்டு பூட்டிக் கொண்டால் நாமே தான் திறந்து கொண்டு வெளியேற வேண்டும். 'அகத்'தை மைய மாகக் கொண்ட நம்முடைய (சகாம) கர்மாக்களால்தான் வாசனைகள் உண்டாகின்றன. நிஷ்காம கர்மங்கள் மூலம்தான் இந்த வாசனைகளைக் கரைக்க முடியும். எனவேதான் கிருஷ்ண பகவான் 'மனதை என் பால் நிறுத்தி வேலை செய்து கொண்டு போ என்று அறிவுறுத்துகிறார். ''பக்தியுடன் எனக்காக வேலை செய். உன் வேலைகளை எல்லாம் எனக்காக தியாகம் செய். வேள்வியின் ஹோமப் பொருளாக்கு!'' என்று சொல்கிறார்.

பரம் பொருளின் தன்மைகள், (குணங்கள்) நம்முடைய வாழ்விலும் பின்னிப் பிணைய வேண்டும் என்றால் பரம் பொருளான பகவானிடத்தில் பெருமதிப்பும் பக்தியும் மிகவும் தேவை. நீரைப் போலவே ஞானமும் உயரத்திலிருந்தே

தாழ்வாகவும் பாயும். இயல்பு உடையது. எனவே நம் மனம் எப்போதும் பகவானிடத்தில் மரியாதை, பக்தி இவற்றுடன் சமர்ப்பணம் அல்லது சரணுகதி ஆகி இருக்கவேண்டும். அப்படிப் பட்ட மனப்பாங்குடன் நீ உலகில் வேலை செய்தால், கண்ணன் உறுதி அளிக்கிறுர்— 'நீ என்னையே அடைவாய்!' என்று.

ஸ்ரீ சங்கரர் கருத்துப்படி ''முடிவாக கர்ம யோகத்தின் பரம ரகசியமே பகவானையே தனி ஒரு அடைக்கலப் பொருளாகக் கருதுவதுதான்.... என்று சொல்லி முடித்துவிட்டு, கண்ணன் இப்போது கர்ம யோகத்தின் பயனுக உபநிஷதங்களின் சாரம் எந்த பரமஞானத்தைச் சொல்கிறதோ அதை எடுத்துக் கூறு கிறுர்.

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம்
 சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
 மோக்ஷயிஷ்யாமி மா சுச:

**18:66**

சர்வதர்மான்—எல்லா தர்மங்களேயும்; பரித்யஜ்ய—விட்டு விட்டு;; மாம்—என்னை; ஏகம்—ஒருவனையே; சரணம்—அடைக்கல மாக; வ்ரஜ—கொள்; அஹம்—நான்; த்வாம்—உன்னை; ஸர்வபாபேப்ய:—எல்லா பாபங்களிலிருந்தும்; மோக்ஷயிஷ்யாமி—விடுவித்துவிடுவேன்; மா சுச:—கவலைப்படாதே.

(உடல் மனம் புத்தி ஆகியவற்றின்) எல்லாத் தன்மைகளை யும் விட்டுவிட்டு என் ஒருவனையே சரணுக அடை. உன்னை எல்லா பாபங்களிலிருந்தும் விடுவித்து விடுவேன்—வருத்தப்படாதே.

இந்த ஸ்ரீமத் பகவத் கீதையின் சுலோகங்கள் அவ்வளவிலும் மிகவும் சீரிய சுலோகம். ஆனுல் இதுதான் அதிகப்படியான சர்ச் சைக்கும் உரியது மொழிபெயர்ப்பவர்கள், எடுத்து விளக்கு கிறவர்கள், விமரிசகர்கள், விரிவுரையாளர்கள் எல்லோருமே இந்த சுலோகத்துக்கு வந்தவுடன் ஒரு குதி போட்டுக் கொண்டு தங்கள் தங்கள் திறமையைக் காட்டத் தொடங்கிவிடுகிறுர்கள். மாறுபட்ட வேதாந்த வாதிகளும் தங்கள் தங்கள் கருத்துக்களை நிலைநாட்டுவதற்காக இந்த ஒளி பொருந்திய சுலோகத்தின் ஒவ்வொரு வார்த்தையிலும் தங்கள் தங்கள் பொருளைப் புதைத்து விடுகிறுர்கள். ஸ்ரீ ராமானுஜர் கருத்துப்படி இது பகவத் கீதையின் கடைசி சுலோகமாகும். சாம சுலோகம் என்பார்கள்.

அநேகர் இல்லை என்றுலும் மொழிபெயர்ப்பாளர்களாவது இந்த சுலோகத்தை ஆங்கிலத்தில் விளக்க முயலும் போது அதன்

அழகைக் கெடுத்துவிட்டிருக்கிருர்கள். ஏன் என்ருல் 'தர்மம்' என்ற சொல்லின் முழுக் கருத்தையும் தாங்கி வெளியிடக் கூடிய சொல் வேறு எந்த மொழியிலும் கிடையாது. அதுவும் ஹிந்து சாஸ்திரங்களில் இது பயன்படும் விதமே வேறு. இந்தச் சொல் நம் சமய நூல்களைப் படிக்கும் எந்த மாணவனையும் குழப்பிவிடும் ஆற்றல் கொண்டிருக்கிறது.

இந்த தர்மம் என்ற சொல் மிகவும் அதிகமாகப் பயன்படுகிற சொல். ஆனுல் பொருள் கொள்ளப்படும் போது ஒரே மாதிரியான கருத்தைச் சுட்டும் இரண்டு இடங்களைப் பார்ப்பதரிது. என்ருலும் இந்தச் சொல்தான் ஹிந்துப் பண்பாட்டின் உள் சாரம். இதனுல்தான் இந்த தேசத்தில் வசித்துக் கொண்டு இதன் ஆன்மீகச் சொத்தை அனுபவிப்பவர்கள் இந்த நாட்டின் சமயத்தை 'சநாதன தர்மம்' என்று அழைத்தார்கள்.

இந்தச் சொல் தர்மத்துக்கு நாம் கொள்ளும் பொருளுக் கேற்றவாறுதான் இந்த சுலோகத்தின் விளக்கமும் அமையும். நம் சாத்திரங்களில் உபயோகப்படுத்துகிற அடிப்படையில் நேராகவும் சரியாகவும் பொருள் கொள்ள வேண்டும் என்ருல் தர்மம் என்பது ''இருப்பின் தன்மைக்கான அடிப்படைச் சட்டம்''. ஒரு பொருள் எந்தக் குணத்தின் காரணமாக அந்தப் பொருளாக இருக்க முடியுமோ அல்லது இருக்கிறதோ, எந்தக் குணம் இல்லாவிட்டால் அது அந்தப் பொருளாக இருக்காதோ அதுதான் அந்தப் பொருளின் தர்மமாகும். நெருப்பு அதன் சூட்டின் காரணமாகத்தான் நெருப்பாக இருக்கிறது. சூடு இல்லை என்ருல் அது நெருப்பாக இராது. எனவே சூடு நெருப்பின் தர்மமாகும். குளிர்ந்த நெருப்பு என்ற ஒன்றை நாம் இதுவரை சந்தித்ததே இல்லை! (சந்திக்கவும் மாட்டோம்!) சர்க்கரையின் தன்மை இனிப் பாகும். இனிக்காத சர்க்கரை மலடி மைந்தன் மாதிரி கற்பனையில்தான் இருக்க முடியும். நீரின் நீர்த்தன்மை அதன் தர்மம். கெட்டியான நீர் கனவில்தான் இருக்க முடியும்.

உலகில் உள்ள ஒவ்வொரு பொருளுக்கும் இரண்டு வகைக் குணங்கள் அல்லது தன்மைகள் உண்டு. ஒன்று: அடிப்படையானது. முக்கியமாக இன்றியமையாதது. மற்றென்று அவ்வளவு முக்கியமில்லாதது. அவ்வளவு முக்கியமில்லாத குணங்கள் இல்லாவிட்டாலும் கூட ஒரு பொருள் அந்தப் பொருளாக இருக்க முடியும். ஆனுல் முக்கியமான குணம் இல்லை என்ருல் அந்தப் பொருளாக இருக்க முடியாது. உதாரணமாக ஜ்வாலையின் (தீ நாக்கின்) நிறம், நீளம், அகலம், பருமன் முதலியவை தீக்கு அவ்வளவு முக்கியமானவை அல்ல. ஆனுல் 'சூடு' அதன் முக்கிய குணமாகும். அதுதான் அதன் தர்மம். ஒரு பொருளின் முக்கியமான தன்மை, குணம் அல்லது போக்கு அதன் தர்மமாகும்.

அப்படியானுல் மனிதனுடைய 'தர்மம்' என்ன? தோலின் நிறம் எண்ணற்ற உணர்ச்சிகள், எண்ணங்கள், ஆசைகள்—அதாவது உடல், மனம், புத்தியின் இயல்புகள் நிலேகள் ஆற்றல்கள் இவை எல்லாம் மனிதனின் ஆளுமையின் முக்கிய அம்சங்களாகா. உள்ளே இருக்கிற உயிரின் இணைப்பு, தெய்வீக உணர்வு, அதுதான் முக்கியம். அதுதான் இவற்றின் மூலமாக எல்லாம் தன்னே வெளிப்படுத்திக் கொள்கிறது. அதாவது 'ஆத்மா' இல்லாமல் மனிதன் இல்லே. அதுதான் அவன் இருப்புக்கு இருப்பைத் தருகிறது. எனவே மனிதனின் 'தர்மம்' அவன் உயிரின் தெய்வீகப் பொறி. அந்த எல்லேயற்ற பரம்பொருளேயாம்.

'தர்மம்' என்ற சொல்லின் இந்தப் பொருளே மனத்தில் கொண்டு பார்த்தோமானுல் நமக்கு நம்முடைய நூல்களில் தர்மத்துக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற விளக்கங்களேப் புரிந்து கொண்டு பாராட்ட முடியும். சாதாரண அறநெறி, தர்மநெறியில் இருந்து தொடங்கி நம்முடைய வாழ்க்கையில் நமக்குள்ள கடமைகள், உறவினர், நண்பர், சமூகத்தினர், தேசம், உலகம், நம்முடைய சுற்றுப்புறம்—எல்லாவற்றுடனும் நமக்குள்ள உரிமை கடமைகள், நமக்கு இருக்க வேண்டிய அன்பு உறவுகள் தானம், தர்மம், நல்லெண்ணம் எல்லாமே நம்முடைய தர்மங்கள் என்று கூறப்பட்டிருக்கின்றன.

உடல், மனம், புத்தி ஆகியவற்றின் மூலம் வெளிப்படும் தன் செயல்களிலும் அச் செயல்களின் மூலமும் மனிதன் தன் உண்மை தர்மத்தை வெளியிட வேண்டும். அதாவது அவன் அடிப்படையில் எங்கும் பரவி மறைந்து நிற்கும் பரமாத்ம தத்துவத்தின் தெய்வீக ஆற்றலே என்பது வெளியாக வேண்டும். உண்மையிலேயே நாம் ஆத்ம சொரூபமாகவே வாழ வேண்டும்; நம் செயல்கள், புற உலகில் நாம் கொள்ளும் உறவுகள்; இயைவுகள் எல்லாவற்றின் மூலம் நம்முடைய 'ஆத்மத்' தன்மை வெளியாக வேண்டும் என்ருல் நாம் நம்முடைய 'தர்மத்தை' (அடிப்படை அமிசமான முக்கிய குணத்தை) மீண்டும் கண்டு கொண்டாக வேண்டும்.

''நாம் அசட்டுத்தனமாகவும் தவருகவும் உடல், மனம், புத்தியுடன் இணேந்து கொண்டு அவையே 'நாம்' என்று எண்ணுகிருேம். அந்த நிலேயிலிருந்து நாம் விடுபட்டு மீண்டால்தான் நம்முடைய ஆத்மாவை நாம் அடைய முடியும். இவைகளே இறுகப் பிடித்துக் கொண்டிருக்கிற காரணத்தால் நம் வாழ்வில் இவற்றின் 'தர்மங்கள்' தான் வெளியாகின்றன. நாம் உடலாகவே வாழ்கிருேம். உணர்ச்சிகளின் தாளத்துக்கு ஏற்றவாறு ஆடுகிருேம்; மேலும் உத்தரவிட்டிருக்கிருர். புத்தி எதிர்பாராத வகையில் கிளப்புகிற கருத்துக் காற்றுக்களின் மூலம்

பலமாக இங்கும் அங்கும் அலைக்கப்படுகிறோம். ஒரு வகையில் மனிதன் அடிப்படை தர்மம் சுபாவம், முக்கிய குணம் எல்லை யற்ற, தெய்வீகத் தன்மை வாய்ந்த ஆனந்தமயமான ஆத்மன் தான். இருந்தும் மனிதன் ஏதோ இந்த உடல், மனம், புத்தி இம் மூன்றினால் மட்டுமே ஆன கூட்டுப் பொருள் போல நடந்து கொள்கிறான். அனைத்துக் கவலைகள், பதற்றங்கள், கழிவிரக்கங் கள், ஏமாற்றங்கள் உணர்ச்சி வேகங்கள், வலிகள் எல்லாமே 'அஹம்' என்ற 'நான்' தத்துவம். தவறாக உடல், மனம், புத்தி யுடன் இணைந்து கொண்டதற்காகப் பெறப்படும் லாபாம்சங் களே!

இவ்விதம் 'தர்மம்' என்ற சொல்லின் அதன் முழு வீச்சி லான பொருளைப் புரிந்து கொண்டு விட்டோமானால் பகவத் கீதையின் மிகவும் சீரிய பெருமையுள்ள ஒளிபொருந்திய இந்த சுலோகம்தானே நமக்கு முழுப் பொருளையும காட்டிவிடும். ஆம். வேறு சில சுலோகங்கள் இருக்கின்றன. அங்கே எல்லாமும் பக வான் குறிப்பிட்ட வழிகளைக் காட்டி அவ்விதம் வாழுங்கள் என்று உத்தரவிட்டிருக்கிறார். மேலும் ''நான் சொன்னபடி என் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்து வாழ்ந்தீர்களானால் நானே என் னிடம் உங்களை அழைத்துச் செல்வேன் என்று உறுதியும் அளித்திருக்கிறார். என்றாலும் இந்த சுலோகத்தில் சொல்லி யிருக்கிற மாதிரி அவ்வளவு திறந்து 'தன் பக்தனுக்கு உதவத் தயாராயிருக்கும் தன்னுடைய உறுதியை வெளியிடவில்லை.'

பகவான் ''தியானயோகி'' தன் உள் ஆளுமையில் மூன்று தெளிவான மாறுதல்களை செய்து கொள்ள வேண்டும் என்று கூறு கிறார். அவை: 1. தியானத்தின் மூலம் எல்லா 'தர்மங்களை'யும் விட்டு விடுதல்; 2. என்னிடம் சரணடைந்து விடு. மேலும் தியான யோக நிலையில். 3. எல்லாக் கவலைகளையும் விட்டு விடு. இவற்றிற்குப் பரிசாக பகவான் கிருஷ்ணன் உறுதி கூறுகிறார்: ''நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவித்து விடுகிறேன்.'' இது மனிதகுலம் அனைத்துக்குமே கொடுக்கப் பட்ட உறுதி மொழியாகும். கீதை உலகமனைத்துக்கும் பொது வான சாஸ்திரம். மனிதனுக்காகவே எழுதப்பட்ட விவலிய வேதம். மனித குலத்துக்கேற்பட்ட திருக்குரான். ஹிந்துக்களின் புரட்சி சாஸ்திரம்.

*(சர்வ்தர்மான் பரித்யஜ்ய)*: எல்லா தர்மங்களையும் விட்டு விட்டு—நாம் ஏற்கனவே சொன்னபடி தர்மம் என்பது ''இருப்பின் சட்டம்'' இந்த தர்மம் நீங்கினால் எந்தப் பொருளும் அந்தப் பொருளாக இருக்காது. இருந்தும் கிருஷ்ணன் என்ன சொல் கிறார் பாருங்கள். ''எல்லா தர்மங்களையும் விட்டு என்னிடம் சரணாக வந்துவிடு'' அப்படியானால் நாம் தர்மத்துக்குச் சொன்ன இலக்கணம் தப்பா? அல்லது இந்த சுலோகத்திலேயே முரண்

பாடு இருக்கிறதா? பார்ப்போம்.

சாதகன் அழிந்து போகிற, முடிவுள்ள 'அஹம்' அல்லது ஜீவனுக வாழ்கிறுன். அப்போது அவன் உடல், மனம், புத்தி இவற்றுடன் இணைப்பை ஏற்படுத்திக் கொண்டு அவற்றின் தர்மத்தை பெற்றுக் கொள்கிறுன். எனவே கேவலம் 'அறிபவன், உணர்பவன், சிந்திப்பவனுக' வாழ்கிறுன். இம் மூன்று நிலையிலுமுள்ள நம் ஆளுமைதான் நம்முடைய அஹமாகச் செயல்படுகிறது. இவை நம்முடைய 'அடிப்படையான முக்கியமான தர்மங்களல்ல. எனவே எல்லா தர்மங்களையும் என்று சொல்லும்போது முக்கியமில்லாத தர்மங்களை என்று பொருள். அதாவது ''நான்' என்ற அந்தச் சிறிய அகந்தையை விட்டு விட்டு'' என்று ஆகும்.

இந்த சுலோகத்தை நாம் 'தியான ஆசனத்தில்' இருக்கும் போது பயன்படுத்திக் கொள்ள முடியும். இது பகவானுடைய அன்பான கட்டளை. எனவே மற்ற நேரத்திலும் வாழ்க்கைப் பாதையை வகுத்துக் கொள்ளவும் இந்தக் கட்டளையைப் பயன்படுத்திக் கொள்ளலாம். தியான ஆசனத்தில் அமர்ந்திருக்கும்போது இடையூறுகளும் தொல்லைகளும் நமக்குள்ளிருந்து அந்த 'அஹம்' (நான்) என்ற வஸ்து முனைந்து எழுவதால் தான் ஏற்படுகின்றன. நாம் வேண்டாம் என்றிருக்கும்போதே, நம்முடைய ஒத்துழைப்பு இல்லாது எதிர்ப்பு இருக்கும் போது கூட, நமக்குள் 'தியானிப்பவனுக இருப்பவன்'' அமைதிக்குள் ஆழ்ந்திருக்கும் போதே, திடீர் என்று உடலின் விருப்பங்கள், உணர்ச்சிகளின் ஆசைக் கொந்தளிப்புக்கள், புத்தியின் கோரிக்கைகள் ஆகியவற்றுடன் கொந்தளிப்பாகிய கடலில் தூக்கி எறியப்படுவதை உணருகிறுன்.

இவற்றையெல்லாம் வைத்துப் பொருள் கொள்ளும் போது ''பரித்யாகம் செய்வது என்றுல்'' நம்மைச் சூழ்ந்து இருக்கும் பௌதீக உரைகளுடன் மீண்டும் மீண்டும் ஒட்டிக் கொள்ளும் போக்கை, விட்டுவிடுதல் என்று பொருள்படும். ''புறத்தே நீளும் மனதின் போக்குகளை'' விட்டுவிட வேண்டும். 'எல்லா தர்மங்களையும் விட்டுவிடு' என்பதற்கு ''திறமையாக உள்நோக்கும் போக்கை அதிகரித்துக் கொள்!'' என்று அர்த்தம்.

(மாம் எகம் சரணம் வ்ரஜ) ''அடைக்கலம் பெற என்னிடமே வா. மனதை உள்ளே ஓரிடத்தில், ஒரு புள்ளியில் நிறுத்த ஏற்பாடு செய்யாது போனுல் அதைப் புறத்தே சுற்றிவிடாமல் தடுப்பது முடியாத காரியம்'' என்னை அதாவது ஆத்மாவை விடாமல் ஒருமுகமாக, தீவிரமாக தியானம் செய்ய வேண்டும். இங்கே 'நான்' என்றுல் அந்த 'அத்வீதிய இரண்டற்ற ஏக, பரமாத்மப் பொருளாகும். அந்த தத்துவத்தைத் தீவிரமாக இடையருது தியானம் செய்தால்தான் நாம் உடல், மனம்

முதலிய கருவிகள் காட்டும் தவருன விஷயங்களில் ஓடுவதை நிறுத்த முடியும். *

இந்தியாவின் தத்துவவாதிகள் எதிர்மறையை மட்டும் சொல்லி, அதாவது 'இது இல்லை, இதனுல் கிடைக்காது இதைச் செய்யாதே' என்கிற மாதிரி சொல்லிவிட்டு அத்துடன் எப்போதுமே திருப்தி அடைந்ததில்லை. அவர்கள் சொல்வதில் 'அவ்விதம் செய்யாதே' என்கிற அறிவுரைகளைவிட' இவ்விதம் செய்' என்கிற உபதேசங்களே அதிகம். இந்தப் போக்கு மிகவும் பயனளிக்கக் கூடிய, வேகமாகச் செயல்படக் கூடிய போக்கு. இது நம் பரம்பரையில் பண்பாட்டுக்கு மிகவும் இயல்பான ஒன்று. இந்தச் சுலோகத்திலும் இந்த முறை பகவான் கிருஷ்ண ஞல் பின்பற்றப்படுகிறது, விளக்கமடைகிறது. அதனுல்தான் அவர் சொல்கிருர்—'என்னை அடைக்கலமாக வந்தடை. தவருன பொய்யான ஒட்டு உறவுகளை எல்லாம்தாமே விட்டுப் போகும்' என்று.

(மா சுச:) வருத்தப்படாதே. மேலே கூறிய இரண்டு நிபந்தனைகளும் பூர்த்தி செய்யப்பட்டு விட்டால் சாதகனுக்குத் தியானத்தில் அமைதி அதிகரிக்கும் நிலை கிடைத்து விடுகிறது. அதி லிருந்து அவன் தெய்வ உணர்விற்குள் நிலையாக நிலைத்திருக்கும் உயர்வுக்கு எழும்பாமல் விட்டு விட்டாளுனல் இந்த முயற்சி அவ்வளவும் வீணுகிவிடும். எதிலிருந்து நாம் உந்தி எழும்பப் போகி ருேமோ அந்த 'உந்து மேடை' நம்முடைய காலின் கீழ் இருந்து கொண்டு நம்மைத் தூக்கி எறிந்துவிட வேண்டும். அந்த உந்த லில் நமக்கு மேலே எழும்ப உள் ஆற்றல் கிடைக்க வேண்டும். ஆனுல் அந்த எல்லையற்ற பரமபதத்தை அடைய வேண்டுமே என்ற கவலையே அந்த மேடையைப் பலம் குறைந்ததாக ஆக்கி விடுகிறது. தியான சாதகன் உள்ளத்தில் கவலை ஏற்பட்டால் அதன் எதிரே அந்த மேடை ''கற்பனைப் பாலம்'' போல் கருகி மறைந்துவிடும். ஆசனத்தில் அமர்ந்து வெளிப் போக்குகளை நிறுத்தி, மீண்டும் மீண்டும் கிருஷ்ணனை, அதாவது பரமாத் மாவை தியானித்து தியானத்தில் அமர்ந்துவிடத் தொடங்கும் போது, கிருஷ்ணன் அறிவுரை பகர்கிருர்—'சாக்ஷாத்காரத்துக்கு ஏற்படும் 'கவலையை' விட்டுவிடு * என்று. அடைய வேண்டுமே என்ற விருப்பம்கூட ஒரு இடையூருன எண்ணம்தான். அது நம்மு டைய இறுதி வெற்றிச் சாதனையை அழித்துவிட வல்லது!

---

* 'உண்மை'யைப் புரிந்து கொள்ளும் ஹிந்துக்களின் திறமை முறை ஆகியவை மிகவும் வேகம் கொண்டது. நாம் இதைப் பலமுறை முன்னமே சொல்லியிருக்கி ருேம்.

* 6வது அத்தியாயம் 25வது சுலோகத்திலும் இந்தக் கருத்து வந்திருக்கிறது. தியானத்தை வலுப்படுத்தும் முறைகளைச் சொன்ன பிறகு பகவான் 'நசிஞ்சிதபி சிந்தயேத்!' பிறகு வேறு எதையும் நினைக்காதே!' என்கிருர்.

(அஹம் த்வாம் சர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) நான் உன்னை எல்லா பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். உள்ளத்தில் கவலை அலைகளை ஏற்படுத்தி மனிதன் ஆற்றலைச் சிதற அடிக்கும் ஆற்றலுடையதைத்தான் 'பாபம்!' என்கிறோம். செயல்களே மனிதன் ஆற்றலை நுண்ணிய முறையில் குலைக்க வல்லவை. மனதையும் புத்தியையும் ஈடுபடுத்தாமல் நாம் எந்த வேலையையும் செய்ய முடியாது. அதாவது ஒவ்வொரு செயலும் நிகழும் போது மனதையும் புத்தியையும் நம்முடைய ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவரப்பட வேண்டும். எனவே எந்தச் செயலும் 'மனத்தில் தன்னுடைய பாதச் சுவடுகளைப் பதித்துவிட்டுப் போகிறது. அனுபவம் முடிந்த பிறகு மனதில் அப்படி அமைந்த சுவடுகள் அல்லது பதிவுகள் நம்முடைய மனப் போக்கை அவற்றுக்கேற்ற வழியில் செலுத்துகின்றன. அந்தச் சுவடுகள் அல்லது பதிவுகளுக்கே 'வாசனைகள்' என்று பெயர்.

நல்ல வாசனைகள் நல்ல எண்ணங்களை அமைக்கும். கெட்ட வாசனைகள் கெட்ட எண்ணங்களை விளைவிக்கும். எண்ணங்கள் எழுந்து ஆடும் வரைதான் மனம் இருக்கும். அவை நல்ல எண்ணங்களிலும் சரி, கெட்ட எண்ணங்களாயினும் சரி வாசனைகளைப் பூராவாக நிறுத்துவதென்றால் எண்ணங்கள் அனைத்தும் நின்று போகவேண்டும். அதாவது எண்ண ஓட்டமான மனது நின்றுவிட வேண்டும். மனம்—புத்தி சேர்ந்த கருவியை மீறி அப்பால் மேலே செல்லவேண்டும். அதன் பொருள் கிருஷ்ண தத்துவம் என்கிற 'சுத்த உணர்வு' நிலையை அடையவேண்டும்.

சாதகன் தன்னுடைய 'இதய தேவதையை' தியானித்து தியானித்து அந்தப் போக்கில் பௌதீக உரைகளுடன் தான் கொண்டிருந்த உறவை விலக்க விலக்க அவன் கற்பனை விரிகிறது. உணர்வு புது உலகில் விழித்தெழுகிறது. அந்தப் புதுப் பார்வையில் எவ்வளவு வாசனைகளை இல்லாமல் ஆக்க வேண்டியிருக்கிறது என்று அவன் புரிந்து கொள்கிறான். எனவே கவலை ஏற்படுகிறது. அதனால் பகவான் ஆசுவாசப் படுத்தி 'கவலைப் படாதே. அனைத்துப் பாபத்திலிருந்தும் நான் உன்னை விடுவிக்கிறேன்' என்று உறுதி கூறுகிறார். ''உன்னைத் தொல்லைக்கு உட்படுத்தி, எண்ணங்களைக் கொப்புளிக்க வைத்து, செயலைத் தூண்டி, ஆசைகளை வளர்த்து, பதற்றத்தைக் கொட்டிக் குவிக்கும் வாசனைகள் அதாவது பாபங்களிலிருந்து உன்னை விடுவித்து விடுகிறேன்'' என்பது அவர் தரும் நம்பிக்கையாம்.

இந்த சுலோகத்தில் தான் எல்லையற்ற பரம்பொருளான பகவான் நிச்சயமான, நேரடியான உறுதியை அளித்து சாதகனுக்கு உதவுவதாக வாக்களிக்கிறார். ஒரே நிபந்தனை அவன் உள்ளே உள்ள 'ஆன்ம வீரன்'' பகவானுடன் ஒத்துழைக்க

வேண்டும். முழுமையாக முயற்சி செய்ய வேண்டும். இந்த உறுதி மிகவும் பலம் வாய்ந்த சொற்களில் அளிக்கப்பட்டிருக்கிறது. எனவே இந்த சுலோகம் மிகவும் முக்கியமான சுலோகம். நம்பிக்கை என்கிற நல்ல பருவம் தொடர்ந்து இருந்தால்தான் சாதகன் தன் சாதனை முயற்சியில் தொடர்ந்து முன்னேற முடியும். நம்பிக்கை இழந்து அழத் தொடங்கி விட்டால் ஏமாற்ற உணர்வு கொண்டு சலிப்படைந்து விட்டாலோ மனம் பதற்ற மடைந்து விடும். தொடக்கத்திலேயே 'ஆன்ம மலர்ச்சி' கருகி அழிந்து விடும். உள்ளபடி இந்த சுலோகம் தத்துவகீதமான கீதை முழுமையின் முடிவுரையாக மணம் வீசுகிறது.

''கீதா சாஸ்திரத்தை முடித்துவிட்டு, அதை மனதில் நிறுத்த மறுபடியும் சுருக்கிச் சொல்லியபிறகு பகவான் இந்த அறிவைப் பிறருக்குச் சொல்லித் தருவதற்கான நிபந்தனைகளை அல்லது நியமங்களை எடுத்துக் கூறுகிறார்.

இதம் தே நாதபஸ்காய நா பக்தாய கதாசன
ந சாசுஷ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோ(அ) ப்யஸூயதி

18:67

இதம்—இது; தே—உன்னால்; ந—கூடாது; அதபங்காய—தவம் இல்லாதவனிடம்; ந—கூடாது; அபக்தாய—பக்தனாக இல்லாதவனிடம்; கதாசன:—ஒருபோதும்; ந—கூடாது; ச—மேலும்; அசுச்ரூஷவே—தொண்டு செய்யாதவனிடம் அல்லது கேட்க விரும்பாதவனிடம்; வாச்யம்—சொல்லப்படுதல்; ந—கூடாது; ச—மேலும்; மாம்—என்னை; ய:—எவன்; அப்யஸூயதி—என்னிடம் பொறாமை கொள்கிறானோ, என்னைத் திட்டுகிறானோ (அவனிடம்)

இது உன்னால் தவம் இல்லாதவனிடமோ, பக்தி இல்லாத வனிடமோ, சேவை செய்யாதவன் அல்லது கேட்க விரும்பாதவனிடமோ, அல்லது என்னைக் குறை கூறிப் பெருமை காட்டுகிறவனிடமோ ஒருபோதும் இது (இந்த விஷயம்) சொல்லப்படுதல் கூடாது.

அநேகமாக எல்லா சாஸ்திரப் புத்தகங்களிலும் கடைசியில் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்கள் எந்த வகையான சீடர்களுக்குச் சொல்லித்தரப்பட வேண்டும் என்று கூறப்பட்டிருக்கும். அந்த சாஸ்திரத்தைப் படிக்கவும் படித்தால் புரிந்து கொள்ளவும் மிகவும் தகுதியுடைய சீடர்கள் யார் என்று ஆசாரியர்கள் அனுபந்தத்தில் சொல்வார்கள். இது பரம்பரை யான பழக்கம். அதை ஒட்டியே இங்கேயும் பயன்பெறும்படி கீதை படிக்கத் தகுதிகள் என்ன என்ன வேண்டும் என்று

சொல்லப்பட்டிருக்கிறது. இதைப் பார்த்து நாம் யாருடைய நலனைக் காக்கவோ அல்லது சிலர் மட்டும் இந்தப் புண்ணிய உரைகளை வைத்துக்கொண்டு வியாபாரம் செய்ய உதவ வேண்டும் என்றோ எல்லைச் சுவர்கள் எழுப்பப்பட்டிருக்கின்றன என்று எண்ணி விடுதல் கூடாது. இதற்கு மாருக இவை சீடன் யாராயிருந்தாலும் அவன் தன் உள்ள அமைப்பில் என்னென்ன மாறுதல்கள் செய்து கொள்ள வேண்டும் என்று அறிவுரை கூறவே சொல்லப்பட்டிருப்பவை என்று நாமே கண்டு கொள்ள லாம். அவ்விதம் பதப்படுத்தப்பட்ட உள்ளம்தான் இந்த ஞானத்தைப் புரிந்து கொள்ள முடியும்; அதுமட்டும் அல்ல. அந்த ஞானத்தை வாழ்க்கையில் பயன்படுத்தி ஞானனந்தத்தையும் பெற முடியும்.

இவை சீடன் உள்ளத்தில் ஏற்படவேண்டிய தேவையான சீரமைப்புக்கள் என்று சொல்லும்போது கீதையின் முழுக் கருத்தையும் உண்மையான பாடத்தையும் புரிந்து கொள்வதில் சிரமம் இருந்தால் அப்படிப்பட்ட ஒருவன் இந்தக் குணங்களை வளர்த்துக் கொண்டானுனல் பிறகு கீதையை சரியாகப் புரிந்து கொள்ள முடியும் என்ற கருத்தும் சொல்லாமல் சொல்லப் பட்டிருக்கிறது. குறிப்பாக கீதையைப் படித்தும் பயன்பெற முடியாதவர்கள் யார் என்று இங்கே கூறப்பட்டிருக்கிறது.

தவ (அடக்கமும் நெறியும் கொண்ட) வாழ்க்கை வாழாதவர்கள்—(அதபங்காய) அதாவது தங்கள் உடல், மனம் இவற்றின் மேல் ஆதிக்கம் (கட்டுப்பாடு) இல்லாதவர்கள். தவருன வழிகளில் தங்கள் உடல், மனம் இவற்றின் ஆற்றல் களைச் சிதற விட்டுவிட்டு உடலாலும், மனத்தாலும், புத்தி யாலும் சக்தியற்றவர்களாகப் போனவர்கள். அவர்களுக்கு 'ஒரு காலும் இந்த சாஸ்திரம் உன்னுல் சொல்லப்படக் கூடாது. ஏன் என்ருல் அவர்களுக்கு இதனுல் ஒரு பயனும் கிட்டாது. இந்த சுலோகத்தில் ஏதோ மன விரோதத்தைத் தேடுவது வீண். சற்றுக்கூட மனதில் ஏதோ துவேஷத்தை வைத்துக் கொண்டு இவ்விதம் சொல்லப்படவில்லை. ''பாறையின் மேல் விதைகளைத் துவாதே!'' என்று ஒருவன் சொன்னுல் அதைப் புரிந்து கொள்ள வேண்டியது எப்படி? அப்படி விதைப்பவர் ஒரு விளைவையும் கண்டுமுதல் செய்யமாட்டான். ஏன் என்ருல் பாறையில் ஒரு செடியும் முளைத்து வளராது. அதே போல்தான் இந்த அறிவுரை யும்.

தவம் என்ருல் 'எனக்கு இது வேண்டாம்' என்று ஒதுங்குவ தாகும். அவ்விதம் செய்யும் போது ஆற்றல்கள் சேமிக்கப்படு கின்றன. அவ் ஆற்றல்களை சுய வளர்ச்சிக்கான பாதைகளில் பயன்படுத்தவே அவ்விதம் செய்யப்படுகிறது. எனவே தவம் கீழ்க் கண்ட மூன்று அமிசங்கள் கொண்ட ஒரு திட்டம்:

1. ஆற்றல்களை வீணாக்காமல் இருத்தல். அதாவது ஆற்றல்களின் செலவில் சிக்கனம்; 2. அப்படிக் கிடைத்த ஆற்றல்களை சேமித்தல்; 3. அப்படிச் சேமித்த ஆற்றல்களை சுய வளர்ச்சித் துறைகளில் திருப்பிவிட்டுப் பயன்படுத்துதல். தவம் பயிலாதவர்கள் உண்மையிலேயே இளமையூட்டும் கீதைத் தத்துவவொளியின் அன்பு அணைப்பை வேண்டிப் பெறத் தகுதியுள்ளவர்கள்!

(அபக்தாய) பக்தியற்றவர்கள்: அதாவது தான் பெற விரும்பும் குறிக்கோளுடன் முற்றிலுமாக இணைந்துவிட ஆர்வமும் தெம்பும் இல்லாதவர்கள். ஒருவனுக்குச் சிறந்த லக்ஷியம் ஒன்றை எடுத்துச் சொல்லும்போது அவனால் அதனிடம் விருப்பம் கொள்ள முடியவில்லை என்றால் அவன் அதைப் புரிந்து கொள்ளவும் முடியாது. பெற்றுக் கொள்ளவும் முடியாது. ஒரு லக்ஷியத்தைப் புத்தியளவில் எவ்வளவு புரிந்து கொண்டாலும் அதனால் பயன் ஒன்றும் இல்லை. அத்துடன் இதயம் ஈடுபடவேண்டும். லக்ஷியத்துடன் ஏற்படும் காதலுக்கே பக்தி என்று பெயர். உள்ளத்துக்குள்ளே வைத்து இலக்ஷியத்தை அன்புடன் அணைந்திருப்பதே உண்மையான பக்தியாகும்.

தொண்டு புரியாதவர்கள் (அசுச்ருஷவே) நாம் முன்னமேயே இந்த விஷயத்தைப் பார்த்து வந்திருக்கிறோம். பகவான் கிருஷ்ணன் அநேகமாக எல்லா அத்தியாயங்களிலுமே சுயநலமற்ற செயல்களே, சாதகர்களுக்கு மட்டுமல்லாது பூரண நிலையை அடைந்த மகரிஷிகளுக்கும்கூட தங்கள் பூரணத்துவத்தைப் பெறுவதற்கு ஏற்ற களம் ஆகின்றன. பிறருக்கு தொண்டு செய்ய இயலாத் சாதகர்கள், சுயநலம் கொண்டு மனிதப் பண்பே இல்லாமல் இருக்கும் மனிதர்கள், மற்றவர்களிடம் இரக்கத்துடன் கூடிய அன்பே கொள்ள மாட்டாதவர்கள்—இவர்கள் தாங்களே இன்பத்தைப் புசிக்க விரும்புபவர்கள்—பிறருக்கு என இன்பத்தை ஏற்படுத்தத் தெரியாதவர்கள். அவர்களால் கிருஷ்ணன்—வழி—வாழ்க்கையைப் புரிந்து கொள்ளவும் முடியாது! அதனால் கிடைக்கும் இன்பங்களும் அவர்களுக்குக் கிடைக்காது.

''மாம் யோ அப்யஸூயதி' என்னிடம் வீண் (குறைகண்டு) பொறாமைப்படுகிறவன்—எனக்கெதிராக முணுமுணுத்துக் கொண்டே இருப்பான்! நம்முடைய ஆசானிடத்தில் நமக்கு மரியாதையும் பணிவும் இல்லை என்றால் நாம் அவர்களிடத்தில் ஒன்றும் கற்றுக் கொள்ள முடியாது. கீதையில் பயன்படுத்தப்பட்டு வருகிற நான் என்ற தன்மை ஒருமை 'ஆத்மா' (பரமாத்மாவின் அமிசமாகக் காணப்படுகிற) என்ற தத்துவத்தைக் குறிக்க நிற்பதாகும். அதுவே நம்முடைய இலட்சியம். எனவே இதற்குக் குறிப்புப் பொருள் ''இந்தத் தத்துவத்தை மதிக்

காதவன்!'' என்று ஆகும். பலாத்காரமாக மதம் மாற்றினுல் ஆள் அதிகம் சேரலாம். ஆனுல் சுய வளர்ச்சியும் ஆன்ம அறிவில் முன்னேற்றமும் அந்த விதத்தில் வர முடியாது. 'சமயத்'தை யார் மேலும் திணிக்கக் கூடாது. புரிந்து கோண்ட பிறகும் கூட ஒருவன் ஒரு தத்துவத்தை மனதால் ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டான். ஆனுல் பிறகு அவன் ஒருகாலும் அதற்கேற்றபடி அதற்குக் கட்டுப்பட்டு வாழப் போவதில்லே. எனவே எவனெரு வன் உள்ளத்தில் மறைவாக ஒரு கொள்கையைப் பற்றி அவமரியாதை செய்கிருனே அவனைப் போய் 'அதைப் படி' 'தெரிந்து கொள்', 'பின்பற்று' என்றெல்லாம் சொல்லி நிர்ப்பந்தம் செய்யக் கூடாது.

சாத்திர நூல்களில் வரும் இம்மாதிரி சுலோகங்கள் அந்த சாஸ்திரத்தைப் படித்துத் தெரிந்து கொண்டு பயனபெற வேண்டும் என்ருல் ''சீடர்கள் தங்களே எப்படி சரியான பக்குவத் திற்குக் கொண்டு வந்து வைத்துக் கொள்ளவேண்டும் என்று சொல்வதற்காகப் புத்திமதி தருவதற்காக வருகின்றன. கீதையைப் படித்த உடனேயே அந்தக் கணத்திலேயே பயன்கிடைத்துவிடும் என்று யாரும் எதிர்பார்க்கக்கூடாது. ஆளுமையைத் தேவையானபடி மாற்றிக் கொள்ளுதல், சீரமைத்துக் கொள்ளுதல் எல்லாம் இரவு தூங்கி எழுந்தவுடன் வந்துவிடும் விஷயங்கள் அல்ல. கீதையில் 'சூ மந்திரக்காளி' வித்தை ஒன்றும் உபதேசிக்கப்படவில்லே.

இந்த சுலோகமும் மறைமுகமாகவும் அறிவுக்குத் தேவையான சில குறிப்புக்களேக் காட்டுகின்றன. ஒருவனுக்குத்தான் கீதையைச் சரியாகப் புரிந்து கொள்ள முடிய வில்லே என்று தோன்றினுல் அவன் தன் உள் இயல்பை அதற் கேற்றவாறு சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிற பயிற்சிகளின் மூலம் சரிசெய்து கொள்ளவேண்டும். கண்ணுடியில் பிரதிபிம்பம் மந்தமாய்த் தெரிந்தால் கண்ணுடி மேல் உள்ள அழுக்கைத் துடைக்கிருேம். அதே போல் மனம் புத்தியாகிற கருவியைச் சரியான நிலேயில் வைத்துக் கொண்டால் கீதையின் தத்துவத்தைப் புரிந்து கொண்டு பயன்பெறத் தேவையான அதன் நுண் திறமை அதிகரிக்கும்.

இப்போது பகவான் இந்த ஞானத்தை சமூகத்தில் மற்றவருக்குச் சொல்லிக் கொடுத்து பரப்புபவனுக்கு என்னென்ன பயன்கள் கிட்டும் என்று கூறுகிருர்.

ய இதம் பரமம் குஹ்யம் மத்பக் தேஷ்வபிதாஸ்யதி
பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்ய ஸம்சய:

**18:68**

ய:—எவன்; இமம்—இந்த; பரமம்—மிகவும்; குஹ்யம்—ரஹஸ்யமான (இதை); மத்பக்தேஷு—என் பக்தர்களிடையே; அபிதாஸ்யதி—சொல்கிருனே; (அவன்); பக்திம்—பக்தியை; மயி—என்னிடம்; பராம்—மிக உயர்ந்த; க்ருத்வா—செய்து; மாம்ஏவ—என்னையே; ஐஷ்யதி—அடைகிருன்; அஸம்சய:—ஐயமின்றி.

எவன் என்னிடம் மிகவும் பக்தி கொண்டு இந்தப் பரம ரஹஸ்யத்தை என் பக்தர்களுக்குச் சொல்வானே அவன் சந்தேக மின்றி என்னையே அடைவான்.

கீதைக்குச் சரியான விளக்கமும் பொருளும் தெளிவாகச் சொல்லி கேட்பவரை 'கிருஷ்ண—வழி வாழ்க்கையில் நடத்தத் திறமைபெற்ற ஆசானைப் புகழ்ந்துரைக்கின்றன. இந்த சுலோக மும் அடுத்த சுலோகமும் கிருஷ்ணர் அர்ஜுனனுக்குச் சொல்லிக் கொடுத்த முக்கியமான, எல்லாவற்றையும் நிறைத்து நிற்கும் கொள்கை—'உள்ளே இருந்தாலும் சரி, வெளியேயிருந்தாலும் சரி கேடுகளை எதிர்த்துச்சண்டையிட்டு மடக்கு' என்பதாகும். இப்படி ஒரு பாடத்தைச் சொல்லிக் கொடுத்து சீடனை அந்த வேலையில் ஈடுபடுத்தவும் வேண்டும் என்ருல், அதாவது இப்படிப் பட்ட ஒரு பண்பாட்டை சீடனிடத்தில் ஏற்படுத்த வேண்டும் என்ருல் ஆசான் கேவலம் படிப்பாளியாக இருந்தால் மட்டும் போதாது. அவரிடம் கிருஷ்ண சக்தியே இருக்க வேண்டும். அதனுல்தான் ஆசிரியர் புகழ் பாடப்படுகிறது.

இந்த ஞானத்தை அதனிடம் சற்றும் விருப்பமோ அதில் கருத்தோ இல்லாதவனுக்குத் தருவதால் யாதும் பயனில்லை. உணவுக்கு மதிப்பு பசி இருக்கும்போதுதான். தனக்குள் ஒரு முழுப் புரட்சி ஏற்பட வேண்டும். உடனே ஏற்பட வேண்டும் என்று தீவிரமாக. அவசரப்படாத ஒரு சீடனை கீதை வழியில் வாழத் தூண்ட முடியாது. இன்னம் முழுமையான, இன்னம் வேகமும் பெருமையும் கொண்ட வாழ்வு வேண்டும் என்கிற ஒரு இனம்புரியாத ஆன்ம தாகம் கொண்டவனுக்காகவே கண்ணன் இசைத்த தெய்வ கீதம் இந்தக் கீதை. அதனுல்தான் 'இந்தப் பரம ரஹஸ்யம்!' என் பக்தர்களுக்குச் சொல்லப்பட வேண்டும்' என்று இங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

ஏற்கனவே சொல்லியபடி 'பக்தி' இலக்ஷியத்துடன் முழுமையாக இரண்டறக் கலந்து நிற்கும் தன்மையைக் குறிக் கிறது. எனவே அவ்விதம் இலக்ஷியங்களுடன் கலந்து நிற்கும் ஆற்றலும் குணமும் இயல்பும் உள்ளவர்களுக்குத்தான் இலக்ஷிய வாழ்க்கை வழிக்கான வேதாந்தத்தைப் பயன்தரும்படி சொல்லிக் கொடுக்க முடியும்.

சீடனிடம் மட்டும் இலக்ஷியத்துடன் இரண்டறக் கலந்து நிற்கும் வலிவு இருந்தால் போதாது. ஆசானும் கிருஷ்ண—

சத்தியத்—தத்துவத்துடன் முழுமையாக பூரண இணைப்புக் கொண்டவராக கிருஷ்ணமயமாக இருத்தல் வேண்டும். இவ்விதம் தானும் பரமாத்மமயமாகி இருந்து கொண்டு மற்ற வருக்கும் இந்த ஞானத்தைக் கொடுக்க முயலுகிற மகான் கண்டிப்பாக ஐயமேயின்றி (அசம்சய:) என்னிடமேதான் வருவார். ஏன் என்ருல் அவர் எப்போதும் கீதை கற்பிக்கும் தத்துவக் கருத்துக்களையே எண்ணிச் சிந்தித்துத் தியானித்துப் பேசிக் கொண்டிருக்கிருர்.

இதுவே உபநிடதப் பாரம்பரியத்தின் உண்மை உயிர். உபநிஷதங்களிலும் ஆசான்கள் இந்த ஆன்ம ஞானத்தைப் பரப்புவதன் மகிமையைப் பேசுகிருர்கள். தைத்ரிய உபநிஷத் மாணவர்கள் பிரியும் போது மகரிஷி கொடுக்கும் அறிவுரையைப் பற்றிச் சொல்லும்போது ''நீ இந்த சாஸ்திரத்தை மீண்டும் மீண்டும் படிப்பதுடன் இந்த ஞான ஒளியை மக்களிடையே பரப்புவதிலும் உன் சமயத்தைக் கழிக்க வேண்டும்!' என்று பிரிவுரை வழங்குகிறது. இந்த அறிவுரை ''ஸ்வாத்யாய ப்ரவசனே ச' என்பதாகும். இது தைத்திரீய உபநிஷதத்தின் முதல் பிரிவில் வருகிறது. இதை அடிக்கடி பெரியவர்கள் சொல் வார்கள். மகரிஷிகள் இதை எல்லா பிராமணர்களுக்கும் தவிர்க்கக் கூடாத கடமையாக விதித்திருக்கிருர்கள்.

படித்தவன் செய்நன்றியுடையவனுகவே இருக்க விரும்பு வான். ஞான கீதத்துக்கு அவன் கடமைப்பட்டிருக்கிருன். அதை ஒத்துக் கொள்வது அவன் கடமையாகும். இந்தக் 'கடனை' நம் பாரம்பரியத்தில் 'ரிஷிகுணம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் குணத்திலிருந்து (கடனிலிருந்து) விடுபட நாம் ரிஷிகளின் தர்ம சாஸ்திரங்களைப் படித்துப் பரப்ப வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு இலக்ஷியங்களையும் நாம் மறந்து விட்டோம். பின்னுல் வந்த பிராமணர்களும் தங்கள் கடமைகளையும் பொறுப்புக்களையும் மறந்தார்கள். மறந்ததன் மூலம் ரிஷிகளின் கட்டளைகளைக் கீழ்ப்படியாமல் மறுத்து விட்டார்கள். அப்போது தொடங்கிவிட்டது நம் பண்பாட்டின் வீழ்ச்சி.

எந்தப் பண்பாட்டுக்கும், சிறந்த பாரம்பரியத்துக்கும் அடிப் படை 'தத்துவ' (வேதாந்த)மாகும். ஹிந்து பண்பாடு மீண்டும் மலர்ச்சி அடைந்து அதன் பயனைத் தரத் தொடங்க வேண்டும் என்ருல் உபநிஷதங்கள் காட்டித்தரும் தத்துவத்தைக் கொண்டு அது வளர வேண்டும். போஷிக்கப்பட வேண்டும். இந்த ஆழ மான உண்மையை நம்முடைய பண்பாட்டின் ஜனகர்களான மகரிஷிகள் தெரிந்திருந்தார்கள். அதனுல்தான் இந்த ஞானத்தைப் பெறுபவர்கள் அதைத் திருடித்தங்களுக்குள்ளே மறைத்து வைத்துக் கொண்டு விடக் கூடாதென்றும் தாராள

மாக அதை மற்றவர்களிடையே நகர்ந்து பரவ விடவேண்டும் என்கிருர்கள். அவர்கள். அப்போதுதான் மக்களிடையே அவர் கள் வாழ்க்கையில் உள்ள இருட்டறைகளில் இந்த ஞான ஒளி வெற்றியுடன் புகமுடியும்!

நீர் நிறைந்த குளத்தில் ஒரு கல்லே எறிந்தால் அது விழுந்த இடத்தை மையமாகக் கொண்டு, அங்கே எழுந்த கிளர்ச்சி அலேகள் வட்டம் வட்டமாக எழுகின்றன. அந்த வட்டங்கள் மேலும் மேலும் பரவிக் கரை வரை சென்றடைகின்றன. இவ்விதம், நீரின் நடுவே எழுந்த ஒரு மாற்றம் கரைவரை சென்றடைகின்றதைப் பார்க்கிருேம். இது நீராக இல்லாமல் எண்ணெயாக இருந்தால் இந்த வட்ட அலேகள் அதிக தூரத் துக்கு எழா; கரையையும் சென்று அடையா. அது உருக்கிய தாராக இருந்தாலோ அந்தக் கல், விழுந்த இடத்தில் மட்டுமே ஒரு சிறிய பள்ளம் ஏற்படும். அத்துடன் சரி. பிறகு மேலே ஒரு அடையாளம் கூடத் தெரியாது. அங்கே ஏற்பட்ட அந்தக் கிளர்ச்சிக்கு அலேகள் எழுப்பிக் கொண்டு தன் அருளேப் பரப்புகிற வாய்ப்பே கிட்டாது.

மேலே சொன்ன ஒப்புமையிலிருந்து ஒரு விஷயம் தெளிவா கிறது. நம்முடைய பாரம்பரியத்தின் ஒரு சிறிய அமிசத்தையாவது தெரிந்து கொண்ட ஒரு சீடன் மற்றவர்களுக்கு அதை எடுத்துச் செல்லவில்லே என்ருல் அறிவு பரவாது. அவரிடத்திலேயும் உள் தூண்டுதலின் நீர்மை இல்லே என்று பொருள். இன்று நம்மில் அநேகர் மனம் தூங்குமூஞ்சித்தனமான ‘தாரி’ஞல் நிறைக்கப் பட்டிருக்கிறது. சில கெட்டிக்காரர்கள் உள்ளம் எண்ணெய்க் கிண்ணங்கள் ஆனுல் கீதையின் சீடர்கள் எல்லோரும் மானசரோவரத்தின் நீர்போல் தங்கள் மூலக் கருத்துக்களே அலேகள் மேல் அலேகளாக எழுப்பி சுற்றிலும் உள்ள எங்கும் பரப்பும் திறமை பெற்ருல்தான் நம்முடைய மகரிஷிகள் உண்மை யில் பூரண திருப்தி அடைவார்கள். இவ்விதம் கீதையின் தத்துவங்களேப் பரப்ப வல்லவர்களேக் கௌரவித்துக் கண்ணன் சொல்கிருர்'—அவர்கள் சம்சயம் இன்றி என்னே அடைவார்கள்!' என்று.

இது மட்டுமல்ல. அப்படிப்பட்ட குருவை மற்ற யாரை யும் விட, தான் அதிகம் நேசிப்பதாகவும் கண்ணபிரான் கூறுகிருர்:

ந ச தஸ்மான்மனுஷ்யேஷு கஸ்சின்மே ப்ரியக்ருத்தம:
பவிதா ந ச மே தஸ்மாதன்ய: ப்ரியதரோ புவி 18:69

ந—இல்லை; ச—மேலும்; தஸ்மாத்—அவனைவிட; மனுஷ்யேஷு—மனிதர்களில்; கச்சித்—எவனொருவனும்; மே—எனக்கு; ப்ரியக்ருத்தம:—அதிக அன்பான தொண்டு செய்கிறவன்; பவிதா ந—இருக்க மாட்டான்; ச—மேலும்; மே—எனக்கு; தஸ்மாத்—அவனைவிட; அந்ய:—வேறொருவன்; ப்ரியதர:—அதிகப் பிரியமானவன்; புவி—உலகில்.

மனிதர்களுள் எனக்கு அவனைவிட பிரியமான சேவை செய்கிறவனும் இல்லை; அவனைவிட எனக்கு அதிகப் பிரியமானவனும் இந்த உலகில் இருக்க மாட்டான்.

ஹிந்து மதத்தில் மதமாற்றம் கிடையாது என்பது உண்மை தான். 'அநித்யமான உண்மை வஸ்துவான பரம்பொருளை நம்பு' என்று யாரையும் நிர்ப்பந்தப்படுத்துவதில் நமக்கு நம்பிக்கை கிடையாது. அறிவை நயந்து அதை மாற்ற இயலாதபோதுதான் பலாத்கார நிர்ப்பந்தம் தேவையாகலாம். ஆனால் நம்மிடம் மிகவும் தர்க்கப்பூர்வமான அறிவைக் கவரக்கூடிய தத்துவ சிந்தனை இருக்கிறது. அது நம்மில் எல்லைப் பரம்பொருளை நம்பவைத்து அதனிடத்தில் நம்மைச் சேர்க்க வல்லது. பிறகு எதற்கு நிர்ப்பந்தம்? தேவையே இல்லை. மனிதனுடைய அறிவுக்கு ஒரு நேர்மை இயல்பாகவே உண்டு. அது குறிப்பிட்ட ஒரு வாழ்க்கை முறையையும், வாழ்க்கையில் சில மதிப்பீட்டுக்களையும் புரிந்து ஒப்புக் கொண்டு விட்டால் பிறகு அது தன் நம்பிக்கைக்கு ஏற்றவாறு நடப்பதிலிருந்து வழுவாது. இந்தக் கருத்தில்தான் நம் ஹிந்து வேதாந்தமும், நம் பெரியோர்களான முன்னோர்களும் மதமாற்றத்தையும், பலாத்காரமாகக் கூட்டம் சேர்ப்பதையும் தவிர்த்தார்கள். அவர்கள் அந்த முறையை உண்மையான 'ஆன்மீக முறையிலுள்ள திட்டத்தின் பெருமைக்கு சற்றும் ஒவ்வாத காட்டுமிராண்டித்தனம்' என்று எண்ணினர்கள்.

இவ்வளவு பெருமை வாய்ந்த நம்முடைய இந்தக் கோட்பாட்டை நாம் மறந்து விட்டது துரதிர்ஷ்டம்தான். தனக்கு ஒப்பும் உவமையும் இல்லாத நம் பண்பாட்டின் சிறந்த அழியாத, நித்தியமான கொள்கைகளைப் பரப்பும் பிரசாரக் குணத்தை நாம் வெகுநாட்களாகவே விட்டுவிட்டோம். கிறிஸ்தவர்கள் மத மாற்றம் செய்ய வேண்டுமென்றே பிரசாரம் செய்கின்றனர். அவர்கள் போக்கைக் கவனித்த படித்த இந்தியனும் குழந்தைப் பருவத்திலிருந்தே இந்த இரண்டு கருத்துக்களையும் ஒன்றாய் இணைத்தே நினைக்கிறான். அதாவது மதம் மாற்றச் செய்யும் பிரசாரம் மனிதன் கடவுள் இருவருக்குமே எதிராகச் செய்யப்படும் குற்றம் என்கிற நல்ல கருத்து அவனுக்குத் தெரிகிறது. அதனல் நம்முடைய ரிஷிகள் அவ்விதம் செய்ய ஒத்துக் கொள்ள மாட்டார்கள்—எனவே பிரசார (மிஷனரி)த் தத்துவமே தவறு

என்று எண்ணி விடுகிறான். இது ஒரு தவறான முடிவு. இந்தச் சுலோகம் அதன் தவற்றை நன்கு எடுத்துக் காட்டுகிறது. கருத்தை மக்களிடையே பரப்புதல், குருவின் பாதார விந்தங்களில் அமர்ந்து பெற்ற ஞான ஒளியை மக்களிடையே எடுத்துச் சென்று, தூரம் தொலைவில்கூடக் கவ்வியிருக்கும் அஞ்ஞான இருளை நீக்குதல், தான் பெற்ற ஒளியூட்டும் நம்பிக்கைகளைப் பிறருக்கு ஊற்றித்தர எப்போதும் துடித்துக் கொண்டு உற்சாகமாக இருத்தல்—சுருக்கமாகச் சொன்னால் 'வித்யாதானம்' ஹிந்துச் சம்பிரதாயத்தில் ஒவ்வொரு சீடனுக்கும் விதிக்கப்பட்ட சமயக் கடமையாகும். ஞானத்தை அள்ளிக் கொண்டு அதை மறைத்து வைத்திருத்தலால் வரும் ஏழ்மை சமூகத்தில் பணத்தைக் கொள்ளையடித்து மறைத்து வைப்பதைவிட அதிகம் துயரம் தருவதாகும்.

பகவான் கிருஷ்ணன் இந்தச் சுலோகத்தில் கீதோபதேசம் செய்யும் ஆசாரியன் மஹிமையைச் சொல்லும்போது இக் கருத்துக்கள் எல்லாம் மிக அழகாக வெளியாகின்றன. சென்ற சுலோகத்தில் அவர் அப்படிப்பட்டவன் என்னிடம் வந்து அடைகிறான் என்று சொன்னதை இங்கே தெளிவுபட விளக்குகிறார். கீதாசாரியனான கிருஷ்ண பகவான்—'அவனைப் போல பிரியமானவன் இந்த உலகில் யாருமில்லை. எனக்கு அவன் அத்யந்த பிரியமானவன்', என்கிறார். ''இப்போது மட்டுமல்ல, வருங்காலத்திலும் அப்படி ஒருவன் இருக்க மாட்டான் (பவிதா ந ச)''

---

* இந்த இடத்தில் ஹிமாலயப் பள்ளத்தாக்குகளில் தங்கி இருக்கும் வயதான மஹாத்மாக்கள் வயதில் இளைய மஹாத்மாக்களின் பிரசார உற்சாகத்தைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று தெரிந்து கொள்வது சுவையாக இருக்கும். உத்தரகாசியில் நான் சமீபத்தில் அப்படிப்பட்ட ஒரு மகாத்மாவைச் சந்தித்தேன். களங்கமில்லாத நேர்மையுடனும் உற்சாகத்துடனும் மேலும் ஒரு மன்னிப்புக்குரியதாகக் கருதப்படக் கூடிய திருப்தியுடனும் அவரிடம் 'சாஸ்திரக் கருத்துக்களை நான் பிரசாரம் செய்கிறேன். இளைய தலைமுறையினர் அதைப் பாராட்டுகிறார்கள். அவன் பெருமையை உணர்கிறார்கள்' என்று சொல்லி விட்டேன். அப்போது பார்க்க வேண்டுமே—அவருடைய வயதான புருவங்கள் சற்றே உயர்ந்து ஏதோ நடக்கக் கூடாதது நடந்ததாகச் சொல்லப் படுவதைப் போன்ற ஒரு வியப்பை வெளியிட்டன! அத்துடன் அந்தப் பவித்திரமான புருவங்களிலிருந்து வெளிப் படும் கண்டிப்பையும் பார்த்தேன். உடனே என் வார்த்தைகளின் ஓட்டம்தானே நின்று விட்டது. சற்று நேரம் சென்று அந்த மஹான், ஸ்வாமி, ''சின்மயா! நீ இங்கேயே தங்கிவிடு. இனி உலகில் வெளியே போக வேண்டாம்!'' என்றார்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. அவர் சற்றுச் சும்மா இருந்துவிட்டு, ''மகனே! நீ பரப்புவதாக எண்ணிச் செயல்பட்டால் நீ பவித்திரக் கருத்துக்களைப் பரப்பி முடிப்பதற்குள் நீ இழந்த ஆத்மாவாகிவிடுவாய். ஏன் என்றால் உன் 'தற்பெருமை' அடக்க முடியாத அளவு பெருத்துவிடும்!' சந்யாஸம் பெற்றுக் கொண்ட பிறகு நமக்கு வாழ்க்கையில் ஒரே கடமைதான் உண்டு. அது சாஸ்திர போதனைகளை மீண்டும் மீண்டும் மனனம் செய்வதும் பரம்பொருளைத் தியானிப்பதுமேயாகும்!'' என்று விளக்கிக் கூறினர்.

எவனைப் போல? தான் கற்றுக் கொண்டது கொஞ்சமாக இருந்தாலும் புரிந்து கொண்ட அவ்வளவையும் பரப்புபவனைப் போல அவ்வளவு அவருக்குப் பிரியமானவன் இருக்க மாட்டானும்! ஆம். ஹிந்து பாரம்பர்யத்தில் பிரசாரக ஆசாரியனுக்கு * அவ்வளவு பவித்திரமான மஹிமை.

கீதையில் இதற்கு முன்னுலும் ஒரு மனேவிஞ்ஞான உண்மை கோடிட்டுக் காட்டப்பட்டது. பிறகு அது இந்தத் தெய்வ கீதத்தில் நெடுகிலும் திரும்பத் திரும்பச் சொல்லவும் பட்டது. இந்த முக்கிய ரகசியம் என்ன என்ருல் தெய்வத் தியானத்தில் தன் மனதை முழுமையாக, வேறு எந்தக் கருத்தும் இடைப்படாதபடி, செலுத்தி ஈடுபடுத்தியிருப்பவன் அந்த பரம தெய்வப் பொருளுடன் இணைந்து விடுவான் என்ற தத்துவம்தான். தன் சமயத்தை எல்லாம் தத்துவங்களைப் படித்துப் படித்துப் புரிந்து கொள்வதிலும் அவற்றை மனனம் செய்வதிலும், பிறகு அவற்றைப் பிர்சாரம் செய்வதிலும் செலவழிக்கும் கீதையின் மாணவன் அறிவில் ஆனந்தத் திளைப்பு அடைகிருன். அதன் பயனுக 'உண்மைத் தத்துவத்தின்' சாரமான சாந்தியுடன் ஒன்றி நிற்கும் பேற்றையும் பெற்று விடுகிருன். எனவேதான் கிருஷ்ணன் சொல்கிருர். அப்படிப்பட்ட பிரசாரங்களை விடப் பிரியமானவன் எனக்கு யாரும் இருக்க முடியாது. ஏன் என்ருல் அவன் கீதையில் சொல்லப்பட்டிருக்கிற அளவுக்குள்ளாத ஞானக் கருத்துக்களைத் தன்னுல் இயன்ற

---

எனக்கு ஞானப்பிரகாசம் அகங்காரத்தை எப்படி அதிகப்படுத்தும்' என்று விளங்கவில்லை. எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. 'அவர் கருத்தை என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை' என்று என் இயலாமையைச் சொன்னவுடன் பூஜிக்கத் தகுந்த அவர் வயதில் பெரிய, ஞானத்தின் இருப்பிடமான சாது, அன்புகாட்டி புன்சிரித்து விட்டு ஒரு தகப்பனுருக்குரிய பரிவுடன் என் முதுகில் தட்டிக் கொடுத்துவிட்டுப் பின்வருமாறு சொல்லியருளினுர். ''மகனே! பக்தர்கள் சில சமயம் வந்து எங்களிடம் சந்தேக விளக்கம் கேட்பார்கள். நீ பட்டணங்களில் விரிவுரைகள் நிகழ்த்துகிருய். இன்று உன்னைப் போல் செய்கிறவர்கள் யாரும் இல்லை. நாம் செய்ய வேண்டியது ஒன்று உண்டு. நீ, கேட்கக் கூடியிருக்கும் மக்களுக்காகப் பேசாதே. நீ உன் மனதுக்கென்றே பேசிக் கொள். உன் மனதுடன் பேசுவதையே உரத்த சிந்தனையாக ஆக்கிப் பேசு. இதனுல் உன் அகம்பாவம் வளர்வதைத் தடுக்கமுடிவதுடன் கேட்கிற மக்கள் மனதுக்கும் இதயத்துக்கும் நீ பேச இயலும். உன் பிரச்சாரப் பேச்சுக்களும், உள் தூண்டுதலுடன் செய்யப்படும் உபதேசங்களும் எளிய, இதயங்களுடன் உறவு கொள்ளும் பேச்சுக்களாகவும், உன் உயர்ந்த நிலை இதயத்துக்கும், கீழ்நிலை மனதுக்கும் இடையே நிகழும் சம்பாஷணைகளாக இருக்கட்டும். உன்னைச் சுற்றியுள்ளவர்கள் உன் அந்தரங்கப் பேச்சினுல் பயன் அடைகிருர்கள் என்ருல் அது ஈசுவரனின் மஹிமையாகுமே தவிர உன்னுடைய தனி ஆளின் திறமையாகாது!

ஒரு பிரதிநிதித்துவம் வாய்ந்த பிரச்சாரகராக இருந்த அந்தச் சாதுவின் பேச்சின் பவித்திரத் தன்மை, அழகு, ஆழம் இவற்றின் எதிரே நான் அசந்தே போனேன்! ரிஷிகளின் மகிமைதான் என்னே!

மட்டும், தான் புரிந்து கொண்டவரை நேர்மையாகப் பிறருக்குக் கூற முயல்வதன் மூலம் அவன் எனக்கு மிகப் பெரிய தொண்டைச் செய்கிறான்.

கீதையின் ஞானத்தை முதலிலேயே அப்படியே முழுவதுமாகப் புரிந்து கொண்டுவிட வேண்டும் என்பதில்லை. புரிந்து கொண்டவரை நாம் உடனே பிறருக்குச் சொல்லிவிடத் தொடங்கிவிட வேண்டும். அன்பும் அவசரமும் கொண்டு நாம் புரிந்து கொண்ட அளவுக்குக் கூடப் புரிந்து கொண்டிராத மற்றவருக்கு எடுத்துச் சொல்லுதல் மிகவும் அவசியம். அதே சமயம் இப்படிச் செய்யும் ஒருவன் தான் புரிந்து கொண்ட அறிவுரைகளின்படி உண்மையாகவும் நேர்மையாகவும் வாழ்க்கையையும் நடத்த வேண்டும். அப்படிப் பட்டவனே 'எனக்கு' மிக மிகப் பிரியமானவன்.

பின்வரும் சுலோகத்தில் ஆசான் மட்டுமில்லாது ஆர்வம் கொண்ட சீடனையும் புகழ்கிறார்.

அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாத மாவயோ:
ஞான யஜ்ஜேன தேநாஹமிஷ்ட: ஸ்யாமிதி மே மதி:
*18:70*

அத்யேஷ்யதே—படிப்பான்; ச—மேலும்; ய—எவன்; இமம்—இந்த; தர்ம்யம்—தர்மமயமான (பவித்ரமான) ஸம்வாதம்—சம்பாஷணையை; ஆவயோ—நம்முடைய; ஞானயக்ஞேன—ஞான வேள்வி மூலம்; தேன—அவல்; அஹம்—நான்; இஷ்ட—பூஜிக்கப்பட்டவனாக(அன்பு செய்யப்பட்டவனாக) ஸ்யாம்—இருப்பேன்; இதி—என்று; மே—என்னுடைய; மதி—நிச்சய புத்தி.

நம்முடைய இந்தப் பவித்திரமான சம்பாஷணையை யார் படிப்பானோ அவனால், நான் ஞானவேள்வியின் மூலம் பூஜிக்கப் பட்டவனாக ஆவேன். இது என் உறுதியான கருத்து.

பொது மக்களிடையே அவர்கள் புரிந்து கொள்வதற்காக இந்த சம்பாஷணையின் கருத்துக்களை எடுத்துச் சொல்லும் எல்லா ஆசிரியர்களையும் புகழ்ந்த பிறகு கீதை பகவானின் தெய்வீக கீதமாகிற இந்த ஸ்ரீமத் பகவத் கீதையைப் படிக்கிற சீடர்களையும் கீதை இங்கே புகழ்கிறது. கிருஷ்ணன் அழிவற்ற நித்ய பரம்பொருள். அர்ஜுனன் அழியும் மனிதன் இருவருக்குமிடையே பரஸ்பரப் பேச்சாக இந்தக் கீதை எழுந்திருக்கிறது. அதில் வெளியாகிற தத்துவத்திற்கு மனதைக் கவர்கிற பலமான மந்திர சக்தி இருக்கிறது. அதன் காரணமாக மேலெழுந்த வாரியாகப் படிக்கிறவர்கள் கூட சீக்கிரமாகவே அதன் ஆழத்தில் திளைக்கத் தொடங்கி விடுவார்கள். அப்படிப்

படிக்கிற மனிதன் தனக்குள் எவ்வளவு விசாலமடைய முடியுமோ அவ்வளவு வளரவும் தொடங்கி விடுவான். எனவே அவன் 'ஞானயக்ஞம்' என்று கிருஷ்ணபிரான் அழைக்கிற இந்த முறையில் நன்கு பரிணும வளர்ச்சியை அடைவான்.

நம்முடைய சாஸ்திரங்களில் வேள்விகளுக்கு ஒன்றுக்கொன்று மாறுபாடு நன்கு தெரியும்படியான நான்கு வகை உண்டு. (1) சடங்குகள் (விதி); (2) திருப்பிச் சொல்லுதல் (ஜபம்); (3) உதட்டோடு முணுமுணுத்தல் (உபாம்சு); (4) மனதுக்குள் சொல்லுதல் (மானஸம்). ஞானயக்ஞம் கடைசி வகையைச் சேர்ந்தது. அதனுல் அதன் பெருமை அதிகம் என்று சொல்லப்பட்டு அதன் மகிமை பேசப்பட்டிருக்கிறது.

வேள்வி அல்லது யக்ஞத்தில் யக்ஞவேதியில் அக்னி தேவன் ஆவாஹனம் செய்யப் படுகிருன். அதற்குள் பக்தர்கள் பொருள்களை (இடுகிருர்கள்) ஹோமம் செய்கிருர்கள். இந்த ஒப்புமையிலிருந்து தான் ஞானயக்ஞம் என்ற சொல் அமைக்கப்பட்டு கீதையில் பயன் படுத்தப்பட்டிருக்கிறது. சாஸ்திரம் படிப்பதும் அதில் வந்துள்ள தத்துவங்களைப் பற்றி மனனம் செய்வதும் ''ஞாஞக்னியை'' எழச் செய்கின்றன. அறிவாளியான சாதகன் அந்த நெருப்புக்குள் தன் தப்பு மதிப்பீடுகளையும் கெட்ட போக்குகளையும் தன்னுடைய ஹோமப் பொருளாக இடுகிருன். ஞானயக்ஞ உருவகத்துக்கு இது தான் குறிப்புப் பொருள். இந்தப் பொருளில் கீதையைப் படித்து மனனம், தியானம் செய்கிறவர்கள், அதன்மூலம் கிளர்ந்து எழுந்த அறிவு நெருப்பில் தங்களைப் பற்றியும் சுற்றிய உலகத்தைப் பற்றியும் கொண்டிருக்கிற தவருன கருத்துக்களை இட்டுப் பொசுக்குகிருன். அப்படிப்பட்டவர்கள் உண்மையிலேயே அந்த எல்லையற்ற பரம்பொருளின் பக்தர்கள் தாம். இது ஆன்ம சாஸ்திரத்தின் ஒரு உண்மை. இதைத் தான் பகவான் இங்கே ஒத்துக் கொண்டு பேசுகிருர்.

படிப்பதற்கும் ஊன்றிப் படிப்பதற்கும் (கற்பதற்கும்) ஒரு நுண்ணிய மாறுபாடு உண்டு. இக்காலத்தில் உள்ள மனிதர்களால் செய்தித் தாள்கள் படிக்கப் படுகின்றன. ஆனுல் சந்தைப் போக்குகள் ஊன்றிப் படிக்கப் படுகின்றன. படிப்பது ஒரு ஆவலைப் பூர்த்தி செய்து கொள்வதற்குத்தான். ஆனுல் ஊன்றிப் படிப்பது சொல்லப் பட்டிருக்கிற விஷயத்தைப் படித்துத் தெளிந்து சிந்தித்து நம்மை சீர்திருத்திக் கொள்ள, முழுமையாக்கிக் கொள்ள ஏற்பட்டிருக்கிற பசியைத் தீர்த்துக் கொள்வதற்காகச் செய்யப்படும் செயல்.

துருப்பிடித்த ஒரு சாவியை நெருப்பில் காய்ச்சினுல் துரு விழுந்து விடுகிறது—சாவிக்கு அதன் பழைய பளபளப்புக்

கிடைக்கிறது. அதே போல் நம் ஆளுமையும் கீதையின் ஞானக்னியில் படியும்போது செம்மையடைகிறது. அப்போது நம் தவறான போக்குகள் வியாதி பிடித்த 'வாசனைகள்'. நான் என்கிற பொய்யான தன் முனைப்பு முதலிய ''அஞ்ஞானத்தில்'' பிறந்த அழுக்குகள் எல்லாம் எரிந்து பொசுங்கி விடுகின்றன.

ஆசாரியனுடைய மஹிமை அத்யயனத்தின் அபாரப் பயன்கள் இவற்றை எல்லாம் எடுத்துச் சொல்லியபிறகு கிருஷ்ணன் மேலே வரும் சுலோகத்தில் கீதை உரைகளைக் 'கேட்பது' கூட லாபகரமானதே என்கிறார்:

ச்ரத்தாவாநநஸூயஸ்
　　ச்ருணுயாதபி யோ நர:
ஸோஅபி முக்த: சுபான் லோகான்
　　ப்ராப்நுயாத் புண்ய கர்மணாம்　　*18:71*

ச்ரத்தாவான்—சிரத்தையுடன்; அநஸூய—பொறாமை இல்லாத; ச—மேலும்; ச்ருணுயான்—கேட்பான்; அபி—கூட; ய:நர—எந்த மனிதன்; ஸ: அவன்; அபி—கூட; முக்த:—விடுதலை பெற்றவனாக; சுபான்—மங்களகரமான; லோகாந்—உலகங்களை; ப்ராப்துயாத்—அடைவான்; புண்ய கர்மணாம்—புண்ணியச் செயல்களின்.

எவன் இதை சிரத்தையுடனும் (நம்பிக்கை), அசூயை இல்லாமலும் கேட்கிறானோ அவனும் கூட விடுதலை பெற்று அப்புண்ணியகர்மங்களுக்குரிய மங்கள யோகங்களை அடைவான்.

மற்ற விஞ்ஞான நூல்களைப் படிப்பதற்குரிய முறைக்கும், 'வாழ்க்கை விஞ்ஞான' சாஸ்திரத்தைப் படிக்கிற முறைக்கும் மாறுபாடு உண்டு இங்கே நாம் படிப்பதன் முழுப்பயனைப் பெற வேண்டும் என்றால் ரிஷிகள் காட்டும் பூர்ணத்துவத்தையும் ஆசாரியன் நமக்குச் சொல்லும் செம்மையையும் நேரடியாக அனுபவத்தில் பெற வேண்டும். அதற்கு நாம் படிக்கவேண்டும், புரிந்து கொள்ள வேண்டும். மீண்டும் மீண்டும் மனனம் செய்ய வேண்டும். அந்தக் கருத்துக்களின்படி நம்பிக்கை கொண்டு வாழ்வதன் மூலம் அவற்றை நம்முடைய அங்கமாகவே ஆக்கிக் கொண்டு விடவேண்டும். இறுதியில் நூல் உறுதி சொல்கிற பூர்ணத்துவத்தை நாம் பெற்றுவிடவேண்டும்.

சுருக்கமாகச் சொன்னால் கீதை வேறு, படித்தவன் வேறு என்கிற நிலை இருக்கக் கூடாது. பகவானின் தெய்வீகமாகிற பகவத்கீதையில் கண்ணன் இதைச் சொல்லியிருக்கிறார் அதைச் சொல்லியிருக்கிறார் என்று எடுத்துச் சொல்லத் திறமை பெற்றிருந்தால் மட்டும் போதாது. கீதை அதைப் படிக்கும்

மாணவன் வாழ்க்கையைப் பூரணமாக ஆக்கவேண்டும் என்ருல் கீதையை எல்லாவிதத்திலும் கெஞ்சிக் கொஞ்சி அணைத்து இரண்டற இணைத்துக் கொண்டாக வேண்டும். எனவே தான் கண்ணன் கீதை கேட்கிறவர்கள் முழுப்பயனும் பெற வேண்டும் என்ருல் நிறை வேற்றப்பட வேண்டிய இரண்டு நிபந்தனைகளைச் சொல்கிருர். அவற்றை நிறைவேற்றினுல்தான் அதிக அளவு அமைதியையும் ஆனந்தத்தையும் பெற இயலும்.

ச்ரத்தாவான்—சிரத்தை (நம்பிக்கை, ஈடுபாடு) உடையவன்—ஸம்ஸ்கிருத சொல்லான சிரத்தையை சாதாரணமாக ஆங்கிலத்தில் 'நம்பிக்கை' (*Faith*) என்று மொழி பெயர்த்து விடுகிறோம். ஆனல் அந்த மூலச் சொல்லுக்குள் அதிகப் பொருள் அடங்கி இருக்கிறது. சாஸ்திரத்தின் கூற்றுக்களின் உண்மையில் நம்பிக்கை கொண்டு நுண்ணிய பொருளைப் புரிந்து கொள்வதற்காக நன்கு ஆழ்ந்து அறியும் திறமையும், பிறகு கற்றுக் கொண்டதை புத்தியின் ஊடு பாவு ஊடே சேர்த்துவிடும் தன்மையும் சேர்ந்தே சிரத்தையாகும்.[1]

இன்னம் தெளிவாகச் சொன்னுல் சிரத்தையில் தனி புத்தித்திறமையின் நான்கு அம்சங்கள் இருக்கின்றன. (1) பவித்திரமான சொற்களின் நுண்ணிய ஆழ்ந்த குறிப்பை அறிந்து கொள்ளுதல் (2) அவைகளைத் தன்னுள் ஏற்றுக் கொள்ளுதல் (3) அவைகளைத் தன் ஆளுமையின் அங்கமாக ஆக்கிக் கொள்ளுதல்; (4) அந்த இலக்ஷியங்களுக்கு உரிய வாழ்க்கை நடத்துதல். இந்த நான்கு அம்சங்களைக் கொண்ட புத்தித் திறமையை வளர்த்துக் கொண்டவன் தான் பகவத் கீதையை கேட்பதன் மூலம் உண்மையான பயன் பெற முடியும்.

(அநஸூய:) அசூயை அற்றவன் (பொருமை, வெறுப்பு, த்வேஷம் இல்லாதவன்) மனதில் கீதையின் போதனைகளைப் பற்றி வெறுப்பு இல்லாமல் இருப்பவன் தான் நல்ல ஆரோக்கியமான மனதுடன் கீதையை ஆழ்ந்தும் விரிவாகவும் படிக்கமுடியும். ஆம். ஹிந்து மதம் எந்த நூலையும் முதலில் திடீர் என்று முழுவதும் நம்பிப் படிக்கும்படி நிர்பந்தப்படுத்துவதில்லை. இது உண்மைதான். ஆனலும் முதலிலேயே அவநம்பிக்கையும் பொருமை, காழ்ப்பு—முதலியன இருந்தால் ஒருவன் ஒன்றையும் படிக்கவும் மாட்டான்! படித்தபிறகல்லவா பயனுண்டா என்று தெளிந்து கொள்ளமுடியும்? பயன் தெரிந்தால் பிறகு தானே படித்து விடுவான் என்று நம்பலாம்!

---

[1] விவேக சூடாமணியில் சுவாமியின் விரிவுரையைப் பார்க்கவும்.

சாஸ்த்ரஸ்ய குருவாக்யஸ்ய சத்ய புத்தி அவதாரணம்—ச ஸாச்ரத்தா. டாகூர்—சிரத்தை வைகறை இருட்டாயிருக்கும் போதே வெளிச்சத்தை உணர்ந்து பாடும் பறவையாம்!

கீதை சொல்கிற கொள்கைகளை நேரடியாக அனுபவபூர்வமாகப் பெற வேண்டும் என்ருல் புத்தி அவற்றை இந்திரியங்கள் மூலம்தான் பெறமுடியும் இந்தக் கருத்துக்கள் மனச் சல்லடையில் சலிக்கப்பட்டே புத்தியை அடையும். மனதில் அழுக்கு இருந்து இந்தத் தத்துவக் கோட்பாட்டிடமோ அல்லது தத்துவ வாதியிடமோ காரணமற்ற வெறுப்பை ஏற்படுத்தியிருந்தால் பிறகு அந்த நூலோ அந்தத் தத்துவ வாதியோ எடுத்துக் காட்டும் கொள்கைகள், தர்க்கங்கள் இலட்சியங்கள் ஒன்றும் சீடன் புத்தியருகே கூட வரமுடியாது. சீடன் தானே தர்க்கித்து தான் படிப்பதன் நன்மை, தீமை, பயன், பயனற்ற தன்மை இவற்றைப்பற்றி சுதந்திரமாக முடிவு செய்ய வேண்டும் என்பதை நாம் சந்தேகமின்றி ஒப்புக் கொள்கிருேம். என்ருலும் சற்ருவது பொறுமை காட்டி சாஸ் திரம் சொல்வதை முதலில் கேட்க வேண்டாமா? சுருங்கக் கூறின் சீடன் திறந்த, அழுக்குப்படியாத, நேர்மையுடன் அணுகி, முன்னுலேயே தக்க காரணமின்றி, ஏற்பட்ட வெறுப்பு இல்லாத உள்ளத்தைக் கொண்டிருக்கவேண்டும். அது சொல்வதைக் கேட்பதற்கு முன்னமேயே அதை ஒதுக்கி விட விரும்பக் கூடாது.

''கீதையைக் கவனமாகக் கேட்டு, புத்தியின் அம்சமாக்கி அந்த அறிவைத் தன்னதாக ஆக்கிக் கொள்ளமுயலும் 'அந்த மனிதன்' கூட குழப்பங்கள் கவலைகள், சிக்கல்கள், பிணைப்புகள் நிறைந்த இன்றைய நிலையிலிருந்து 'விடுபட்டு' உள் அமைதியையும் ஆனந்தமும்'' நிறைந்த நிலையை அடைகிருன்.

'ஆனந்த சாம்ராஜ்யம்' நம் எல்லோருள்ளும் இருக்கிறது. சொர்க்கம் என்பது எங்கேயோ தொலைவில் ''அங்கங்கே'' இல்லை! அது இங்கே, இதோ தான் இருக்கிறது. மகிழ்ச்சியும் சரி, துயரமும் சரி இரண்டும் நமக்குள்ளே தான் இருக்கின்றன. கீதை காட்டித் தருகிறபடி சரியான வாழ்க்கையைத் தரக்கூடிய கொள்கைகளை எவ்வளவுக்கெவ்வளவு கடைப் பிடித்து வாழ்கிருேமோ அவ்வளவுக்கவ்வளவு நமக்குள் பண்பாடு உயரும். நாம் வெற்றிகள் அதிகம் கொண்ட பெருவாழ்வு வாழ்வோம்.

சீடன் அந்தப் பெரும் குறிக்கோளையும், அதற்கான வழியையும் முழுமையாகப் புரிந்து கொள்ளும்படி பார்த்துக் கொள்வது ஆசானின் கடமையாகும். அவர் சொல்கிற வழி

மாணவனுக்கு உரிய நற்பயனை அளிக்கத் தவறுகிறது என்று கண்டால் ஆசாரியர் மாணவன் தானே தனக்குப் பயன் தரக்கூடிய சமத்துவ மனோநிலையை அடைவதற்கு வழி கண்டு பிடித்து அதைக் காட்டி உதவவேண்டும்.

எனவே வருகிற சுலோகத்தில் கண்ணன் அர்ஜுனனிடம், 'நான் சொல்லிய இந்தப் பதினெட்டு அத்தியாயங்களின் உண்மைப் பொருளைப் புரிந்து கொண்டு விட்டாயா?' என்று கேட்கிறார்.

கச்சிதேதச்ச்ருதம் பார்த்த த்வயை காக்ரேண சேதஸா
கச்சிதஜ் ஞான ஸம்மோஹ: ப்ரநஷ்டஸ்தே தனஞ்ஜய!
18:72

ஏதத்—இது; கச்சித்ச்ருதம்—கேட்கப்பட்டதா; பார்த்தஹே பார்த்தா; த்வயா—உன்னால்; ஏகாக்ரேண—ஒரு முனைப்படுத்தப்பட்ட; சேதஸா—மனதுடன்; அஞ்ஞானஸம் மோஹ—அறியாமையால் ஏற்பட்ட மருட்சி; கச்சித்ப்ரநஷ்ட:—தொலைந்ததா; தே—உன்னுடைய; தனஞ்ஜய—தனஞ்சயனே.

ப்ருதுவின் மைந்தனே! இது உன்னால் ஒரு முகப்பட்ட மனதுடன் கேட்கப்பட்டதா? ஏ தனஞ்ஜயனே! அறியாமையால் எழுந்த உன் மோகம் (மருட்சி) தொலைந்ததா?

இங்கே பிரபு கிருஷ்ணன் சீடனிடம் பதிலைச் சுட்டக்கூடிய கேள்வியைக் கேட்கிறார். இதனால் சீடனான அர்ஜுனனுக்குத் தான் பதினெட்டு அத்தியாயங்களைக் கேட்டு எவ்வளவு பயன் பெற்றான் என்று சொல்ல ஒரு வாய்ப்பு ஏற்படுத்தித் தரப்படுகிறது. உண்மையில் கிருஷ்ணனுக்குச் சந்தேகம் இல்லை. ஆனால் தான் முயற்சி செய்து வியாதியிலிருந்து காப்பாற்றிய அந்த வியாதி தீர்ந்தவனுடைய மகிழ்ச்சி பொங்கிக் காட்டும் முகத்தைக் கண்டு உள்ளூரத் தானும் மகிழ்ந்து தன் வெற்றியையும் புரிந்து கொண்டு ''இப்போது எப்படி இருக்கிறது?'' என்று கேட்கும் டாக்டர் போல, இங்கே கிருஷ்ணனும் கேட்கிறார். இது மனோ வியாதியிலிருந்து விடுபட்ட அர்ஜுனனுடைய மகிழ்ச்சி ஒளி கொண்ட முகத்தைப் பார்த்து உற்சாகத்துடன் கேட்கப்பட்ட கேள்வியேயாகும்!

(த்வயா ஏகாக்ரேண சேதஸா ச்ருதம் கச்சித்?) உன்னால் இது ஒரு முனைப்படுத்தப்பட்ட மனதுடன் கேட்கப்பட்டதா! நீ நன்றாய் ஊன்றிக் கவனித்துக் கேட்டாயா? அதாவது நீ அவ்விதம் கேட்டுக் கொண்டு இருந்திருந்தால் உன்னைச் சுற்றி இருக்கும் பொருள்கள் நடக்கும் நிகழ்ச்சிகள் இவற்றின் பகுத்தறிவு பூர்வமாக உண்மையையும் நீ அவற்றுடன் கொள்ளும் உறவையும், அவை உன்னிடம் ஏற்படும் பாதிப்பையும் புரிந்து கொள்வாய்.

(அஞ்ஞான ஸம்மோஹ: கச்சித் ப்ரநஷ்ட:?) அறியாமையால் ஏற்பட்ட மருட்சி (கருத்தில் தடுமாற்றம்) ஒழிந்து விட்டதா? நாம் கொண்டிருக்கிற தவறான மதிப்பீடுகள் உலகைப்பற்றிய நம் பார்வையையும், சம்பவங்களைப்பற்றி நாம் கொள்ளும் முடிவுகளையும் கோணலாக்கி விடுகின்றன. அர்ஜுனனின் கீதையில் தொடக்க அத்தியாயங்களில் தன் மனமருட்சியை வெளியிட்டிருந்தான்.[1]

கால் கட்டைவிரலில் சிரங்கு வந்து அழுகி விட்டால் அதை வெட்டி எடுத்து விடுவதும் குற்றமில்லை. ஆனால் உயிரையே காப்பாற்றும் ஒரு அருட்செயலாகும். அப்போது கட்டைவிரல் போயிற்றே என்று குறைப்பட மாட்டோம்; ஆனால் உடல் அழிவதிலிருந்து காப்பாற்றப்பட்டது என்று எண்ணுவோம். அர்ஜுனன் காலத்தில் நம் பண்பாட்டுக்கு வந்த நெருக்கடி— கௌரவர்கள் நம்முடைய ஆன்மிகப் பண்பாட்டின் அழகையும் மென்மையான தன்மையையும் அழிக்க என ஆயுதம் எடுத்து விட்டார்கள். அர்ஜுனனுக்குத் தர்மத்தைக் காக்கும் வாய்ப்பு வந்து நேர்ந்தது. ஆனால் அர்ஜுனனே நிலைமையைத் தவறாகப் புரிந்து கொண்டு நேரத்தின் தேவையை மறந்து தவறாக முடிவு எடுக்கத் தொடங்கியிருந்தான். அதனால் அவன் நாடி நரம்புகள் வலுவிழந்து மனக்குழப்பத்தில் உடைந்து நொறுங்கிவிட்டான். எல்லாவற்றுக்கும் அடிப்படைக் காரணம் உண்மையைப் பார்க்க இயலாமைதான். அதைத் தான் வேதாந்தத்தில் 'அவித்தை' அல்லது 'அஞ்ஞானம்' (அறியாமை) என்கிறோம். இந்த அஞ்ஞானத்தை நீக்கும் போது 'உண்மை புரிகிறது' அதாவது 'ஞானம்' ஏற்படுகிறது. அது ஏற்படும்போது அஞ்ஞானம் முழுமையாக, தன் எல்லா அங்கங்களுடனும் ஒரேயடியாகத் தொலைந்து விடுகிறது. இதற்காகத் தான் ஆசான் சீடனிடம் இந்தத் தர்க்கங்களை எடுத்துப் பேசுகிறார்.

உண்மை ஞானம் கர்மத்தில் திறமையைப் போதிக்கிறது. அது சமுகத்தில் சேவையின் வெற்றிகளின் ஒளியாகப் பரிணமிக்கவேண்டும். அர்ஜுனன் கீதாதத்துவத்தைப் புரிந்து கொண்டிருந்தால், எதிரே இருந்த அறைகூவலைச் சந்திக்கத் தயங்கமாட்டான். பகவான் இதைத்தான் மனதில் எண்ணி இந்தக் கேள்வியைக் கேட்டிருக்க வேண்டும்.

அர்ஜுனன் குழப்பங்கள் ஒழிந்துவிட்டன என்று ஒப்புக் கொள்கிறான்.

---

[1] முதல் அத்தியாயம் 36–46 வரை சுலோகங்களையும் இரண்டாம் அத்தியாயத்தில் 4,5வது சுலோகங்களையும் படித்துப் பார்க்கவும்.

அர்ஜுன உவாச

நஷ்டோ மோஹ: ஸம்ருதிர்லப்தா
த்வத்ப்ராஸா தாந் மயாச்யுத
ஸ்திதோ அஸ்மி கதஸந்தேஹ:
கரிஷ்யே வசனம் தவ. 18:73

நஷ்ட—ஒழிந்துவிட்டது; மோஹ:—மயக்கம்; ஸ்ம்ருதி:—நினைவு; (ஞானம்) லப்தா—பெறப்பட்டு விட்டது; த்வத்ப்ரஸாதாத்—உன் அருளினல்; மய—என்னுல்; அச்யுத—ஓ அச்சுதா; ஸ்தித—நிலைத்தவனுக; அஸ்மி—இருக்கிறேன்; கதசந்தேஹ:—சந்தேகம் நீங்கியவனுக; கரிஷ்யே—செய்வேன்; வசனம்—வார்த்தைப்படி; தவ—உன்னுடைய

அர்ஜுனன் சொன்னுன்.

ஏ அச்சுதா! உன் அருளால் என் மோகம் ஒழிந்து நான் என் நினைவை (அறிவை) பெற்றுவிட்டேன்; நான் உறுதியாயிருக்கிறேன். என் சந்தேகங்கள் போய்விட்டன. நான் உன் வார்த்தைப்படி செய்வேன் (நடந்துகொள்வேன்)!

திடீர் என்று மூர்ச்சையுற்ற நிலையிலிருந்து விழித்தவன் போல் அர்ஜுனன் சுய அறிவை மீண்டும் பெற்று 'என்னுடைய குழப்பம் தீர்ந்து விட்டது!' என்று ஒப்புக் கொள்கிருன். இதை அவன் இதுவரை கீதையில் உரைகளில் சொல்லப்பட்டு கேட்டு வந்த கருத்துக்களை அப்படியே யோசிக்காமல் ஒத்துக் கொண்டதால் சொல்லவில்லை. ஆனுல் அவனே, 'என் உண்மைநிலை மீண்டும் நினைவுக்கு வந்துவிட்டது' என்று சொல்கிறபடி கிருஷ்ணன் முயற்சி பலித்து அர்ஜுனன் சுபாவத்தின் உண்மை அறிவைப் பெற்றுவிட்டான். ''என் உள்ளத்தின் உண்மையாயிருக்கும் வீரன் விழித்து விட்டான். தாற்காலிகமாக என் மனதின் மேல் வெற்றி கொண்டு ஆதிக்கம் செய்த நரம்புத் தளர்ச்சி நிலை முடிவாகத் தொலைந்து விட்டது'' இது அவன் ஒப்புக் கொண்ட உண்மை.

இப்படி நம் உள்ளேயே நாம் புனருஜ்ஜீவனம் பெறுவதும் நம் உண்மை ஆளுமையை மீண்டும் அடைவதும் நமக்கும் சாத்தியம்தான். கீதையின் தத்துவத்தின் உண்மையான முக்கியத்துவத்தை நாம் நன்கு உணர்ந்து கொண்டால் அது சாத்தியமே என்பதில் ஐயமில்லை. ''பூர்ண''த்தின் எல்லையற்ற அந்த இயற்கை நம்முடையதே. ஏதோ, யாரோ முகவர் இடைப்பட்டு நமக்கு எடுத்துத்தர நாம் பெறுவதல்ல அது. அபார வல்லமையும் தெய்வத்தன்மையும் பெற்ற அந்த 'பூர்ணம்' நம்முள்ளே நம்முடைய சிறிய 'நான்' என்கிற அகந்தை எழுப்பித் தருகிற குழப்பங்கள், வீணுனவும் மகா மோசமாகவும் உள்ள அச்சங்கள் இவற்றுல் மூடப்பட்டு இருக்கிறது. நாம் குழப்பமும் கவலையும் கொண்டு நம்முடைய 'அஹம்' தரும் துன்பங்கள் துயர்களுள் முழ்கி உழலும் போதும்கூட, உண்மையான 'நாம்'

ஆத்மாவாகவேதான் இருக்கிறோம். அதனின்று வேறாக இல்லை. கனவு தொலையும் போது குழப்பமும் போய்விடும். நாம் விழிப்புப் பெற்று நம் உண்மைத் தன்மையில் நிலைத்துவிடுவோம். கனவு, விழிப்பில் நடக்கும் இந்தச் செயலைப்போலத்தான் வாழ்க்கையிலும் நடக்கிறது நம் தெய்வத்தன்மை விழிக்கும்போது நமக்குள்ளே எழுந்து ஆடிய மிருகத் தன்மை அற்றுவிடும்.

அர்ஜுனன் தன் சமநிலையைப் புதிதாகக் கண்டுகொண்டான். அது அவனுடைய அறிவின் விழிப்பாகும். இப்போது அவன் நல்ல திடமான அடிப்படையில் அசங்காமல் அமைந்து நிற்கும் ஒரு சமநிலை பிறந்து விட்டதை உணர்கிறான். மனதின் சந்தேக ஆட்டங்கள், கவலைகள், அவநம்பிக்கைகள், தயக்கங்கள், மன வெறுப்புக்கள், சலிப்புக்கள், அச்சங்கள், பலஹீனம் எல்லாம் அவனை விட்டுவிட்டன. (கத சந்தேஹ!)

மங்கல் நீங்கி தன் உண்மைத்தன்மை அவனுக்குப் புரிந்தவுடன் அவன் தன் எதிரிலுள்ள நிலைமையை மீண்டும் சிந்திக்கிறான். இப்போது தன் கடமை என்ன என்று புரிந்துகொள்வதில் அவனுக்கு சந்தேகமோ தயக்கமோ ஏற்படவில்லை. அர்ஜுனன் வாய்விட்டு, 'நான் உன் சொற்படியே நடந்து கொள்கிறேன்!' என்று சொல்கிறான். கீதையில் முன்னமேயே கிருஷ்ணன் சுத்த புத்தி தத்துவத்தில் வெளித் தோன்றும் உயிரின் தெய்வீகப் பொறியின் உருவகமாக இருக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அர்ஜுனன் இப்போது 'இனி என் கீழ்மட்ட மிருகம்' தணிந்த குரலில் முணுமுணுத்துச் சொல்வதைக் கேட்க மாட்டேன்; தப்பு வழி காட்டும் மனம், அதன் ஆட்டங்கள் இவற்றுக்குச் செவி சாய்க்க மாட்டேன்!' என்கிறான்.

கீதையை பூராவாகப் புரிந்துகொண்டு வாழ்க்கையின் இறுதி லட்சியத்தின் நல்ல உண்மையான சித்திரத்தைப் பெற்று போக வேண்டிய வழியையும், தவிர்க்க வேண்டிய வாழ்க்கையின் சந்து பொந்துகளையும் புரிந்துகொண்ட கீதையின் மாணவர்கள் எல்லோரும் தன்னுடைய நன்கு இணைந்து ஒரே வடிவாய் நிற்கும் தன் உள் ஆளுமையினிடம் (உண்மையாக உள்ள தன் உச்ச நிலையிடம்) சரணடைந்து விடுவார்கள். நம்முடைய உயர்ந்த அறிவுக்கு அடைக்கலமாவதும் ''நீ சொல்கிறபடி கேட்கிறேன்' என்று சொல்வதும் ஆன்ம வாழ்க்கையின் தொடக்கமாகும். அதுவே எல்லாமுமாகும்!

ஸஞ்சயன் கீதாசாரியனுடையவும், அவர் தெய்வீக கீதமான ஸ்ரீமத் பகவத் கீதையினுடையவும் மகிமையைப் பேசுகிறார்:

ஸஞ்ஜய உவாச:
இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மன:
ஸம்வாதமிமச் ரெளஷமத்புதம் ரோமஹர்ஷணம் 18:74

இதி—இவ்விதம்; அஹம்—நான்; வாஸுதேவஸ்ய—வாசுதேவனுடைய; பார்த்தஸ்ய—பார்த்தனுடைய; ச—உம்; மஹாத்மந:—மகாத்மாவினுடைய; ஸம்வாதம்—சம்பாஷணையை; இமம்—இதை; அச்ரெளஷம்—கேட்டேன்; அத்புதம்—அற்புதமானது; ரோமஹர்ஷணம்—மயிர்க்கூச் செரியச் செய்யக் கூடியது.

சஞ்சயன் சொன்னது:

''இவ்விதம் நான் வாசுதேவனுடையவும், மஹாத்மாவான பார்த்தனுடையவும் ஆன இந்த அற்புதமான சம்பாஷணையைக் கேட்டு மயிர் கூச்சடைந்தேன்? சென்ற சுலோகத்தில் அர்ஜுனன் 'மறு வாழ்வு' பெற்று மீண்டெழுந்து உறுதி கூறுகிருனே அதை நன்கு கவனிப்பவர்கள், உலக சரித்திரத்தில் வேருெரு மகாத்மாவான குரு மீண்டெழுந்து சொன்னுரே அந்தச் சொல்லை ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியாது. அவரும் அர்ஜுன நிலையிலிருந்து மீண்டும் தன் உண்மை நிலையை, அதாவது ஆத்ம சம நிலையைப் பெற்ருர். அவர் அதை பரிகாசம் செய்யும் கும்பலுக் கிடையே சிலுவையைத் தாங்கிச் செல்லும்போது, தற்காலிக மாக இழந்திருந்தார். அவரும் இம்மாதிரியே ''உன் நிச்சயமான விருப்பமே நிறைவேறும்!'' என்று கூறினுர். அவர் தான் ஏசு கிறிஸ்து. அதே போல் இங்கேயும் அர்ஜுனன், கிருஷ்ணன் அருளால் ''மீண்டெழுந்து'' விட்டான்; அதே மாதிரி சொல்கிருன்: ''நான் உன் சொற்படி செய்கிறேன்'' (கரிஷ்யே வசனம் தவ). இரண்டு இடங்களிலும் சொற்கள் ஒரே மாதிரி அமைந்திருக் கின்றன. இதைச் சொல்லும்போது சொல்கிறவர்களுக்கும் அந்த எல்லையற்ற பரம் பொருளான இறைத் தத்துவத்துக்கும் இடையே, பிளவு இருக்குமா, என்ன?

இந்தப் பாண்டவ ராஜகுமாரன் கீதையின் தொடக்கத்தில் கோவிந்தனிடம், ''நான் சண்டையிடப் போவதில்லை!'' என்று சொல்லி கையறு நிலையில் அமர்ந்துவிட்டான். அதே அர்ஜுனன் தான் இப்போது மீண்டு தன் உச்ச நிலைக்கு எழுந்து விட்டான்—''நான் நீ சொல்கிறபடியே செய்வேன்!'' என்றும் சொல்கிருன். சிகிச்சை முழுமையாக முடிந்து விட்டது. சாஸ்திரமும் முடிந்து விட்டது.

பதினெட்டு அத்தியாயங்களில் பரவி நிற்கும் இந்தக் கீதை மஹாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் ஒரு பகுதியாகும். இலக்கியக் கலைஞரான வியாஸர் அந்த மகாகாவியத்தின் பாவு

ஊடு ஊடே இதையும் அமைத்து நெய்ய வேண்டியிருந்தது. முடிவில் வரும் இந்த ஐந்து சுலோகங்கள் அதற்குப் பயன் படுத்தப்பட்டிருக்கின்றன. ஆச்சரியம் ஊட்டும் மஹாபாரதம் ஒரு கழுத்துச் சங்கிலி என்ருல் இந்தக் கீதை அதில் தொங்கும் தொங்கட்டான் ஆகும். அதை சங்கிலியுடன் இணைக்க சஞ்சயன் மிகக் கலை நுணுக்கத்துடன் கூறும் இந்த சுலோகங்களைப் பயன் படுத்தியிருக்கும் வியாஸர், ஸஞ்ஜயன் மிகவும் குறைவான ஆனுல் கருத்தாழம் கொண்ட பொறுக்கி எடுக்கப்பட்ட ரத்தி னங்கள் போன்ற சொற்களில் கீதையின் பெருமை, அதிசயிக்கத் தக்க வகையில் மாறிய அர்ஜுனன் மீண்டும் சுய அர்ஜுனனுன வழி. இருவருக்கும் இடையே நிகழ்ந்த உரைகளைக் கேட்கும் போதே (ஸஞ்ஜயன்) தன் அகத்தூடே நிகழ்ந்த பெரிய நுண்ணிய மாறுதல்கள், ஹிந்துக்கள் பண்பாட்டில் தனக்கே உள்ள நம் பிக்கை—இவை எல்லாவற்றையும் சொல்கிருர்.

இவ்விதம் வாஸுதேவனுக்கும் மகான் அர்ஜுன னுக்கும் இடையே நடந்த இந்த சம்பாஷணையைக் கேட்டேன்.—வியாச சாகித்யத்தின் பின்புலத்தில் நாம் சிந்தித் தோமானுல் பகவான் கிருஷ்ணனுக்கும் பிருதுவின் மகனுன அர் ஜுனனுக்கும் இடையே நடந்த சம்பாஷணை மனிதனுக் குள்ளேயே இருக்கும் உயர்ந்த நிலைக்கும் கீழ் நிலைக்கும் இடையே, ஆன்மாவுக்கும் சடமான அநாத்மப் பகுதிக்கும் இடையே நிகழ்ந்த ரகசிய சம்பாஷணையேயாகும். வாசுதேவன் என்ருல் வசுக்களின் தேவன் என்று பொருள். எட்டு வசுக்கள் உண்டு. எட்டு பேரும் சேர்ந்து காலத்துக்கு ஆளும் தேவர்கள். எனவே ரகசிய அடையாளப் பேச்சில் வாசுதேவன் என்ருல் மனிதன் புத்தியில் ஏற்படும் காலம் என்கிற கருத்துக்கு ஒளி தரும் பேருணர்வுத் தத்துவமாகும். தெளிவாகச் சொன்னுல் வாசு தேவன் ஆத்மாவே. ‘பார்த்தன்’ என்ருல் ‘மண்’ணுகும். அது உரைக்குப் பிறகு உரையாக, உதிர்த்துவிட்டு பரம் பொருளாக, சுத்த நித்ய ஆற்றல் பெற்ற மேலான தத்துவமாகும்.[1] இவ்விதம் தன்னுடைய உரைகளை நீக்குவதும் (வஸ்த்ராபஹரணம்) தன்னை ஆத்மாவாகப் புரிந்து கொள்ளுவதும் மனிதனுடைய ஆகச் சிறந்த கலையாகும்.[2] அழியும் பொருள்களிலிருந்து அழியாத தத்துவத்தை நீக்கி எடுக்கிற கலை இது. கீதையின் உட்பொருள் இதுவே.

அற்புதம்: ஸஞ்ஜயன் இதுவரைதான் கேட்டு வந்த கீதா தத்துவத்தை அற்புதம், அதிசயம், வியப்பூட்டக்கூடியது

---

[1] இரண்டாம் அத்தியாயம் 9வது சுலோகத்தின் விரிவுரையை பார்க்கவும்.

[2] சுவாமியின் தைத்திரியோபநிஷத் உரை, தியானமும் வாழ்க்கையும் ஆகிய நூல்களில் உள்ள பஞ்சகோச விவரணம் பார்க்கவும்.

அலௌகீகமானது என்று வியக்கிறார். எந்த உயர்ந்த தத்துவமுமே மனிதன் புத்தியின் ஆச்சரியமான கற்பனைதான். புத்தியின் நுணுகிய பிரமாதமான கற்பனையின் விஷயத்தை யோசித்து புரிந்து கொள்வது ஆற்றலின் பயனே! ஆனால் ஸஞ்ஜய னுக்கு கீதையின் தத்துவ சிந்தனை மற்ற தத்துவ சித்தாந்தங்களை விட அதிக வியப்பூட்டுவதாயும் உயர்ந்ததாகவும் தோன்றுகிறது. ஏன் என்றால் அந்த மந்திரங்கள் பட்டவுடனேயே நொறுங்கிக் கிடந்த அர்ஜுனனின் ஆளுமை ஒரு முழுமையும் வேகமும் பெற்று எழுந்து விடுகிறது. அதன் ஆற்றலுக்கு இது நேரடியான மிகவும் வலிவு வாய்ந்த செயல் விளக்கம்! மனிதன் அதனால் மீண்டும் தன் தெய்வ ஆற்றலைப் பெற்று எழுந்து விடுவான்! எனவே கீதையின் தத்துவ சிந்தனைக்கு அலௌகீகமான ஆச்சரியகரமாக இருக்கும் பெருமை கிடைத்து விடுகிறது.

ஒவ்வொரு சாதாரண மனிதனுக்குள்ளேயும் பிரமாதமான ஆற்றல் மறைந்திருக்கிறது. அதைக் கொண்டு அவன் தன் மனதின் எல்லாப் போக்குகளையும் அடக்கி வெற்றி கொண்டு அவைகளைத் தான் விரும்புகிற வண்ணம் செயலாற்றச் செய்ய முடியும்! இதை இந்தத் தத்துவம் நிரூபித்து விட்டது. அவனே தன் வாழ்க்கைக்கு பிரபு, எஜமானன். தனக்குக் கிடைத்த வாஹனத்தை ஓட்டுகிற ஆண்டவனே அவன். தன் உடல், மனம், புத்தி, இவற்றின் அர்த்தமற்ற இஷ்டங்களுக்கு உட்பட்டு எப் போதும் அல்லற்படுவதற்காக ஏதோ உயர்ந்த சக்தி பெற்ற ஒரு அதிகாரியால் உற்பத்தி செய்யப்பட்டவனல்ல! இந்த உண்மை வெளியானவுடன் ஸஞ்சயன் தன்னை மறந்த வியப்பில் ஆழ்ந்து ஆஹா! எவ்வளவு அதிசயமான உண்மை வெளியீடு!' என்று கத்தி விடுகிறார். அற்புதம், அற்புதம் என்று ஆடுகிறார். இது மிகவும் இயற்கையான நிகழ்ச்சியே!

மஹாத்மா பார்த்தன்: இந்த சுலோகத்தில் பார்த்தனைப் புகழப்பட்டிருக்கிறது! பார்த்தசாரதியான கிருஷ்ணனை இல்லை! எதனால்? பாண்டவ இளவரசன் அர்ஜுனன் தன் மனது எழுப்பிய குழப்பங்களிலிருந்து துணிவுடன் வீரம் காட்டி வெளியேறி வரு கிறான். அது அவன் தன்னை ஆளும் கிருஷ்ணனுடைய உபதேசங் களைக் கேட்டவுடன் நிகழ்கிறது. சில சமயம் குழந்தைகள் நன்றாக செய்யும் சில செயல்கள் நம்மை அவற்றைப் பாராட்டத் தூண்டுகின்றன. ஆனால் அவற்றைப் பெரியவர்களே செய்தால் சில சமயம் பரிகாசம் கூடச் செய்யத் தோன்றலாம். சர்வ சக்த ஞன பகவானுக்கு இந்த கீதையை உபதேசம் செய்வது ஒரு லீலையே! அன்பு விளையாட்டேயாகும். ஆனால் அர்ஜுனன் சம்பந்தப்பட்டவரை தன் மனக் குழப்பத்திலிருந்து வெளியேறி வருவது ஒரு பெரிய அதிசயமான வெற்றியேயாகும். பாராட்டுக் குரிய செயலேயாகும். இதனால்தான் இந்த சந்தர்ப்பத்தில்

பரிபூரணனை பரமனை மறந்தே விட்டார். ஸஞ்ஜயன்! சாதாரண மர்த்யனை மனிதன் கீதையின் மிக நுண்ணிய தத்துவத்தைப் புரிந்து கொண்டது மட்டும் அல்லாது. தன்னை மீண்டும் தெய்வ நிலைக்கு உயர்த்திக் கொண்டு வாழவும் தொடங்குகிறான்! எனவே அவன் பாராட்டப்படுகிறான். அவனுடைய புகழ் பாடப் படுகிறது. 'மகாத்மா,' என்று அழைக்கப்படுகிறான்.

ஸஞ்ஜயனுக்கு பாண்டவர்களிடம் இரக்கம் உண்டு. ஆனால் அவர் திருதராஷ்டிரனின் மந்திரியானபடியால் அவர் உப்பைத் தின்று வருகிறவர். அவரிடம் விசுவாசம் இல்லாதிருப்பது தர்மமாகாது. அதே நேரத்தில் அப்போது இருந்த அரசியல் நிலை யில் திருதராஷ்டிரன் ஒருவனால்தான் போரை நிறுத்தியிருக்க முடியும். ஒரு கால் அவனும் திருந்தி வரலாம் என்ற கருத்தில் ஸஞ்ஜயன் ராஜ தந்திர முறையில் இந்த சுலோகங்கள் மூலம் அவன் மனதில் மாறுதலை ஏற்படுத்த முயலுகிறார் போலும். பக வான் கிருஷ்ணன் அர்ஜுனனை உடைந்து நொறுங்கிய நிலையி லிருந்து மீண்டும் பழைய தெய்வீக வீர ஆற்றலையுடைய அர்ஜுன னாக ஆக்கி விட்டார் என்ற உண்மையை திரிதராஷ்டிரன் புரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறார். அவருக்கு இதை எல்லாம் யோசித்து சமாதான உடன்படிக்கைக்கு முயலச் செய் வார் திருதராஷ்டிரன் என்ற எண்ணம். சிலிர்த்து எழுந்த வீரன் அர்ஜுனனால் யுத்தத்தின் விளைவு என்ன ஆகும் என்று அவர் திருதராஷ்டிரனுக்கு நினைவு ஊட்டுகிறார். அவர் நூறு பிள்ளைகள் செத்து அழிவர். இந்தக் கிழ வயதில் திருதராஷ்டிரன் மக்களை இழந்து வருந்த வேண்டியிருக்கும். தவிர அவமானமும் ஏற்படும். ஆனால் அந்தக் கிழவனின் ஊனக் கண்கள் மட்டும் குருடாயில்லை. அவருடைய மனம், புத்தி எல்லாமே கூட பொட்டை போலிருக்கிறது. வணங்க வேண்டும் ஸஞ்ஜயனுடைய தார்மீக வேண்டுதல்களின் குறிப்பு அந்தக் கிழவரின் செவிட்டுக் காது களில் புகவேயில்லை.

ஸஞ்ஜயன் வியாசபகவானிடம் தான் பட்டுள்ள கடமை யுணர்வை வெளிப்படையாகச் சொல்கிறார்.

வ்யாஸப்ரஸா தாச்ச்ருதவானேதத்
குஹ்யமஹம் பரம்
யோகம் யோகேச்வராத் க்ருஷ்ணாத்
ஸாக்ஷாத் கதயத: ஸ்வயம்

*18:75*

வ்யாஸப்ரஸாதாத்—வியாசரின் அருளினால்; ச்ருதவான்— கேட்டவனாக; ஏதத்—இதை; குஹ்யதமம்—பரம ரகசியமான; அஹம்—நான்; பரம்—மிகமிக உயர்ந்தது; யோகம்—யோகத்தை;

யோகேச்வராத்—யோகத்துக்கே ஈசுவரனிடமிருந்து; க்ருஷ்ணத்—கிருஷ்ணனிடம் இருந்து; சாக்ஷாத்—நேரடியாக; கதயத:—சொல்லும்போது; ஸ்வயம்—தானே.

வியாசரின் அருளினுல் நான் இந்த மிக உயர்ந்ததும் பரம ரகசியமுமான இந்த யோகத்தை நேரடியாக யோகேச்வரனுன கிருஷ்ணனிடமிருந்தே அவர் சொல்லும்போது கேட்டேன் (கேட்க முடிந்தது).

கீதை உரைகள் தொடங்குவதற்கு முன் வியாசர் திருதராஷ்டிரனிடமே சென்று சண்டையை இருந்த இடத்திலிருந்தே பார்க்கக்கூடிய ஆற்றலைத் தர முன் வந்தார். ஆனுல் அந்தக் கபடம் கொண்ட கிழ அரசனுடைய பலவீனமான இதயம் அதை ஏற்றுக்கொள்ளச் சம்மதிக்கவில்லை. ஆனுல் அவர் 'ஸஞ்சயனுக்கு இந்த ஆற்றலைக் கொடுத்தார். அவர் குருக்ஷேத்திர யுத்த களத்தில் நடக்கும் சண்டையைப் பார்த்துக் கொண்டு அதே சமயம் அதைப் பற்றிய விவரத்தை எடுத்துக் கூறும்போது நான் கேட்டுக் கொள்கிறேன்!' என்று சொல்லி விட்டார். இதன் பயனுக வியாசர் மூலம் ஸஞ்ஜயனுக்கு அரண்மனையில் உட்கார்ந்தபடியே போர்க் களத்தில் நடப்பதை அப்படியே பார்க்கவும் அங்கே பேசுவதை அப்படியே கேட்கவும் தனி சக்தி கிடைத்தது. அதனுல்தான் அவருக்கு இந்த உயர்ந்ததும், மிக ஆழ்ந்ததும், பரமரஹசியமுமான யோகத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளும் நல்வாய்ப்புக் கிடைத்தது. நன்றியுள்ள ஸஞ்ஜயன் ஈடு இணையற்ற மகாபாரத கர்த்தாவான கவி—ரிஷி வியாசரின் பாதங்களில் மானசீகமாக விழுந்து வணங்குகிறுர். (யோகேச்வராத் கிருஷ்ணத்) யோகேசுவரனுன கிருஷ்ணனிடமிருந்து நேரடியாக— 'உபநிஷத்' வேதாந்தத் தத்துவத்தை இதற்கு முன் ஒரு போதும் ஸஞ்ஜயன் ஏற்கனவே கேட்டதில்லை. எனவே அதன் புதுமை அவரை அப்படியே அசத்தி விட்டது என்று எண்ணிவிட வேண்டியதில்லை. ஆனுல் அவர் இறும்பூது எய்துவதற்குக் காரணம் உபநிஷதங்களின் இந்த அமர ஞானத்தை நேரடியாக யோகேச்வரனுன ஸ்ரீ கிருஷ்ணனிடமிருந்தே கேட்க முடிந்ததுதான். சாக்ஷாத் ஸ்ரீகிருஷ்ண பகவான் தன் வாயாலேயே சொல்ல அதைக் கேட்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா?

இங்கேயும் ஸஞ்ஜயன் அந்தக் கண்ணில்லாத கிழ அரசரிடம் 'தேவகியின் மைந்தன், மாடு மேய்ப்பவரின் மகன் சொல்லவில்லை. ஆனுல் பகவானே, யோகேசுவரனுன ஸ்ரீ கிருஷ்ண பிரானே தன் பக்தனுக்கு தேரோட்டியாகத் தொண்டு செய்து கொண்டிருக்கும் கண்ணபிரானே அர்ஜுனனுக்கு உபதேசம் செய்து அவனுக்குத் தன் உண்மை ஞானத்தைப் புகட்டியிருக்கிறுர்! என்று புரிய வைக்க முயலுகிறுர். திருதராஷ்டிரன்

எண்ணியிருக்கலாம்—நம் பையன்கள் மிகப் பெரிய படையைச் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள் வெற்றி உறுதி என்று. ஆனால் ஸஞ்ஜயன் 'இல்லை அவர்கள் அழிவுக்கெனவே விதிக்கப்பட்டு விட்டார்கள் ஏன் என்றால் அவர்களுக்கு எதிரிகளான பாண்டவர்கள் பக்கம் பரம் பொருளான கிருஷ்ண பிரானே இருக்கிறார்!' என்று அவருக்குத் தெளிவாக்குகிறார்! இருந்தும் என்ன பயன்?

ஸஞ்ஜயன் உள்ளத்தில் இந்த வேதாந்தப் பேச்சு எவ்வளவு ஆழமாகப் பதிந்து விட்டது என்று பின்வரும் சுலோகத்தில் மிகவும் தெளிவாக விளக்கப்படுகிறது.

ராஜன் ஸம்ஸ்ருத்யஸம்ஸ்ருத்ய
ஸம்வாதமிமமத் புதம்
கேசவார்ஜுநயோ: புண்யம்
ஹ்ருஷ்யாமிச முஹுர்முஹு: 18:76

ராஜன்—ஹே ராஜா; ஸம்ஸ்ருத்ய—நினைத்து; ஸம்ஸ்ருத்ய—நினைத்து ஸம்வாதம்—சம்பாஷணையை; இமம்—இந்த; அத்புதம்—அற்புதமான; கேசவார்ஜு ந யோ:—கேசவ அர்ஜுனர்களுடைய; புண்யம்—பவித்திரமான; ஹ்ருஷ்யாமி—மதிக்கிறேன்; ச—மேலும்; முஹுர்முஹு—மீண்டும் மீண்டும்.

ஏ ராஜா! இந்த ஆச்சரிய மயமானதும் புண்ணிய மய மானதுமான இந்த கேசவ அர்ஜுனர்களுடைய சம்பாஷணையை எண்ணி எண்ணி மீண்டும் மீண்டும் மகிழ்கிறேன்.

பகவான் உரைகளைக் கேட்டு ஸஞ்ஜயன் உள்ளம் எவ்விதம் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பற்றிய தெளிவான ஒரு பேச்சை இங்கே பார்க்கிறோம். அவர் சொல்கிறார்: இந்த கிருஷ்ணன் அர்ஜுனனுக்கிடையே நடந்த சம்பாஷணை கட வுளுக்கும் மனிதனுக்கும் பரிபூரண நிறைவுக்கும் குறை பாட்டுக்கும், உயர்வுக்கும் தாழ்வுக்கும் இடையே நடந்த பரஸ்பரப் பேச்சு, அற்புதமானது அதே சமயம் புண்ணிய மானதும் கூட.

அவர் கேட்ட வேதாந்தத் தத்துவம் அவர் இதயத்தில் எழுப்பிய கற்பனையின் அற்புதமும் செய்த பாதிப்பின் ஆழமும் மிகமிக அதிகம். அதனால்தான் ஸஞ்ஜயன் மீண்டும் மீண்டும் அந்த வார்த்தைகள் என் உள்ளத்தில் எழுந்து எழுந்து வரு கின்றன. என்க்கு ஆனந்தத்தை (ஹர்ஷம்) கொடுக்கின்றன!' என்கிறார்.

மறைமுகமாக வியாச பகவான் கீதை படிக்கும் முறையை யும் நிர்ணயித்துக் கொடுக்கிறார். அது வாழ்க்கைக் கலைக்கு வழி காட்டும் கை ஏடு. அதை மீண்டும் மீண்டும் வாசிக்க வேண்டும்.

மீண்டும் மீண்டும் மனனம் செய்ய வேண்டும். சிந்திக்க வேண்டும். நினைவில் கொண்டு வரவேண்டும். எது வரை நம் உள் மனிதன் கீதை காட்டும் வழியைப் பின்பற்றும் அளவுக்குக் கல்வி பெறுகிறானோ அது வரை இவ்விதம் செய்து கொண்டே இருக்க வேண்டும். இப்படிச் செய்வதனால், இவ்வளவு கஷ்டப்பட்டு படிப்பதனால், தொடர்ந்து இடையறாமல் விடாமல் படித்துச் சிந்திப்பதனால் கிடைக்கும் பரிசு போன்ற பயனும் கூடவே தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

படிப்பவனுக்கு ஆனந்தம் ஏற்படும். கூடவே 'அம்மாவின் கருப்பையிலிருந்து இடுகாடு வரை நிகழும் வாழ்க்கை என்று பெயருள்ள அர்த்தமற்ற வாழ்க்கைப் பயணத்திற்கு ஒரு இலட்சியம் கிடைக்கிறது. கீதையின் அத்யயனம் நம் இருப்புக்கே, ஒரு பொருளைக் கொடுப்பது மட்டுமல்லாது உலகுக்கே ஒரு நம்பிக்கையையும் உற்சாகத்தையும் கொடுக்கும் ஒரு சேதியையும் எடுத்துத் தருகிறது. கீதை நம்மை வாழ்க்கைப் பாட்டையில் அங்கு இங்கு சேரும் பிரியும் குறுகிய சந்துகளிலிருந்து பொறுக்கி எடுத்து நம்முடைய உள் வாழ்வையே ஆளும் அரசனாக முடிசூட்டி வைக்கிறது!

இவ்விதம் பார்த்தால் கீதை உள்ளிருந்து தானே பீறிட்டு எழும் உற்சாகம், புளகாங்கிதமாக்கும் மகிழ்ச்சி, இவற்றின் ஊற்றுமுனை! அது நம் மனதுக்கு உண்மையான கல்வி பயிற்றும் ஒரு திட்டத்தைத் தருகிறது. அதன் மூலம் நமக்குள்ளே உள்ள ரகசியமான ஆற்றலைத் தேடி எடுக்க முடிகிறது. அதைத் தேடி எடுத்துப் பயன்படுத்தும்போது அறை கூவல்கள் நிறைந்த இந்த உலகில் நம்மை அச்சுறுத்தும் குழப்பமான சம்பவங்களை எதிர்த்து நின்று வெற்றி பெற முடிகிறது. கீதை கற்ற மனிதன் வாழ்வில் ஒரு இசையின் லயத்தை, ஒரு அழகைக் காணக் கற்றுக் கொள்கிறான். வாழ்வு அவனுக்கு ஒரு சங்கீதமாகி விடுகிறது. இதற்கு முன் சாவின் ஆட்டமாக இருந்தது வாழ்வு. அது பொருள்கள், உயிர்களின் தோற்றங்களும் மறைவுகளுமே காணப்படும் ஒரு பேயாட்டமாக இருந்தது! இப்போது எப்படி மாறி விடுகிறது! அற்புதம் அல்லவா?

வேதாந்தத் தத்துவம் மனதுக்கு மகிழ்வு தருவது மட்டுமல்லாது. பகவானுடைய அழகிய விசுரூப உருவத்தை நினைப்பதுகூட ஒரு மந்திர சக்தி போல் அவர் உள்ளத்துக்கு உற்சாகம் ஊட்டுகிறது என்று ஸஞ்ஜயன் ஒத்துக் கொள்கிறார்.

தச்ச ஸம்ஸ்ருத்ய ஸம்ஸ்ருத்ய ரூப மத்யத்புதம் ஹரே:
விஸ்மயோ மே மஹாந் ராஜன் ஹ்ருஷ்யாமி ச புன: புன:
18:77

தத் ச—அதையும்; ஸம்ஸ்ருத்ய—நினைத்து; ஸம்ஸ்ருத்ய—நினைத்து; ரூபம்—உருவத்தை; அத்யத்புதம்—மிகவும் அற்புதமான; ஹரே:—ஹரியினுடைய; விஸ்மய:—ஆச்சரியம்; மே—எனக்கு; மஹான்—மிகப் பெரியது; ராஜன்—ஹே ராஜா; ஹ்ருஷ்யாமி—மகிழ்கிறேன்; ச—மேலும்; புன:—மீண்டும்; புன:—மீண்டும்.

மேலும் ஹரியினுடைய அதி அற்புதமான அந்த அழகிய ரூபத்தையும் எண்ணி எண்ணி (நினைத்து நினைத்து) எனக்கு மகத்தான ஆச்சரியம் ஏற்படுகிறது. ஏ ராஜா! நான் மீண்டும் மீண்டும் ஆனந்தத்தில் ஆழ்கிறேன்.

ஹரியின் அதியற்புத உருவத்தை மீண்டும் மீண்டும் திரும்பத் திரும்ப அடிக்கடி நினைந்து நினைந்து: பார்த்தசாரதியான பிரபு கிருஷ்ணன் தன் விசுவ ரூபத்தைக் காட்டினார். இது முன்னமே ஒரு அத்தியாயத்தில்[1] விவரிக்கப்பட்டிருக்கிறது. ஸஞ்ஜயன் அந்தக் காட்சியைத்தான் இங்கே குறிக்கிறான். புத்திசாலியான மனிதனை கீதையின் தத்துவம் எவ்வளவு கவருகிறதோ அதே போல் இதயம் படைத்த மனிதனை அந்த விசுவரூபம் கவருகிறது பிரபுவினுடைய விசுவரூபம் கீதையில் தான் முதன் முதலாக இடம் பெற்றிருக்கிறது. என்றாலும் அது வியாசரின் கவிக் கற்பனையில் மட்டும் எழுந்த தோற்றம் என்று கொள்ள வேண்டியதில்லை.

இதே போல் அனுபவம் பெற்று விவரித்திருக்கிற மற்றவர்களும் உள்ளனர்.[2]

பக்தனுக்குத் தன் இதய தெய்வத்தின் அன்பு உருவத்தை எண்ணிப் பார்ப்பதே பரம ஆனந்தம். அன்பு இருக்கும் போது, மனம் மீண்டும் மீண்டும் அன்பு இருக்கும் இடத்தை நோக்கித்தானே பாயும். அவ்விதம் மனம் சென்று அங்கே தங்கும் போது அந்தத் தெய்வீக அன்பின் சொர்க்க இன்ப நிலையில் மனம் உலகில் உள்ள உயிருள்ள உயிரற்ற எல்லாவற்றையுமே தன் அன்பனின் ஒப்புவமையற்ற எல்லையில்லாத பரம்பொருளின் முடிவற்ற உருவங்களாகவே புரிந்து கொள்ளும். அப்படிப்பட்ட பக்தனுக்கு குளிரும் அவனே சூடும் அவனே மகிழ்ச்சியும் துயரமும் அவன் லீலைகளே! புகழ், இகழ் எல்லாம் அவன் இதயக் காதலன் அவனைச் சீண்டி விடுவதற்காகச் செய்யும் சில்லரைச் சேஷ்டைகளே! இவ்விதம் வாழ்க்கையிலும் வாழ்க்கையினூடேயும்

---

[1] பதினோராவது அத்தியாயத்தில் 5லிருந்து 47 சுலோகம் வரை இருக்கிற விவரத்தைப் படிக்கவும்.

ஒருமையின் இனிய சங்கீதத்தை உணர்கிறான், பக்தன். அதை அவன் பகவானின் விசுவரூபத்தில் கண்டு விட்டான்! அதனால் அவன் எப்போதும், எந்தச் சந்தர்ப்பத்திலும் எதையும் கண்டு ஆனந்த நர்த்தனம் செய்கிறான்.

கீதையின் தத்துவம் வாழ்க்கையின் அர்த்தத்தை நமக்குத் தெளிவிக்கிறது. அது நம்மைப் புளகாங்கிதம் அடையச் செய்து உற்சாகமும் தந்து விட முடியுமானால் பிறகு அன்புக்கள் குடித்து பித்துப் பிடித்த மனிதனுக்கு பேரும் தோற்றமும் கொண்ட ஒவ்வொரு பொருளுக்கும் பின்னால், ஒவ்வொரு அனுபவத்திற்கும் கீழே ஒவ்வொரு சந்தர்ப்பத்தின் ஊடேயும், பிருந்தாவன நந்தகோபாலன் உருவமே காட்சியளிக்கும். அது அன்பனின் உள்ள மகிழ்ச்சியை பன்மடங்காக்கும்.

ஸஞ்ஜயனுக்கு சுதந்திரம் இருந்திருந்தால் பகவத் கீதையைப் பற்றி ஒரு ஸஞ்சய கீதையே எழுதியிருப்பான் என்றே எனக்குத் தோன்றுகிறது. புரிந்து கொண்டதனால் ஏற்பட்ட மௌனத்தில் மூளை சிலிர்த்து நிற்கும் போது, அன்பின் அணைப்பில் இதயம் மயிர்க்கூச் செரிய இருக்கும்போது, மனிதன் நினைத்தது கைவரப் பெற்ற ஆனந்தத்தின் சொர்க்க போகத்தில் ஏறி அமர்ந்து விடுகிறான். அந்த மகிழ்ச்சியைத் தாங்கி வெளியிட கேவலம் மொழிக்கு ஆற்றல் குறைவு. எனவே மனதில் உள்ளதை விவரித்துச் சொல்லும் வீண் முயற்சியில் ஈடுபடாமல் ஸஞ்ஜயன் பகவத் கீதையின் இந்தக் கடைசி சுலோகத்தில் தகதக என்று எரியும் தன் நம்பிக்கையைக் கூறுவதன் மூலம் தான் எண்ணும் அனைத்தின் சாரமாகச் சுருக்கிச் சொல் கிறார்.

---

[2] விஞ்ஞானத்தின் சரித்திரமும் முறையும்' என்ற நூல் 1937ல் சார்லெஸ் ஸிங்கர் என்பவரால் பதிப்பிக்கப்பட்டது. அதில் சாது ஹில்டர் கார்ட் என்பவன் கண்ட ஒரு காட்சியை பதிப்பாசிரியர் குறித்திருக்கிறார். அவன் ஒரு அழகிய மனித உருவத்தைக் கண்டான். அவர் (அந்த உருவம்) தன்னைப் பற்றி அவனிடம் ஸ்ரீ கிருஷ்ணன் கீதையில் தன்னைப் பற்றிச் சொல்லிய அதே மாதிரி விவரத்தை அதே சொற்களில் சொல்கிறார். ''நான் அந்தப் பரம்பொருள். உயிர்ப் பொறிகளை வெளியிட்டு அனுப்பும் அக்னி சக்தி. என்னிடம் சாவு கிடையாது. இருந்தும் அதை நான்தான் பகிர்ந்து கொடுக்கிறேன். என்னை ஞானம் பறவையின் இறகுகளைப் போல் சுற்றி இருக்கின்றது. நான் தெய்வ சாரத்தின் நெருப்புச் சாரம்! இதுதான் வயலில் அழகாக ஒளிர்கிறது. நீரில் ஒளிர்கிறேன். சூரியன் சந்திரன் நட்சத்திரங்களில் நானே எரிகிறேன். காணப்படும் காற்றின் ரகசிய ஆற்றல் நான். உயிர்களில் மூச்சை நானே தாங்குகிறேன். பசுமையிலும் பூக்களிலும் என் மூச்சே உயிர்த்திருக்கிறது. உயிர் கொண்டு ஓடும் நீர் ஓட்டத்தில் நானே இருக்கிறேன். இந்த பூமியைத் தாங்கும் தூண்கள் அனைத்தும் நானே! இவை எல்லாம் நான் அவற்றுள் உயிராக இருப்பதால் உயிர்த்திருக்கிறேன். நானே ஞானம். எல்லாப் பொருள்களும் உயிர்களும் எந்த வெடித்து வந்த சப்தத்திலிருந்து வந்தனவோ அந்த வெடிப்பு என்னுடையதுதான். நான் உயிர் எல்லாம் உயிருடன் இருக்க நான் அவற்றுள் ஊடுருவி இருக்கிறேன்.

யத்ர யோகேச்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தனுர்தர:
தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர்த்ருவா நீதிர் மதிர்மம

18:78

யத்ர—எங்கே; யோகேச்வர:—யோகேசுவரன்; க்ருஷ்ண:—கிருஷ்ணன்; யத்ர—எங்கெல்லாம்; பார்த்த—பார்த்தன்; தனுர்தர:—வில்லாளி; தத்ர—அங்கே; ஸ்ரீ—லக்ஷ்மி (வளம்); விஜய:—வெற்றி; பூதி:—வளர்ச்சி; த்ருவா—நிச்சயமான; நீதி:—நீதி; மதி:—கருத்து; மம—என்னுடைய.

எங்கே எல்லாம் யோகேச்வரன் கிருஷ்ணன் இருப்பாரோ எங்கெல்லாம் வில்வீரன் அர்ஜுனன் இருப்பானோ அங்கே வளம், வெற்றி, வளர்ச்சி, ஆனந்தம், உறுதியான நீதி இருக்கும். இது என் நிச்சயமான கருத்து.

[1] எழுநூற்று ஒன்று சுலோகங்கள் கொண்ட ஸ்ரீமத் பகவத்கீதையின் இறுதி சுலோகம் இது. கீதைக்குப் பாஷியம் எழுதிய ஆசாரியர்களுள் அநேகர் இந்த சுலோகத்தைப் பற்றி போதுமான அளவு சிந்தித்து பாஷியம் எழுதவில்லை. மேல் எழுந்தவாரியாகப் பார்த்தால் இந்த சுலோகத்தின் வார்த்தைகளின் அர்த்தம் ஒரு புத்திசாலி மாணவனுக்கு உப்புச் சப்பற்றதாகவே தோன்றும். யோசித்துப் பார்த்தால் கடைசியாக ஸஞ்ஜயன் தனக்குள்ள நம்பிக்கையை வெளியிடுகிறார். தன்னுடைய சொந்தக் கருத்தை வெளியிடுகிறார். இதை கீதையின் வாசகர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதில்லை. ஸஞ்ஜயன் சொல்வதன் சாரம் இதுதான். ''யோகேசுவரன் கிருஷ்ணனும் வில்லுடன் அர்ஜுனனும் இருக்கிற இடத்தில் திரு, வெற்றி, வளர்ச்சி, சரியான நீதி—எல்லாம் இருக்கும். இது என்னுடைய நிச்சயமான கருத்து.''

கீதையின் மாணவனுக்கு ஸஞ்ஜயன் கருத்தில் அக்கறை இருக்கவேண்டும் என்பதில்லை. ஸஞ்ஜயன் உண்மையில் நம் உள்ளத்தில் தந்திரமாகத் தன் கருத்தை எப்படியோ புகுத்திவிட வேண்டும் என்று விரும்பி இவ்விதம் சொல்லியிருந்தால் அது அசிங்கமான மறைமுகமான கொள்கை புகுத்தும் முயற்சியாகவே கருதப்படும். இந்த சுலோகத்தில் உலகம் பூராவும் உடனடியாக ஒப்புக்கொள்ளக்கூடிய அழியாத, நித்யமான ஒரு உண்மை

---

[1] கீதையில் 700 (எழுநூறே) சுலோகங்கள் உள்ளன என்று சொல்கிறவர்களும் உண்டு. 13வது அத்தியாயத்தின் தொடக்கத்தில் அர்ஜுனன் கேட்கும் கேள்வியில் உருவத்தில் ஒரு சுலோகத்தைப் பற்றி விவாதம் உண்டு. இந்த சுலோகம் சில கை எழுத்துப் பிரதிகளில் கிடைப்பதில்லை. அதை விட்டுவிட்டால் 18 அத்தியாயங்களில் 700 சுலோகங்கள் தான் இருக்கும். பதின்மூன்றும் அத்தியாயம், முதல் சுலோகத்தைப் பற்றிய நம்முடைய விரிவுரையைப் பார்க்கவும்.

தொனிக்காவிட்டால் கீதையே 'மனிதர்களின் பொது வேதம், உலக இலக்கியம்' என்கிற உயர்ந்த பதவியிலிருந்து கீழே விழுந்து விடும்.

முழு வளர்ச்சியடைந்த கலைஞரான வியாஸர் அப்படி ஒரு தவற்றைச் செய்யமாட்டார். உண்மையில் இதில் ஒரு ஆழ்ந்த குறிப்பு இருக்கிறது. அதில் எதிர்க் கேள்வி கேட்க முடியாத ஒரு உண்மை தெளிவாக்கப்படுகிறது.

யோகேசுவரன் கிருஷ்ணன்: கீதை முழுவதிலும் கிருஷ்ணன் ஆத்மாவுக்குப் பிரதிநிதியாக இருக்கிறார். இந்த ஆத்ம மையத் தத்துவம் என்ற மேடையின் மேல்தான் எல்லா நிகழ்ச்சிகளும் நிகழ்கின்றன. கீதையில் காட்டப்பட்டிருக்கிற யோக வழிகளில் ஏதாவது ஒன்றின் மூலமாக நாம் ஒவ்வொரு வரும் தன் உள்ளத்தில் அவரைத் தோன்றச் செய்யமுடியும்.

தன் வில்லைத் தாங்கி அர்ஜுனன்: (பார்த்தோ தனுர்தர:) கீதை என்ற இந்தப் பாட நூலில் பார்த்தன் ''குழப்ப மடைந்த, மிகவும் குறுகிய புத்தி சக்தியுள்ள, சாதாரண மனித னாக, அவனுக்குரிய அளவற்ற பலவீனங்கள், பதற்றங்கள், அச்சங்களுடன் சித்தரிக்கப்பட்டிருக்கின்றான்.'' அவன் தன் செயல்பாங்குக்கும் வெற்றிக்கும் உரிய கருவியான வில்லைக் கீழே போட்டுவிட்டு, வீரியம் நீங்கிய சோம்பேறித்தனத்துக்கு அடி எடுத்து வைக்கத் தொடங்கிய போது இந்த வீரனுக்கு வெற்றியோ, வளமோ, கிடைக்கும் என்ற நம்பிக்கையே யாருக்கும் ஏற்படாது. ஆனால் அவன் 'தன் வில்லை எடுத்துக் கொண்டு தயாராகிவிடும்போது,' சாதாரண சாவுக்கு உரிய மனிதன் சோம்பலை விட்டு விட்டான். வாழ்க்கையின் அறை கூவலை எதிர்க்கத் துணிந்து விட்டான். அதற்காக தன் ஆற்றல் கள் அவ்வளவையும் பயன்படுத்த முடிவு செய்து விட்டான். அப் போது அங்கே அவனுள் 'வில் தாங்கிய வீரன்' பார்த்தனைக் காண்கிறோம்.

இந்த இரண்டு சித்திரங்களையும்—யோகேசுவரன் கிருஷ் ணன், வில்லேந்திய பார்த்தன்—சேர்த்தவுடன் ஒருவித வாழ்க் கைத் தத்துவத்தின் வாழும் முறையின் சின்னம் பூர்த்தியாகி விடு கிறது. இதில் மனிதன் தன் ஆழ்ந்த உண்மையான ஆன்ம ஞானத்தால் ஆற்றல் பெற்று வாழ்க்கையை வசப்படுத்தி வளத்தை ஏற்படுத்திக்கொள்ள தன் முயற்சிகளைத் தீவிரமாகச் செய்ய முற்படுகிறான். அப்போது அவனை வெற்றி பெறுவதி லிருந்து உலகின் எந்த ஆற்றலும் தடுத்துவிட முடியாது! சுருக்க மாக இந்த மனித வாழ்வை ஆன்மீகத் தெய்வ வாழ்வாக வாழ முடியும் என்பதே கீதையின் கோட்பாடு. உள்ளபடி வாழ்க்கைப் போராட்டம் நடத்துபவனுக்கு ஆன்ம ஞானம் ஒரு முதலாகும்!

இன்று மனிதன் (விஞ்ஞான) அறிவியல் துறையில் எவ்வளவோ சாதனைகளைப் புரிந்து விட்டான். இயற்கையை அடிமைப்படுத்தி விட்டான்! அப்படி இருந்தும் இன்று சமூகத்தில் குழப்பங்கள் நிலவுகின்றன. நிகழ்ச்சிகளின் வெள்ளத்தின் எதிரே துரும்பு போல் மதிப்பற்று நிற்கிறான். இதற்குக் காரணம் அவனுக் குள்ளே இருக்கும் 'யோகேசுவரன்' (மறுக்கப்பட்டு?) மறக்கப் பட்டு இருக்கிறான். அவன் அழைக்கப்படவில்லை. எழுப்பப்பட வில்லை. கீதை தரும் நீதி தெய்வ இயலையும் உலக இயலையும் இணைப்பதாகும். ஆன்மீகத்தின் பெருமையையும் உலகியலின் தேவையையும் கொண்ட ஒரு வாழ்க்கை, வழி முறையைக் கற் பிக்கிறார் வேத வியாஸர். இந்த இரண்டும் இன்பமாக சேர்ந்து சுகிக்கும் உலகியல் வாழ்வை நடத்தும் மனிதர்கள் கொண்ட ஒரு உலக அமைப்பைக் காட்டுகிறார் அவர். வெறும் லோகயதப் பொருள்களின் உற்பத்தி மனிதன் சட்டைப் பைகளில் சொத் தைச் சேர்த்து விடலாம். ஆனால் அவன் இதயத்தில் அமைதியை யும் ஆனந்தத்தையும் வைக்க முடியாது! உள்ளே அமைதி யில்லாத வெளிச் சொத்துப் பெருக்கம் நாசகரமானது, பயங்கர மானது அருவெறுக்கத் தக்கது!

இதற்காக அதற்கு எதிர்மறையான கருத்தையும் இந்த சுலோகம் ஒத்துக்கொள்ளவில்லை! இதைச் சொல்லும் அதே நேரத்தில் அந்தக் கருத்தையும் மறுக்கிறது. கையில் வில் எடுத்துப் போரிடத் தயாரான அர்ஜுனன், அந்தப் பார்த்தனை பாண்டவ இளவரசன் இல்லை என்றால் யோகேசுவரன் அந்தப் போர்க் களத்தில் ஒன்றையும் சாதித்திருக்க முடியாது! உலகியல் முயற்சி யும் சமயம் நீங்கிய மற்றத் துறையிலும் சாதனைகள் புரியாமல் வெறும் ஆன்மீகம் மட்டும் வாழ்க்கைக்கு வேகமோ ஓட்டமோ கொடுக்க முடியாது. கீதை முழுவதும் இந்த இரண்டின் இணைப்புலயத் தத்துவம்தான் போதிக்கப்படுகிறது. இதன் அடிப் படையில்தான் கீதை மனிதனுடைய உறுதியாக நிற்கக்கூடிய மகிழ்ச்சிக்குத் திட்டம் வகுத்துக் கொடுக்கிறது. இந்தக் கருத் தோட்டத்தை விளக்கி எடுத்துச் சொல்ல நான் என்னாலான மிக அதிக முயற்சியைச் செய்து வருகிறேன்.

கீதையில் சமயச் சார்பற்ற உலகியலுக்கும் சமயச் சார்பான ஆத்மீகத்துக்கும் திருமணம் (அன்பு கலந்த உள்ளம் ஒன்றான இணைப்பு) வேண்டும் என்ற கருத்துக்கு கிருஷ்ணன் பிரதிநிதியாக இருக்கிறார்.

ஒரு சமூகத்திலோ தேசத்திலோ உள்ள ஒரு தலைமுறை மக்கள் கஷ்டம் சகித்து செயலாற்றி சாதனை புரியத் தயாராகி (வில் வீரன் பார்த்தனாகி) அதே சமயம் தங்கள் தெய்வீகத்தை உணர்ந்து மனதிலும் இதயத்திலும் ஆன்மீகப் புனிதத் தன்மையை வெளியிட முடியுமானால் (யோகேசுவரன்

கிருஷ்ணனை உணர்ந்தால்) அந்தத் தலைமுறையினருக்கு வளப்பம், வெற்றி, வளர்ச்சி, ஒரு நல்ல நீதி இவை எல்லாம் இயல்பாகவே கிடைத்துவிடும் என்று சஞ்சயன் நம்புகிறார்.[1]

வளப்பம் (ஸ்ரீ:—திரு), வெற்றி, வளர்ச்சி, நேர்மையான நீதி—இந்தச் சொற்களின் வரிசை அமைப்பை எடுத்துக் கொண்டால்கூட உலக சரித்திரம் கற்ற மாணவர்கள் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு காரண காரியத் தொடர்பு இருக்கிறது. தற்காலச் சூழ்நிலையில் கிடைக்கிற அரசியல் அனுபவத்தைக் கொண்டு பார்த்தால், ''புத்திசாலித்தனமானதும், அசையாமல் இருப்பதுமான ஒரு நீதி (Policy) இல்லாமல் எந்த அரசும் தன் தேச மக்களை எந்த வெற்றிக்கும் அழைத்துச் செல்ல முடியாது,'' என்று நாம் தெரிந்துகொள்ள முடியும். சரியான நல்ல கொள்கை (நீதி)யைக் கைக் கொண்டு அரசு செயல்பட்டால் சமூகத்தில் உறங்கிக் கிடக்கும் திறமைகள் வெளியாகும். அப்போதுதான் ஒத்துழைக்கும் சகோதர உணர்ச்சி வெற்றிக் களங்களில் தோன்றிச் செயல்படும். அன்பும், ஒத்துழைப்பும் இருக்கும் இந்த நல்ல உணர்வுடன் சமூகம் கடுமையாக உழைத்து, அவர்களின் உழைப்பும் அரசின் நல்ல கொள்கைகளின் மூலம் சரியான பாதையில் செயல்படுமானால் வெற்றி வெகு தொலைவில் இராது. தேசீய முயற்சி, உறுதியான நல்ல நீதியின் மூலம் தரும் இந்த வெற்றி, உண்மையான வளப்பத்தை ஈட்டிக் கொடுக்கும். இன்றுள்ள அரசியல் திட்டங்களில்கூட இதைவிடச் சிறந்த நெறிக் கொள்கையைக் காண முடியாது!

இன்னும் தெளிவாகச் சொல்ல விரும்புகிறேன். வெற்றியில் முடியும் முயற்சிகளின் பலனாகக் கிடைக்கும் வளமான முன்னேற்றமே நிலைத்து இருக்கும் வளமாகும். அதாவது கூட்டுறவில் அன்புடன் செய்யும் முயற்சிகளால் கிடைக்கும் வளப்பம்தான் அவ்விதம் இருக்க முடியும். அப்போதும் இரு புத்திசாலித்தனமான, திறமையான ஆட்சி நெறிக் கொள்கையால் வலுப்படுத்தப்பட்டு காப்பாற்றப்பட்டால் ஒழிய இந்த முயற்சி எந்த வெற்றியையும் தர முடியாது.

இவ்விதம் புரிந்துகொண்டு படிக்கும்போது மேலே கூறிய கருத்து சஞ்ஜயன் மட்டும் நம்பும் ஒரு கருத்தாக இராது! தனியாக, தானாகச் சிந்திக்கப் பயிற்சி பெற்ற, ஆத்ம ஆட்சி கொண்ட, கட்டுப்பாடுள்ள மனம் கொண்ட எல்லா (சஞ்சயர்களும்) மனிதர்களும் கொண்டிருக்கிற தீவிர நம்பிக்கையாகும்.

கீதையின் தொடக்கத்தில் (தர்ம க்ஷேத்ரே குரு க்ஷேத்ரே என்ற முதல் அத்தியாயத்தின் முதல் சுலோகத்தில் வருகிற)

---

[1] சஞ்சயன் ஸம்+ ஜன்—தன்னடக்கத்தில் ஆத்ம ஆளுகையில் வெற்றி கண்டவர். அதாவது முழுமையாகத் தன்னை அடக்கி ஆள்பவர்.

'தர்ம' என்ற சொல்லேயும் இந்த இறுதி சுலோகத்தில் கடைசியில் வரும் 'மம' என்ற சொல்லேயும் எடுத்துச் சிந்திக்கும்படி சில பாஷியக்காரர்கள் நம் கவனத்தை ஈர்க்கிருர்கள். இந்த இரண்டு சொற்களுக்குமிடையே 700 சுலோக மலர்கள் அழியாத அழகு கொண்ட ஒரு மாலேயாகக் கோக்கப்பட்டிருக்கின்றன. இவர்கள் இந்த 700 சுலோகங்கள் கொண்ட கீதையின் சுருக்கமாக 'மம தர்ம'—'என்னுடைய தர்மம்' என்று சொல்கிருர்கள். கீதை 'என்னுடைய தர்மத்தை' அதாவது மனிதனுடைய உண்மைக் குணமான 'நித்ய உண்மை'யை விளக்குகிறது. மேலும் 'இந்த இரண்டும் ஒரே மனிதனிடத்தில் ஒன்ருக இணைந்து செயல்படத் தொடங்கினுல் அப்போதுதான் உண்மையான வாழ்க்கை தொடங்கும்' என்றும் சொல்கிறது. எனவே கீதை படிக்கிற மாணவர்கள் எல்லோருடைய தன்மையும் அவர்களுடைய நடுநிலே அமைதி, நல்ல நடத்தை இவற்றின் மூலம் வெளியாகிற ஆன்ம ஞானமும் மனித குலத்துக்கு சேவை செய்தும் எந்தத் தியாகமும் செய்யத் தயாராயிருக்கும் அவர்களுடைய தீவிர இயக்கம் கொண்ட அன்பும் இணைந்து ஒன்ருன அதிசயக் கலவையாக இருக்கவேண்டும்!

ஓம் தத் ஸத்
இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூ பநிஷத்ஸு ப்ரஹ்ம வித்யாயாம்
யோக சாஸ்த்ரே
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே
மோக்ஷ ஸந்யாஸ யோகோ நாம
அஷ்டாதசோத்யாய :

ஓம் தத் ஸத். இவ்விதம் பகவத் கீதையாகிற உபநிஷத்துக்களில் பிரம்ம வித்தை (நித்ய இறைமைக் கல்வி)யில், யோக சாஸ்திரத்தில், கிருஷ்ணன்—அர்ஜுனன் இவர்களிடையே நடந்த சம்பாஷணேயில் 'சந்யாஸத்தின் மூலம் மோக்ஷம் என்கிற யோகம்' என்ற தலேப்புக் கொண்ட பதினெட்டாவது அத்தியாயம் முடிகிறது.

ஸ்ரீபகவத் கீதையின் கடைசி அத்தியாயத்தின் தலேப்பு ஸந்யாஸத்தின் மூலம் மோக்ஷம் (மோக்ஷ—ஸந்யாஸ யோகம்)

---

[1] சுவாமியின் மாண்டுக்ய காரிகாவின் உரைகளேப் பார்க்க.

[2] ஆரும் அத்தியாயம் 23வது சுலோகத்தில் வரும் 'துக்க ஸம்யோக வியோகம் யோக சம்ஜ்ஞிதம்' என்ற பதத்துக்கு உள்ள விரிவுரைகளேப் படிக்கவும்.

[3] இந்த சங்கல்ப வாக்கியத்தில் வரும் எல்லாப் பதங்களின் விளக்கங்களேயும் தெரிந்துகொள்ள இந்தக் கீதைக்கு சுவாமியின் விளக்க உரைகளில் முதல் இரண்டாவது அத்தியாயங்களின் கடைசிப் பகுதிகளில் வந்திருக்கும் விளக்கங்களேப் பார்க்கவும்.

உபநிஷதங்களில் வரும் 'அஸ்பர்ச யோகத்தை'[1] இது உடனே நினைவூட்டும் வண்ணம் அமைந்திருக்கிறது. யோகத்துக்கு ஸ்ரீகிருஷ்ணனே முதலில் ஒரு அத்தியாயத்தில்[2] இலக்கணம் கூறியிருக்கிறார். நாம் கொண்டிருக்கும் வாழ்க்கையைப் பற்றிய தவறான மதிப்பீடுகளையும் கருத்தையும் ஒதுக்கியவுடனேயே நமக்குள் இருக்கும் தெய்வத்தன்மையை உணர்ந்து கொள்வது சித்தித்து விடும். இது மனிதனுக்குரிய வாரிசுச் சொத்து. நமக்குள்ளே இருக்கும் 'மிருகத்தை' விட்டு விட்டால் நம்மில் உள்ள தேவதை மோக்ஷம் பெற்றுவிடும்.[3]

ஓம் தத் ஸத்

மம சத்குரு தபோவன சரணயோ: